முன்னுரை

இந்திய மக்களின் சில பிரிவினர்களிடம் பௌத்தத்தின்பால் ஏற்பட்டுள்ள அக்கறையின் அளவு வளர்ச்சியுற்று வருவதற்கான அடையாளங்கள் அறியும்படியாக உள்ளன. அதனோடு இயல்பாகவே புத்தரின் வாழ்க்கை மற்றும் போதனைகள் பற்றிய தெளிவான முரணற்ற விபரங்களுக்கான தேவையும் வளர்ந்து வந்துள்ளது.

பௌத்தரல்லாத யாருக்கும் புத்தரின் வாழ்க்கையையும் போதனைகளையும் தெளிவுற முரணல்லாத வகையில் முழுமையாய் எடுத்துரைப்பது மிகவும் கடினமான பணியாகவே உள்ளது. நிகாயங்களை அடிப்படையாக கொண்டு புத்தரின் வாழ்க்கையை முரணின்றி வெளிப்படுத்துவது மட்டுமின்றி அவருடைய போதனைகளின் சில பகுதிகளை வெளிப்படுத்துவதும் மிகக் கடினமான பணியாகிவிடுகிறது. உண்மையில் உலகிலுள்ள சமயங்களை நிறுவியவர்கள் அனைவரிலும் பௌத்தம் நிறுவியவரின் வாழ்க்கையையும் போதனைகளையும் வெளிப்படுத்துவது ஏற்படுத்தும் பிரச்சனை குதர்க்கமாக இல்லையெனினும் முற்றிலும் குழப்பமானதாக உள்ளது என்று கூறுவது மிகையாகாது. இந்த பிரச்சனைகளைத் தீர்ப்பதும் பௌத்தத்தை புரிந்துகொள்ளும் பாதையைத் தெளிவுபடுத்திக் கொள்வதும் அவசியமில்லையா? பௌத்தர்களாய்யிருப்பவர்கள் இந்த பிரச்சனைகளை பொது விவாதத்திற்கேனும் எடுத்து கொண்டு இப் பிரச்சனைகளின் மீது என்ன தெளிவை பெற முடியும் என்று யோசிக்க வேண்டிய தருணமல்லவா இது?

இந்தப் பிரச்சனைகள் குறித்த விவாதத்தை எழுப்பும் நோக்கத்தில் இவற்றை நான் இங்கு முறைபடுத்துகிறேன். முதல் பிரச்சனை புத்தரின் வாழ்க்கையின் மிக முக்கிய சம்பவமான பரிவ்ராஜம் பற்றியதாகும். புத்தர் ஏன் பரிவ்ராஜம் மேற்கொண்டார்? மரபுரீதியாக அளிக்கபடும் பதிலின்படி அவர் பரிவ்ராஜம் (துறவு) ஏற்றது. ஏனென்றால் அவர் ஒரு இறந்த மனிதனையும் நோயாளியையும் முதுமையுற்றவரையும் பார்த்ததால் தான் என்பது, இந்த பதில் எடுத்த எடுப்பிலேயே அபத்தமாக உள்ளது புத்தர் பரிவ்ராஜம் ஏற்றுக் கொண்டது 29-வது வயதில். இந்த மூன்று காட்சிகளின் விளைவாக பரிவ்ராஜம் ஏற்றார் என்றால் இதற்க்கு முன் இந்த காட்சிகளை அவர் காணவில்லை என்பது எப்படி பொருந்தும்? இவைகள் நூற்றுக் கணக்கில் பொதுவாய் நிகழும் காட்சிகள். இவற்றை இதற்க்கு முன் புத்தர் காணதிருக்கவே முடியாது. முதல் முறையாக அப்பொழுதுதான் இவற்றை புத்தர் கண்டார் என்று கூறும் மரபு ரீதியான விளக்கத்தை ஒப்புகொள்ளவே இயலாது; இந்த விளக்கம் ஏற்புடையதன்று-அறிவுக்கு பொறுந்துவதன்று. ஆனால் இது இவ்வினாவிற்க்கு உண்மையான விடையல்ல என்றால் உண்மையான விடை யாது?

இரண்டாவது பிரச்சனை நான்கு ஆரிய உண்மைகளால் உண்டாக்கப் படுவதாகும். அவைகள் புத்தரின் உண்மையான போதனைகளின் பகுதிகளாக அமைந்துள்ளனவா? இந்த சமய மரபுமுறை பௌத்ததின் ஆணி வேரையே அறுத்தெறிவதாக உள்ளது. வாழ்க்கை துக்கமாயின் மரணம் துக்கமாயின் மறுபிறப்பும் துக்கமாயின் பிறகு அனைத்திற்க்கும் ஒரு முடிவு உண்டு. உலகில் ஒரு மனிதன் இன்பத்தை அடைவற்க்கு மதமோஇ தத்துவமோ ஒருக்காலும் உதவாது. துக்கத்திலிருந்து தப்பிக்க வழி இல்லையாயின் பின் மதம் என்ன செய்யமுடியும்? பிறப்பிலேயே துக்கம் எப்பொழுதும் இருக்கும் என்றால் அத்தகைய

துக்கத்தினின்று மனிதன் விடுபட புத்தர் என்ன செய்ய முடியும்? பௌத்தரல்லாதார் பௌத்த போதனைகளை ஏற்றுகொள்வதில் மிகப்பெரும் தடையாய் இந்த நான்கு ஆரிய உண்மைகள் திகழ்கின்றன. ஏனெனில் இந்த நான்கு ஆரிய உண்மைகள் மனிதனின் நம்பிக்கையை தகர்ப்பவனவாய் உள்ளன. இந்த நான்கு ஆரிய உண்மைகளும் புத்தரின் போதனைகளை விரக்திப் போதனைகளாக ஆக்கி விடுகின்றன. இவைகள் புத்தரால் போதிக்கபட்ட உண்மையான போதனைகளின் பகுதிகளா? அல்லது பிற்காலத்தில் துறவிகளால் உண்டாக்கி சேர்க்கபட்டவைகளா?

மூன்றாவது பிரச்சனை ஆன்மாஇகர்மம் மறுபிறப்பு ஆகியவை பற்றிய போதனைகளோடு தொடர்புடையதாகும். புத்தர் ஆன்மாவின் இருப்பை மறுதலித்தார். ஆனால் அவர்,கர்மம் மற்றும் மறுபிறப்பு உண்டு என உறுதிபடுத்தியதாக கூறப்படுகிறது. உடனே ஒரு கேள்வி எழுகிறது.ஆன்மா இல்லையென்றால் கர்மம் எப்படி இருக்கமுடியும்?ஆன்மா இல்லையென்றால் மறுபிறப்பு எப்படி இருக்கமுடியும்? இவை தினறடிக்கும் வினாக்கள். கர்மம் மறுபிறப்பு ஆகிய சொற்களை புத்தர் எந்த பொருளில் பயன்படுத்தினார்? அவர்காலத்தில் பிராமணர்கள் எந்த பொருளில் பயன்படுத்தினார்களோ அதற்கு மாறான பொருளில் அவர் அவற்றை பயன்படுத்தினாரா? அப்படியாயின்என்ன பொருளில்? பிராமணர்கள் பயன்படுத்திய அதே பொருளில் அவற்றை பயன்படுத்தினாரா? அப்படியாயின் ஆன்மாவை மறுப்பதற்கும் கர்மம் மறுபிறப்பை உறுதிபடுத்துவதற்கும் இடையில் பயங்கரமான முரண்பாடு இல்லையா? இந்த முரண்பாடு தீர்க்கப்படவேண்டியது அவசியம்.

நான்காவது பிரச்சனை பிக்குவோடு தொடர்புடையதாகும்.பிக்குவை புத்தர் உருவாக்கியதன் நோக்கம் யாது? முழுநிறைவான மனிதனை உருவாக்குவது நோக்கமா? அல்லது தன் வாழ்க்கையை மக்களுக்குத் தொண்டாற்றுவதில் அர்ப்பணித்து, அவர்களில் நண்பராய்,வழிகாட்டியாய், தத்துவவாதியாய் திகழும் ஒரு சமூக சேவகரை உருவாக்குவது அவர் நோக்கமா? இது ஒரு மிக முக்கிய வினாவாகும். பௌத்தத்தின் எதிர்காலமே இவ்வினாவை பொறுத்துள்ளது. ஒரு பிக்கு தன் வரையில் முழுநிறைவான மனிதராக மட்டும் இருந்துவிடுவாரேயானால் இபௌத்தத்தை பரப்புவதற்கு அவர் எவ்வகையிலும் பயன்படமாட்டார்-ஏனென்றால் முழுநிறைவான மனிதராயினும் தன்னலமான மனிதர் ஆவார் இதற்கு மாறாகஇ அவர் சமூக சேவகராக இருப்பாராயின் பௌத்ததின் நம்பிக்கைக்குரியவர் என்பது நிரூபனமாகும். இந்த வினாக்களுக்கு தீர்வு காண்பதில் பௌத்த போதனையின் முரணற்ற தன்மையைச் சார்ந்திடுவதை பௌத்தத்தின் எதிர்காலத்தைப் பொறுத்திடுவதே சரியாகும்.

என் வினாக்கள் வாசகர்களை விழிப்புறச் செய்து இப்பிரச்சனைகளுக்கான தீர்வுகளுக்கு அவர்களது பங்களிப்பைச் செய்யத் தூண்டும் என்று நான் நம்புகிறேன்.

- பாபாசாகேப் டாக்டர் அம்பேட்கர்

## சித்தார்த்த கவுதமர் ஒரு போதிசத்வர் எவ்வாறு புத்தர் ஆனார்

## பகுதி 1

## தோற்றம் முதல் துறவு வரை

### 1. அவர் குலம்

1. கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்குப் பின் தள்ளிச் சென்றால் அப்போதைய வட இந்தியா தனி ஒரு தேசமாய் இருந்ததில்லை என்று அறியலாம்.

2. நாடு பல அரசுகளாய் பிரிக்கப்பட்டு இருந்தது _ சில பேரரசுகள்; சில சிற்றரசுகள், இவற்றில் சில முடியாட்சிகளாய் இருந்தன, மற்றவை முடியாட்சி அல்லாதனவாய் இருந்தன.

3. முடியாட்சிகள் மொத்தம் பதினாறு. அங்கம், மகதம், காசி, கோசலம், வ்ரிஜ்ஜி, மல்லம், சேடி, வத்சம், குரு, பாஞ்சாலம், மத்சியம், சவ்ரசேனம், அஸ்மகம், அவந்தி, காந்தாரம், கம்போஜம் ஆகிய பெயர்களால் அவை அழைக்கப்பட்டன.

5. முடியாட்சி அரசுகள் ஜனபதம் என்றும் முடியாட்சி அல்லாத அரசுகள் சங்கம் அல்லது கணம் என்றும் வழங்கப்பட்டன.

6. கபிலவஸ்து நாட்டின் சாக்கியர்கள் கொண்டு இருந்த அரசியல் தன்மை பற்றி அறிவதற்கு அதிகம் இல்லை_அவை குடியரசர், குழு அரசா என்பது பற்றிய தகவலும் இல்லை.

7. ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிய வருகிறது--சாக்கியர்களின் குடியரசில் அரச குடும்பங்கள் பலவாய் இருந்தன-சுழற்சி முறையில் அவை முறை போட்டு ஆண்டன.

8. ஆளும் குடும்பத்தின் தலைவன், அரசர் எனப்பட்டார்.

9. சித்தார்த்த கவுதமரின் தோற்றத்தின் போது சுழல் முறையில் அரசு பொறுப்பேற்றவர் சுத்தோதனர் ஆவார்.

10. இந்தியாவின் வடகிழக்கு மூலையில் இருந்த தேசமே காக்கிய தேசம். அந்த தேசம் சுதந்திர தேசம். ஆயினும் காலகோக்கில் கோசல அரசர் தன் சாம்ராஜ்ஜிய எல்லைக்குள் சாக்கிய அரசசைக் கொண்டு வருவதில் வெற்றி கண்டு விட்டார்.

11. இந்த சாம்ராஜ்ஜிய மேலதிகாரத்தின் விளைவால் சாக்கிய அரசு சில தன்னுரிமை அதிகாரங்களை கோசல மன்னரின் ஒப்புதல் இன்றி நடைமுறைப்படுத்த முடியாத நிலை ஏற்பட்டது.

12. அப்பபோதிருந்த அனைத்து சாம்ராஜ்ஜியங்களிலும், கோசலம் பேரதிகாரம் உடையதாய் இருந்தது. மகத அரசும் அவ்வாறே இருந்தது. கோசல அரசரான பசனேதியும், மகத அரசரான பிம்பிசாரரும், சித்தார்த்த கவுதமரின் சமகாலத்தவராவர்.

## 2. அவர் முன்னோரின் மரபு

1. சாக்கியர்களின் தலைநகரம், கபிலவஸ்து என வழங்கப்பட்டது. அநேகமாய் அப்பெயர் மாபெரும் பகுத்தறிவாளர், கபிலரின் பெயரைச் சார்ந்து அமைக்கப்பட்டு இருக்கலாம்.

2. கபிலவஸ்துவில் ஜெயசேனர் என்று பெயருடைய சாக்கியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய மகன் சினாகு என்பவர், சினாகு கச்சனாவை மணந்தார். அவருக்கு ஐந்து புத்திரர்கள். சுத்தோதனர், தொத்தோதனர், சக்கோதனர், சுக்தோதனர். அமிதோதனர் ஆகியோர் ஆவார். இந்த அய்ந்து புத்திரர்களைத் தவிர அமிதா, பமிதா எனறு இரு புதல்விகளும் சினாகுக்கு உண்டு.

3. அந்தக் குடும்பத்தின் கோத்ரம் ஆதித்ய ஆகும்.

4. சுத்தோதனர் மகாமாயவிற்கு மணமுடிக்கப்பட்டார். அவருடையத் தந்தையின் பெயர் அஞ்சனர். தாயின் பெயர் சுலக்ஷனா. அஞ்சனர், தேவதகா என்னும் கிராமத்தில் வசித்து வந்த கோலியர் ஆவார்.

5. சுத்தோதனர் போர் வீரம் மிக்கவர். வீர விளையாட்டுக்களில் தன் மிகுந்த ஆற்றலை அவர் வெளிப்படுத்திய போது இரண்டாவது மனைவியை ஏற்றுக் கொள்ள அவருக்கு அனுமதி அளிக்கப்பட்டது. மகாபிரஜாபதியை அவர் இரண்டாவது மனைவியாய் தேர்ந்தெடுத்துக்கொண்டார். பிரஜாபதி மகா மாயாவின் மூத்த சகோதியே ஆவார்.

6. சுத்தோதனர் மிகப் பெருஞ்செல்வராய் இருந்தார் ஏராளமான நில புலன்களும், பெரும் பண்ணைகளும் அவர் வசம் இருந்தன. தன் நிலங்களை உழுவதற்கு ஆயிரம் ஏர்களை அவர் வைத்திருந்ததாகச் கொல்லப்படுகிறது.

7. அவர் மிக வளமான வாழ்க்கை வாழ்ந்தார். அவருக்குப் பல அரண்மனைகள் சொந்தம்.

## 3. அவர் தோற்றம்

1. சித்தார்த்த கவுதமர் சுத்தோதனருக்கு மகனாகப் பிறந்தார். கவுதமரின் தோற்றம் பின்வருமாறு அமைந்தது.

2. ஆஷாட மாதத்தில் வரும் இளவேனிற் பண்டிகையை ஆண்டுதோறும் வெகு விமரிசையாகக் கொண்டாடடுவது சாக்கியர்களின் வழக்கம். அந்தப் பண்டிகை அரச குடும்பத்தினர் உள்ளிட்ட அனைத்து சாக்கியர்களாலும் நாடு முழுவதும் கொண்டாடப்படும்..

3. வழக்கமாக சாக்கியாகள் இளவேனிற் பண்டிகையை ஏழு றாட்கள் கொண்டாடுவார்கள்..

4. ஒரு முறை மகாமாயா அந்தப் பண்டிகையைச் சிறப்போடும், செழுமையோடும், மலர்களோடும், நறுமணப் பொருள்களோடும்-மதுவகைகளை மட்டும் விலக்கி அருமையாகக் கொண்டாட முடிவு செய்தார்.

5. ஏழாம் நாள் அதிகாலை விழித்தெழுந்து, நறுமண நீராடி நான்கு லட்சம் நாணயங்களை நன்கொடை வழங்கி அற்புத ஆபரணங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டு மிகச் சிறந்த உணவுண்டு, விரத நாள் உறுதி மொழிகளை மேற்கொண்டு ஆடம்பரமாய் அலங்கரிக்கப்பட்ட அந்தப்புரத்திற்குள் உறங்கச் சென்றார்.

6. அன்றிரவு சுத்தோதனரும், மகமாயாவும் கூடியதால் மகாமாய கருவுற்றார். அப்படியே பஞ்சணையில் உறங்கிப்போனார். அவ்வுறக்கத்தில் அவர் ஓர் கனவு கண்டார்.

7. அவர் உறங்கும் பஞ்சணையில் இருந்து திசைக் காவலர் நால்வர் அவரை எடுத்து ஏந்தி இமயச சமவெளிகளுக்கு எடுத்து சென்று, ஆங்கோர் பெருத்த சால் மரத்தின் அடியில் கிடத்தி அருகே நின்றதாய் அக்கனவு நிகழ்ந்தது.

8. திசைக் காவலர்களின் மனைவியர் நால்வரும் அங்கு வந்து மகாமாயாவை மானசரோவர் ஏரிக்கு அழைத்துச் சென்றனர்.

9. அவ்வேரியில் அவரை நீராட்டி, நல்லுடை உடுத்தி, நறுமணம் தெளித்து பூக்களால் அலங்கரித்தனர்-மிக்குயர்ந்தோரைக் காணச் செல்வோர்க்குப் பொருந்தும் வண்ணமாய்.

10. பிறகு சமேதர் என்னும் போதி சத்துவர் ஆங்கு தோன்றி மகாமாயாவிடம் கூறினார், "என் இறுதிப் பிறப்பபைப் பூவுலகில் எய்த விரும்புகிறேன்.எனக்கு தாயாய் இருக்க சம்மதிப்பீர்களோ" என்றார். "அப்படியே ஆகட்டும் அது எனக்கு மகிழ்ச்சியோ" என்றார் மகாமாய. இந்தக் கட்டத்தில் கனவிலிருந்து விழித்தார்.

11. அடுத்த நாள் காலை மகாமாயா தன் கனவைப் பற்றி சுத்தோதனரிடம் கூறினார். அக்கனவின் உட்பொருளை அறிய இயலாத சுத்தோதனர், மெய்ப் பொருள் உணர்பவராய்ப் புகழ் பெற்ற பிராமணர்கள் எட்டு பேரை அழைத்தார்.

12. இராமர், தகர், லக்கணர், மாந்தி, யண்ணர், சுயமர், கபோகர், மற்றும் சுதத்தர், ஆகிய எட்டு பிராமணர்களை வரவேற்கத் தயாராய் இருந்தார் சுத்தோதனர்.

13. தரைகளெல்லாம் பூக்களால் அலங்கரிக்கப்பட்டும் அவர்களுக்காக உயர் ஆசனங்கள் அமைக்கப்பட்டும், வரவேற்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

14. அந்த பிராமணர்களின் பாத்திரங்களை சுத்தோதனர் பொன் மற்றும் வெள்ளி நாணயங்களால் நிரப்பினார், நெய்யும், தேனும், பாலும், நற்சோறும் கலந்த நல்லுணவு அளிக்கப்பட்டு அவர்கள் உபசரிக்கப்பட்டனர். சிறந்த உடைகளும், கொழுத்தப் பசுக்களும் அவர்களுக்கு கொடையாய் வழங்கப்பட்டன.

15. உபசரிப்பு முடிந்ததும், மகாமாயர் கண்ட கனவை அவர்களிடம் விளக்கிய சுத்தோதனர், "இக்கனவின் பொருளை விளக்குங்கள் " என்றார்.

16. பிராமணர்கள் கூறின, "பதற வேண்டாம் மன்னரே தங்களுக்கு ஒரு மகன் தோன்றப் போகிறார். அவர் இல்லறவியலை தொடர்வாரேயானால் மாநிலம் முழுதாளும் மாமன்னராய்த் திகழ்வார். அல்லது வீட்டை விட்டு வெளியேறி துறவு நிலை மேற்கொள்வாரேயானால், அவர், உலக மாயையை ஒழிக்கின்ற புத்தராய் உருவாவார்".

17. கிண்ணத்தில் எண்ணெய்யை ஏந்தும் வண்ணம் பொறுப்புடன் பத்துத் திங்கள் போதிசத்துவரை கருவில் வைத்து காத்து வந்த மகாமாயா பிரசவக் காலத்தில் தன் தாய்வீடு செல்ல விரும்பினார். அவர் கணவரிடம் கூறினார். "என் தந்தையின் ஊரான தேவதகைக்கு செல்ல விரும்புகிறேன்".

18. "உன் விருப்பங்கள் நிறைவேற்றி வைக்கப்படும் என்று நீ அறிவாய் அல்லவா" என்று பதிலிறுத்தார் சுத்தோதனர். சேவகரால் ஏந்திச் செல்லப்பட்ட தங்கப் பல்லக்கில் மகாமாயாவை இருத்தி, சிறந்த பரிவாரங்களோடு, அவருடைய தந்தை வீட்டுக்கு அனுப்பி வைத்தார் அவா.

19. தேவதகைக்குச் செல்லும் வழியில், சால் மரங்களும், மற்ற மரங்களும் பூத்தும், பூவாமலும் அடர்ந்திருந்த அழகிய, மனமகிழ்வூட்டும் சோலை வழியே கடந்து சென்றார் மகாமாயா. அச்சோலை லும்பினி சோலை என்று வழங்கப்பட்டது.

20. பல்லக்கு அச்சோலை வழியே பயணிக்கும் போது, அச்சோலை சிறந்த சித்தலதா சோலை போன்றோ, அல்லது வலிமை மிக்க மாமன்னரை வரவேற்க அலங்கரிக்கப்பட்ட மாமண்டபம் போன்றோ அழகும் வசீகரமும் மிக்கதாயிருந்தது.

21. வேர் முதல் கிளைகளின் நுனி வரை மரங்கள் கனிகளால் நிறைந்திருந்தன. மலர்களும், பல்வகைப் பறவைக் கூட்டமும், மணத்தாலும் இன்னிசையாலும் அவ்விடத்தை நிரப்பியிருந்தன.

22. இவ்வழகிய காட்சியைக் கண்ட மகாமாயாக்கு, அவ்விடத்தில் இருந்து சற்று இளைப்பாற விருப்பம் எழுந்தது, அதன்படி தன்னை சால்மரத் தோப்புக்குள் அழைத்துச் சென்று இருத்திவிட்டுச் சற்று நேரம் காத்திருக்குமாறு சேவகர்குக் கட்டளையிட்டார் மகாமாயா.

23. பல்லக்கிலிருந்து இறங்கி அழகிய பெரிய சால்மரம் ஒன்றை மகாமாயா அணுகினார். அங்கு வீசிய இனிய இளம் தென்றலில் மேலும் கீழும் அசைந்த கிளைகளில் ஒன்றைப் பிடிக்க எண்ணினார் அவர்.

24. விரும்பியப்படியே காற்றின் அசைவினால் அவர் கை வரை தாழ்ந்து வந்தது ஒரு கிளை. எனவே அதைப் பிடிக்க முயன்று எம்பிப்பிடித்தார் மகாமாயா. உடனே காற்றின் மேல்நோக்கிய வீச்சினால் கிளை உயரவும், மகாமாயா தடுமாறி, பிரசவ வலிகண்டார். சால்மரக் கிளையைப் பிடித்த படியே, நின்ற நிலையிலேயே மகனைப் பிரசவித்து விட்டார் அவர்.

25. கி.மு. 563 ம்- ஆண்டு, வைசாக பவுர்ணமி நாளில் பிறந்தது அக்குழந்தை.

26. சுத்தோதனரும் மகாமாயாவும் மணந்து பலகாலமாகியும் அவர்களுக்குப் பிள்ளைபேறு இல்லாமலிருந்தது. எனவே அவர்கட்கு மகன் பிறந்ததும், அக்குழந்தையின் பிறப்பு பெரும் மகிழ்ச்சியோடும், பேரார்வத்தோடும், பெருஞ்சிறப்போடும் சுத்தோதனராலும், அவர்தம் குடும்பத்தாராலும் மட்டுமின்றி, அனைத்துச் சாக்கியாகளாலும் அருமையாய்க் கொண்டாடப்பட்டது.

27. குழந்தை பிறந்த நேரத்தில் சுத்தோதனர் கபிலவஸ்துவை ஆளுபவராய் அரசபட்டம் ஏற்றிருந்தார். இயல்பாகவே அவர் மகன் இளவரசன் என்றழைக்கப்பட்டார்.

## 4. அசித்தரின் வருகை

1. குழந்தை பிறந்த காலத்தில் இமயத்தில் ஒரு மாமுனிவர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் அசித்தர்.

2. வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வான்புகழ் எய்தியவர்கள் 'புத்தர்' என்னும் சொல்லை உரத்துக் கூவி மகிழ்வதை எதிரொலியாய்க் கேட்டார் அசித்தா. ஆடைகளை அசைத்தும் அங்கிங்குமாய் உலவியும் அவாகள் மகிழ்ச்சியில் திளைப்பதைக் கண்டார். அக்குழந்தை பிறந்த இடத்திற்குச் சென்று பார்த்து வந்தாலென்ன என்று எண்ணினார் அசித்தர்.

3. தம் ஒளிமிக்க கூரிய கண்களால் ஜம்புத்லீபம் முழுவதையும் நோட்டமிட்ட அசித்தர் கத்தோதனரின் இல்லத்தில அறிவொளி வீசும் அழகிய குழந்தை பிறந்திருப்பதையும் அதன் பிறப்பினால் அனைவரும் மகிழ்வுற்றதையும் அறிந்து கொண்டார்.

4. எனவே மாமுனிவர் அசித்தர், தன் மருமகன் நார்தத்தருடன் சுத்தோதன மன்னரின் அரண்மனை வாயிலை அடைந்தார்.

5. சுத்தோதனசின் அரண்மனை வாயிலில் பலநூறு ஆயிரம் மக்கள் கூடியிருப்பதைக் கண்டார் அசித்தர். எனவே அவர் வாயிற்காப்போனை அணுகி, "அரசரிடம் சென்று வாயிலில் முனிவர் ஒருவர் வந்திருப்பதாய்க் கூறுக." என்றார்.

6. பிறகு வாயிற்காப்போன் சுத்தோதனரை அணுகி, கைகூப்பி வணங்கிக் கூறினான். "பேரரசே! வயது முதி◌ாந்த முனிவரொருவர் வாயிலில் நிற்கிறார். அவர் தங்களை காண விழைகிறார்".

7. அசித்தருக்கு சிறப்பான ஆசனம் ஒன்றை ஏற்பாடு செய்துவிட்டு வாயிற்காப்போனிடம் சுத்தோதனர் கூறினார். "அவரை வர விடு." அரண்மனை வாயலிலுக்கு வந்த வாயிற்காப்போன் அசித்தரிடம் கூறினான். "அய்யா! தயவு செய்து தாங்கள் உள்ளே செல்க".

8. இப்போது அசித்தர் உள்ளே சென்று, சுத்தோதனரை அணுகி, அவா முன் நின்று, "வெற்றி! மன்னரே! வெற்றி! தாங்கள் நீடுழி வாழ்க! தங்கள் அரசாட்சி முறைப்படி செழிக்கட்டும்" என்றார்.

9. அசித்தரிடம் பணிந்து வணங்கி, ஆசனத்தில் இருக்கச் செய்த பின் சுத்தோதனர் முனிவரிடம் வினவினார். "மாமுனிவரே! தாங்களை இதற்கு முன் சந்தித்ததாய் எனக்கு நினைவில்லை. தாங்கள் இவ்வளவு தூரம் வந்ததன் நோக்கத்தை நான் அறிந்து கொள்ளலாமா?".

10. சுத்தோதனரிடம் அசித்தர் உரைத்தார்: "மாமன்னரே! தங்களுக்கொரு மகன் பிறந்திருக்கிறானல்லவா? அவனைக் காணும் அவாவோடே நான் இங்கு வந்தேன்."

11. சுத்தோதனர் கூறினார்: "மாமுனிவரே! குழந்தை தூங்குகிறான், தாங்கள் சற்று நேரம் காத்திருக்க முடியுமா?" முனிவர் கூறினார்: "மன்னரே! இந்தக் குழந்தையைப் போன்ற மாமனிதர்கள் நீண்ட நேரம் உறங்க மாட்டார்கள். இது போன்ற நல்லுயிர்கள் இயல்பிலேயே விழிப்பானவர்கள்."

12. மாமுனிவர் அசித்தர் மேல் கொண்ட இரக்கத்தாலோ என்னவோ, குழந்தை விழிப்புற்றதற்கான குறியைக்காட்டியது.

13. குழந்தை விழிப்புற்றதைக் கண்ட சுத்தோதனர், மகனைத்தன் இருகரங்களிலும் ஏந்தி முனிவர் முன் கொண்டு வந்தார்.

14. குழந்தையை உற்று நோக்கிய அசித்தர், அக்குழந்தையிடம் மாமனிதர்க்கான முப்பத்தியிரண்டு அடையாளங்களையும் மற்றும் எண்பது சிற்றடையாளங்களையும் கண்டார். எந்த மனிதாக்கும் எய்தாப் பேரொளியைக் குழந்தையிடம் கண்ட அசித்தர் வியந்துரைத்தார்: "அற்புதம்! மண்ணில் இந்த மாமனிதனின் தோற்றம் மகா அற்புதம்!." பிறகு

தன் ஆசனத்தில் இருந்து எழுந்து, தன் கைகளைக் கூப்பி, குழந்தையின் கமலப்பாதங்களைக் தொட்டு வணங்கி, வலச்சுற்று சுற்றி, அதைத் தன் கரங்களில் ஏந்தி ஆழ்ந்து சிந்திக்கலானார்.

15. இவ்வாறான முப்பத்தியிரண்டு அங்க அடையாளங்கள் உடையவர் யாவரும்_அதாவது குழந்தை கவுதமரைப் போல, தமக்கென இருவேறு வாழ்முறையையே உடையவர் என்றுரைக்கும் முதுமொழியை நன்கறிந்திருந்தவரான அசித்தர் உரைத்தார்: " இவன் இல்லறைத்தை ஏற்பானேயாயின் உலகப் பேரரசன் ஆவான் அன்றியும் இல்லம் துறந்து, துறவறம் மேற்கொள்வானேயாயின், முழுத்தெளிவுற்ற புத்தராவார்."

16. இக்குழந்தை இல்லறத்தானாய் நீடிக்க மாட்டான் என்று அசித்தர் உறுதிகொண்டார்.

17. குழந்தையைக் கண்டு விம்மினார்_கண்ணீர உகுத்தார்_ஆழ்ந்த பெருமூச்சை வெளிப்படுத்தினார்.

18. கண்ணீரும் பெருமூச்சும் விடும் அசித்ரை நோக்கினார் சுத்தோதனர்.

19. உடல் சிலிர்த்து, அழுது தேம்பும் அசித்தரைக் கண்டு கவலையுற்ற சுத்தோதனர் அசித்தரை வினவினார். "ஏன் முனிவரே? என்னவாயிற்று? ஏன் நீங்கள் இப்படி அழுகிறீர்கள்? கண்ணீர் சிந்துகிறீர்கள்? பெருமூச்சு விடுகிறீகள்? குழந்தைக்குத் தீங்கேதும் நேராதல்லவா?."

20. அசித்தர் அரசரிடம் கூறினார்: "ஓ! மன்னரே! நான் குழந்தையைக் குறித்து அழவில்லை. அவனுக்குத் தீங்கேதுமில்லை. நான் என்னை குறித்தே அழுகிறேன்."

21. "ஏன் அப்படி?" என்றார் சுத்தோதனர். அசித்தர் பதிலிறுத்தார். "நான் முதியவன்_ வயதானவன். இந்தக் குழந்தை வெகுநிச்சயமாக, புத்தராய்ப் பரிணமித்து, உயர்வும், தெளிவும் எய்தி, அறவாழியாம் கோட்பாட்டுச் சக்கரத்தை உலகெங்கும் உருளச் செய்வார். இவருக்கு முன்னே எவரும் உரைக்காத உன்னதக் கோட்பாடுகளை உரைத்து உலகை மகிழ்சியில் உய்வுறச் செய்வார்."

22. "சமய வாழ்வு, கோட்பாட்டுத் தத்துவம் ஆகியவற்றை இவர் உணாத்துகையில் அவை தொடக்கத்திலும், இடையிலும், முடிவிலும் நல்லனவாகவே இருக்கும். போதனையிலும், பயனிலும் அவை முழுமைபெற்றவையாய், தூய்மையாய், நிறைவானவையாய்த் திகழும்."

23. "எங்கேனும் ஓரிடத்தில், எப்போதேனும் ஓர் சமயத்தில் மட்டுமே மிக அரிதாய் மலரும் உதும்பர மலர்போல, எங்கேனும், எப்போதேனும், பிறப்பறுக்கும் பெருமைக்குரிய புத்தாகள் உலகில் மிக அருமையாய்த் தோன்றுவார்கள். அவ்வாறே, ஓ!அரசனே! மிக நிச்சயமாய் தங்கள் மகன் வெகு உயர்வான, முழுநிறைவான தெளிவை எய்தி, எண்ணிலா மானுடர்கள் துன்பக் கடல் கடந்து இன்புற உதவுவார்."

24. "அந்தப் 'புத்தர்' நிலை எய்துங்களால் இவரை நான் காண மாட்டேனே! அது தான் என் சோகம். அதனால் தான் அழுகிறேன்! புலம்புகிறேன்! ஆழ்ந்த பெருமூச்சு விடுகிறேன்! அப்போது அந்தப் புத்தரை கண்டு களிக்கும் பேறு பெற நான் இருக்க மாட்டேனே என்பது தான் என் துயரம்."

25. இதன் பின் மன்னர், மாமுனிவர் அசித்தருக்கும், அவருடைய மருமகனான நார்தத்தருக்கும், நல்லுணவு, நல்லுடையாவும் வழங்கி உபசரித்து வலச்சுற்று வந்து வணங்கினார்.

26. அதன் பின் தன் மருமகனான நார்த்தரிடம், அசித்தர் உரைத்தார்: "இந்தக் குழந்தை புத்தரான செய்தியைக் கேள்விப்படும் போது, நார்தத்தரே!, நீங்கள் அவரை அடைந்து, அவர் போதனைகளில் அடைக்கலமாகுங்கள்! இதுவே தங்கள் நன்மைக்கும் மகிழச்சிக்கும் வித்திடும்." இவ்வாறு கூறியபடி, அசித்தர் அரசரிடம் விடைபெற்றுக் கொண்டு, தன் ஆசிரமத்திற்கு மீண்டார்.

5. மகாமாயாவின் மறைவு

1. ஐந்தாம் நாள் குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழா நடைபெற்றது. குழந்தைக்காகத் தேர்வு செய்யப்பட்ட பெயர் சித்தார்த்தர் என்பதாகும். கவுதமர் என்பது குலப்பெயர். பெருவழக்காக அவர் சித்தார்த்த கவுதமர் என்று அழைக்கப்படலானார்.

2. குழந்தையின் பிறப்புக்காகவும், பெயர் சூட்டலுக்காகவும் நடைபெற்ற கொண்டாட்டங்களுக்கிடையே, திடீரென்று மகாமாயா உடல்நலங்குன்றினார்! மிகவும் குன்றியது அவர் உடல் நலம்.

3. தன் முடிவு நெருங்கி விட்டதை உணர்ந்த அவர் சுத்தோதனரையும், பிராஜாபதியையும் தன் படுக்கையருகே அழைத்துக் கூறினார்: "என் மகனைப் பற்றி அசித்தர் முன்னுரைத்தவாறே நிகழும் என்பதை நான் உறுதியாய் அறிவேன். என் துயரமெல்லாம் அதைக்காண நான் வாழமாட்டேன் என்பது தான்."

4. "விரைவில் என் மகன் தாயற்றவனாகி விடுவான். ஆனால் எனக்குப்பின் என் மகன் சரிவர கவனிக்கப்பட மாட்டானோ என்ற கவலை எனக்கு ஒரு துளியுமில்லை. அவன எதிர்காலம் என்னவாகுமோ என்ற அச்சம் எனக்கு அறவே இல்லை."

5. "பிரஜாபதியே! உன்னிடம் என் மகனை நான் ஒப்படைக்கிறேன். தன் தாயைவிட அவனுக்கு நீ அதிகமாகவே இனியவளாய் இருப்பாய் என்பதில் எனக்கு துளியும் ஐயமில்லை."

6. "இப்போது கவலையேதும் கொள்ளாதீர்கள். நான் அமைதியாய் இறக்க என்னை அனுமதியுங்கள். இறைவனின் அழைப்பும், தூதர்களின் வருகையும் சமீபித்து விட்டது." இவ்வாறு கூறிக் கொண்டே மகாமாயா தன் இறுதி மூச்சை இழுத்துவிட்டார். சுத்தோதனரும், பிரஜாபதியும் மிகுந்த துயரக்கொண்டு அவலமாக அழுதுபுலம்பினர்.

7. அவருடைய தாய் மறையும் போது சித்தார்த்தருக்கு வயது ஏழே நாட்கள்தான்.

8. சித்தார்த்தருக்கு இளைய தம்பி நந்தா என் பெயரில் இருந்தான் அவன் சுத்தேனருக்கும் மகாபிரஜாபதிக்கும் பிறந்தவன்.

9. சித்தார்த்தருக்கு ஒன்று விட்ட சகோதரர்கள் பலர் இருந்தனர். சுக்லோதனரின் மக்களான மகாநாமன், அனுருத்தன் ஆகியோர், அமிதோதனரின் மகனான ஆனந்தன், அவருடைய அத்தை அமிதையின் மகனான தேவதத்தன், மகாநாமன் சித்தார்த்தனுக்கு மூத்தவன். ஆனந்தனோ இளையவன்.

10. இவர்களிடையே, இவர்களோடே சித்தார்த்தர் வளர்ந்து வந்தார்.

## 6. குழந்தைப் பருவமும் கல்வியும்

1. சித்தார்த்தர் நடக்கவும், பேசவும் தொடங்கிய போது, சாக்கியர்களில் முதியோர் கூடி சுத்தோதனரிடம், சிறுவனை கிராம தேவதையான 'அப்யா'வின் ஆலயத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்றனர்.

2. சுத்தோதனர் இதற்கு ஒப்புக் கொண்டு குழந்தைக்கு ஆடை அணிவிக்கும் படி மகாபிரஜாபதியிடம் கூறினார்.

3. மகாபிரஜாபதி ஆடை அணிவிக்கும் போது, குழந்தை சித்தார்த்தர், மிக இனிய குரலில், தன் பெரியம்மாவிடம் தன்னை எங்கே அழைத்துப் போகிறார்கள் என்று கேட்டார். கோயிலுக்கு அழைத்துச் செல்லப்படுவதாய் அறிந்ததும் புன்னகைத்தார். ஆனால் சாக்கியார்களின் வழக்கத்துக்கேற்ப கோயிலுக்குச் சென்றார்.

4. எட்டுவயதில் சித்தார்த்தர் தம் கலவியைத் தொடங்கினார்.

5. மகாமாயாவின் கனவுக்கு விளக்கம் கூற சுத்தேதனரால் அழைக்கப்பட்ட அந்த எட்டு பிராமணர்களே அதாவது சித்தார்த்தரின் எதிர் காலத்தைக் கணித்தவர்களே அவருடைய முதலாசிரியர்கள் ஆயினர்.

6. தாங்கள் அறிந்த யாவற்றையும் அவர்கள அவருக்குக் கற்பித்தபின், உயரிய பாரம்பரியத்தவரும், பெருங்கல்வியாளரும், உத்திகாவைச் சேர்ந்தவரும், மொழியியலாளரும், இலக்கணவியலாளரும், வேத, வேதாங்க, உபநிடதங்களில் கற்றுத் தேர்ந்தவருமான சப்பமித்தரை வரவழைத்தார் சுத்தோதனர். பொற்குடத்திலிருந்து பணிவுடன் நீருற்றி,

சுத்தோதனர் தன் மகன் சித்தார்த்தரை அவரிடம் கல்வி பெற ஒப்படைத்தார். சப்பமித்தரே சித்தார்த்தரின் இரண்டாம் ஆசிரியரானார்.

7. அவரிடம் கவுதமர் அவர்காலத்தில் வழக்கிலிருந்த அனைத்து தத்துவ முறைகளையும் கற்றுத்தேர்ந்தார்.

8. இதுவுமன்னியில், கபிலவஸ்துவில் ஆஸ்ரமம் வைத்திருந்த ஆலாரகாலாம் என்பரின் சீடரான பாரத்வாஜரிடம் மனதை ஒருமுகப்படுத்தல், தியானித்தல் ஆகியவற்றை சித்தார்த்தர் நன்கு கற்றார்.

7. இளம்பருவக் குணநலன்கள்

1. சித்தார்த்தர் தன் தந்தையின் பண்ணைக்குச் செல்லும் போதெல்லாம், வேறு வேலைகள் ஏதும் இல்லையாயின், அமைதியான ஓரிடத்திற்கு ஒதுங்கி தியானம் பழகுவார்.

2. மனதைப் பண்படுத்தும் அனைத்துக் கல்வியும் அளிக்கப்பட்டதோடு, அவருக்கு சத்திரியருக்குரிய போர்க்கல்வியும் தவிர்க்கப்படவில்லை.

3. ஏனெனில், மனத்தைப் பண்படுத்தும் வேகத்தில் அவருக்கு வீரப்பயிற் விடுபட்டுப் போகக் கூடாதே என்று அஞ்சினார் சுத்தோதனர்.

4. சித்தார்த்தர் இயல்பிலேயே கருணையுள்ளவராக விளங்கினார். ஒரு மனிதன் மற்றொருவனைச் சுரண்டுவதை அவர் அறவே வெறுத்தார்.

5. ஒருமுறை தன்நண்பர்களோடு அவர், தன் தந்தையின் பண்ணைக்குச் சென்றார். அங்கே கொளுத்தும் வெய்யிலில் கந்தல் உடைகளுடன், வேலையாட்கள் ஏர்உழுதல், அண்டை வெட்டுதல், மரங்களை வெட்டுதல் போன்ற கடுமையான வேலைகளைச் செய்வதைக் கண்டார்.

6. இந்தக் காட்சி அவரை மிகவும் பாதித்தது.

7. 'ஒரு மனிதன் மற்றொருவரைச் சுரண்டுவது சரியாகுமா? என்று அவர் தன் நண்பர்களைக் கேட்டார் வேலையாள் கடுமையாக உழைக்கவும், அதன் பயனை எஜமானன் சுகமாய் அனுபவிக்கவுமாக இருப்பது எப்படி சரியாகும். என்றார்.'

8. என்ன பதில் கூறுவதென்று அவருடைய நண்பர்களுக்குத் தெரியவில்லை. ஏனெனில், உழைப்பாளி கடுமையாய் உழைக்கவே பிறந்தவனென்றும், அவனுடைய எஜமானனுக்காக உழைப்பதே அவன் விதியென்றும் கூறும் பழைய வாழ்க்கை தத்துவத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் அவர்கள்.

9. காச்கியர்கள் 'வப்ரமங்களம்' என்னும் ஒரு பண்டிகையைக் கொண்டாடுவது வழக்கம். விதைதெளிப்பு நாளில் கொண்டாடப்படும் ஒரு எளிய கிராமியப் பண்டிகையாகும் அது. அந்நாளில் ஒவ்வொரு சாக்கியரும் தாமே ஏருழுவது வழக்கம்.

10. சித்தார்த்தர் எப்பொழுதும் இந்த வழக்கத்தைப் பின்பற்றித் தாமே அன்று ஏருழுவதில் ஈடுபடுவார்.

11. கல்வியில் சிறந்தவராயினும், அவர் உடலுழைப்பை உதாசீனப்படுத்தமாட்டார்.

12. அவர் சத்திரிய வகுப்பச் சார்ந்தவரானபடியால், வில்வித்தைகளும் மற்ற போர்க்கருவிகளைப் பயன்படுத்தும் முறைகளையும் நன்கு கற்றிருந்தார். ஆனால் வீணாக வதைப்பதை அவர் ஒருபோதும் விரும்பியதில்லை.

13. வேட்டைக்குச் செல்வதை அவர் மறுத்தார், அவருடைய நண்பர்கள் கேட்பார்கள்: 'நீ புலிகளுக்குப் பயப்படுகிறாயா?' அவர் உடனே பதிலுரைப்பார்: "நீங்கள் புலிகளைக் கொல்லப் போவதில்லை என்பதை நான் நன்கறிவேன். நீங்கள் அபாயமற்ற மான்கள், முயல்கள் போன்ற அப்பாவி பிராணிகளையே கொல்வீர்கள்."

14. "நீ வேட்டையாட வராவிட்டாலும் பரவாயில்லை. உன் நண்பர்கள் எப்படி குறிபார்த்து அம்பெய்கிறார்கள் என்று பார்க்கவாவது வரலாமல்லவா?" என்பார்கள் அவருடைய நண்பர்கள். இந்த அழைப்புக்களையும் மறுதலித்துச் சித்தார்த்தர் கூறுவார்: "அப்பாவிப் பிராணிகளைக் கொல்லுவதை நான் காணச் சகிக்கமாட்டேன்."

15. சித்தார்த்தரின் இந்த மனோநிலையால் பிஜாபதி கவுதமி மிகவும் கவலைக் கொள்ளலானார்.

16. அவருடன் கீழக் கண்டவாறு அவர் விவாதிப்பார்: " நீ சத்திரியன் என்பதும் போராடுவது உன் கடமை என்பதும் உனக்கு மறந்து போயிற்றா என்ன? போர்க்கலையை வேட்டை மூலம் தானே பழகிக் கற்க முடியும். குறிபார்த்து எதிரியை வீழ்த்தக் கற்றுக்கொள்ள வேட்டையாடுதல் ஒரு நல்ல வழியல்லவா? வீரர்களின் பயிற்சிக்களமல்லவா வேட்டை?"

17. கவுதமியைச் சித்தார்த்தர் அடிக்கடி வினவுவார். "ஆனாலும் அன்னையே! ஒரு சத்திரியன் ஏன் போர்புரிய வேண்டும்?" கவுதமி பதிலாக உரைப்பார்: "அது அவனுடைய கடமை."

18. அவருடைய பதிலால் சித்தார்த்தர் ஒருபோதும் திருப்தியடைந்ததில்லை. கவுதமியை அவர் வினவுவார்: "ஒரு மனிதன் மற்றொரு மனிதனைக் கொல்லுவது எப்படி அவன் கடமையாகும்? கூறுங்கள்/" கவுதமியின் விவாதம் இது. 'இது போன்ற குணநலன் துறவிக்கு வேண்டுமானால் சரியாயிருக்கலாம். ஆனால் சத்திரியன் போரிடத்தான் வேண்டும் இல்லையானால் அரசாட்சியை யாரால் காப்பாற்ற முடியும்."

19. "ஆனாலும் அன்னையே! அனைத்து சத்திரியாகளும், ஒருவரை ஒருவர் நேசிப்பார்களேயானால், கொலை தொழிலில் ஈடுபடாமலே தங்கள் அரசாட்சியை அவர்களால் பாதுகாக்க முடியுமல்லவா?" சித்தார்த்தரின் கருத்துப்படியே அவரை விட்டு விடுவதைத் தவிர கவுதமிக்கு வேறு வழியில்லை.

20. தியானம் புரிவதில் ஈடுபடுமாறு தன் நண்பர்களை ஊக்குவிக்க முயல்வார் சித்தார்த்தர். ஆசனங்களை அவர்களுக்குக் கற்பித்தார். ஒரு குறிப்பிட்ட பொருளின் மேல் மனத்தைச் செலுத்தி ஒருமுகப்படுத்த அவர்களுக்குக் கற்பித்தார். "நான் மகிழ்ச்சியாயிருக்க வேண்டும். என் உறவினர்கள் மகிழ்ச்சியாயிருக்கவேண்டும். எல்லா உயிரினங்களும் மகிழ்ச்சியிருக்க வேண்டும்" என்பதான் எண்ணங்களைத் தெரிவு செய்து கொள்ளும்படி அவர்களுக்குத் சித்தார்த்தர் அறவுறுத்துவார்,

21. ஆனால் அவருடைய நண்பர்களோ இதைப் பெரிதாய் எடுத்துக் கொள்ளவில்லை. அவரை இதற்காக அவர்கள் கேலிசெய்தனர்.

22. கண்களை மூடிக் கொண்டாலும், அவர்கள் தியானப் பொருள்மேல் முழுக் கவனமும் செலுத்த மாட்டார்கள் சிலர் தம் அகக்கண்களால் வேட்டைக்கான மானையோ, சுவைப்பதற்கு இனிப்பையோ மட்டுமே விரும்பிக் காண்பார்கள்.

23. சித்தார்த்தரின் தாயும் தந்தையும் அவர் இப்படி தியானத்திற்காகத் தனிமைப்படுவதைச் சற்றும் விரும்பவில்லை. இது முழுக்க முழுக்க சத்திரிய வாழ்க்கைக்கு முரணானது என்று அவர்கள் கருதினார்கள்.

24. சரியாவற்றை இலக்காகக் கொண்டு தியானம் புரிவது பேரன்பை வளர்க்கும் என்று கருதினார் சித்தார்த்தர். "வாழும் உயரிகளைப் பற்றிச் சிந்திக்கையில், நாம் பாகுபாட்டிலும், வேறுபடுத்துவதிலும் தொடங்குகிறோம். நண்பர்களைப் பகைவரிடமிருந்து பிரித்துப் பார்க்கிறோம். வளர்ப்பு மிருகங்களை, மனிதருக்கு வேறாகப் பிரித்தறிகிறோம். நண்பர்களையும் வளர்ப்பு மிருகங்களையும் நேசிக்கிறோம்_பகைவர்களையும், கொடிய மிருகங்களையும் வெறுக்கிறோம்"_என்று தம் தியானச் சிந்தனையைத் தமக்குள் நியாயப்படுத்திக் கொள்வார் அவர்.

25. "இவ்வாறு பகுத்துணரும் கோட்டை நாம் கடந்தாக வேண்டும். ஆழ் நிலைச் சிந்தனையில் நடைமுறை வாழ்க்கையின் கட்டுகளை நாம் தகர்ப்பதன் மூலம் இரு நமக்குக் கைகூடும்." இவ்வாறானது அவருடைய தர்க்கம்.

26. பெருங்கருணை உணர்வின் இருப்பால் சிறந்து, குறிப்பிடத் தக்கதாய் விளங்கியது அவருடைய இளம் பருவம்.

27. ஒருமுறை அவர் தன் தந்தையின் பண்ணைக்குச் சென்றார். ஓர் இடைவேளையில் ஒரு மரத்தடியில் இயற்கையின் அழகையும் அமைதியையும் அனுபவித்தவாறு இருந்தார் சித்தார்த்தர். அப்போது திடிரென மேலிருந்து ஒரு பறவை அவர் முன் வந்து விழுந்தது.

28. அது ஓர் அம்பினால் வீழ்த்தப்பட்டு, வலியால் மிகவும் துடித்தது.

29. அந்தப் பறவைக்கு உதவ ஓடினார் சித்தார்த்தர். அதன் உடலில் த்திருந்த அம்பை மெல்ல எடுத்தார். அதன் காயத்துக்குக் கட்டு போட்டார். அது பருக நீரூட்டினார். அந்தப் பறவையைத் தன் மேலாடையால் சுற்றி, எடுத்து, தான் முன்பு அமர்ந்திருந்த இடத்துக்கு வந்தமர்ந்து, தன் மார்புக்கருகே ஏந்தி, அதற்மு இதமளித்துக் கொண்டிருந்தார்.

30. இந்த அப்பாவிப் பறவையை யார் அம்பெய்தி வீழ்த்தினார்கள் என்றறிய சுற்றுமுற்றும் பார்த்தார். விரைவில் வேட்டைவீரனாய, அவருடைய அத்தை மகன் தேவதத்தன் அங்கு வந்து சேர்ந்தான், தான் ஒரு பறவையை வீழ்த்தியதாகவும், காயப்பட்ட அப்பறவை சற்று தூரம் பறந்ததாகவும், இங்குதான் எங்காவது வீழ்ந்திருக்குமென்றும் கூறிய அவன், சித்தார்த்தர் அதனைக் கண்டாரோ என வினவினான்.

31. ஆமென்று பதிலுரைத்த சித்தார்த்தர், வலி தீர்ந்துத் தேறிய பறவையை அவனிடம் காட்டினார்.

32. தேவதத்தன் அந்தப் பறவையைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமெனக் கேட்டான். சித்தார்த்தர் மறுத்தார். இருவரிடையே கூர்மையடைந்தது விவாதம்.

33. வேட்டையின் விதிப்படி, பறவையை வீழ்த்திய தனக்கே உரிமையானது அது_ஏனெனில் வேட்டை விளையாட்டில் எவனொன்றைக் கொல்கிறானோ அவனுக்கே உரியதாகும் அது என்றான் தேவதத்தன்.

34. அந்த விதியினை மறுதலித்தார் சித்தார்த்தர், யார் அதைக் காப்பாற்றினாரோ அவருக்கே உரியது அது என விவாதித்தார். அழிக்க நினைத்தவர்க்கெப்படி அரு உரியதாகும் என்றார்.

35. இருவரில் ஒருவரும் விட்டுக் கொடுப்பதாயில்லை. விசயம் நடுவர் ஒருவரிடம் கொண்டு செல்லப்பட்டது. சித்தார்த்த கவுதமரின் கருத்துக்கே நடுவர் உடன்பட்டார்.

36. தேவதத்தன் அவருடைய நிரந்தர எதிரியாகிவிட்டான். ஆனால் கவுதமரின் பெருங்கருணை உள்ளமோ, தன் மைத்துனரின் நட்பைவிட, ஓர் உயிரைக் காப்பதே பெரிதெனக் கருதியது.

37. சித்தார்த்த கவுதமரின் இளம் பருவ குணநலன்களே இவ்வாறிருந்தன.

8. திருமணம்

1. சாக்கியர்களில் தண்டபாணி என்றொருவர் இருந்தார். யசோதரா என்று அவருக்கு ஒரு மகள் இருந்தார். அழகுக்காகவும், சீலத்துக்காகவும் புகழ் பெற்றவராகத் திகழ்ந்தார் அவர்.

2. யசோதரா பதினாறு வயதடைந்ததும், அவருடைய திருமணம் பற்றிச் சிந்திக்கலானார்ங தண்டபாணி.

3. மரபுப்படி பக்கத்து நாடுகளிலிருந்த இளைஞர்களுக்குத் தன் மகளின் சுயம்வரத்துக்கான அழைப்பை விடுத்தார் அவர்.

4. சித்தார்த்த கவுதமருக்கும் ஓர் அழைப்பு அனுப்பப்பட்டது.

5. சித்தார்த்த கவுதமர் பதினாறு வயதடைந்திருந்தார். அவருடைய பெற்றோர்களும் அவருக்கு மணமுடித்து வைக்க மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தனர்.

6. சுயம்வரத்துக்குச் சென்று யசோதராவை மணக்க முயலும் படி அவரைக் கேட்டுக் கொண்டார்கள் அவர்கள். தன் பெற்றோர்களின் விருப்பத்திற்கேற்பச் சுயம்வரத்திற்குச் செல்ல அவர் ஒப்புக் கொண்டார்.

7. வந்திருந்த இளைஞர்களில் யசோதராவின் தேர்வு சித்தார்த்த கவுதமராகவே இருந்தது.

8. தண்டபாணிக்கு இதில் அதிக மகிழ்ச்சியில்லை, திருமணத்தின் வெற்றி பற்றி அவா ஐயம் கொண்டிருந்தார்.

9. சித்தார்த்தர் எப்போதும் முனிவர்கள், துறவிகளின் தொடர்பையே விரும்பிக் கொண்டிருந்தார். தனிமையைப் பெரிதும் விரும்புபவராய் இருந்தார். இவர் எப்படி வெற்றிகரமான இல்லறத்தாராக முடியும்?

10. சித்தார்த்தரைத் தவிர வேறெவரையும் மணமுடிப்பதில்லை என்பதில் உறுதியாக இருந்த யசோதரா, 'முனிவர்களோடும் துறவிகளோடும் இருப்பது குற்றமா என்ன?' என்று தன் தந்தையை வினவினார். அவர் அப்படிக் கருதவில்லை.

11. யசோதராவின், சித்தார்த்த கவுதமரைத் தவிர வேறெவரையும் மணப்பதில்லையென்னும் உறுதிப்பாட்டை நன்கறிந்த அவருடைய தாய், இதற்கு உடன்படும்படி தண்டபாணியிடம் தெரிவித்தார். அவரும் ஒப்புக் கொண்டார்.

12. கவுதமருடன் சுயம்வரப் போட்டிக்கு வந்திருந்தவர்கள் இதனால் ஏமாற்றமடைந்து மட்டுமல்லாமல், தாம் இழிவுப்படுத்தப்பட்டதாகவும் கருதினார்.

13. பொதுவாக எல்லோர்க்கும் சமமாக யசோதரா ஏதாவது தேர்வுச் சோதனை நடத்தியிருக்க வேண்டும் என்று கருதினர் அவர்கள். அவர் அப்படியேதும் செய்யவில்லை.

14. யசோதரா சித்தார்த்த கவுதமரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள தண்டபாணி அனுமதிக்கமாட்டார் என்று அவர்கள் கருதியிருந்ததால் தங்கள் விருப்பம் தானே நிறைவேறுமென எண்ணி அமைதியாக இருந்தார்கள்.

15. ஆனால் தண்டபாணி யசோதராவின் தேர்வை எதிர்க்கத் தவறியதால் வில்வித்தைத் திறமையில் தேர்வு வைக்கப்பட்டே சுயம்வரம் நடைபெற வேண்டும் எனறு வற்புறுத்தினர். தண்டபாணி இதற்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

16. முதலில் சித்தார்த்தர் இதற்குத் தயாராயில்லை. ஆனால்அவருடைய தேர்ப்பாகரான சன்னா, போட்டியை மறுதலிப்பதன் மூலம் அவருடைய தந்தைக்கும், அவர் குடும்பத்துக்கும் மட்டுமின்றி யசோதராவுக்கும் இழிவு நேரும் என்பதைக் சுட்டிக் காட்டினார்.

17. அவருடைய வாதத்தினால் பெரிதும் கவரப்பட்ட சித்தார்த்தர் விற்போட்டியில் பங்கேற்க ஒப்புக் கொண்டார்.

18. போட்டி தொடங்கியது. ஒவ்வொருவரும் வரிசையாய்த் தம் திறமையை வெளிப்படுத்தினர்.

19. கவுதமரின் முறை கடைசியாக வந்தது. ஆனால்அவருடை விற்திறன் அனைவரைவிடவும் அற்புதமாய் இருந்தது.

20. அதன் பின் திருமணம் நடைபெற்றது. சுத்தோதனரும் தண்டபாணியும் மிகவும் மகிழ்ந்தனர். யசோதராவும் மகா பிராஜாபதியும் அவ்வாறே பெரிதும் மகிழ்ந்தனர்.

21. நீண்ட தாம்பத்தியத்திற்குப் பின் யசோதரா ஒரு மகவை ஈன்றெடுத்தார். அக்குழந்தைக்கு இராகுலன் என்று பெயர் சூட்டப்பட்டது.

## 9. மகனைக் காக்கத் தந்தையின் திட்டங்கள்

1. தன் மகன் திருமணம் புரிந்து கொண்டு இல்லறம் மேற்கொண்டு விட்டதற்காக அரசர், சுத்தோதனர் மிகவும் மகிழ்ந்தாரெனினும், துறவி அசித்தரின் கணிப்பு அவரை அச்சுறுத்திக் கொண்டேயிருந்தது.

2. அக்கணிப்பு மெய்யாகிவிடாமல் தடுக்க, சித்தார்த்தரை உலகியல் வாழ்வின்பங்களில் மெய்மறக்கச் செய்ய வேண்டும் என்று கருதினார் சுத்தோதனர்.

3. இந்நோக்கோடு அவர் தன் மகன் வாழ, முப்பெரும் மாளிகைகளைக் கட்டினார்_ஒன்று கோடைக்கேறறது_ஒன்று மழைக்காலத்துக்கு_மற்றொன்று குளிர்காலத்துக்கு_அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றும் ஆடம்பர வசதி மிக்க அழகிய மாளிகைகள் அவை.

4. ஒவ்வொரு மாளிகைக்கும் ஒரு பெருஞ்சோலை_அனைத்து வகை மலர்களாலும், மரங்களாலும் அடர்ந்ததாய் அமைக்கப் பட்டது.

5. குலகுரு உதாயினரின் ஆலோசனையோடு, அழகிய ஆரணங்குகளை அம்மாளிகைகளில் இருக்கச் செய்ய எண்ணினார் சுத்தோதனர்.

6. அதன் பின் வாழ்க்கயின் உலகியல் சுகங்களில் ஈடுபடுமாறு இளவரசை ஈர்க்கும் வழிவகைகளை அந்தப் பெண்களுக்கு நன்கு அறிவுறுத்தும்படி உதாயினரைக் கேட்டுக் கொண்டார் அவர்.

7. அந்தப்புரத்தில் அழகிகளைக் கூட்டியபின், உதாயினர் முதலில் இளவரசரை ஈர்ப்பதெப்படி என்று அவர்களுக்கு அறிவுரைத்தார்.

8. அவர் கூறியதாவது: "அணங்குகளே! நீங்கள் அழகியலில் வல்லவர்கள், உணர்வின் மொழியை மிக நன்கு புரிந்து கொள்வதில் பேராற்றல் மிக்கவர்கள். அழகும், கவர்ச்சியும் மிகுந்தவர்கள் நீங்கள். உங்கள் ஒயிலும் சாயலும் மிகச் சிறந்தவை.

9. "இத்தகைய உங்கள் நளினங்களால், முற்றும் துறந்த முனிவர்களையே திக்குமுக்காடச் செய்யவும், தேவலோக மாதர்கள் வசப்பட்ட தேவர்களையே வசீகரிக்கவும் உங்களால் முடியும்.

10. உள்ளத்து உணர்வை வெளிப்படுத்தும் திறன்மிக்க நீங்கள், உங்கள் மிகைக்காதலுணர்ச்சியால், வசீகரக் கவர்ச்சியால், பொங்கிவரும் அழகால் பெண்களையே மயக்கக் கூடியவர்கள் என்றால் ஆண்கள் எம்மாத்திரம்?

11. இவ்வளவு திறன் மிக்க உங்களில், ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் அற்புதமானவர் என்பதால், இளைவரசைக் கவர்ந்து ஈர்க்கவும், உங்கள் கட்டுக்குள் வைத்திருக்கவும் நிச்சயம் உங்களால் முடியும்.

12. உங்களின் எந்தச்சிறிய லாவண்ய அசைவும் புதிய மணமகன்களை வெட்கத்தால் நிலைகுலையச் செய்யும்.

13. இநத நாயகன் எப்படிப்பட்டவராகத்தான் இருக்கட்டுமே அதனாலென்ன பெண்ணின் வன்மை பெருவன்மையல்லவா? இதுவே உங்கள் உறுதியான தீர்மானமாக இருக்கட்டும்.

14. பண்டைக்காலத்தில் தேவர்களாலும் வெல்ல முடியாத மாமுனிவர் ஒருவர் காசியெனும் பேரழகியின் காலில் வீழ்ந்து கிடந்தாராமே.

15. மாமுனிவர் விஸ்வாமித்திரர், தவத்தில் ஆழ்ந்திருந்த போதும் கிருதகி என்னும் அழகியால் வனத்தில் பத்தாண்டுகள் தன்வசமிழந்து கிடந்தாராமே.

16. இதுான்று பலபெரும் ஞானிகளையே பெண்கள் தம் வசப்படுத்தியிருக்கிறார்கள் என்றால், தன் வாழ்வின் முதற் பூப்புப்பருவத்தில் முகிழத்திருக்கும் இளவரசரை வசப்படுத்தவது கடினமல்லவே.

17. இது இவ்வாறிருப்பதால், பெண்களே மன்னரின் குலமரபு தடைபட்டுப் போகாதிருக்கம் வண்ணம் உங்கள் கைவரிசையைக் காட்டுங்கள்

18. சாதாரணப் பெண்கள் சாதாரண ஆண்களைத் தம வசப்படுத்துவார்கள். ஆனால் சிறந்த பெண்களோ இயல்பிலேயே சீரிய-கடினமான ஆண்களையும் வசப்படுத்தக்கூடியவர்கள்.

## 10. இளவரசரை வசப்படுத்த முயன்ற பெண்களின் தோல்வி

1. உதாயினரின் இந்த உரையைத் கேட்ட பெண்கள், எப்படியாவது இளவரசரைத் தம்வசப்படுத்த உறுதிமேற்கொண்டனர்.

2. தங்கள் வில்லென வளைந்த புருவமும், வசீகரம் மிக்க பார்வையும், காதல் மொழிகளும், கனிச்சுவைப் புன்னகையும், நளின சித்ர நடையும் கூட அந்தப் பெண்களுக்குத் தன்னம்பிக்கையைத் தரவில்லை.

3. ஆனாலும், குல குருவின் போதனைகளும், இளவரசரின் நயமான நடையும், அப்பெண்கள் அருந்தியிருந்த மதுவும், நேசமும் அவர்களுக்குள் உறுதிப்பாட்டை மீட்டன.

4. இமவதப் பர்வத வனங்களில் உலவும் யானையைப்போல் அடர்ந்த சோலைகளில் பெண்களின் கூட்டத்தோடு இளவரசரை அவர்கள் உலவச் செய்தனர்.

5. தேவ வனத்தில் அப்ஸரஸ்கள் சூழ விற்றிருக்கும் சூரியனென அந்த மகிழவனத்தில் பெண்கள் புடைசூல அவர் ஒளிபடைத்தவராய் வீற்றிருந்தார்.

6. ஆங்கு, உணர்ச்சி வசப்பட்ட சில பெண்கள் தம் நிறையழகுத் தோள்களால் மெல்ல அவரை தழுவினர்.

7. மற்றசர்கள், தாம் தடுமாறியது போல் நடித்து, அவர் மீது தம் தோள்கள் சரியச் சாய்ந்து வன்மையாய் அவரை இறுகப் பற்றி, கொடியெனத் தழுவினர்.

8. இனனும் சிலர், தம் இன்மதுவின் மணம்வீசும் இனிய வாயின், செவ்விள இதழ்களைச் சுழித்து அவர் காதுகளில் கிசுகிசுத்தனர். " என் இரகசியங்கள் உம்மால் அறியப்படட்டும்"

9. நறுமணத்தைலங்களால் ஈரமாகியிருந்த சில பெண்கள், அவர் கைகளைக் கட்டளையிடும் தோரணையில் பற்றியிழுத்துக் கூறினர். "அழகை ஆராதியுங்களேன்."

10. போலிப்போதையில், தன் நீல உடை அடிக்கடி நெகிழுமாறு நடித்த மற்றொரு பெண், இருளில் பளிச்சிடும் மின்னலெனத் தன் நாவை நீட்டி அசையாமல் நின்று அழகு காட்டினாள்.

11. மற்றவர்களோ தம்பொன்னுடைகள் மின்னினுக்க, இங்குமங்கும் உலவி, மெல்லிய உடைக்குள் மிளிரும் தம் உடலழகைக் காட்டி அவரை மயக்க முனைந்தனர்.

12. மற்ற சில பெண்களோ, பொற்குடங்கள் போன்ற அழகு விம்மிவெளிப்படுமாறு, மாங்கிளையைக் கையிலேந்தி, ஒயிலாய்ச் சாய்ந்து உணர்வூட்ட முனைந்தனர்.

13. இன்னும் சில பெண்களோ, தாமரைக் கண்களோடும், தாமரைக் கன்னிகளாய், தாமரைமுக இளவரசரின் அருகிருந்து தாமரைக்கன்னி பத்மாவைப் போல் அழகுக் காட்டினார்.

14. இன்னொரு பெண், எளிய பாடலொன்றை உரியபாவங்களோடு இனிமையாய், இசைத்தவண்ணம், இளவரசர் அமைதியாய் இருந்தபோதும், வேண்டுமென்றே சீண்டி, ஓ! எப்படி மயங்கிவிட்டீர்கள் நீங்கள்? என்றாள்.

15. மற்றொருத்தி, ஒளிபடைத்த தன்முகத்தையும், முழுதாய் வளைந்த புருவத்தையும் வசீகர ஆயுதங்களாய்ப் பயன்படுத்தி, அவரைப் போல் நாயகபாவ நடிப்பைக் காட்டினாள்.

16. இன்னொருத்தி, வெகு அழகிய, மிக விம்மிய தோளழகோடும், காற்றில் அழகுற அசையும் காதணிகளோடும், ஆடி அசைந்தபடி அவரைப்பார்த்து உரத்துச் சிரித்து ஓடி ஒளிந்தாள்' 'முடிந்தாள் என்னைப் பிடியுங்கள்' என்று.

17. அவர் என்னவோ விலகிப்போவதாய்ப் பாவனைச் செய்த மற்றும் சில பெண்கள் மலர் மாலைகளால் அவரைச் சுற்றி வளைத்தனர். இன்னும் சிலர் யானைப்பாகனின் அங்குசமொத்த சுடுசொற்களால் உறுதியாய் ஆனால் இதமாய் அவரை சீண்டினர்.

18. அவரோடு விவாதிக்க ஆவமுள்ளவளாய் ஒருத்தி, மாங்கொத்து ஒன்றை கையிலெடுத்து, உணர்வுமிக்கவளாய் அவரை வினவினாள்: "இந்த பூக்கள் யாருடையவை?"

19. மற்றொருத்தி, ஆணாகத் தன்னை உருவகித்துக் கொண்டு அவரைக் கேட்டாள், "பெண்ணால் வெல்லப்பட்ட நீ, புவியை வெல்லப்போகலாமே!"

20. இன்னொருத்தி அலைபாயும் கண்களுடன், நீலத்தாமரை ஒன்றை நுகர்ந்தவளாய் உணர்ச்சி வயப்பட்டுத்தட்டுத் தடுமாறி கொச்சை மொழிபேசினாள்.

21. அன்பு தலைவனே! இங்கே பார்! தேன்சுவை மலர்களால் மூடப்பட்டுள்ள மாங்கனி_கோகிலப் பறவையின் கானம்_தங்கக் கூண்டில் சிறைப்பட்டதைப்போல்.

22. வந்து இந்த அசோக மரத்தை காணுங்கள்_இவை காதலர் துயரத்தை அதிகரிப்பவை_தீயினால் தீண்டப்பட்டவை போல தேனீக்கள் ரீங்கரிக்கின்றன.

23. வந்து இந்த திலகமரத்தைக் காணுங்கள்_மெல்லிய மாங்கிளை தழுவிக் கொண்டுள்ளது_மஞ்சளுடை தரித்த மங்கை ஒருத்தி வெள்ளுடையில் உள்ள ஓர் ஆணைத் தழுவுவது போல்.

24. இதோ! இந்தக் குருபக மரத்தைக் காணுங்கள்_தேன் நிறைந்த மலர்கள் பூத்துக்குலுங்க_பெண்களின் செவ்விய நகங்களைக் கண்டு வெட்கித் தலைகுனிவது போல் இவை தோன்றவில்லையா?

25. இதோ! இந்த இளம் அசோக மரத்தைப் பாருங்கள்_புதிய கிளைகளால் பூரணமாகியுள்ள் இது எங்கள் கைகளின் அழகைக் கண்டு வெட்கியது போல் தோன்றுகிறது.

26. சிந்துவாரப் புதர்கள் நிறைந்த கரையுள்ள இந்த ஏரியைப் பாருங்கள்! வெள்ளுடையில் பொலிந்து தோன்றும் பேரழகுப் பெண்போல் இல்லை!

27. பேரழகுப் பெண்மையின் ஆதிக்கத்தைப் பாருங்கள்_அதோ அந்த நீர்நிலையில் அன்னங்கள்_ஆண் அன்னம் பெண் அன்னத்தை அடிமைபோல் பின்தொடர்கிறதே.

28. வாருங்கள்! குயிலின் இனிய கீதத்தைக் கேளுங்கள். அதோ! இதன் கீதம் முழுவதையும் ஒப்புக் கொண்டு பதில் கீதம் இசைக்கிறது இதன் ஜோடி.

29. இதோ! இந்தப் பறவைகள் போல் இந்த வசந்த காலத்தில் சுகித்திருப்பதே உங்களுக்குப் பொருந்தும்.ஞானியைப் போல் மாபெரும் சிந்தனைகளில் மூழ்கியிருப்பது இந்த சூழலுக்குக் கொஞ்சமும் பெருந்தாது.

30. இவ்வாறாக உணர்ச்சிவயப்பட்ட இந்த இளம் பெண்கள் இளவரசிரடம் எண்ணிலா சாகசங்களைச் செய்து பார்த்துவிட்டனர்.

31. இவ்வாறெல்லாம் உந்தப்பட்டும், தன்னை உணர்சிகளிலிருந்து தற்காத்துக் கொள்ளம் தன்மையுடையவராய் இருந்தமையால் அவர் இவற்றால் ஈாக்கப்படவில்லை-எளிதில் உணர்ச்சிக்காட்பட்டு மகிழவுமில்லை.

32. அவர்களின் உண்மை நிலையை நன்குணர்ந்திருந்தமையால், இளவரசர் சலனப்படாத, உறுதியான மனத்தோடு அமைதியாயிருந்தார்.

33. "இளமை நிலையற்றது என ஏன் இந்தப் பெண்கள் உணரவேயில்லை? என்ன குறை உள்ளது இவர்களிடம்? இருக்கும் அழகையெல்லாம் அழித்துவிடுமே முதுமை?"

34. அவரை வசீகரிப்பதற்காகப் புகழ்வதும், அவர் இளமையை, அழகைப் பாராட்டுவதுமாகப் பெண்கள் எடுத்த முயற்சி மாதக்கணக்கிலும், ஆண்டுக்கணக்கிலும் நீண்டும் தோல்வியுற்றது.

11.இளவரசருக்குப் பிரதம அமைச்சர் அளித்த அறிவுரை

1. பெண்களின் தோல்வியையும், இளவரசர் அவர்கள் பால் எந்த ஈடுபாடும் கொள்ளாமையையும் நன்குணர்ந்தார் உதாயினர்.

2. கொள்கைக் கோட்பாட்டு வழிமுறைகளில் வல்லவரான உதாயினர் இளவரசரிடம் நேரடியாகப் பேச எண்ணினார்.

3. தனியே இளவரசரைச் சந்தித்த உதாயினர் கூறினார்: "தங்களுக்கு உற்ற நண்பராக மன்னரால் அமர்த்தப்பட்டிருப்பதால் நான் தங்களிடம் சற்று மனம் திறந்து பேச விழைகிறேன்." இவ்வாறகத் தொடங்கினார் உதாயினர்.

4. பயனற்ற செயலைத் தவிர்க்கச் செய்வதும், பயனுள்ளவற்றைச் செய்யத் தூண்டுவதும், இடுக்கண் நேருங்கால் சோராதிருக்கச் செய்வதும் தான் உண்மை நண்பனுக்கு உரிய மூன்று அடையாளங்கள்.

5. நட்பை உறுதிப்படுத்திய பின்னால், மானுடரின் உன்னத இலக்கை நீங்கள் உதாசீனப்படுத்தும் போது, அதை நான் கண்டு கொள்ளாமல் இருப்பேனேயானால், என்னில் நட்புணர்வே இல்லை என்றாகிவிடும்.

6. ஒரு பெண்ணைத் தந்திரமாகவேனும் கவர்ந்திடுவதே சரி, _இதனால் இரண்டு பயன்_ஒன்று அவமானப்படாமல் தப்பலம் மற்றொன்று பெரு மகிழ்ச்சி அடையலாம்."

7. ஆசையாய்ப் பணிதலும், அவள் விருப்பப்படி நடத்தலும் ஒரு பெண்ணின் இதயத்தை மிகப்பெரிதும் வசீகரிக்கும்_நல்லியல்புகள் யாவும் நேசத்தின் உண்மைக் காரணங்கள் தமக்கு மதிப்பளிப்பதைப் பெண்கள் மனமாற நேசிப்பார்கள்.

8. ஆகவே, அகன்ற தண்களுடைய இளவரசரே! தங்களைப் போன்ற அழகும் வசீகரமும் உள்ளவர்கள், சொந்த விருப்பத்திற்காக இல்லையென்றாலும் கூட பெண்களை மகிழ்விக்க முனைவது தானே பொருந்தும்?

9. அவர்களை ஒருவர் மதிப்பதென்பதே மங்கையர்க்கு மன வருத்தம் தீர்ப்பது மதிப்தென்பதே அவர்களுக்கு அணிகலன் ஆவது மதிக்கப்படாத அழகு மலரற்ற சோலை.

10. வெறும் மதிப்பு மட்டும் என்ன பயன் தந்து விடும். உள்ளத்து உணர்ச்சி அம்மதிப்புக்கு உறுதுணையாகட்டும். உலகியல் இன்பங்கள் இத்துணை எளிதில் அடையக் கிடைக்கும் போது நீங்கள் அவற்றை ஒருக்காலும் உதாசீனப்படுத்திவிடல் ஆகாது.

11. அடையத்தக்க அனைத்திலும் இன்பமே சிறந்ததென அறிந்ததால்தான், புரந்தரன் (இந்திரன்) பண்டைக் காலத்தில் முனிவர் கவுதமரின் மனைவியான அகலிகை மேல் ஆசை கொண்டான்.

12. அப்படித்தான், சோமாவின் மனைவி ரோகினிமேல் அகஸ்தியர் ஆசை வைத்தார், இவ்வாறே, லோமுத்திரைக்கும் நேர்ந்ததாய்ச் சுருதிகள் கூறுகின்றன.

13. பெருந்துறவி பிரகாஸ்பதியே, மருதாவின் மகளும், அவ்தத்யாவின் மனைவியான மமதாவைக் கூடித்தானே, பாரத்வாஜனைப் பெற்றார்?

14. அளிப்பதில் சிறந்த சந்திரன், தன்னைத் தொழவந்த விருகாஸ்பதியின் மனைவியான அமைந்து தேவ அம்சமுள்ள புதனைப் பெற்றார்.

15. அப்படியே பழங்காலத்தில் பராசரன், யமுனை நதிக்கரையில், வருணனின் பேத்தியான காளியைக் கூடி மிழவில்லையா?

16. மாமுனிவர் வசிஸ்தர், காமமிகுதியால், ஒடுக்கப்பட்டவளான அக்ஷமாலாவைக் கூடி கபிங்க்லாதனைப் பெறவில்லையா?

17. இராஜரிஷியான யயாதர், முதுமை எய்திய பின்னும் கயத்ராத்த வனத்தில் அப்ஸராவிஸ்வாகியை இச்சிக்கவில்லையா?

19. இவ்வாறாக மாபெரும் நாயகர்களே இழிவான இன்பங்களைக் கூட விடாமல் தேடி உழன்றும், புகழ்பெற்றனரென்றால், அவ்வின்பத்தின் இன்றியமையாமைதானே இதற்கெல்லாம் காரணமாக இருக்க முடியும்?

20. ஆகவே இளமையும், ஆற்றலும், வனப்பும் மிகுந்த தாங்கள் தங்களுக்குரியதும், உலகமே உவப்பதுமான இன்பத்தை ஏன் மறுதலிக்கிறீர்கள்?

## 12. பிரதம அமைச்சருக்கு இளவரசர் அளித்த பதில்

1. பிரதம அமைச்சர் உதாயினரின் இத்தகைய புனித மரபுக் கதைகளை ஆதாரமாகக் கொண்ட போலியான வார்த்தைகளைக் கேட்ட இளவரசர், இடி முழக்கக் குரலில் தன் மறுப்பை வெளிப்படுத்தினார்.

2. நேயத்தை அறிவுறுத்தும் தங்களுரை தங்கள் வகையில் மிகவும் பொருத்தமானதே; ஆனால் என்னைத் தாங்கள் மிகத் தவறாக எடைபோட்டு விட்டீர்கள் என்பதைத் தங்களுக்கு உணர்த்த விழைகிறேன்.

3. நான் உலகியல் நோக்கை இகழவில்லை. மனிதகுலம் முழுவதும் அவற்றிற்காட்பட்டதென நான் நன்கறிவேன். உலகம் நிலையற்றது என்னும் உண்மை என் நினைவிலிருப்பதால், இவற்றில் என்மனம் இன்பம் காணவில்லை,

4. பெண்ணழகு என்பது ஒரு வேளை நிலையானதாயிருப்பினும் கூட, ஆசையில் அழுந்திப் பெறும் இன்பத்தில் நாட்டம் கொள்வது ஞானமுடையவனுக்குப் பொருந்தாது.

5. மிக உயர்ந்தவர்கள் கூட இன்ப ஆசைக்கு இரையானவர்களே என்று நீங்கள் கூறினாலும், அவர்களை ஏன் நாம் பின்பற்ற வேண்டும்? அவர்கள் முடிவில் அடைந்தது அழிவையே அல்லவா?

6. எங்கே அழிவு நேர்கிறதோ அல்லது எங்கே வெறும் லவுகீகப் பற்றே மிகுந்துள்ளதோ அல்லது எங்கே புலன்டக்கம் இல்லையோ அங்கே உண்மையான உயர்வை ஒருக்காலும் காண இயலாது.

7. தாங்கள் 'ஒருவன் பெண்களை நேயத்துடன் அணுக வேண்டும்' என்பீர்களாயின், பண்பான நேயம்பற்றி நான் நன்கறிவேன்.

8. அவ்வாறு பெண்களின் விருப்பத்திற்கு உடன்படுதல் என்பதும் என்னை மகிழ்விப்பதில்லை அவ்விருப்பத்தில் உண்மையில்லாத போது, அங்கே இதயத்தோடும், இயல்பினோடும் பிணைப்பு ஏற்படாதபோது அந்த நேசம் வேண்டாதது, வீணானது என்கிறேன்.

9. உணர்ச்சிக்கு அடிமையாகும் உள்ளம், பொய்மையை நம்பி, பற்றினால் இழுத்துச் செல்லப்பட்டு, இலக்கில் ஏற்படும் தவறுகளை அறியாக் குருடாகி, ஏமாற்றமடைவதில் என்ன பயன் இருக்கிறது?

10. உணர்ச்சிக்கு அடிமையான ஆணும் பெண்ணும் ஒருவைர ஒருவர் ஏமாற்றிக் கொள்கிறார்கள் என்பதே உண்மையாவதால், அத்தகைய ஆணை ஒரு பெண்ணும், பெண்ணை ஓர் ஆணும் அணுகவே அருகதை இல்லையல்லவா?

11. "இவை இவ்வாறிருப்பதானல் நீங்கள் நிச்சமாக என்னை இத்தகைய இழிந்த இன்பங்களை நோக்கி வழிநடத்த மாட்டீர்கள் அல்லவா?"

12. இளவரசரின் இந்த உறுதியான, வலிமையான தீர்மானத்தினால் வாயடைத்துப்போன உதாயினர் இச்செய்தியை அவருடைய தந்தைக்கு அறிவித்து விட்டார்.

13. புலன் உணர்ச்சிக்கேற்ற, அனைத்துப் பொருள்களிடமிருந்தும் அகன்றுவிட்ட தன் மகனின் மனத்தைப் பற்றிக் கேள்வியுற்ற சுத்தோதனரால் அன்றிரவெல்லாம் உறங்க முடியவில்லை.இதயத்தில் அம்பு தைத்த யானையைப் போல் அவர் துன்பத்தால் துடித்தார்.

14. சித்தார்த்தரை வெறும் உடலின்ப வாழ்க்கையின் பால் ஈர்த்து அதன் மூலம் அவர் வாழ்க்கையில் ஏற்படப்போவதாய் தோன்றும் திருப்பத்தலிருந்து அவரை விலக்க ஏதேனும் வழிகாண முடியுமா என்று ஆலோசிக்க அவரும், அவருடைய அமைச்சர்களும் அதிகநேரம் செலவிட்டுப் பார்த்தனர். என்றாலும் அவர்கள் அதுவரைக் கையாண்டு பார்த்தவைத் தவிர வேறு வழிகளேதும் அவர்களுக்குத் தென்படவில்லை.

15. தாம் அணிந்திருந்த மாலைகள் வாடவும், அணிகலன்கள் ஒளியிழக்கவும், தம் நளினக்கலைகளாலும், நயத்தகு முயற்சிகளாலும் பயனேதும் விளையாமற்போகவே, ஆரணங்குகளின் தொகுப்பு, தம் நேசத்தை நெஞ்சின் ஆழத்தில் புதைத்தப்படி கலைந்து போயிற்று.

## 13. சாக்கிய சங்கத்தில் இணைக்கப்படுதல்

1. சாக்கியர்கள் தமக்கென ஒரு சங்கம் வைத்திருந்தனர். இருபது வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொரு சாக்கிய இளைஞரும் சங்கத்தில் இணைக்கப்பட்டு உறுப்பினராயிருக்க வேண்டியிருந்தது.

2. சித்தார்த்த கவுதமர் இருபது வயதை அடைந்திருந்தார். சங்கத்தில் இணைக்கப்படவும், உறுப்பினராகவும் ஆன தருணம் அது.

3. சாக்கியர்கள் கூடிப்பேசுமிடம் 'சன்ஸ்தாகார்' என வழங்கப்பட்டது. அது கபிலவஸ்துவில் அமைந்திருந்தது. சங்கக் கூட்டங்கள் சன்ஸ்தாகாரில்தான் நடத்தப்பட்டன.

4. சங்கத்தில் சித்தார்த்தரை இணைக்கும் நோக்கத்துடன், சங்கக் கூட்டமொன்றை ஏற்பாடு செய்யும்படி, சாக்கியர்களின் தலைமை குரவைச் சுத்தோதனர் கேட்டுக்கொண்டார்.

5. அதன்படி கபிலவஸ்துவில் இருந்த, சாக்கியர்களின் சன்ஸ்தாகாரில் சங்கம் கூடியது.

6. சங்கத்தின் கூட்டத்தில், சித்தார்த்தர் சங்கத்தின் உறுப்பினராக்கப்படுவதற்கான தீர்மானத்தைத் தலைமைக்குரு முன்மொழிந்தார்.

7. பிறகு சாக்கியர்களின் சேனாதிபதி தம் இருக்கையை விட்டு எழுந்து, சங்கத்தினரிடம் கீழ்க்கண்டவாறு உரைத்தார்: "சாக்கியக் குலத்து சுத்தோதனரின் குடும்பத்தில் தோன்றிய சித்தார்த்த கவுதமர் சங்கத்தின் உறுப்பினராக விழைகிறார். அவளுருக்கு இருபது வயதாவதோடு, சங்கத்தின் உறுப்பினராவதற்கான அனைத்துத் தகுதிகளும் அவருக்குள்ளன. எனவே நான் அவரைச் சாக்கியசங்க உறுப்பினராக்க வேண்டும் என்ற தீர்மானத்தை

வழிமொழிகிறேன். இத்தீர்மாத்திற்கு எதிராக யாரேனும் ஏதேனும் கூற விழைந்தால், கூறும்படி வேண்டுகிறேன்".

8. அதை எதிர்த்து யாரும் பேசவில்லை "இத்தீர்மானத்தை எதிர்ப்பவர்கள் எவரேனும் இருப்பின் அவர்களைப் பேசும் படி, இரண்டாம் முறையாகக் கேட்டுக் கொள்கிறேன்" என்றார் சேனாதிபதி.

9. தீர்மானத்தை எதிர்த்துப் பேச எவரும் எழவில்லை. மீண்டும் சேனாதிபதி கூறினார்: "இத்தீர்மானத்தை எதிர்ப்பவர்கள் எவரேனும் இருப்பின், அவர்களைப் பேசும்படி மூன்றாம் முறையாகக் கேட்டுக்கொள்கிறேன்".

10. மூன்றாம் முறையாகவும், அதை எதிர்த்துப் பேச ஒருவரும் முன்வரவில்லை.

11. தீர்மானமில்லாமல் எதையும் விவாதிப்பதில்லையென்பதும், மூன்று முறை அங்கீகரிக்கப்படாத எந்தத் தீர்மானமும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக அறிவிக்கப்படுவதில்லை என்பதும் சாக்கியர்களிடையே வழக்குமுறைச் சட்டமாக இருந்தது.

12. எதிர்ப்பில்லாமல் சேனாதிபதியின் தீர்மானம் மும்முறை ஏற்கப்பட்டமையால் சித்தார்த்தர் சாக்கிய சங்கத்தின் உறுப்பினராக முறைப்படி சேர்க்கப்பட்டாரென அறிவிக்கப்பட்டது.

13. அதன்பிறகு, சாக்கியர்களின் தலைமைக் குரு எழுந்து நின்று, சித்தார்த்தரைத் தம் இடத்தில் எழுந்து நிற்கும் படி கூறினார்.

14. சித்தார்த்தரிடம் அவர் உரைத்தார்: "தம் உறுப்பினராக ஏற்றதன் மூலம் சங்கம் தங்களைக் கவுரவித்திருப்பதைத் தாங்கள் உணர்கிறீர்களா?" "ஆம் அய்யா! நான் உணர்கிறேன்" என்று பதிலிறுத்தார் சித்தார்த்தர்.

15. "சங்க உறுப்பினர்க்கான கடமைகளைத் தாங்கள் அறிவீர்களா?" "இல்லை அய்யா! நான் அறியாமலிருப்பதற்காக வருந்துகிறேன். எனினும் அறியப் பெருதும் விரும்புகிறேன், அறிந்தால் மிகவும் மகிழ்வேன்" என்றார் சித்தார்த்தர்.

16. "முதலில் நான் சங்கத்தின் உறுப்பினர் என்ற முறையில் தங்கள் கடமைகள் யாவையெனக் கூறுகிறேன்." என்று கூறினார் தலைமை குரு. அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக எடுத்துரைத்தார். 1) தாங்கள் தங்கள் உடலாலும், மனத்தாலும், உடைமையாலும் சாக்கியர்களின் நலனைப் பாதுகாக்க வேண்டும். 2) சங்கக் கூட்டங்களுக்கு வரத்தவறக் கூடாது. 3) ஒரு சாக்கியனின் நடத்தையில் தாங்கள் காணும் எந்தத் தவற்றையும், சார்பேதமின்றியும், அச்சமேதும் அற்றும் தாங்கள் சுட்டிக்காட்டவேண்டும். 4) ஏதேனும் ஓர் குற்றத்திற்காகத் தாங்கள் குற்றம் சாட்டப்படுகையில், அதற்காகத் தாங்கள் கோபிக்கலாகாது, மாறாக குற்றம் செய்திருப்பின், அதை ஒப்புக் கொள்ள வேண்டும், அவ்வாறின்றி தாங்கள் நிரபராதியாயின் அதை வெளிப்படுத்த வேண்டும்.

17. தலைமைக் குரு தொடர்ந்தார் "அடுத்து, எவையெல்லாம் தங்களைச் சங்க உறுப்பினர் பதவியை இழக்கச் செய்பவை என்பதைக் கூறுகிறேன்," 1) தாங்கள் கற்பழிப்பில் ஈடுபட்டால் சங்க உறுப்பினராய் நீடித்திருக்க இயலாது. 2) கொலைச் செயலில் தாங்கள் ஈடுபட்டால், சங்க உறுப்பினராய் நீடிக்க இயலாது. 3) தாங்கள் களவில் ஈடுபட்டால் சங்க உறுப்பினராய் இருக்க இயலாது. 4) தாங்கள் பொய் சாட்சி கூறிய குற்றத்திற்குட்பட்டால், சங்க உறுப்பினராய் இருக்க இயலாது.

18. "சாக்கிய சங்கத்தின் ஒழுக்க விதிகளை எனக்கு உரைத்தமைக்காக நான் தங்களுக்கு மிகவும் நன்றியுடையவனாயிருக்கிறேன் அய்யா! சொல்லிலும், செயலிலும் அவற்றைக் கடைப்பிடிக்க என்னால் இயன்ற அனைத்தையும் செய்வேன் என்று உறுதி கூறுகிறேன்" என்றார் சித்தார்த்தர்.

## 14. சங்கத்துடன் கொண்ட முரண்பாடு

1. சாக்கிய சங்கத்தில் உறுப்பினராகச் சித்தார்த்தர் ஆக்கப்பட்டு எட்டாண்டுகள் கடந்துவிட்டன.

2. சங்கத்திற்குத் தன்னை முழுதாய் அர்ப்பணித்துக்கொண்ட, செயலுறுதிமிக்க உறுப்பினராகத் திகழ்ந்தார் அவர் தன் சொந்தச் செயற்பாடுகளில் கொள்ளும் ஆர்வத்தையே சங்கச செயற்பாடுகளிலும் அவர் கொண்டிருந்தார். சங்க உறுப்பினர் என்ற வசையில் அரவருடைய நடத்தை ஈடற்றதாயிருந்தது,அதற்காக அவர் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்.

3. அவருடைய உறுப்பினர் பொறுப்பின் எட்டாமண்டில், சுத்தோதனரின் குடும்பத்திற்குத் துயரத்தை விளைவித்ததும் சித்தார்த்தர் வாழ்க்கையில் ஒரு நெருக்கடியை ஏற்படுத்தியதுமான ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது.

4. துன்பத்தின் தொடக்கம் இப்படித்தான் திகழ்ந்தது.

5. சாக்கியர்களின் அரசு எல்லையில் கோலியர்களின் அரசு இருந்தது. இரு அரச எல்லைகளும் ரோகின ஆற்றால் பிரிக்கப்பட்டிருந்தன.

6. ரோகினியின் நீர், தங்கள் வயல்களின் பாசனத்திற்காக சாக்கியர்கள், கோலியர்கள் ஆகிய இரு தரப்பாலுமே பயன் படுத்தப்பட்டு வந்தது. ஒவ்வொரு பருவத்திலும், அவ்விரு தரப்பாருக்கிடையிலும், யார் முதலில் ரோகினியாற்றின் நீரையெடுப்பது, எவ்வளவு எடுப்பது என்பது குறித்து வாக்கு வாதங்கள் நடைபெறுவதுண்டு. இந்த வாக்குவாதங்கள் முற்றிச் சண்டையிலும், சிலசமயம் பெரும் கைகலப்பிலும் முடிவதுண்டு.

7. சித்தார்த்தருக்கு இருபத்தியெட்டு வயதாகியிருந்த போது, சாக்கியர்களின் பணியாளர்களுக்கும், கோலியர்களின் பணியாளர்களுக்கும் இடையே ஆற்றுநீர் குறித்துப் பெரும் மோதல் ஒன்று நிகழ்ந்துவிட்டது. இருபக்கத்தவர்களுக்கும் பலத்த காயங்கள் ஏற்பட்டன.

8. இதையறிந்த சாக்கியர்களும், கோலியர்களும் இந்தப் பிரச்சினை ஒரேயடியாக போர்மூலம் தீர்க்கப்பட வேண்டும் என்று கருதினர்.

9. எனவே, சாக்கியர்களின் சேனாதிபதி, கோலியர்கள் மேற் போர் தொடுப்பது பற்றிய பிரச்னையைப் பரிசீலிக்கச சாக்கிய சங்கக் கூட்டத்தைக் கூட்டினார்.

10. சங்க உறுப்பினாகளிடம் உரையாற்றிய சேனாதிபதி கூறினார். "நம் மக்களைக் கோலியர்கள் தாக்கியுள்ளனர், அவர்களும் திருப்பித்தாக்க நேர்ந்துள்ளது கோலியாகளின் இத்தகைய அராஜகச் செயல்கள் நடைபெறுவது இதுவே முதல் முறையாக அல்ல. இதுவரை அவர்களை நாம் பொறுத்துக் கொண்டிருந்தோம். ஆனால் இது இப்படியே நீடிக்க முடியாது. இது நிறுத்தப்படவேண்டும், அதற்கான ஒரே வழி கோலியர்கள் மேல் போர் அறிவிப்பு செய்ய வேண்டுமென நான் முன்மொழிகிறேன். இதை எதி◌ாக்க விரும்புகிறவர்கள் பேசலாம்."

11. தன் இருக்கையிலிருந்து எழுந்து சித்தார்த்த கவுதமர் கூறலானார். "இந்த தீர்மானத்தை நான் எதிர்க்கிறேன். எந்தப் பிரச்சனையையும் போர் தீர்ப்பதில்லை. போர் தொடுப்பது நம் நோக்கத்திறகு எவ்வகையிலும் உதவப்போவதில்லை. அது மற்றொரு போருக்குத்தான் விதை தெளிக்கும். ஒரு கொலைஞன் மற்றொரு கொலைஞனாலேயே கொல்லப்படிவான். ஆக்கிரமிப்பாளன் மற்றொருவனால் ஆக்கிரமிக்கப்படுவான். அழிக்கிறவன் அழிக்கப்படுவான்."

12. சித்தார்த்த கவுதமர் தொடர்ந்தார். "சங்கம் கோலியர்கள் மீது போர் அறிவிப்பு செய்வதில் அவசரப்படப் கூடாதென நான் கருதுகிறேன். உண்மையில் எந்தத் தரப்பார் குற்றவாளிகள் என்பது உறுதி செய்யப்படும் வகையில் நன்கு பரிசீலிக்கப் பட வேண்டும். நம்மவர்களும் ஆக்கிரமிப்பாளர்களாய் இருந்த தாக நான் கேள்விப்படுகிறேன். இது உண்மையானால், நாமும் குற்றமற்றவர்கள் அல்ல என்பது தெளிவாகும்."

13. சேனாதிபதி பதிலுரைத்தார். "ஆம்! நம்மவர்கள் ஆக்கிரமிப்பு செய்தார்கள் தான். ஆனால் முதலில் நீர்பங்கிட்ட கொள்ள வேண்டிமுறை நமதே என்பதை மறந்துவிடலாகாது."

14. சித்தார்த்த கவுதமர் மேலும் கூறினார். "நாம் குற்றத்திலிருந்து முழுமையாய் விடுபடவில்லை என்பதையே இது காட்டுகிறது. எனவே, நம்மில் இருவரை நாம் தேர்ந்தெடுத்தும், கோலியர்களில் இருவரைத் தேர்ந்தெடுக்கச் சொல்லியும், அந்நால்வரும் அய்ந்தாமவரைத் தெரிவு செய்தும், இக்குழுவினர் இவ்வாக்குவாதத்தைத் தீர்த்து வைக் வேண்டுமெனவும் நான் முன்மொழிகிறேன்."

15. சித்தார்த்த கவுதமர் கொண்டுவந்த திருத்தம் முறையாக வழிமொழியப்பட்டது. ஆனால் இத்திருத்தை எதிர்த்த சேனாதிபதி கூறினார். "கோலியர்களின் இந்தத் தொல்லை, அவர்கள் செம்மையாகத் தண்டிக்கபடும் வரை தீராது என்பதில் நான் உறுதியாயிருக்கிறேன்."

16. எனவே தீமானமும் திருத்தமும் ஓட்டுக்கு விடப்பட வேண்டியிருந்தது. சித்தார்த்த கவுதமர் கொண்டு வந்த திருத்தம் முதலில் விடப்பட்டது. பெருவாரியான ஓட்டுக்களால் அது தோல்வியுற்றதாக அறிவிக்கப்பட்டது.

17. அடுத்து சேனாதிபதி தன் தீர்மானத்தை ஓட்டுக்கு விட்டார். மீண்டும் சித்தார்த்த கவுதமர் எழுந்து நின்று அதை எதிர்த்தார். "இத்தீர்மானத்தை ஏற்க வேண்டாமென சங்கத்தை நான் கேட்டுக்கொள்கிறேன். சாக்கியர்களும் கோலியர்களும் நெருங்கிய உறவினர்கள். அவர்கள் ஒருவரையொருவர் அரித்துக் கொள்வதென்பது அறிவுடைமையாகாது."

18. சித்தார்த கவுதமரின் வற்புறுத்தலை சேனாதிபதி மறுலித்தார். போரில் சத்திரியர்கள் உறவினர்கள் என்றோ மற்றவர்கள் என்றோ பாகுபடுத்திப் பார்க்க முடியாது என்று அவர் வலியுறுத்தினார். தங்கள் அரசாட்சிக்காக, அவர்கள் தங்கள் சொந்தச் சகோதரர்களுடன் கூடப் போராடியாக வேண்டும் என்றா ◌ா.

19. யாகங்கள் புரிவது பிராமணர்களின் கடமை, போர் புரிவது சத்திரியரின் கடமை, வணிகம் புரிவது வைசியர் கடமை. தொண்டு புரிவது சூத்திரர் கடமை. ஒவ்வொரு வர்ணத்தாரும் தமக்குரிய கடமை புரிவதே அவர்கட்குப் பெருமை இதுவே நம்முடைய சாத்திர விதிகளின் தன்மை.

20. சித்தார்த்தர் பதிலிறுத்தார். "பகைமையால் பகைமை ஒழியாதென்றறிவதே தர்மம் என் நான் புரிந்து வைத்திருக்கிறேன், அதன்பால் மட்டுமே அதை வெல்ல முடியும்."

21. பொறுமையை இழந்துவிட்ட சேனாதிபதி கூறினார். "தத்துவவிவாதங்களுக்குள் நுழைவது அவசியமற்றது. எனதீர்மானத்தை சித்தார்த்தர் எதிர்கிறார் என்பதே இப்போது முக்கியம் ஓட்டெடுப்பு நடத்தி, இதைப்பற்றி சங்கம் என்ன செல்ல விரும்புகிறது என்பதை நாம் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்."

22. அதன்படி சேனாதிபதி தன் தீர்மானத்தை ஓட்டுக்கு விட்டார். பெருவாரியான வாக்குகளால் அது வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது.

## 15. நாடு கடத்தப்பட உடன்படுதல்

1. அடுத்த நாள் சாக்கிய சங்கத்தின் மற்றொரு கூட்டத்தைக் கூட்டினார் சேனாதிபதி, அதாவது செயல்பாட்டுத் திட்டத்தைச் சங்கம் பரிசீலிப்பதற்காக.

2. சங்கம் கூடியபோது, கோலியர் மீது போர்தொடுக்க இருபதுக்கும் அய்ம்பதுக்கும் இடைப்பட்ட வயதுடைய எல்லா சாக்கியர்களும் ஆயுதமேந்த வேண்டுமெனத் தாம் அழைப்பு விடுக்கச் சங்கம் தன்னை அனுமதிக்க வேண்டுமென முன்மொழிந்தார்.

3. கடந்த சங்கக் கூட்டத்தில் போர் அறிவிப்புக்கு ஆதரவாக ஓட்டளித்தவர்கள், எதிராக ஓட்டளித்தவர்கள் ஆகிய இருதரப்பாருமே இக்கூட்டத்தில் பங்கேற்றிருந்தனர்.

4. ஆதரவாக ஓட்டளித்திருந்தவர்களுக்கு சோனதிபதியின் கருத்தை ஒப்புக்கொள்வதில் எந்த இடையூறும் இல்லை. அவர்களின் முந்தைய முடிவின் இயற்கையான விளைவே இது.

5. ஆனால் எதிர்த்து வாக்களித்த சிறுபான்மையினரோ ஒரு பிரச்சினையை எதிர்க் கொள்வதில் எந்த இடையூறும் இல்லை. அவர்களின் முந்தைய முடிவின் இயற்கையான விளைவே இது.

6. பெரும்பான்மையானவர்க்கு உடன்படுவதில்லை என்று சிறுபான்மையினர் முடிவவெடுத்தார்கள். எனவேதான் அவர்கள் கூட்டத்தல் பங்கேற்பதெனத் தீர்மானித்திருந்தார்கள். கெடுவாய்ப்பாக, அவர்களில் ஒருவர்க்கும் அதை வெளிப்படையாகக் கூறும் துணிவு இல்லை. ஒருவேளை பெரும்பான்மையை எதிர்ப்பதன் விளைவை அவர்கள் அறிந்திருக்கக் கூடும்.

7. தன் ஆதரவாளர்கள் அமைதியாய் இருப்பதைக் கண்ட சித்தார்த்தர் எழுந்து நின்று சங்கத்தவரை நோக்கிக் கூறினார். "நண்பர்களே! நீங்கள் விரும்பியதை நீங்கள் செய்யலாம். உங்கள் பக்கம் பெரும்பான்மை உள்ளது. போருக்கான ஆயத்தங்களை மேற்கொள்ளும் உங்கள் முடிவை நான் எதிர்த்தாக வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். நான் உங்கள் படையில் சேரமாட்டேன், நான் போரில் பங்கேற்க மாட்டேன்."

8. சித்தார்த்த கவுதமருக்குப் பதில்கூறும் வகையில் சேனாதிபதி கூறினார். "சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டபோது நீங்கள் எடுத்துக் கொண்ட உறுதிமொழிகளை நினைத்துப் பாருங்கள். அவற்றில் எதையேனும் நீங்கள் மீறினால் பொது அவமானத்துக்கு ஆளாவீர்கள்."

9. சித்தார்த்தர் பதிலிறுத்தார், "ஆம்! என் உடலாலும், மனத்தாலும், உடைமையிலும், சாக்கியர்களின் மேலான நலன்களைப் பாதுகாப்பேனென்று நான் உறுதிமேற்கொண்டது உண்மைதான். ஆனால், இந்தப் போர் சாக்கியர்களின் மேலான நலன்களுக்கானது என்று நான் நினைக்கவில்லை. சாக்கியர்களின் உயர்நலன்களுக்கு முன்னால் என் பொது அவமானத்திற்கு என்ன முக்கியத்துவம்?"

10. கோலியர்களோடு சண்டையிட்ட காரணத்தாலேயே எப்படி சாக்கியர்கள் கோசலமன்னரைச் சார்ந்திருக்க வேண்டி நேர்ந்தது என்பதைச் சங்கத்தினர்க்கு நினைவூட்டி எச்சரிக்கத் தொடர்ந்தார் சித்தார்த்தர். "இந்தப்போர் மேலும் சாக்கியர்களின் சுதந்திரத்தைக்

குறைக்க கோசல மன்னர்க்கு வசதியேற்படுத்தும் என்பதை எண்ணிப்பார்ப்பதொன்றும் கடினமில்லை."

11. சினமுற்ற சேனாதிபதி சித்தார்த்தரை விளித்துப் பேசினார். "உங்கள் பேச்சுத் திறன் உங்களுக்கு உதவப் போவதில்லை. கோசல மன்னரின் ஒப்புதலின்றி ஒரு குற்றவாளியைத் தூக்கிலிடவோ, நாடுகடத்தவோ சங்கத்துக்கு உரிமையில்லை என்ற நிலையைக் கருத்தில் கொண்டும், உங்கள் மீது சங்கம் இந்த இரண்டிலொரு நடவடிக்கையை எடுக்க அவர் ஒருபோதும் சம்மதிக்கமாட்டார் என்றறிந்துமே நீங்கள் இப்படிப் பேசுகிறீர்களோ என்னவோ?"

12. "உங்களைத் தண்டிக்கச் சங்கத்திற்கு வேறுவழிகளும் உண்டு என்பதை மறந்துவிடாதீர்கள், உங்கள் குடும்பத்தின் மீது சங்கம் சமூக பகிஷ்காரத்தை அறிவிக்கலாம், உங்கள் குடும்ப உடைமையான நிலங்களைப் பறிமுதல் செய்யலாம். இந்த நடவடிக்கைகளுக்குச் சங்கம் கோசல மன்னரிடம் அனுமதி பெற வேண்டியதில்லை."

13. கோலியர்களுக்கு எதிராகப் போர்தொடுக்கும் சங்கத்தின் திட்டத்தை தொடர்ந்து தாம் எதிர்ப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளைக் கருதினார் சித்தார்த்தர். அவர் முன் பரிசீலனைக்காக மூன்று வழிகளே இருந்தன. படையில் சேர்ந்து போர்புரிவது ஒன்று, தூக்கிலிடப்படவோ, நாடுகடத்தப்படவோ சம்மதிப்பது மற்றொன்று, அவருடைய குடும்பத்தினர் சமூகபகிஷ்காரத்தால் தண்டிக்கப்படவும், சொத்துக்கள் பறிமுதல் செய்யப்படவும் அனுமதிப்பது.

14. முதலாவதை ஏற்பதில்லை என்பதில் அவர் உறுதியாய் இருந்தார். மூன்றாவதை அவரால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. இருந்த சூழ்நிலையில் இரண்டாவது வழியே சிறந்தது என்று அவர் கருதினார்.

15. இதன்படி சங்கத்தவரிடம் சித்தார்த்தர் கூறினார். "தயவுசெய்து என் குடும்பத்தைத் தண்டிக்காதீர்கள். சமூக பகிஷ்காரத்திற்கு உட்படுத்தி அவர்களைத் துன்பத்தில் ஆழ்த்த வேண்டாம். அவர்கள் வாழ்க்கைக்குரிய ஒரே சாதனமாக உள்ள அவர்களின் நிலங்களைப் பறிமுதல் செய்து அவர்களை வறியவர்களாக்காதீர்கள். அவர்கள் குற்றமற்றவர்கள். நான் தானே குற்றவாளி. என் தவறுகளுக்காக நானே துன்புறுகிறேன். தூக்கோ, நாடுகடத்தலோ, நீங்கள் விரும்பும் தண்டனையை எனக்களியுங்கள். நான் முழுமனத்துடன் ஏற்றுக்கொள்கிறேன். மேலும் கோசல மன்னரிடம் முறையிமாட்டேன் என்றும் உறுதியளிக்கிறேன்."

16. பரிவ்ராஜம்_வெளியேற்றம்.

1. சேனாதிபதி கூறினார். "உங்கள் கருத்தை ஏற்பது கடினம். நீங்களே முன்வந்து மரணதண்டனையோ அல்லது நாடு கடத்தல் தண்டனையையோ ஏற்றாலும் கூட, எப்படியும் செய்தி கோசல மன்னருக்கு எட்டத்தான் செய்யும், சங்கம் தான் உங்களைத் தண்டித்தது என்

அவர் முடிவெடுப்பது உறுதி, பின் அதற்காக அவர் சங்கத்திற்கெதிராக நிச்சம் நடவடிக்கை எடுப்பார்."

2. "இது தான் இடர்ப்பாடு என்றால் நான் ஓர் எளிய தீர்வைச் சொல்கிறேன்." சொன்னார் சித்தார்த்த கவுதமர். ""நான் பரிவராஜகனாகி நாட்டை விட்டு வெளியேறிவிடுகிறேன். அதுவம் ஒரு வகையான நாடுகடத்தல்தானே."

3. இது நல்லதீர்வென்று எண்ணினார் சேனாதிபதி. ஆனாலும் அவருக்கு இன்னும் சிறிது சந்தேகமிருந்தது, இதை சித்தார்த்தரால் நடைமுறைப்படுத்த முடியுமா எனறு?

4. எனவே சேனாதிபதி சித்தார்த்தரை வினவினார். "தங்கள் பெற்றோர்கள் மற்றும் மனைவியின் ஒப்புதலைப் பெறாமல் நீங்கள் எப்படிப் பரிவ்ராஜகராக முடியும்?"

5. அவர்களின் அனுமதியைப் பெறத் தன்னாலான அனைத்தையும் செய்வதாகச் சித்தார்த்தர் அவருக்கு உறுதியளித்தார். அவர் கூறினார். "அவர்களின் ஒப்புதலைப் பெற்றாலும், பெறாவிட்டாலும் உடனே நாட்டை விட்டு வெளியேறுவேனென்று உறுதி கூறுகிறேன்."

6. சித்தார்தர் தெரிவித்த வழியே மிகச் சிறந்ததெனச் சங்கத்தவர் கருதி, அதற்கு ஒப்புக் கொண்டனர்.

7. கூட்ட நிகழ்ச்சி முடித்து சங்கத்தவர் அனைவரும் எழுகின்றதறுவாயில் ஒரு சாக்கிய இளைஞர் தன் இருக்கையிலிருந்து எழுந்து நின்று கூறினார். "சற்றே எனக்குச் செவி கொடுங்கள். முக்கியச் செய்தியொன்றை நான் கூற வேண்டியுள்ளது."

8. பேச அனுமதி கிடைத்தவுடன் அவர் கூறினார். "சித்தார்த்த கவுதமர் தாம் கூறியவாறே செயல்படுவார் என்பதிலும், உடனே நாட்டை விட்டு வெளியேறிவிடுவார் என்பதிலும் எனக்குத் துளியும் அய்யமில்லை. ஒரு விஷயத்தில் ஏனோ எனக்கு மகிழ்ச்சியில்லை."

9. "சித்தார்த்தர் விரைவில் நம் கண்களுக்கப்பால் விலகியதும், கோலியர்களின் மேல் போர் தொடுக்கும் தீர்மானத்தை சங்கம் உடனே நிறைவேற்றப் போகிறதா?"

10. "இந்தப் பிரச்சினையைச் சங்கம் மேலும் சற்றுப் பரிசீலிக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். எப்படியானாலும், கோசல மன்னருக்கு சித்தார்த்தரின் நாடு கடத்தல் பற்றித் தெரியத்தான் போகிறது. உடனே சாக்கியர்கள் கோலியர்களின் மேல் போர் தொடுப்போமானால், சித்தார்த்தர் வெளியேறியதற்குக் காரணம் இந்தப் போரை அவர் எதிர்த்ததால் தான் என்று கோசல மன்னர் புரிந்து கொள்வார். இது நமக்கு நன்மையாக அமையாது."

11. "எனவே, சித்தார்த்த கவுதமரின் நாடு கடத்தலுக்கும் போர் நடவடிக்கையைத் தொடங்குதற்கும் நாம் ஓர் இடைவெளியை அனுமதிக்க வேண்டுமென முன்மொழிகிறேன்.

அப்போது தான் இரண்டுக்குமிடையே தொடர்பெதையும் கோசல மன்னர் உறுதிப்படுத்திக் கொள்ள மாட்டார்."

12. இது ஒரு மிக முக்கியச் செய்தியெனச் சங்கம் உணர்ந்து கொண்டது. உதவிகரமான ஆலோசனை என்பதால் உடனே அதை ஏற்க ஒப்புக் கொண்டது.

13. இவ்வாறாக சாக்கிய சங்கத்தின் சோகக் கூட்டம் முடிவுற்றது. போர்த்தீர்மானத்தை எதிர்த்தும், அதை வெளிப்படுத்தச சக்தியற்றிருந்த சிறுபான்மையினர் அமைதிப் பெருமூச்சு விட்டனர். எப்படியோ தீங்கான விளைவுகளை உண்டாக்கக்கூடிய சூழல் ஒருவாறு தீர்வுகாணப்பட்டதேயென்று.

## 17. பிரிவின் உரை

1. சித்தார்த்த கவுதமர் திரும்புவதற்கு வெகுமுன்னதாகவே, சாக்கிய சங்கக் கூட்டத்தில் என்ன நடந்ததென்று அரசரின் அரண்மனைக்குச் செய்தி வந்துவிட்டது.

2. வீட்டையடைந்தவர், தம் பெற்றோர்கள் அழுதுபுலம்புவதையும், பெருந்துயரத்தில் ஆழ்ந்திருப்பதையும் கண்டார்.

3. சுத்தோதனர் உரைத்தார். "போரின் தீமைகள் பற்றி நாங்களும் தான் பேசிக் கொண்டிருந்தோம். ஆனால் நீ இவ்வளவு தூரம் போவாய் என்று நான் நினைக்கவேயில்லை."

4. சித்தார்த்தர் பதிலிறுத்தார். "இப்படியெல்லாம் ஆகுமென்று நானும் தான் நினைக்கவில்லை. அமைதிக்கான ஆதரவை என்வாதத்தால் சாக்கியர்களிடம் தோற்றுவிக்க முடியும் என்றே நான் நம்பியிருந்தேன்."

5. "கெடுவாய்ப்பாக, என் வாதங்கள் தோற்கும் வண்ணம், மக்களின் உணர்ச்சிகளைக் கூர்மைப்படுத்தி வைத்திருக்கிறார்கள் நம் போர்ப்படை அதிகாரிகள்."

6. "நிலைமை மிகவும் சீர்கேடடையாமல் தவிர்த்தேன் என்பதைத் தாங்கள் உணர்வீர்கள் என நம்புகிறேன். உண்மை நீதி ஆகியவற்றின் அடிப்படைகளை நான் விட்டுக் கொடுக்கவில்லை. உண்மைக்காகவும், நீதிக்காகவும் நிற்பதனால் கிடைக்கிற எந்தத் தண்டனையையும் ஏற்றுக்கொள்ளவும், அதைத் தனிப்பட்ட முறையில் எனதாக்கிக்கொள்ளவும் செய்தேன்.

7. இதனால் சுத்தோதனர் திருப்தியுறவில்லை, "எமக்கென்ன நேருமென்று நீ கருதவில்லையே." "நான் பரிவ்ராஜகன் ஆவதென்று முடிவெடுத்ததற்கு அதுதான் காரணம்." பதிலுரைத்தார் சித்தார்த்தர். "சாக்கியர்கள் தங்களுடைய நிலங்களைப் பறிமுதல் செய்ய ஆணையிட்டிருந்தால் விளைவுகள் என்னவாயிருக்குமென்று எண்ணிப் பாருங்களேன்."

8. "ஆனால் நீயில்லாமல் இந்த நிலங்களால் எங்களுக்கென்ன பயன்?" கதறினார் சுத்தோதனர். "ஏன் இந்த சாக்கிய தேசத்தைவிட்டு உன்னோடு குடும்பம் முழுவதும் நாடுகடந்து போய்விடக்கூடாது?"

9. புலம்பிக் கொண்டிருந்த பிரஜாபதி கவுதமி சுததோதனருடன் வாதத்தில் கலந்து கொண்டார். "நானும் இதை ஒப்புக் கொள்கிறேன். எங்களை இதுபோல இங்கே விட்டுவிட்டு நீ மட்டும் தனியாக எப்படிப் போகமுடியும்."

10. சித்தார்த்தர் கூறினார். "அன்னையே! நீங்கள் எப்போதும் 'ஒரு சத்திரியனின் தாய்' என்று பெருமைப்பட்டுக் கொள்வதுண்டல்லவா? அப்படிதானே? பிறகு நீங்கள் வீரத்தோடிருக்கவேண்டுமே! இந்தத் துக்கம் உங்களுக்குப் பொருத்தமல்லவே! நான் போர்களத்திற்குப் போய் இறந்திருந்தால் நீங்கள் என்ன செய்திருப்பீர்கள்? இதுபோல் துயர் கொண்டிருப்பீர்களா என்ன?"

11. கவுதமி பதிலுறைத்தார். "இல்லை அது சத்திரியனுக்குப் பொருத்தமானது. ஆனால் நீயோ இப்போது மக்களை விட்டு வெகுதூரம் விலகி, வனங்களுக்குச் சென்று, கொடிய விலங்குகளுடனல்லவா வாழச் செல்கிறாய்? இங்கு நாங்கள் எப்படி நிம்மதியாயிருக்க முடியும்? நீ எங்களையும் உன்னுடன்அழைத்துச்செல்லத்தான்வேண்டும்என்கிறேன்".

12. "நான் எப்படி உங்களையெல்லாம் என்னுடன் அழைத்துச் செல்ல முடியும்? நந்தன் இன்னும் குழந்தையாகவே இருக்கிறான். என் மகன் இராகுலன் இப்போதுதான் பிறந்திருக்கிறான். அவர்களையெல்லாம் இங்கேயே விட்டுவிட்டு தாங்கள் வரமுடியுமா என்ன?" அவர் கவுதமியை வினவினார்.

13. கவுதமி திருப்தியுறவில்லை. அவர் வற்புறுத்தினார். "நம் அனைவரும் இந்தச் சாக்கிய தேசத்தை விட்டு வெளியேறி, கோசலர்கள் தேசத்துக்குச் சென்று மன்னரின் பாதுகாப்பின் கீழ் வாழமுடியுமே."

14. "ஆனாலும் அன்னையே! சாக்கியர்கள் என்ன சொல்வார்கள்?" சித்தார்த்தர் வினவினார். "இதை ஒரு துரோகமாக அவர்கள் கருத மாட்டார்களா? மேலும் மன்னர் அறியும்படியாக சொல்லாலோ, செயலாலோ நான் ஏதும் செய்யமாட்டேன் என்று உறுதி கூறியுள்ளேனே.

15. நான் வனத்தில் தனியாய் வாழவேண்டியிருக்கும் என்பது உண்மைதான். ஆனாலும் எது சிறந்தது? வனத்தில் வாழ்வதா? அல்லது கோலியர்களைக் கொல்வதில் பங்கேற்பதா?"

16. "ஆனாலும் ஏனிந்த அவசரம்?" கேட்டார் சுத்தோதனர். "சில காலத்துக்குப் போர் நடவடிக்கையை ஒத்திவைப்பதாகத்தான் சாக்கியச் சங்கம் முடிவெடுத்திருக்கிறதே."

17. "ஒரு வேளை போர் நடவடிக்கை தொடங்கப்படாமலே போகலாம். ஏன் நீ உன் பரிவ்ராஜத்தை ஒத்திப்போடக் கூடாது? சாக்கியர்களிடையிலேயே நீ வாழ்வதற்கான அனுமதியைச் சங்கத்திடம் பெறுவதும் சாத்தியமாகவே இருக்கக் கூடும்."

18. இந்தக் கருத்து ஒதுக்கத்தக்க ஒன்றாகவே இருந்தது சித்தார்த்தருக்கு. "நான் பரிவ்ராஜத்தை ஏற்பதாக உறுதி கூறியதால் தான்கோலியர்கள்மீதானபோர் நடவடிக்கையைஒத்திவைக்கச்சங்கம்தீர்மானித்தது.

19. "நான் பரிவ்ராஜம் ஏற்ற பின்னர் போர் அறிவிப்பைப் பின்வாங்கிக் கொள்ள சங்கத்தை இணங்கச் செய்வது சாத்தியமே. இவையனைத்தும் முதலில் நான் பரிவ்ராஜத்தை ஏற்றுக் கொள்வதைப் பொறுத்ததே."

20. "நான் ஒரு உறுதிமொழியளித்துவிட்டதால் உடனே அதை நிறைவேற்றி ஆகவேண்டும். உறுதிமொழியை எந்த வகையிலாவது மீறுவது என்பது நமக்கும், அமைதிக்கும் மிகப் பெரிய கேட்டை விளைவித்துவிடும்."

21. "அன்னையே! தயை கூர்ந்து என் வழியைக் தடைப்படுத்தாதீர்கள். தங்கள் அனுமதியையும் நல்வாழ்த்தையும் வழங்குங்கள். நடப்பவை யாவும் பெரும் நன்மைக்கே."

22. கவுதமியும், சுத்தோதனரும் மவுனமாயினர்.

23. அடுத்து சித்தார்த்தர் யசோதராவின் அந்தப்புரத்துக்கு ஏகினார். அவரைக்கண்டு, என்ன கூறுவது, எப்படிக் கூறுவது என்று விளங்காமையால் மவுனமாய் நின்றார். யசோதராவே வாய் திறந்து மவுனத்தைக் கலைத்தார். "கபிலவஸ்துவில் சங்கக் கூட்டத்தில் நடைபெற்ற அனைத்தையும் கேள்வியுற்றேன்."

24. சித்தார்த்தர் வினவினார். "யசோதராவே! பரிவ்ராஜம் மேற்கொள்ள நானெடுத்த முடிவுபற்றி நீ யாது கருதுகிறாய் என்பதை எனக்குக் கூறுக."

25. யசோதரா நிலை குலைந்து போவார் என அவர் எதிர்பார்த்தார். அப்படியேதும் நிகழவேயில்லை.

26. தம் உணர்வுகளை முழுமையாய்த் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்த யாசோதரா பதிலிறுத்தார். "தங்கள் நிலையில் இருந்தால் நான் மட்டுமே வேறென்ன செய்திருப்பேன்? கோலியர்மேலான போரில் நிச்சயம் நான் பங்கேற்றிருக்க மாட்டேன்."

27. "தங்கள் முடிவு மிகவும் சரியான முடிவுதான். என் முழு ஒப்புதலும் ஆதரவும் தங்களுக்கு உண்டு. நானும் தங்களோடு பரிவ்ராஜம் எடுத்துக் கொள்ளலாம் தான். ஏன் நான் அவ்வாறு செய்யவில்லையெனில், ராகுலனை நான் பாதுகாக்கவேண்டியுள்ளதே!"

28. "இது இப்படி நேர்ந்திருக்கக் கூடாது என்பது தான் என் விருப்பம். ஆனாலும் நாம், ஏற்படுகிற எந்த நிலைமையையும் எதிர்கொள்ள ஆற்றலும், துணிவும் உடையவராய் இருந்தாக வேண்டும். தங்கள் பெற்றோரைப் பற்றியோ, உங்கள் மகனைப்பற்றியோ நீங்கள் கவலையேதும் கொள்ள வேண்டியதில்லை. என் உடலில் உயிர் இருக்கும்வரை அவர்களை நான் நன்கு கவனித்துக் கொள்வேன்."

29. "உங்களுக்கு உரியவர்களையும், நெருக்கமானவர்களையும் விட்டுவிட்டு பரிவ்ராஜகராக ஆகும் தாங்கள், மனித குலத்திற்கு பெருமகிழ்ச்சி விளைவிக்கக் கூடிய புதிய வாழ்முறையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதே எனது விருப்பம்."

30. சித்தார்த்த கவுதமர் பெரிதும் உணர்வுற்றார். இதற்கு முன் எப்போதும் இல்லாவகையில், யசோதரா எத்தனைத் துணிவான, வீரஞ்செறிந்த, பெருமனம் கொண்ட பெண்மணியாய் விளங்குகிறார் என்பதறிந்து வியந்தார். தான் அவரை மனைவியாய்ப் பெற்றமை எத்தனைப் பெரும் பேறென எண்ணிய அவர், காலம் இப்படித் தம்மிருவரைக் கடிதில் பிரிக்கிறதே எனக்கவலையுற்றார். குழந்தை ராகுலனை எடுத்துவரும்படி அவரிடம் கூறினார். தந்தையாய் அவனை நன்கு நோக்கியபின் நகர்ந்தார்.

## 18. வீடு விட்டேகுதல்

1. கபிலவஸ்துவில் ஆஸ்ரமம் கொண்டிருந்த பாரத்வாஜரின் கைகளால் பரிவ்ராஜம் ஏற்க எண்ணினார் சித்தார்த்தர். அதன்படி அடுத்தநாள் அதிகாலை விழித்தெழுந்து, தன் விருப்பத்திற்குரிய குதிரையான கந்தகத்தின் மீதேறி, உடன் நடந்துவரும் பணியாள் சன்னாவுடன் ஆஸ்ரமம் நோக்கிப் புறப்பட்டார்..

2. அவர் ஆஸ்ரமத்திற்கு அருகே வந்ததும், புதிதாய்வந்த மணமகனைக் காணுதல் போல், அவரைக் காண வாயிலருகே ஆண்களும் பெண்களுமாய் அலைமோதினர்.

3. அவரை அவர்கள் நெருங்கியதும், வியப்பால் அவர்களின் கண்கள் விரிய, கூம்பிய தாமரை மொட்டெனக் கைகுவிய உரியபடி அவரை வணங்கினர்.

4. பிறகு அவரைச் சுற்றி நின்ற அவர்களின் உள்ளங்கள் உணர்ச்சியால் உந்துதல் பெற, அன்பால் விரிந்து மலர்ந்த தம் அசையாத கண்களால், அப்படியே அவரைப் பருகிவிடுவது போல் பார்த்தனர்.

5. பிறவியிலேயே உடன் தோன்றிய அணிகலனாய் அறவொளிச் சின்னங்கள் உடையவராய்த் திகழ்ந்த இவர் மாமனிதனின் அவதாரமே எனச் சில பெண்கள் மெய்யாகவே நம்பினர்.

6. அவர் நடையுடைய பாவனைகளின் நயத்தையும், கம்பீரத்தையும் கண்ட வேறு சில பெண்கள், அமுதக் கதிர்களுடன் அழகு நிலவு அனைவரும் காணும்படி அவனிக்கு வந்திறங்கியதாய் உணர்ந்தனர்.

7. அவருடைய அழகால் ஈர்க்கப்பட்ட மற்ற சில பெண்கள், அவரை விழுங்கி விடுவது போல் திறந்தவாய் மூடாமல், தமக்குள் ஒருவரை ஒருவர் கண்களால் மொய்த்தபடி, மென்மையாய்ப் பெருமூச்செறிந்து கொண்டிருந்தனர்.

8. இவ்வாறாக அவரைப் பெண்கள் நோக்கியது நோக்கியபடியே இருந்தனர். அவர்கள் பேசவும் இல்லை. புன்னகைக்கவுமில்லை. அவரைச் சூழநின்று, பரிவ்ராஜம் ஏற்கும் அவரது முடிவை எண்ணி, பிரமித்துப் போயிருந்தார்கள்.

9. பெருமுயற்சியால் கூட்டத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு ஆஸ்ரம வாயிலுக்குள் நுழைந்தரர்சித்தரர்த்தர்.

10. தாம் பரிவ்ராஜ துறவை ஏற்பதை சுத்தோதனரும், பிரஜா பதிகவுதமியும் வந்து காணுவதைச் சித்தார்த்தர் விரும்பவில்லை. ஏனெனில், துன்பச்சுமை தாங்காது அவர்கள் மனமுடைந்து போவார்கள் என்பதை அவர்அறிவார் ஆனால்அவருக்கு தெரியாமலேயே, அவர்கள் வெகுமுன்னரே ஆஸரமத்தை வந்தடைந்திருந்தார்கள்.

11. ஆஸ்ரமச் சுற்றுச் சுவரை அடைந்தவுடனே, கூட்டத்தில் தந்தையையும் தாயையும் அவர் கண்டுவிட்டார்.

12. தம் பெற்றோரைக் கண்டதும், முதலில் அவர் அவர்களை அணுகி அவர்தம் வாழ்த்துக்களை வேண்டினார். மிகவும் உணர்ச்சிவயப்பட்டிருந்த நிலையில் அவர்களால் ஒரு வார்த்தையும் பேச இயலவில்லை. அவரை ஆரத்தழுவிக் கொண்டு அவர்கள் அழுதனர், விம்மினர், தம் கண்ணீரால் அவரை நீராட்டினர்.

13. குதிரை கந்தகத்தை ஆஸ்ரமத்தில் ஓர் மரத்தில் கட்டிவிட்டு நின்று கொண்டிருந்தார் சன்னா, சுத்தோதனரையும் பிராஜாபதியையும் கண்ணீரோடு கண்ட அவரும் உணச்சிமேலிட்டு அழத்தொடங்கிவிட்டார்.

14. பெரும்பாடுபட்டு தம்பெற்றோரிடமிருந்து விலகிய சித்தார்த்தர், சன்னா நிற்குமிடத்திற்கு நடந்தார். தம் ஆடைகளையும், அணிகளையும் வீட்டிற்கு எடுத்துச் செல்லுமாறு அவரிடம் அளித்தார்.

15. பிறகு பரிவ்ராஜகராகத் தேவைப்பட்டபடி, தன் தலைமுடியை மழித்துக் கொண்டார். பரிவ்ராஜகருக்குரியதான ஆடையையும், பிட்சாப்பாத்திரத்தையும் அவருடைய ஒன்று விட்ட சகோதரர் மகாநாமன் கொண்டுவந்தார். சித்தார்த்தர் தம்மைப் பரிவ்ராஜகராக்கும்படி பாரத்வாஜரை வேண்டினார்.

16. பரிவ்ராஜகத் துறவு வாழ்க்கையை மேற்கொள்ள இவ்வாறு தம்மைத் தயாராக்கிக் கொண்ட சித்தார்த்தர் தம்மைப் பரிவ்ராஜகராக்கும்படி பாரத்வாஜரை வேண்டினார்.

17. தம் சீடர்களின் உதவியுடன், உரிய கிரியைகளைச் செய்த பாரத்வாஜர், சித்தார்த்த கவுதமர் பரிவ்ராஜகராகிவிட்டதாக அறிவித்தார்.

18. சற்றும் தாமதிக்காமல் பரிவ்ராஜம் ஏற்கவும், உடனே சாக்கிய நாட்டை விட்டு வெளியேறவும் ஆன இரு உறுதி மொழிகளை சாக்கிய சங்கத்திற்கு அளித்திருந்தமையை நினைவு கூர்ந்த சித்தார்த்த கவுதமர், பரிவ்ராஜ கிரியை முடிந்த உடனே தன் பயணத்தைத் தொங்கினார்.

19. ஆஸ்ரமத்தில் கூடியிருந்த கூட்டம் வழக்கத்துக்கு மாறாய் மிகப் பெரிதாயிருந்தது. இதற்குக் காரணம் கவுதமரின் பரிவ்ராஜத்துக்குக் காரணமாய் அமைந்த சூழ்நிலை மிகவும் மாறுபட்டதாய் இருந்தமைதான். இளவரசர் ஆஸ்ரமத்தை விட்டு வெளியேறியதும், கூட்டமும் அவரைப் பின் தொடர்ந்தது.

20. அவர் கபிலவஸ்துவை விட்டு, அநோமா ஆற்றை நோக்கிய திசையில் சென்றார். திரும்பிப்பார்க்கையில், கூட்டம் தன்னைப் பின்தொடர்வதைக் கண்டார்.

21. அங்கே சற்று நின்று அவர்களிடம் உரைக்கலானார். "சகோதர, சகோதரிகளே! என்னை நீங்கள் பின்தொடர்வதில் எப்பயனும் இல்லை. சாக்கியர்களுக்கும், கோலியர்களுக்கும் இடையில் எழுந்த சச்சரவைத் தீர்க்க நான் தவறி விட்டேன். ஆனால் ஒப்பந்தம் ஒன்றுக்கு ஆதரவாய்ப் பொதுக் கருத்தொன்றை நீங்கள் உருவாக்குவீர்களேயானால், அதில் நீங்கள் வெற்றி பெறக்கூடும். எனவே நீங்கள் தயவு செய்து திரும்பிச் செல்வதே நல்லது." இவருடைய இந்த வேண்டுகோளைச் செவிமடுத்த கூட்டம் திரும்பத் தொடங்கியது.

22. சுத்தோதனரும், கவுதமியும் கூட அரண்மனைக்குத் திரும்பிவிட்டனர்.

23. சித்தார்த்தரால் கைவிடப்பட்ட ஆடைகளையும், ஆபரணங்களையும் காணச் சகிக்கவில்லை கவுதமிக்கு. அவற்றை ஓர் தாமரைத் தடாகத்தில் வீசியெறிந்தார் அவர்.

24. பரிவ்ராஜத்துக்கு (துறவுக்கு) உட்பட்டபோது சித்தார்த்த கவுதமருக்கு வயது இருபத்தி ஒன்பது தான்.

25. மக்கள் அவரைப் பாராட்டியும் பெருமூச்சு விட்டும் கூறினர். "பெரும் பாரம்பரியப் பேறுபெற்ற," உயர்வான பெற்றோரை உடைய, போதிய செல்வவளம் கொண்ட, இளமைநலம் நிறைந்த, உரம்மிக்க உடலும், உள்ளமும் கொண்ட, வளமாய் வளர்க்கப்பட்ட சாக்கியரான இவர். இதோ புவியில் அமைதியை நிலவச் செய்யவும், மானுடருக்கு நன்மை புரியவும் தம்மமவர்களோடேயே மோதி முரண்பட்டு விலகிச் செல்கிறார்.

26. இதோ ஓர் சாக்கிய இளைஞர் தம்மவர்களின் வாக்குகளால் தோற்கடிக்கப்பட்டு, பணிய மறுத்துத் தாமே முன்வந்து தண்டனையை ஏற்றிருக்கிறார். அதாவது வளமைக்கு மாற்றாய்

வறியதன்மையை ஏற்றிருக்கிறார். இதனால் இவர் இவ்வுலகில் தமக்கென யாரும் அற்றவராய், தம்முடைமை எனக் கூறிக் கொள்ள இப்புவியில் ஏதுமற்றவராய்ச் செல்கிறார்.

27. இவர்தம் செயல் தாமே வலிந்து புரியப்பட்ட தன்னிகரில்லாத் தியாகமாகும். இவர்தம் செயல் துணிவும், ஆற்றலும் மிக்க செயலாகும். உலக வரலாற்றிலே இத்தியாகம் நிகரற்ற ஒன்றாகும். இவர் சாக்கிய முனியெனவோ, சாக்கிய சின்ஹா எனவோ அழைக்கப்படத் தக்கவராவார்.

28. கிசாகவுதமி என்னும் ஒரு சாக்கிய மங்கை கூறிய வார்த்தைகள்தான் எத்தனை உண்மையானவை. சித்தார்த்த கவுதமரைக் குறித்து அவள் கூறினாள். "உண்மையில் இத்தகைய மகனாக இவரை ஈன்றதாய் வாழ்த்துக்குரியவர். இத்தகையவரைக் கணவராய்ப் பெற்ற இவர் மனைவி உண்மையில் வாழ்த்துக்குரியவர்."

## 19. இளவரசரும் பணியாளரும்.

1. கந்தகத்தோடு சன்னாவும் வீட்டுக்குத் திரும்பியிருக்க வேண்டும். ஆயினும் போக மறுத்தார் அவர். குறைந்தபட்சம் அநோமா ஆற்றங்கரை வரையிலேனம் கந்தகத்தோடு அவர் செல்வதைக் காண வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். சன்னாவின் உறுதி மிகுதியாய் இருந்தமையால், அவருடைய விருப்பத்திற்குக் கவுதமர் இணங்க வேண்டிவந்தது.

2. இறுதியில் அவர்கள் அநோமா ஆற்றின் கரையை அடைந்தார்கள்.

3. பின் சன்னாவிடம் திரும்பி அவர் கூறினார். "நல்ல நண்பனே! நீ என்னை இவ்வாறு பின் தொடர்ந்ததனால் உன்பற்று நிரூபணமாயிற்று, தன் எஜமானரிடம் இத்தனை அன்பு பூண்டிருக்கும் உன் நெஞ்சால் நான் முழுமையாய் வெல்லப்பட்டுள்ளேன்."

4. "என்பால் நீ கொண்டுள்ள பெருமைக்குரிய உணர்வினால் பெரிதும் மகிழும் நான் உனை, பரிசளித்துப் பெருமை படுத்தச் சக்தியற்றவனாயிருக்கிறேன்."

5. "பரிசளித்துப் போற்றும் தகைமையில் இருப்பவரை யார் தான் அணுக்கமாய் நெருங்கி நிற்க மாட்டார்கள்? ஆனால் பொதுவாய், வளநிலை மாறிப் போனவரை நெருக்கமானவர்களே விட்டு நீங்கிப் போவார்கள்."

6. "மகன் குடும்ப நலனுக்காகவே வளர்க்கப்படுகிறான் தன் எதிர்கால நலன் கருதியே மகன் தந்தையைக் கவுரவிக்கிறான். நம்பிக்கைக்காகவே உலகம் கருணைக் காட்டுகிறது நோக்கம் ஏதுமற்ற தன்னலமின்னை என்பதாக ஒன்று இல்லவே இல்லை."

7. "நீங்கள் ஒருவரே இதற்கு விலக்கானவர்.இப்போது இக்குதிரையை அழைத்துக் கொண்டு செல்லுங்களேன்."

8. "வேண்டத்தக்க உறுதிப்பாடுடைய, இன்னமும் தடுமாறாமல் இருக்கக் கூடிய மன்னரிடம் இத்துன்பத்தைத் தாங்கிக் கொள்ளம்படிக் கூறுங்கள்."

9. "அவரை விட்டு நான் வந்தது. சொர்க்கம் பெறும் தாகத்தாலோ, அவர் மீது அன்பின்மையாலோ, எந்தக் கோப உணர்வினாலுமோ அல்ல என்று அவரிடம் கூறுங்கள்."

10. "இவ்வாறு நம் வீட்டை விட்டு வெளியேறிவிட்டமைக்காக. என்னைக்குறித்து அவர் துயருற வேண்டியதில்லை. காலம் எத்தனை நீண்டாலும்,ணைந்திருப்பது என்பது என்றேனும் ஓர் நாள் முடியத்தானே செய்யும்."

11. பிரிவென்பது உறுதியென்றிருப்பதால் அன்புப் பிணைப்புள்ளவர்கள் மீண்டும் விலகுதல் நிகழாதிருக்குமோ?

12. "ஒரு மனிதனின் மரணத்தின் பின் அவன் சொத்துக்குப் பல வாரிசுகள் இருப்பர் என்பதில் ஐயமில்லை. எனினும் அவனுடைய நற்புகழுக்கு வாரிசாய் உலகில் எவரையும் காணலரிது அல்லது எங்கேனும் இல்லாதது."

13. "மன்னரான என் தந்தை நன்கு கவனித்துக் கொள்ளப்படவேண்டிய தருணம் இது". "அவர் கூறலாம். அவன் தவறான நேரத்தில் வெளியேறியிருக்கிறான்" என்று. ஆனால் கடமையைப் புரிய எந்த நேரமும் தவறான நேரமில்லையே."

14. "நண்பரே! நீங்கள் அரசரிடம் இவற்றையும், இவை போன்ற வார்த்தைகளையும் கூறுங்கள். என்னை அவர் நினைக்காமலேயே இருக்கம்படியாக உங்கள் முயற்சிகளைப் பயன்படுத்துங்கள்."

15. " ஆம் அவர்களின் பாசத்துக்கு நான் அருகதையே அற்றவன் என்பதை என் தாயிடம் மீண்டும் மீண்டும் கூறுங்கள். அவர்கள் உயர் பெருமைமிக்கவர்கள், சொற்களுக்கும் அடங்காத மாபெருமை உடையவர்கள்."

16. இச்சொற்களைக் கேட்ட சன்னா, துயரம் மேலிட, கட்டிய கைகளுடன், உணர்ச்சியில், தோய்ந்த குரலில் பதிலிறுத்தார்.

17. "தங்கள் உறவினர்கள் அல்லலுறத் தாங்கள் காரணமாவதைக் கண்டு ஐயன்மீர், என் மனம் ஆற்றுச்சூழல் மணலில் ஆழ்ந்துப்புதையும் யானையைப் போல் துன்பத்தில் மூழ்குகிறது."

18. "தங்கள் முடிவின் உறுதி போன்றவை இரும்பொத்த இதயமுடையோரையும் கண்ணீர் உகுக்க செய்யுமே! இது இவ்வாறாயின், அன்பால் ததும்புபவரை இது என்னதான் செய்யாது?"

19. "அந்தோ! அரண்மனையில் மட்டுமே இருக்கத்தக்க தங்கள் மெல்லுடல், எப்படி கடினமான கோரைகளுடைய குசப்புல்பரவிய, துறவிகள் வாழும் இவ்வனத்தின் கடுந்தரைகளில் இருப்பது?"

20. "ஓ! இளவரசே! என் சொந்த விருப்பில் கூட, தங்கள் முடிவு இதுவே என்றறிந்தபின், எப்படி நான் இந்தக் குதிரையை துயரமாம் கபிலவஸ்துக்குக் கூட்டிச் செல்வேன்?"

21. "கருத்துமாறுபாட்டாளன் உண்மைச் சமயத்தைக் கைவிடுவது போல், தங்களின் பிரியமான முதியவயதுடைத் தந்தையை, தங்கள் மேல் உயிரையே வைத்திருக்கிறவரைத் தாங்கள் நிச்சயமாய்க் கைவிட முடியாது."

22. "தங்களின் இரண்டாம் தாய், தங்களை வளர்ப்பதில் கொண்ட கவனத்தாலேயே தளர்ந்து விட்டவர், அவரை நன்றி கொன்றவன் செய்நன்றி மறத்தல் போல் தங்களால் நிச்சயம் மறந்துவிட முடியாது."

23. நற்குணம்மனைத்தும் நன்கு பொருந்திய, தன்குலப்பெருமை தான் மிகக்காக்கும், தற்கொண்டானுக்குத் தன்னை அர்ப்பணிந்து வாழும், இளைய மகனைக் கையில் ஏந்தியிருக்கும் தங்கள் மனைவியைத் தாங்கள் நிச்சயம் கைவிட முடியாது.

24. அனைத்துப் புகழுக்கும் உரியவனான யசோதரையின் சிறுமகவை, சமய ஒழுக்கத்தையும் சீர்மிகு புகழையும் ஓங்கச் செய்வோரில் உன்னதமானவரான தாங்கள், ஒழுக்கக்கேடான ஊதாரி ஒருவன், நன்கு தேர்ந்த தற்பெருமை வாழ்வைக் கைவிடுதல் போல, நிச்சயம் கைவிட முடியாது.

25. தங்கள் உறவையும், உயர் அரசாட்சியும் கைவிட்டுவிடத் தங்கள் மனம் தீர்மானித்துவிடினும், தங்கள் காலடியே கதியெனக் கிடக்கும் என்னை ஓ எஜமானரே தங்களால் கைவிட முடியாது.

26. எரியும் என் இதயத்தோடு, தாங்களை இந்த வனத்தில் விட்டுவிட்டு என்னால் நகருக்குச் செல்லவே முடியாது.

27. தாங்களில்லாமல் நான் நகருக்குச் சென்றால் அரசர் என்ன சொல்வார், அல்லது தங்கள் மனைவியிடம் நற்செய்தியாக நான் என்ன சொல்வது?

28. தாங்கள் கூறினீர்களே' நான் பயனற்றவனென்று மன்னரிடம் மீண்டும், மீண்டும் கூறுக என_யார் அதை நினைத்துப் பார்கவோ நம்பவோ முடியும்? _ தொடர்ந்தார் சன்னா. "வெட்கிய இதயத்தோடும், வாயிலொட்டிய நாவோடும் அப்படியே இதை நான் கூற முயன்றாலும் அரசர் இதை ஒப்புவாரோ?"

29. எப்போதும் கருணையுடையவராயிருப்பவருக்கு, இரக்கம் கொள்ள எப்போதும் தவறாதவருக்கு, இப்படி தன்பால் அன்புடையவரைக் கைவிடுதல் தகாது: என் மீது இரக்கம் கொண்டு திரும்பி வாருங்கள்.

30. துயரம் மேலிட்ட சன்னா கூறிய இச்சொற்ளைக் கேட்ட சித்தார்த்த கவுதமர் மிகப் பரிவுடன் பதிலிறுத்தார்:

31. சன்னா! என்னிடமிருந்து பிரிவதைக் குறித்து இப்படித் துயருறுவதை உடன் கைவிடுங்கள்_வெவ்வேறு பிறப்பிற்குரிய, உடல்சார்ந்த உயிர்கட்கு உருமாற்றம் என்பது தவிர்க்க வொண்ணாதது.

32. பாசமிகுதியில் என் உறவினைரை நான் வைவிடாமல் இருப்பினும்கூட, எப்படியும் தவிர்க்கவியலாவண்ணம், மரணம். ஒருவர் மற்றவரைக் கைவிடத்தானே செய்யும்?

33. மிகுந்த ஆசையோடும், வலியோடும் என்னைத் தன் கருவிலிருந்து ஈன்ற என் தாயைப் பொறுத்தவரை இப்போது நான் எங்கே?_அவர் எங்கே?

34. தம் கூடுகளுள்ள மரங்களுக்குச் சென்று பின் பிரிந்துவிடும் பறவைகளைப் போலவே, உயிர்களின் பிணைப்பு, தவிர்க்க முடியாமல் பிரிவிலேயே முடிகிறது.

35. கூடிவரும் மேகங்கள், மீண்டும் கலைந்திடுவது போலவே, உயிர்வாழ்பவை அனைத்தும் கூடி பிரிவதாகவே நான் கருதுகிறேன்.

36. ஒருவர் மற்றொருவரை வஞ்சிக்கும் வயில் நடக்கும் இவ்வுலக நடப்பில், இணைதல் என்னும் அஞ்சுதற்குரிய நிகழ்வின் போது, இணைந்தது யாவும் தனக்கே உரியதென்றெண்ணுதல் தவறு.

37. இது இவ்வாறிருப்பதால், என் நல்ல நண்பரே! நீங்கள் துயருற வேண்டாம்; திரும்பிச் செல்லுங்கள்: அப்படியன்றி, தொடர்ந்து அன்பு உம்மை அலைக்கழிக்குமாயின் பிறகொரு சமயம் திரும்பி வாருங்கள்.

38. என்னைச் சினவாமல், கபிலவஸ்து மக்களிடம் கூறுங்கள். அவர் மீதுள்ள அன்பைவிட்டு, அவருடைய தீர்மான முடிவைக் கேளுங்கள் என்று.

39. எஜமானர்க்கும், பணியாளர்களுக்கும் இடையே நடைபெற்ற இவ்விவாதத்தைக் கேட்டுக் கொண்டிருந்த சிறந்த வகைக் குதிரையான கந்தகம், கால்களைத் தன் நாவால் வருடித் தன் சூடான கண்ணீரைச் சிந்தலாயிற்று.

40. ஐவிரலும் அகன்று மெல்லென விரிந்து சற்றே நடுப்பகுதி வளைவுற்ற அரிய ஸ்வஸ்திக் சின்னம் உடையதாயிருந்த தம் அழகுக் கரத்தால் கவுதமர் அதை அன்புடன் தடவிக் கொடுத்தபடியே நண்பரிடம் கூறுவதுபோல் கூறினார்:

41. கந்தகமே! கண்ணீர் சிந்த வேண்டாம். இதைப் பொறுத்துக் கொள்._உன்பாடுகள் விரைவில் பயனளிக்கும்.

42. பிரிந்துச் செல்ல வேண்டிய தருணம் நெருங்கியதை அறிந்து கொண்ட சன்னா, கவுதமரின் துறவாடையை வணங்கினார்.

43. பிறகு கவுதமர், கந்தகத்திடமும், சன்னாவிடமும் விடை பெற்றுக் கொண்டு தன்வழியே சென்றார்.

44. அரசாட்சியைப் பொருட்படுத்தாமல், தன் எஜமானர் எளிய உடையுடன் துறவிகளின் வனத்திற்குள் செல்வதைக் கண்ட சன்னா, தன்கைகளை வீசிக்கொண்டு, ஆற்றாமையால் அழுதுபுலம்பி, தரையில் வீழ்ந்தார்.

45. மீண்டும் திரும்பி நோக்கி, அழுதுவெம்பி, தன் கைகளால் கந்தகத்தைத் தழுவி_பின் நம்பிக்கையற்றுப்போய், மீண்டும், மீண்டும் வெதும்பியபடியே திரும்பிச்செல்லும் பயணம் மேற்கொண்டார் அவர்.

46. வழியில், சிலபோது, சிந்தித்தவாறும், சிலபோது அழுதவாறும், சிலபோது நடுங்கியவாறும், சிலபோது வீழ்ந்தவாறும், பயணத்தைத்தொடர்ந்த அவர். தன் மிகையான அர்ப்பணிப்புப் பற்றினால், தாம் செய்வதின்னதென அறியா அனைத்தும் செய்தார்.

## 20. சன்னா திரும்புதல்

1. பிறகு சன்னா ஆழ்ந்த துயருடன், தன் எஜமானவர் இவ்வாறாக வனத்திற்குள் ஏகியபின், வழியெல்லாம் தம் துயரச் சுமையைக் குறைத்துக் கொள்ள ஏதேதோ செய்து பார்த்தார்.

2. கந்தகத்தின் மேல் பயணித்துச் சாதாரணமாய் ஓரிரவில் கடக்கக் கூடிய தூரத்தையுடைய சாலையில் தன் எஜமானரின் பிரிவுத்துயரால் ஏற்பட்ட பாதிப்பினால், இதயம் கனத்திருந்த அவருக்கு அதே தூரத்தைக் கடக்க இப்போது எட்டு நாட்களாயின.

3. இன்னமும் தைரியமாய்ச் சென்றதென்றாலும், குதிரை கந்தகம் களைத்துப்போய் தன் சக்தியனைத்தையும் இழந்துவிட்டது _ அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தும், தன் எஜமானர் இல்லாமையால் அழகிழந்தது போல் காணப்பட்டது.

4. தன் எஜமானர் சென்ற திசையை நோக்கி மீண்டும், மீண்டும் வெகுவாய்த் துயருற்றக் குரலில் கனைத்தவண்ணமிருந்தது; பசியினால் அழுத்தப்படினும், முன்புபோல் அது புல்லோ நீரோ வேண்டவுமில்லை_புசிக்கவோ, பருகவோ செய்யவுமில்லை.

5. கடைசியில் அவ்விருவரும், கவுதமரால் கைவிடப்பட்டதால் வெறிச்சோடித்தோன்றிய கவிலவஸ்துவை அடைந்தனர். உள்ளத்தாலன்றி உடலால் மட்டுமே அவர்கள் நகரையடைந்தனர்.

6. தாமரைகளால் மூடப்பட்ட நீர்நிலைகளால் ஒளியுற்றிருப்பினும், மலர்கள் நிறைந்த மரங்களால் அழகுற்றிருப்பினும், அந்நகரக் குடிமக்கள் அனைவரும் மகிழ்ச்சியை இழந்திருந்தனர்.

7. ஒளியிழந்து, கண்ணீரால் மங்கிய கண்களுடன் அவ்விருவரும், மெல்ல நகருக்குள் நுழைந்தபோது, அந்நகர் துயரஇருளில் ஆழ்ந்துகிடந்தது.

8. சாக்கிய குலத்திற்கே உயர் பெருமையானவரில்லாமல் தனியே, உறுப்பெலாம் தளர்ந்து அவர்கள் திரும்பிய செய்திகேட்ட நகர மக்கள் கண்ணீர் சிந்தினர்.

9. சாலையில் சன்னாவைக் கடுஞ்சினத்துடன், கண்ணீர் விட்டழுதவாறே தொடர்ந்த மக்கள் அவரை வினவினர், "மன்னரின் மகன் எங்கே? குலத்துக்கும், அரசுக்கும் புகழணியாய் விளங்கிய அவர் எங்கே?"

10. "அவரில்லா நகரம் காடே! அவரிருக்கும் காடே நகரம்! அவரற்ற நகரமிது எமக்கு மகிழ்வைளிக்காதே!"

11. திறந்த ஜன்னல் விளிம்புகளுக்கு வந்துற்ற பெண்களின் கூட்டம் ஒருவர்க்கொருவர் அழுதபடி வினவினர், "இளவரசர் திரும்பிவிட்டார்! _ ஆனால் அவர்தம் குதிரையின் வெறும் முதுகைக் கண்டதும், மீண்டும் ஜன்னல்களை மூடிவிட்டு உரத்துக் கூவியழுதனர்.

## 21 துக்கத்தில் குடும்பம்

1. சுத்தோதனரின் குடும்பத்தினர்கள் சன்னாவின் வருகைக்காக ஏக்கத்துடன் காத்திருந்தனர், எப்படியாவது அவர் கவுதமரை வீடு திரும்பும்படிச் செய்துவிடுவார் என்ற நம்பிக்கையில்.

2. அரண்மனை லாயத்துக்குள் நுழைந்ததுமே கந்தகம் பெருங்கூச்சல் எழும்பியது, அரண்மனை மக்களுக்குத் தன் ஆறாத்துயரை வெளிப்படுத்த.

3. மன்னரின் அரண்மனைக்கு அக்கம்பக்கமிருந்த மக்கள் தம் நெஞ்சில் நினைத்தார்கள்: "குதிரை கந்தகம் கனைக்கிறதே இளவரசர்தான் திரும்பியிருக்க வேண்டும்."

4. துயரால் மயங்கிக்கிடந்த பெண்கள், இப்போது மகிழ்ச்சி மிகுதியால், இளவரசைக் காண அலைபாயும் கண்களுடன், முழு நம்பிக்கையோடு அரண்மனையை விட்டு வேகமாய் வெளிப்போந்தனர்.அங்கே இளவரசர் இல்லாமல் கந்தகம் மட்டுமே இருந்தது கண்டு அவர்கள் மிகவும் ஏமாற்றமடைந்தனர்.

5. தன்னைச் சிறிதும் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் கவுதமி உரத்து அழுதார், அவர் மயக்கமுற்றுத் தளர்ந்து, சோகமுகத்தோடுரைத்தார்:

6. "சீறிய கரங்களோடும், சிங்கத்தின் கம்பீரத்தோடும், ஏரார்ந்த கண்களோடும், பொன்னென ஒளிரும் பேரழகோடும், அகன்று விரிந்த மார்பினோடும், முரசோ அல்ல இடி என முழுங்கும் பெரும் குரலோடும் திகழ்நத அந்த நாயகன் வன ஆஸ்ரமத்தில் தான் வாழ்ந்தாக வேண்டுமா?

7. நிகரிலா நற்செயல் புரியும் அந்நாயகனோடொப்பிடுகையில் இவ்வுலகம் நமக்கு எள்ளளவும் பயனற்றதே, அந்த நிறைகுண நாயகன் நம்மை விட்டு நீங்கிய பின்னே.

8. ஓ! அவருடைய அந்த இரு அழகிய பாதங்கள் முன்பகுதி பேரழகாய்ப் பிணைக்கப்பட்டிருக்மே, கணுக்காலம் அதன் மிருதுவான மறைவும் நீலத்தாமரை மலரெனத் திகழுமே, மத்தியில் சக்கர மகிமைப் பொருந்திய அவை, வனத்தின் கடினத்தரைகளில் எப்படி நடப்பது?

9. அரண்மனையின் உப்பரிகையில் மட்டுமே இருக்கவும், படுக்கவும், உரியவரும், விலையுயர்ந்த உடைகள் தரித்தவரும், அகிலும், சந்தனமும் மணப்பதுமான அவருடல், கோடையை, குளிரை, மழையைத் தாங்கி எப்படி வாழும் அவ்வனத்திலே?

10. தன் வம்சத்தால், குணத்தால், பலத்தால், ஆற்றலால், நற்கல்வியால், பேரழகால், பெருமைமிகு இளமையால் எல்லாம் பெருமிதமுற்று, தருவதில் மகிழ்பவராய், எதையும் தாவெனக் கேளாதவராய்த் திகழ்ந்த அவர் எப்படிப் பிறரிடம் பிச்சையேற்று வாழமுடியும்?

11. மாசற்ற பொன் கட்டிலில் உறங்கி, மனம் மயங்கும் இசைக்கருவிகளின் இன்னிசையால் எழுப்பப்பட்டு, வாழ்ந்தவராயிற்றே அவர்! அந்தோ! இன்று என் அருமைத் துறவியவர் வெற்றுத்தரையிலே, வெறுங்கந்தலுடன் எப்படி உறங்குவாரோ?

12. இவ்வாறான இரங்கததக்க புலம்பலைக் கேட்ட பெண்கள், ஒருவரை ஒருவர் ஆரத் தழுவிக்கொண்டு, அசைக்கப்பட்டட மலர்மிகு கொடிகள் தேன்சிந்துவதைப் போல், கண்ணீர் மழைபொழியலாயினர்.

13. பிறகு, யசோதரா, தானே அவரைச் செல்ல அனுமதித்ததை அறவே மறந்துவிட்டுப் பெருந்துயர்கொண்டு தரையில் வீழ்ந்து புலம்பினார்.

14. உரிய மனைவியென்னை எப்படி அவர் கைவிட்டார்? விதவை போலல்லவோ என்னையவர் விட்டு விட்டார். அவருக்குரிய என்னையும் அவருடைய துறவு வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ள அவர் அனுமதித்திருக்கலாமல்லவா?

15. எனக்கொன்றும் மோட்ச விருப்பமில்லை என் விருப்பமெல்லாம் என் அன்புக்குரியவர் இவ் - மறு உலகிலும் என்னை விட்டு நீங்கக் கூடாதென்பதே.

16. என் கணவரின் அகன்ற கண்களும், ஒளியுறு புன்னகையும் உடைய முகத்தைக் காண எனக்கு அருகதையில்லா விடினும், தன் தந்தையின் மடியில் தவழ இந்த மழலை இராகுலனுக்குமா கொடுத்துவைக்கவில்லை?

17. ஐயோ! அந்தப் பேரறிவு நாயகர்க்கு மனம் மிக்க கடினமானதுதான் அவரழகுத் தோற்றம் மென்மையாயிருப்பினும் அவர் இரக்கமற்ற கொடியவர்தான். எதிரியையும் ஈர்க்கும் மழலைகொஞ்சும் இந்த மகவாம் மகனை எவரேனும் இப்படி கைவிடுவார்களோ?

18. என் இதயமும் நிச்சயம் கடினமானதே ஆம்! இரும்பால் செய்யப்பட்டதோ கல்லாலானதோ ஏனெனில் என் தலைவர், அரசுப்பேற்றைதுறந்து ஓர் அநாதைபோல் வனமேகிய பின்னும் அது இன்னும் உடைந்து சிதறவில்லையே அவர்க்கென்ன மகிழ்சியாய்ச் சென்றுவிட்டார். ஆனால் நான் என்ன செய்வேன்? என் துயரம் என்னால் தாங்கமுடியா அளவுக்குக் கனக்கிறதே!

19. இவ்வாறு துயரில் மூழ்கி, தொடர்ந்து அழுது, உரத்துப் புலம்பி,இயல்பிலேயே தற்காத்தலுடையவராய் இருந்தும் துன்பமிகுதியில் தன் வலுவெல்லாம் இழந்தார் யசோதரா.

20. இவ்வாறு யசோதரா துன்பத்தில் தடுமாறித் துயரம் தோய்ந்த சொற்களைக் கூறிச், சோர்ந்து தரையில் வீழ்ந்ததைக் கண்டு பெண்கள் யாவரும் அழுது புலம்பினர், மழையால் சாய்ந்த தாமரை மலர்களொத்த தம் முகங்களுடன்.

21. சன்னாவும் கந்தகமும் திரும்பிவிட்டதைக் கேள்வியுற்றம், தன் மகனின் மாறாத உறுதியை அறிந்தும் சுத்தோதனர் துயரத்தால் விம்மி வீழ்ந்தார்.

22. தன் மகனுக்காகத் துயர்மேலுட்டுத் தடுமாறி, சற்றே தன் சேவகர்களால் தாங்கப்பட்ட சுத்தோதனர், கண்ணீர் நிறைந்த தன் கண்களால், குதிரையை உற்று, நோக்கிவிட்டு, உரத்துப்புலம்பி தரையில் வீழ்ந்தார்.

23. பிறகு சுத்தோதனர் எழுந்து, ஆலயத்தில் நுழைந்து, பிரார்த்தனைப் புரிந்தவண்ணம், தம் மகனின் பாதுகாப்பான மீட்பை முன்னிட்டு குறிப்பிட்ட சிலவகையாகங்கள் புரிவதென உறுதிசெய்து கொண்டார்.

24. இவ்வாறாக சுத்தோதனர், கவுதமி, யசோதரா ஆகியோர் கீழ்க்கண்டவாறு கேட்டவண்ணமே தம் நாட்களைக் கடத்தி வந்தனர்: "எத்தனை காலம்? ஓ! கடவுளே! எத்தனை காலம்? அவரை நாங்கள் காணும் முன் கடக்கும்?"

நிரந்தரத் துறவு

1. கபிலவஸ்துவிலிருந்து ராஜகிரகத்திற்கு

1. கபிலவஸ்துவை விட்டு, மகத ராஜ்ஜியத்தின் தலைநகரான ராஜகிகத்திற்குச் செல்ல எண்ணினார் சித்தார்த்த கவுதமர்.

2. ஆளும் அரசராய்ப் பிம்பிசாரர் இருந்தார். பெரும் தததுவஞானிகளும், மாபெரும் சிந்தனையாளர்களும் தம் தலைமையிடமாகக் கொண்டதாய்த் திகழ்ந்தது அவ்விடம்.

3. மனத்தில் இவ்வெண்ணத்துடன், பொங்கி வரும் வெள்ளத்துக்கும் அஞ்சாமல் கங்கையைக் கடந்தார்.

4. போகும் வழியில் சகி என்னும் ஒரு பிராமணப் பெண்ணின் ஆசிரமத்தில் தங்கியும், அதன் பின் மற்றொரு பிராமணப் பெண்ணான பத்மாவின் ஆசிரமத்தில் தங்கியும், அதன்பின் பிராமணத் துறவியான ரய்வதன் ஆசிரமத்தில் தங்கியும் சென்றார். அவர்களனைவரும் அவரை நன்கு உபசரித்தனர்.

5. மற்ற எம்மனிதரையும் விஞ்சுவதான அவர் ஆளுமையையும், பெருமிதத்தையும், பேரழகையும் கண்ணுற்ற அப்பகுதி மக்கள் அவர் சந்நியாசி உடை தரித்திருப்பதைக் கண்டு ஆச்சிரியமமைந்தனர்.

6. அவரைக் கண்டு, வேறங்கோ செல்பவர் நின்றனர், நின்று கொண்டிருந்தவர்கள் அவர்பின் நடந்தனர்,

புத்தொளியைத் தேடி

1. பிருகுவின் ஆசிரமத்தில் தங்குதல்

1. தக்கபிற வழிகளைத் தானுணரும் ஆவலில், 'ஆராதகாலாமரை' சந்திப்பதற்காகக் கவுதமர் இராஜகிரஹத்தை விட்டு வெளியேறினார்.

2. தன் வழியில் பிருகுவின் ஆசிரமத்தைக் கண்ட அவர், ஆர்வத்தின் காரணமாய் உள்னுழைந்தார்.

3. தவத்தில் மேலோராய், அறிவில் வல்லோராய்த் திகழ்ந்த ஆசிரமவாசிகளான பிராமணர்கள், யாக எரிபொருள் தேடச் சென்று, தம் கைநிறைய விறகும், மலரும், குசப்புல்லும் ஏந்தி

அப்போதுதான் திரும்பியவர்கள் நேரே தம் இருப்பிடம் செல்லாது, முதலில் அவரைக் காணச் சென்றனர்.

4. பிறகு அந்த ஆசிரமவாசிகளால் முறைப்படி உபசரிக்கப்பட்ட அவர், ஆசிரம முதியோர்க்குத் தன் வணக்கங்களை உரித்தாக்கினார்.

5. சொர்க்க விருப்புடையோராய் வித்தியாசமான தவச்சடங்குகள மேற்கொள்ளும் புனிதர் கூட்டதால் நிறைந்த அந்த ஆசிரமத்தைப் பார்வையிட்டார், விடுதலைக்காக ஏங்கும் அறிஞரான அவர்.

6. அந்தப் புண்ணியச் சோலையில், துறவோர், விதவிதமாய்ப் புரியும் தவச்சடங்குகளை, பண்பாளரான அவர் முதன்முறையாகக் கண்டார்.

7. பிறகு, தவவேள்விச் சடங்குகளின் நுட்பங்களில் நன்கு தேர்ந்தவரான பிராமணர் பிருகு, கவுதமருக்கு வெவ்வேறு_விதமான தவவேள்வி முறைகளையும், அவற்றால் விளையக் கூடிய பயன்களையும் விவரித்தார்.

8. சமைக்கப்படாத உணவு, நீரில் விளைவது, மற்றும் கிழங்குகளும் கனிகளுமே, புனித நூல்களின்படி துறவிகளுக்குரியவை. ஆனால் தவம் புரியும் முறைகள் ஒன்றுக்கு ஒன்று வெவ்வேறானவை.

9. சிலர் பறவைகள் போல், சிதறிக்கிடக்கும் கண்ணுற்ற தானியங்களை உண்டு வாழ்வர்; மற்றவர் மான்கள் போல் புல்லைப் புசித்து வாழ்வர், இன்னும் சிலர் பாம்புகள் போல் காற்றையே கொண்டு வாழ்வர் துறவோர் எறும்புப் புற்றாய் ஆனாற்போல.

10. மற்ற சிலர் கடின முயற்சியால் கல்லில் இருந்து தம் உணவைத் தேடி வெல்லுவர் இன்னும் சிலர் தானியங்களை அரைத்திடத் தம் பற்களையே பயன்படுத்துவர், சிலர் மற்றவர்க்காய் வெந்தவற்றில் தமக்கென எஞ்சியதை மட்டுமே உண்டு வாழ்வர்.

11. பிறர் தாம் தரித்த சடைமுடியை எப்போதும் நீரால் ஈரமாய் வைத்திருந்து, மந்திரங்களோடு இருமுறை அக்கினிக்கு ஆகுதி செய்வர், பிறர் ஆமைகளால் சிராய்க்கப்படும் தம் உடல்களோடு மீன்கள் போல் நீரிலேயே அமிழ்ந்து கிடப்பர்.

12. குறிப்பிட்ட காலத்திற்கு இவ்வாறு மேற்கொள்ளப்படும் தவங்களால் உயர்நிலையில் அவர்கள் சொக்கம் பெறுவர், தாழ்நிலையில் மானுட உலகைப் பெறுவர், துன்பத்தைப் பொறுத்தல் என்னும் இப்பாதையின் முடிவில் அவர்கள் இன்பத்தை எய்துவர், துன்பமே உயர் தகைமையின் ஆணிவேரென அவர்கள் கூறுவர்.

13. இவற்றைக் கேட்ட கவுதமர் கூறினார். "இன்றுதான் முதல் முதலாக இதுபோன்ற ஆசிரமக் காட்சியைக் கண்டேன் தவமுறை விதிகளை நான் புரிந்து கொள்ளவில்லை."

14. இப்போதைக்கு நான் கூறக்கூடியதெல்லாம் இதுவே: தங்களின் இத்தகு பக்தி முயற்சியின் சொர்க்கத்திற்கானது ஆனால் என் விருப்பமோ, இப்புவிமேல் வாழும் வாழ்வில் நேரும் துன்பங்களுக்கென காரணங்களை ஆராய்ந்து பரிகாரம் காண்பதே. தங்களிடம் விடைபெற என்னை அனுமதியுங்கள். நான் சாங்கிய தத்துவத்தைக் கற்று, சமாதி மார்க்கத்தில் பயிற்சிபெற்று என் பிரச்சினைக்குத் தீர்வுகாண அது உதவுமா என்று காண விரும்புகிறேன்.

15. இவ்வாறு தவமேற்கொண்டுள்ள, அடைக்கலம் தருகிற, என்பால் எல்லையிலா அன்புகாட்டிய தங்களை விட்டு நான் பிரிய வேண்டியிருப்பதை எண்ணுங்கால், என் உறவை விட்டுப் பிரிந்து வந்தபோது இருந்தது போலவே எனக்கு வருத்தமாயிருக்கிறது.

16. இவ்வனத்தை விட்டு நான் செல்வதென்பது என்னுள் எழும் விருப்பமின்மையாலோ, பிறரின் தவறான நடத்தையாலோ என்றெல்லாம் எண்ண வேண்டாம். ஏனெனில் முன்வாழ்ந்த முனிவர்களின் முறைமைப்படி சமயக் கடமைகளில் உறுதியாயிருக்கும் மாமுனிவர்கள் நீங்கள்.

17. சாங்கிய தத்துவத்தில் தேர்ந்த குருவெனக் கூறப்படுகிற ஆராதகாலாம் முனிவரிடம் செல்ல நான் விரும்புகிறேன்.

18, அவருடைய முடிவைக்கண்ட ஆசிரமத் தலைவரான பிருகு கூறினார்: "இளவரசே! உண்மையில் தங்கள் நோக்கம் துணிவுமிக்கது, இளைஞரான நீர் விண்ணின்பம், விடுதலை இரண்டையும் முழுமையாய்க் கருதிப்பார்த்து, விடுதலையை நோக்கமாய் ஏற்றிருப்பதால் தாங்கள் உண்மையில் துணிவானவர்!"

19. தாங்கள் கூறியதே உங்கள் முடிவான நோக்கமெனில் உடனே விந்தியகோஸ்தத்துக்கு விரையுங்கள்; மிக்குயர் பேரின்பத்தை உள்நோக்கிக் காணும் பேறுபெற்ற ஆராதமுனி ஆங்கு தான் வாழ்கிறார்.

20. அந்தப்பாதையை (சாக்கிய தத்துத்தை) அவரிடம் தாங்கள் கற்றுத் தெளிவீர்கள் எனினும் நான் முன்னறியும்படி தங்களின், இந்நோக்கம் இத்தத்துவக் கோட்பாட்டைக் கற்றுத் தெளிந்த பின் இன்னும் மென்மேலும் விரியும்.

21. கவுதமர் அவருக்கு நன்றி கூறிவிட்டு, உடனுறையும் முனிவர்க்கும் வணக்கம் தெரிவித்துவிட்டுப் பிரிந்து சென்றார். கனிவுகாட்டும் உபசரிப்புச் சடங்குகள் அனைத்தையும் முறையாகப் புரிந்து அவரை வழியனுப்பிவைத்து விட்டு ஆசிரமத்தவர் தங்கள் துறவுநிலையிருப்பிடத்துக்குத் திரும்பினர்.

## 2. சாக்கியம் கற்றல்

1. பிருகுவின் ஆசிரமத்தை விட்டு, ஆராதகாலாம் முனிவரின் இருப்பிடத்தைக் காணப்புறப்பட்டார் கவுதமர்.

2. ஆராதகாலாம் வைஷாலியில் தங்கியிருந்தார். கவுதமர் ஆங்குச் சென்றார். வைஷாலியை அடைந்ததும் அவருடைய ஆசிரமத்திற்குச் சென்றார் அவர்.

3. ஆராதகாலாமை அடைந்து அவர் கூறினார்: "தங்கள் கோட்பாடுகளையும் முறைகளையும் கற்பதில் நான் இணைக்கபடவேண்டுமென விரும்புகிறேன்."

4. பிறகு ஆராதகாலாம் கூறினார்: "தங்கள் வரவு நல்வரவாகுக" தங்களைப் போன்ற அறிவிற்சிறந்தவர் மிகவிரைவில் தாமே அறிந்து கொள்ளவும், உணர்ந்து கொள்ளவும். அடையவும் அதற்கு உடன்படவும் தக்கதாக உள்ளன எம் கோட்பாடுகள்.

5. மேலும் மிக உயர்ந்த பயிற்சிக்குரிய களமாகத் தாங்கள் திகழ்கிறீர்கள்.

6. ஆராதரின் இச்சொற்களைச் செவிமடுத்து இளவரசர், மகிழ்ச்சியில் திளைத்தவண்ணம் இவ்வாறாகப் பதிலிறுத்தார்:

7. இவ்வாறு மிகக்கூடிய அன்பினைத் தாங்கள் என்பால் காட்டுதலால், என்னைக் குறைபாடுடையவனாயிருந்தும், ஏற்கனவே முழு நிறைவடைந்தவன் போல் தோன்றுகிறது.

8. எனவே தங்கள் கொள்கைகள் யாவையென எனக்குக் கூற இணங்குவீர்களா?

9. ஆராதர் கூறினார்: 'தங்கள் மேன்மைமிகு இயல்புகளால, குணநலப் பொறுப்புகளால், தீர்மான உறுதியினால் தூண்டப்படும் உமக்கு, நான் தங்கள் தகுதிக்கான முன்தேர்வுகள் எதையும் வைக்கத் தேவையில்லை.'

10. அறிபவர்களில் மிகச்சிறந்தவரே! எம் கோட்பாடுகளைக் கேளுங்கள்.

11. அதன் பின் சாங்கியத்தத்துவம் என அறியப்படும் கோட்பாடுகளைக் கவுதமருக்கு விரித்துரைத்தார்.

12. தன் விரிவுரையின் முடிவில் ஆராதகாலாம் கூறினார்.

13. "ஓ! கவுதமரே! எங்கள் தத்துவமுறைமையின் கோட்பாடுகள் இவையே. நாம் அவற்றைத் தங்களுக்குத் தொகுப்பு வடிவில் கூறினோம்."

14. ஆராதகாலாமால் தெளிவாக வெளிப்படுத்தப்பட்டவற்றைக் கேட்டு கவுதமர் மிகவும் மகிழ்ந்தார்.

### 3. சமாதி மார்க்கத்தில் பயிற்சி

1. தன் பிரச்சினைக்கான தீர்வுகாண்பதற்கான பல வழிமுறைகளையும் பரிசோதித்துக் கொண்டிருந்த போது, கவுதமர் தியான மார்க்கத்தோடு (மனத்தை ஒருமுகப்படுத்தல்) தம்மை ஈடுபடுத்திக் கொள்ள எண்ணினார்.

2. தியான மார்க்க வழிமுறைகள் மூவகையாய் இருந்தன.

3. அவையனைத்தும் தமக்குள் பொதுவானதாக ஒன்றைக் கொண்டிருந்தன அதாவது தியானத்தைக் கைப்பற்ற சுவாசக் கட்டுப்பாட்டை வழிமுறையாய்க் கொள்ளுதல்.

4. ஒரு தத்துவ நிறுவனம், சுவாசத்தைக் கட்டுப்படுத்தும் வழியாக 'அநபநாசதி' என்றழைக்கப்படும் முறையைப் பின்பற்றி வந்தது.

5. மற்றொரு நிறுவனம், சுவாசத்தை கட்டுப்படுத்தும் வழியாக 'பிராணாயாமம்' என்றழைக்கப்படும் முறையைப் பின்பற்றி வந்தது. அது, சுவாசிக்கும் செயற்பாட்டை மூறு நிலைகளாகப் பிரித்துக் கொண்டது. 1. மூச்சிழுத்தல் (பூரகம்) 2. மூச்சை நிலைப்படுத்தல் (கும்பகம்) மற்றும் மூச்சை வெளிவிடுதல் (ரேசகம்). மூன்றாவது நிறுவனம் சமாதி நிறுவனம் என அறியப்பட்டது.

6. ஆராதகாலாம் தியானமார்க்கத்தில் சிறந்த குருவென நன்கு அறியப்பட்டவர். ஆராதகாலாமிடம் தான் தியானமார்க்கத்தில் பயிற்சி பெற முடியுமாயின் அதுமிக நன்று எனக் கருதினார் கவுதமர்.

7. எனவே அவர் ஆராதகாலாமிடம் உரையாடி, அவரால் தமக்குத் தியானமார்க்கத்தில் பயிற்சியளிக்கக் கூடுமா எனப் பணிவுடன் வேண்டினார்.

8. ஆராதகாலாம் பதிலிறுத்தார். "மிக மகிழ்ச்சியுடன்."

9. தியானமார்க்கத்திற்கான தன் செயல்பாட்டு முறையை அவருக்குத் கற்பித்தார் ஆராதகாலாம். அது ஏழு படிநிலைகளை உடையதாய் இருந்தது.

10. கவுதமர் ஒவ்வொரு நாளும் அதைப் பயிற்சி செய்தார்.

11. அதில் முழுத்திறன் எய்தியபின் கவுதமர், மேலும் ஏதேனும் கற்க வேண்டியுள்ளதோவென ஆராதகாலாமை வினவினார்.

12. ஆராதகாலாம் பதிலிறுத்தார்: "இல்லை நண்பரே! நாம் கற்பிக்கக் கூடியது இவ்வளவே." இத்துடன் கவுதமர் ஆராதகாலாமிடம் விடைபெற்றார்.

13. ஆராதகாலாம் வகுத்த முறையால் எய்தும் நிலைகளுக்கு மேலாய் ஓர் நிலையெட்ட ஒரு தியானிக்கு வழிவகுக்கக் கூடிய தியான முறையொன்றை வகுத்தவராய்ப் புகழ்பெற்றிருந்த

உத்தக இராமபுத்ரர் என்னும் பெயரில் மற்றொரு யோகியைப் பற்றிக் கேள்வியுற்றார் கவுதமர்.

14. அவருடைய செயல்முறையைப் பயின்று பயிற்சி செய்வதன் மூலம் சமாதியில் உயர்நிலையை எய்த வேண்டும் என எண்ணினார் கவுதமர். அதன்படி உத்தக இராமபுத்ரரின் ஆசிரமத்திற்குச் சென்று அவரிடம் பயிற்சிக்குத் தம்மை உட்படுத்திக் கொண்டார்.

15. உத்தகரின் எட்டாவது நிலைக்கானச் செயற்பாட்டை மிகக்குறுகிய காலத்திலேயே பயின்றுவிட்டார் கவுதமர். உத்தக இராமபுத்ரரின் செயல்முறையில் முழுநிறைவடைந்த பின், ஆராதகாலாமைக் கேட்ட அதே வினாவை இவரிடமும் கேட்டார் கவுதமர், "மேலும் கற்க வேண்டியது ஏதேனம் உளதோ?"

16. உத்தக இராமபுத்ரரும் அதே பதிலை அளித்தார். "இல்லை நண்பரே! நாம் கற்பிக்கக் கூடியது இவ்வளவே!"

17. கோசலர்களின் தேசத்தில் ஆராதகாலாமும், இராமபுத்ரரும் தியானமார்க்கத் திறனில் புகழ்பெற்று விளங்கினர். ஆனால் இதேபோன்ற தியானமார்க்கக் குருக்கள் மகதர்களின் நாட்டில் இருப்பதாகக் கவுதமர் கேள்வியுற்றார். அவர்களின் முறைகளிலும் தாம் பயிற்சி பெறவேண்டும் என அவர் எண்ணினார்.

18. அதன்படி கவுதமர் மகதம் சென்றார்.

19. அவர்களின் தியானச் செயல்முறை, அதுவும் சுவாசக் கட்டுப்பாட்டை அடிப்படையாய்க் கொண்டதே எனினும், கோசல நாட்டில் நடைமுறையிலுள்ளதினின்றும் வேறானது என்பதைக் கண்டார்.

20. இந்தச் செயல்முறை, மூச்சை உள் இழுத்தலால் அல்லாது மூச்சை நிலைப்படுத்தலால் மனத்தை ஒருமுகப்படுத்துவதாய் இருந்தது.

21. கவுதமர் இந்தச் செயல்முறையையும் கற்றார். அவர் மூச்சை நிலைப்படுத்துவதன் மூலம் தன் மனத்தை ஒருமுகப்படுத்த முயலும் போது, அவர் காதுகளிலிருந்து கடுமையான ஒலிகள் துளைத்து எழுவதாகவும், தன் தலை கூரிய கத்தியால் கடுமையாய்க் குத்தப்படுவதைப் போலவும் அவர்க்கு தோன்றியது.

22. அது மிகவும் கடினமான முறையாக இருந்தது. ஆனால் அதைப் பயின்று தேறவும் தவறவில்லை கவுதமர்.

23. அவருடைய சமாதி மார்க்கப் பயிற்சி இவ்வாறாக இருந்தது.

## 4. கடும் விரதச் சோதனைகள்.

1. கவுதமர் சாங்கியம், சமாதி மார்க்கம் ஆகியவற்றைச் சோதித்துவிட்டார். ஆனால் கடும் விரத முறையைச் சோதிக்காமலேயே பிருகுவின் ஆசிரமத்தை விட்டு வெளியேறிவிட்டார்.

2. அதையும் ஒரு முறை சோதித்துப் பார்த்து விடவும், அந்த அனுபவத்தைத் தமக்குத்தாமே பெறவும் வேண்டுமென்றும் கருதினார் அவர். ஏனெனில் அப்போதுதான் அவர் அதைப்பற்றி ஆதாரபூர்வமாகப் பேசமுடியும்.

3. அதன்படி கவுதமர் கயா என்னும் நகருக்குச் சென்றார். ஆங்கிருந்து சுற்றுப்புற பிரதேசங்களையெல்லாம் ஆராய்ந்து, தாம் கடும் விரதம் மேற்கொள்வதற்குரிய தங்குமிடமாக உருவேலத்தில் இருந்த, கயாவின் இராஜ ரிஷியான நெகரியின் ஆசிரமத்தைத் தீர்மானித்துக் கொண்டார். அது நிரஞ்சனை ஆற்றங்கரையில் தன்னந்தனியாய் கடும் விரதத்தைப் பயிற்சி செய்யத்தக்க இடமாயிருந்தது.

4. உருவேலத்தில், தம்மால் இராஜகிருகத்தில் சந்திக்கப்பட்டவர்களும், சமாதனம் பற்றிய செய்தியைக் கொண்டு வந்தவர்களுமான பரிவ்ராஜகர்கள் ஐவரைச் சந்தித்தார் அவர். அவர்களும் கடும்விரதத்தைப் பயிற்சி செய்து கொண்டிருந்தனர்.

5. ஆங்கு அவரைக் கண்ட துறவிகள் தம்மோடு அவரை அழைத்துச் செல்ல அணுகினர். கவுதமர் ஒப்புக் கொண்டார்.

6. பிறகு அவர்கள், அவர் கட்டளைகளுக்குச் சீடரெனப்பணிந்து, பணிவுடனும், இணக்கத்துடனும் அவர்க்குத் தொண்டு புரிந்தனர்.

7. கவுதமரால் பயிற்சி செய்யப்பட்ட கடுந்தவமும், தன்னை வருத்திக் கொள்ளலும் மிகக் கடுமையான வகையினதாக இருந்தன.

8. சிலசமயம் ஒரு நாளைக்குக் குறைந்தபட்சம் இரண்டு வீடுகளை அல்லது அதிக பட்சம் ஏழுவீடுகளை மட்டுமே அடைவார் _ ஆங்கு ஒவ்வொரு வீட்டிலும் குறைந்தது இரண்டு கவுளம் உணவு, அதிகபட்சம் ஏழுகவளம் உணவு மட்டுமே ஏற்பார்.

9. ஒவ்வொரு நாளும் ஒரு கையளவு உணவிலேயே எப்படியாயினும் ஏழுகையளவை மிகையாகாமலேயே காலந்தள்ளுவார்.

10. சிலசமயம் ஒருநாளைக்கு ஒரு முறை, அல்லது இரு நாட்களுக்கு ஒருமுறையென்னும் வீதமாய், ஏழுநாட்களுக்கு ஒரு முறை என்னும் அளவிலும் அல்லது தொடர்ந்து பதினைந்து நாட்களுக்கொரு முறை என்ற வகையிலும், கடுமையாகத் தம் உணவுக் கட்டுபாட்டைப் பின்பற்றினார்.

11. கடும்விரதப் பயிற்சி முன்னேற, முன்னேற அவருடைய முழு உணவுமே சேகரிக்கப்பட்ட பச்சிலைகள், அல்லது கடினமான தினைகளும் நெல்லும், அல்லது பூமியில் மறைந்துள்ள

துணுக்குகள், நீர்த்தாவரங்கள் வைக்கோலில் இருந்தெடுத்து உமியுடன் அரைக்கப்பட்ட அரிசி மாவு, கஞ்சி அல்லது கடலைமாவு ஆகியவைகளாகவே இருந்தன.

12. அவர் கடினமான வேர்க்கிழங்குகள், கனிகள் அல்லது உதிர்ந்தவைகள் ஆகியவற்றைக் கொண்டே உயிர் வாழ்ந்தார்.

13. அவர் ஆடை சணலாகவோ, சணலும் குப்பைக் குவியலில் கிடத்தகப்பட்ட கடினத்துணியும் கலந்த கந்தலாகவோ, மரவுரியாகவோ, கருப்புமானின் முழுத் தோலாகவோ, இடையில் கிழகிக்கப்பட்ட துண்டாகவோ, புல்லாலோ மரப்பட்டையாலோ ஆனதாகவோ மனிதனின் அல்லது விலங்கின் முடியால் போர்வையாய் நெய்யப்பட்டதாகவோ, அல்லது ஆந்தை இறகுகளால் செய்யப்பட்டதாகவோ இருந்தது.

14. தன் தலைமுடியையும், தாடி முடியையும் தானே பறித்துக் கொள்வார், தன் குதிகாலில் அமரும், ஆசன நிலையை விட்டு எழவே மாட்டார், இருந்த நிலையிலேயே இருந்து அசைவார்.

15. இவ்வாறாக விதவிதமாகத்தன் உடலை சித்திரவதை செய்தும், வருத்தியும், கடும் விரத முயற்சியின் விளிம்பிற்கே சென்றுவிட்டார்.

16. தன் வெறுப்பில் அவர் இத்தனை தூரம் சென்றபின் ஆண்டுக்கணக்காய் அவருடல்மீது அழுக்கும், தூசியும் தாமே உதிரும் அளவுக்கு அடர்ந்து விட்டது.

17. தன் விரத இருப்புக்கென அவர் தேர்ந்தெடுத்துக் கொண்ட இடம் பயங்கரக் காட்டின் மிக அடந்த பகுதியாய், மயிர்க் கூச்செறியாமல், விவரமுள்ள யாரும் அணுக முடியாத அளவுக்குப் பயங்கரமானதாய் இருந்தது.

18. குளிர்காலம் கடுங்குளிர் இரவுகளைக் கொண்டு வருங்கால், குளிர்மிக்க மாதத்தின் இரவையெல்லாம் வெட்ட வெளியிலும், பகலையெல்லாம் புதர்களுக்குள்ளும் கழித்தார் அவர்.

19. ஆனால் மழைகாலத்துக்கு முன் கடைசியாய் வந்த கொதிக்கும் கோடைப் பருவத்தில், பகலில் சுட்டெரிக்கும் சூரியனுக்கு நேர்கீழும், இரவில் அடர்ந்த புதர்களிலும் இருந்தார்.

20. எலும்புகளைத் தலையணையாய்க் கொண்டு இடுகாடுகளில் கூடப்படுத்தார்.

21. அதன்பின் கவுதமர் ஒரு நாளைக்கு ஒரு அவரை விதையை உண்டே வாழ்ந்தார். ஒரு நாளைக்கு ஓர் எள்ளை அல்லது ஒரு பருக்கைச் சோற்றை மட்டுமே உண்டு வாழ்ந்தார்.

22. ஒரு நாளைக்கு ஒரு கனியே உண்டு வாழ்ந்த நிலையிலேயே அவர் உடல் மிகக் கடுமையாய் இளைத்துப் போனார்.

23. அவர் தன் வயிற்றைத் தொட்டுணர எண்ணினால், அவர் தொட்டது முதுகெலும்பாய் இருந்தது; அவர் முதுகெலும்பைத் தொட்டுணர எண்ணினால் வயிற்றைத்தான் அவரால் தொட முடிந்தது அவ்வளவு தூரம் அவர் வயிறு முதுகெலும்போடு ஒட்டிக் கொண்டிருந்தது ஏனெனில் அவர் உண்டது அவ்வளவு குறைவு.

5. கடும்விரதத்தைக் கைவிடுதல்

1. கவுதமர் பயிற்சி செய்த தவமும், தன்னை வருத்தலும், மிகக் கடுமையான வகையைச் சேர்ந்தாயிருந்தது. அவை ஆறு ஆண்டுக் காலத்திற்கு நீண்டதாயிருந்தது.

2. ஆறாமாண்டின் இறுதியில், அவரால் நகரக் கூடமுடியாத அளவிற்கு அவருடல் பலவீனமாகிவிட்டது.

3. இருந்தும், அவர் புத்தொளி எதையும் காணவில்லை, அவர் மனம் மையம் கொண்டிருந்த உலகத் துன்பப் பிரச்சினைக்குத் தீர்வெதையும் நெருங்கவுமில்லை.

4. அவர் தமக்குள் எண்ணிணார்: பற்றறுக்கக் கூட இதுவல்ல வழி; நிறைவான அறிவெய்தவோ, விடுதலைப் பெறவோ அல்லவே அல்ல.

5. இவ்வுலகுக்காகச் சிலர் துன்பத்திற்காட்படுவர்; இன்னும் சிலர் சொர்க்கத்துக்காகக் கஷ்டப்படுவர்; அனைத்து உயிர்களும் ஏதோ நம்பிக்கையில் இலக்கைத் தவறவிட்டு, இடர்ப்பாடுற்று, இன்பத்திற்காகத் துன்பத்தில் வீழ்கின்றன.

6. எனக்கும் இதுபோன்ற ஏதோ நேர்ந்து விட்டதல்லவா?

7. கீழ்மையை விட்டுத் தனக்கேயுரிய மேலான பாதையைத்தேடும் முயற்சியை நான் குறை கூறவில்லை.

8. நான் கேட்பதெல்லாம், மெய்வருத்திக் கொள்வதை அறமெனலாமா?

9. உடல் செயல்படுவதோ, செயல்படாதிருப்பதோ மனத்தின் அதிகாரத்தின் படிதான். எனவே, எண்ணங்களைக் கட்டுப்படுத்துவது மட்டுமே பொருத்தமானது, எண்ணமின்றி இயங்குமுடல் நாயையொத்தது.

10. உடலை மட்டுமே கருதுவதாயின் தூய உணவாலேயே தகுதி எய்திவிடமுடியும். ஆனால் செய்பவனிடமும் தகுதி உள்ளதே: ஆயின் அதனால் (மெய்வருத்தலால்) என்ன பயன்?

11. யாரொருவன் வலுவையிழந்து, பசியால் மெலிந்து, தாகத்தாலும், களைப்பினாலும் தளர்ந்து, களைப்பினால் தன் மனம் தன்நிலையற்றுப் போக விடுகிறானோ, அவனால் புத்தொளியை அடைய முடியாது.

12. மனத்தினால் அடையப்பட வேண்டிய இலக்கை, முழு அமைதியற்றிருப்பவன் எப்படி அடைய முடியும்?

13. உடலில் தேவைகள் தொடர்ந்து தீர்க்கப்படுவதன் மூலம் உண்மையான அமைதியும், மனத்தின் தன்நிலையும் சரியாக அடையப்படும்.

14. அக்காலத்தில் உருவேலாவில் சேநானி என்னும் பெயரிய இல்லறத்தார் ஒருவர் வாழ்ந்து வந்தார் சுஜாதா அவருடைய மகள் ஆவார்.

15. சுஜாதா தனக்கொரு மகன் வேண்டுமென ஒரு ஆலமரத்திடம் நேர்ந்துக்கொணடு, கிட்டினால் ஓராண்டு விரதம் இருப்பதாக முடிவெடுத்திருந்தார்.

16. வேண்டுதல் நிறைவேறியதால், தன் பணிப்பெண் புன்னாவை ஆங்குச் சென்று தன் விரத பூசைக்கான ஏற்பாடு செய்ய அனுப்பினார்.

17. அந்த ஆலமரத்தடியில் கவுதமர் அமர்ந்திருப்பதைக்கண்ட புன்னாகீழேவந்துற்றஅம்மரத்தின்கடவுளேஅவரெனஎண்ணினாள்.

18. சுஜாதா ஆங்குற்றுத் தான் சமைத்த உணவைத் தங்கப் பாத்திரத்தில் கொண்டுவந்து கவுதமருக்கு அளித்தார்.

19. அவர் அப்பாத்திரத்தை ஆற்றங்கரைக்குக் கொண்டு சென்று, ஆழமில்லாநீர்த்துறையான சுப்பதிதிதா எனப்பட்ட குளியலிடத்தில் குளித்துவிட்டுப் பின் உணவருந்தினார்.
20. இவ்வாறாக அவருடைய கடும் விரத முயற்சி முடிவுற்றது.

21. அவருடன் இருந்த ஐந்து துறவிகளும், அவர் தவவாழ்வையும், தன் மெய்வருத்தலையும் கைவிட்டு விட்டதற்காய் அவர்பால் சினங்கொண்டு வெறுப்பில் அவரை விட்டு விலகிப்போயினர்.

## ஞானமெய்தலும் புதியபாதைக் காட்சியும்.

### 1. புத்தொளிக்கான தியானம்.

1. உணவுண்டு புத்துணர்வு பெற்ற கவுதமர், தன் கடந்தகால அனுபவங்களைப் பற்றி எண்ணலானார். அனைத்துப் பாதைகளும் தவறிப்போனதை உணர்ந்தார்.

2. வேறெவர்க்கும் நேர்ந்திருப்பின் விரக்தி நிலைக்கு ஆவார்கள். விரட்டப்படுமளவிற்குத் தவறுதல் முழுமையானதாயிருந்தது. உண்மையில் அவர் வருந்தினார். ஆனால் விரக்தியேதும் அவரைத் தீண்டவேயில்லை.

3. புதிய வழியொன்றைக் கண்டுபிடிக்க முடியுமென்பதில் அவர் எப்போதும் நம்பிக்கையுடையவராயிருந்தார். இது இவ்வாறிருக்க, சுஜாதாவால் அளிக்கப்பட்ட உணவை ஏற்ற நாள் இரவு, கவுதமர் அய்ந்து கனவுகள் கண்டார். விழித்ததும் தான் ஞானமெய்துதல் நிச்சயம் என்பதாக அக்கனவுகள் பொருள் தருவதாய் விளங்கிக் கொண்டார்.

4. அவர் தன் எதிர்காலத்தை முன்னறிந்து கொள்ளவும் முயற்சித்தார். சுஜாதாவின் பணிப்பெண் உணவு கொண்டுவந்த பாத்திரத்தை நிரஞ்சனையாற்றில் எறிந்து இதைச் செய்த போது அவர் கூறினார்: "நான் ஞான மெய்தப்போகிறேன் எனில் இந்தப் பாத்திரம் வெள்ளத்தை எதிர்த்தேறட்டும் இல்லையேல் நீரடியில் மூழ்கிடட்டும்." இயல்பாகவே அந்தப்பாத்திரம் நீரோட்டத்தை எதிர்த்து மிதக்கத் தொடங்கி, இறுதியில் நாக மன்னன் காலாவின் ஊரருகே மூழ்கியது.

5. நம்பிக்கையாலும், தீர்மானத்தாலும் வலுப்பெற்ற அவர் உருவேலாவை விட்டு, மாலைப்போதில் கயாவுக்குச் செல்லும் பெருஞ்சாலையில் நடந்தார். ஆங்கவர் ஓர் அரசமரத்தைக் கண்டார். தன்மேல் ஓர் புத்தொளி விடியுமென்றும், தன் பிரச்சினைக்குத் தீர்வு காணும் வழியொன்று கிட்டுமென்றம், நம்பிக்கைக் கொண்டு அதன் அடியில் அமர்ந்து தியானிக்க எண்ணினார்.

6. நான்கு திசைகளையும் ஆய்ந்து அனைத்து மாசுகளையும் அறுப்பதற்கு மாமுனிவர்கள் எப்போதும் தெரிவு செய்யும் கீழ்த்திசையையே தேர்ந்தெடுத்தார்.

7. கால்களைச் சப்பணமிட்டும், நிமிர்ந்தும் அவ்வரசமரத்தடியில் அமர்ந்தார் கவுதமர். ஞானமெய்தத் தீர்மானித்தவராக அவர் தமக்குள் கூறிக் கொண்டார். "தோலும், தசை நாண்களும், எலும்பும் வற்றி இற்றுப்போனாலும் சரி, என் சதையும் இரத்தமும் சுண்டிப்போனாலும் சரி, முழு ஞானம் எய்தாமல் நான் இவ்விருக்கையை விட்டு எழமாட்டேன்."

8. யானைகளின் தலைவன் போன்ற கம்பீரம்மிக்க நாகமன்னர் காலாவும், அவர் மனைவி சுவர்ணபிரபாசையும், அரசமரத்தடியில் அமர்ந்திருக்கும் கவுதமரின் காட்சியால் விழிப்புற்று முழு நிறைவுற்ற பேறறிவை அவரடைதல் திண்ணமெனக் கருதிக் கீழ்க்கண்ட புகழுரைகளை உரைத்தனர்.

9. தங்கள் காலடியில் அழுத்தும் இப்புவிபோல் தங்கள் பொலிவுச் சூரியனென ஒளிர்வதுபோல், தாங்கள் எண்ணியதை எண்ணியாங்கு எய்துவது திண்ணமே என்பது மீண்டும், மீண்டும் ஒலிக்கிறது.

10. வானில் சிறகடிக்கும் பறவைக் கூட்டங்கள் தங்களுக்குப் பணிவுடன் வணக்கம் செலுத்துகின்றன. ஓ, கமலக்கண் உடையவரே; வானில் தென்றல் தவழுவதெப்படியோ அப்படியே தாங்கள் நிச்சயம் தங்கள் இலக்கை எய்துவீர்கள்.

11. அவர் தியானிக்க அமர்ந்ததும், புராணங்களால் மாறனின் (காமன்) பிள்ளைகளென்றழைக்கப்படும் தீய எண்ணங்களும், தீய உணர்வுகளும் கூட்டங்கூட்டமாய் அவர் மனத்தில் நுழைந்தன.

12. அவைகள் அவரை வீழ்த்தி, அவர் நோக்கிலிருந்து தோற்றம் விடச் செய்துவிடுமோ என்று கவுதமர் மிகவும் அஞ்சினார்.

13. தீய உணர்வுகளுடனான இப்போரில் பலரிஷிகளும், பிராமணர்களும், அவற்றிற்கு அடிபணிந்து போயினர் என்பதை அவர் அறிவார்.

14. எனவே தனக்குள்ள அனைத்துச் சக்தியையும் அவர் திரட்டிக் கொண்டு மாறனிடம் கூறினார். "நம்பிக்கை உள்ளது என்னிடம் தீரமும், தெளிவும் உண்டு." தீய உணர்வுகளே நீவிர் என்னை வெல்லல் எப்படிக் கூடும்? இந்தக் காற்றில் ஆற்றுவெள்ளமே வற்றிப்போகும். ஆனால் என்நோக்கத்தில் நான் உறுதியாய் இருப்பதால், என் தீர்மானங்களை வற்றச் செய்ய உம்மால் இயலாது. வாழ்வில் தோற்பதைவிட இப்போரில் இறப்பதே எனக்குச் சிறந்தது."

15. இதோ எனக்கொரு உணவுக்கவளம்_ தற்செயலாய்க் கிடைத்த இது. "எத்தனை இனியது" எனக் கல்லொன்றைக் கொழுப்புக் குவியலாய்க் கருதிக் தொடரும் காக்கை போலத் தீய உணர்வுகள் கவுதமரின் மனத்துக்குள் நுழைந்தன.

16. ஆங்கு இனிதொன்றம் காணாத காக்கை ஆங்கிருந்து விலகிச் சென்றது. இவ்வாறாக, பாறையோடு மோதிய காக்கையெனத் தீய உணர்வுகள் கவுதமரை விட்டு விரக்தியில் பறந்தன.

2. ஞானமெய்துதல்

1. தியான காலத்தில் உண்பதற்காக கவுதமர் நாற்பது நாட்களுக்குப் போதுமான உணவைச் சேகரித்து வைத்திருந்தார்.

2. தன் மனத்தைத் தொந்தரவு செய்த தீய எண்ணங்களைத் தொலைத்த பின் கவுதமர் உணவினால் தன்னைப் புத்துணர்வுறச் செய்துகொண்டு சக்தி பெற்றார். ஞானம் எய்தும் நோக்கோடு தியானிக்க இவ்வாறு தம்மைத் தயார்ப்படுத்திக் கொண்டார் அவர்.

3. ஞானம் எய்த கவுதமருக்கு நான்கு வார காலாமயிற்று. இறுதி ஞானத்தை அவர் நான்கு நிலைகளில் எய்தினார்.

4. முதல் நிலையில் காரணங்களிலும், விசாரணையிலும் கவனம் செலுத்தினார். அவர் தனிமை இதை எளிதில அடைய உதவியது.

5. இரண்டாம் நிலையில் மனத்தை ஒருமுகப்படுத்தலை இணைத்துக் கொண்டார்.

6. மூன்றாம் நிலையில் சாந்தத்தையும், மன விழிப்புணர்வையும் தனக்குத் துணையாய்க் கொணர்ந்தார்.

7. நான்காவது நிலையான இறுதிநிலையில், சாந்தத்தில் தூய்மையையும், மன விழிப்பில் சாந்தத்தையும் கூட்டினார் அவர்.

8. இவ்வாறாக ஒருமுகப்பட்ட, தூய, மாசற்ற, கறைநீங்கிய, இளகிய, திறன் வாய்ந்த, இறுகிய, பற்றற்ற, மனத்தோடு, தன் இலக்கில் மறவாதவராய், கவுதமர் தன்னைத் தொல்லைப்படுத்திய வினாவிற்கு விடைகாணும் பிரச்சினையில் ஆழ்ந்த ஒருமுகப்படுத்தப்பட்ட கவனம் செலுத்தியிருந்தார்.

9. நான்காம் வாரத்தின், இறுதி நாளிரவில் அவர் புத்தொளி உற்றார். பிரச்சினைகள் இரண்டேயென அவர் கண்டுணர்ந்தார். முதல் பிரச்சினையாவது உலகில் துக்கம் உண்டென்பது_இரண்டாவது பிரச்சினையாவது அத்துக்கத்தை எவ்வாறு களைந்து மானுடத்தை மகிழ்விப்பதென்பது.

10. இவ்வாறாக இறுதியில், நான்கு வாரத் தியானத்திற்குப் பின்.இருள் விலக்கப்பட்டது_ஒளி எழுந்தது. அறியாமை விலக்கப்பட்டது. அறிவு எழுந்தது. அவர் புதிய பாதையைக் கண்டார்.

### 3. புதிய தம்மத்தின் கண்டுபிடிப்பு

1. புத்தொளி பெறுவதற்காகக் கவுதமர் தியானத்தில் அமர்ந்த போது பெரிதும் சாங்கிய தத்துவத்தின் பிடியில் இருந்தார்.

2. உலகத் துன்பமும் துயரமும் மறுக்க முடியாத உண்மைகள் என எண்ணினார் அவர்.

3. எவ்வகையிலேனும் துக்கத்தைத் தீர்ப்பதெப்படியென அறிவதிலேயே கவுதமர் கவனமாயிருந்தார். சாங்கியத் தத்துவம் இப்பிரச்சினையில் ஈடுபடவில்லை.

4. எனவே இந்தப் பிரச்சினையில்தான்_அதாவது துன்பத்தையும் துயரத்தையும் நீக்குவதெப்படி என்பதில்தான் அவர் தன் மனதை ஒருமுகப்படுத்தினார்.

5. இயல்பாய் அவர் தமக்குள் எழுப்பிக் கொண்ட முதல் வினா இதுதான்_ஒரு தனிமனிதன் உறும் துன்பத்திற்கும் துயருக்கும் காரணம் யாது?

6. அவருடைய இரண்டாம் வினாவாவது "துயரை நீக்குவது எங்ஙனம்?"

7. இவ்விரு வினாக்களுக்கும் 'சம்மபோதி' (சரியான ஞானம்) என்றழைக்கப்படும் சரியான விடையொன்றை அவர் பெற்றார்.

8. இதனாலேயே அவ்வரசமரம் போதிமரம் என்று அறியப்படுவதாயிற்று.

4. போதிசத்வராயிருந்த கவுதமர் சம்மபோதிக்குப்பின் புத்தர் ஆனார்.

1. ஞானம் எய்துமுன் கவுதமர் போதிசத்வராக மட்டுமே இருந்தார். ஞானம் எய்தியபின் அவர் புத்தர் ஆனார்.

2. போதிசத்வர் என்றால் என்ன? யார்?

3. புத்தர் ஆக முனையும் ஒரு மனிதரே போதிசத்வர் ஆவார்.

4. போதிசத்வர் எப்படி புத்தராகிறார்?

5. ஒரு போதிசத்வர் தொடர்ச்சியாய் பத்து வாழ்வுகளில் போதிசத்வராய் இருந்தாக வேண்டும். புத்தராய் ஆவதற்குத் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ள போதிசத்வர் என்ன செய்தாக வேண்டும்.

6. தன் முதல் வாழ்வில் அவர் முதிதா (மகிழ்ச்சி) அடைகிறார். வெள்ளியிலிருந்து களிம்பைக் கொல்லர் நீக்குவது போலத் தன் மாசுகளப் போதிசத்வர் நீக்கிய பின், பற்றற்றும் அமைதியுற்றும், முகிலினின்று விடுபட்ட முழுமதிபோல் ஒளிரும் மனிதனாகப் பிரதிபலிக்கிறார். இதை அவர் உணர்வதில் அவர்க்குள் இன்பம் ஊற்றெடுக்க, எல்லா உயிர்கட்கும் நன்மை புரியும் தன்விருப்பில் அவர் ஆர்வம் மிக்கவராகிறார்.

7. தன் இரண்டாம் வாழ்வில் அவர் விமலா (தூய்மை) அடைகிறார். இப்போது போதிசத்வர் அவாவாகிய அனைத்து எண்ணங்களையும் நீத்தவர் ஆகிறார். அவர் கருணையுள்ளவர். அவர் அனைவரிடமும் கருணையுடையவர்; அவர் மனிதர்களின் குறைகளைப் பற்றிப் புறம்பேசுவதுமில்லை_குணங்களைக் குறைகூறுவதுமில்லை.

8. தன் மூன்றாம் வாழ்வில் அவர் பிரபாகரியை (பேரொளியை) அடைகிறார். இப்போது, போதிசத்வரின் அறிவாற்றல் கண்ணாடிபோல் பளபளப்பாகிறது. அநத்தா, அநிச்சா ஆகிய இரண்டின் உண்மைகளையும் முழுமையாய் அவர் அறிந்து பற்றுகிறார். பேரறிவொன்றே அவர் விருப்பாகி இதற்காக அவர் எதையும் தியாகம் செய்யத் தயாராகிறார்.

9. தன் நான்காம் வாழ்வில் அவர் அர்சிஷ்மதியை (அறிவுத் தீயை) அடைகிறார். இவ்வாழ்வில் போதிசத்வர் தன் மனத்தை, எண்குணப் பாதையிலும், நால்வகை ஆழ்சிந்தனைகளிலும்,

நால்வகைத் தர்க்கங்களிலும், நால்வகை மன உறுதியிலும், ஐவகை ஒழுக்க நெறிகளிலும் நிலைநிறுத்துகிறார்.

10. தன் ஐந்தாம் வாழ்வில் அவர் சுதுர்ஜெயத்தை (வெல்லற்கரியதை) அடைகிறார். சார்பு பொருளுக்கும் தனி முதற்பொருளுக்குமுள்ள தொடர்பை அவர் முழுமையாய் புரிந்து கொள்கிறார்.

11. தன் ஆறாம் வாழ்வில் அவர் அபிமுகி ஆகிறார். இந்நிலையில் போதிசத்வர் பொருள்களின் பரிணாமத்தையும், காரணத்தையும், பன்னிரண்டு நிதானங்களையும் முழுமையாகப் புரிந்து கொள்கிறார். அபிமுகி என அழைக்கப்படும் இந்தப் புரிதல், அவருடைய உள்ளத்தில் அவித்யையால் (அறியாமை) குருடாக்கப்பட்ட அனைத்து உயிர்களிடமும் மிக ஆழ்ந்த இரக்கத்தை விழிப்புறச் செய்கிறது.

12. தன் ஏழாவது வாழ்க்கையில் போதிசத்வர் துரங்கமா (நெடுந்தொலைவு ஏகல்) ஆகிறார், இப்போது போதிசத்வர் காலத்தையும், இடத்தையும் கடந்து விடுகிறார்; அவர் எல்லையற்றதோடு ஒன்றிவிடுகிறார்_எனினும் இன்னும் அனைத்து உயிர்களுக்கான தம் இரக்கத்தினால், தன் நாம ரூபத்தைத் தாங்குகிறார். அவர் பிறரிடமிருந்து விலகியும், உலக ஆசைகள் தாமரை மேல் தண்ணீராய் அவர் மேல் பட்டும் படாதிருக்கவுமாய் இருக்கிறார். தன் சக உயிர்களின் விருப்பங்களைத் தணிக்கிறார்: தானம், பொறுமை, சாதுரியம், சக்தி, அமைதியாதல், அறிவாற்றலுடைமை, உயர் பேரறிவு ஆகியவற்றை கைக்கொண்டொழுகுகிறார்.

13. இவ்வாழ்வில் இருக்கையில் அவர் தம்மத்தை அறிந்திருப்பினும், மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் புலப்படுத்துகிறார். தான் சாதுரியமாகவும் பொறுமையாகவும் இருத்தல் வேண்டுமென அறிந்திருக்கிறார். மனிதர்கள் ஏது செய்யினும் அவர் அமைதியுடன் சகித்துக் கொள்கிறார். ஏனெனில் தன் நோக்கங்களை அவர்கள் தம் அறியாமைக் காரணமாய்ப் புரிந்து கொள்வதில்லையென்பதை அவர் அறிந்திருக்கிறார். அதே நேரத்தில், அனைத்துயிர்களுக்கும் நன்மை செய்வதற்கான தன் ஆற்றலை எப்போதும் மட்டுப்படுத்திக் கொள்வதுமில்லை, எனவே வாய்ப்புகேடுகள் தன் நேரியப் பாதையினின்றும் எப்போதும் அவரை விலகச் செய்வதில்லை.

14. தன் எட்டாவது வாழ்வில் அவர் அசலா ஆகிறார். அசலா அல்லது 'சலனமற்றவர்' என்னும் இந்நிலையில், போதிசத்வரின் நிலைபாட்டில் அனைத்து முயற்சிகளும் நீக்கப்படுகின்றன. அவர் நல்லனவற்றைத் தன்னிச்சையாகத் தொடர்கிறார். அவர் செய்வன யாவற்றிலும் அவர் வெற்றி காண்கிறார்.

15. தன் ஒன்பதாம் வாழ்வில் அவர் சாதுமதி ஆகிறார். இந்நிலையில் அல்லது நிலைபடியில் அவர் அனைத்து தர்மங்களையும் அல்லது முறைகளையும் துறைகளையும் ஊடுருவியவராகவும், கடந்தவராகவும் காலத்திற்குள் கட்டுப்படாதவராகவும் இருக்கிறார்.

16. தன் பத்தாவது வாழ்வில் அவர் தர்மமேகா ஆகிறார் போதிசத்வர் எல்லையற்ற, பரிபூரண புத்தக் காட்சியை அடைகிறார்.

17. போதிசத்வர் தான் புத்தர் ஆகுங்கால், தனக்கு அவசியப்படும் இந்தப் பத்து ஆற்றல்களையும் அடைகிறார்.

18. படிப்படியாய்த் தான் பரிணமிக்கையில், போதிசத்வர் இந்தப் பத்துவித ஆற்றல்களை அடைந்தால் மட்டும் போதாது பத்து பாரமிதாங்களை முழுநிறைவாய்ச் செயற்படுத்தவும் வேண்டும்.

19. ஒவ்வொரு வாழ்வனுபவத்திற்கும் ஒரு பாரமிதா இலக்காய் இருக்கவேண்டும். பாரமிதாங்களில் தனித் திறன்பெறுதல் என்பது படிப்படியாய் நிகழ்தல் வேண்டும். ஒவ்வொரு வாழ்வனுபத்திலும் ஒரு பாரமிதா முழுமையுறும் _அங்கொன்றும், இங்கொன்றுமாய் அன்று.

20. எப்போது போதிசத்வர் இரட்டிப்பாய்த் தகுதி பெறுகிறாரோ அப்போதே அவர் புத்தர் ஆகிறார். போதிசத்வரின் வாழ்வில் புத்தராதல் உச்ச நிலையாகும்.

21. ஜாதகக் கோட்பாடு அல்லது போதிசத்வரின் பிறப்புப்படி நிலைகளின் கோட்பாடு என்பது அவதாரங்கள் பற்றிய பிராமணியக் கோட்பாட்டை ஒத்ததாகத் தோற்றமளிக்கிறது_ அதாவது கடவுள்களின் அவதாரக் கோட்பாட்டை ஒத்ததாக.

22. ஜாதகக் கோட்பாடு புத்தர் வாழ்வின் சாரமாகத் தூய்மையுறுதலின் உச்ச அளவை எய்துவதை அடிப்படையாகக் கொண்டது.

23. கடவுள் தன் உருவாக்கத்தில் தூயராயிருக்க வேண்டுமென்பது அவதாரக் கோட்பாட்டுக்கு அவசியமில்லை. அவதாரம் பற்றிய பிராமணியக் கோட்பாடு கூறுவதெல்லாம், கடவுள் மிகவும் மாசுடையவராயும் ஒழுக்கமற்ற செயற்பாடு உடையவராயும் அவதரித்துக் கூடத் தன்னைப் பின்பற்றுபவர்களைப் பாதுகாப்பார் என்பதேயாகும்.

24. புத்தராய் ஆவதற்கு முன் பத்து வாழ்வுகளில் போதிசத்வராய் இருந்தாக வேண்டுமென்னும் நிபந்தனையுடைய கோட்பாட்டுக்கு இணையானதொரு கோட்பாடு எங்கேனும் இல்லை. வேறு எந்தச் சமயமும் தன் நிறுவனர் இத்தனைச் சோதனைகளுக்குப் பதிலிறுக்க வேண்டுமெனக் கட்டாயப்படுத்துவதில்லை.

## புத்தரும் அவருக்கு முன்பிருந்தவர்களும்

### 1. புத்தரும் வேத ரிஷிகளும்

1. வேதங்கள் மந்திரங்களின் தொகுப்பாகும்_அதாவது வழிப்பாட்டுப் பாடல்கள் அல்லது பாராயணக்கீதங்கள். இந்த பாடல்களை இசைத்தவர்கள் ரிஷிகள் என வழங்கப்படுவர்.

2. மந்திரங்கள் என்பவை இந்திரன், வருணன், அக்னி,சோமன், ஈசானன், ப்ராஜாபதி, பிரம்மா, மஹித்தி, யமா போன்ற தேவர்களை வழிபடும் பாடல்களேயாகும்.

3. வழிபாட்டுப் பாடல்கள் பகைவர்க்கெதிரான உதவி கோரியும், செல்வம் வேண்டியும், உணவு, ஊண், மது போன்ற காணிக்கைகயை ஏற்கும்படி வேண்டுதல் விடுத்தும் பாடப்படும் பிராத்தனைக் கீதங்களேயாகும்.

4. வேதத்தில அதிகமாய்த் தத்துவம் எதுவும் இல்லை. ஆனால் சில வேத முனிவர்கள் தத்துவத் தன்மையுள்ள யூகங்களுக்குள் நுழைந்திருக்கிறார்கள்.

5. இவ்வாறான வேத முனிவர்கள் 1. அகமர்சனர் 2. பிரஜாபதி பரமேஸ்தினர் 3. பிராமணஸ்பதி அ&#

## புத்தரும் அவர் சமகாலத்தவரும்

### 1. அவருடைய சமகாலத்தவர்கள்

1 . கவுதமர் பரிவ்ராஜம் ஏற்ற பொழுது, நாட்டில் அறிவு பூர்வமான பெரிய சர்ச்சை ஒன்று இருந்தது. பிராமணீய தத்துவம் தவிர அறுபத்தி இரண்டு பிற தத்துவப் பிரிவுகள் வழக்கில் இருந்தன. அவையனைத்தும் பிராமணீயத்துவத்திற்கு எதிர்ப்பாய் இருந்தன. அவற்றில் குறைந்த பட்சம் ஆறேனும் நம் கவத்திற்கு உரியவையாய் உள்ளன.

2. இந்த தத்துப் பிரிவுகளில் ஒன்றனுக்கு புராண காஸ்யப்பர் தலைமை வகித்திருந்தார். அவருடைய கொள்கை அக்ரியவாதம் என்றழைக்கப்பட்டது. ஆன்மா கர்மாவினால் எவ்வகையிலும் பாதிக்கப்படுவதில்லை என்ற கருத்துடையவராயிருந்தார் அவர். ஒருவன் செயல் புரியலாம் _ அல்லது புரிவிக்கப்படலாம். ஒருவன் துன்பமிழைக்கலாம்_அல்லது கொல்லச் செய்விக்கலாம். ஒருவன் திருடவோ, கொள்ளையடிக்கவோ செய்யலாம்_அல்லது செய்விக்கலாம் _ ஒருவன் காமத்தவறிழைக்கலாம் அல்லது செய்விக்கலாம். ஒருவன் பொய் கூறுவிக்கலாம். இவை எதுவும் ஆன்மாவைப் பாதிப்பதில்லை. எத்தனை உரமுடையதாயினும் ஒரு செயல் ஆன்மாவைப் பாவத்தினால் களங்கப்படுத்துவதில்லை. ஒரு செயல் எத்தனை நன்மை பயப்பதாயினும் அது ஆன்மாவிற்கு பெருமை கொணர்வதில்லை. எக்கிரியையும் (விளைவும்) ஆன்மாவிற்கு உடையதன்று. ஒரு மனிதன் மரணமுறுகையில், அவனை உருவாக்கிய அனைத்து மூலங்களும் தங்களின் மூலத்தோடிணைகின்றன. ஆக உடலோ, ஆன்மாவோ மரணத்திற்குப் பின் உள்ளவையாயில்லை.

3. நியதிவாதம் என்றழைக்கப்படும் மற்றொரு தத்துவப்பிரிவு ஒன்றுள்ளது. அதன் தலைமைத் தத்துவவாதி மகாலி கோசலர் ஆவார். அவருடைய கொள்கை ஒரு வகையான அழிவுவாதம் அல்லது நிர்ணயவாதமாய் உள்ளது. ஒருவனாலும் ஒன்றையும் உருவாக்கவோ அழிக்கவோ இயலாது எனப் போதித்தார் அவர். விஷயங்கள் நிகழ்கின்றன. எவராலும் அவற்றை

நிகழ்விக்க இயலாது. எவராலும் துன்பத்தை நீக்க இயலாது, கூட்ட இயலாது, குறைக்கவும் இயலாது. ஒருவன் உலகில் அனுபவத்திற்குரிய தன் பங்கை அனுபவித்தே ஆகவேண்டும்.

4. மூன்றாவது தத்துவப் பிரிவு உச்சேதவாதம் என அழைக்கப்படுகிறது. அதன் தலைமைத் தத்துவபோதகர் அஜிதகேசகம்பளர் ஆவார். அவருடைய கொள்கை அழிவுவாதம் என அழைக்கப்படுகிறது, யஜ்ஞன்,ஹோமம் ஆகிய எவையுமில்லை என்றும் செயல்களில் பயன்கனிகள் அல்லது விளைவுகளாக ஆன்மா எதையும் இன்புற்றோ, துன்புற்றோ அனுபவிப்பதில்லை என்றும் அவர் போதித்தார். சொர்க்க மென்றோ, நரகமென்றோ ஏதுமில்லை மனிதன் உலகில் சில குறிப்பிட்ட துன்ப மூலங்களால் உருவாக்கப்பட்டுள்ளான். ஆன்மா அவற்றினின்று தப்பவே இயலாது, துன்பமோ, துயரமோ எதுவாயினம், இவ்வுலகில் அதனின்றும் தப்பிக்க ஆன்மாவால் இயலாது. இந்தத் துன்பமோ துயரமோ, தானே ஒர் முடிவுக்குவரும் வேறெந்த வழியிலம் அதற்கு முன் இஃது நேராது.

5. நான்காம் தத்துவப்பிரிவு அந்யோன்யவாதம் என்று அழைக்கப்படுகிறது. இத்தத்துவப்பிரிவின் தலைவர் பகுத கச்சாயனர் என்பராவார். ஒரு உயிரை உருவாக்குவது பிருத்வி, அபா, தேஜ், வாயு, சுகம், துக்கம் மற்றும் ஆன்மா ஆகிய ஏழு மூலகங்களால், உருவாக்கப்படுகின்றது என்று அவர் போதித்தார். ஒவ்வென்றம் தத்தமக்குள் சுதந்திரமானவை, ஒன்று பிறதொன்றை பாதிப்பதில்லை. அவை தம்மிருப்பானவை மற்றம் என்றுமிருப்பவை. அவற்றை எவையும் அழிக்க இயலாது. எவனேனும் ஒருவன் ஒரு மனிதனின் தலையைத் துண்டித்துவிடின் அவன் அவனைக்கொன்று விடுவதல்லை. நிகழ்வதெல்லாம் அந்த ஆயுதம் அந்த ஏழு மூலங்களுக்கிடை நுழைந்தது என்பதே.

6. சஞ்சய பேலபுத்ரர் அவர் சொந்த தத்துவப் பிரிவொன்றைக் கொண்டிருந்தார். அது, விக்ஷேபவாதம் என்றறியப்பட்ட ஒரு வகை அய்யவாதமாகும். அவர் வாதிட்டார்: "யாரேனம் என்னை சொர்க்கமுள்ளதா என வினவினால் நான் அவ்வாறிருப்பதாய் உணர்ந்தால் ஆமென உரைப்பபேன் ஆனால் சொர்க்கமில்லையென நான் உணர்வேனாயின் இல்லையென உரைப்பேன். மனித உயிர்கள் படைக்கப்பட்டனவா எனவும் நான் வினவப்பட்டால், மனிதன் அவனுடைய செயல்களுக்கான நற்செயல்களோ, தீச்செயல்களோ அவற்றுக்கான பயன்களை அனுபவிக்க வேண்டுமாயெனவும், ஆன்மா மரணத்துக்குப் பின்னும் வாழ்கிறதா என்றும் வினவப்படுவேனாயின், நான் இல்லையெனக் கூறுவேன், ஏனெனில், அவையில்லையென நான் எண்ணுகிறேன்". இவ்வாறுதான் சஞ்சய பேலபுத்ரர் அவருடைய கோட்பாட்டினைத் தொகுத்தார்.

7. ஆறாவது தத்துப் பிரிவு சதுர்யம்சம்வர்வாதம் என்றழைக்கப்படுகிறது. கவுதமர் ஒளி தேடிக் கொண்டிருந்த காலையில் வாழ்ந்திருந்தவரான நிகந்தநாதபுத்ரர் என்றும் அழைக்கப்பட்ட மஹாவீரரே இத்தத்துவப் பிரிவின் தலைவர் ஆவார். மஹாவீரர் ஆன்மா, கடந்த பிறவியிலும், இப்பிறவியிலும் இழைக்கும் தீயகர்மங்களுக்கேற்ப மறுப்பிறப்பினுக்குட்பட வேண்டுமெனப் போதித்தார். எனவே ஒருவன் தீமையைக் கடந்தாக வேண்டும் _ தபஸ்சர்யத்தினால், இப்பிறவியில் தீய கர்மங்களைப் புரிவதின்றும் தடுக்கப்பட

வேண்டுமாயின் சதுர்யம தர்மப்படி ஒழுக வேண்டுமென மஹாவீரர் விதித்தார். அதாவது நான்கு விதிகளைக் கொண்டொழுகுதல்:

1. கொல்லாமை,

2. களவாமை,

3. பொய்கூறாமை,

4. பிறர் பொருள் கவராமை மற்றம் ஒழுக்க நெறி நிற்றல்.

2. தன் சமகாலத்தவர்களிடம் அவர் கொண்ட அணுகுமுறை

1. புதிய தத்துவ ஞானிகளின் கொள்கைகளைப் புத்தர் ஒப்புக்கொள்ளவில்லை.

2. அவற்றில் ஏலாமை காரணமற்றதன்று. ஆவர் கூறினார்.

3. புராண காஸ்யப்பர் அல்லது பகுத கச்சாயனர் கோட்பாடு உண்மையாயின், பின் ஒருவன் எந்தத் தீமையையும், துன்பமிழைத்தலையும் புரியலாம். ஒருவன் எந்தச் சமூகப் பொறுப்புக்கும், சமூக விளைவுக்கும் ஆட்படாமலோயே, மற்றொருவனைக் கொல்லும் நிலைவரைக்கும் கூடச் செல்லலாம்.

4. மாகலிகோசலரின் கோட்பாடு உண்மையாயின், பின் மனிதன் ஊழின் அடிமையாகி விடுவான். அவன் விடுதலை எய்தவே இயலாது.

5. அஜித் கேசகம்பளரின் கோட்பாடு உண்மையாயின், பின் மனிதன் புரியவேண்டியவையாவும் உண்பதும், அருந்துவதும், இன்புறுவதுமே என்றாகிவிடும்..

6. சஞ்சய பேலபுத்ரரின் கோட்பாடு உண்மையாயின், பின் மனிதன் வாழ்க்கைக்குரிய உடன்பாடான தத்துவம் ஏதுமின்றியே அலைக்கழிய நேரும்.

7. நிகந்தநாதபுத்ரரின் கோட்பாடு உண்மையாயின், பின் வாழ்க்கை துறவுக்கும்,தபஸ்சர்யத்திற்கும் உட்பட்டதாகி அதாவது மனிதனின் உணர்வுகள், ஆசைகள், அபிலாஷைகள் ஆகியவற்றை இற்றுப்போகச் செய்யத்தக்கதாய் அமைந்து விடக்கூடும்.

8. இவ்வாறாகத் தத்துவஞானிகளால் சுட்டப்பட்ட பாதைகள் எதுவுமே புத்தரைக் கவரவில்லை. இவையாவும் உருப்படா மனிதரானோரின், உதவாதோரின், உய்வற்றோரின் சிந்தனைகள் என்றே அவர் எண்ணினார். எனவே அவர் வேறிடத்தில் ஒளிநாடத் தீர்மானித்தார்.

ஒப்புமையும் வேறுபாடும்

1. எவற்றை அவர் நிராகரித்தார்.

தத்துவம் மற்றும் சமயம் பற்றிய இக்கண்ணோட்டம் புத்தர் அவருடைய சாசனத்தை உருவாக்கிய காலத்தில், குறிப்பிட்ட சில கருத்துக்கள் மக்கள் மனத்தை இறுகப்பற்றியிருந்தன என்பதைக் காட்டுகின்றது. அவையாவன:

1. வேதங்கள் தவறற்றவை என்பதில் நம்பிக்கை

2. மோட்சம் அல்லது ஆன்மாவின் கடைத்தேற்றம், அதாவது மீண்டும் பிறவாமல் தவிர்ப்பது என்பதில் நம்பிக்கை.

3. விரும்பிய பலன் தருமெனக் கருதப்படும் சடங்குகள், கிரியைகள் மற்றும் யாகங்கள் ஆகியவை மோட்ச சாதனங்களாக இருக்கின்றன என்பதில் நம்பிக்கை.

4. சமூக அமைப்பின் இலட்சியமாக நால்வருணப் பிரிவைக்கொள்வதில் நம்பிக்கை.

5. படைப்புக் கர்த்தாவாக ஈஸ்வரரைக் கொள்வதிலும், பிரபஞ்ச அடிப்படைக் கோட்பாடாக பிராமணத்தைத் கொள்வதிலும் நம்பிக்கை.

6. ஆத்மாவில் நம்பிக்கை.

7. சன்சாரத்தில் (கூடித்திரிதலில்) நம்பிக்கை அதாவது ஆன்மாக்களின் கூடு விட்டு கூடு பாய்தலில்.

8. கர்மத்தில் நம்பிக்கை அதாவது ஒரு மனிதனின் தற்போதைய வாழ்நிலை அவனுடைய முன்ஜென்மத்தின் அவன் செய்த செயல்களால் நிர்ணயிக்கப்படுவதாய்க் கொள்வதில் நம்பிக்கை.

தன் சாசனத்திற்கான அடிப்படைக் கோட்பாடுகளை உருவாக்குகையில், புத்தர் இந்த பழங்கருத்துக் குவியல்களைத் தன் சொந்த வழியில் பரிசீலித்தார்.

கீழ்கண்ட கருத்துக்கள் அவரால் நிராகரிக்கப்பட்டன.

2. எவற்றை அவர் புதுப்பித்தார்.

- அவர் மாபெரும் சிறந்த தத்துவ விதியான காரணகாரிய விதியை அதன் துணை முடிபுகளோடு ஒப்புக்கொண்டார்.

- அவர் வாழ்க்கை பற்றிய அழிவார்ந்த ஊழ்விதிப்பார்வையையும், அதற்கிணையான அறியாமையுடைய, மனிதனுக்கும் உலகுக்கும் நேரப்போவதைக் கடவுள் முன்முடிவு செய்து வைத்திருக்கிறார் என்ற பார்வையையும் மதிக்காமல் ஒதுக்கினார்.

- சென்ற பிறவியெதனிலோ செய்யப்பட்ட செயல்கள் சக்தியுடன் இருந்து துன்பமுண்டாக்கி இப்பிறவியைச் சக்தியற்றுச் செயலற்றதாய் ஆக்குகிறது என்னும் கொள்கையை அவர் ஒதுக்கித் தள்ளினார். கர்மா என்னும் அழிவார்ந்த தத்துவப்பார்வையை அவர் மறுத்தார். கர்ம தத்துவத்தைத் தன் புதிய விஞ்ஞானப் பார்வையுடைய புதிய கர்ம (கம்மா) தத்துவத்தால் இடம் பெயரச் செய்தார். பழைய மொந்தையில் புதுமது பொழிந்தார்.

- கூடுவிட்டுக் கூடு பாய்தல் (சன்சாரா) புதுப் பிறப்புக் கோட்பாட்டால் மாற்றியமைக்கப்பட்டது.

- ஆன்மாவின் மோட்சம் அல்லது முக்திக் கோட்பாடு நிப்பானக் கோட்பாட்டால் மாற்றியமைக்கப்பட்டது.

இவ்வாறாக புத்தசாசனம் மூலதத்துவமாயுள்ளது. அதிலுள்ள சிறிதளவு பழங்கருத்துக்களும் மாற்றப்பட்டுள்ளன அல்லது புதியதாக்கி உரைக்கப்பட்டன.

3. எவற்றை அவர் ஏற்றார்

1. அவருடைய போதனைகளின் தனிச் சிறப்பான முக்கிய அம்சம் அனைத்துக்கும் நடுநாயகமாய் மனத்தை அங்கீகரித்ததில் உள்ளது.

2. மனம் பொருள்களுக்கு முந்தியது, அவற்றை ஆள்கிறது, படைக்கிறது. மனம் அறியப்பட்டால் அனைத்தும் அறியப்படுகின்றன.

3. மனம் அதன் செயல்திறன் அனைத்துக்கும் தலைமையானது. மனம் அதன் செயல்திறன் அனைத்துக்கும் முதன்மையானது. அந்தச் செயல்திறன்களாலானதே அந்த மனமாயுள்ளது.

4. முதலில் கவனிக்கப்பட வேண்டியது மனத்தைப் பண்படுத்துதலே.

5. அவருடைய போதனைகளின் தனிச்சிறப்பான முக்கிய அம்சங்களில் இரண்டாவது, அகத்து எழுகின்ற மற்றம் புறத்திருந்து நம்மேல் வந்து விழுகின்ற எல்லா நன்மைகளுக்கும் தீமைகளுக்கும் மனமே ஊற்றுக்கண்.

6. தீமையாய் உள்ளவையாவும், தீமையோடிணைக்கப்பட்டுள்ள யாவும், தீமைக்குரிய யாவும்_ மனத்தினின்று தோன்றுபவையே, நன்மையாய் உள்ளவையாவும், நன்மையோடிணைக்கப்பட்டுள்ள யாவும், நன்மைக்குரிய யாவும்_ மனத்தினின்று தோன்றுபவையே.

7. மனத்தின் இச்சைக்குட்பட்டு ஒருவன் பேசினாலோ, செயற்பட்டாலோ, வண்டியிழுக்கும் காளைகளின் பாதங்களைத் தொடரும் வண்டியைப் போல பேரிடர் அவனைத் தொடர்கிறது. எனவே மனத்தின் மாசறுத்தலே சமயத்தின் சாரம்.

8. அவருடைய போதனைகளின் தனிச்சிறப்பான முக்கிய அம்சங்களில் மூன்றாவது, தீச்செயல்களைத் தவிர்த்தல்.

9. அவருடைய போதனைகளின் தனிச்சிறப்பான முக்கிய அம்சங்களில் நான்காவது, உண்மைச் சமயம் மத நூல்களில் இல்லை_மாறாகச் சமயக் கோட்பாடுகளை அனுசரித்தலிலேயே உள்ளதென்பது.

10. புத்தரின் சமயம் அவருடைய சொந்தப் படைப்பல்ல என்று எவரேனும் கூற முடியுமா?

சமயமாற்றச் செயல்பாடுகள்

புத்தரும் அவர்தம் விஷாத யோகமும்

1. போதிப்பதா போதிக்காதிருப்பதா.

1. நிறைவுறு பேரறிவெய்திய பின்னரும், தன் வழியை வகுத்த பின்னரும் புத்தரின் மனத்தில் அய்யமெழுந்தது. அவர்தம் கொள்கையைப் போதிக்கச் செல்வதா அல்லது தம் சொந்த நிறைவுறுதலுக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதா?

2. அவர் தமக்குத் தாமே கூறிக் கொண்டார் "நான் ஒரு புதிய கொள்கையைப் பெற்றிருப்பது உண்மைதான். ஆனால் இதனை ஏற்றுக் கொள்வதும், பின்பற்றுவதும் சாதாரண மனிதருக்கு மிகவும் கடினமானதாகும். கூர்த்தமதியினரான அறிவாளிக்கும் அவ்வாறே."

3. கடவுள், ஆன்மா ஆகிய கட்டுக்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வது மனித குலத்திற்கு கடினமாகும். சடங்குகள் சம்பிரதாய நம்பிக்கைகளைக் கைவிடுவது மனித குலத்திற்குக் கடினமாகும். கர்மவினைகளிலான நம்பிக்கைகளைக் கைவிடுதல் மனிதக் குலத்திற்கு கடினமாகும்.

4. ஆன்மாவின் அழியாத் தன்மையின் பாலுள்ள நம்பிக்கையைக் கைவிடுதலும் ஆன்மா என்னும் தனியொரு பொருள் இருப்பில் இல்லையென்றும் கூறும் என் கொள்கையை ஏற்பது மனிதகுலத்திற்குக் கடினமாகும்.

5. மனிதகுலம் தன்னுடைய தன்னலத்தை விழைவதாகவும், அதில் மகிழ்வும் இன்பமும் காண்பதாகவும் உள்ளது. என்னுடைய கொள்கையான தன்னலத்தை நேர்மையால் வெல்லுதலை மனிதகுலம் ஏற்பது கடினமாகும்.

6. நான் என் கொள்கையைப் போதிப்பதிலிருந்து, அதை மற்றவர்கள் புரிந்து கொள்ளாவிடின்,அல்லது அதைப் புரிந்து கொண்டும் ஏற்காவிடின், அது பிறரைக் கப்புறச் செய்வதாகவும் என்னை விரக்தியுறச் செய்வதாகவும் ஆகிவிடும்.

7. உலகத்தினின்று ஒதுங்கிய சந்நியாசியாகவே இருந்து என்னை நானே நிறைவுடையவனாக்கிக் கெள்ள என்கோட்பாட்டைப் பயன்படுத்தினால் என்ன? அவர் தமக்குத் தாமே கேட்டுக் கொண்டார். "குறைந்தபட்சம் எனக்காவது நான் நன்மைசெய்து கொள்ள முடியுமல்லவா".

8. இவ்வாறாக அவர் சிந்திக்கவும், அவர் மனம் செயலறு நிலைக்குத் திரும்பியது_கொள்கையை போதிப்பதில்லையென்று.

9. அப்போது புத்தரின் மனத்திலெழும் எண்ணத்தை யாதென அறிந்த பிரம்ப சஹம்பதி எண்ணினார்: "நிறைவுறு பேரறிவெய்திய ததாகதர் செயலறு நிலைக்குத் திரும்பி அவர் தம் கொள்கையைப் போதிக்காமல் இருப்பாராயின் உண்மையில் உலகம் அழிந்து கொண்டுள்ளது_உண்மையில் உலகம் அழியப்போகிறது."

10. ஆதங்கத்தால் நிரம்பிய பிரம்ம சஹம்பதி தம் பிரம்ம நிலையத்தை விட்டு நீங்கி புத்தரின் முன்வந்து தோன்றினார். தன் மேலங்கியை ஒரு தோளில் சரிசெய்தவாறே பணிந்து கூப்பியக் கரங்களுடன் கூறினார். "தாங்கள் இனி சித்தார்த்த கவுதமரில்லை. தாங்கள் புத்தராய் உள்ளீர்கள், தாங்கள் நிறைவுறு உயர்பேரறிவெய்திய பேரறிவாளர் ஆவிர். தாங்கள் ததாகதராய் உள்ளீர். உலகத்தை உய்விக்கத் தாங்கள் எப்படி மறுக்க முடியும்? தவறிழைக்கும் மனித குலத்தைத் திருத்திக்காக்க முடியாதெனத் தாங்கள் எப்படி மறுக்க முடியும்?"

11. "மாசு மிகுந்த உயிர்கள் தங்கள் கொள்கையைக் கேளாமல் வீழ்ந்து கொண்டுள்ளன."

12. அய்யன்மீர் அறிந்துள்ளது போல், மகதர்கள் இடையே பண்டைக் காலத்தில் மாசுளதத்துவங்கள், குற்றங்கள் மிகுந்தனவாய் மலிந்துவிட்டுள்ளன.

13. புத்தர் அவர்களுக்காகத் தம் அழியாத தத்துவக் கதவுகளை திறக்கலாகாதா?

14. கல்மலைமீது நிற்கும் ஒருவர், கீழுள மக்களை நோக்குமாப் போலே, ஓ! தாங்கள், தூயனவாம் தங்கள் பேரறிவோடும், முன்னேற்றத்தோடும், கீழுள மாந்தராம், துன்புறவோரை, துன்பத்தில் தோய்ந்திருப்போரைக் காணலாகாதா?

15. ஓ! நாயகரே! வெற்றிவாகைச் சூடியவரே! தத்துவத் தேரோட்டத் தளபதியே! எழுமின்! பிறவிப் பெருங்கடல் கடந்தவரே! உலகோரிடம் செல்லுமின்! அவர்களிடமிருந்து ஒதுங்காதீர்!

16. தம் பெருங்கருணையால், அய்யன்மீர் தாங்கள் மனிதருக்கும், சான்றோருக்கும் தங்கள் அறவுரைகள் போதிக்க ஆயத்தமாவீராக!

17. ஓ! பிரம்மரே! மாந்தர்க்குள் அறிவோரே! ஆற்றலுற்றவரே! நான் என் கொள்கையைப் பொதுவாக்காமையின் காரணம் யாதெனில் நான் விரக்தியை முன்நோக்கியதால் தான் என்பதே புத்தரின் பதிலாக இருந்தது.

18. உலகெங்கனும் துன்பதே மலிந்திருப்பதை அறிந்துள்ள புத்தர், ஒரு சந்நியாசியாய், கைகட்டி அமர்ந்து நடப்பவை நடக்கட்டுமென்று இருப்பது தமக்குத் தவறென உணர்ந்தார்.

19. தவநிலை வீணானதென்று அவர் கண்டிருந்தார். உலகினின்று தப்பியோட முனைதல் தவறாகம். ஒரு தவசிக்கும் கூட உலகை விட்டுத் தப்பித்ல் என்பது சாத்தியமில்லை. உலகினின்று தப்பிப்பது அவசியமில்லை என்று உணர்ந்தார். அவசியமானது எதுவெனில் உலகை மாற்றுவதும் அதனைச் சிறப்புறச் செய்வதுமேயாகும்.

20. அவர் உலகை விட்டு வந்ததே ஏனெனில், ஆங்கு மிகுந்த முரண்களும், அவற்றின் விளைவாய்த் துன்பங்களும், மகிழ்ச்சியின்மையும் இருந்தமையால்தான் இதற்கான மருத்துவத்தை அப்போது அவர் அறிந்திருக்கவில்லையென்பதை அவர் உணர்ந்தார். அவர் உலகத்தினின்று துன்பத்தையும் துயரத்தையும், தம் கொள்கையைப் பரப்புவதால் விரட்ட முடியுமாயின், உலகிற்குத் திரும்புவதும், அதற்குச் சேவை புரிவதும் தான் அவர் தம் கடமையே தவிர அமைதியாய் அமர்ந்திரந்து செயலற்ற நிலையின் வடிவமாயிருப்பதன்று.

21. எனவே புத்தர் பிரம்ம சஹம்பதியின் வேண்டுகோளுக்கு ஒப்புதலளித்துத் தம் கொள்கையை உலகுக்குப் போதிக்கமுடிவு செய்தார்.

## 2. பிரம்ம சஹம்பதி செய்த நற்செய்திப் பிரகடனம்

1. அதன்பின் பிரம்ம சஹம்பதி, வெகுமக்களுக்கு தம் கொள்கைகளைப் போதிப்பதற்குப் புத்தர் ஒப்புக் கொள்ளம் படி வற்புறுத்துவதற்கு நானொரு கருவியாயிருந்தேன் என்று எண்ணி பெருமகிழச்சியுற்றார். அவர் புத்தரை வணங்கி, வலம் வந்து, நோக்கி விடைபெற்றார்.

2. அவர் திரும்புகையில் உலகுக்கு அறிவித்தார்: மகிழ்ச்சி அலை வருகிறது! மாந்தி மகிழுங்கள்! நம் தலைவராம் புத்தர் உலகத் துன்பமனைத்திற்குமான ஊற்றுக் கண்ணைக் கண்டுபிடித்து விட்டார். வெளிப்படும் வழியையும் அவர் அறிவார்.

3. இளைத்தோருக்கம், துயருற்றோருக்கும் புத்தர் ஆறுதல் கொணர்வார். போரினால் தாக்குற்றோருக்கு அவர் பூரண அமைதி பொலிவிப்பார். உடைந்த உள்ளத்தினர்க்கு அவர் ஊக்கம் அளிப்பார். அடக்கப்பட்டோருக்கும் ஒடுக்கப்பட்டோருக்கும் அவர் நம்பிக்கையும் நல்லூக்கமும் அளிப்பார்.

4. வாழ்வின் இடுக்கண்களால் வாட்டமுற்றிருப்போரே! சுமைதாங்கிச் சோர்ந்து போராட நேர்ந்தோரே! நீதிக்காக வேட்கையுற்றுக் கிட்போரே! மகிழ்வலை வருகிறது! மாந்திக்களிப்பீராக!

5. காயப்பட்டோரே! தங்கள் காயங்களை ஆற்றிக் கொள்ளங்கள். பசித்திருப்போரே! பூரணமாய்ப் புசிப்பீராக! களைத்திருப்போரே! ஓய்வுறுவீராக! தாகத்தில் தவிப்போரே! தாகம் தணிவீராக! இருளில் உள்ளோரே! ஒளி தேடுவீராக! துயருற்றுக் கிடப்போரே! நன்மகிழ்வு கொள்வீராக!

6. சொந்த பந்தமற்றுச் சோர்ந்தோர்க்குச் சொந்தங்கள்பால் விருப்புண்டாக்கும் அன்பு அவர் கொள்கையில் உண்டு. வீழ்ச்சியுற்றோரை எழுப்பிவிடும் ஆற்றல் ஆங்குண்டு. உரிமையற்றுப் போனோர்க்கும், வீழ்ந்துபட்டோர்க்கும் அவர்தம் முன்னேற்றத்திற்கான சமத்துவம் ஆங்கு தகித்துக் கொண்டுள்ளது.

7. அவர் தத்துவம் நேர்மையின் தத்துவம். அவர் நோக்கம் புவியில் நேர்மையின் ஆட்சியை நிலை நிறுத்துவதேயாகும்.

8. அவர்தம் தத்துவம் உண்மையானது – முழுஉண்மையானது - உண்மையைத்தவிரவேறேதுமன்று.

9. அவர்தம் பாதை அறிவுப்பாதையாதலாலும், அவர்தம் பாதை மூடநம்பிக்கைகளிலிருந்து விடுவிக்கும் பாதையாதலாலும், புத்தர் உயர்வெய்தியவராவார். நடுவுநிலை நெறியைப் புத்தர் போதிப்பதால் அவர் உயர்வெய்தியவராவார். நேரிய நன்னெறி விதிகளைப் போதிப்பதால் புத்தர் உயர்வெய்தியவராவார். நிப்பான அமைதியைப் போதிப்பதால் புத்தர் உயர்வெய்தியவராவார். அன்பை, கருணையை, உடன் வாழும் உயிர்களிடம் சமத்துவத் தோழமையை விடுதலைப் பெறும் வழியாகப் போதிப்பதால் புத்தர் உயர்வெய்தியவராவார்.

### 3. இருவகை சமயமாற்றங்கள்.

1. புத்தரின் செயல் திட்டங்களில் சமயமாற்றம் இரு பொருளுடையதாகும்.

2. சங்கமென்றழைக்கப்பட்ட பிக்குகளின் முறைமைக்கு மாற்றுதல்.

3. இரண்டாவதாக, ஒரு இல்லறத்தாரை உபாசகராகவோ, அதாவது இல்லறத்திலிருந்து கொண்டு புத்தரின் தம்மத்தைப் பின்பற்றுபவராகவோ சமய மாற்றம் செய்தல்.

4. நான்கு செய்திகளைத் தவிர பிக்குவின் வாழ்முறைக்கும் உபாசகரின் வாழ்முறைக்கும் வேறுபாடு ஏதுமில்லை.

5. ஒரு உபாசகர் இல்லறத்தாராக இருக்கிறார். ஒரு பிக்கு இல்லமற்ற துறவியாயிருக்கிறார்.

6. ஒரு உபாசகரும், பிக்குவும் ஆகிய இருவரும் தம் வாழ்வில் சில விதிகளைக் கடைபிடிக்க வேண்டும்.

7. மேலும் ஈண்டு பிக்குவிற்கு அவைகள் உறுதிப்பாடுகளாயுள்ளன_அவற்றை மீறுதல் தண்டனையில் முடியும். உபாசகர்க்கு அவை போதனைகள், அவரால் இயன்றவரை அவர் அவற்க் கடைபிடிக்க வேண்டும்.

8. உபாசகர் சொத்துடையவராயிருக்கலாம். பிக்கு அவ்வாறு இருக்கக்கூடாது.

9. ஒருஉபாசகராவதற்குச்செய்முறைகள்ஏதுமில்லை.

10. ஒரு பிக்குவாவதற்கு அவர் உபசம்பதா என்னும் செய்முறைக்குட்படவேண்டும்.

11. புத்தர், தம்மிடம் வந்தோரை, அவர்கள் தம் விருப்பத்திற்கேற்ப பிக்குகளாகவோ, உபாசகர்களாகவே சமய மாற்றம் செய்தார்.

12. ஒரு உபாசகர், தாம் அவ்வாறு விரும்புகையில் பிக்குவாகலாம்.

13. முதன்மையான உறுதிப்பாடுகளை மீறுகிற செயல்களைச் செய்யும் போது ஒரு பிக்கு, பிக்குவல்லாதவராகிவிடுகிறார் அல்லது அவர் சங்க உறுப்பினர் தன்மையைக் கைவிட்டுவிட விரும்புகிறபோது பிக்குவல்லாதவராகி விடுகிறார்.

14. பின் வரும் பக்கங்களில் பெயர் காணப்படும் நபர்களை மட்டுமே புத்தர் சமயமாற்றம் செய்தாரெனப் புரிந்து கொள்ளக் கூடாது.

15. அவர் தமது சங்கத்திற்குள் மனிதர்களைச் சேர்க்கவும்,தமது தம்மத்தைப் போதிக்கவும், சாதிபேதம், பால்பேதம் ஆகியவற்றைப் பார்க்கவில்லை என்பதைக் காட்டுதற்குப் போதிய அளவு நிகழ்ச்சிகளே தெரிவு செய்யப்பட்டுள்ளன.

## வளமானோர் மற்றும் சான்றோர்களின் சமயமாற்றம்

### 1. யச்சனின் சமயமாற்றம்.

1. ஆங்கு பெனாரஸ் நகரில் யச்சன் என்ற பெயருடைய பிரபுமகன் ஒருவன் வசித்து வந்தான். அவன் வயதில் இளையவனாய் வனப்பில் சிறந்தவனாய் விளங்கினான். அவன் பெற்றோர்க்கு மிகவும் செல்லமானவன். அவன் பெருஞ்செல்வத்தில் திளைத்தவன். சேவைபுரிய பெரும் பரிவாரமும். அந்தரங்கம் நிறைய அழகியர் பட்டாளமும் உடையவனாய் ஆடல்பாடலிலும், மது மற்றும் கேளிக்கைகளிலும் திளைத்துத் தன் காலத்தைக் கடத்தி வந்தான்.

2. காலம் செல்ல செல்ல ஒரு விரக்தி உணர்வு அவனுக்கு மேலிட்டது. இந்தக் காமக்களியாட்டத்திலிருந்து அவன் எப்படித் தப்பிப்பது? அவன் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்முறையைவிடச் சிறந்ததான வேறொரு வாழ்முறையேதேனும் உண்டா? செய்வதறியாத அவன் தன் தந்தையின் வீட்டை விட்டு வெளியேறத் தீர்மானித்தான்.

3. ஒரு நாள் அவன் தன் தந்தையின் வீட்டைவிட்டு வெளியேறி அங்குமிங்கும் சுற்றிவரலானான். அவன் இசிபதனத்தை நோக்கிச் செல்ல நேர்ந்தது.

4. களைப்பையுணர்ந்த அவன் ஓரிடத்தில் அமர்ந்து தனக்குள் உரக்கக் கூறிக் கொண்டான். 'நான் எங்கிருக்கிறேன்?எது என் வழி? அய்யோ! எத்தனை துன்பம்! அய்யோ! எத்தனை அபாயம்!

5. இசிபட்னாவில் பஞ்சவர்கிய பிக்குகளுக்கு உயர்வெய்திய புத்தர் தமது முதற் பேருரையை நிகழ்த்திய அன்றைக்கு இரவே இது நடந்தது. யச்சன் இசிபட்னாவை நெருங்கிய நேரத்தில் உயர்வெய்திய புத்தர், இசிபட்னாவில் தங்கியிருந்தார். அவர் விடியலில் எழுந்து வெட்ட வெளியில் உலவிக் கொண்டிருந்தார். உயர்வெய்திய புத்தர், பிரபுக்குல இளைஞனான யச்சன், தன் உணர்வுகளை உரக்க வெளிப்படுத்திய பின் ஆங்கு வருவதைக் கண்டார்.

6. உயர்வெய்திய புத்தர் அவன் துன்பத்தில் அலறியதைக் கேட்டுக் கூறினார்: "ஈண்டு துன்பமில்லை; ஈண்டு அபாயம் ஏதுமில்லை. வா! நான் வழிகாட்டுகிறேன்." இவ்வாறுரைத்த உயர்வெய்திய புத்தர் தம் போதனைகளை யச்சனுக்குப் போதித்தார்.

7. அவற்றைக் கேட்டபோது யச்சன் இன்பமும் மகிழ்வுமுற்றான். தன் ஆடம்பரக் காலணிகளை அகற்றிவிட்டுச் சென்று, உயர்வெய்திய புத்தருக்கருகே பணிவுடன் அமர்ந்து வணங்கினான்.

8. புத்தரின் உரையைக் கேட்ட யச்சன் உயர்வெய்திய புத்தரிடம், தன்னை அவர்தம் சீடராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான்.

9. அதன் பின் புத்தர் அவனை ஒரு பிக்குவாகும்படி ஆணையிட்டார்_அதற்கு யச்சன் ஒப்புக் கொண்டான்.

10. தம்முடைய மகன் காணாமற் போனமையைக் கண்ட யச்சனின் பெற்றோர்கள் பெருந்துன்பத்திற்காளாயினர், தந்தை தேடுதலைத் தொடங்கினார். யச்சனின் தந்தை, புத்தரும் பிக்கு உடையிலிருந்த யச்சனும் அமர்ந்திருந்த அதே இடத்தைக் கடந்து சென்றார். கடந்து செல்கையில் அவர் உயர்வெய்திய புத்தரை வினவினார்: ஐயன்மீர்! தாங்கள் என் மகன் யச்சனைக் கண்டீர்களா?"

11. புத்தர் பதிலிறுத்தார்: "அய்யா! வாருங்கள்! ஈண்டு உங்கள் மகனைக் காண்பீர்கள்." அவர் உள்ளே வந்து, அவருடைய மகனுக்கு அருகிலேயே அமர்ந்தாரெனினும், அவனை அறியாதவராயிருந்தார்.

12. புத்தர், யச்சன் தம்மை எப்படிச் சந்தித்தானென்றும், அவருரையைக் கேட்டு எப்படி பிக்குவானானென்றும் அவருக்கு விளக்கினார். அதன்பின் தந்தை தம்மகனை அடையாளம் கண்டு கொண்டு, தன்மகன் சரியான பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டமைக்காக மிகவும் மகிழ்ந்தார்.

13. தந்தை கூறினார் "என் மனனே யச்சா! உன் தாய் மிகுந்த துயரத்திலும் வேதனையிலும் மூழகியுள்ளாள். வீட்டிற்குத் திரும்பி உன் தாயைத் தேற்றுவாயாக."

14. அப்போது யச்சன் உயர்வெய்திய புத்தரை நோக்கவும், உயர்வெய்திய புத்தர் யச்சனின் தந்தையிடம் வினவினார்: "யச்சன் மீண்டும் உலகியலுக்குத் திரும்பி உலகியல் வாழ்வின் இன்பங்களை முன்புபோல் அனுபவிக்க வேண்டுமென்பது தங்கள் விருப்பமா?"

15. அதற்கு யச்சனின் தந்தை பதிலிறுத்தார்: "என் மகன் யச்சன் தங்களுடன் இருப்பது தனக்கு நன்றெனக் கருதுவானாயின் அப்படியே இருக்கட்டும்." யச்சன் பிக்குவாக இருக்கவே விழைந்தான்.

16. விடைபெற்றுச் செல்லுமுன் தந்தை கூறினார்: "உயர்வெய்திய புத்தராகிய ஐயன்மீர் என் இல்லத்தற்கு வந்துற்று என் குடும்பத்தாருடன் உணவருந்த ஒப்புக்கொள்ள வேண்டும்."

17. உயர்வெய்திய புத்தர், துவராடை அணிந்து தானமேற்கும் கலயத்தைக் கையேந்தி யச்சனுடன் அவனுடைய தந்தையின் இல்லத்திற்குச் சென்றார்.

18. ஆங்கு அவர்கள் வந்துற்று, யச்சனின் தாயையும், முன்ர் மனைவியாயிருந்தவரையும் சந்தித்தனர். உணபுக்குப் பின் உயர்வெய்திய புத்தர் குடும்பத்தவர்க்குத் தன்கொள்கையைப் போதித்தார். அவர்கள் மிகவும் மகிழ்வுற்று அதில் அடைக்கலம் புகுவதாக உறுதிகூறினர்.

19. அப்போது யச்சனுக்கு பெனாரஸின் செல்வளமிக்க குடும்பங்களைச் சார்ந்த நான்கு நண்பர்கள் இருந்தனர். அவர்களின் பெயர்கள் விமலன், சுபாஹு, புன்யஜித் மற்றும் கவம்பதி ஆகியனவாகும்.

20. யச்சனின் நண்பர்கள், யச்சன் புத்தரிடமும் அவருடைய தம்மத்திடமும் அடைக்கலம் புகுந்ததைக் கேள்வியுற்று, யச்சனுக்கு எது நன்மையாயுள்ளதோ, அது தமக்கும் நன்மையாகவே இருக்குமென உணர்நத்தனர்.

21. எனவே அவர்கள் யச்சனிடம் சென்று, அவர்கள் சார்பாக புத்தரை அணுகித் தம்மையும் அவருடைய சீடர்களாக ஏற்கச் செய்யும்படி வேண்டினார்.

22. யசன் ஒப்புக் கொண்டு புத்தரிடம் சென்று உரைத்தான். "உயர்வெய்திய புத்தர் என்னுடைய நண்பர்களான இந்நால்வருக்கும் தம்மத்தைப் போதிக்க வேண்டும்." புத்தர் ஒப்புக் கொண்டார். யசனின் நண்பர்கள் தம்மத்தில் அடைக்கலம் புகுந்தனர்.

2. காஸ்யபர்களின் சமயமாற்றம்

1. ஆங்கு பெனாரஸில் காச்யபர்கள் என்று அறியப்பட்ட ஒரு குடும்பம் வசித்து வந்தது. அக்குடும்பத்தில் மூன்று பிள்ளைகள் இருந்தன்ர். அவர்கள் மிக நன்கு கற்றவர்களாகவும், கடுமையான மதவாழ்முறையைப் பின்பற்றுபவர்களாகவும் இருந்தனர்.

2. சில காலம் கழித்து, மூத்த மகன் சந்நியாசம் ஏற்றுக் கொள்ள எண்ணினான். அதன்படி அவன் இல்லத்தைத் துறந்து, சந்நியாசம் ஏற்று, உருவெல்ல நகரை நோக்கிச் சென்று ஆங்கு தன்னுடைய ஆசிரமத்தை நிறுவினான்.

3. அவனுடைய இரு இளைய சோதரர்களும் அவனைப் பின்பற்றி, அவர்களும் சந்நியாசகள் ஆயினர்.

4. அவர்கள் அனைவரும் அக்னிஹோத்ரிகள்_அதாவது தீயை வணங்குபவர்கள்- அவர்கள் ஜதிலர்கள் என அழைக்கப்பட்டனர்_ஏனெனில் அவர்கள் நீண்ட சடைமுடியுடையவர்களாய் இருந்தனர்.

5. அந்த மூன்று சகோதரர்கள் உருவெல்ல காச்யபர், நதி காச்யபர் (நிரஞ்சனை ஆற்று) மற்றும் கயா காச்யபர் (கயா கிராமத்தவர்) என்று வழங்கப்பட்டனர்.

6. இவர்களில் உருவெல்ல காச்யபா ஐந்நூறு ஜதிலர்களையுடையவராயிருந்தார்; நதிகாச்யபர் முந்நூறு ஜதிலர்களையுடையவராயிருந்தார்; கயா காச்யபருக்கு இருநூறு ஜதிலர்கள் சீடராயிருந்தனர். இவர்களில் உருவெல்ல காச்யபரே தலைமையானவர்.

7. உருவெல்ல காச்யபரின் புகழ் அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியிருந்தது. அவர் ஜீவனுடனேயே முக்தியடைந்தவரென அறியப்பட்டிருந்தார். தூரத்திலிருந்தெல்லாம் மக்கள் பால்கு நதிக்கரையில் வீற்றிருந்த அவருடைய ஆசிரமத்திற்கு வந்தனர்.

8. உருவெல்ல காச்யபரின் பேரையும், புகழையும் கேள்வியுற்ற உயர்வெய்திய புத்தர், தம்முடைய தத்துவத்தை அவருக்குப் போதிக்கவும், இயன்றால் அவரைச் சமயமாற்றமுறச்செய்யவும் எண்ணினார்.

9. அவருடைய இருப்பிடத்தைக் கேட்டறிந்த உயர்வெய்திய புத்த்ர் உருவெல்லரிடம் சென்றார்.

10. உயர்வெய்திய புத்தர் அவரைச் சந்தித்து அவருக்குப் போதித்துச் சமயமாற்றமுறச் செய்யக் கருதி உரைத்தார். "தங்களுக்கு ஆட்சேபனை இல்லையாயின் காச்யபரே, தங்கள் ஆசிரமத்தில் ஓரிரவு நான் தங்க அனுமதியுங்கள்."

11. "நான் இதற்கு ஒப்புக் கொள்வதில்லை" என்றார் காச்யபர். "இந்த இடத்தை ஆளும் நாக மன்னன் முசலிந்தா ஒரு காட்டுமிராண்டித்தனமானவன். அவன் பயங்கரச் சக்திகளை உடையவன். தீயை வணங்கும் முனிவர்கள் அனைவர்க்கும் தீராப் பகைவனவன். நள்ளிரவில் அவன் ஆசிரமங்களுக்குச் சென்று அவர்களை மிகவும் துன்புறுத்துகிறான். எனக்கு இழைக்கும் அதே கொடுமையை அவன் தங்களுக்கும் இழைப்பானென்று அஞ்சுகிறேன்."

12. நாகர்கள் உயர்வெய்திய புத்தரின் நண்பர்களாகவும், அவரைப் பின்பற்றுபவர்களாகவும் ஆகிவிட்ட செய்தியைக் காச்யபர் அறியார். ஆனால் அதை உயர்வெய்திய புத்தர் அறிவார்.

13. எனவே உயர்வெய்திய புத்தர் மீண்டும் வற்புறுத்துகிற வகையில் வேண்டிக் கூறினார்: "எனக்கு அவன் எந்தத் தீங்கும் செய்வானெனத் தோன்றவில்லை; காச்யபரே, தங்கள் வேள்வி அறையில் ஒரே ஒரு இரவு மட்டும் தங்க அனுமதிக்க வேண்டுகிறேன்."

14. காச்யபர் தொடர்ந்து பல இடர்களைக் கூறிவந்தாரெனினும் புத்தரும் தொடர்ந்து தன் வேண்டுகோளை வலியுறுத்தி வந்தார்.

15. அதன் பின் காச்யபர் கூறினார்: "என் மனம் எந்த முரண்பாட்டையும் விழைவதில்லை. எனக்கு அச்சமும் ஆதங்கமுமே உள்ளது. ஆனால் தங்கள் விருப்பப்படியே ஆகட்டும்."

16. உய்வெய்திய புத்தர் அதன்படி வேள்விச் சாலைக்குள் புகுந்து தன் இருக்கையை ஏற்றுக் கொண்டார்.

17. தன் வழக்கப்படியான நேரத்தில் நாக மன்னன் முசலிந்தா அவ்வறைக்குள் வந்துற்றார். ஆனால் காச்யபரைக் காண்பதற்குப் பதிலாக, அவருடைய இருக்கையில் உயர்வெய்திய புத்தர் இருக்க கண்டார்.

18. புத்தர் அமர்ந்திருப்பதைக் கண்ட முசலிந்தா, அமைதியும், தூய்மையும் ஒளிரும் முகத்துடன் ஆன உன்னதமான ஒருவர் முன் தான் நிற்பதை உணர்ந்து, தலை தாழ்த்தி வணங்கத் தொடங்கினார்.

19. அந்த இரவில் காச்யபரின் உறக்கம், தன்னுடைய விருந்தினர்க்கு என்ன நேருமோ என்ற எண்ணத்தினால் பெரிதும் பாதிக்கப்பட்டது. எனவே அவர் மிகுந்த தவறான புரிதலோடும், அச்சத்தோடும் தன் விருந்தினர் இந்நேரம் எரிக்கப்பட்டிருப்பார் என எண்ணி எழுந்தார்.

20. அதன்பின் காலை கதிரொளியில் காச்யபரும் அவருடைய சீடர்களும் நடந்ததைக் காண வந்துற்றனர். முசலிந்தாவால் தாக்கப்பட்டிருப்பதற்கு மாறாக, அந்த முசலிந்தாவால் புத்தர் வணங்கப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டனர்.

21. இதைக் கண்ணுற்ற காச்யபர் தான் ஏதோவொரு பெரிய அதிசய நிகழ்வைக் கண்ணுறவதாகவே உணர்ந்தார்.

22. இந்த அதிசயத்தால் தாக்கமுற்ற காச்யபர், உயர்வெய்திய புத்தரைத் தம்மருகே தங்கி ஆசிரமம் அமைத்துக் கொள்ளும் படி வேண்டினார் _ அவரைத் தாம் நன்கு கவனித்துக் கொள்வதாகவும் கூறினார்.

23. உயர்வெய்திய புத்தர் ஆங்கு தங்கியிருக்க ஒப்புக் கொண்டார்.

24. எப்படியாயினும், இருவர்க்கும் வெவ்வேறு நோக்கங்கள் இருந்தன. காச்யபரின் நோக்கமோ நாகமன்னன் மிசலிந்தாவிடமிருந்து பாதுகாப்புப் பெறுவது, உயர்வெய்திய புத்தரோ, என்றாவது ஒருநாள் தன்னுடைய தத்துவத்தை நிலைநாட்ட காச்யபர் தமக்கு வாய்ப்பளிப்பார் என எண்ணினார்.

25. ஆனால் காச்யபர் அத்தகைய விருப்பெதையும் காட்டிக்கொள்ளவேயில்லை. உயர்வெய்திய புத்தர் வெறும் அற்புதங்கள் நிகழ்த்துபவரேயன்று அதற்கு மேல் வேறொன்றுமில்லை என்று அவர் எண்ணினார்.

26. ஒருநாள் உயர்வெய்திய புத்தர் தாமே இதில் முனைப்புக் காட்ட வேண்டுமென எண்ணி காச்யபரை வினவினார்: "தாங்கள் ஒரு அறவோரா?"

27. "தாங்கள் ஒர் அறவோராயில்லையாயின் இந்த அக்னிஹோத்தரம் தங்களுக்கு என்ன நன்மை செய்யப்போகிறது?"

28. காச்யபர் கூறினார்: "அறவோராய் இருப்பதெனில் யாதென நான் அறிந்திருக்கவில்லை. தாங்கள் அதை எனக்கு விளக்குவீர்களா?"

29. உயர்வெய்திய புத்தர் காச்யபரிடம் கூறினார்: "ஒரு அறவோர் என்பவர் பற்றுக்கள் அனைத்தையும் _ அதாவது மனிதன் எண்வகை மார்க்கத்தை அடைவதற்குத் தடையெழுப்பும் அனைத்தையும் வென்றவராவார். அக்னிஹோத்தரம் ஒரு மனிதனின் தீச்செயல் பயன்களைக் களைய இயலாது."

30. காச்யபர் சற்றுத் தற்பெருமை உடையவராய் இருந்தார். ஆனால் உயர்வெய்திய புத்தரின் வாதத்திலுள்ள ஆற்றலை அவர் உணர்ந்திருந்தார். இறுதியில் உண்மைக் கோட்பாடுகளை உணரத்தக்க அளவில் தன் மனத்தை பக்குவப்படுத்தியும், பண்படுத்தியும், தனது குறைந்த

அறிவாற்றல் உலகப் புகழ் பெற்ற புத்தருடைய அறிவாற்றலை விடச் சற்றுக் குறைவானதாகும் என ஒப்புக் கொண்டார்.

31. எனவே, இறுதியில், பணிவுற்றவராய் உருவெல்ல காச்யபர் புத்தரின் கோட்பாட்டினை ஏற்றுக் கொண்டு அவரைப் பின்பற்றுபவராயினார்.

32. தங்கள் குருவைப் பின்பற்றி, அவருடைய சீடர்களும், மிகுமிகு பணிவுற்றோராய் தம்ம கோட்பாட்டுப் போதனையைப் பெற்றனர். காச்யபரும் அவர்தம் சீடர்களும் இவ்வாறாக ஒட்டு மொத்தமாய் சமயமாற்றம் செய்யப்பட்டனர்.

33. அதன்பின் உருவெல்ல காச்யபர், தம் பொருள்கள் அனைத்தையும், வேள்விக் கலயங்களையும் தூக்கி ஆற்றில் ஒட்டுமொத்தமாய் எறியவும் அவை மிதந்து ஆற்று நீரில் போயின.

34. ஆற்றின் கீழ்க்கரையில் வசித்து வந்த நதிகாச்யபரும், கயா காச்யபரும் வேள்விப் பொருள்களும், ஆடைகளும் (பிறவும்) ஆற்றோடு கண்டபடி மிதந்து வருவதைக் கண்ணுற்றுக் கூறினர்: "இவையாவும் நம் சகோதரரின் உடைமைகளாயிற்றே_ஏன் இவைகளை அவர் வீசி எறிந்து விட்டார்? ஏதோ ஒரு பெரிய மாற்றம் நிகழ்ந்துள்ளது." இவ்வாறு எண்ணி அவர்கள் மிகவும் துயருற்று அமைதியிழந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தம்தமது ஐநூறு சீடர்களுடன் ஆற்றோரம் மேல் நோக்கி தம் சகோதரரைத் தேடி வந்தனர்.

35. அவரையும், அவர்தம் சீடர்களையும் துவராடை தரித்தவர்களாய்க் கண்ட அவர்கள் விசித்தரமான சிந்தனையால் ஆட் கொள்ளப்பட்ட மனத்துடன் அதற்கான காரணங்களை விசாரித்தனர். புத்தரின் தம்மத்திற்குத் தாம் சமயமாற்றம் உற்ற செய்தியை உருவெல்ல காச்யபர் அவர்களிடம் விரிவாக எடுத்துரைத்தார்.

36. "எங்கள் சகோதரர் இவ்வாறு தம்மை ஒப்புக் கொடுத்த பின் நாங்களும் அவரைப் பின்பற்ற வேண்டும்," என்றனர் அவர்கள்.

37. அவர்கள் தங்கள் விருப்பத்தைத் தங்கள் மூத்த சகோதரர்க்குத் தெரிவித்தனர். அதன் பின் அவ்விரு சகோதரர்களும், தம் சீடர்களின் பரிவாரத்தோடு, _தீ வேள்வியோடு புத்தரின் சொந்த தம்மக் கோட்பாட்டை ஒப்பிட்டு ஆற்றப்பட்ட பேருரையைக் கேட்கும்படிச் செய்யப்பட்டனர்.

38. அவ்விரு சகோதரர்களுக்கும் ஆற்றிய பேருரையில் உயர் வெய்திய புத்தர் உரைத்தார்: "குழம்பிய சிந்தனைகள் விறகுகளாய் ஒன்றோடொன்று தெளிவுநோக்கிக் கடையப்பட்டுத் தீ உண்டாக்கப்படுகையில். அறியாமையென்னும் அடர்ந்த புகை மேல்நோக்கி எழுகிறது."

39. தீ உண்டாக்கப்படுகையில் காமம், கோபம், குழப்பம் ஆகியனவும், உலகில் துன்பத்தையும், துயரத்தையும் உண்டாக்கும் பிற அனைத்தும் எரிக்கப்படுகின்றன.

40. "இவ்வழி காணப்பட்ட உடனே, காமம், கோபம், குழப்பம் ஆகியவை எரித்து நீறாக்கப்பட்டபின், நற்காட்சி, நல்லறிவு, நன்னடத்தை ஆகியவை தோன்றுகின்றன."

41. எனவே ஒரு மனிதனின் மனம் தீச்செயல்களை வெறுக்கத் தொடங்கியதும், இந்த வெறுப்பு பேராசை விருப்பினை வெறுக்கச் செய்கிறது. பேராசை விருப்பு அழிந்து போகிறது_துறவிக்கு.

42. இவருரையைக் கேட்ட பெரும் ரிஷிகள், தீ வணக்கத்தின்பால் கொண்டிருந்த அனைத்துப் பற்றையும் இழந்தவர்களாய்ப் புத்தரின் சீடர்களாவதற்கு விரும்பினர்.

43. காஸ்யபர்களின் சமயமாற்றம் உயர்வெய்திய புத்தருக்கு மாபெரும் வெற்றியாய்த் திகழ்ந்தது. ஏனெனில் அவர்கள் மக்களின் பார்வையில் மிகவும் வலிய இடத்தைப் பெற்றிருந்தார்கள்.

3. சாரிபுத்தரர் மற்றும் மொக்கல்லானா ஆகியோரின் சமயமாற்றம்.

1. உயர்வெய்திய புத்தர் இராஜகிரஹத்தில் இருக்கையில், ஆங்கு சஞ்சயர் என்ற பெயரிய நன்கறியப்பட்ட ஒர் மனிதர் இருநூற்றைம்பது பரிவ்ராஜகர் பரிவாரத்தைச் சீடர்களாய்ப் பெற்று, ஆங்கு தங்கியிருந்தார்.

2. அவருடைய சீடர்களில் சாரிபுத்ரர் மற்றம் மொக்கல்லானா என்னும் இரு பிராமண இளைஞர்கள் இருந்தனர்.

3. சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் சஞ்சயரின் போதனைகளில் திருப்தியுறாதவர்களாய், அவரினும் சிறந்த ஒருவரைத் தேடிக் கொண்டிருந்தனர்.

4. அப்போது ஒரு நாள் பஞ்சவர்க்கிய பிக்குகளில் ஒருவரான போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜி, ஒரு முற்பகலில், தன் துவராடைகளை அணிந்து மேலங்கியும் தானக்கலயமும் ஏந்தித் தானத்திற்காக இராஜகிரஹத்திற்குள் நுழைந்தார்.

5. அஸ்ஸாஜியின் மதிப்பிற்குரிய தோற்றத்தைக் கண்ணுற்ற சாரிபுத்ரர் அதனால் மிகவும் தாக்கமுற்றார். போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜியை கண்ட சாரிபுத்ரர், "உண்மையில் இந்த மனிதர் உலகில் சிறந்த துறவோர் கூட்டத்தைச் சேர்ந்தவரேயாவார். நான் அவரிடம் சென்று, 'நண்பரே! நீங்கள் யாருடைய பெயரால் உலகைத் துறந்தீர்கள்? யார் உங்கள் போதகர்? யாருடைய தம்மத்தை நீங்கள் கடைப்பிடிக்கிறீர்கள்? என்று கேட்டாலென்ன? என்று எண்ணினார்.'

6. அப்போது சாரிபுத்ரர் எண்ணினார்: "அந்தத் துறவியை இவ்வாறு கேட்க இது நேரமன்று; அவர் தானத்திற்காக ஒரு வீட்டின் உள் வராந்தாவிற்குள் நுழைந்து விட்டார். நான்

அத்துறவியை அடிமேல் அடிவைத்துப் பின் தொடர்ந்தால் என்ன?_ அவரே யாரோ ஏதோ கருதி நம்மைத் தொடர்கிறார் என்று எண்ணும்படி."

7. இராஜகிருஹத்திற்கு ஊடாகத் தம் தானமேற்கும் பயணத்தை முடித்துக் கொண்ட போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜி தாம் பெற்ற தான உணவுடன் திரும்பிச் சென்றார். அதன் பின் போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜியின் இருப்பிடத்திற்கு சாரிபுத்ரர் சென்றார். அவரை அடைந்து வந்தனங்களைப் பரிமாறிக் கொண்டபின் கணிவான சொற்களுடன், அவரருகே நின்றார்.

8. பயணிக்கும் துறவியான சாரிபுத்ரர் அவ்வாறு நின்று போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜியிடம் கூறினார். "நண்பரே! தங்கள் தோற்றம் தூய்மையானது. தங்கள் பொலிவு தூயதாகவும் ஒளிமிக்கதாகவும் உள்ளது. நண்பரே! யாருடைய பெயரில் நீங்கள் உலகைத் துறந்தீர்கள்? யார் உங்கள் போதகர்? யாருடைய தம்மத்தை நீங்கள் கடைப்பிடிக்கிறீர்கள்?"

9. அஸ்ஸாஜி பதிலிறுத்தார்: "நண்பரே! ஈண்டு, சாக்யவம்சத்தினரான பெருந்துறவி உள்ளார்_உயர்வெய்திய புத்தர்_அவர்தம் பெயரிலேயே நான் உலகைத் துறந்தேன்; உயர்வெய்திய புத்தரே என் போதகர்; உயர்வெய்திய புத்தரின் தம்மத்தையே நான் பின் பற்றுகிறேன்."

10. "போற்றுதலுக்குரிய ஐயன்மீர்! தங்கள் போதகர் கைப்பற்றும் கொள்கை யாது? அவர் உமக்குப் போதிப்பன யாவை?"

11. "நான் ஒரு இளஞ்சீடனாகவே உள்ளேன். அண்மையில் தான் சங்கமுறைமையை ஏற்றேன். தம்மத்தையும் ஒழுக்க முறைமையையும் புதிதாக ஏற்றவன் நான். தங்களுக்குத் தம்மத்தை விரிவாக விளக்க என்னால் இயலாது. ஆனால் அதன் பொருள் யாதென உமக்குச் சுருக்கமாய் நான் கூறுவேன்."

12. அதன்பின் பயணிக்கும் முனிவரான சாரிபுத்ரர் போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜியிடம் கூறினார். "அது அவ்வாறே ஆகட்டும் நண்பரே! தாங்கள் விரும்புமளவிற்குக் குறைவாகவே எனக்குக் கூறுங்கள்_ஆனால் பொருளைக் கூறுங்கள். நான் விரும்புவது பொருளை மட்டுமே. தத்துவம் பற்றி ஏன் சுற்றிவளைக்க வேண்டும்?"

13. அதன்பின் போற்றுதலுக்குரிய அஸ்ஸாஜி சாரிபுத்ரருக்கு புத்தரின் போதனைகளின் சாரத்தை விளக்கினார். சாரிபுத்ரர் முழுமையாய் திருப்தியுற்றார்.

14. சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் சகோதரர்கள் அல்லவெனினும் சகோதரர்கள் போலவே இணைந்திருப்பவர்கள். ஒருவருக்கொருவர் வாக்களித்துக் கொண்டிருந்தார்கள். யார் முதலில் உண்மையை அடைகிறார்களோ, அதனை அப்படியே அடுத்தவர்க்கு அவர் உரைக்க வேண்டும். இது அவர்களுக்குள் உள்ள ஒப்பந்தமாகும்.

15. அதன்படி சாரிபுத்ரர் மொக்கல்லானா இருக்குமிடத்திற்குச் சென்றார். அவரைக் கண்ட மொக்கல்லானா சாரிபுத்ரரிடம் கூறினார்: "நண்பரே! தங்களின் தோற்றம் மிகத் தெளிவாயுள்ளது: தங்கள் பொலிவு தூயதாகவும் ஒளிமிக்கதாகவும் உள்ளது. மெய்யாகவே தாங்கள் உண்மையை அடைந்து விட்டீரோ?"

16. "ஆம் நண்பரே! நான் உண்மையை அறியலானேன்." "நண்பரே! அது எவ்வாறு நேர்ந்தது?" அதன்பின் சாரிபுத்ரர் அவர்க்கும் அஸ்ஸாஜிக்கும் இடையே நிகழ்ந்தவற்றை மொக்கல்லானாவுக்கு உரைத்தார்.

17. அதன்பின் மொக்கல்லானா சாரிபுத்ரரிடம் கூறினார்: "நண்பரே! நாம் உயர்வெய்திய புத்தருடன் இணைவோம்_உயர்வெய்திய புத்தர் நம் போதகராய் இருக்கட்டும்."

18. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "நண்பரே! இந்த இருநூற்றைம்பது பயணிக்கும் பரிவ்ராஜகர்களும் நம்பொருட்டே இங்கு வாழ்கிறார்கள், அவர்கள் நம்மையே சார்ந்திருக்கிறார்கள். அவர்களை விட்டுச் செல்லும் முன் நாம் முதலில் அவர்களிம் கூறுவோம். அவர்கள் பொருத்தமென்று எண்ணுவதைப் புரியட்டும்."

19. அதன்பின் சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும், அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்றனர். அவர்களை அடைந்து அவர்களிடம் கூறினர்: "நண்பர்களே! நாங்கள் உயர்வெய்திய புத்தரோடு இணையப் போகிறோம்; அவரே_அந்த உயர்வெய்திய புத்தரோடு இணையப்போகிறோம்; அவரே_அந்த உயர்வெய்திய புத்தரே இனி எங்கள் போதகராவார்."

20. அவர்கள் பதிலிறுத்தனர்: "ஐயன்மீர்! உங்கள் பொருட்டே இங்கு நாங்கள் வாழ்கிறோம். ஐயன்மீர் தாங்கள் மாபெரும் சாமணரின் கீழ் உயர்வாழ்வு எய்துவீராயின் நாங்கள் அனைவரும் அதையே செய்வோம்."

21. அதன்பின் சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் சஞ்சயர் இருந்த இடத்திற்குச் சென்றனர். அவரை அடைந்து அவர்கள் கூறினர்: "நண்பரே! நாங்கள் உயர்வெய்திய புத்தருடன் இணையப்போகிறோம்_அவரே_ அந்த உயர்வெய்திய புத்தரே இனி எங்கள் போதகராவார்."

22. சஞ்சயர் பதிலிறுத்தார்: "இல்லை, நண்பர்களே, நீங்கள் அவரிடம் செல்லாதீர்கள். நாம் மூவரும் இவர்களைக் கவனித்துக் கொள்ளலாம்."

23.இரண்டாம் முறையும், மூன்றாம் முறையும் சாரிபுத்ரரும், மொக்கல்லானாவும் இதையே கூறினர்_சஞ்சயரும் முன்புரைத்த பதிலையே கூறலானார்.

24. அதன்பின் சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் பயணிக்கும் முனிவர்களான இருநூற்று ஐம்பது பேருடன் இராஜகிரஹத்தில் உயர்வெய்திய புத்தர் தங்கியிருந் வேலுவனத்திற்குச் சென்றனர்.

25. உயர்வெய்திய புத்தர் அவர்களைக் கண்டார்_சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் தூரத்தில் வந்து கொண்டிருந்தனர். தம் பிக்குகளை விளித்து அவர் கூறினார்: "துறவோரே! ஆங்கு இரு தோழர்கள் வருகின்றனர்."_சாரிபுத்ரரையும் மொக்கல்லானாவையும் சட்டக்காட்டி அவர் கூறினார்: "இவ்விருவரும் இணைச்சீடர்களாய்_நமக்கு ஏற்ற இணைச்சீடர்களாய் இருப்பர்."

26. மூங்கில் தோப்புக்கு அவர்கள் வந்துற்றபோது, உயர்வெய்திய புத்தரின் இருப்பிடத்திற்கு அவர்கள் சென்றனர். அவரை அடைந்தபின் அவர்கள், அவருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். அப்போது உயர்வெய்திய புத்தரிடம் அவர்கள் உரைத்தனர்: "ஐயன்மீர்! சங்கமுறைமையை நாங்கள் உயர்வெய்திய புத்தரிடம் இருந்து ஏற்கச் செய்வீராக."

27. உயர்வெய்திய புத்தர் வழக்கப்படி சங்கமுறைமையில் அனுமதிக்கும் குறிப்புரையான, "ஏஹி பிக்கு" (வாரும் பிக்குவே) என்பதைக் கூறினார். சாரிபுத்ரரும் மொக்கல்லானாவும் (மொக்கல்லியானர்) அவர்களுடன் இருநூற்று ஐம்பது ஜதிலர்களும் புத்தரின் சீடர்களாயினர்.

4. அரசர் பிம்பிசாரரின் சமயமாற்றம்.

1. இராஜகிரஹம் சேனிய பிம்பிசாரரின் தலைநகராகும்_அவர் மகதத்தின் அரசராவார்.

2. இந்தப் பெரும் எண்ணிக்கையிலான ஜதிலர்களின் சமயமாற்றம் பற்றிக் கேள்வியுற்ற நகரமக்கள் ஒவ்வொருவரும் உயர்வெய்திய புத்தரைப் பற்றிப் பேசத்தொடங்கினர்.

3. இவ்வாறாக, அரசர் பிம்பிசாரர் நகருக்குள் அவர் வந்திருப்பதை அறியலானார்.

4. "மிகவும் வைதீகமானவர்களும், வைராக்கியமுடையவர்களுமான ஜதிலர்களைச் சமயமாற்றமுறச் செய்தது சாதாரண செய்தியன்று." அரசர் பிம்பிசாரர் தமக்குள் கூறிக்கொண்டார்: "உண்மையில் அது அப்படிதான் இருக்கவேண்டும். அவர் உயர்வெய்தியவராய், வான்புகழ் உடையவராய், நிறைவுறு நிகரிலா புத்தராய், அறிவிலும், ஒழுக்கத்திலும் ஆழ்ந்ததிறம் உடையவராய், துறவியாய், உலகை நன்குணர்ந்தவராய், மிக்குயர்ந்தவராய், மாந்தரின் வழிகாட்டியாய், சான்றோர்க்கும், சாதாரணமனிதர்க்கும் போதகராய் இருப்பவர் போலும். தாம் நன்கு உணர்ந்ததையே பிறருக்குப் போதிப்பவராகவே அவர் இருப்பார்."

5. தொடக்கத்திலும், தொடர்ச்சியிலும், முடிவிலும் தனிசிறப்புடையதாய், உணர்விலும் உரையிலும் உன்னதமானதாய் உள்ள தம்மத்தையே போதிப்பவராய் அவர் இருக்க வேண்டும்; நிறைவான தூய, உன்னதமான வாழ்க்கையை நிறைவேற்றுவதாகப் பிரகடனம் செய்பவராகவே அவர் இருக்க வேண்டும். அவரைப்போன்ற ஒரு மாமனிதரைக் காணப்பெறுதல் மிகவும் நன்று.

6. எனவே அரசர் பிம்பிசாரர், எண்ணிலா மகத பிராமணர்களும், இல்லறத்தாரும் அடங்கிய பன்னிரு பெருங்குழுக்களோடு உயர்வெய்திய புத்தர் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார். அவரை அடைந்து, பணிவுடன் உயர்வெய்திய புத்தரை வணங்கி, அவரருகே அமர்ந்தார். எண்ணிலா மகத பிராமணர்களும்,இல்லறத்தாரும் அடங்கிய பன்னிரு பெருங்குழுவினரில் சிலர், உயர்வெய்திய புத்தரை பணிவுடன் வணங்கி, உயாவெய்திய புத்தருடன் வந்தனங்களைப் பரிமாறிக் கொண்ட பின் இனியமுகமன் உரைகளுடன் அவரருகே அமர்ந்தனர். சிலர் உயர்வெய்திய புத்தரை நோக்கித தம் கரங்களைக் குவித்தபடி அவரருகே அமர்ந்தனர்; சிலர் அவரருகே அமைதியாய் அமர்ந்தனர்.

7. அப்போது அந்த எண்ணிலா மகத பிராமணர்களும், இலலறத்தாரும் அடங்கிய பன்னிரு குழுவினரும் உயர்வெய்திய புத்தருடன் வந்துற்ற பிக்குகளிடையே உருவெல்ல காச்யபரையும் கண்டனர். அவர்கள் எண்ணினர்: "இது எப்படி ஆயிற்று? இம்மாபெரும் சாமணர் உருவெல்ல காச்யபரின் தொண்டராய் ஆகிவிட்டாரா? அல்லது உருவெல்ல காச்யபர் இந்த மாபெரும் சாமணரின் தொண்டராகி விட்டாரா?"

8. எண்ணிலா மகத பிராமணர்களும், இல்லறத்தாரும் அடங்கிய அந்தப் பன்னிரு குழுவினரின் மனங்களில் தோன்றிய எண்ணங்களைத் தம் மனத்தில் புரிந்து கொண்டவரான உயர்வெய்திய புத்தர் போற்றுதலுக்குரிய உருவெல்ல காச்யபரை விளித்து உரைத்தார்.! "ஓ! உருவெல்ல காச்யபரே! மாண்புடையோரென அழைக்கப்படும் தாங்கள் தீ வணக்கத்தைக் கைவிட்டதால் எதனைக் கண்டீர்கள்? தாங்கள் யாக வேள்வியைக் கைவிட்டது எங்ஙனம்?"

9. காச்யபர் பதிலிறுத்தார்: "யாகங்கள் வாக்களிப்பனயாதெனில் காட்சிகள், கேள்விகள், சுவைகள், காமவேட்கையுடைய பெண்கள் ஆகியவையே; ஏனெனில் இவையாவும் மாசுடையவை என நான் புரிந்து கொண்டமையால் யாகங்களிலும் பலிகளிலும் எந்த மகிழ்ச்சியையும் பெற என்னால் இயலவில்லை."

10. "ஆனால் தங்களுக்கு ஆட்சேபனை இல்லையாயின், அப்படித் தங்களை எண்ணச்செய்தது எது எனக் கூறுங்களேன்!"

11. அதன்பின் உருவெல்ல காச்யபர், தம் இருக்கையை விட்டு எழுந்து, தன் மேலங்கியைச் சரிசெய்து தோளின் ஒருபுறத்தில் சரித்த வண்ணம், உயர்வெய்திய புத்தரின் பாதங்களில் வீழந்து தலைசாய்த்து வணங்கி உரைத்தார்: "என் போதகர் உயர்வெய்திய புத்தரேயாவார். நான் அவருடைய சீடன்." அதன் பின் எண்ணிலா மகத பிராமணர்களும் இல்லறத்தாரும் அடங்கிய பன்னிரு குழுவினரும் புரிந்து கொண்டனர்: "உருவெல்ல காச்யபர் உயர்வெய்திய சாமணரைப் பின்பற்றி வாழ்வாங்கு வாழ்பவராவார்."

12. "எண்ணிலா மகத பிராமணர்களும், இல்லறத்தாரும் அடங்கிய பன்னிரு குழுவினரின் மனத்திலும் தோன்றிய எண்ணங்களைத் தம் மனத்தில் புரிந்து கொண்ட உயர்வெய்திய புத்தர் அவர்களுக்குத தம் தம்மத்தைப் போதித்தார். கருநிறக் கறையேதுமற்ற தூய ஆடை சாயத்தை நன்கு ஏற்பது போல, எண்ணிலா மகத பிராமணர்களும் இல்லறத்தாரும் அடங்கிய

பன்னிரு குழுவினர், பிம்பிசாரரின் தலைமையில், ஆங்கு அமர்ந்திருந்த தூய, கறையிலா தம்மப் பதிவினை அடைந்தனர். ஒரு குழு உபாசகத் தொண்டர்களாவதாக அறிவித்தனர்."

13. அதன்பின், இந்தக் காட்சிகளைக் கண்ணுற்ற மகத மன்னர் சேனிய பிம்பிசாரர், தம்மத்தைப் புரிந்து கொண்டவராய், தம்மத்தில் ஆழந்தவராய், நிச்சயமற்ற தன்மைகளை வென்றவராய், உயர்வெய்திய புத்தரிடம் உரைத்தார்: "ஐயன்மீர்! கடந்த காலங்களில், நான் இளவரசனாய் இருந்தாது, நான் ஐந்து விழைவுகள் உடையவனாயிருந்தேன். இப்போது அவைகள் நிறைவேறிவிட்டன."

14. கடந்த காலங்களில், ஐயன்மீர்! இளவரசனாய் இருந்த எனக்கு இவ்வாறு தோன்றியது: "ஓ! நான் அரசனாய் முடிசூட்டப்பட வேண்டும்! அது என் முதல் விழைவாயிருந்தது. ஐயன்மீர் அது இப்போது நிறைவேறியுள்ளது. 'அதன்பின் ஓர் உயர்வெய்திய மாமனிதர், முழுநிறைவுறு பேரறிவய்தியவர் என் அரசாட்சிக்கு வரவேண்டும்!'இது இரண்டாம் விழைவாயிருந்தது. ஐயன்மீர்! அதுவும் இப்போது நிறைவேறியுள்ளது. உயர்வெய்திய அவர் முன்னிலையில் நான் நிற்க வேண்டும். இது என் மூன்றாம் விழைவாயிருந்தது, ஐயன்மீர்! அதுவும் இப்போது நிறைவேறியுள்ளது. நான் அந்த உயர் வெய்தியவரின் தம்மத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். அது என் ஐந்தாம் விழைவாக இருந்தது, ஐயன்மீர்! அதுவும் இப்போது நிறைவேறியுள்ளது. ஐயன்மீர்! என் கடந்த காலங்களில், நான் இளவரசனாய் இருந்தபோது இவைகள் ஐந்தும் என் விழைவுகளாய் இருந்தன."

15. அற்புதம், ஐயன்மீர்! அற்புதம், வீழ்ச்சியுற்ற ஒன்றை ஒருவர் நிலைநிறுத்தியவாறு, வழிதவறியோர்க்கு வழிகாட்டப்பட்டவாறு, இருளுக்கு ஒளிவிளக்காய், கண்ணுளோர் காணத்தக்கதாய், உயர்வெய்திய புத்தர் பல வழிகளிலும் தம்மத்தைப் போதித்தீர்கள். ஐயன்மீர்! உயர்வெய்திய புத்தரிடமும் அவர் தம் தம்மத்திடமும், அவர்தம் பிக்குகளின் முறைமையாம் சங்கத்திடமும் நான் அடைக்கலம் புகுகிறேன். உயர்வெய்திய புத்தர், என்வாழ்நாள் முழுவதற்கும்,தங்களிடம் அடைக்கலம் புகுந்த உபாசகச் சீடனாய் என்னை ஏற்றருள்வீராக."

## 5. அநாதபிண்டிகரின் சமயமாற்றம்.

1 . கோசல நாட்டின் தலைநகரமான ஷ்ராவஸ்தியில் சுதத்தர் என்பவர் வசித்து வந்தார். அது அரசர் பசேஞ்சித்தால் ஆளப்பட்டு வந்தது. சுதத்தர் அரசரின் பொக்கிஷதாரராய் இருந்தார். ஏழைகளிடத்தில் அவர் கொண்டிருந்த தாராளசிந்தை காரணமாக, சதத்தர்-அநாதபிண்டிகர் என்று அழைக்கப்பட்டார்.

2. புத்தர் இராஜகிருஹத்தில் இருந்த போது, அநாதபிண்டிகர் அவ்விடத்திற்குத் தம் சொந்த அலுவல் காரணமாகச் செல்ல நேர்ந்தது. இராஜகிருஹத்தின் தொழிலதிபர் ஒருவருக்கு மண முடித்துக் கொடுக்கப்பட்ட தம் தங்கை வீட்டில் அவர் தங்க வந்தார்.

3. அவர் வந்துற்றபோது அந்தத் தொழிலதிபர் புத்தருக்காகவும் அவருடைய பெரும் பிக்கு பரிவாரங்களுக்காகவும் உணவு தயாரித்துக் கொண்டிருந்தார். ஒரு திருமண நிகழ்ச்சியோ அரசரின் விருந்துபசரிப்போ நடைபெறவுள்ளதாக அவர் கருதினார்.

4. உண்மையை அறிந்த அவர் புத்தரைக் காணப் பேரவா கொண்டு, அன்றிரவே உயர்வெய்திய புத்தரைக் காணச் சென்றார்.

5. அவரைக் கண்டவுடனே, உயர்வெய்திய புத்தர் அவருடைய உள்ளத்தின் நற்குண நன்மையை நன்குணர்ந்து, அவரைகனிந்த வார்த்தைகளால் வரவேற்றார். தம் இருக்கையில் அமர்ந்தபின் அநாதபிண்டிகர் ஏதேனுமொரு சமயச்செய்தி பற்றிய பேருரையைத் தாம் கேட்க விரும்புவதாகத் தெரிவித்தார்.

6. அவருடைய விருப்பத்திற்கு இசைவாக உயர்வெய்திய புத்தர் ஒரு வினாவை எழுப்பினார்: "நம் வாழ்க்கையை வடிவமைப்பவராயுள்ளவர் யார்? அது ஈஸ்வரர் என்னும் படைப்புக் கடவுளா? ஈஸ்வரர் படைப்பவராயின், உயிர் வாழும் உயிகள் யாவும் அந்தப்படைப்பவரின் ஆற்றலுக்கு அமைதியாய்த் தம்மை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். பானை செய்வோனின் கைகளால் அமைக்கப்படும் பாத்திரங்களைப் போல அவைகள் இருக்கும். உலகம்ஈஸ்வரரால் உருவாக்கப்பட்டிருக்குமாயின் உலகில் துன்பமோ, கொடுமைகளோ அல்லது தீ ீச்செயல்களோ இருந்திடாது; ஏனெனில் மாசிலாத செயல்களோ மற்றும் மாசுள்ள செயல்களோ இரண்டுமே அவரிடமிருந்தே தோன்றுவதாயிக்க வேண்டும். இல்லையெனில் அவருக்குப் புறம்பாக, படைப்புக்காரணமாய் வேறொன்று இருக்க வேண்டும்_அவ்வாறெனில் அவர் தாமே தோன்றி நிலைத் திருப்பவராய் இருக்கலாகாது. ஆகவே ஈஸ்வரர் என்னும் கருத்து இங்கே பயனற்றுப் போகிறது என்பதை நீங்கள் காண்கிறீர்கள்.

7. "மேலும், அந்த முழு நிறைவுற்ற முதன்மைப் பரம்பொருள் அனைத்திற்கும் காரணமாய் இருக்கவியலாது. நம்மைச் சுற்றியுள்ள அனைத்தும் ஒருகாரணத்திலிருந்து விளைந்த காரியமாகவே உள்ளன_செடி விதையிலிருந்து விளைவது போல. முழுமுதற் பரம்பொருள் எப்படி எல்லாவற்றிற்கும் ஒரே காரணமாக இருக்க முடியும்? அது அவற்றில் அவர் பரவியிருப்பாராயின், பின் நிச்சயமாக அவர் அவற்றைப் படைத்திருக்வியலாது."

8. "மேலும், 'தான்' எனும் 'அகமே' படைப்பவர் எனக் கூறப்படுகிறது. ஆனால் அந்தப் பொருள் படைப்பவராயின், அவர் உயிர்களை ஏன் மகிழ்ச்சிக்குரியதாய்ப் படைக்கக் கூடாது? துன்பம், இன்பம் ஆகியவற்றின் காரணங்கள் உண்மையானவை_மற்றும் புறநிலையானைவை, அவை எப்படி 'அகத்தினால்' உண்டாக்கபடமுடியும்?."

9. “மேலும், தாங்கள் ஈண்டு படைப்போன் இல்லை, அல்லது விதியென ஒன்றில்லை என்ற வாதத்தை ஏற்றுக்கொண்டு காரணகாரியமும் இல்லை என்பீராயின், நம் வாழ்வை வடிவமைப்பதிலும், இலக்குக்கேற்ப சாதனங்களைப் பொருத்திக் கொள்வதிலும் என்ன பயன் இருக்க முடியும்?”

10. "எனவே, இருக்கும் அனைத்துப் பொருள்களும் காரணமின்றி இல்லை என நாம் வாதிக்கிறோம். இருப்பினும், ஈஸ்வரனோ, முழுமுதற் பரம்பொருளோ, 'தான் எனும் அகமோ', காரணம் ஏதுமிலா தற்செயலோ, படைப்பாளி அன்று_நம் செயல்களே நன்மையான அல்லது தீமையான விளைவுகளை உண்டாக்குகின்றன."

11. "உலகம் முழுவதும் காரணகாரிய விதியின் கீழியங்குகிறது_மற்றும் செயற்படும் காரணங்கள் மனச்சார்பற்றவையன்று_ஏனெனில் தங்கத்தால் செய்யப்பட்ட கோப்பை முழுதும் தங்கமேயாகும்."

12. எனவே, நாம் ஈஸ்வரனை வணங்குதல் மற்றும் பிராத்தித்தல் ஆகியவற்றைக் கைவிடுவோமாக; வீணான அனுமான யூகங்களிலும் பயனற்ற விவாதங்களிலும் நாம் நம்மை இழக்க வேண்டாம்; தான் எனும் அகந்தை, தன்னலம் ஆகியவற்றை நாம் கைவிடுவோமாக_அனைத்துப் பொருள்களும் காரணகாரிய விதிகளால் பொருத்தப்படுவதால், நாம் நல்லவற்றை நடைமுறைப்படுத்துவோமாக_நம் செயல்களினின்று நன்மைவிளையும் பொருட்டு.

13. அநாதபிண்டிகர் கூறினார்: "உயர்வெய்திய புத்தர் உரைத்த உண்மையை நான் உணர்கிறேன் என் முழு மனத்தையும் நான் திறந்துகாட்ட விழைகிறேன். என் சொற்களைச் செவிமடுத்தபின் ஐயன்மீர் யான் செய்ய வேண்டுவது யாதென அறிவுறுத்துங்கள்."

14. "என் வாழ்க்கை வேலை மிகுந்ததாயுள்ளது_பெரும் செல்வம் அடைந்திருப்பதால் நிறையப் பொறுப்புக்களால் நான் சூழப்பட்டுள்ளேன். இருப்பினும் என் பணிகளால் நான் மகிழ்கிறேன். அப்பணிகளுக்குள் என்னை ஊக்கத்தோடு ஈடுபடுத்திக் கொள்கிறேன். என்னிடம் பல மக்கள் பணியாளராயிருந்து என் தொழிலின் வெற்றியைச் சார்ந்தவராய் உள்ளனர்."

15. நான் இப்போது, தங்கள் சீடர்கள் துறவின் சுகத்தைப் போற்றுவதாகவும் உலகியல் பரபரப்பைத் துறப்பதாகவும் கேள்விப்படுகிறேன். அவர்கள் கூறுகிறார்கள். "உயர்வெய்திய புத்தர் அவருடைய அரசாட்சியையும், வாரிசுரிமையையும் கைவிட்டுவிட்டு நன்னெறிப் பாதையை ஏற்றுக் கொண்டு, இவ்வாறாக உலகனைத்துக்கும் நிர்வாணம் எய்துவதற்கான வழி இதுவென்பதற்கு ஒரு மாதிரியாய்த் திகழ்கிறார்."

16. "எது சரியோ அதைப் புரிவதற்கும், என் உடனுறை உயிர்களுக்கு பெருமகிழ்வளிக்கவும் என் மனம் விழைகிறது. எனவே நான் தங்களை வினவுகிறேன் _ நான் சமயப்பேரின்பம்

எய்த, என் செல்வத்தை, இல்லத்தை, வணிகத்தை, தொழிலை விட்டுவிட்டு, தங்களைப் போல் இல்லறந்துறந்து விட வேண்டுமா?"

17. அதற்கு உயர்வெய்திய புத்தர் பதிலிறுத்தார்: "சமய வாழ்வின் பேரின்பம் உன்னதமான எண்வழிப்பாதையில் நடக்கும் எவருக்கும் அடையத்தக்கதேயாகும், எவரொருவர் செல்வத்தின் வசப்பட்டு விடுகிறாரோ, அவர் அதனால் கெட்டுப்போவதற்குப்பதில் விட்டுவிடுவது நல்லது. ஆனால் எவரொருவர் செல்வத்தின் வசப்படுவதில்லையோ, செல்வமுடையவராயிருந்து, அதைச் சரியாகப் பயன்படுத்துகிறாரோ, அவர் தன் உடனுள்ளோருக்குப் பெருஞ்சுகமாய் இருக்கிறார்."

18. "நான் உமக்கு உரைக்கிறேன்: தங்கள் வாழ்நிலையிலேயே தாங்கள் இருந்து ஊக்கத்துடன் தங்கள் தொழிலில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். வாழ்க்கையோ, அன்றி செலவமோ, அன்றி அதிகாரமோ மனிதரை அடிமைப்படுத்துவதன்று_ஆனால் வாழ்க்கை, செல்வம், அதிகாரம் ஆகியவற்றின் வசப்பட்டுவிடுதலே மனிதரை அடிமைப்படுத்தும்."

19. "ஒய்வான வாழ்வு வாழுவதற்காக உலகிலிருந்து விடுபடும் பிக்குவுக்கு ஒரு பயனுமில்லை. ஏனெனில் சுறுசுறுப்பற்ற வாழ்க்கை சலிப்பூட்டக் கூடியதாகும்_மற்றும் ஆற்றல் குறைவு வெறுக்கத்தக்க ஒன்றாகும்."

20. ததாகதரின் தம்மம் ஒருவரைத் துறவற வாழ்விற்குச் செல்லும்படியோ, உலகைத் துறக்கும்படியோ, அவருக்குத் தேவையுள்ளது என அவர் உணர்ந்தாலன்றி வேண்டுவதில்ல்; ததாகரின் தம்மம் வேண்டுவதெல்லாம், 'தான்' எனும் 'அகந்தையின்' போலித்தோற்றத்திலிருந்து ஒவ்வொருவரும் விடுபட வேண்டும் என்பதும் தம் மனத்தை அவர்கள் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதும், இன்ப வேட்கையைக் கைவிடவேண்டுமென்பதும், நன்னெறி வாழ்வே வாழ வேண்டுமென்பதும் தான்.

21. "மனிதர்கள் யாது செய்யினும், உலகில் அவர்கள் கைத்தொழில் புரிபவராய், வணிகராய், அரச அதிகாரிகளாய் இருப்பினம், அல்லது உலகைத் துற்ந்து சமயநெறியாம் ஆழ்சிந்தனைத் தியானத்தில் தம்மை அர்ப்பணித்துக் கொள்வதாயினும், அவர்கள் தம்முழுமனத்தையும் தம் பணியில் செலுத்துவார்களாக; அவர்கள் ஊக்கமும் ஆற்றலும் உடையவர்களாக இரப்பார்களாக -மேலும் அவர்கள் தாமரை போல் _நீரில்வளர்வதாயினும் நீரொட்டாதிருப்பதுபோல். வாழ்வியலில் உழன்றாலும் பொறாமையோ, வெறுப்போ படியாமல், அவர்கள் உலகில் தமக்கென வாழாமல், உண்மையின் வாழ்வை வாழூவராயின், பின் இன்பமும், அமைதியும், பேரின்பமும் அவர்கள் மனத்தில் நிலைத்திருக்கும்."

22. இதுவே மெய்மையின் மிகச்சிறந்த முறையாய், எளிமையாய், பேரறிவிற்பிறந்ததாய் இருப்பதைக் கண்டுணர்ந்தார் அநாதபிண்டிகர்.

23. இவ்வாறாக மெய்மைக் கொள்கையின் பால் உறுதியாய் நிலைப்பட்ட அவர் மெதுவாக வணகத்துடன் உயர்வெய்திய புத்தரின் பாதங்களில் குவிந்த கரங்களுடன் வீழந்து வணங்கித் தம் வேண்டுகோளைத் தெரிவித்தார்.

6. அரசர் பசேஞ்சித்தின் சமயமாற்றம்.

1. அதன்பின், புத்தர் வந்துற்றார் எனக் கேள்வியுற்ற அரசர் பசேஞ்சித், தன் அரசப் பரிவாரங்கள் புடைசூழ ஜேதவன விஹாருக்குச் சென்றார். குவித்தக் கரங்களுடன் அவரை வணங்கிக் கூறினார்:

2. "என் அற்பமான, குழம்பிய அரசாட்சி மிகப்பெரும் நல்வாய்ப்பினால் உய்வுற்றது. ஏனெனில் குழப்பங்களும் அபாயங்களும், உலகப்பெருந்தலைவரும், தர்மராஜாவும் மெய்மையின் பேரரசருமான புத்தரின் இருப்பு காரணமாக எப்படியதைத் தாக்க முடியும்?"

3. நான் இப்போது தங்களின் புனித மேம்பாடுகளைக் கண்டுணர்ந்து கொண்டமையால், எனக்கும் தங்கள் போதனை நீரைப் பருக அளியுங்கள்.

4. உலகியல் வரவுகள் ஓடிமறைவன_அழியக்கூடியன; ஆனால் சமய நலன்களோ என்றும் இருப்பவை_தீர்ந்து போகாதவை. உலகியல் மனிதன், மன்னனேயாயினும், தொல்லை நிறைந்தவன்_ஆனால் ஒரு சாதாரண மனிதன் துறவியாயிருப்பின் மனஅமைதி கொள்கிறான்.

5. மன்னனின் மன ஓட்டத்தை_பேராசையாலும், இன்ப வேட்கையாலும் கனத்திருப்பதை அறிந்த உயர்வெய்திய புத்தர் வாய்ப்பை நன்கு பயன்படுத்திக்கொண்டு உரைக்கலானார்:

6. "தாழ்நிலைப்பிறப்புடையோராயினும் கூட, அவர்கள், நன்னெறியில் வாழும் மனிதனைக் காணநேர்கையில் பணிவை உணர்வர். இவ்வாறிருக்கையில் சுதந்திர மன்னர்_தன் முன் வாழ் சூழல் காரணமாக இத்தனைப் பெருமையுற்றவர் எப்படி உணர்வார்?"

7. "இப்போது நான் தம்மத்தைச் சுருக்கமாக வெளிப்படுத்துகிறேன்_மஹாராஜா இதனைக் கவனித்து, என் சொற்களை நன்கு பரிசீலித்து_நான் கூறுவனவற்றை நன்கு ஏற்றொழுகுவீராக."

8. "நம்முடைய செயல்கள் _நல்லனவோ, தீயனவோ நம்மைத் தொடர்ந்து வருகின்றன_நிழலைப் போல."

9. "மிகவும் அவசியத் தேவையாயிருப்பது நேயமுள்ள உள்ளம் மட்டுமே."

10. "உங்கள் குடிகளை உங்கள் சொந்த ஒரே பிள்ளையைப் போல் கருதுங்கள். அவர்களை ஒடுக்காதீர்கள்_அழிக்காதீர்கள்_உங்கள் புலன்கள் ஒவ்வொன்றையும் உரியப்படி கவனியுங்கள்_நன்னெறியல்லாத தத்துவங்களைத் தள்ளிவிட்டு நேர்வழி நடந்து

செல்லுங்கள்_பிறரை வீழ்த்தி நீங்கள் முன்னேறாதீர்கள். துயருற்றோரை, ஆறுதல் அளித்துத் தோழராக்கிக் கொள்ளுங்கள்."

11. அரச மதிப்பு குறித்து அதிகம் கவலைப்படவோ, வீண் புகழ்ச்சிக்காரர்கள் வெறும் போற்றுதலைச் செவிமடுக்கவோ செய்யாதீர்கள்.

12. சடங்குகளால் சலிப்படைவதில் எந்தப்பயனும் இல்லை. ஆனால் தம்மத்தைத் தியானித்து நன்னெறி வழியினை நன்கு தேருங்கள்.

13. "நாம் துன்பமும் தொல்லையும் நிறைந்த மலைகளால் அனைத்துத் திசைகளிலும் சூழப்பட்டுள்ளோம்_மெய்மை விதியைக் கருதுவதன் மூலம் மட்டுமே இந்தத் துன்பம் நிறைந்த மலைகளிலிருந்து நாம் தப்பிக்க முடியும்."

14. "அநீதியை நடைமுறைப்படுத்துவதால் என்ன லாபம்?"

15. "அறிவுடையோரெல்லாம் புலனின்பங்களைப் புறக்கணிப்பவராய் இருப்பர். அவர்கள் காம இச்சையை வெறுப்பர்_அவர்கள் நன்னெறி இருப்பை வளப்படுத்தவே முனைவர்"

16. "ஒரு மரம் தீப்பற்றி எரிகையில், பறவைகள் எப்படி அதில் கூடிவாழ முடியும்? பற்றுகள் மிகுந்த வாழ்வில் மெய்மை தங்கியிராது. ஒருவர் எத்துனைக் கற்றவராயினும், மாமுனி என்றே போற்றப்படினும், இதைக் கல்லாதவராயினும் அவர் அறிவில்லாதவரேயாவர்."

17. "எவரொருவருக்கு இவ்வறிவுள்ளதோ அவரே மெய்யறிவு உற்றவராவார். இந்த மெய்யறிவை எய்துவதற்கான நோக்கமே ஒருவருக்குத் தேவை. இதைப் புறக்கணிப்பது வாழ்க்கையின் தோல்வியாகும்."

18. "எல்லா தத்துவ வகைகளின் போதனையும் இதில் மையமிட வேண்டும்_ஏனெனில் இது இல்லாமல் பகுத்தறிவில்லை."

19. "இந்த மெய்மை துறவிக்கு மட்டுமுரியதன்று; துறவோர்_இல்லறத்தார் இருவகையார்க்கும், ஒவ்வொரு மனிதர்க்கும் உரியதாகும் இது. உறுதிப்பாகளை ஏற்றுக் கொண்ட பிக்குவுக்கும், தம் குடும்பத்தோடு வாழ்கிற உலகியல் மனிதனுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. வீழ்ச்சியுறுகிற துறவிகளும் உண்டு_ரிஷிகளின் நிலைக்கு உயர்கிற பணிவான இல்லறத்தாரும் உண்டு."

20. காம வெள்ளமென்பது அனைவருக்கும் பொதுவான அபாயமாகும்; அது உலகையே அடித்துச் செல்லக்கூடியது. அதன் ஆளுகைக்குள் அகப்பட்ட எவனும் தப்ப இயலாது. ஆனல் மெய்யறிவே உதவும் தோணி; பரிசீலிக்கும் அறிவே துடுப்பு. சமய அறைக்கூவல் உங்களை நீங்களே இந்த மாறனெனும் எதிரியின் தாக்குதலிருந்து தவிர்த்துக் கொள்ள அழைக்கிறது.

21. 'நம் செயல்களின் விளைவுகளிலிருந்து தப்பிப்பது சாத்தியமில்லையென்பதால், நாம் நற்செயல்களையே நடைமுறைப்படுத்துவோமாக.'

22. "நம் எண்ணங்களை நாம் உற்றுக் கவனிப்போமாக_நாம் தீயவை எதையும் செய்யாதவாறு_ஏனெனில் நாம் விதைப்பதையே நாம் அறுக்க முடியும்."

23. "ஒளியிலிருந்து இருளுக்குப் போகும் வழிகளுமுண்டு_இருளிலிருந்து ஒளிக்குப் போகும் வழிகளுமுண்டு. மங்கிய ஒளியிலிருந்து பேரிருளுக்குள் போகும் வழிகள் கூட உண்டு_சிறிய ஒளியிலிருந்து பேரொளிக்குள் போகும் வழிகளுமுண்டு. அறிவுடை மனிதன், தன்னிடம் உள்ள ஒளியை மேலும் ஒளிபெறப் பயன்படுத்துவான். அவன் தொடர்ச்சியாக மெய்மை பற்றிய அறிவை வளர்த்துக் கொள்வான்."

24, நன்னெறு நடத்தையாலும், பகுத்தறிவுப் பயிற்சியாலும் உண்மையான உயர்வை வெளிப்படுத்துவீராக; உலகியல் பொருள்களின் வெறுமை பற்றி ஆழ்ந்து சிந்தியுங்கள்_வாழ்வின் நிலையாமையைப் புரிந்து கொள்ளுங்கள்.

25. "மனத்தை உயர்த்துங்கள்_உறுதியான நோக்கத்தோடு உண்மையான நம்பிக்கையை நாடுங்கள்; அரச நடத்தைக்கான விதிகளின் எல்லையை மீறாதீர்கள்_தங்களின் இன்பம் புறநிலைப் பொருள்களைச் சார்ந்து இராமல், தங்கள் மனத்தைச் சார்ந்தே இருக்கட்டும். இவ்வாறாக தாங்கள் பன்னெடுங்காலத்திற்குத் தங்கள் நற்பெயரை நிலைநாட்டிக் கொள்ளமுடியும்."

26. உயர்வெய்திய புத்தரின் இவ்வுரைகளைப் பணிவுடன் கேட்ட மன்னர் அவற்றை நெஞ்சில் நிறுத்தி_இதயத்தில் இறுத்தி, அவருடைய இல்லறச்சீடராய் இருக்க உறுதி கூறினார்.

## 7. ஜீவகரின் சமயமாற்றம்.

1. ஜீவகர் என்பவர், இராஜகிரஹத்தின் ஒரு அந்தப்புர ஆடலரசியான சால்வதியின் மகனாவார்.

2. குழந்தை பிறந்த உடனே, முறையற்ற பிறப்பாகையால், அது ஒரு கூடையில் வைக்கப்பட்டு குப்பைமேட்டில் எறியப்பட்டது.

3. பற்பல மக்கள் அந்தக் குப்பை மேட்டருகே நின்று அக்குழந்தையைக் கவனித்தனர். அபயன் என்னும் இராஜகுமாரர் அவ்வழியே செல்ல நேர்ந்தது. அவர் மக்களை வினவிய போது அவர்கள் கூறினர்: "இது உயிருடன் உள்ளது."

4. இந்தக் காரணத்தாலேயே அக்குழந்தை ஜீவகா என அழைக்கப்பட்டது. அபயா அதைத் தத்தெடுத்து வளர்த்தார்.

5. ஜீவகர் வயதாகி வளர்ந்தபின், தாம் எவ்வாறு காப்பாற்றப்பட்டோம் என்பதை அறிந்து, பிறரையும் தாம் காப்பாற்றக் கூடிய வகையில் தம்மைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற உணர்வினால் உந்தப்பட்டார்.

6. எனவே அவர் தக்ஷிலாவின் பல்கலைக்கழகத்திற்கு, அபயாவின் அனுமதியின்று அவருக்குத் தெரியாமலே சென்று ஏழு ஆண்டுகளுக்கு மருத்துவம் கற்றார்

7. இராஜகிருஹத்திற்குத் திரும்பி மருத்துவராகப் பணியாற்றத் தொடங்கிய அவர் மிகக் குறுகிய காலத்திலேயே தன் தொழிலில் பெரும் பேரும் புகழும் பெற்றார்.

8. இராஜகிருஹத்திற்குத் திரும்பி மருத்துவராகப் பணியாற்றத் தொடங்கிய அவர் மிகக் குறுகிய காலத்திலேயே தன் தொழிலில் பெரும் பேரும் புகழும் பெற்றார்.

9. அவருடைய திறமையை அறிந்த அபயா அவருடைய அரண்மனையிலேயே அவருக்கு ஓர் இடம் ஏற்படுத்தித்தந்தா ா.

10. இராஜகிருஹத்தில் அவர் பிம்பிசாரரை ஒரு தொல்லைமிக்கக் கடுமையான பிணியிலிருந்து காத்தார்_அதற்காக பிம்பிசாரரின் ஐந்நூறு மனைவிமார்களின் ஆபரணங்கள் அனைத்தையும் அவர் பரிசாகப் பெற்றதாகக் கூறப்படுகிறது.

11. ஜீவகரின் மற்ற புகழ்பெற்ற சிகிச்சைகளில் இராஜகிருஹத்தின் சேதியருக்கு அவர் செய்த மிகப்பெரிய அறுவை சிகிச்சையும், பெனாரஸின் சேதியரின் மகனுக்கு வயிற்றில் சிக்கலுக்குட்பட்ட குடல்நோய் என்னம் தீராத நோய்க்குச் செய்த சிகிச்சையும் அடங்கும்.

12. ஜீவகர்அரசர்களுக்கும், அரச மகளிர்களுக்கும் மருந்துவராக நியமிக்கப்பட்டார்.

13. ஆனால் ஜீவகர் உயர்வெய்திய புத்தரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அதன் விளைவாக, அவருக்கும், சங்கத்தோருக்கும் அவர் மருத்துவராகச் செயல்பட்டு வந்தார்.

14. அவர் புத்தரின் சீடர் ஆனார். உயர்வெய்திய புத்தர் அவரைப் பிக்குவாக ஆக்கவில்லை. ஏனெனில் பிணியுற்றோரையும் காயமுற்றோரையும் அவர் கவனிக்க வேண்டுமென புத்தர் விழைந்தார்.

15. பிம்பிசாரர் இறந்தபின்,ஜீவகர், அவருடைய மகனான அஜாதசத்ருவிடம் பணிபுரிந்து வந்தார். தந்தையைக் கொன்ற குற்றத்துக்காட்பட்டபின், அஜாதசத்ரு உயர்வெய்திய புத்தரிடம் வருவதற்று முக்கிய காரணமாக இருந்தது ஜீவகரே.

## 8.இரத்தபாலவின் சமயமாற்றம்.

1. ஒரு முறை புத்தர் குரு நாட்டில், தானமேற்கும் பிக்குகளின் பெரும்பரிவாரத்தோடு தானயாத்திரை மேற்கொண்டிருக்கையில், அவர் குரு மக்களின் நகரமான துள்ளகொத்திதாவில் தங்கியிருந்தா ா.

2. அவர்கள் அதை அறிந்து, அவருக்குத் தம் மரியாதையைப் புலப்படுத்த அவரிடம் சென்றனர்.

3. அவர்கள் வந்தமர்ந்தபின், புத்தர் தமது தம்மம் பற்றிய பேருரை ஒன்றை அவர்களுக்காக நிகழ்த்தினார். புத்தரிடமிருந்து தமக்கான போதனைகளைப் பெற்றபின், துள்ளகொத்திதாவைச் சார்ந்த பிராமணத் தலைமக்கள் நன்றி பாராட்டி, எழுந்து, மிக்க பணிவுடன் விடைபெற்றனர்.

4. ஆங்கு அவர்களிடையே அமர்ந்திருந்த, அவ்வூரைச் சேர்ந்த பிரபலக் குடும்பமொன்றைச் சார்ந்தவரின் மகனான இரத்தபாலா என்பனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது: "நான் புரிந்து கொண்ட வரையில், புத்தர் போதித்த கொள்கை இல்லறத்தில் வாழ்பவனுக்கு எளிதானதன்று_முழுநிறைவுற்ற தூய உயர் நிலை வாழ்வு வாழ்தல் எளிதன்று."

5. "நான் என் தலைமுடியையும் தாடியையும் மழித்துக் கொண்டு, துவராடை அணிந்து, இல்லறத்தினின்று வெளியேறி துறவியா ாய்த் துறவு வாழ்வை மேற்கொண்டாலென்ன!"

6. பிராமணர்கள் வெகுதூரம் செல்வதற்கு முன்னமே, இரத்த பாலா வந்துற்று, வணங்கியபின், புத்தரிடம் தனக்குத் தோன்றிய எண்ணத்தைத் தெரிவித்து, அவர் கீழுள்ள துறவோர் கூட்டத்தில் தம்மயும் அனுதித்து இணைத்துக் கொள்ளும்படி வேண்டினான்.

7. "நீ இந்த முடிவுக்கு, உன் பெற்றோரின் சம்மதத்தைப் பெற்று விட்டாயா, இரத்தபாலா? என வினவினார் புத்தர்."

8. "இல்லை ஐயன்மீர்"

9. "தம் பெற்றோரின் சம்மதத்தைப் பெறாதவர்கள் எவரையும் நான் சேர்ப்பதில்லை."

10. "அந்தச் சம்மதத்தைப் பெற நான் முயற்சிகள் எடுக்கிறேன் ஐயன்மீர்!" என்று அவ்விளைஞன் கூறிவிட்டு, எழுந்து பணிவுடன் வணங்கிப் புத்தரிடம் இருந்து விடைபெற்று, தம் பெற்றோரிடம் சென்று, தம் எண்ணத்தைக் கூறி, தாம் பிக்குவாவதற்கான அவர்களின் சம்மதத்தை வேண்டினா ான்.

11. பெற்றோர்கள் கூறிய பதில் கீழ்வருமாறு: "அன்புள்ள இரத்தபாலா, நீ எங்களின் ஒரே மகன்_எங்களுக்கு மிகவும் பாசமும் அன்புமுடையவன்; நீ நல்ல வசதியாக வளர்க்கப்பட்டு வசதியாக வர்ழ்பவன்-வசதியின்மையை ஒருபோதும் அனுபவித்தறியாதவன். போ! உண்டு.

குடித்து உனக்கு நீயே களிப்படைவாயாக; அனைத்து நல்லதையும் மகிழ்வுடன் செய்க. எங்கள் சம்மதத்தை நாங்கள் மறுக்கிறோம்.

12. "உன் மரணம் எங்களைத் தனிமரமாக்கும்-எந்த மகிழ்ச்சியும் எமக்கிருக்காது_நீ உயிருடன் இருக்கும் போதே வீட்டைத் துறந்து பிக்குவாய்ப் போக ஏன் நாங்கள் ஒப்புக் கொள்ளவேண்டும்."

13. இரண்டாம் முறையும் மூன்றாம் முறையும் கூட இரத்தபாலா அதே வேண்டுகோளை வைத்தான்_ஆனால் அவனுடைய பெற்றோரிடமிருந்து அதே பதிலையே அவனால் பெற முடிந்தது.

14. இவ்வாறாக, பெற்றோரின் ஒப்புதலைப் பெறத்தவறிய அவ்விளைஞன் வெறுந்தரையில் வீழ்ந்து கிடந்து_ஒன்று தான் அங்கேயே இறப்பேன் அல்லது பிக்குவாவேன் என்று அடம்பிடித்தான்.

15. அவனுடைய பெற்றோர்கள் அவனை எழச்சொல்லி மன்றாடியவாறே, அவன் பிக்கு ஆவதற்குத் தம் எதிர்ப்பை மீண்டும் மீண்டும் தெரிவித்தனர்_ஆனால் அவ்விளைஞர் ஒரு வார்த்தையும் பேசவில்லை. இரண்டாம் முறையும் மூன்றாம் முறையும் அவர்கள் மன்றாடினரெனினும் அவன் ஒரு வார்த்தையும் பேசாமலிருந்தான்.

16. எனவே அவனுடைய பெற்றோர்கள் இரத்தபாலாவின் நண்பர்களின் உதவியை நாடினர்_இவையனைத்தையும் அவர்களிடம் கூறி, பெற்றோர்களாகிய தாம் அவனிடம் கூறியவற்றையெல்லாம் அவர்கள் அவனிடம் கூறும்படி வேண்டினர்.

17. மும்முறை அவனுடைய நண்பர்கள் அவனை வேண்டினர்-ஆனால் இன்னமும் அவன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. எனவே அவனுடைய நண்பர்கள் அவனுடைய பெற்றோரிடம் வந்து இவ்வாறு தெரிவித்தனர்: "ஆங்கு வெற்றுத் தரையுல் அவன் வீழ்ந்து கிடக்கிறான்_தான் ஒன்று இறப்பேன் அல்லது பிக்கு ஆவேன் என்று அறிவிக்கிறா◌ான். உங்கள் ஒப்புதலை அளிப்பீராயின், அவன் பிக்கு ஆவதைத் தவிர நமக்கு வேறு மாற்றுவழி என்ன இருக்கிறது.? ஏன் அவன் பிக்குவாக இங்கு வந்தால் போகிறது_அவனுக்கு நீங்கள் உங்கள் ஒப்புதலை அளியுங்கள்!" அவர்கள் வற்புறுத்தினர்.

18. "ஆம்! நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்_ஆனால் அவன் பிக்குவானபின் எங்களை வந்து காணவேண்டும்."

19. அதன்பின் அந்த நண்பர்கள் இரத்தபாலாவிடம் சென்றனர்_அவனுடைய பெற்றோர்கள் ஒப்புதல் அளித்து விட்டதை அவனுக்குக் கூறினர்_ஆனால் அவன் பிக்குவானதும் அவர்களை வந்து காணவேண்டும் எனக் கூறினர்.

20. அதன்படி, அவ்விளைஞன் எழுந்து, தன் நிலையுற்று, புத்தரிடம் சென்றான். வந்தனைக்குப் பின், ஓர்புறம் அமர்ந்து உரைத்தான்: "நான் என் பெற்றோர்களின் சம்மதத்தைப் பெற்றுவிட்டேன். என்னை இணைத்துக் கொள்ளும்படி ஐயன்மீரை வேண்டுகிறேன்."

21. புத்தரால் அவனுக்கு அனுமதியும் உறுதிப்பாடும் வழங்கப்பட்டது. அதன்பின் பதினைந்து நாட்கள் கழித்து புத்தர், அவர் விரும்பியவரை துள்ளகொத்திதாவில் தங்கியபின் தன் தானப் பயணத்தை ஷ்ராவஸ்திக்குத் தொடர்ந்தார்_ஆங்கு ஜேவதனத்தில் அநாதபிண்டிகரின் சோலையில் தங்கலானார்.

22. தனிமையில், விலகி, முயற்சி மிக்கவராய், திறனுடையவராய் அகந்தையை அகற்றி, போற்றுதலுக்குரிய இரத்தபாலா மிக விரைவிலேயே_அவ்வளவு இளமைக்குக் கடினமான இல்லந்துறத்தலை வென்று வாழ்வில் உயர்மகுடமான பேற்றுக் கெல்லாம் உயர்பேற்றைபப் பெற்றுவிட்டார்.

23. அதன் பின் அவர் புத்தரிடம் சென்று, வந்தனைக்குப்பின் ஓர் புறம் அமர்ந்து, புத்தரின் அனுமதியுடன், தாம் தம் பெற்றோரைக் காணச் செல்ல விரும்புவதாகக் கூறினார்.

24. இரத்தபாலாவின் இதய ஓட்டத்தைத் தம் மன ஓட்டத்தால் உணர்ந்த புத்தர், அவரால் தம்பயிற்சியைக் கைவிட்டு இல்லற நிலையை மீண்டும் ஏற்க இயலாதென நன்கறிந்து, அவரை இயலும்போது செல்ல விடைகொடுத்தார்.

25. அதன்பின், ஆழ்ந்த வந்தனத்துடன், இரத்தபாலா புத்தரிடம் விடைபெற்று, தன் படுக்கையை உரிய இடத்தில் வைத்துவிட்டு, துவராடையோடும், தானக்கலயத்தோடும் துள்ள கொத்திதாவிற்குத் தானப்பயணம் மேற்கொண்டு ஆங்கு குரு மன்னரின் மான்-சோலையில் தங்கினார்.

26. அடுத்த நாள் அதிகாலையில், உரியபடி துவராடை அணிந்து தானக்கலயம் கைகளியேந்தி, நகருக்குள் அவர் தானமேற்கச் செல்கையில், வீடு வீடாக அவர் கடந்து கொண்டிருக்கையில் சார்பேதுமின்றிச் சென்று, அவருடைய தந்தையின் வீட்டிற்கு வந்தார்.

27. உள்ளே, நடுக்கூடத்தில், அவருடைய தந்தை தலைவாரிக் கொண்டிருக்கையில் தூரத்தில் வந்து கொண்டிருந்த இரத்த பாலாவைக் கண்டு கூறலானார்."இந்த மழித்த தலையர்களே என்னுடைய அன்பார்ந்த ஒரே மகனைப் பிக்குவாக்கியவர்கள்."

28. எனவே, அவருடைய சொந்தத் தந்தையின் வீட்டிலேயே இரத்தபாலாவிற்கு தானமேதும் தரப்படவில்லை_அவர் பெற்றதெல்லாம் ஏச்சும் பேச்சும் தான்.

29. அந்தத் தருணத்தில், அக் குடும்பத்தின் ஒரு அடிமைப் பெண் முந்திய நாளின் பழஞ்சோற்றை வீசி எறிவதற்காக வெளியே வந்தாள். அவளிடம் இரத்தபாலா கூறினார்: "சகோதரியே! அது எறிவதற்குத்தான் எனில் அதை இங்கே கலயத்தில் போடுங்களேன்."

30. அந்தப் பெண் அவ்வாறே செய்கையில், அவருடைய கை கால்களை, குரலை அடையாளம் கண்டு கொண்ட அவள் நேரே தன் எஜமானியிடம் சென்று கூவினாள்: "அம்மணி! உங்களுக்குத் தெரியும்! நம் சின்ன எஜமானர் திரும்பி வந்திருக்கிறார்."

31. "நீ கூறவது உண்மையாயிருப்பின், நீ இனி அடிமையில்லை" என்றாள் அன்னை - தன் மகன் திரும்பிவிட்டதாகத் தான் கேட்ட செய்தியைத் தன் கணவனிடம் கூற விழைந்தாள்.

32. இரத்தபாலா, வேலியோரம் பழஞ்சோற்றை உண்டு கொண்டிருக்கையில் தந்தை வந்து கூவினார்: "என் அன்பு மகனே! இது இப்படியும் நடக்குமா? நீயா பழஞ்சோற்றை உண்பது? உன சொந்த வீட்டிற்குள் நீ வரக் கூடாதா?"

33. இரத்தபாலா கூறினார், "இல்லறத்தாரே! இல்லந்துறந்த நாங்கள் _இல்லத்தை விட்டுத துறவி மேற்கொண்ட நாங்கள் எங்கள் வீடென எதைக் கொள்ள முடியும்? நான் உங்கள் வீட்டிற்கு வந்தேன். ஆங்கு எனக்கு ஏதும் தரப்படவில்லை_மறுப்புகூடக் கூறப்படவில்லை_நான் பெற்றதெல்லாம் ஏச்சும்பேச்சும் தான்."

34. "வா! என் மகனே! நாம் உள்ளே போகலாம்" "அவ்வாறில்லை இல்லறத்தாரே! இன்றைய என் உணவை நான் உண்டு முடித்துவிட்டேன்." என்றார் இரத்தபாலா.

35. 'அப்படியாயின் மகனே இங்கு உம் உணவை நாளை நீர் ஏற்க உறுதிகூறுங்கள்.'

36. மவுனத்தின் மூலம் போற்றுதலுக்குரிய இரத்தபாலா தம் சம்மதத்தைத் தெரிவித்தார்.

37. அதன் பின் தந்தை உள்ளே சென்றார்_முதலில் அவா தங்கக் காசுக் குவியல்களை, வெள்ளிக் காசுக் குவியல்களைப் பாய்களுக்குக் கீழ் மறைத்து வைக்கும்படி ஆணையிட்டார். அதன் பின் தன் மகனின் ஒருகால மனைவிமார்களான தம் மருமகள்களை அழைத்து அவர்களின் கணவன் காண விரும்பத் தக்க வண்ணம் மிகச் சிறப்பாக அவர்களை அலங்கரித்துக் கொள்ளச் சொன்னார்.

38. இரவு கடந்தபின், தந்தை, அவருடைய வீட்டில் மிகச்சிறந்த அறுசுவை உணவுகளைத் தயாரிக்கச் சொல்லி ஆணையிட்ட பின், அவை தயாரானவுடனே, தன் மகனுக்குத் தெரிவித்தார். அந்த முற்பகலின் முற்பகுதியில், போற்றுதலுக்குரிய இரத்த பாலா, உரியபடி துவராடை அணிந்து தானக்கலயம் கைகளிலேந்தி, அவருக்காக இடப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார்.

39. அதன்பின், பொற்காசுக் குவியல்களைத் திறந்து காட்டிய தந்தை கூறினார்: "இவை உன் தாயின் சொத்துக்கள் _அவை உன் தந்தையின் சொத்துக்கள்_அதோ அவை உன் பாட்டனிடமிருந்து வந்தவை. இவைகளைக் கொண்டு நீ இங்கிருந்தபடியே மகிழ்ச்சியை அனுபவிக்கவும் நன்மைகள் புரியவும் செய்யலாமே."

40. "வா! என் மகனே! துறவுப் பயிற்சியைக் கைவிட்டு விடு இல்லறததானின் தாழ்நிலை வாழ்வை ஏற்றுக்கொள். உன் செல்வத்தை அனுபவித்துக்கொண்டே நற்செயல்களையும் செய்."

41. "என்னுடைய அறிவுரையை நீங்கள் ஏற்றுக் கொள்வதாயின், இல்லறத்தோரே! நீங்கள் உங்கள் செல்வக்குவியல் யாவற்றையும் வண்டியில் ஏற்றிச் சென்று கங்கையாற்றின் நடுவே மூழ்கடித்து விடுவீர்கள், பின் ஏன்? ஏனெனில் அதன் பின் நீங்கள் துன்பத்தை, துயரத்தை, கவலையை வேதனையை, மனம், உடல், இடுக்கண் ஆகியவற்றிலிருந்து மட்டுமே பெறுவீர்கள்."

42. "போற்றுதலுக்குரிய இரத்தபாலாவின் ஒருகாலத்திய மனைவியர்கள, அவர் எந்தத் தேவலோக மங்கையரின் உறவுநாடி அவர் இந்தத் துறவினை மேற்கொண்டார் எனக் கேட்டனர்."

43. "சகோதிரிகளே! எந்தத் தேவலோக மங்கையர்காகவும் அன்று" என்றார் அவர்.

44. தங்களை அவர் சகோதரிகளே என அழைக்கக் கேட்ட அந்தப் பெண்டிர்கள் அனைவரும் மயங்கித் தரையில் வீழ்ந்து விட்டனர்.

45. இரத்தபாலா அவருடைய தந்தையிடம் கூறினார்: "இல்லறத்தாரே! உணவு தரப்படுவதாயின் தாருங்கள்_என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்."

46. "என் மகனே! உணவு தயாராயுள்ளது: தொடங்குவோம்." என்று கூறிய தந்தை குறையேதுமின்று அவருடைய மகனுக்கு வயிறார சிறந்த உணவைப் பரிமாறினார்.

47. உணவேற்றபின், குரு மன்னனின் மான்_சோலைக்குச் சென்று, ஆங்கு அந்தப் பகல்வெயில் நேர்த்தில் ஓர் மரத்தடியில் அமர்ந்தார்.

48. அப்போது மன்னர் தம் சேவகனை அழைத்து அந்தச் சோலையைத் தாம் வந்து காணத்தக்கதாக சீர் செய்யும்படி ஆணையிட்டார்; பணிவுமிக்க சேவகன் ஆங்குச் சென்று, தமக்கிட்ட பணியைச் செவ்வனே செய்கையில், இரத்தபாலா ஒரு மரத்தடியில் அப்பகல் வெயில் நேரத்தில் அமர்ந்திருப்பதைக் கண்ணுற்று, அந்தச சோலையில் அனைத்தும் சீராகவே உள்ளதெனினும், ஒரு மரத்தடியில் இரத்தபாலா என்னும் இளைஞர் அமர்ந்திருக்கிறார் எனவும் அரசரிடம் தெரிவித்தார். மேன்மை மிகு அரசர் அவரைப் பற்றி அடிக்கடி கேள்விப்பட்டுள்ளார்.

49. "சோலையைப் பற்றி இன்று கவலைப் படவேண்டாம்." அரசர் கூறினார்: "இன்று அந்தப் போற்றுதலுக்குரியரை நான் சந்திக்கவுள்ளேன்." எனவே, முறைப்படி பயண ஏற்பாடுகள் ஆணைப்படி செய்யப்பட்டது. நகரை விட்டுத் தேரேறி ஒரு இராஜ உலா புறப்பட்டு இரத்தபாலாவைக் காணக் சென்றார் மன்னர்.

50. தேர் செல்லத்தக்க இடம் வரை சென்ற பின், தன் அரசப்பரிவாரங்களுடன் நடந்து சென்ற மன்னர் இறுதியில் போற்றுதலுக்குரிய இரத்தபாலா இருக்குமிடத்தை அடைந்து, கனிவான வந்தனங்களைப் பரிமாறிக் கொண்ட பின்னும் மன்னர் நின்று கொண்டேயிருக்க பூமெத்தை மீதமரும்படி வேண்டிக் கொள்ளப்பட்டார்.

51. "இல்லை ஐயன்மீர்! தாங்கள் அதில் அமருங்கள், எனக்கு இங்கோர் இருக்கை உள்ளது."

52. அளிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்த பின் மன்னர் உரைத்தார்: "இரத்தபாலரே! ஒரு மனிதர் தம் தலைமுடியையும், தாடியையும் மழித்துக் கொள்ளவும்,துவராடை அணிந்து கொள்ளவும், இல்லம் துறந்து துறவறமேற்கவும் தூண்டுவனவாக நான்கு இழப்புக்கள் உள்ளன_அவையாவன 1. முதுமை, 2. உடல்நலக்கேடு, 3. வறுமை, மற்றம் 5. உறவுடையாரின் மரணம்."

53. "எடுத்துக்காட்டாக, ஒரு முதிய மனித்ர், வயதால் முதிர்ந்தவர், ஆண்டுகள் கடந்தவர், வாழ்வின் இறுதிப்பருவத்தில், தன்னிலையை உணர்ந்து, புதிய செல்வம் சேர்ப்பதில் உள்ள கடினத்தையும், இருப்பதைப் பேணுவதில் உள்ள கடினத்தையும் அறிந்து, இவ்வாறாக அவர் துறவை மேற்கொள்ளத் தீர்மானிக்கிறார். இது முதுமையால் தூண்டப்படும் இழப்பென அறியப்படுகிறது. ஆனால், இங்கே தாங்களோ, ததும்பும் இளமையில், தக்க மனிதப் பருவத்தில், நரை தீண்டப்படாதகரிய முடிச்செல்வமும், இளமையின் முழுப் பொலிவும் உடையவராயிருக்கிறீர்கள் _ உங்களுக்கு முதுமை தரும் இழப்பேதும் ஏற்படவில்லை. தாங்கள் கண்ட, அறிந்த, கேட்ட எது தங்களை இத்துறவை மேற்கொள்ளுமாறு செய்தது."

54. "அல்லது, பிணிவாய்ப்பட்ட ஒரு மனிதரை எடுத்துக்கொள்வோம்_அவர் மிகக் கடுமையான பிணியால் தாக்கப்பட்டுள்ளார்_தன்நிலையை அவர் உணர்ந்து தம்மால் புதிய செல்வம் தேட இயலாதென்றும், ஏற்கனவே உள்ளதையே பேண இயலாதென்றம், அவர் உணாந்து துறவு மேற்கொள்ள முடிவெடுக்கிறார். இது உடல்நலக்கேட்டால் எழும் இழப்பென அறியப்படுகிறது. ஆனால், இங்கு நீங்கள் நோய்வாய்ப படவுமில்லை_வெப்பமோ குளிரோ உம்மைத் தாக்கவுமில்லை, உடல்நலக் கேடெனும் இழப்பேதும் உங்களுக்கில்லை. தாங்கள் கண்ட, கேட்ட, அறிந்த எது தங்களைக் துறவு மேற்கொள்ளச் செய்தது.?"

55. அல்லது வளம்மிக்கவராய், செல்வந்தராய், வசதியானவராய் இருந்த ஒருவரை எடுத்துக் கொள்வோம். அவர் படிப்படியாக அவற்றையெல்லாம் இழந்து, தன் நிலையை உணர்கிறார். தம்மால் புதிய செல்வம் தேடுவது கடினமென்றும், தாம் கொண்டிருந்ததைக் காக்க இயலவில்லையென்றும் உணர்கிறார். அவர் ஒரு துறவுப்பயணியாய்ப் போக முடிவெடுக்கிறார். இது வறுமையால் எழும் இழப்பென அறியப்படுகிறது. ஆனால் போற்றுதலுக்குரிய இரத்தபாலரோ, இந்த துள்ளகொத்திதாவின் செல்வ வளமிக்க ஒரு முன்னணிக் குடும்பததைச் சார்ந்தவரின் மகன். மேலும் போற்றுதலுக்குரிய இரத்தபாலருக்கோ செல்வ இழப்பு ஏதுமில்லை, நன்று, இரத்தபாலர் கண்ட கேட்ட, அறிந்த எது அவரை இல்லம் துறந்து துறவு மேற்கொள்ளச்செய்தது?

நன்று, இரத்த பாலரே! உறவினர்களின் இழப்பு என்பது யாது? நன்று, இரத்தபாலரே! ஒருவர் அனேக நண்பர்களையும், அறிமுகமானவர்களையும், உற்றார் உறவினர்களையும் பெற்றிருக்கிறார்; ஆனால் அவரது இவ்வுறவினர்கள் படிப்படியாகக் குறைகிறார்கள். இவ்வாறாக அவர் உணர்கிறார்: 'முன்பு நான் அனேக நண்பர்களையும், அறிமுகமானவர்களையும், உற்றார் உறவினர்களையும் பெற்றிருந்தேன்; ஆனால் எனது இவ்வுறவினர்கள் படிப்படியாகக் குறைந்திருக்கிறார்கள்; ஆகவே, செல்வத்தை சேர்ப்பது போன்றவை... எனக்கு எளிதல்ல.' இவ்வாறாக உறவினர்களின் இழப்பு அவரைத் தொடர்ந்ததால், அவர் தம் தலைமுடியையும், தாடியையும் மழித்து_துவராடை அணிந்து, இலலம் துறந்து துறவறமேற்கிறார்.

இது உறவுடையாரின் மரணத்தால் எழும் இழப்பென அறியப்படுகிறது. ஆனால் தங்களுடன் நண்பர் கூட்டமும், உறவினர் கூட்டமும் நிறையவே உள்ளது. தங்கள் உற்றார் உறவினர் யாரையும் நீங்கள் இழக்கவுமில்லை. அவ்வாறிருக்க தாங்கள் கண்ட, கேட்ட, அறிந்த எது தங்களைத் துறவு மேற்கொள்ளச் செய்தது?

56. இரத்தபாலா பதிலிறுத்தார்: "ஐயன்மீர்! நான் இல்லத்தைத் துறந்து துறவறமேற்கொண்டதன் காரணம் யாதெனில், பூரண_மெய்யறிவு பொலிந்த, அனைத்தும் அறிந்த, கண்ட உயர்வெய்திய புத்தர் போதித்த கீழ்க் கண்ட நான்கு மெய்க்கூற்றுக்களைக் கண்டு, கேட்டு, அறிந்ததனால்தான்."

1. உலகமென்பது இடையறாது இயங்கிக் கொண்டும் மாறிக் கொண்டும் உள்ளது.

2. உலகிற்குப் பாதுகாவலரோ, பேணுபவரோ ஒருவரும் இல்லை.

3. நமக்குரியது ஏதுமில்லை_நமக்குப்பின் நாம் அனைத்தையும் விட்டுச் செல்கிறோம்.

4. உலகம் குறைபாடுடையதாய், ஆசை மிக்கதாய், அடிமையாய் அவாவுற்றதாய் உள்ளது.

57. "இது ஆச்சரியமானது! இது அற்புதமானது!" புத்தர் தான் எத்துணை சரியானவராக உள்ளார்! என்று வியந்தார் மன்னர்.

## இல்லம் திரும்ப அழைப்பு

### 1. சுத்தோதனரும் இறுதிச் சந்திப்பும்.

1. சாரிபுத்ரர், மொக்கல்லான ஆகியோரின் சமயமற்றத்திற்குப்பின், புத்தர் இரண்டுமாதங்களுக்கு இராஜகிருஹத்திலேயே தங்கினார்.

2. இராஜகிருஹத்தில் புத்தர் தங்கியிருப்பதாகக் கேள்விப்பட்ட, அவருடைய தந்தை சுத்தோதன், "நான் இறப்பதற்குள்" என் மகனைப் பார்க்க விரும்புகிறேன். அவருடைய தத்துவங்களின் பயனை மற்றவர்களெல்லாம் பெறுகிறார்கள்_ஆனால் அவருடைய தந்தையோ, உறவினரோ பெறவில்லையே" என்று அவருக்குச் செய்தி அனுப்பினார்.

3. செய்தி அனுப்பப்பட்ட மனிதர் சுத்தோதனரின் அரசவை உறுப்பினர் ஒருவரின் மகனான கலுதாயின் என்பவராவார்.

4. வந்துற்ற செய்தியாளர் கூறினார்: "ஓ! உலகப்புகழ்பெற்ற ததாகதரே! தங்கள் தந்தை தங்களுக்காகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்_சூரியனின் வரவை எதிர்பார்க்கும் கமலமலர் போல்."

5. உயர்வெய்தி புத்தர், அவருடைய தந்தையின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, அவருடைய தந்தையின் இல்லத்திற்கு, சீடர்களின் பெரும்பரிவாரத்தோடு பயணம் மேற்கொண்டார்.

6. புத்தர் மெதுவாகப் பயணித்தார். ஆனால் கலுதாயின் முன்னமே சென்று சுத்தோதனரிடம், உயர்வெய்திய புத்தரின் வருகையை அறிவிப்பதற்காகச் சென்றார்.

7. விரைவிலேயே, சாக்கிய தேசத்தில் செய்தி பரவியது. "இல்லறத்தை விட்டுத் துறவறம் மேற்கொண்டு, பூரண மெய்யறிவு எய்திய, தன் இலக்கை அடைந்துவிட்ட இளவரசர் சித்தார்த்தர் கபிலவஸ்துவில் உள்ள தம் வீட்டிற்கு வருகிறார்." ஒவ்வொருவர் இதழிலும் இச்சொற்களே மிளிர்ந்தன.

8. சுத்தோதனரும், மஹாபிரஜாபதியும் அவர்கள் தம் உற்றார் உறவினருடனும், அமைச்சர்களடனும், தம் மகனைச் சந்திக்க வெளியே வந்துற்றார்கள். தூரத்தில் அவர்கள்தம் மகனை அவர்கள் கண்டபோதே, அவர்கள் அவருடைய அழகாலும், பெருமைமிக்க தோற்றத்தாலும், புகழ்மிக்க வடிவினாலும் ஈர்க்கப்பட்டு, மனம்மிக மகிழந்தார்கள்_ஆனால் இருவரும் ஒரு சொல்லும் பேசவியலா நிலையுற்றார்கள்.

9. உண்மையில் இது அவர்களுடைய மகன்தான்; இவைகளே சித்தார்த்தரின் அமைப்பாயிருந்தன. மாபெரும் சாமணர் அவர்களுக்கு எவ்வளவு நெருக்கமாயிருந்தார்_ஆனால் அவர்களிடை எத்தனை தூரம்! அந்த உன்னத முனிவர் இப்போது அவர்கள் தம் மகன் சித்தார்த்தர் அல்ல. இப்போது அவர் புத்தர்_உயர்வெய்திய புத்தர்_பூரணமெய்யறிவு பொலிந்தவர்_மெய்மையின் தலைமகன்_மனிதகுலப் போதகர்!.

10. கத்தோதனர் தம் மகனின் சமயப் பெருமையைக் கருத்தில் கொண்டு, தேரினின்று இறங்கி முதலில் அவருக்கு வந்தனம் செலுத்தி உரைக்கலானார்: "நாங்கள் உங்களைக் கண்டு ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்தக் கணத்திற்காக நாங்கள் எவ்வளவு ஏங்கியிருக்கிறோம்?"

11. புத்தர் தன் தந்தைக்கு எதிரே ஒரு இருக்கையில் அமர்ந்து கொண்டபோது, மன்னர் தம் மகனை மிக்க ஆர்வத்துடன் நோக்கினார். அவரைப் பெயரிட்டு அழைக்க விழைந்தார் எனினும் அவர் அதற்குத் துணியவில்லை. அவர் மனத்திற்குள் 'சித்தார்த' என்று முனுமுனுத்துக் கொண்டார். 'சித்தார்த்_ உன் முதிய தந்தையிடம் திரும்பி அவர் மகனாக மீண்டும் ஆகிவிடு. ஆனால், தனயனின் தீர்மானத்தைக்கண்டு, தன் உணர்ச்சியைத் தணித்துக் கொண்டார். அவர் மீதும் மஹா பிரஜாபதி மீதும் தனிமையின் நிழல் படிந்தது.

12. இவ்வாறாக தந்தை மகனின் முகத்தெதிர் அமர்ந்து துக்கத்தில் மகிழ்வுற்றும், மகிழ்ச்சியில் துயருற்றும் துடித்தவாறிருந்தார். அவர் தம் மகனைப் பற்றி மிகு பெருமிதம் கொள்ளலாம்_ஆனால் அவர்தம் பெருமிதம், அவருடைய வாரிசாய் அவருடைய பெருமகன் எப்போதும் இரார் என்ற நினைவால் உடைத்து சிதறியது.

13. "நான் என்னுடைய அரசாட்சியை உமக்கு அளிக்கிறேன்." என்றார் அரசர். ஆனால், "அவ்வாறு செய்வேனேயானால் அதைத் தாங்கள் வெறும் சாம்பலாகவே கருதுவீர்கள்."

14. அதற்கு புத்தர் கூறினார்: "அரசரின் உள்ளம் அன்பால் நிரம்பத் தளும்புகிறது என்று நான் நன்கறிவேன். அவர் தன்னுடைய மகன் பொருட்டு மெத்தவும் துயருறுகிறார் என்பதையும் நான் அறிவேன். ஆனால் உங்களால் இழக்கப்பட்ட மகனோடு உங்களை இணைக்கிற பேரன்புடன் அதே அளவுநேயத்தை உங்கள் உடனுறைபவர்கள்பால் செலுத்துவீராக. அந்த மகனுடைய இடத்தில் சித்தார்த்தரை விடப் பெரிய ஒருவரை உங்களால் இப்போது வரவேற்க முடிகிறது: இப்போது நீங்கள் நன்னெறி நடத்தையின் போதகரை, அமைதியையும், நிப்பானத்தையும் கொணர்பவரை, தங்கள் இதயத்தில் குடியேற்றுகிறீர்கள்.

15. சுத்தோதனர் மகிழ்ச்சியால் துடிக்கலானார்_அவருடைய மகனின் இன்னிசைக் குரலில் புத்தரின் சொற்களைக் கேட்டு, குவிந்த கரங்களுடன், கண்ணீர் மழைபொழியும் கண்களுடனும் வியந்துரைத்தார்: "இந்த மாற்றம் அற்புதமானது! பொங்கி வழியும் துன்பம் பொசுங்கிப் போயிற்று முதலில் என் துயருற்ற இதயம் கனத்து இருந்தது. ஆனால் இப்போது தங்களின் மாபெரும் துறவின் பெரும்பயனை நான் சுவைக்கிறேன். தங்களின் வலிய இரக்கத்தால், தாங்கள் ஆட்சியதிகார சுகத்தைத் துறந்து, சமய மேம்பாடெனும் உன்னத நோக்கை அடைந்தது சரியேயாகும், சரியான வழியைக் கண்டறிந்து கொண்டபின், இப்போது தாங்கள் தங்கள் தம்மத்தை, விடுதலை தேவைப்படும் அனைவர்க்கும் போதிக்க முடியும்."

16. புத்தர் அச்சோலையில் தம் பரிவாரத்தோடு தங்கியிருக்கையிலேயே சுத்தோதனர் தம் இல்லத்திற்குத் திரும்பினார்.

17. அடுத்த நாள் காலை, உயர்வெய்திய புத்தர் தம் தானக்கலயத்தை ஏந்தி தான உணவுக்காக கபிலவஸ்துவுக்குப் புறப்பட்டார்.

18. "சித்தார்த்தர் வீடு வீடாகச் சென்று நகரத்தில், தான் உணவு பெற்றுக் கொண்டிருக்கிறார். அவ்விடங்களில்தான் அவர் சேவகப்பரிவாரங்கள் புடை சூழத் தேரில் பவனி வந்து

கொண்டிருந்தார். அவர் துவராடை செங்கறை படிந்ததாய்த் தோன்றுகிறது _அவர் கையில் மண்சட்டியே கலயமாய் உள்ளது" என்னும் செய்தி பரவியது.

19. இந்த நூதனமான செய்தி பாவியவுடன், சுத்தோதனர் விரைந்து சென்று வினவினார்: என்னை ஏன் இப்படி இழிவு படுத்துகிறீர்கள். நான் மிக சுலபமாகவே உங்களுக்கும் உங்கள் பிக்கு பரிவாரத்துக்கும் வேண்டிய உணவை அளிக்கமுடியும் என்று உங்களுக்குத் தெரியுமா?

20. புத்தர் பதிலிறுத்தார்: "இது என்னுடைய சங்கத்தின் முறைமையாகும்."

21. "ஆனால் அது எப்படி முடியும? நீங்கள் அவர்களில் ஒருவர் அல்லவே. எப்போதும் நீங்கள், இரந்துண்ணும் நிலையில் இருந்தவர் அல்லவே."

22. "ஆமாம் தந்தையே!" புத்தர் தொடர்ந்தார்: "தாங்களும் தங்கள் பரம்பரையும் அரச வம்சத்தினர் என உரிமை கோரலாம். ஆனால், நா ான் பண்டைய புத்தர்களிலிருந்து வந்தவன். அவர்கள் தம் உணமைவத் தானமேற்றே எப்போதும் உண்டவர்களாவர்."

23. சுத்தோதனர் பதிலேதும் கூறவில்லை. உயர்வெய்திய புத்தர் தொடர்ந்தார்: "ஒருவன் புதைந்துள பொக்கிஷத்தைக் கண்டெடுப்பாராயின் அவர், அவற்றில் மிகவும் மதிப்புளதான அணிகலனை அவர்தம் தந்தைக்கு அளிப்பது வழக்கமாகும். எனவே, தம்மமெனம் இந்த பொக்கிஷத்தைத் தங்கட்கு நான் வழங்கும் பொருட்டுத் தாங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள்."

24. உயர்வெய்திய புத்தர் தந்தையிடம் கூறினார் "தாங்கள் தங்கள் கனவுகளிலிருந்து விடுபடுவீர்களாயின், தங்கள் மனத்தை உண்மைக்கெனத் திறந்து வைப்பீர்களாயின், தாங்கள் ஆற்றலுடையவராயின், தாஙகள் நன்னெறி நடத்தையை நடைமுறைப்படுத்துவீராயின், தாங்கள் அழியா இன்பம் எய்தியவராவீர்கள்."

25. இச்சொற்களை அமைதியாய்க் கேட்டுக் கொண்டிருந்த சுத்தோதனர் பதிலிறுத்தார்: "என் மகனே! உங்கள் வார்த்தைகளனைத்தையும், முழுமையாய்ச் செயல்படுத்த நான் முனைவேன்."

## 2. யசோதராவையும் இராகுலனையும் சந்தித்தல்.

1. அதன்பின் சுத்தோதனர் உயர்வெய்திய புத்தரை அவருடைய வீட்டிற்குள் அழைத்துச் சென்றார். குடும்பத்தவர் அனைவரும் அவரை மிகுந்த வணக்கத்துடன் வரவேற்றார்கள்.

2. ஆனால், இராகுலனின் தாய் யசோதரா வெளியே வரவேயில்லை, சுத்தோதனர் யசோதராவை அழைக்க ஆளனுப்பினார்_ஆனால் அவர் பதிலிறுத்தார்:

"பொருட்படுத்தப்படத்தக்கவளாய் நான் இருப்பேனாயின், நிச்சயமாக சித்தார்த்தர் என்னை வந்து காண்பார்."

3. உயர்வெய்திய புத்தர், அவருடைய உறவினர், நண்பர்கள் அனைவரையும் நலம் விசாரித்த பின்னர் வினவினார்: "யசோதரா எங்கே?"_அவர் வர மறுத்துவிட்டதாகத் தெரிவிக்கப்பட்டதும், அவர் எழுந்து நேராக யசோதராவின் இருப்பிடத்திற்குச் சென்றார்.

4. அவருடன் யசோதராவின் இருப்பிடத்திற்கு வர அவரால் பணிக்கப்பட்ட சீடர்களான சாரிபுத்ரர், மொக்கலன்னா ஆகியோரிடம் உயர்வெய்திய புத்தர் கூறினார்: "நான் சுதந்திரமாய் உள்ளேன். ஆனால், யசோதரா இன்னும் சுதந்திரமடையவில்லை. என்னை நெடுங்காலம் காணாமையால் அவர் எல்லையில்லாத் துன்பம் எய்தியிருக்கிறார். அவருடைய வேதனை அதன்போக்கில் வடிய விடப்படவில்லையாயின், அவர் இதயம் வெடித்துவிடும். மெய்யறிவுற்ற ததாகதரை அவர் தொடநேர்ந்தால், நீங்கள் அவரைத் தடுக்க வேண்டாம்."

5. யசோதரா, அவருடைய அறையில் ஆழ்ந்த சிந்தனையோடு அமர்ந்திருந்தார். உயர்வெய்திய புத்தர் உள்ளே வந்தபோது, தன் பாசப்பெருக்கால், நிரம்பித் ததும்பும் பாத்திரம் போல் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல் தவித்தார்.

6. அவர் நேசித்த மனிதர் உலகத்தலைவராய், மெய்ப்பொருள் போதகராய், புத்தராய் உள்ளார் என்பதை மறந்து அவருடைய பாதங்களைப் பற்றிக் கொணடு ஓலமிட்டு அழுதார்.

7. இருப்பினும் சுத்தோதனர் உடனிருப்பதை நினைவிற்கொண்டு, அவர் வெட்கப்பட்டு, எழுந்து சற்றுத்தூரத்தில் பணிவுடன் அமர்ந்து கொண்டார்.

8. சுத்தோதனர் யசோதரைக்காக மன்னிப்பு கேட்டார்: "இது அவளுடைய ஆழ்ந்த பாசத்தினால் விளைந்தது, இது தற்காலிக உணர்ச்சி வேகமன்று. தான் தன் கணவரை இழந்து தவிக்கும் ஏழாண்டுகளில், சித்தார்த்தர் தம் தலையை மழித்துக் கொண்டார் எனக் கேள்விப்பட்ட போதும் அவள் இப்படித்தான் செய்தாள்; அவர் நறுமணத் திரவியங்களையும், ஆபரணங்களையும் கைவிட்டார் எனக் கேள்விப்பட்ட போது, அவளும் அவற்றைப் பயன்படுத்துவதைக் கைவிட்டு விட்டாள். அவளும், அவளுடைய கணவரைப் போலவே குறிப்பிட்ட வேளைகளில் மண்கலயத்திலேயே உணவுண்கிறாள்."

9. "இது தற்காலிக உணர்ச்சி மேலீடல்லவெனில், ஆற்றல் குறைவுமன்று."

10. உயர்வெய்திய புத்தர் யசோதராவிடம் உரையாடினார். தாம் பரிவ்ராஜகம் ஏற்றபோது, யசோதரா காட்டிய பெரும் ஆற்றலையும், அவர்தம் பெரும் பேறுகளையும் புகழ்ந்துரைத்தார். அவர்தம் தூய்மை, பெருந்தன்மை, நேயம் ஆகியவை போதிசத்வர் என்ற வகையில் தமக்கு விலைமதிப்பற்றதாயிருந்தமையைத் தெரிவித்தார். மனிதகுல விடுதலை என்னம் தம் இலட்சியத்திற்கு அவை எத்துனை உதவியாயிருந்தனவென வியந்துரைத்தார். அப்போது

இதுவே யசோதராவின் செயலாய் இருந்ததெனவும் இது அவருடைய நற்பேறுகளின் விளைவு என்றும் தெரிவித்தார்.

11. யசோதராவின் துன்பம் சொல்லொணாததாய் இருந்தது. தம் வாழ்வு முழுதும் தாம் கொண்டிருந்த உன்னதத் தன்மைகளால் அதிகரிக்கப்பட்ட உன்னதப் பாரம்பரியப் புகழை இந்தப் பெருமிதம் சூழ்ந்து, அவரை இணையிலாப் பெண்மணியாய் ஆக்கியது.

12. அதன்பின், அப்போது ஏழுவயதாகியிருந்த இராகுலனுக்கு ஓர் இளவரசனுக்குரிய ஆடம்பர உடைகளை அணிவித்து, யசோதார அவனிடம் கூறினார்:

13. "இதோ இந்தத் துறவி_மிக உயர்ந்த பிரம்மாவைப்போல் தோன்றம் இந்தப் பெருமைமிகு மாமனிதர்தான் உன்னுடைய தந்தை. நான் இதுவரை ஒருபோதும் காணாத மாபெரும் செல்வச் சுரங்கம் உடையவராய்த் திகழ்கிறார் இவர். அவரிடம் சென்று அச்செல்வத்தின் வாரிசுரிமையை உனக்கு வழங்கும்படிகேள். ஏனெனில் தந்தையின் செல்வம் மகனுக்குத்தானே சேரவேண்டும்."

14. இராகுலன் பதிலிறுத்தான்: "யார் எனது தந்தை? சுத்தோதனரைத் தவிர வேறொரு தந்தையை நானறியேயே."

15. யசோதரா தம் மகனை எடுத்து அரவணைத்து, ஜன்னல் வழியாக அருகில் இருக்க நேர்ந்த, பிக்குகளிடையே உணவருந்திக் கொண்டிருந்த புத்தரைச் சுட்டிக்காட்டி, அவர்தான் அவனுடைய தந்தை என்றும், சுத்தோதனர் அல்லவென்றும் அவனுக்குத் தெரிவித்தார்.

16. அதன் பின் இராகுலன் அவரிடம் சென்று, அவர் முகத்தை நோக்கி, அச்சமின்றி, மிகுந்த பாசத்துடன் கூறினார்:

17. "தாங்கள் என் தந்தையல்லவா?" மேலும், அவரருகே நின்று அவன் கூறினாான்: "ஓ? சாமணரே? உங்கள் நிழல்கூட இன்பளிப்பதாயுள்ளது!" உயர்வெய்திய புத்தர் அமைதியாயிருந்தார்.

18. "ததாகதர் உணவுண்டு முடிந்தபின், தம் வாழ்த்துதலைத் தெரிவித்துவிட்டு அரண்மனையை விட்டுச் சென்றார்_ஆனால் இராகுலன் அவரைப்பின் தொடர்ந்து சென்று தனக்குரிய வாரிசுரிமைச் சொத்தைக் கேட்டான்."

19. அச்சிறுவனை யாரும் தடுக்கவில்லை _உயர்வெய்திய புத்தர் தாமும் தடுக்கவில்லை.

20. அதன்பின் உயர்வெய்திய புத்தர் சாரிபுத்ரரிடம் திரும்பி உரைத்தாா: "என் மகன் தனக்குரிய வாரிசுரிமைச் சொத்தைக் கேட்கிறான். சுமையையும் துன்பத்தையும் கொணர்கிற, அழியக் கூடிய செல்வங்கள் எதையும் என்னால் அவனுக்குத் தரவியலாது_ஆனால் நான் அவனுக்குத் தூயவாழ்க்கை நெறியை_அழியாத செல்வமாமதை அவனுக்கு வாரிசுரிமைச் சொத்தாய் வழங்க முடியும்."

21. கவனமாக இராகுலனை விளித்தபடி உயர்வெய்திய புத்தர் உரைத்தார்: "தங்கமோ, வெள்ளியோ, ஆபரணங்களோ ஏதொன்றும் என்னிடமில்லை. ஆயினும், தூயவாழ்வுக்குரிய நற்செல்வங்களை நீ என்னிடம் பெற விரும்புபவையாயின், அவற்றைக் கொண்டு செல்லவும்,காக்கவும் உனக்குப் பலமிருக்குமாயின், என்னிடம் அவை நிறையவே இருக்கின்றன. என் தூயவாழ்வுக்குரிய நற்செல்வம் என்பது நன்னெறி வாழ்க்கைப் பாதையேயாகும். மனத்தைப் பண்படுத்தவும், எய்துவனவற்றில் மிக உயர்ந்தனவாகிய பேரின்பத்தை எய்தவும் தம் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டுள்ள சோதரர் கூட்டத்தில் சேர்ததுக் கொள்ளப்படுவதை நீ விரும்புகிறாய?"

22. இராகுலன் உறுதியாகப் பதிலிறுத்தான்! "ஆம்! நான் அவ்வாறே விரும்புகிறேன்."

23. பிக்குகளின் சோதரர்க் கூட்டத்தில் இராகுலன் சேர்ந்து விட்டதைக் கேள்விப்பட்டபோது, சுத்தோதனர் மிகவும் துயருற்றார்.

3. சாக்கியர்களின் வரவேற்பு

1. தாம், சாக்கியர்களின் தேசத்திற்குத் திரம்பி வந்தபோது புத்தர், தம் தேசத்தவர் இரு கூறுகளாகப் பிரிந்திருப்பதைக் கண்டார். ஒரு கூறு அவருக்குச் சாதகமாக-மற்றொரு கூறு அவருக்கு எதிராக.

2. சாக்கியர் கோலியர் ஆகியோர்க்கிடையிலான போர்பற்றிய சர்ச்சை முன்பு சாக்கியசங்கத்தில் விவாதமாகி _ அதில் முக்கிய பாத்திரமாய் அவர் விளங்க நேர்ந்த அந்தப் பழைய கருத்து மோதல் இதனால் அவர் நினைவுக்குக் கொண்டுவரப்பட்டது.

3. அவருக்கு எதிரானவர்கள் இன்னமும் அவருக்குரிய மரியாதையை அளிக்கவோ, அவர் பெருமையை உணரவோ மறுத்தனர். அவருக்கு ஆதரவானவர்கள் வீட்டிற்கு ஒரு பிள்ளையை அளித்து அவருக்கான பரிவாரம் ஒன்றை அமைப்பதென ஏற்கனவே முடிவெடுத்துவிட்டனர். இவர்கள் இப்போது சங்கத்தில் சேர்ந்து இராஜகிஹம் நோக்கிய புத்தருடைய பயணத்தில் இணைந்து கொள்ளத் தீர்மானித்தனர்.

4. ஒரு பிள்ளையை அர்ப்பணிப்பது என முடிவெடுத்த குடும்பங்கில் ஒன்றாக சுக்லோதனரின் குடும்பம் இருந்துது.

5. சுக்லோதனருக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தனர். ஒருவன் அனுருத்தன் _ அவன் மிக மென்மையாக வளர்க்கப்பட்டவன்_மற்றொருவன் மஹாநாமா.

6. மஹாநாமா அனுருத்தனிடம் சென்று கூறினான்: "ஒன்று நீ உலகைத் துறந்துவிடு _ இல்லையென்றால் நான் அவ்வாறு செய்கிறேன்." அனுருத்தன் இதற்குப் பதிலிறுத்தான்:

"நான் மென்மையானவன். இல்லற வாழ்விலிருந்து துறவாழ்வுக்குச் செல்ல என்னால் இயலாது. நீ அவ்வாறு செய்."

7. "அப்படியாயின் கேள் அனுருத்தா! இல்லற வாழ்கின் இயல்புபற்றி நான் உனக்குக் கூறுகிறேன். முதலில் உன் நிலங்களை நீ உழுதல் வேண்டும். அது முடிந்தபின், நீ அவற்றில் விதைக்க வேண்டும். அத முடிந்தபின், அவற்றில் நீ நீர்பாய்ச்ச வேண்டும். அது முடிந்தபின், நீ பயிர் வளர்க்க வேண்டும். அது முடிந்தபின் நீ கதிர்களை அறுவடை செய்ய வேண்டும்.அது முடிந்தபின், நீ அவற்றைக் கட்டுகளாய்க் கட்ட வேண்டும். அது முடிந்தபின் நீ அவற்றை அடித்துத் தூற்றவேண்டும். அது முடிந்தபின், நீ அவற்றிலிருந்து வைக்கோலைப் பிரிக்க வேண்டும். அது முடிந்தபின், நீ அவற்றிலிருந்து பதர்களை நீக்க வேண்டும். அது முடிந்தபின், நீ அவற்றைப் பதப்படுத்த வேண்டும். அது முடிந்தபின், நீ அவற்றை அரைக்க வேண்டும். அது முடிந்தபின், இதையே நீ மறு ஆண்டும் செய்திட வேண்டும் _ இதுவே மீண்டும் _இதுவே ஆணடாண்டு தோறும்."

8. "இந்த வேலை எப்போதும் முடிவதில்லை. ஒருவன் உழைப்பின் பயனைக் காண்பதேயில்லை. ஓ! எபபோது நம் வேலை முடியும்? ஓ! எப்போது நாம் நம் உழைப்பின் பயனைக் காண்பது? இன்னமும் நாம் நம் ஐம்புலன்களின் இன்பத்தை உடையவராயிருந்து கொண்டும், தக்கவைத்துக் கொள்பவராய் இருந்து கொண்டும், எப்படி அமைதியாய் வாழ்வது? ஆம்! அன்புக்குரிய அனுருத்தாவே வேலை எப்போதும் முடிவதில்லை; நம் வேலைக்கான பலன் ஏதும் தோன்றவில்லை."

9. "அப்படியாயின் நீ இல்லறக் கடமைகள் பற்றிய பொறுப்பினை ஏற்றுக்கொள். நான் இல்லற வாழ்வைவிட்டு, துறவற வாழ்வை மேற்கொள்கிறேன்" என்றான் அனுருத்தன்.

10. அதன்பின் சாக்கியனான அனுருத்தன், அவனுடைய தாயிடம் சென்று கூறினாான். "அன்னையே! நான் இல்லற நிலையை விட்டுத் துறவற நிலைக்குச் செல்ல விரும்புகிறேன். அவ்வாறு செய்ய எனக்கு அனுமதி அளியுங்கள்."

11. அவன் அவ்வாறு கூறியதும், அவனுடைய தாய் சாக்கியனான அனுருத்தனக்குப் பரிலிறுத்தாள்: "அன்பான அனுருத்தனே! நீங்கள் இருவரும் எனக்கு அருமையான மக்கள். பாசத்திற்குரியவர்கள். உங்களில் எத்தீமையையும் நான் கண்டதில்லை. என் விருப்பத்திற்கு மாறாக, மரணத்தின் மூலமாக, ஒருநாள் உங்களிடமிருந்து பிரிவேன். ஆனால் நீங்கள் உயிரோடிருக்கும் போதே, நீங்கள் இல்லறவாழ்வை விட்டுத் துறவற வாழ்வை மேற்கொள்ள நான் எப்படி விரும்புவேன்?"

12. இரண்டாவது முறை அனுருத்தன் அதே வேண்டுகோளை முன்வைத்து அதே பதிலைப் பெற்றான். மூன்றாவது முறையும் அனுருத்தன் அதே வேண்டுகோளை தன் தாயிடம் முன்வைத்தான்.

13. அச்சமயத்தில் சாக்கிய இராஜாவான பத்தியா சாக்கியர்களை ஆண்டுவந்தார்; அனுருத்தனின் நண்பராவார். இது இவ்வாறிருக்க, இராஜாவால் உலகைத்துறக்க இயலாதென எண்ணி, அவளுடைய மகனிடம் கூறினாள்: "அன்பான அனுருத்தா! சாக்கிய இராஜா பத்தியா உலகைத் துறப்பாராயின், நீயும் அவருடன் செல்லலாம்."

14. அதன் பின் அனுருத்தன் பத்தியாவிடம் சென்று கூறினான்: "அன்பான நண்பனே! நான் உலகைத் துறப்பது உன்னால் தடைப்படுகிறது."

15. "அப்படியாயின் நண்பனே! அந்தத் தடை நீக்கப்படும். நான் உன்னோடிருக்கிறேன். உன் விருப்பப்படியே நீ உலகைத் துறப்பாயாக!"

16. "வா! அன்பான நண்பனே! நாம் இருவரும் ஒன்றாக உலகைத் துறப்போம்!"

17. "அன்பான நண்பனே! நீ அவ்வாறு துறவறம் மேற்கொண்டால்தான் நானும் மேற்கொள்ளலாம் என என் தாய் கூறுகிறாள். நீ இப்போதும் கூறியிருக்கிறாய். 'உன் துறவறம் என்னால் தடைப்படுமாயின், அந்தத் தடைகளை நான் தகர்த்தெறிகிறேன். உன்னோடு-நான் துறவறம் மேற்கொள்வேன்_நீ விரும்பியபடி.' அப்படியாயின், அருமை நண்பனே நாமிருவரும் உலகைத் துறக்கலாம் வா!"

18. "அன்பான நண்பனே! நீ அவ்வாறு துறவறம் மேற் கொண்டால்தான் நானும் மேற்கொள்ளலாம் என என் தாய் கூறுகிறாள். நீ இப்போதும் கூறியிருக்கிறாய். 'உன் துறவறம் என்னால் தடைப்படுமாயின், அந்தத் தடைகளை நான் தகர்த்தெறிகிறேன். உன்னோடு-நான் துறவறம் மேற்கொள்வேன்_நீ விரும்பியபடி.' அப்படியாயின், அருமை நண்பனே நாமிருவரும் உலகைத் துறக்கலாம் வா!"

19. அதற்கு, சாக்கிய இராஜா பத்தியா அனுருத்தனிடம் கூறினார், "நண்பனே, ஏழாண்டுகள் பொறுத்துக் கொள். ஏழாமாண்டு முடிவில் நாமிருவரும் உலகைத் துறக்கலாம்."

20. "என் அருமை நண்பனே! ஏழாண்டுகள் மிக நீண்டகாலம். என்னால் ஏழாண்டுகளுக்குப் பொறுத்துக் கொள்ள இயலாது."

21. பத்தியா வேண்டுகோளை ஆறாண்டுகளாகவும், படிப்படியாய், ஒராண்டாகவும், ஏழு மாதங்களாகவும் அப்படியே படிப்படியாய் ஒரு மாதமாகவும், பதினைந்து நாட்களாகவும் கூடக் குறைத்துக் கொண்டார். ஒவ்வொன்றக்கும் அனுருத்தன் "பொறுத்துக் கொள்ள இது நீண்டகாலம் என்றே பதிலிறுத்து வந்தான்."

22. அதன்பின் இராஜா கூறினார்: "நண்பனே! ஓர் ஏழுநாட்கள் பொறுத்துக்கொள்_நான் என் ஆட்சிப் பொறுப்பை என் பிள்ளைகளிடத்திலும், சகோதரர்களிடத்திலும் ஒப்படைத்து விட்டு வந்து விடுகிறேன்."

23. "ஏழு நாட்கள் அவ்வளவு நீண்ட காலமில்லை. நான் அதுவரை பொறுத்துக் கொள்ளுவேன்." என்பது பதிலாயிருந்தது.

24. எனவே சாக்கிய இராஜா பத்தியா, அனுருத்தா,ஆனந்தாபாரு, கிம்பிளா மற்றும் தேவதத்தா ஆகியோர்_முன்பெல்லாம் களியாட்டத்திடல்களுக்கு அடிக்கடி நால்வகை ஆடை அணிகளுடன் செல்வது போலவே_நால்வகை ஆடை அணிகளுடன் இப்போதும் சென்றனர். அவர்களுடன் நாவிதர் உபாலியும் சென்றார்_மொத்தத்தில் அவர்கள் எழுவர் சென்றனர்.

25. சற்றுத் தொலைவு சென்றதும் அவர்கள், தம் பரிவாரங்களைத் திருப்பி அனுப்பிவிட்டு அடுத்த மாவட்டத்திற்குள் கடந்து செல்கையில், தம்மிடமுள்ள விலையுயர்ந்த பொருள்களை அகற்றி, அங்கிகளில் மூட்டையாயக் கட்டி, நாவிதர் உபாலியிடம் கூறினர்: "நல்ல உபாலியே! தாங்கள் கபில வஸ்துவுக்குத் திரும்புங்கள். இப்பொருள்கள் உம் வாழ்வுக்குப் போதுமானவையாக இருக்கும். நாங்கள் உயர்வெய்திய புத்தரிடம் சென்று சேர்கிறோம்." அதன்படி அவர்கள் முன்சென்றனர்.

26. அவர்கள் மேலே செல்லவும், வீட்டிற்குத் திரும்புவதற்காக உபாலி அவர்களை விட்டுச் சென்றார்.

## 4.அவரை இல்லறத்தாராக்க இறுதி முயற்சி.

1. தம் மகன் தாம் மீண்டும் காணவியலாதவாறு சென்று விட்டதை எண்ணிச் சுத்தோதனர் விம்மி, விம்மி அழுதார்.

2. தம் அரசவை ஆலோசகரையும், குலகுருவையும் கலந்து பேசிய அவர், அவர்களிடம் தம் மகனைத் திரும்பிவிடும்படியும், குடும்பத்தில் இணைந்து விடும்படியும் வற்புறுத்தும்படி வேண்டினார்.

3. குலகுரு ஆலோசகரோடு கூடி, அரசரின் விருப்பிற்குப் பணிந்து, அவரை வழியில் சென்றடைந்தனர்.

4. உரியபடி அவரைப் போற்றி, அவருடைய அனுமதியைப் பெற்று அவரருகே அமர்ந்தனர்.

5. குலகுரு, புத்தர் மரத்தடியில் அமர்ந்ததும், அவரை விளித்து உரைக்கலானார்.

6. "இளவரசே! கண்கள் கண்ணீர் மழை பொழியவும், தம் இதயத்தில் தங்கள் பிரிவென்னும் அம்பு தைத்திருக்கவும் தவிக்கின்ற அரசரின் உணர்ச்சிகளை ஒரு கணம் பரிசீலியுங்கள். தங்களை அவர் இல்லம் திரும்ப அழைக்கிறார். அப்போது தான் அவரால் அமைதியாய் இறக்க இயலும்."

7. "தங்கள் உறுதி சமயத்தின்பால் நிலைத்திருப்பதை நான் அறிவேன்_தங்கள் இலட்சியம் மாறாதது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்: எனினும் தாங்கள் துறவறம் மேற்கொண்டதால் வேதனைத் தீயால் நான் வாட்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன்."

8. "கடமையின் நேசரே! வாரும்_துறவெனும இலட்சியத்தைக் கடமைகளுக்காக விட்டுத்தாரும்"

9. "சிலகாலத்திற்கு புவியாட்சி நன்மைகள் அனுபவியுங்கள்! சாத்திரங்கள் குறிக்கும் காலத்தில் நீங்கள் வனங்களுக்குச் செல்லலாம்_துயருறும் உங்கள் உற்றார்பால் உதாசீனம் காட்டாதீர்கள். உயி◌ாகளனைத்திடமும் கருணை காட்டுவதே உண்மைச் சமயமன்றோ."

10. "சமயவாய்மையை வனங்களில் தான் சாதிக்க வேண்டும் என்பதில்லையே_துறவோரின் முக்தி நகரங்களில் கூட அடையப்படலாமன்றோ; எண்ணமும் முயற்சியும் மட்டும்தானே உண்மைச் சாதனங்கள். வனங்களுக்கேகுவதும் மழித்தலும் நீட்டலும் கோழைகளின் சின்னங்களே."

11. "சாக்கியர்தம் அரசர் துயரக் கடலின் ஆழத்தில் மூழ்கியுள்ளார்_அக்கடலில் உங்களிடமிருந்து எழும் துன்ப அலைகள் மிகுந்துள்ளன; ஆதரவற்றும், பாதுகாப்பேரற்றும், கடலில் மூழ்கும் காளையையாய்த் தவிக்கும் அரசரை விடுவிக்க வாருங்கள்."

12. "அரசியைப் பற்றியும் எண்ணுங்கள்_அவர்தான் உங்களை வளர்த்தவர்_இன்னும் அவர் அகத்திய தேசம் (மரணம்) அடைந்திடவில்லை_அவர்களைத் தாங்கள் சற்றுக் கவனத்தில் கொள்ளக் கூடாதா?_கன்றைப் பிரிந்த பசுவாய் அவர்கள் கடுந்துயர் கொண்டுள்ளார்களே?"

13. "நிச்சயம் தங்களின் தரிசனத்தால் தங்கள மனைவியைத் தாங்கள் தேற்றிவிட முடியும் _தன் கணவர் உயிருடன் இருக்கும் போதே அவர் விதவைபோல் துயருற்றுக் கொண்டிருக்கிறார் _ துணையைப் பிரிந்த அன்னம் போலவும், கானகத்தில் தம் துணையால் கைவிடப்பட்ட பெண்யானை போலவும்."

14. குலகுருவின் இவ்வரையைச் செவிமடுத்த புத்தர் ஒருகணம் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டு, நன்னெறிகளின் நன்னெறியாவும் அறிந்தவராய், அதன்பின் இதமாகப் பதிலிறுக்கலானார்.

## 5.புத்தரின் பதில்

1. "அரசரின் தந்தை பாசத்தைக் குறிப்பாக அவர் என் மீது காட்டிய அன்பை நான் நன்கறிவேன். எனினும், உலகத்தில் நிலவி அச்சுறுத்திக் கொண்டிருக்கிற தீங்கு, துக்கத்தின், பொருட்டு தவிர்க்க முடியாதபடி என்னுடைய உதிர உறவினரை விட்டுப் பி◌ாய நிர்ப்பந்திக்கிறது."

2. "யார் தன்னுடைய அன்பான உதிர உறவினர்களைக் காண விரும்ப மாட்டார்கள்..? ஒரு வேளை அன்பிற்குரியவர்களிடமிருந்து இப்பிரிவு நிகழாதிருக்குமெனினும், மீண்டும் பிரிவு ஏற்படும். எனவே என் தந்தை என்னை எவ்வளவு அன்பாக நேசித்தாலும் அவரை விட்டு நான் பிரிந்து செல்கிறேன்."

3. "அரசருக்குத் துன்பம் என்னால் நேர்ந்ததென்று நீவிர் நினைப்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். ஏனெனில் கனவுகளின் தன்மையைப் போல், அரசர் எதிர்கால பிரின் எண்ணங்களால் துயரப்படுகிறார்."

4. "பிரிவின் பலவித் வடிவின் வளர்ச்சியைக் கண்டு உங்களின் எண்ணங்களை நிர்ணயித்துக் கொள்ளுங்கள். துக்கத்திற்கு காரணம் உறவினரோ மகனோ அல்ல_இத்துக்கத்திற்கு காரணம் அறியாமையே."

5. "பயணப் பாதையில் சேர்ந்து பிரியும் வழிப்போக்கர் போல் உயிரினங்களைனைத்துக்கும் பிரிவு என்பது காலச் சுழற்சியில் கட்டாயமானது. எனவே ஞானிகள் உறவினரை இழக்குங்கால் துன்பத்தில் உழல்வாரா...?"

6. "அவருடைய உதிர உறவினர்கள இல்வாழ்க்கையில் விட்டுவிட்டு அவர் துறவு வாழ்க்கை மேற்கொண்டார். அவர்களை விட்டு அவர் கடந்து வாந்தார்; மீண்டுமங்கு செல்வதானால் அங்கு அவர் செல்வதைப் போல் வேறு எங்கும் செல்லக் கூடும்_வீடுபேறு பெற்றவர்கள் எவருக்காக பரிவுகாட்ட முடியும்...?_மனித நியதி இப்படித்தானிருக்கிறது."

7. "கருப்பையிலிருந்து வெளிப்படும் முதல் இறப்பு இணைக்கப்பட்டுள்ளது. எனவே உங்கள் மகனுக்கு ஏன் கொடுமையெனக் கூறுகிறீர்கள்...?"

8. "உலகச் சுகங்களை ஒருவர் அடைவதில் தீது நேரலாம்,_உண்மையிலேயே உலகத்தின் எல்லாப் பொருள்களோடும் காலம் இணைக்கப்பட்டுள்ளதென விவரிக்கப்படுகிறது; காலம், உலகை அதனடைய பலதரப்பட்ட காலநிலைகளுக்கு அழைத்துச் செல்கிறது; ஆனால் எல்லாக் காலமும் இன்பத்திற்குரியது. உண்மையில் அது புகழத்தக்கது."

9. "அரசர் அவரது அரசாட்சியை எனக்களிக்க விழைகிறார்_இது ஒரு உயாவான எண்ணம். தந்தையின் தலையாயச் செயல். ஆனால் அதை நான் ஏற்றுக் கொள்வது ஒரு நோயாளி பேராசையால் தகாத உணவை ஏற்றல் போல பொருத்த மற்றது."

10. பற்றார்வம், கோபம், களைப்பும் கொண்ட பொய்த்தோற்ற வீட்டில் மற்றவர்களது செயலில் ஊடுறுவது ஞானியின் உரிமை மீறலாகும். அரச வாழ்வை துறவி ஏற்பது எப்படி நேர்மையுள்ளதாகும்?

11. "தங்கமாளிகை தீயில் இருப்பது போன்று எனக்குத் தோன்றுகிறது; நற்சுவை உணவு நஞ்சுடையதாய்த் தெரிகிறது; முழு அமைதி வாய்ந்த தாமரை மலர்ப்படுக்கை முதலைகளால் சூழ்ந்து தாக்கப்படுவதாய் தெரிகிறது."

## 6. அமைச்சரின் மறுமொழி

1. "புத்தரின் போதனையைச் செவிற்ற ஆலோசகர் அனைத்து ஆசைகளிலிருந்தும் விடுபட்ட அவரது நற்குணமும், நல்லறிவும், தெளிந்த சிந்தனையும் செல்வாக்கும், மிகப் பொருத்தமானவைகள்_என்று பதிலிறுத்தார்."

2. "உங்களது உறுதிப்பாடு மிகச் சிறந்தது. அது தன்னிலையில் தகுதி அற்றதாய் இல்லையெனினும் நிகழ்கால நிலைமைக்கு ஏற்புடையதல்ல, தங்களது செயல் விரும்பத்தக்கதல்ல, தங்களது தந்தையின் வயோதிக காலத்தில் அவரைத் துக்கத்தில தவிக்கவிட்டு செல்வது தனயனின் கடமையுமல்ல."

3. "காணாத ஒன்றின் கொருட்டு தெளிவாகத் தெரிகின்ற முடிவினை புறக்கணித்துச் செல்வதை உங்களது மனம் நிச்சயமாக ஆழ்ந்துணரவில்லை அல்லது செயல்-செல்வம்-சந்தோசம் இவற்றை கூர்ந்து ஆராயும் உங்கள் மனப்பாங்கு தீங்கானது."

4. "மீண்டுமொரு பிறப்புண்டு எனச்சிலர் பகர்கிறார்கள்_மறுபிறப்பு இல்லை என்று ஒருசாரார் உறுதியுடன் உரைக்கிறார்கள். இவைகள் எல்லாம் ஐயப்பாட்டிற்குரியவைகள். எனவே நல்வாய்ப்பாய் கையில் வரும் செல்வத்தில் திளைத்து மகிழ்வது சாலச் சிறந்தது."

5. எவ்வித நடவடிக்கையும் இனி இங்கு இருந்தால் அதை அத்தன்மையிலேயே நாம் அனுபவிப்போம் அல்லது இவ்வாழ்விற்குப் பிறகு எச்செயலும் நிகழவில்லையெனில் அது உலக முழுமைக்கும் கிடைத்த வீடுபேறு எனக் கொள்வோம்.

6. "வருங்கால வாழ்க்கை உண்டு என்று சிலர் உரைக்கிறார்கள். ஆனால் அவர்கள் வீடு பேற்றிற்கான செயல்பாட்டுக் கூறுகளில் இறங்குவதில்லை; ஏனெனில் இயற்கையிலேயே நெருப்பில் வெட்பமும், நீரில் திரவமும் இருப்பது போல் நம்முடைய செயலில் இயற்கையிலேயே தனித்திறன் உள்ளதென உறுதி கொண்டுள்ளனர்."

7. "அனைத்துப் பொருட்களும் அதனதன் இயல்பான தன்மையிலிருந்து உண்டானவைகள் என்ற கருத்தை சிலர் விடாமல் ஆதரிக்கின்றனர்;_உலகம் முழுமையும் நன்மையும் தீமையும் மற்றும் உளதாயிருத்தலும், இலதாயிருத்தலும் தன்னியல்பினால் தோன்றிது. ஆகையால் நம்முடைய எல்லா முயற்சிகளும் கூட வீணானது."

8. "புலன் உணர்வு ஆற்றல் நிலை, உறுதிப்படுத்தப்பட்டிருக்கின்ற காரணத்தால் வெளியில் காணும் பருப்பொருள்களுடன் இணங்கும் மற்றும் இணங்காத் தன்மைகள் சேர்ந்திருப்பது

போல்,_வயோதிகமும் வலியும் இணைந்திருப்பதை மாற்ற எவ்வகை முயற்சியை எடுக்க இயலம்..? இது தன்னியல்பினால் ஏற்படுவதன்றோ ா...?"

9. "நீரால் நெருப்பு அணைக்கப்படுகிறது, நீரை நெருப்பு ஆவியாக்கிறது; பல்வகைப்பட்ட மூலப் பொருட்கள் உடலில் இணைந்து ஐக்கியமாயுள்ளது. உலகம் இதை ஏற்றுக் கொள்கிறது."

10. "இயற்கையின் முதிர்வுறா கருமுளை கருப்பையில் இருக்குங்கால், கரங்கள், பாதங்கள், வயிறு, முதுகு மற்றும் சிரவுயென உருவாக்கப்படுகிறது. அதுவும் உயிருடன் இணைந்திருக்கிறது_இவைலெய்லாம் தன்னியல்பினாலேயே உண்டாவது என்று ஞானி உறுதியாய் அறிவிக்கிறார்."

11. "முள்ளின் கூர்மைக்குக் காரணம் யார்....? இயற்கையில் பல்வகை விலங்குகளையும் பறவைகளையும் படைத்தவர் யார்? இவைகள் அத்தனையும் தன்னியல்பினாலேயே தோன்றியவை; அவ்வாறிருக்க விருப்பம் என்ற ஒன்ற அங்கு எவ்வாறிருக்க இயலும்...?

12. "படைப்பு ஈஸ்வரனிடமிருந்து வந்தது என்ற மற்றவர்கள் கூறுகிறார்கள்,_அவ்வாறாயின் உணர்வுள்ள உயிரின் முயற்சிக்கு அங்கே என்ன தேவையிருக்கிறது...? உலக இயக்கத்திற்கு அதுவே காரணமென்றால் இயங்காதன்மையையும் அதுதான் நிர்ணயிக்கிறது."

13. "ஆவதும் அழிவதும் உயிரால் ஒன்று போலவே நிகழ்கிறது என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால் பிறப்பென்பது எவ்வித் முயற்சியின்றி ஏற்படுவது. மாறாக 'வீடு போறு' அடைவது முயற்சியினால் மட்டுமே விளைகிறது என்றம் கூறுகிறார்கள்."

14. "ஒரு மனிதன் தான் பிறப்பிலேயே பட்ட மூன்று கடன்களை, நன்மக்களை ஈன்றளிப்பதன் மூலம் முன்னோர்களுக்கும்; சிறந்த கோட்பாடுகளை கடைப்பிடிப்பதன் வாயிலாகத் துறவிகளுக்கும்; தியாகத்தை சமர்ப்பிப்பதால் சான்றோர்களுக்கும், நிறைவேற்றுகிறான்; விடுதலை (இவைகளிலிருந்து) பெற்றவன் எவனோ அவனே உண்மையிலேயே விடுதலைப் பெற்றவனாயிருக்கிறான்."

15. "இவ்விதம் தொடர்ச்சியான விதிமுறைகள் மூலம் முயற்சிப்பவருக்கு ஞானி விடுதலைக்கான உறுதியளிக்கிறார். ஆனால் எவ்விதமாயினும் வீடுபேற்றினை அடைய வேண்டி முழுபலத்தோடு முயற்சிப்பவர்கள் அயர்ச்சி கொள்கிறார்கள்."

16. "ஆகையால், பெருமைமிகு இளைஞரே, நீர் விடுதலைப் பெற அவாவுற்றால் அறிவுறுத்தப்பட்ட இக்கோட்பாடகளைச் சீராகக் கடைபிடிப்பீர்; இவ்வாறு செய்தால், உமக்கான விடுதலையை நீரே அடைவீர்; மன்னரின் துக்கமும் முற்றுப் பெறும்."

17. "என் மகனே, கடந்த காலத்தில் காடுவிட்டு வீடு வந்த அம்பரிஷ் துருமகேஷன், இராமன், மற்றவர்களைப் போல் வாழ்வின் துக்கத்தைக் குறித்து தியானித்து முடித்து கானகத்திலிருந்து வீட திரும்பும் போது துன்பச் சிந்தனைகள் உனனை தொடராதிருக்கட்டும்."

7. புத்தரின் உறுதிப்பாடு

1. அரசரது கண்போன்ற அமைச்சரின் கனிவான வார்த்தைகளைக் கேட்டறிந்து,_மன்னரது மைந்தர், எதையும் விடாமல், எதையும் மாற்றாமல், பதைபதைப்போ சலிப்போ இன்றி அவரது முடிவில் உறுதியாய் நின்று பதிலிறுத்தார்.

2. "ஏதாவது ஒன்று உளதா...இலதா என்ற ஐயப்பாட்டிற்கு மற்றவர்களின் வார்த்தைகளால் எனக்காக விடை காணத் தேவையில்லை; துறவினை அல்லது சாந்தத்தை ஏற்றுக் கொண்டதின் உறுதிப்பாட்டால் அதைப் பற்றிய உண்மை எதுவாயினும் அதன் தொடர்புகளை நானே அறிந்து கொள்வேன்."

3. "இன்னதென்று தெரிந்திராத ஒன்றைப் பற்றிய வாதத்தை நான் ஏற்றுக் கொள்ள வேணடியதில்லை; மேலும் அது நூற்றுக்கணக்கான முன் சார்புடைமையின் தொடர்பாகம்; அவையெல்லாம் எதர்வாதத்திற்குரியது; அவையெல்லாம் எதிர்வாதத்திற்குரியது; ஒரு ஞானி வேறொருவன் நம்பிக்கையில் வழி நடப்பானா...? ஒரு குருடனால் இருட்டில் இயக்கப்படும் குருடரைப் போன்றது மனித இனம்."

4. "ஆனால் உண்மையை நான் உய்த்துணர இயலவில்லையெனினும் நன்மையும் தீமையும் ஐயத்திற்குரியது, ஒருவரின் மனம் நன்மையை நாடட்டும்; ஒரு நல் மனத்தானின் கடும் உழைப்பு வீணாயினும் அது அவனால் தான் தேர்ந்தெடுக்கப்படல் வேண்டும்."

5. இத் "தூயமரபு" சந்தேகத்திற்குரியது எனத் தெரிகிறது எனினும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் பகர்ந்து விட்டால் சரியனது எனக் கருதுவதும்; நம்பிக்கைக்குரிய தன்மையின் பொருள் என்னவென்றால் குற்றமற்றது; எவனொருவன் குறையற்று இருக்கிறானோ அவன் பொய்மையைக் கூற மாட்டான் என்பதாகும்.

6. "நான் வீடு திரும்புவது குறித்து நீங்கள் எடுத்துரைத்தவை உத்தரவாதமான உதாரணங்களல்ல; யார்யார் தங்களின் வாக்குறுதிகளை மீறினார்களோ அவர்களையா எனக்கான கடமையை நிர்ணயிப்பதில் எடுத்துக்காட்டாய் கூறுவது....?"

7. "ஆதவனே பூமியில் வீழ்ந்தாலும், இமாவத் (இமாலயமலை) நிலை குலைந்தாலும் என் பகுத்தறிவைப் பயன்படுத்தி வெளியுலகை விழிப்புறச் செய்வேனேயன்றி வெறும் உலக அனுபவசாலியாக நான் இல்லம் திரும்ப மாட்டேன்."

8. "கொழுந்து விட்டெறியும் நெருப்பில் நான் இறங்குவேன்; ஆனால் என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றாமல் வீடு திரும்பமாட்டேன்." அவரது உறுதிப்பாட்டிற்கேற்ப எழுந்து தன்னலமற்றவராய், தன்வழியே சென்றார்.

9. "அவரின் திடமான உறுதிப்பாட்டைக் கேட்டு, அமைச்சரும், பிராமணரும் ஒரு சேர கண்ணீர் விட்டு விரக்திப் பார்வையுடன் சிறது தூரம் அவரைப் பின்தொடர்ந்தார்கள்; துக்கத்துள் மூழ்கி அவர்கள் கபிலவஸ்துக்கு மெல்லத் திரும்பினார்கள்."

10. இளவரசர்பாலிருந்த பாசத்தாலும், அரசர் மேலிருந்த பற்றாலும் அவர்கள் திரும்பினார்கள் என்ற போதிலும் அடிக்கடி நின்று திரும்பிக் பார்த்தார்கள். அவர்களது கண்பார்வையில் அவர் தென்படவில்லையென்றாலும் திரும்பிப் பார்ப்பதை விடவுமில்லை. எவரும் அடைய முடியாத அவரது எழில், ஞாயிறு போல் மிளிர்ந்தது.

11. அவரை வீட்டிற்குத் திரும்பும்படி மனமாற்றம் செய்வதில் தோல்வியைத் தழுவிய அமைச்சரும் போதகரும் தட்டுத்தடுமாறி திரும்பியவாரே ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள். "அன்பு மகனுக்காய் ஏங்கிக் கொண்டிருக்கும் அரசரை எவ்வாறு அணுகி எப்படி காண்பது......?"

சமயமாற்றச் செயல்பாடுகள் மீண்டும் தொடங்கப்படல்

1. பாமர பிராமணர்களின் சமயமாற்றம்.

1. இராஜகிரஹத்திற்கு அருகாமையின் கிரிதரகுட்டா மலைகளுக்குப் பின்னாலிருந்த ஒரு கிராமத்தில் வசித்த சற்றேறக்குறைய எழுபது குடும்பங்களில் அனைவரும் பிராமணர்கள்.

2. இந்த மக்களைச் சமயமாற்றம் செய்ய விழைந்து, அவ்விடத்திற்கு வந்து ஒரு மரத்தடியில் அமாந்தார் புத்தர்.

3. மேன்மை பொருந்திய சாந்தம் மிகுந்த, அவரது கீர்த்தி வாய்ந்த உருவத் தோற்றத்தைக் கண்ணுற்று அவரைச் சுற்றிச் சூழ்நது கொண்ட பிராமணமக்களிடம், எவ்வளவு காலமாக அவர்கள் இந்த மலைப்பகுதியில் வாழ்கிறார்கள் என்றும், என்ன தொழில் செய்கிறா்கள்...எனவும் வினவினார்.

4. இதற்கு அவர்கள் பதிலிறுத்தனர்:"நாங்கள் இங்கே கடந்த முப்பது தலைமுறைகளாக வாழ்ந்தும், கால்நடை பராமரிப்புத் தொழில் புரிந்தும் வருகின்றோம்."

5. மேலும் அவர்களின் சமயப் பற்று குறித்து கேட்க, அவர்கள் கூறினார்கள்: "நாங்கள் பல பருவகாலங்களுக்கேற்ப சூரியனுக்கும், சந்திரனுக்கும், அக்னிக்கும், வருணனுக்கும் (நீர்) வந்தனமும், நிவேதனமும் செய்கின்றோம்."

6. எங்களில் ஒருவர் மரணமடைந்தால், "அவர் பிரம்மாவின் சொர்க்கலோகத்தில் புகுதல் கூடுமென்றும், எனவே அவர் புனர்ஜென்மத் தன்மையிலிருந்து தப்பித்துக் கொள்கிறாரென்றும்" நாங்கள் ஒன்றுகூடி பிரார்த்திக்கிறோம்.

7. புத்தர் பதிலுரைத்தார்: "இது நம்பகமான வழி அல்ல, இதனால் நீவிர் நன்மை பெற இயலாது. பற்றுறுதி வாய்ந்தத் துறவியாகி என்னைப் பின்பற்றுவதும் நிர்வாணமடையும் நோக்கத்தைக் கருத்திற்கொண்டு சுயபண்பாளராக முழுமையான பயிற்சி பெறுவதும் அறிவுப் பூர்வமான வழி." அதன் பின் அவர் மேலும் இந்த வாக்கியங்களை உரைத்தார்:

8. "உண்மையை உண்மையில்லையென யார் எண்ணுகிறார்களோ அவர்களுகம், உண்மையின்மையை உண்மையென மதிப்பவர்களும், முரணான கோட்பாட்டை மேற்கொள்ளும் கருத்துடையோராதலால் மெய்யான முதன்மைப் பயனை அடைய இயலாது."

9. ஆனால் உண்மையை உண்மையென அறிதலும், பொய்மையைப் பொய்மையெனப் புரிதலுமே நேர்மையான முழுநிறைவையும், மெய்யான பயனையும் தரும்.

10. "உலகில் எவ்விடத்தும் நிகழ்வது மரணம்_அதிலிருந்து தப்ப முடியாது."

11. எல்லாமே நிலைபேறுடையது என்று எண்ணி எதுவுமிங்கே பிறப்பதில்லை. ஆனால் இறக்க வேண்டும், எனவே, மனித வாழ்வின் துன்பத்திலிருந்து விடுதலை விழைந்தால் ஒருவர் தனக்குத்தானே சமயநெறிப்பயிற்சி செய்யவும்.

12. இவ்வார்த்தைகளைச் செவிமடுத்த அவ்வெழுபது பிராமணர்களும் சாமணர்களாக மாற உடனடியாக விழைந்தார்கள்; இச்செயல் புத்தரால் வரவேற்கப்பட்டு, அவர்களுடைய தலைமுடி மழிக்கப்பட்டத் தோற்றம் அவர்களை உண்மையான சீடர்களாகக் காட்டியது.

13. அதன்பின் அவர்கள் விஹாருக்குச் செல்ல ஆயத்தமாயினர்; அவர்களின் மனைவியர் மற்றும் குடும்பத்தார் பற்றிய சிந்தனைகள் அச்சாலைவழியில் அவர்களைச் சங்கடப்படுத்தியது. அதே வேளை பொழிந்த பெரும் மழை அவர்களின் பயணத்தைத் தடைபடுத்தியது.

14. வீதியோரத்திலிருந்த சில பத்து வீடுகளில் அவர்கள் புகலிடம் தேடினார்கள். ஆனாலும், மழையிலிருந்து தப்பிக்க சிறிதே பாதுகாப்புக் கிடைத்தது.

15. இதைக் குறித்து புத்தர் மேலும் கூறிய வாக்கியங்கள், "ஒரு வீட்டின் கூரை சரியாக வேயப்படாதபோது மழைத்துளிகள் உள்ளே வர வழி கிடைப்பது போல் சிந்தனைகளை சரியாகக் கட்டுப்படுத்தாத போது ஆசைகள் (பாலுணர்வு வேட்கை) நமது நல்ல பண்புகளைத் துளைத்து விடும்."

16. "ஆனால் நன்றாக வேயப்பட்ட ஒரு கூரை மழை நீரை உள்ளே ஒழுக முடியாது தடுத்து நிறுத்துவது போல், ஒருவரின் கட்டுப்பாடான சிந்தனைகளாலும், எடுத்துக்காட்டான செயல்பாடகளாலும் அவ்வாறான ஆசைகள் உதிக்கவோ அல்லது நம்மைச் சிதைக்கவோ இயலாது."

17. அந்த எழுபது பிராமணர்களும் இப்போதனைகளைச் செவியுற்று, பற்றுவைத்து ஏற்றுக் கொண்டவர்களாயினும், அவர்களது தெளிவற்ற சிந்தனையால் ஐயத்திலிருந்து முழுமையாய் மீளாதவர்களாக இருந்த போதிலும் முன்னேறிச் சென்றார்கள்.

18. அவ்வாறு அவர்கள் முன்னேறிச் சென்றபோது, கொஞ்சம் வாசனைப் பொருட்கள் தரையில் மூடிக்கிடப்பதைக் கண்டார்கள். இதன்பால் அவர்களின் கவனத்தை ஈர்க்க புத்தர் இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தினார். அதன்பின் சுற்றிலும் துற்நாற்றத்துடன் சிதறிக் கிடந்த சிறிது மீன் குடலின் மேலம் அவர்களின் கவனத்தை ஈர்த்து கீழ்காணும் வாக்கியங்களை உரைத்தார்.

19. "எவனொருவன் கீழானவைகளுடனும், இழிவானவைகளுடனும் தொடர்பு கொண்டுள்ளானோ அவன் துர்நாற்றப் பொருளைக் கையாள்பவனின் தன்மையைப்போல் மோசமான நிலைக்குக் கீழ்றிங்கி எக்காரணமுமின்றி தன்னைத் தானே வஞ்சகத்தின் மொத்தவுருவாக்கிக் கொள்ளுகிறான்."

20. "ஆனால் ஒரு அறிஞருடன் (ஞானிகளுடன் தொடர்பு கொள்ளுதல்) பழகுபவன் வாசனைத் திரவியத்தைக் கையாள்பவனிடத்தில் நறுமணம் ஒட்டிக் கொள்வதைப போன்று இனிமைதரும் அதே நற்பண்புகளைப் பெறுகிறான்; ஞானத்தில் முன்னேறியும் குணநலன்களில் பயிற்சி பெற்றும் முழுமை அடைந்து மனநிறைவு கொள்கிறான்."

21. இப்போதனைகளைச் செவியுற்ற அவ்வெழுபது பிராமணர்களும் திருப்தியுற்றார்கள். எனினும் தங்களின் இல்லங்களுக்குத் திரும்பித் தனி மனித இன்பங்களில் திளைக்கத் துணிந்தார்கள். இத்தீங்கான சிந்தனையிலிருந்து பின் தெளிவடைந்து விஹாருக்கு வந்தடைந்து அரஹத்துக்களின் உயர்நிலையை எய்தினார்கள்.

## 2. உத்தரவதிப் பிராமணர்களின் சமயமாற்றம்.

1. ஒரு முறை புத்தர் ஷ்ராவஸ்தியிலுள்ள ஜேதவனத்தில் தங்கியிருந்து மக்களுக்கும் முனிவர்கட்கும் நன்மைபயக்கத் தம் வதியென அழைக்கப்பட்ட ஒரு தேசத்தில் 500 பிராமணர்கள் அடங்கிய ஒரு குழுவினர் வசித்து வந்தனர்.

2. அவர்கள் தாம் ஒன்று சேர்ந்து கங்கைக்கரையில் தன்னைப் புழுதியால் கறைப்படுத்திக் கொண்டு, ரிஷியின் நிலையை விழைந்து கொண்டிருந்த ஒரு முனிவரான நிர்க்ரந்தாவின் ஆசிரமத்துக்குச் செல்ல முடிவெடத்தனர்.

3. போகும் வழியில், ஒரு பாலைவனப்பகுதியில் அவர்கள் தாகமுற்றனர், ஆங்கு அவர்கள் ஒரு மரத்தைத் கண்டு, அருகில் மனிதர்கள் யாரேனம் இருக்கக் கூடுமெனக் கருதி, அதனருகே விரைந்தனர் எனினும், அவ்விடத்தை அடைந்தபோது உயிர் வாழ்விற்கான எந்த அடையாளத்தையும் அவர்கள் காணவில்லை.

4. இதனால் அவர்கள் வேதனையொலி எழுப்பினர், திடீரென அம்மரத்திலிருந்து ஓர் அலகையின் _ உணர்வு திரிந்த ஒரு மனிதனின் குரலை அவர்கள் கேட்டனர், அவன் அவர்கள் ஏன் அவ்வாறு வேதனையுற்றனர் என அவர்களைக் கேட்டு, காரணமறிந்தபின் அவர்களளுக்கு நிறைய இறைச்சியும் நீரும் வழங்கினா ான்.

5. தம் பயணத்தைத் தொடரத் தயாராயிருந்த அப்பிராமணர்கள் அந்த அலகை மனிதனின் பூர்வீக வரலாற்றை அதாவது அவன் எவ்வாறு இந்நிலையுற்றான் என்பதை அவனிடம் கேட்டனர்.

6. அதற்கு அவன், சுதத்தர் புத்தருக்குத் தம் சோலையை வழங்கிய காலை, ஷ்ராவஸ்தியிலள்ள பிக்குகளின் கூட்டத்திற்குச் சென்று, இரவு முழுவதும், தம்ம விதிகள் பற்றிய பேருரையைக் கேட்டுத் தன் பருகும் குவளையில் நீரை நிரப்பி அத்துறவிகளுக்கிடை பகிர்ந்தளித்துவிட்டத் திரும்பிய செய்தியைக் கூறினான்.

7. அடுத்தநாள் காலை அவன் திரும்பியதும், சினங்கொண்ட அவனது மனைவி எந்தவித வெறுப்பினாலே அவன் இரவு முழுதும் வெளியே இருந்தானென வினவினாள். இதற்கு அவன் வெறுப்பேதும் இல்லையென்றும், ஆனால் ஜேதவனத்தில் புத்தரின் பேருரையைக் கேட்டுக் கொண்டிருந்ததாகவும் கூறினான்.

8. அதற்குப் புத்தரை அவள் கடுமையாக ஏசியவாறு "இந்த கோதமர் ஒரு பித்துப் பிடித்த போதகர் _மக்களை ஏமாற்றுகிறவர்." என்றும் பிறவும் கூறினாள்.

9. அதற்கு நான் அவளுடைய சொற்களை எதிர்க்காமல், இருந்தது மட்டுமன்றி, பணிந்தும் போய், வெளியேறி இறந்து விட எண்ணி வந்தேன். இப்போது அலகையாய் மனந்திரிந்து திரிகிறேன். என் நல்வாய்ப்பு காரணமாக இந்த மரத்தருகே இருக்கிறேன்."இவ்வாறு கூறிய அவன் கீழ் வரும் போதனைகளை ஒப்புவித்தான்.

10. "யாகங்களும் அவைபோன்ற செயல்களும், துன்பங்களுக்கிருப்பிடமாய் உள்ளன; இரவெனினும் பகலெனினும் அவற்றால், சுமைகள் மிகும் ஆதங்கம் மிகுமே."

11. "துன்பத்தைத் தவிர்ததிடவும் பிறவியினைத் தடுத்திடவும், மன்பதையில் புத்ததம்மம் பின்பற்றல் வேண்டும்; உலகியல் மதங்களுடை (உலகரிஷி யானவர்தம்), பிடிப்பினின்று விடுதலையை எய்திடல் வேண்டும்."

12. இச்சொற்களைக் கேட்ட பிராமணர்கள், புத்தர் தங்கியிருந்த ஷ்ராவஸ்திக்குச் செல்ல தீர்மானித்து, சென்று தம் வருகையின் நோக்கத்தைத் தெரிவித்தபின் உலகப் புகழ் பெற்ற புத்தர் அவர்களிடம் உரைத்தார்:

13. "சடைமுடியுடன் ஒருவர் நிர்வாணமாய்த் திரிந்திடினும், இலையுடையோ மரப்பட்டையுடையோ தரித்திடினும், புழுதியினால் தம்முடலை பூசிக் கொளினும், பாறைகளையே படுக்கையாய்க் கொளினும், மாசுள எண்ணங்களிலிருந்து விடுபடவில்லையாயின் என்ன பயன்?"

14. "ஆனால் எவரொருவர் திருப்தியுற்றவராய், கொல்லாமை உடையவராய், யாகத்தீயில் உயிர்வதைப் புரியாதவராய், வெற்றியேதும் விழையாதவராய், நல்விரப்பால் உலகில் நடப்பவராய், இரப்பாராயின் தீயவிருப்பிற்கும் வெறுப்பிற்கும் இடமேது."

15. "தான் அமைதி பெறுவதற்காக (பெருமை) அல்லது இறப்புக்குப் பின் நற்பயன் எய்துவதற்காக தேவதைகளுக்கென யாகவேள்வி புரிபவருக்குக் கிட்டக்கூடிய மகிழ்ச்சி, நன்மைக்குத் தம்மை அர்பணித்துக் கொண்டவரின் மகிழ்ச்சியில் கால்பங்கும் பெறாதே."

16. "எவரொருவர் நன்னடத்தையை நோக்காய்க் கொண்டவரோ, பிறர்க்கு உரிய மதிப்பளிப்பவரோ, முதியோரை எப்போதும் போற்றுபவரோ அவர்க்கு நான்கு வித நல்விளைவும் மென்மேலும் விளையும்_அழகும், வலிமையும், வாழ்வும், அமைதியும்."

17. இவற்றைக் கணவனிடமிருந்துக் கேட்ட மனைவி சமாதானமடைந்தாள்.

## உரிமை மறுக்கப்பட்டோர் மற்றும்
## உதாசீனப்படுத்தப்பட்டோர்களின் சமய மாற்றம்.

### 1.நாவிதர் உபாலியின் சமயமாற்றம்.

1. திரும்பிச் செல்கையில் நாவிதர் உபாலி எண்ணினார்: "சாக்கியர்கள் கொடிய கோபமுடைய மக்கள், நான் இந்த ஆபரணங்களோடு திரும்பிச் சென்றால், நான் என் கூடவந்தவர்களைக் கொன்றுவிட்டு அவர்களடைய ஆபரணங்களோடு ஓடிவந்துவிட்டதாக எண்ணி என்னைக் கொன்றுவிடுவார்கள். இந்த சாக்கிய வம்சத்து இளைஞர்கள் சென்ற வழியில் நான் ஏன் செல்லக் கூடாது?"

2. "ஏன் உண்மையில் நான் இப்படிச் செய்யக் கூடாது?" உபாலி தனக்குத் தானே கேட்டுக் கொண்டார். தன் முதுகிலிருந்து ஆபரண மூட்டையைக் கீழே இறக்கிவிட்ட அவர், அதை ஒரு மரத்தில் தொங்கவிட்டுவிட்டுக் கூறினார்: "இதை எவர் காண்கிறாரோ அவர் இதைப் பரிசாக எடுத்துக் கொள்ளட்டும்." அதன்பின் அவர் சாக்கிய இளைஞர்களைப் பின் தொடர்ந்து சென்றார்.

3. சாக்கியர்கள் அவர் தூரத்தில் வரும் போதே கண்டனர். அவரை கண்ட அவர்கள் அவரிடம் வினவினர்: "நல்ல உபாலியே! எதற்காகத் தாங்கள் திரும்பி விட்டீர்கள்?"

4. தான் கருதியதை அவர் அவர்களுக்குக் கூறியதும், அவர்கள் பதிலிறுத்தனர்:"தாங்கள் செய்தது நன்று, நல்ல உபாலியே_நீங்கள் திருப்பிச் செல்லாதது நன்று_ ஏனெனில் சாக்கியர்கள் சினம் மிகுந்தவர்கள்_அவர்கள் உம்மைக் கொன்றிருக்கக் கூடும்."

5. அவர்கள் நாவித்ர் உபாலியைத் தம்முடன் உயர்வெய்திய புத்தர் இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றனர். ஆங்கு வந்துற்றபின், அவர்கள் உயர்வெய்திய புத்தர் முன் பணிந்து வணங்கி ஓர்புறம் தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர். அவ்வாறு அமர்ந்தபின், அவர்கள் உயர்வெய்திய புத்தரிடம் உரைத்தனர்:

6. "ஐயன்மீர்! சாக்கியர்களான நாங்கள் கர்வமுள்ளவர்கள், இந்த நாவிதர் உபாலி, பலகாலம், ஐயன்மீர்! எங்களுக்குச் சேவகராய் இருந்தார், உயர்வெய்திய புத்தர் இவரை, எங்களுக்கு முன் சங்கமுறைமையில் அனுமதிப்பீராக_அதன்படி நாங்கள் அவருக்கு மரியாதையையும் போற்றுதலையும் அளிக்க முடியும்_மேலும் விரிந்த கரங்களுடன் அவர்முன், எங்களுக்கு முந்தியவர் என்ற வகையில் வீழ்ந்து பணிந்து வணங்கமுடியும்_இவ்வாறாக சாக்கிய பெருமை எங்களுக்குள் தணியட்டும்."

7. அதன்பின் உயர்வெய்திய புத்தர் முதலில் நாவிதர் உபாலியையும் அதன்பின் சாக்கிய வம்சத்து இளைஞர்களையும் சங்கமுறைமைக்குள் ஏற்றார்.

## 2. துப்புரவுப் பணியாளர் சுனிதாவின் சமயமாற்றம்.

1. இராஜகிருஹத்தில் சுனிதா என்னும் பெயருடைய துப்புரவுப் பணியாளர் ஒருவர் வசித்துவந்தார். அவர் சாலையோரம் வீட்டுக்காரர்களால் வீசியெறியப்படும் குப்பைகளைப் பெருக்கித் தள்ளுகிற, சாலை துப்புரவாளராய்த் தம்வாழ்வுக்கான தொழில்புரிந்துவந்தார். அவர்தம் தொழில் கீழானதாகவும் பரம்பரைத் தொழிலாகவும் கருதப்பட்டுவந்தது.

2. ஒரு நாள் அதிகாலை நேரம், உயர்வெய்திய புத்தர் விழித்தெழுந்து, துவராடையணிந்து இராஜகிருஹத்தில், பெரும் எண்ணிக்கையிலான பிக்குகள் புடைசூழ, தானம் ஏற்பதற்காக நடந்தார்.

3. அப்போது சுனிதா வீதியைத் தூய்மைப்படுத்திக் கொண்டிருந்தார்_குப்பை கூளங்களையும், பிறவற்றையும் கூட்டிக் குவித்துக் கூடையில் நிரப்பி நுகத்தடியில் மாட்டிச் சமந்து கொண்டிருந்தார்.

4. அவர் புத்தரும், அவர்தம் பரிவாரத்தினரும் நெருங்கிவருவதைக் கண்டபோது, அவருடைய மனம் மகிழ்ச்சியாலும் அச்சத்தாலும் நிரம்பியது.

5. சாலையின் மறைந்து கொள்ள ஓரிடத்தையும் காணாமையால், அவர் தன் நுகத்தடியை சுவரின் வளைவொன்றில் வைத்துவிட்டுச் சுவரோடு சுவராக ஒட்டியபடி நின்று கொண்டு கூப்பிய கரங்களுடன் புத்தரை வணங்கினார்.

6. அதன்பின் புத்தர் அவரருகே வந்தபோது, அவரிடம் அமுதினும் இனிய குரலில் கூறினார்:"சுனிதா! இந்த இழிவான வாழ்முறை உமக்கெதற்கு? உம்மால் வீட்டைத் துறந்து சங்கமுறைமையில் இணைவது சாத்தியமாகுமா?"

7. அதற்கு சுனிதா, அமுதத்தில் நனைந்தவர்போல் பேரானந்தத்தில் மூழ்கியவராய்க் கூறினார்: "மேன்மை தங்கிய புத்தர் போன்றோரே இவ்வாழ்வில் சங்கமுறைமையை ஏற்றிருக்கின்றாரென்றால் நான் ஏன் ஏற்கக் கூடாது? மேன்மை தங்கிய ஐயன்மீர் என் வருகையைப் பொறுத்துக் கொள்வீராக."

8. அதன்பின் புத்தர் கூறினார்: "வாரும் பிக்குவே!" சுனிதா, அச்சொல்லால் அங்கீகாரத்தையும், முறைமையையும் ஏற்றார்_கலயமும் துவராடையும் வழங்கப்பட்டார்.

9. அவரை விஹாருக்கு அழைத்துச் சென்ற புத்தர், அவருக்கு தம்மத்தையும், நன்னெறியையும் போதித்து உரைத்தார், "துறவு வாழ்வின் ஒழுக்காலும், கட்டுப்பாட்டாலும், தன்னை வெல்வதாலும் ஒரு மனிதன் தூய்மையுறுகிறான்."

10. சுனிதா எவ்வாறு இத்துனை சிறந்தவரானார் எனக் கேட்கப்பட்டபோது, புத்தர் உரைத்தார், "சாலையோரம் தேங்கியுள்ள சேற்றில் நறுமணமும், இனிமையும் உடைய செந்தாமரை மலரக்கூடும் என்பது போல், இழிவாய்க் கருதப்படும் உயிர்களுக்கிடையிலும், உள்நோக்குக் குருடான உலகியலார் இடையிலும் புத்தர்தம் சேய்கள் ஒளிவிடுகிறார்கள்."

### 3. சோபாகா மற்றம் சுப்பியா என்னும் புறக்கணித்தோரின் சமயமாற்றம்.

1. சோபாகா என்பவர் ஷ்ராவஸ்தியில் வசித்தவந்த ஒரு பறையர் ஆவார். அவருடைய பிறப்பின்போது, அவருடைய தாய் பிரசவ வேதனையில் மயங்கி விழுந்துவிட்டார்_அவருடைய கணவரும், உறவினர்களும் 'அவள் இறந்துவிட்டாள்' எனக் கூறினர். அவரை அவர்கள் சுடுகாட்டிற்குச் சுமந்து சென்று எரித்துவிட ஏற்பாடுகளைச் செய்தனர்.

2. ஆனால் சூறாவளிப் புயல்காற்று மற்றம் மழை காரணமாக தீ எரியவில்லை. எனவே சோபாகாவின் தாயை அவர்கள் பிணமேடையிலேயே விட்டுவிட்டுச் சென்றுவிட்டனர்.

3. சோபாகாவின் தாய் அப்போது இறக்கவில்லை. அவர் பிறகுதான் இறந்தார். அவர் இறப்பதற்கு முன் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தார்.

4. அந்தச் சுடுகாட்டின் காவலரால் அக்குழந்தை தத்தெடுக்கப்பட்டு, அவருடைய சொந்தக் குழந்தையான சுப்பியாவுடன சேர்த்து வளர்க்கப்பட்டு வந்தது. அந்தக் குழந்தை, அதன் தாய் சார்ந்திருந்த சமுதாயத்தின் பெயராலேயே சோபாகா என் அழைக்கப்பட்டது.

5. உயர்வெய்திய புத்தர் ஒருநாள் அந்தச் சுடகாட்டின் வழியே செல்ல நேர்ந்தது. புத்தரைக் கண்ட சோபாகா அவரை அடைந்தார். புத்தரை வணங்கியபின், அவரிடம் சீடராக சேர அவர்தம் அனுமதியைக் கேட்டார்.

6. சோபாகா அப்போது ஏழுவயதுடையவராகவே இருந்தார். எனவே புத்தர் அவருடைய தந்தையின் ஒப்புதலைப் பெறும்படிக் கூறினார்.

7. சோபாகா சென்று தம் தந்தையை அழைத்து வந்தார். தந்தை புத்தரை வணங்கித் தம் மகனைச் சங்க முறைமையில் சேர்த்துக்கொள்ள வேண்டினார்.

8. பறையர் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதைப் பொருட்படுத்தாமல் புத்தர் அவரைச் சங்கமுறைமையில் அனுமதித்து, அவருக்குத் தம்மத்தையும் நடத்தை விதிகளையும் கற்பித்தார்.

9. சோபாகா பின்னாளில் தேரர் ஆனார்.

10. குழந்தைப் பருவத்திலிருந்தே சுப்பியாவும், சோபாகாவும் ஒன்றாகவே வளர்ந்தவர்கள்_சோபாகா, சுப்பியாவின் தந்தையால் தத்தெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டவர். புத்தரின் கொள்கைகளையும், நன்னெறி நடைமுறைகளையும் தன் கூட்டாளி சோபாகாவிடமிருந்து கேள்வியுற்ற சுப்பியா, தன்னையும் சங்க முறைமையில் சேர்த்துக் கொள்ளும்படி சோபாகாவை வேண்டினார்-சுப்பியா சார்ந்துள்ள வகுப்பைவிட, சோபாகா சார்ந்திருந்த வகுப்பு படிநிலையில் கீழாய்க் கருதப்பட்டிருந்தும் கூட.

11. சோபாகா ஒப்புக் கொண்டார். இழிவாகக் கருதப்பட்ட, சுடுகாட்டுக் காவலர் பணிவுரிவதைத் தொழிலாய்க் கொண்ட வகுப்பைச் சார்ந்திருந்த சுப்பியா பிக்கு ஆனார்.

### 4. சுமங்கலா மற்றும் உரிமை மறுக்கப்பட்ட வகுப்பாரின் சமயமாற்றம்.

1. சுமங்கலா ஷ்ராவஸ்தியில் ஓர் உழவர் ஆவார். அவர் வயல்களில் பாடுபட்டு வாழ்ந்து வந்தார்_ஒரு சிறிய அரிவாள், ஏர் மண்வெட்டி ஆகியவற்றோடு.

2. சன்னா கபிலவஸ்துவில் பிறந்தவர்_சுத்தோதனர் வீட்டில் ஒரு அடிமைச் சேவகராய் இருந்தவர்.

3. தன்னியா இராஜகிரஹத்தில் வசித்துவந்தவர், அவர் ஒரு சட்டிபானை செய்பவர்.

4. 'கப்பத_குரா' என்பவர் ஷ்ராவஸ்திக்காரர். அவர் தம்மைக் காத்துக் கொள்ள அறிந்திருந்த வழி ஒன்று தான் _ கந்தலுடை உடுத்தி, கையிலொரு தட்டேந்தி அரிசி உணவு தேடுவதுதான். இதனால் அவர் கப்பத_குரா_"கந்தலும் அரிசியும்" என்றே வழங்கப்பட்டார். வளர்ந்தபின், அவர் புல்விற்றுப் பிழைத்து வந்தார்.

5. இவர்கள் அனைவருமே, புத்தரிடம், பிக்குகளாக சங்க முறைமையில் புக அனுமதி வேண்டினர். தயக்கம் இன்றியும், அவர்கள் பிறப்பின் கீழ்நிலை, முந்திய நிலை ஆகிய எதையும் பொருட்படுத்தாமலும், புத்தர் அவர்களைச் சங்க முறைமையில் இணைத்துக் கொண்டார்.

5. குஷ்டரோகி சுப்ரபுத்தாவின் சமயமாற்றம்.

1. ஒருமுறை மேன்மைதங்கிய புத்தர் இராஜகிரஹத்திற்கருகே, மூங்கில் தோப்பில், அணிலூட்டும் திடலில் தங்கியிருந்தார்.

2. அப்போது இராஜகிரஹத்தில், ஒரு குறிப்பிட்ட மனிதர், ஒரு குஷ்டரோகி, சுப்புரபுத்தா என்னுமு பெயருடன், ஏழையாய், பரிதாபத்திற்குரியவராய், துன்புற உயிராய் வாழ்ந்து வந்தார்.

3. அச்சமயத்தில், மேன்மைதங்கிய புத்தர் பெரும் எண்ணிக்கையிலான மக்களின் இடையே அமர்ந்து தம்மத்தைப் போதித்துக் கொண்டிருந்தார்.

4. குஷ்டரோகி சுப்ரபுத்தா தூரத்திலிருந்து ஆங்கு ஒன்று திரண்டிருந்த எண்ணிலா மக்களைக் கண்டு எண்ணினார்; ஐயமில்லாமல் ஆங்கே கடினமாகவோ_மென்மையாகவோ எனக்கும் ஏதாவது உண்ணக் கிடைக்கும்.

5. அதனால், குஷ்டரோகி சுப்ரபுத்தா அக்கூட்டத்தை நெருங்கி, அப்பெருங்கூட்டத்திடையே அமர்ந்து இலட்சியத்தைப் போதித்துக் கொண்டிருந்த மேன்மைதங்கிய புத்தரைக் கண்டார். எனவே மேன்மைதங்கிய புத்தரைக் கண்ட அவர் எண்ணினார். "இல்லை இங்கு உணவுதானம் ஏதும் இல்லை. இந்தக் கூட்டத்தில் சாமணர் கோதமர் தம்மத்தைப் போதித்துக் கொண்டிருக்கிறார். நான் அவருடைய போதனையைக் கேட்டால் என்ன!"

6. எனவே, அவர் ஓர்புறம் அமர்ந்தவாறு எண்ணினார்; "நானும் அவருடைய போதனைகளைக் கவனிப்பேன்."

7. அப்போது மேன்மை தங்கிய புத்தர், தம் எண்ணத்தால், கூடியுள்ளோர் எண்ணங்களை அறிந்தவராய்த் தமக்குள் கூறிக் கொண்டார், "நான் வியக்கிறேன்! இங்குள்ளோரில் யாரால் தம்மத்தை ஏற்கமுடிகிறது?" அதன்பின் அவர் கூட்டத்தில் அமர்ந்திருந்த குஷ்டரோகி சுப்ரபுத்தாவைக் கண்டார், அவரைக் கண்டதில் அவர் அறிந்துக்கொண்டார், "இவர் தம்மத்தை ஏற்கக் கூடும்."

8. எனவே, குஷ்டரோகி சுப்ரபுத்தாவின் பொருட்டு, புத்தர் கீழ்கண்ட தலைப்புகளைப்பற்றி உரிய வரிசைப்படி ஒரு போதனையை நிகழ்த்தினார், தானம் தருதல், துறவு வாழ்க்கை, இம்மை-மறுமை, புலன் நுகர்ச்சி ஆசைகளின் இழிவு, வெட்கக்கேடு ஆகியவற்யும், அசவங்களிலிருந்து பெறும் விடுதலையின் இலாபம் ஆகியவற்றையும் சுட்டிக் காட்டினார்.

9. அப்போது மேன்மைதங்கிய புத்தர், குஷ்டரோகி சுப்ரபுத்தாவின் உள்ளம் மென்மையாகி, வளையத்தக்கதாகிய, விடதலையாகி, உயர்வாகி, நம்பிக்கையால் நிறைந்ததைக் கண்டார். அதன்பின் புத்தர் தமது மிகச் சிறந்த தம்மத்தை துன்பம்-துன்ப காரணம்-துன்ப ஒழிப்பு-அதற்கான வழி என்பனவற்றை அவருக்கு நன்கு விளக்கினார்.

10. அதன்பின், சாயமேற்றுக் கொள்ளப் பொருத்தமாக உள்ள கறையற்ற வெள்ளைத் துணியைப்போன்றே, குஷ்டரோகி சுப்ரபுத்தாவும், ஆங்கு, அவ்விடத்தில் அமர்ந்தபடியே, தூய, கறையற்ற மெய்மைத் தம்மத்தின் உள்நோக்கி, தொடக்கமுடைய எதற்கும் முடிவுண்டு என்னும் அறிவைப் பெற்றார். குஷ்டரோகி சுப்ரபுத்தா, மெய்மையைக் கண்டார்-மெய்மையை அடைந்தார்-மெய்மையை உணர்ந்தார்-மெய்மையில் ஆழ்ந்தார்-ஐயங்களைக் கடந்து அப்பால் சென்றார்-அனைத்து வினாக்களினின்றும் விடுபட்டார்-தன்னம்பிக்கையை வென்றார்-இனியேதும் வேண்டா நிலையுற்றார்-புத்தரின் போதனையில் நிலைபெற்ற அவர் தம் இருக்கையிலிருந்து எழுந்து, புத்தரின் அருகே சென்று, ஆங்கு ஓர்புறம் அமர்ந்தார்.

11. அவ்வாறு அமர்ந்த அவர் மேன்மைதங்கிய புத்தரிடம் கூறினார்: "அற்புதம்! ஐயன்மீர்! அற்புதம்! ஐயன்மீர்! வீழ்ந்ததை ஒருவர் எழுப்புதலைப் போலவும், மறைந்ததை வெளிப்படுத்தல் போலவும், வழிதவறியவர்க்கு வழிகாட்டுதல் போலவும், இருளில் ஒளிவிளக்கை ஏந்துதல் போலவும், 'கண்ணுளார் யாவரும் வடிவங்களைக் காணலாம்' எனக் கூறி மேன்மை தங்கிய புத்தர் மெய்மையை வெளிப்படுத்தினீர்கள். நான்-ஐயன்மீர்!-நான் கூட மேன்மைதங்கிய புத்தரிடம் அடைக்கலம் புகுகிறேன்! சங்கமாம் துறவோரிடம் அடைக்கலம் புகுகிறேன்! மேன்மைதங்கிய புத்தர் என்னை அவர்தம் சீடராக ஒப்புவாராக இந்தக் கணத்திலிருந்து வாழ்க்கை முடியும் வரை புத்தரிடம் அடைக்கலம் புகுகிறேன்."

12. அதன்பின் குஷ்டரோகி சுப்ரபுத்தா, மேன்மைதங்கிய புத்தரின் தூய உரையினால் போதிக்கப்பட்டு, நிலைப்பட்டு, எழுச்சிபெற்று, இன்புற்று, அவரைப் போற்றி, அவர்தம் உரையை ஏற்று, அவர்க்கு நன்றி தெரிவித்து, பின் தம் இருக்கையினின்று எழுந்து, மேன்மைதங்கிய புத்தரை வலம் வந்து வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

13. எதரிபாராவிதமாக ஓர் இளங்கன்று தொழுநோயாளி சுப்ரபுத்தா மீது பாய்ந்து குத்தியதால் அவர் இறக்க நேர்ந்தது.

## பெண்டிரின் சமயமாற்றம்

### மஹாவிரஜாபதி கோதமி, யசோதரா மற்றும் அவர் தோழிகளின் சமயமாற்றம்.

1. உயர்வெய்திய புத்தர், அவர்தம் தந்தையின் இல்லத்திற்குச் சென்றிருந்தபோது, சங்கத்தில் சேரும் ஆவல், சாக்கிய ஆண்களிடையே இருந்தது போலவே, சாக்கியப் பெண்கள் இடையேயும் கூர்மையாயிருந்தது.

2. அத்தகைய பெண்களின் தலைவியாயிருந்தவர் மஹா பிரஜாபதி கோதமியைத் தவிர வேறு யாருமன்று.

3. அப்போது, அச்சமயம், உயர்வெய்திய புத்தர் நிக்ரோதரமத்தில் சாக்கியர்களிடையே தங்கியிருந்தபோது, மஹாபிரஜாபதி கோதமி அவரிடம் சென்று கூறினார்: "ஐயன்மீர்! பெண்கள் பரிவ்ராஜகர்களாவதற்கு அனுமதிக்கப்பட்டு, ததாகதரால் போதிக்கப்படும் கொள்கை, நடைமுறை ஆகியவற்றின் கீழ் சங்கத்தில் இணைவார்களாயின் நல்லது."

4. "போதும். ஓ! கோதமி! இது போன்ற எண்ணங்கள்தங்கள் மனத்தில் எழவிட வேண்டாம்." இரண்டாம் முறையும், மூன்றாம் முறையும் மஹாபிரஜாபதி இதே வேண்டுகோளை இதே சொற்களில் முன்வைத்தபோது, அவருக்கு இரண்டாம் முறையும், மூன்றாம் முறையும் இதே பதில் தான் கிடைத்தது.

5. அதன்பின் மஹாபிரஜாபதி கோதமி, வருத்தத்தோடும், வேதனையோடும், உயர்வெய்திய புத்தர் முன் வீழ்ந்து வணங்கி, அழுதபடி கண்ணீரோடு விடைபெற்றுச் சென்றார்கள்.

6. உயர்வெய்திய புத்தர் தம் பயணத்தின் பொருட்ட, நிக்ரோதாமாவை விட்டுச் சென்றபின், மஹாபிரஜாபதியும், சாக்கிய பெண்டிரும், சங்கத்தில் இணைவதற்கான தம் வேண்டுகோளையும், புத்தர் அத்தகைய வேண்டுகோளை ஏற்கமறுத்ததையும், மேலும் பரிசீலிப்பதற்காக ஒன்று கூடி அமர்ந்தனர்.

7. புத்தரின் மறுப்பை இறதியானதாக ஏற்கச் சாக்கியப் பெண்கள் மறுத்தனர். அவர்கள் ஒருபடி மேலே சென்று பரிவ்ராஜகத் துவராடை தரித்து, விரும்பிய வினை முடிந்துவிட்டதெனப் புத்தருக்குக் காட்ட விழைந்தனர்.

8. அதன்படி மஹாபிரஜாபதி கோதமி தம் முடியை வெட்டியெறிந்து விட்டு, ஆரஞ்சு-நிற அங்கியணிந்து சாக்கிய வம்சப் பெண்கள் பலருடன், அப்போது, வேசாலியில்

மகாவனத்திலுள்ள கூடாகார பவனில் தங்கியிருந்த புத்தரைச் சந்திக்கப் பயணம் மேற்கொண்டார்.

9. உரிய காலத்தில், மஹாபிரஜாபதி கோதமி தம் உடன் வந்தோருடன், வேசாலிக்கு வந்துற்று, தம் வீங்கிய கால்களுடனும், புழுதிபடிந்தவராக கூடாகார பவனுக்கு வந்தார்.

10. மீண்டும் அவர் உயர்வெய்திய புத்தரிடம், அவர் நிக்ரோதரமாவில் தங்கியிருந்தபோது தாம் முன்வைத்த அதே வேண்டுகோளை முன்வைத்தார்-அவர் மீண்டும் மறுத்தார்.

11. இரண்டாவதாகவும் அவருடைய மறுப்பைப் பெற்ற மஹாபிரஜாபதி வெளிப்பட்டு, கூடத்தின் வாயிலுக்கு வெளியேயாது செய்வதென அறியாமல் நின்றிருந்தார். அவர் அவ்வாறு நின்று கொண்டிருக்கையில், ஆனந்தர் அக்கூடத்திற்குத் தம் வழியே போகையில் அவரைக் கண்டு அடையாளம் கண்டு கொண்டார்.

12. அதன் பின் அவர் மஹாபிரஜாபதியை வினவினார்: "தாங்கள், கூடத்தின் வெளியே-வீங்கிய காலகளோடு-புழுதி படந்தபடி-துன்புற்று, அழுது, கண்ணீரோடு இங்கு ஏன் நிற்கின்றீர்கள்?" "ஏனெனில் ஆனந்தரே! உயர்வெய்திய புத்தர், பெண்களை, தமது வீட்டைத் துறந்து, ததாகதரால் பிரகடனப் படுத்தப்பட்ட கொள்கைகள், நடைமுறைகள் ஆகியவற்றின் கீழ்த் துறவறம் மேற்கொள்ள அனுமதிக்க வில்லையே."

13. அதன்பின் உயர்வெய்திய புத்தர் இருந்த இடத்திற்குச் சென்று, உயர்வெய்திய புத்தர் முன் வீழ்ந்து வணங்கி, ஓர்புறம் தம் இருக்கையில் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்தப்பின், போற்றுதலுக்குரிய ஆனந்தா கூறினார்: "ஐயன்மீர்! மஹாபிரஜாபதி வெளியே வாயில் மண்டபத்தில், வீங்கிய கால்களுடன், புழுதி படிந்து, வருத்தத்தோடும் வேதனையோடும், அழுதபடி, கண்ணீர்மல்க நிற்பதைக் காணுங்கள்-ஏனெனில் உயர்வெய்திய புத்தர், அவர்களை, தம் இல்லம் துறந்து, துறவறம் ஏற்று, உயர்வெய்திய புத்தரால் போதிக்கப்பட்ட கொள்கைகளையும், நடைமுறைகளையும் ஏற்க அனுமதிக்கவில்லையாதலால், ஐயன்மீர்! பெண்கள் தாம் விரும்பும்படி செயல்பட அனுமதி அளிக்கப்படுவது நல்ல தன்றோ."

14. "மஹாபிரஜாபதியவாகள் உயர்வெய்திய புத்தருக்கு பெரும் உதவி புரிந்தவர்கள் எனத் தம்மை நிரூபித்தவர்கள் அல்லவா-அவருடைய அன்னை இறந்தபின் அவருக்குத் தம் மார்பகங்களிலேயே பாலூட்டியவரல்லவா-பேரன்னையாய், செவிலித்தாயாய் இருந்தபோது உயர்வெய்திய புத்தரைப் பாலூட்டி வளர்தவரல்லவா. எனவே-ஐயன்மீர்! ததாகதர் பிரகடனப்படுத்துகிற கொள்கை, நடைமுறை ஆகியவற்றின் கீழ், இல்லற வாழ்விலிருந்து துறவற வாழ்வுக்கு மாறிச் செல்ல இந்தப் பெண்டிர்க்கு அனுமதியளிப்பதே நல்லது."

15. போதும் ஆனந்தரே! தயவுசெய்து பெண்கள் அவ்வாறு செய்ய அனுமதிக்கப்பட வேண்டாம்" இரண்டாம் முறையாகவும், மூன்றாம் முறையாகவும், ஆனந்தர் அதே வேண்டு கோளை அதே சொற்களில் விடுத்து அதே பதிலைப் பெற்றார்.

16. அதன்பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் உயர்வெய்திய புத்தரிடம் வினவினார். "ஐயன்மீர்! பெண்கள் பரிவ்ராஜம் ஏற்பதைத் தாங்கள் மறுப்பதற்கு அடிப்படையாதாயிருக்கக்கூடும்."

17. "சூத்திரர்களும், பெண்களும் மோட்சம் (முக்தி) அடைய முடியாது- ஏனெனில் அவர்கள் தூய்மையற்றவர்கள்-தாழ்வானவர்கள் எனப் பிராமணர்கள் கருதுவதை ஐயன்மீர் நன்கறிவீர்கள். எனவே அவர்கள் சூத்திரர்களையும், பெண்களையும் பரிவ்ராஜம் ஏற்க அனுமதிப்பதில்லை. பிராமணர்கள் போல் அதே கருத்துடையவராய் உள்ளாரா உயர்வெய்திய புத்தர்?"

18. உயர்வெய்திய புத்தர், பிராமணர்களுக்குச் செய்வது போலவே, சூத்திரர்களையும் பரிவ்ராஜம் ஏற்கவும், சங்கத்தில் சேரவும் அனுமதியளிக்கிறீர்கள் அல்லவா? ஐயன்மீர்! பெண்களை வேறுபாடாய் நடத்த அடிப்படைக் காரணம் யாது?

19. உயர்வெய்திய புத்தரால் பிரகடனப்படுத்தப்பட்ட கொள்கைகள், நடைமுறைகள் ஆகியவற்றின் கீழ் நிப்பானம் அடையப் பெண்களுக்கு ஆற்றல் இல்லை என உயர்வெய்திய புத்தர் கருதுகிறீர்களா?

20. உயர்வெய்திய புத்தர் பதிலிறுத்தார்: "ஆனந்தா! என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்! நிப்பானம் அடைவதில் பெண்களுக்கு, ஆண்களுக்குள்ளது போனறே ஆற்றல் உண்டு என்றே நான் கருதுகிறேன். பால்வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்டதல்ல. அது நடைமுறையை அடிப்படையாகக் கொண்டது."

21. "ஐயன்மீர்! உண்மைக் காரணத்ததை அறிந்து நான் மகிழ்கிறேன். நடைமுறைச் சிக்கல்கள் காரணமாக அவருடைய வேண்டுகோளை ஐயன்மீர் மறுக்கத்தான் வேண்டுமா? இத்தகைய நடவடிக்கை தம்மத்திற்கு இகழ்வையேற்படுத்தி, அது பால்வேறுபாட்டைக் கருகிறதெனக் குற்றஞ்சாட்டப்படுவதற்கு இடமளித்து விடாதா? புத்தர் கவலையுறும், அத்தகைய நடைமுறைச் சிக்கல்களை வெல்லத்தக்கவாறு ஐயன்மீர் சில விதிமுறைகளைக் கண்டளிக்கலாகாதா?"

22. "நல்லது, ஆனந்தரே! பெண்கள் என்னால் பிரகடனப் படுத்தப்படும் கொள்கைகள், நடைமுறைகளின் கீழ் பரிவ்ராஜம் ஏற்க அனுமதிக்கப்பட வேண்டுமென மஹாபிரஜாபதி வற்புறுத்துவார்களாயின் அதற்கு நான் ஒப்புதல் அளிக்கிறேன். எட்டுத் தலையாய விதிகளைச் செயற்படுத்தும் பொறுப்பை மஹாபிரஜாபதி கோதமியவர்கள் தமக்குத்தாமே ஏற்றுக் கொள்வாராக. அதுவே அவர்களுடைய உள்நுழைவாகும்."

23. அதன்பின், போற்றுதலுக்குரிய ஆனந்தர், இந்த எட்டுத் தலையாய விதிமுறைகளை உயர்வெய்திய புத்தரிடம் கற்றறிந்த பின், மஹாபிரஜாபதி கோதமியிடம் சென்று உயர்வெய்திய புத்தர் கூறிய அனைத்தையும் அவரிடம் கூறினார்.

24. "ஆனந்தாரூ ஆணோ, பெண்ணோ, இளைய, சிறிய வயதுகளில், தம்மைத் தாமே அலங்கரித்துக் கொள்ளும் பழக்கமுடையவராய், நீராடி முடித்ததும், எவ்வாறு இருகரங்களாலும் தாமரை மலர் மாலைகளை அல்லது மல்லிகை மலர்களை, அல்லது ஸ்திமுதக மலர்களைப் பெற்று, தம் தலைமீது சூடிக்கொள்வார்களோ, அவ்வாறே, ஆனந்தரே! நான் இந்த எட்டுத் தலையாய விதிகளையும், என்றென்றும் என் வாழ்நாள் முழுவதும் மீறாமால் தலைமேல் வைத்துப் போற்றுவேன்." என்று ஆனந்தரிடம் உரைத்தார் மஹாபிரஜாபதி.

25. அதன்பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர், உயர்வெய்திய புத்தரிடம் திரும்பி வந்து, அவர்முன் வீழ்ந்து வணங்கி, ஓர்புறம் தம் இருக்கையில் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்த, போற்றுதலுக்குரிய ஆனந்தர் உயர்வெய்திய புத்தரிடம் கூறினார்: "மஹாபிரஜாபதி கோதமி, ஐயன்மீர்! இந்த எட்டுத் தலையாய விதிகளையும் செயற்படுத்தும் பொறுப்பைத் தமக்குத் தாமே ஏற்றுக் கொண்டார். எனவே அவர் உபசம்பதா செயற்பாட்டைக் (சங்கத்தில் சேர்வை) கைக்கொண்டதாகக் கருதலாம்."

26. அப்போது, மஹாபிரஜாபதி முறைமையை ஏற்றார். அவரோடு 500 சாக்கிய பெண்டிர்களும்-அவரோடு வந்தவர்கள்-அப்போதே முறைமையை ஏற்றனர். அவ்வாறு முறைமையை ஏற்ற மஹாபிரஜாபதி புத்தரின் முன்வந்து, அவரை வணங்கி ஓர்புறம் நின்றார். உயர்வெய்திய புத்தர் அவருக்கு தம்மமாம் கொள்கையையும், நடைமுறையையும் போதித்தார்.

27. மற்ற ஐநூறு பிக்குணிகளும் உயர்வெய்திய புத்தரின் சீடர்களில் ஒருவரான நந்தகாவால் போதிக்கப்பட்டனர்.

28. மஹாபிரஜாபதியோடு பிக்குணிகளாக ஆன சாக்கியப் பெண்களிடையே யசோதராவும் இருந்தார். அவருடைய சங்கமுறைமை ஏற்புக்குப் பின் அவர் பத்தா கச்சானா என அறியப்படலானார்.

## 2. பிராக்ரதி என்னும் சண்டாளிகையின் சமயமாற்றம்

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில், அநாதபிண்டிகரின் சோலையான ஜேதவனத்தில் தங்கியிருந்தார்.

2. அவருடைய சீடரான ஆனந்தர் நகருக்குள் தானமேற்கச் செல்ல நேர்ந்தது. தம் உணவை உண்டு முடித்தபின் ஆனந்தர் பருகும் நீருக்காக அவர் ஆற்றுக்குச் சென்றார்.

3. ஆங்கு ஆற்றங்கரையில் ஒரு பெண் தன் குடத்தில் நீர் நிரப்பிக் கொண்டிருப்பதை அவர் கண்டார். ஆனந்தர் அவளைத் தனக்குச் சிறிது நீரளிக்கும்படி கேட்டார்.

4. பிராக்ரதி என்னும் பெயருடைய அப்பெண், தான் ஒரு சண்டாளிகை எனக்கூறி மறுத்தாள்.

5. ஆனந்தர் உரைத்தார்: "நான் உன் சாதியைப் பற்றிக் கவலைப்படவில்லை. அதன்பின் அப்பெண் தன்குடத்திலிருந்து அவருக்கு நீரளித்தாள்."

6. அதன்பின் ஆனந்தர் ஜேதவனத்திற்குச் சென்றார். அந்தப பெண் அவரைத் தொடர்ந்து சென்று அவர் எங்கு தங்கியுள்ளார் என்பதை அறிந்து கொண்டு, அவர் பெயர் ஆனந்தா என்பதையும், அவர் புத்தரின் சீடர் என்பதையும் அறிந்தாள்.

7. வீட்டுக்குத் திரும்பிய அப்பெண் தன் தாய் மாதங்கியிடம் நடந்தவற்றைக் கூறி நிலத்தில் வீழ்ந்து அழத் தொடங்கினாள்.

8. அவளுடைய அழுகைக்கான காரணம் யாதெனத் தாய் கேட்டாள். முழுக் கதையையும் அப்பெண் கூறி உரைத்தாள். "எனக்கு மணம் செய்விக்க நீ விழைவாயேயாயின், நான் ஆனந்தரை மட்டுமே மணப்பேன், வேறெவரையும் நான் மணக்கமாட்டேன்."

9. தாய் விசாரித்தறியத் தொடங்கினாள். திரும்பி வந்த அவள், அத்தகைய திருமணம் நடக்க முடியாதெனவும், ஏனெனில் ஆனந்தர் பிரம்மச்சரிய உறுதியில் இருப்பதாகவும் அந்தப் பெண்ணிடம் கூறினாள்.

10. இச்செய்தியைக் கேள்வியுற்ற அப்பெண் மிகுந்த துன்பங்கொண்டு உணவைக் கைவிட்டாள். இச்செய்திகளை அவள் விதியின் கட்டளையென்று எடுத்தக்கொள்ளத் தயாராக இல்லை. எனவே அவள் கூறினாள்: "தாயே! உங்களுக்குத்தான் வசியக்கலை தெரியும் அல்லவா? நம் நோக்கத்தை அடைய நீங்கள் ஏன் அதைப் பயன்படுத்தக் கூடாது?" தாய் கூறினாள்: "என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து பார்க்கலாம்."

11. மாதங்கி ஆனந்தரைத் தம் இல்லத்திற்கு உணவுக்கழைத்தாள். அந்தப் பெண் மிகவும் மகிழ்ச்சியுற்றாள். அதன்பின் மாதங்கி, ஆனந்தரிடம், தன் மகள் அவரைத் திருமணம் செய்து கொள்ள மிகவும் ஆவலாக இருக்கிறாள் எனக் கூறினாள். ஆனந்தர் பதிலிறுத்தார், "நான் பிரம்மச்சாரியாக இருக்க உறுதி பூண்டிருக்கிறேன்-எனவே நான் எந்தப் பெண்ணையும் திருமணம் செய்து கொள்ள முடியாது."

12. "நீங்கள் என் மகளைத் திருமணம் செய்து கொள்ளவில்லையாயின், அவள் தற்கொலை செய்து கொள்வாள்- தங்கள் மீது அவள் அத்துனை பற்று கொண்டுள்ளாள்"- என்று மாதங்கி ஆனந்தரிடம் கூறினாள். "என்னால் ஏதும் செய்ய முடியாது." என்று பதிலிறுத்தார் ஆனந்தர்.

13. மாதங்கி உள்ளே சென்று அவளுடைய மகளிடம் ஆனந்தர் அவளை மணக்க மறுத்ததாகக் கூறினாள்.

14. அந்தப் பெண் அழுதாள் "தாயே! உன் வசியக்கலை என்னவாயிற்று?" தாய் கூறினாள்: "ததாகதருக்கு எதிராய் என் வசியக்கலை வெல்ல முடியாது."

15. அந்தப் பெண் கதறிக் கூறினாள் "கதவை மூடிவிடுங்கள் அவரை வெளியேற விடாதீர்கள். இன்றிரவே அவர் என் கணவராக வேண்டும் நான் ஒரு கை பார்த்து விடுகிறேன்."

16. அந்தப் பெண் விரும்பியபடியே செய்தாள் தாய், இரவு வந்ததும் தாய் அந்த அறைக்குள் ஒரு படுக்கையைக் கொண்டு வந்தாள். அந்தப் பெண் மிக அழகிய உடைகளை அணிந்து உள்ளே வந்தாள். ஆனால் ஆனந்தரோ சலனமற்று இருந்தார்.

17. இறுதியில் தாய் தன் வசியக் கலையைப் பயன்படுத்தினாள். அதன் விளைவாக அவ்வறையில் தீப்பற்றியது. அந்தத் தாய் ஆனந்தரின் ஆடைகளைப் பற்றிக் கொண்டு கூறினாள். நீ என் மகளைத் திருமணம் புரிந்து கொள்ள ஒப்புக் கொள்ளவில்லையாயின், உன்னை நான் இந்தத் தீயினுள் வீசிவிடுவேன். இருப்பினும், ஆனந்தர் விட்டுக் கொடுக்கவில்லை. செய்வதறியாது திகைத்த தாயும், மகளும் அவரை வெளியேறவிட்டுவிட்டார்கள்.

18. திரும்பிவந்த ஆனந்தர் உயர்வெய்திய புத்தரிடம் நடந்தவை அனைத்தையும் கூறினார்.

19. இரண்டாவது நாள் அந்தப்பெண் ஆனந்தரைத் தேடிக் கொண்டு ஜேதவனத்திற்கு வந்தாள். ஆனந்தர் அவளைக் கண்டார்-அவளைத் தவிர்க்க விரும்பினார். ஆனால் அந்தப் பெண்ணோ அவர் சென்றவிடமெல்லாம் சென்றாள்.

20. ஆனந்தர் ஜேதவனத்திற்குத் திரும்பியதும், அந்தப் பெண் விஹாரின் வாயிலில் காத்திருப்பதைக் கண்டார்.

21. அந்தப் பெண் எவ்வாறு தம்மைப் பின்தொடர்ந்த வண்ணமே இருக்கிறாள் என்பதை உயர்வெய்திய புத்தரிடம் கூறினார் ஆனந்தர். உயர்வெய்திய புத்தர் அவளை அழைத்து வர ஆளனுப்பினார்.

22. அந்தப் பெண் உயர்வெய்திய புத்தரின் முன் தோன்றியதும், அவர், அவள் ஏன் ஆனந்தரைப் பின்தொடர்கிறாள் எனக் கேட்டார். தான் அவரை மணக்க பெரிதும் ஆர்வமுடையவளாயிருப்பதாக அவள் பதிலிறுத்தாள். "அவர் மணமாகாதவராய் இருப்பதாக நான் கேள்விப்பட்டேன், நானும் மணமாகாதவளாய் இருக்கிறேன்."

23. பகவன் கூறினார். "ஆனந்தர் ஒரு பிக்கு, அவர் தலையில் முடியே இல்லை. நீயும் உன்தலையை முழுமையாய் மழித்தக் கொள்வாயேயாயின் என்ன செய்யலாம் என்பதை நான் செய்வேன்."

24. அந்தப் பெண் பதிலிறுத்தாள். "நான் அதற்குத் தயாராக இருக்கிறேன்." பகவன் உரைத்தார், "உன் முடியை நீ மழித்தக் கொள்வதற்கு உன் தாயின் அனுமதியை நீ பெற்றாக வேண்டும்."

25. அந்தப் பெண் தன் தாயிடம் திரும்பிச் சென்று கூறினாள், "தாயே! உன்னால் சாதிக்க முடியாததை நான் சாதித்து விட்டேன். நான் என் முடியை மழித்துக் கொண்டால் என்னை ஆனந்தருக்கு மணம் முடித்து வைப்பதாகப் பகவன் உறுதியளித்துவிட்டார்."

26. தாய் கோபமடைந்து கூறினாள், "நீ அப்படிச் செய்யக் கூடாது. நீ என் மகள் - நீ உன் முடியை வைத்திருக்க வேண்டும். நீ ஏன் ஆனந்தரைப் போன்று ஒரு சாமணரை மணப்பதில் அவ்வளவு ஆர்வமாய் இருக்கிறாய்? நான் அதைவிடச் சிறந்த ஒரு மனிதர்க்கு உன்னை மணம் முடித்து வைக்கிறேன்."

27. அவள் பதிலிறுத்தாள், "ஒன்ற நான் அவரை மணப்பேன் -அல்லது இறப்பேன்-மூன்றாவது மாற்று வழியே எனக்கு இல்லை."

28. தாய் கூறினாள், "நீ ஏன் என்னை இழிவுப்படுத்துகிறாய்?" அந்தப் பெண் கூறினாள், "நீ என்னை நேசித்தால், நான் விரும்பும்படி செய்ய என்னை நீ விடுதல் வேண்டும்."

29. தன் எதிர்ப்பைத் தாய் திரும்பப் பெற்றுக் கொண்டாள். அந்தப் பெண் முடிமழித்துக் கொண்டாள்.

30. அதன் பின் அந்தப் பெண் உயர்வெய்திய புத்தர் முன்நின்று கூறினாள், "தாங்கள் கூறியபடியே நான் என் முடியை மழித்துக் கொண்டேன்?"

31. அதன்பின் உயர்வெய்திய புத்தர் அப்பெண்ணை வினவினார், "உனக்கு என்ன வேண்டும். அவருடைய உடலின் எந்தப் பகுதியை நீ போற்றுகிறாய்?" அந்தப் பெண் கூறினாள், "நான் அவருடைய நாசியை நேசிக்கிறேன், நான் அவருடைய வாயை நேசிக்கிறேன், நான் அவருடைய செவிகளை நேசிக்கிறேன், நான் அவருடைய குரலை நேசிக்கிறேன், நான் அவருடைய நடையை நேசிக்கிறேன்."

32. அதன்பின் உயர்வெய்திய புத்தர் அந்தப் பெண்ணிடம் உரைத்தார், "அவருடைய கண்கள் கண்ணீரின் இருப்பிடம் என்பதும், அவருடைய நாசிகள் தூசியின் இருப்பிடம் எனபதும், அவருடைய வாய் உமிழ்நீரின் இருப்பிடம் என்பதும் அவருடைய உடல் மலம், சிறுநீர் இவைகளின் பாத்திரமாய் உள்ளது என்பதும் உனக்குத் தெரியுமா?"

33. "ஆணும், பெண்ணும் இணையும்போது அவர்கள் குழந்தைகளை உண்டாக்குகிறார்கள். ஆனால், பிறப்பு எங்குள்ளதோ, ஆங்கு இறப்பும் உள்ளதே, இறப்பு எங்குள்ளதோ, ஆங்கு துன்பமும் உள்ளதே, என் அருமைப் பெண்ணே, ஆனந்தரை மணப்பதன் மூலம் நீ அடையப் போவதென்ன? எனக்கு தெரியவில்லை."

34. அந்தப் பெண் ஆழ்ந்து யோசிக்கத் தொடங்கி, மிகவும் ஆர்வமாய் விரும்பியபடி, ஆனந்தரை மணந்து கொள்வதில் எந்தப் பயனும் இல்லை என்பதை ஒப்புக் கொணடு, அதனை உயர்வெய்திய புத்தரிடம் தெரிவித்தாள்.

35. உயர்வெய்திய புத்தரை வணங்கியபின் அந்தப் பெண் உரைத்தாள், "அறியாமை காரணமாக நான் ஆனந்தரைப் பின்தொடர்ந்தேன். இப்போது என் மனம் அறிவுற்றது. விபத்துக்குள்ளான பின் மறுகரை சேர்ந்து விட்ட ஒரு கப்பலின் மாலுமி போல் நான் இப்போது உள்ளேன். புதிய பார்வை பெற்ற குருடி போலுள்ளேன். உயர்வெய்திய புத்தர் தம் மெய்யறிவுரைகளால் என் உறக்கத்தினின்று என்னை எழுப்பிவிட்டார்."

36. "பிரக்ரதி! நீ நற்பேறெய்திவிட்டாய்! சண்டாளிகையாயிருப்பினும், நீ உன்னத ஆண்களுக்கும், உன்னதப் பெண்களுக்கும் ஓர் மாதிரிவடிமாய்த் திகழ்வாய், நீ சாதியால் தாழ்ந்தவள் எனக் கருதப்பட்டாலும், பிராமணர்களும் உன்னிடமே பாடம் கற்பார்கள். நீதி, நன்னெறி, ஆகிய பாதை விட்டு விலகாதிரு. சிம்மாசன அரசிகளின் இராஜப் புகழையும் நீ விஞ்சிவிடுவாய்."

37. திருமணம் தோல்வியுற்றதால், அவளுக்கு பிக்குணி சங்கத்தில் சேர்வதொன்றே வழியாயிருந்தது.

38. தம் விருப்பத்தை அவள் வெளிப்படுத்தியதும், அவள் கீழ்வகுப்பினள் எனக் கருதப்பட்டதற்கு மாறாக பிக்குணிகள் சங்கத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டாள்.

## பரிவ்ராஜகர்களின் சமயமாற்றம்.

### 1. சாரநாத்திற்கு வருகை

1. தமது கொள்கைகளைப் போதிப்பதென்ற முடிவெடுத்த புத்தர் தமக்குத்தாமே கேட்டுக் கொண்டார், "நான் முதலில் யாருக்குக் கொள்கையைப் போதிப்பது," புத்தர், பெரும் கல்விமான் என்றம், அறிஞர் என்றம், புத்திமான் என்றம் மாசிலாமனத்தர் என்றும் தம்மால் போற்றப்பட்ட ஆலாரகாலாமை நினைத்தார். "நான் இக்கொள்கைகளை அவருக்கு முதலில் போதித்தாலென்ன?" ஆனால் ஆலாரகாலாம் இறந்து விட்டாரென அவருக்குக் கூறப்பட்டது.

2. அதன்பின் உத்தக ராமபுத்ரருக்குப் போதிக்கலாமென அவர் எண்ணினார். ஆனால் அவரும் இறந்துவிட்டிருந்தார்.

3. அதன்பின் அவர் தம்முடைய பழைய துணைவர்கள் ஐவரைப்பற்றி எண்ணினார். அவர் நிரஞ்சனையில் தவ முயற்சிகளை மேற்கொண்டிருந்த காலை அவர்கள் அவருடன் இருந்தவர்கள், அதன் பின் அவர் தவமுயற்சிகளைக் கைவிட்டதற்குச் சினந்து அவரை விட்டு நீங்கியவர்கள்.

4. அவர்கள் எனக்கு நிறையச் செய்திருக்கிறார்கள், என்னை ஆதரித்தார்கள், நன்கு கவனித்துக் கொண்டார்கள், நான் முதல்முதலாக அவர்களுக்குக் கொள்கையைப் போதித்தாலென்ன? அவர் தமக்குத்தாமே கூறிக் கொண்டார்.

5. அவர்களின் இருப்பிடம் பற்றி அவர் கேட்டார். அவர்கள் சாரநாத்திலுள்ள இசிபட்னாவின் மான்சோலையில் வசிப்பதாக அறிந்தபின், அவர் அவர்களைத் தேடிச் சென்றார்.

6. அவர் வருவதைக் கண்ணுற்ற அந்த ஐவரும், அவரை வரவேற்கக் கூடாதெனக் தமக்குள் முடிவு செய்து கொண்டனர். அவர்களில் ஒருவர் கூறினார்: "இதோ! நண்பர்களே! தவசிகவுதமர் வருகிறார் தவமுயற்சியைக் கைவிட்டு செல்வமும் வசதியுமான வாழ்க்கைக்குத் திரும்பியவர். அவர் ஒரு பாவம் செய்துவிட்டார். எனவே நாம் அவரை வரவேற்கலாகாது, மரியாதை நிமித்தம் எழவும் கூடாது. அவர்தம் கலயத்தையோ, துவராடையையோ தொடவும் கூடாது. அவருக்கு நாம் ஒரு இருக்கையை மட்டும் இட்டுவைப்போம். அவர் விரும்பினால் அமரட்டும்." அவர்கள் அனைவரும் இதற்கு ஒப்புக்கொண்டனர்.

7. ஆனால் புத்தர் அருகுற்றதும், அந்த ஐந்து பரிவ்ராஜகர்களாலும் தம் முடிவுப்படி நடக்க இயலவில்லை, அத்துனை வெகுவாய் அவர்தம் தோற்றத்தால் கவரப்பட்ட அவர்கள் அனைவரும் தம் இருக்கையினின்று எழுந்தனர். ஒருவர் அவருடைய காலத்தை ஏந்தினார். மற்றொருவர் துவராடைத் தாங்கினார், இன்னொருவர் இருக்கையைத் தயார்படுத்தினார், ஒருவர் அவர்தம் பாதங்களைக் கழுவ நீர் கொணர்ந்தார்.

8. உண்மையில் வரவேற்கப்படாத ஒரு விருந்தினர்க்கான மிகப்பெரிய வரவேற்பாயிருந்தது அது.

9. இவ்வாறாக தூற்ற விழைந்தவர்கள் போற்றலாயினர்.

## 2. புத்தரின் முதற் பேருரை

1. வந்தனங்களைப் பரிமாறிக் கொண்டபின் அந்த ஐந்து பரிவ்ராஜகர்களும், அவர் இன்னமும் தவமுயற்சியில் நம்பிக்கை கொண்டுள்ளாரா என வினவினர். புத்தர் எதிர்மறையாய் விடையிறுத்தார்.

2. ஆங்கு இரு தீவிரநிலைகள் உள்ளன-அதாவது களிக்கின்ற வாழ்க்கை மாற்றம் தம்மை வருத்திக்கொள்ளும் தவமுறை-எனக் கூறினார் அவர்.

3. ஒருவர் கூறுகிறார்: நாம் உண்போம்-குடிப்போம்-ஏனெனில் நாளை இறப்போம். மற்றொருவர் கூறுகிறார்: வாசனை அனைத்தையும் (விருப்பங்கள்) அழிப்பீராக- ஏனெனில் அவைகள் மறுபிறப்பைக் கொணர்கின்றன. இவையிரண்டும் மனிதருக்கு ஆகாதவையென நிராகரித்தார் புத்தர்.

4. அவர் மத்தய மார்க்கத்தில், (மஜ்ஜிம பதிபாதா) அதாவது களிப்புபாதையுமன்றி தன்னை வருத்திக் கொள்ளும் பாதையுமன்றியதான நடுவு நிலைப் பாதையில் நம்பிக்கை உடையவராய் இருந்தார்.

5. அவர் பிரிவ்ராஜகர்களிடம் உரைத்தார்: "இதற்கு எனக்குப் பதிலளியுங்கள், தாங்கள் செயற்பாடுவோராய் இருந்து தொடர்ந்து உலகியல் இன்பங்களிலோ அல்லது விண்ணுலக இன்பங்களிலோ விருப்புடையோராயிருப்பின், தம்மை வருத்திக் கொள்ளும் தவமுயற்சிகள் யாவும் வீணேயல்லவா?" அவர்கள் விடையிறுத்தனர்: "ஆம்! தாங்கள் கூறுவது போல்தான்."

6. "தாங்கள் பரிதாபத்திற்குரிய தம்மை வருத்திக் கொள்ளும் தவமுயற்சிகளை மேற்கொள்வதன் மூலம் தங்கள் தன்னுணர்வுகளை எப்படி விருப்பினின்று விடுதலைப் பெறச் செய்வீர்கள்? தாங்கள் விருப்பெனும் தீயை அணைப்பதில் வெற்றிக்காணாதவரை." அவர்கள் பதிலிறுத்தனர், "ஆம்! தாங்கள் கூறுவது போல்தான்"

7 "தங்களுக்குள் உள்ள, தானெனும் தன்னுணர்வு வெல்லப் பட்டபின் தான் தங்கள் வேட்கையற்றவராவீர்; அதன்பின் தாங்கள் உலகியல் இன்பங்களை விழையமாட்டீர்கள். தங்களின் இயல்பான தேவைகள் தங்களைக் கறைப்படுத்த மாட்டா. தங்கள் உடலின் தேவைகேற்ப தாங்கள் உண்ணலாம்-அருந்தலாம்."

8. "எல்லாவகை புலன் உணர்ச்சிகளும் சக்தியைக் குன்றச் செய்பவையே, உணர்ச்சியுறுமனிதன் தன் விருப்பிற்கு அடிமையே. எல்லாவித களிப்புத் தேடல்களும் கீழ்மையானவையே-ஆபாசமானவையே. ஆனால் நான் உங்களுக்கு கூறுகிறேன்- வாழ்வின்தேவைகளை நிறைவேற்றிக் கொள்வது தீயதன்று, உடலை நல்ல நிலையில் வைத்துக் கொள்வது ஒரு கடமை; இல்லாவிடில் தாங்கள் தங்கள் மனத்தை வலிமையாய், தெளிவாய், வைத்துக்கொண்டு அறிவுச்சுடர் எரியும்படிச் செய்து கொள்ள இயலாது."

9. "ஓ! பரிவ்ராஜகர்களே! மனிதர்கள் பின்பற்றக் கூடாத இரு தீவிர எல்லைகள் இவ்விரண்டும் என அறியுங்கள்-ஒரு புறம் பற்றின் வேட்கையில் தங்கியுளள கவர்ச்சியின்பால் அதீத ஈடுபாடுகொள்ளும் பழக்கம்-அது கீழ்மையான தரங்குறைந்த வழியில் திருப்தியைத் தேடும் முறையாகும்-அது மதிப்பிற்குரியதன்று, பயனற்றது. மற்றொரு புறம் தம்மை வருத்திக் கொள்ளும் தவமுயற்சியைப் பழக்கமாகப் பயின்று கொள்ளுதல், துன்பமயமானது, மதிப்பற்றது மேலும் பயனுமற்றது."

10. "ஈண்டு இவ்விரு தீவிர எல்லைகளையும் நீக்குகிற நடுவுநிலைப் பாதை ஒன்றுள்ளது. அந்தப் பாதையையே நான் போதிக்கிறேன் என்று தாங்கள் அறவீராக."

11. அந்த ஐந்து பரிவ்ராஜகர்களும், அவருரையைக் கவனத்துடன் செவிமடுத்தனர். புத்தரின் நடுவுநிலைப் பாதைக்குப் பதிலாக யாது கூறுவதென அறியாமல் அவர்கள், அவரைச் தாம் விட்டு நீங்கிய பின் அவர் யாது செய்து கொண்டிருந்தார் என அவரை வினவினர். அதன்பின் புத்தர், அவர் எவ்வாறு கயாவிற்குச்சென்றாரென்றம், போதிமரத்தடியில் அவர் எப்படி ஆழ்ந்த சிந்தனைக்குப்பின நிறைவுறு பேரறிவை அவர் எப்படி எய்தினார் என்றும் அதன் விளைவாக எப்படி ஒரு புதிய வாழ்வுப் பாதையைக் கண்டுபிடித்தார் என்றும் அவர்களுக்கு விளக்கினார்.

12. இதைச் செவிமடுத்த பரிவ்ராஜகர்கள், அவருடைய பாதை எதுவென்றறிய வேகம் கொண்டு, பொறுமையிழந்து அதனைத் தமக்கு விளக்கும்படி புத்தரை வேண்டினர்,

13. புத்தர் ஒப்புக்கொண்டார்.

14. அவருடைய பாதை அவருடைய தம்மமாய் (சமயமாய்) இருக்கிறது-அது கடவுள் மற்றும் ஆன்மாவோடு எந்தத் தொடர்பும் இல்லாததாய் இருக்கிறது என்று கூறித் தொடங்கினார் அவர். அவருடைய தம்மம் இறப்பிற்குப் பின்னான வாழ்க்கையோடு எந்தத் தொடர்பும் இல்லாததாய் இருக்கிறது. சடங்குகள் சம்பிரதாயங்கள் எதையும் அவருடைய தம்மம் பொருட்படுத்துவதாயில்லை.

15. அவருடைய தம்மத்தின் மையம் மனிதனும், இப்புவியில் மனிதனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவுமேயாகும்.

16. இதுவே அவருடைய முதலாவது அடிப்படைக் கோட்பாடு என்றார் அவர்.

17. அவருடைய இரண்டாவது அடிப்படைக் கோட்பாடாவது மனிதர்கள் துன்பத்தில் வாழ்கிறார்கள்-துயரத்திலும் ஏழ்மையிலும் வாழ்கிறார்கள் என்பது, உலகம் துன்பமயமாய் உள்ளது-தம்மத்தின் ஒரே நோக்கம் எவ்வாறு உலகினின்று துன்பத்தை ஒழிப்பது என்தே, வேறெதுவும் தம்மமல்ல.

18. துன்பத்தின் இருப்பை உணர்வதும், துன்பத்தைக் களைவதற்கான வழியைக் காட்டுவதுமே அவருடைய தம்மத்தின் அடித்தளமும் அடிப்படையுமாகும்.

19. இஃது ஒன்று மட்டுமே தம்மத்திற்கான அடித்தளமாகவும், நியாயமாகவம் இருக்க முடியும், இதை உணரத் தவறும் எந்த மதமும் சமயமேயல்ல.

20. "உண்மையில் பரிவ்ராஜகர்களே! எந்தவொரு துறவியோ அல்லது பிராமணரோ (அதாவத மத போதகர்கள்), உண்மையில் உள்ளபடி, உலகில் துன்பமுள்ளதென்றும், அதனின்று தப்புவதே தம்மத்தின் மையமான பிரச்சினையென்றும் புரிந்து கொள்ள வில்லையோ, அத்தகு துறவிகளும் பிராமணர்களும் என் கருத்துப்படி துறவிகளாகவோ, பிராமணர்களாகவோ கொள்ளத்தக்கவர்களில்லை, அந்தப் பெரியோர் தமக்குத் தாமே முழுமையாக இந்த வாழ்க்கையிலேயே தம்மத்தின் பொருள் இன்னதென்று அறியவில்லை."

21. அதன்பின் பரிவ்ராஜகர்கள் அவரை வினவினர், "தங்களுடைய தம்மத்தின் அடித்தளம் துன்பத்தின் இருப்பை உணர்வதும் அதை நீக்குவதும் தானெனில், எவ்வாறு தங்களின் தம்மம் துன்பத்தை நீக்குகிறதென எங்களுக்குக் கூறுங்கள்."

22. அதன்பின் புத்தர் அவருடைய தம்மத்தின் படி ஒவ்வொரு மனிதரும், 1. தூய்மைப் பாதையை, 2.நேர்மைப் பாதையை, 3. நல்லொழுக்கப் பாதையைப்

பின்பற்றுவார்களேயாயின், அது எல்லாத் துன்பங்களுக்கும் ஒரு முடிவைக்கொணரும் என்று அவர்களுக்கு உரைத்தார்.

23. தாம் அத்தகையதொரு தம்மத்தைக் கண்டுபிடித்துள்ளதாக அவர் மேலும் கூறினார்.

3. புத்தரின் முதற் பேருரை_(தொடர்ச்சி)

தூய்மையின் பாதை

1. அதன் பின் பரிவ்ராஜகர்கள் புத்தரிடம், அவர்தம் தம்மத்தைத் தங்களுக்கு விளக்கும் படி வேண்டினர்.

2. புத்தர் அவ்வாறு செய்ய மகிழ்வுற்றார்.

3. முதலில் தூய்மையின் பாதைப் பற்றி அவர்களுக்கு உரைக்கலானார்.

4. "தூய்மையின் பாதை என்பது, நல்லவனாய் இருக்க விழையும் ஒரு மனிதன் வாழ்க்கையின் சில கொள்கைகளை உணர வேண்டும்", என்று அவர் பரிவ்ராஜர்களுக்கு உரைத்தார்.

5. "என்னுடைய நெறியின்படி, அதனால் உணரப்படும் வாழ்வின் கொள்கைகளாவன: துன்புறுத்தவோ கொல்லவோ கூடாது, திருடவோ, பிறருக்குரிய எதையும் தனதாக்கிக் கொள்ளவோ கூடாது, பொய்யுரைக்கலாகாது, காமவெறியில் ஈடுபடலாகாது, போதையூட்டும் பானங்களை அருந்தலாகாது."

6. "இந்தக்கோட்பாடுகளை உணர்த்தல், ஒவ்வொரு மனிதனுக்கும் மிகவும் இன்றியமையாதது என்று நான் கூறுகிறேன். ஏனெனில் ஒவ்வொரு மனிதனும் தான் செய்வன அனைத்தையும் மதிப்பிட ஓர் தர அளவீடு உடையவனாய் இருக்க வேண்டும். என்னுடைய போதனைப்படி இந்தக் கோட்பாடுகளே தர அளவீடுகளாக அமைகின்றன."

7. எங்கனும் மக்கள் 'பதித்' களாய் (வீழ்ச்சியுற்றவர்களாய்) உள்ளனர், ஆனால் "பதித்' களில் இருவகையினர் உள்ளனர். தரஅளவீடுடைய 'பதித்', தர அளவீடில்லாத 'பதித்'.

8. தரஅளவீடில்லாத ஒரு பதித் தான் வீழ்ந்துபட்டிருப்பதை அறிவதில்லை. அதன் விளைவாக அவன் எப்போதும் வீழ்ச்சியுற்றே இருக்கிறான். மற்றொரு புறம், தர அளவீடுடைய ஒரு பதித் வீழ்ச்சியுற்ற நிலையிலிருந்து எழ முயல்கிறான். ஏன்? விடையாதெனில் அவன் தான் வீழ்ச்சியுற்றிருப்பதை அறிந்துள்ளான்.

9. ஒரு மனிதனின் வாழ்வை ஒழுங்குபடுத்தும் தரஅளவீடு உடைமைக்கும், தரஅளவீடு இன்மைக்கும் இடையிலுள்ள வேறுபாடு இதுதான். மனிதனின் வீழ்ச்சியன்று பெரிதும் பொருட்படுத்தப் படவேண்டியது, ஆனால் தரஅளவீடு ஏதும் அற்ற இருப்பதே.

10. ஓ! பரிவ்ராஜகர்களே! நீங்கள் கேட்கலாம்! இந்தக் கோட்பாடுகள் ஏன் வாழ்வின் தரஅளவீடாக உணரத்தக்கனவாயுள்ளன.

11. நீங்கள் இவ்வாறு கேட்டுக் கொள்வீர்களாயின், உங்களுக்கு நீங்களே இந்த வினாவிற்கான விடையைக் காண்பீர்கள். இந்தக் கோட்பாடுகள் தனிமனிதனுக்கு நல்லவையா? மேலும் நீங்கள் கேட்பீர்களாயின். இவை சமூக நன்மையைப் பெருக்குபவையா?

12. "இந்த வினாக்களுக்கான விடைகள் உடன்பாடானவையாயிருப்பின் என்னுடைய தூய்மையின் பாதைக் கோட்பாடுகள் உண்மையான வாழ்க்கைத் தர அளவீடாக அமைவனவாக உணரத்தக்கவை என்பது பெறப்படும்".

4. புத்தரின் முதற்பேருரை - (தொடர்ச்சி)

அஷ்டாங்க மார்க்கம் - நேர்மையின் பாதை

1. அடுத்து புத்தர் பரிவ்ராஜகர்களுக்கு அஷ்டாங்க மார்க்கம் குறித்து விளக்கவுரையாற்றினார். அஷ்டாங்க மார்க்கத்தில் எட்டு உறுப்புக்கள் உண்டு என்றார் அவர்.

2. அவர் தன்னுடைய பேருரையை சம்மாதித்தி (நற்காட்சி) என்னும் அஷ்டாங்க மார்க்கத்ததின் முதன்மையானதும் முக்கிய மானதுமான கூறு பற்றிய வெளிப்படுத்துதலோடு தொடங்கினார்.

3. புத்தர் பரிவ்ராஜகர்களுக்கு உரைக்கலானார்: "சம்மாதித்தியின் முக்கியத்தை உணர".

4. "ஓ! பரிவ்ராஜகர்களே! நீங்கள் இவ்வுலகம் ஓர் இருட்சிறையென்றும், மனிதன் இந்த இருட்சிறையில் கைதியாயுள்ளான் என்றும் உணரவேண்டும்".

5. "அச்சிறை இருள் நிறைந்ததாயுள்ளது. கைதியால் எதையும் சரியாகப் பார்க்க முடியாத அளவுக்கு அது மிகவும் இருளாயுள்ளது. கைதி, தான் ஒரு கைதி என்று கூட கண்டறிய முடிவதில்லை"

6. "உண்மையில், மனிதன் வெகுகாலம் இருளிலேயே வாழ்வதால் குருடாகிப் போவது மட்டுமன்று _ஆனால் ஒளியென்று கூறப்படும் அதிசயப் பொருளொன்று இருக்கக் கூடுமோ என்றே மிகவும் ஐயுறுகிறவனாக உள்ளான்."

7. "மனிதனுக்கு ஒளி வரும் ஒரே கருவியாக மனம் மட்டுமே உள்ளது".

8. ஆனால் இந்த இருட்சிறைவாசிகளின் மனம் இந்தப் பயனளிக்கத்தக்க நிறைவான கருவியாயில்லை.

9. அது ஒரு சிறது ஒளியையே உள்விடுகிறது _ காட்சியுடையார்க்கு ஆங்கு இருளெனும் ஒன்று உள்ளதெனப் புலப்படுத்துமளவிற்குப் போதுமானவையே.

10. அவனுடைய புரிதல் இயல்பில் இவ்வாறான குறையுடையதாயுள்ளது.

11. ஆயினும் அறியுங்கள் ஓ! பரிவ்ராஜகர்களே! சிறைக் கைதியின் நிலை, அது தோன்றுமளவிற்கு நம்பிக்கையற்றதாயில்லை.

12. ஏனெனில் மனிதனுக்குள் மனஉறுதி என்னும் ஒன்று உள்ளது. பொருத்தமான நோக்கங்கள் எழுகையில் அந்த மனஉறுதி எழுப்பப்பட்டு இயக்கத்துக்குள் இயக்கப்படும்.

13. மனஉறுதியன் இயக்கத்தை எந்தத் திசையில் செலுத்துவது எனக் காண்கிற அளவிற்குப் போதுமான ஒளியின் வருகையோடு, மனிதன் அவற்றை வழிநடத்தலாம்_அவை விடுதலைக்கு வழிநடத்துவனவாகும்.

14. மனிதன் இவ்வாறு தளைப்பட்டிருப்பினும், அவன் சுத்திரமாயிருக்கக் கூடும். எந்தக் கணத்திலும் அவனுக்கு முழு விடுதலைக் கொணரத்தக்க முதலடிகளை எடுத்து வைக்க முடியும்.

15. இது ஏனெனில் ஒருவர் தெரிவு செய்யும் திசைகள் எதுவாயினும், அவற்றில் மனத்தைப் பயிற்றுவிக்க இயலும். வாழ்வெனும் வீட்டில் நம்மைக் கைதியாக்குவது மனமேயாகும்_மனமே அவ்வாறு நம்மை இருத்தி வைக்கிறது.

16. ஆனால் மனம் எதைச் செய்ததோ அதை மனமே நீக்கவும் முடியும். மனிதனை அடிமை நிலைக்கு ஆளாக்கியது மனமே எனில், சரியாக வழிநடத்தப்படுமாயின், அதுவே அவனுக்கு விடுதலையைக் கொணரவும் முடியும்.

17. சம்மாதித்தி செய்யக் கூடியது இதுவே.

18. சம்மாதித்தியின் இலக்கு யாது? பரிவ்ராஜகர்கள் வினவினர். "சம்மாதித்தியின் இலக்கு" புத்தர் பதிலிறுத்தார், அவிஜ்ஜாவை (அறியாமையை) அழிப்பதேயாகும். அது மிச்சாதித்திக்கு எதிரானதாகும்.

19. மேலும் அவிஜ்ஜா என்பது உயரிய உண்மைகளான துன்பத்தின் இருப்பையும், அதை நீக்குதலையும் புரிந்து கொள்ளத் தவறுவதேயாகும்.

20. சடங்கு சம்பிரதாயங்களின் பலன்களில் கொள்கிற நம்பிக்கையைக் கைவிடுதலும், சாத்திரங்களின் புனிதத் தன்மையை நம்பாமையும், சம்மாதித்திக்குத் தேவைப்படுகிறது.

21. மூடநம்பிக்கைகளையும் இயற்கையைக் கடந்தவைகளையும் கைவிடுதல் சம்மாதித்திக்குத் தேவைப்படுகிறது.

22. உண்மையையோ அல்லது அனுபவத்தையோ அடிப்படையாகக் கொள்ளாத வெறும் யூகங்களாயுள்ள, அனைத்துக் கொள்கைகளையும் கைவிடுதலும் சம்மாதித்திக்குத் தேவைப்படுகிறது.

23. சுதந்திர மனமும் சுதந்திரச் சிந்தனையும் சம்மாதித்திக்குத் தேவைப்படுகிறது.

24. ஒவ்வொரு மனிதனும் இலட்சியங்கள், வேட்கைகள், விருப்புக்கள், உடையனவாகவே இருக்கிறான். அத்தகு இலட்சியங்கள், வேட்கைகள், விருப்புக்கள் ஆகியவை உயரியனவாகவும், போற்றுதலுக்குரியனவாகவும், இழிவானவையாகவோ, தூற்றுதலுக்குரியனவாகவோ இல்லாதனவாயிருக்க வேண்டுமென 'சம்மா சங்கப்போ' போதிக்கிறது.

25. சம்ம வாச்சா (நற்பேச்சு) போதிப்பதாவது: 1) எது வாய்மையோ அதை மட்டுமே ஒருவன் பேசுதல் வேண்டும். 2) எது பொய்மையோ அதை ஒருவன் பேசாதிருத்தல் வேண்டும். 3) ஓருவன் பிறரைப் புறங்கூறிப் பேசலாகாது. 4) இகழ்ந்துரைத்தலினின்று ஒருவன் தவிர்ந்திருக்க வேண்டும். 5) அடுத்தவன் எவனையும் நோக்கி ஒருவன் சினச் சொல்லோ, இன்னாச் சொல்லோ பயன்படுத்தாதிருக்க வேண்டும். 6) அனைவரிடமும் ஒருவன் அன்புடனும், கனிவுடனும் பேசுதல் வேண்டும். 7) கருத்தற்ற, பயனில் சொல் பேசாதவனாய், கருத்துள்ள பயனுள்ள சொல் மட்டுமே பேசுபவனாய் இருத்தல் வேண்டும்.

26. நான் விளக்கியவாறு, நற்பேச்சைக் கடைபிடித்தல் அச்சத்தின் விளைவாகவோ, ஆதாயத்திற்காகவோ இருக்கலாகாது. உயர்ந்தோர் தன் செயல்பற்றி யாது நினைப்பரோ என்பதற்காகவோ, நற்பேச்சால் என்ன நட்டம் விளையுமோ என்றெண்ணியோ பேசுவதாகச் சற்றும் இது திகழலாகாது.

27. நற்பேச்சுக்கான இலக்கு மேலோர் இடுகிற கட்டளையோ அன்றித் தனிநபர்க்கு விளையும் சொந்த நன்மையோ அன்று.

28. சம்மா கமந்தோ நற்செயலைப் போதிக்கிறது. ஒவ்வொரு செயலும் பிறர் தம் உணர்வுக்கும் உரிமைக்கும் மதிப்பளிப்பதன் மேல் நிலைப்பட்டதாய் இருக்க வேண்டுமென அது போதிக்கிறது.

29. சம்மா கமந்தோவின் இலக்கு யாது? அதன் இலக்காவது நடத்தை நெறிமுறை இருப்புநிலையின் அடிப்படை விதிகளுக்கு இயைபுடையதாய் இருத்தல் வேண்டுமென்பதே.

30. ஒருவனின் செயல்கள் இந்த விதிகளோடு இயைந்திருப்பவையாயின் அவைகள் சம்மா கமந்தோவிற்கேற்ப இருப்பதாய் கொள்ளப்படலாம்.

31. ஒவ்வொரு மனிதனம் தன் உயிர் வாழ்வுக்கான ஊதியம் தேடியாக வேண்டும். ஆனால் ஒருவனின் உயிர்வாழ்வுக்கான ஊதியம் தேடுவதற்கான வழிகள் பற்பல பலப்பலவாய் உள்ளன. சில தீயவை, சில நல்லவை. பிறர்க்குத் துன்பமும் அநீதியும் இழைப்பவை தீய வழிகள். நல்ல வழிகளின் மூலம் ஒருவன் பிறருக்குத் துன்பமும் அநீதியும் இழைக்காமலே தன் உயிர் வாழ்க்கைக்கான ஊதியத்தைத் தேடிக் கொள்கிறான். இதுவே சம்மா ஆஜிவோ ஆகும்.

32. சம்மா வ்யாயமோ (நன் முயற்சி) என்பது அவிஜ்ஜையை நீக்குவதற்கான முதல் முயற்சியாகும்; இந்தத் துன்பம்மிக்க சிறை வீட்டினின்று வெளியேற உதவும் கதவைத் திறக்கும் வழியாகும் இது.

33. நன் முயற்சிக்கு நான்கு நோக்கங்கள் உண்டு.

34. ஒன்று அஷ்டாங்க மார்க்கத்திற்கு முரணாக உள்ள மனநிலைகளைத் தடுத்தல்.

35. இரண்டாவது முன்னமே எழுந்துள்ள அத்தகு மனநிலைகளை ஒடுக்குதல்.

36. மூன்றாவது ஒரு மனிதனுக்கு அஷ்டாங்க மார்க்கத்தின் தேவைகளை நிறைவு செய்வதற்கு உதவக் கூடிய மனநிலைகளை இருப்புக்குக் கொணர்தல்.

37. நான்காவது ஏற்கனவே எழுந்துள்ள அத்தகு மன நிலைகளை மேலும் வளர்ச்சியுறும் வண்ணம் செழுமைப்படுத்துதல்.

38. சம்மாசத்தி விழிப்புடைமையையும் சிந்தை நிறைவையும் கோருகிறது இதன் பொருள், தொடர்ச்சியான மனவிழிப்புடைமை ஆகும். தீய பற்றுக்கள் குறித்து எப்போதும் கவனத்துடனும் விழிப்புடனும் எச்சரிக்கையாய் இருப்பதற்கு மறு பெயரே சம்மாசத்தி ஆகும்.

39. ஓ! பரிவ்ராஜகர்களே! ஈண்டு ஒரு மனிதன் சம்மாதித்தி, சம்மா சங்கப்போ, சம்மா வாச்சா, சம்மா கமந்தோ, சம்மா ஆஜிவோ, சம்மா வ்யாயமோ மற்றும் சம்மா சத்தி ஆகியவற்றை அடைய முயற்சிக்கையில் அவன் வழியில் குறிக்கிடுகிற ஐந்து தளைகள் அல்லது தடைகள் உண்டு.

40. இந்த ஐந்து தடைகளாவன பேராசை, தீயவிருப்பம், சோம்பலும் விழிப்பின்மையும், சந்தேகம், தீர்மானமின்மையும் ஆகும் எனவே உண்மையில் தடைகளான இந்தத் தடைகளை வெல்லுவது அவசியமாகும். இவற்றை வெல்லும் வழிமுறை சமாதி மூலமே சாத்தியமாகும். ஆயினும் பரிவ்ராஜகரே! தாங்கள் சம்மா சமாதி என்பது சமாதி போன்றதன்று என்று அறிவீர்களாக. அது முற்றிலும் வேறானது.

41. சமாதி என்பது மனத்தை ஒருமுகப்படுத்துவது மட்டுமே. அது தன்னால்_தூண்டப்படுவதான தியான நிலைகளுக்கு இட்டுச் சென்று ஐந்து தடைகளையும் விலக்கி வைக்கும் என்பதில் எந்த ஐயமுமில்லை.

42. ஆனால் இந்தத் தியான நிலைகள் தற்காலிகமானவையாகும் அதன் விளைவாகத் தடைகளின் விலக்கமும் தற்காலிகமானதேயாகும். இன்றியமையாதது எதுவெனில் மனத்தை நிலையாய்த் தடம் மாற்றுவதேயாகும். அத்தகு நிலையான தடம் மாற்றம் சம்மா சமாதியால் மட்டுமே அடையக் கூடியதாகும்.

43. வெறும் சமாதி தடைகளின் தற்காலிக விலக்கத்திற்கு வழிவகுப்பதால் எதிர் மறையானதாகும். அதில் மனத்திற்கான பயிற்சி ஏதுமில்லை. சம்மா சமாதி உடன்பாடானதாகும். அது மனத்தை ஒருமுகப்படுத்துகையில் சில குசல கம்மங்களை (நற்செயல்கள் மற்றும் நற் சிந்தனைகளை) எண்ணவும், அதன் மூலம் அகுசல கம்மங்களின் (தீயசெயல்கள் மற்றும் தீய சிந்தனைகள்) பால் ஈர்க்கப்படும் மனத்தின் தன்மை குறையவுமான வழியில் ஒருமுகப்படுத்த பயிற்றுவிக்கின்றது.

44. சம்மா சமாதி நல்லனவற்றைச் சிந்திக்கவும், எப்போதுமே நல்லனவற்றையே சிந்திக்கவும் மனத்திற்கு ஒரு பழக்கத்தை அளிக்கின்றது. சம்மா சமாதி நற்செயல்கள் புரிவதற்கான இயக்க சக்தியை மனத்திற் அளிக்கின்றது.

5. புத்தரின் முதற்பேருரை_ (தொடர்ச்சி)

நல்லொழுக்கப் பாதை

1. அதன்பின் புத்தர் பரிவ்ராஜகர்களுக்கு நல்லொழுக்கப் பாதையை விளக்கினார்.

2. நல்லொழுக்கப் பாதையென்பது 1)சீலம், 2)தானம், 3)உபேக்கம் 4)நெக்கமம் 5) வீர்யம் 6) காந்தி 7)சுச்சம் 8) அதித்தானம் 9) கருணை மற்றம் 10) மைத்ரி _ ஆகிய நல்லொழுக்கங்களைக் கடைபிடிப்பதாகும், என்று அவர், அவர்களுக்கு உரைத்தார்.

3. அந்தப் பரிவ்ராஜகர்கள், புத்தரிடம், அந்த நல்லொழுக்கங்களின் பொருள் யாதென விளக்கும் படி கேட்டுக் கொண்டனர்.

4. அதன் பின் புத்தர் அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றும் வகையில் தொடர்ந்தார்.

5. சீலம் என்பது ஒழுக்க உணர்வாகும்_தீயன செய்யாமலிருக்கத் தீர்மானிப்பதும், நல்லன புரியத் தீர்மானிப்பதும்; தீயன செய்ய வெட்கப்படுதல், தண்டணைக்கு அஞ்சித் தீமை புரிவதைத் தவித்தலன்று சீலம். சீலமென்றால் தீமைப் புரிய அஞ்சுதல் என்று பொருள்.

6. உலகியல் இன்பங்களைத் துறத்தல் 'நெக்கமம்' ஆகும்.

7. ஒருவனின் உடைமைகளை, உதிரத்தை, உறுப்பை_ஏன் உயிரைக் கூடப் பிறர்தம் நலத்திற்கென_எந்தக் கைமாறும் கருதாமல் அளித்தலே 'தானம்' ஆகும்.

8. நன்முயற்சி 'வீர்யம்' ஆகும். தாங்கள் புரிவதற்று ஏற்றுக் கொண்ட ஒரு செயலை, அப்படி ஏற்றுக் கொண்ட செயல் எதுவாயினும் அதனை, ஒருபோதும் செய்யாமல் கைவிட எண்ணாமலிருந்து, தங்களின் முழு ஆற்றலோடு செய்து முடிப்பதே 'வீர்யம்' ஆகும்.

9. பொறையுடைமையே 'காந்தி' ஆகும். அதன் சாரமாவது பகைமையைப் பகைமையால் எதிர் கொள்ளாமையேயாகும். ஏனெனில் பகைமை பகைமையால் தணிவதன்ற, அது பொறையுடைமையால் மட்டுமே தணியவல்லது.

10. வாய்மையே 'சுச்சம' ஆகும். ஒரு மனிதன் ஒருபோதும் பொய் உரைக்கலாகாது, அவனுடைய உரை வாய்மையாயிருக்க வேண்டும்_வாய்மையைத்தவிர வேறெதுவாகவும் இருக்கலாகாது.

11. இலக்கை அடைவதற்கான முடிவான தீர்மானமே 'அதித்தானம்' ஆகும்.

12. மனிதர்கள் அனைவரிடமும் அன்பார்ந்த இரக்கம் கொள்ளலே 'கருணை' ஆகும்.

13. உயிர்கள் யாவிற்கும் _ நண்பராய் இருப்பவர் எவரோ அவர்க்கு மட்டுமன்றி பகைவராய் இருப்பவர் எவரோ அவர்க்கும் _ மனிதர்களுக்கு மட்டுமன்றி அனைத்து உயிர்களுக்கும் அன்பெனும் உணர்வை நீட்டித்தல் 'மைத்திரி' ஆகும்.

14. அலட்சியம் என்பதிலிருந்து வேறுபட்டதான பற்றற்ற தன்மை 'உபேக்கம்' ஆகும். அது வேண்டுதல் வேண்டாமையற்ற ஒரு மனநிலையாகும். விளைவால் பாதிக்கப்படாமல் வினையைத் தொடரும் நிலையாகும்.

15. ஒருவர் தன் முழுத்திறனோடும் இந்த நல்லொழுக்கங்களை நடைமுறைப்படுத்த வேண்டும். எனவேதான் அவைகள் 'பாரமிதா' (நிறைவுள நிலைகள்) என அழைக்கப்படுகின்றன.

## 6. புத்தரின் முதற்பேருரை_(முற்றும்)

1. அவருடைய தம்மத்தையும், அது உள்ளடக்கியுள்ளவற்றையும் விவரித்த பின்னர் புத்தர் பரிவ்ராஜகாகளை வினவினார்:

2. "தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளல் என்பது உலகில் நன்மைக்கு அடித்தளமாய் உள்ளதல்லவா?" அவர்கள் விடையிறுத்தனர், "தாங்கள் கூரியவை சரியே!"

3. அவர் மேலும் தொடர்ந்தார்: "பேராசை, பற்று, அறியாமை, உயிரை அழித்தல், களவு, தவறான காமம், பொய்மை ஆகியவற்றால் ஒருவரின் சொந்தத் தூய்மைத்

தகர்க்கப்படுமல்லவா? ஒருவரின் சொந்த தூய்மைக்கு, குணநலன்களை, இத்தகு தீமைகளைக் கட்டுப்படுத்துகிற அளவிற்குச் செழுமைப் படுத்திக் கொள்ளுதல் இன்றியமையாததல்லவா? ஒரு மனிதன் தனக்குத் தானே தூய்மையற்றிருப்பானேயாயின் அவன் எப்படி நன்மைக்குக் கருவியாய் அமைய முடியும்"? அவர்கள் உரைத்தனர், "தாங்கள் கூறியவை சரியே!"

4. ""மேலும் மனிதர்கள் ஏன் பிறரை அடிமைப் படுத்துவதைப் பற்றியோ, பிறர்மேல் ஆதிக்கம் செலுத்துவது பற்றியோ கவலையுறாமலிருக்கிறார்கள்? பிறருடைய வாழ்க்கையை மகிழ்ச்சியற்றதாய் ஆக்குவதைப் பற்றி மனிதர்கள் ஏன் கவலையுறாமலிருக்கிறார்கள்? மனிதர்கள் தம் பிறருடனான தம் நடத்தையில் நேர்மையற்றவர்களாய் இருப்பதாலன்றோ?" அவர்கள் ஒப்புதலாய்ப் பதிலிறுத்தனர்.

5. 'அஷ்டாங்க" மார்க்கத்தை நடைமுறைப்படுத்துதல்_அதாவது நற்காட்சிப்பாதை, நல்நோக்குப்பாதை, நற்பேச்சுப்பாதை, நல்வாழ்முறைப்பாதை, நன்முயற்சி, நல்விழிப்பு, நற்பொறை, நற்சிந்தனை_சுருக்கமாகப் கூறுவதாயின் நேர்மைப்பாதை, ஒவ்வொருவரும் நன்கு பின்பற்றி நடப்பரேயாயின் அது, ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கு இழைக்கும் அனைத்து அநீதியையும் மனிதாபிமானமற்ற தன்மையையும் அகற்றிவிடுமல்லவா?" அவர்கள் கூறினர், ஆம்!"

6. நல்லொழுக்கப் பாதையைப் பற்றிக் கூறுகையில் அவர் வினவினார்: "தேவைமிகுந்தோராய், ஏழையராய் உள்ளோரின் துன்பத்தைத் தீர்க்கவும், பொது நன்மையைப் பெருக்கவும் தானம் அவசியமல்லவா? வறுமையையும் துன்பத்தையும் அது எங்கிருப்பினும், அதைத் தீர்க்கக் கருணை சுரப்பது அவசியமல்லவா? தன்னலமற்ற தொண்டுக்கு 'நெக்கமம்' அவசியமல்லவா? எந்தச் சொந்தப் பயனும் ஏற்படாதெனினும் இடையுறா முயற்சிக்கு 'உபேக்கம்' அவசிமல்லவா?" அவர்கள் உரைத்தனர், ஆம்!.

7. "மனிதனுக்கு அன்பு இன்றியமையாததல்லவா"? அவர்கள் உரைத்தனர் ஆம்!

8. "நான் ஒருபடி மேற்சென்றுரைக்கிறேன்: "அன்பு, மட்டும் போதுமானதன்று. அவசியமானது யாதெனில் 'மைத்தி' யாகும். இதன் பொருள் மனிதரிடம் மட்டும் அன்பு காட்டுவது போதாது_அனைத்து உயிர்களிடத்தும் காட்ட வேண்டும். அது மனிதர்களுக்கு மட்டும் உரியதன்று. இத்தகு 'மைத்ரி' அவசியமானதல்லவா? ஒருவர் தமக்கென நாடும் மகிழ்ச்சியைப் போலவே அனைத்துயிர்களும் மகிழ்ச்சி பெறவும், மனத்தை நடுநிலையில் வைத்திருக்கவும், பொதுமையாக்கவும், அனைவரிடமும் அன்பு கொள்ளவும், எவரிடமும் பகைக் கொள்ளாரிடமும் அன்பு கொள்ளவும், எவரிடமும் பகைக் கொள்ளாதிருக்கவும் செய்யத் தக்கது இதுவன்றி வேறெது?"

9. அவர்கள் அனைவரும் கூறினர்: ஆம்!.

10. "இத்தகைய நல்லொழுக்கங்கள் அனைத்தும் பிரக்ஞையோடு_அதாவது அறிவுடைமையோடு நடைமுறைப் படுத்தப்பட வேண்டும்."

11. "பிரக்ஞை அவசியமல்லவா?" அந்தப் பரிவ்ராஜகர்கள் பதிலேதும் உரைக்கவில்லை. அவர்களைப் பதில் கூறும்படிச் செய்ய புத்தர் நல்ல மனிதனின் குணநலன்கள் பற்றிக் கூறலானார்: "தீயவை புரிவதில்லை_தீயவை எதையும் எண்ணுவதில்லை_தீய வழியில் தன் வாழ்க்கைக்கான ஊதியம் தேடுவதில்லை_தீயவை புகல்வதில்லை_அல்லது எவரையும் துன்புறுத்துவதில்லை." அவர்கள் கூறினர்: "ஆம்! அது அவ்வாறே."

12. "ஆயினும் நற்செயல்களைக் குருட்டுத் தனமாய்ப் புரிவது வரவேற்கத்தக்கதா?" "நான் கூறுகிறேன், 'இல்லை' இது போதுமானதன்று, புத்தர் பரிவ்ராஜகர்களிடம் உரைத்தார்: "இது போதுமானதெனில், ஒரு சின்னஞ்சிறு குழந்தை எப்போதும் நன்மையே புரிவதாய்ப் பிரகடனப் படுத்தலாம். அக்குழந்தை உடலெனில் யாதென அறியாது_இருப்பினும், அது அழுதைத் தவிர தன் உரையால் பெரிதாய்த் தீமையெதையும் செய்துவிட முடியாது: வாழ்க்கைப் பற்றி அது எதையும் அறியாது_இருப்பினும் தீயவழியில் வாழ்க்கைக்கான ஊதியம் எதையும் அது தேடமுடியாது_தாயின் பாலை உறிஞ்சுவதைத் தவிர."

13. "ஆகவே நல்லொழுக்கப்பாதை, பிரக்ஞையின் சோதனைக்குட்பட்டதாயிருக்க வேண்டும்_புரிந்துணர்வு மற்றும் அறிவுடைமையின் மறுபெயரே பிரக்ஞை."

14. "பிரக்ஞபாரமிதா ஏன் அத்துனை முக்கியமானதாகவும், இன்றியமையாததாகவும் இருக்கின்றது என்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. தானம் இருந்தாக வேண்டும். பிரக்ஞை இல்லாத தானம் ஒழுக்கக் கேடான விளைவைக் கொண்டதாயிருக்கும். கருணை தீமையை ஆதரிப்பதில் முடியக்கூடும். பாரமிதாவின் ஒவ்வொரு செயற்பாடும் பிரக்ஞைபாரமிதாவால் சோதிக்கப்பட வேண்டும் அதன் மறுபெயர் பேரறிவாகும்."

15. "எது தவறான நடத்தை, எப்படி அது எழுகிறது என்பது பற்றிய அறிதலும், உணர்வும் இருக்க வேண்டும் என்பதெம் கருத்து, அவ்வாறே, எது சரியான நடத்தை எது தவறான நடத்தை என்பது பற்றிய அறிதலும் உணர்வும் இருக்க வேண்டும். அத்தகைய அறிதலின்றி, உண்மையான நன்மை இருக்கவியலாது_செயல் நல்லதேயாயினும். எனவேதான் நல்லொழுக்கத்திற்கு பிரக்ஞை அவசியம் என்று நான் உரைக்கிறேன்.

16. அதன்பின் புத்தர் பரிவ்ராஜகர்களுக்கு ஓர் எச்சரிக்கையுரை வழங்கித் தம் பேருரையை முடித்தார்.

17. "தாங்கள் என்னுடைய தம்மத்தை 'நம்பிக்கையூட்டா துன்பியல் கொள்கை' என அழைக்கக் கூடும்_அது துன்பத்தின் இருப்பில் கவனம் கொள்ளுமாறு மனித குலத்தை அழைக்கிறதென்பதால். என் தம்மத்தைப் பற்றிய அத்தகையக் கருத்து தவறானதென நான் உமக்குத் தெரிவிக்கிறேன்."

18. "என் தம்மம் துன்பத்தின் இருப்பை ஒப்புக் கொள்கிறது என்பதில் எந்த ஐயமில்லை _ ஆனால் அதே அளவில் துன்பத்தை நீக்குதல் பற்றியும் அது முக்கியத்துவமளிக்கிறது என்பதை மறந்துவிட வேண்டாம்."

19. "என் தம்மம் தன்னில் நம்பிக்கை, இலட்சியம் இரண்டையுமே கொண்டதாயுள்ளது.

20. "அதன் இலட்சியம் அவிஜ்ஜாவை நீக்குவதாகும்_அவிஜ்ஜா என்பதற்குத் துன்பத்தின் இருப்பை அறியாமை என்று நான் பொருள் கொள்கிறேன்."

21. "அதில் நம்பிக்கை இருக்கறது_ஏனெனில் அது மனிதகுல துன்பத்திற்கு முடிவுகட்டுவதற்கான வழியையும் காட்டுகிறது."

22. "இதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா இல்லையா?" பரிவ்ராஜகர்கள் கூறினர், ஆம்! நாங்கள் ஒப்புக் கொள்கிறோம்.

### 7. பரிவ்ராஜகர்களின் மறுமொழி

1. அந்த ஐந்து பரிவ்ராஜகர்களும் இது உண்மையில் புதியதோர் தம்மமாயுள்ளதென உடனே உணரலாயினர். வாழ்க்கையின் சிக்கல்களுக்கான இப்புதிய பார்வையினால் பெரிதும் கவரப்பட்ட அவர்கள் ஒருமித்த குரலில் உரைக்கலாயினர். "உலகத்தின் வரலாற்றில் எப்போதும் எந்தவொரு மதத்தின் உண்மையான அடிப்படையாயுள்ளதெனப் போதித்ததில்லை."

2. "உலகத்தின் வரலாற்றில் எப்போதும் இத்துனை எளிமையான தன்மையில், இயற்கைக் கடந்த, மனிதனுக்கு மேம்பட்ட எந்த இடையீடும் இல்லாததான, இத்துனை சுதந்திரமான, எனினும் ஆன்மாவில் நம்பிக்கை, ஆகியவற்றிற்கு மற்றிலும் எதிரான, ஒரு விடுதலைத் திட்டம் முன்வைக்கப் பட்டதேயில்லை."

3. "உலகத்தின் வரலாற்றில் எப்போதும் இத்துனை எளிமையான தன்மையில், இயற்கைக் கடந்த மனிதனுக்கு மேம்பட்ட எந்த இடையீடும் இல்லாததான, இத்துனை சுதந்திரமான எனினும் ஆன்மாவில் நம்பிக்கை, கடவுளில் நம்பிக்கை, மரணத்திற்குப் பின்னான இருப்பில் நம்பிக்கை ஆகியவற்றிற்கு முற்றிலும் எதிரான,ஒரு விடுதலைத் திட்டம் முன்வைக்கப்பட்டதேயில்லை."

4. "உலகத்தின் வரலாற்றில் எப்போதும், தெய்வீக வெளிப்பாடல்லாத, மனிதர் தம் சமூகத் தேவையின் பரிசீலனையில் எழுந்த ஆதார அதிகாரத்துடன்,_கடவுளின் கட்டளைகளல்லாத மதத்திட்டம் எதுவும் முன்வைக்கப்பட்டதில்லை."

5. "உலகத்தின் வரலாற்றில் எப்போதும் மனிதனால் இவ்வாழ்விலேயே இப்புவியிலேயே, அவனுடைய சொந்த முயற்றியில் தோன்றும் நேர்மையால் அவன் எய்தக் கூடிய பேரின்பத்தைத் தருவதான விடுதலை கருதப்பட்டதில்லை".

6. அவருடைய புதிய தம்மம் பற்றிய புத்தரின் பேருரையைக் கேட்டபின் அந்தப் பரிவ்ராஜகர்கள் வெளிப்படுத்திய உணர்வுகள் இவை.

7. மிகவும் நேர்மையான ஒழுக்க இலட்சியம் உடையவரும், நன் காலத்திய அறிவுப் பண்பாடு அனைத்திலும் ஆழந்த பயிற்சியுடையவரும், எதிர்கருத்துக்களையும் நன்கறிந்து தன்னறிவோடும் தளரா ஆற்றலோடும், இவ்வாழ்விலேயே, உள்மன மாற்றத்தைத் தம் சொந்த பண்பாட்டுப் பயிற்சி, கட்டுப் பாட்டுப் பயிற்சி ஆகியவற்றால் கொணர முடியுமென்னும் விடுதலைக்கான கோட்பாட்டை இவருக்குள் தாம் கண்டதாக அவர்கள் உணரலாயினர்.

8. அவர்கள் உடனே அவருக்குப் பணிந்து, அவர்களைத் தம் சீடர்களாக ஏற்கும்படி அவரை வேண்டுகிற அளவிற்கு அவர்பால் அவர்களுக்கு மதிப்புப் பெருகலாயிற்று.

9. புத்தர் அவர்களை 'ஏஹி பிக்கவே' (வாருங்கள் பிக்குகளே) என்னும் மொழிக்குறி மூலம் தம் சமய முறைமைக்குள் இணைத்துக்கொண்டார். அவர்கள் பஞ்சவர்கிய பிக்குகள் என அழைக்கப்படலாயினர்.

### வீழ்ச்சியுற்றோர் மற்றம் குற்றவாளிகளின் சமயமாற்றம்.

### (தம்ம தீக்ஃஷா)

### 1. ஓர் ஊர்சுற்றியின் சமயமாற்றம்.

1. பழங்காலத்தில் இராஜகிருஹத்தில், ஒரு முறைதவறிய வாழ்வுடைய மனிதன் வாழ்ந்து வந்தான். அவன் தன் பெற்றோரைப் போற்றுவதில்லை-தம் மூத்தோரை மதிப்பதில்லை. ஆனால் எப்போதும் யாகம் - சூரிய பூசை-சந்திர பூசை-அக்கி பூசை ஆகியவற்றில் ஈடுபட்டு, தவறிழைக்கும் போதெல்லாம், அவைகள் தம் பாவத்தைப் போக்கிப் புனிதப்படுத்தும் என்ற நம்பிக்கையில் தனக்குத் தானே மகிழ்ச்சி கொண்டவனாய் வாழ்ந்து வந்தான்.

2. ஆனால் உடலுக்குரிய யோகப் பயிற்சிகள், பூசைகள், யாகங்கள், அனைத்துக்கும் மாறாக, மூன்றாண்டு கடுந்தவத்திற்குப் பின்னும் அவன் அமைதியேதும் காணவில்லை.

3. கடைசியில் அவன் ஷ்ராவஸ்திக்குச் சென்று புத்தரைப் பறிறி விசாரித்தறியத் தீர்மானித்தான். ஆங்கு வந்துற்று, அவர் தோறறத்தின் பெருமையைக் கண்ணுற்ற அவன், அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, தான் எத்துனை மகிழ்ச்சியுற்றான் என்பதைத் தெரிவித்தான்.

4. அதன்பின் புத்தர் உயிர்பலியாகம் எவ்வளவு தவறானது என்பதையும், தவப் பயிற்சிகள் யாவும் வீணானவை என்பதையும், அவற்றால் மனம் தொடப்படுவதில்லை என்பதையும், யாருக்குரியதோ அம்மதிப்பும் போற்றுதலும், உரிய கடமைகளும் அவற்றால் அவர்களுக்குச் சேர்வதில்லை எனவும் விளக்கினார், முடிவாக அவர் சில குறிப்பிட்ட புகழ்வாய்ந்த போதனைக் கதைகளை வெளிப்படுத்தி அவ்விடத்தையும் சுற்றுப்புறத்தையும் தம் அறிவொளியால் ஒளிமயமாக்கினார்.

5. இதனால், அக்கிராமத்தவர்கள்-குறிப்பாகக் குழந்தைகளின் பெற்றோர்கள் அவரை வணங்கும் பொருட்டு அவரருகே வந்தார்கள்.

6. அப்பெற்றோர்களைக் கண்டும், அவர்கள் தம் குழந்தைகளைப் பற்றிக் கூறியவற்றைக் கேட்டும் புத்தர் புன்னகைத்து, கீழ்க்கண்ட போதனைகளை அளித்தார்.

7. "உயர்ந்த மனிதன் பொருள் கவறலெனும் ஆசையினின்றும் அறவே விடுபட்டவனாயுள்ளான், அவன் தானே மெய்யறிவு எய்தியவனாய் ஒளிமிக்கதோரிடத்தில் உறைபவனாய் உள்ளான். தற்செயலாய் அவன் இடுக்கண்ணைச் சந்திக் நேரிடினும், அவன் தொய்வுறாதவனாய், மகிழ்ந்தபடியே, தன் மெய்யறிவை வெளிப்படுத்துகிறான்."

8. "அறிவுடையோன் (பத்ரா) உலகியல் ஈடுபாடு அற்றவனாயுள்ளான், அவன் பொருட்செல்வத்தையோ, மக்கள் செல்வத்தையோ, நிலவுடைமையையோ விழையாதவனாய், தம்மப போதனைகளைக் கவனமாய்ப் பின்பற்றுபவனாய், மெய்யறிவுப் பாதையில் நடைபோடுபவனாய் உள்ளான். அவன் கவர்ச்சிப் போதனைகளுக்கு (அல்லது செல்வம் அல்லது செல்வாக்கு ஆகியவற்றுக்கு) ஆட்படாதவனாய் உள்ளான்."

9. "அறிவுடையோன், நிலையாமையின் தன்மையை நன்கறிந்தவனாய், மணலின் மத்தியிலுள்ள மரம்போல, (தன்முயற்சியெலாம் பயன்படுத்தி) தன் நண்பனின் நிலைப்படா மனத்தினை மாற்றி, மாசுகளினின்று திரும்பி மாசற்ற நிலைக்கு (நன்னெறிக்கு) வரச் செய்பனாய் உள்ளான்."

## 2. கொள்ளைக்காரன் அங்குலிமாலாவின் சமயமாற்றம்.

1. கோசல மன்னர் பசேநதியின் ஆளுகைக்குட்பட்ட பிரதேசத்தில், அங்குலிமாலா என்னும் பெயருடைய கொள்ளைக்காரன் ஒருவன் வசித்து வந்தான்-அவனுடைய கரங்கள் இரத்தம் தோய்ந்தவையாய் இருந்தன-அவன் எப்போதும் கொல்பவனாய், காயப்படுத்துபவனாய் இருந்தான்-அவன் உயிர்வாழ்வன எவற்றினுக்கும் கருணையேதும் அற்றவனாய் இருந்தான். ஊர்கள், அவனால் ஊர்களாக இல்லை; நகரங்கள் அவனால் நகர்ப்புறங்களாக இல்லை.

2. தன்னால் கொல்லப்படும் ஒவ்வொரு மனித உடலிலிருந்தும் அவன் ஒரு விரலை எடுத்து அவற்றால் தனக்கொரு விரல்மாலை செய்துகொள்வான்-அதனால் அவனுக்கு 'விரல் மாலைகன்' என்னும் பெயர் ஏற்பட்டது.

3. ஒரு முறை புத்தர் ஷ்ராவஸ்தியில் உள்ள ஜேதவனத்தில் தங்கியிருக்கையில், அவர் கொள்ளைக்காரன் அங்குலிமாலாவால் நடத்தப்படும் கொடுமைகளைப் பற்றிக் கேளவ்விப்பட்டார். அவனை ஒரு நன்னெறியுள்ள மனிதனாய் மாற்றத் தீர்மானித்தார் உயர்வெய்திய புத்தர். எனவே ஒரு நாள், உணவருந்தியபின், தம் படுக்கையை ஓர்புறம் வைத்துவிட்டு, துவராடையும் கலயமும் ஏற்று, கொள்ளைக்காரன் அங்குலி மாலாவைத் தேடிப் பயணம் மேற்கொண்டார்.

4. ஆங்கும், இங்கும், தூரமாகவும், நெருக்கமாகவும் அவரைக் கண்ணுற்ற உழவர்களும், வழிப்போக்கர்களும் கூவினர். "துறவியே! அந்தப் பக்கம் போகாதீர்கள்! அவ்வழி உங்களை கொள்ளைக்காரன் அங்குலிமாலாவின் அருகே கொண்டு சென்றுவிடும்."

5. "பத்துப்பேர், இருபது பேர், முப்பது பேர் - ஏன்- நாற்பது பேரே ஒன்றிணைந்து இந்தச் சாலைவழியே சென்றாலும், அக்குழு முழுவதும் கொள்ளையன் வசமாகிவிடும்." ஆனல் புத்தர் ஒரு வார்த்தையும் பேசாமல் தன் வழியே செல்லலானார்.

6. இரண்டாம் முறையாகவும், மீண்டும் மூன்றாம் முறையாகவும் அவரருகே இருநதவர்களும், பிறரும் அவ்வெச்சரிக்கையை திரும்பத் திரும்பக் கூறினார்கள். ஆயினும், புத்தர் ஒரு வார்த்தையும் பேசாமல் தன் வழியே செல்லலானார்.

7. சற்று தூரத்திலேயே புத்தர் வருவதைக் கண்ட கொள்ளைக்காரன் மிகவும் மகிழந்தவனாய், பத்துபேர், ஐம்பது பேர் குழுவாக வரவே பயணிகள் அஞ்சுகிற நிலையின் தன்னந்தனியராய் தன் வழி வருகிறாரே 'இத்துறவி' என எண்ணி, 'இத்துறவியை'க் கொல்லும் எண்ணம் கொண்டவனாய் வாளும், வேலும், வில்லும், அம்பும் ஏந்தியவனாய் அந்தக் கொள்ளைக்காரன் புத்தரின் அடிச்சுவடுகளைத் தொடரலானான்.

8. புத்தர் தம் வழக்கப்படியான விரைவோடு நடக்கவும், கொள்ளைக்காரனால், எவ்வளவு முயற்சித்தும் அவரை அடைய இயலவில்லை.

9. அந்தக் கொள்ளைக்காரன் எண்ணினான்: "இது ஓர் அற்புதமே! அதிசயமே! எப்போதும் நான் ஒரு யானையை, குதிரையை, வண்டியை அல்லது மானைக் கூட, அது முழுவேகத்தோடு சென்றாலும் விரைந்து கடந்துவிடவேன்-ஆனாலும் என் முயற்சிகள் அனைத்துக்கும் மாறாக, மிக விரைந்து செல்லும் இத்துறவியை இன்று என்னால் கடக்க முடியவில்லையே." எனவே, அவன் புத்தரிடம் நிற்கும்படி கூறினா◌ான்.

10. இருவரும் சந்தித்த போது புத்தர் உரைத்தார்: "நான் உன்பொருட்டு நின்று விட்டேன் அங்குலிமாலா! தீச்செயல் புரிபவனாயுள்ள நீ உன் தொழிலை நிறுத்தி விடுவாயா? உன்னை

வெல்வதற்காகவும், உன்னை நேரிய தம்மப் பாதையில் இணைத்துக் கொள்வதற்காகவும் உன்னைப் பின் தொடர்ந்தேன் நான். இன்னும் உனக்குள் உள்ள நல்லவை எதுவும் மடிந்து விடவில்லை. நீ அதற்கு ஒரு வாய்ப்பு அளித்தால் போதும். அது உன்னை மாற்றி விடும்."

11. உயர்வெய்திய புத்தரின் சொற்களால் மன உணர்வுற்ற அங்குலிமாலா கூறினான். "கடைசியில் இந்தத் துறவி என்னை வீழ்த்தி விட்டாரே."

12. "இப்போது தங்களின் புனித வார்த்தைகள் தீய செயல்களை நான் ஒரேடியாக விட்டு விட வேண்டுமென்று கோருகின்றன. அப்படியொரு முயற்சியை எனக்கு நானே மேற்கொண்டு பார்க்க நான் தயாராய் இருக்கிறேன்." என்று பதிலிறுத்தான் அங்குலிமாலா.

13. தன்னால் பலியாக்கப்பட்டவர்களின் விரல்மாலையைத் தன் கழுத்திலிருந்துக் தூக்கி எறிந்து ஆழ்குழிக்குள் வீசிய அங்குலிமாலா, புத்தரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி சோதர சங்கத்திற்குள் அனுமதி வேண்டினான்.

14. மனிதர்க்கும், மனிதரில்சான்றோர்க்கும் வழி காட்டியான புத்தர் உரைத்தார்: "தானமேற்போரே! என்னைத் தொடருங்கள்." தானமேற்போர் என்பது அங்குலிமாலாவைக் குறிக்கும் சொல்லாய் அப்போதிருந்து வழக்கிற்கு வந்தது.

15. தன்னைக் கவனித்துக் கொள்ளும் தானமேற்போராய் அங்குலிமாலாவைப் பெற்ற புத்தர் அப்போது ஷ்ராவஸ்திலுள்ள சோலைக்குச் செல்லலானார். அதே நேரத்தில் அரசர் பசேநதியின் அரண்மனையின் உள்ளரங்கில் ஒரு பெரும் கூட்டம் இரைச்சலிட்டுக் கொண்டிருந்தது_அரசரால் வெல்லப்பட்ட பிரதேசத்தில் அங்குலிமாலா என்னும் ஒரு கொள்ளைக்காரன், பெருஞ்சேதத்தையும், கொலைகளையும் புரியும் முரடன், அப்பாவி மக்களை அடித்துத் தாக்கி, தன்னால் கொல்லப்பட்டவர்களின் விரல்களைத துண்டித்து மாலையாய்ச் சூடிக் கொள்வதில் பெருமை கொள்பவனாய் இருக்கிறான். 'அவனை ஒடுக்குங்கள் அரசே' என்ற கூவினர் மக்கள். அவனை மண்ணோடு மண்ணாய் வீழ்த்தி விடுவதாக உறுதி கூறினார் மன்னர். ஆனால் அவரால் இயலவில்லை.

16. ஒரு நாள் காலை மன்னர் பசேநதி புத்தரைக் காணச் சோலைக்குச சென்றார். உயர்வெய்திய புத்தர் வினவினார்: "என்ன செய்தி அரசே? மகத மன்னர் சேனிய பிம்பிசாரரோடு ஏதேனம் சிக்கலா? அல்லது வேசாலியின் லிச்சாவியர்களோடு தொல்லையா? அல்லது வேறேதும் பகைச் சக்திகளோடு பூசலா?"

17. ""ஐயன்மீர்! அவ்வகையான தொல்லைகள் ஏதுமேயில்லை. என்னுடைய ஆட்சிக்குட்பட்ட பிரதேசத்தில், என் பகுதிகளுக்குள் ஊடுருவி, என் குடிமக்களைக் கொடுமைப்படுத்தும் அங்குலிமாலா என்னும் பெயருடைய கொள்ளைக் காரன் ஒருவன் இருக்கிறான். அவனை ஒடுக்கிவிட நான் விரும்புகிறேன். ஆனால் என்னால் இயலவில்லை."

18. "தன் தலைமுடிகளையும் தாடியையும் மழித்தவராய், துவராடை அணிந்தவராய், கொல்லாமை உடைய துறவியாய், கள்ளாமை உடையவராய், பொய்யாமை உடையவராய், ஒரு நாளைக்கு ஒருவேளை மட்டுமே உண்பராய்த் தாங்கள் அங்குலிமாலாவைக் காண்பீர்களாயின்-அவரைத் தாங்கள் என்ன செய்வீர்கள்?"

19. "ஐயன்மீர்! அவரை நான் வணங்குவேன்! அல்லது அவரைச் சந்திக்க எழுவேன், அல்லது அவரை அமரும்படி அழைப்பேன், அல்லது துவராடை முதலிய, மற்றம் பிற அவர்தம் தேவைகளை ஏற்கும்படி வேண்டுவேன்! அல்லது அவருக்கு பாதுகாப்பு ஏற்பாடுகள் யாவற்றையும் செய்வேன். ஆனால் அவ்வளவு தீய கொடிய மனிதனின் மேல் எப்படி நன்னெறியின் நிழல் கூடப் படியும்?"

20. அத்தருணத்தில் போற்றுதலுக்குரிய அங்குலிமாலா புத்தருக்கு மிக அருகே அமர்ந்திருந்தார். புத்தர் அவரைச் சுட்டிக் காட்டிக் கூறினார். "அரசே! இவர்தான் அங்குலிமாலா!"

21. இதைக் கேட்டதும் வியப்புற்ற மன்னர் வாயடைத்துப் போனார்! அவர் உடல் மயிர்கூச்செறிந்தது. இதைக் கண்ட புத்தர் உரைத்தார், "அஞ்சாதீர்கள்! இங்கு அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை!"

22. எனவே அரசரின் அச்சமும், எச்சரிக்கையும் அகன்றன. அங்குலிமாலாவை நோக்கி அவர் சென்று வினவினார்: போற்றுதலுக்குரிய தாங்கள்அங்குலிமாலாவா?" "ஆம்! அரசே!"

23. "ஐயன்மீா! தங்களின் தந்தையின் குலம் எது! தாயின் குலம் எது!" "என் தந்தை ஒரு கஜ்ஜா! தாய் ஒரு மந்தானி!"

24. "வாழ்க நலமுடன்! கஜ்ஜா-மந்தானி புத்திரரே! தங்கள் தேவைகள் அனைத்தையும் நான் அளிக்கிறேன்!"

25. அப்போது போற்றுதலுக்குரிய அங்குலிமாலா, கானகத்தில் வசிக்கவும், தான உணவே புசிக்கவும், மூன்றுக்கு மிகாத கந்தல் துவராடை மட்டுமே அணியவும் உறுதி மேற்கொண்டிருந்தமையால், அரசர் அளித்த வாய்ப்பை மறுத்தார்-தனக்கு ஏற்கனவே மூன்று துவராடைகள் உள்ளமையைக் காரணம் காட்டி.

26. அதன்பின் அரசர் புத்தரிடம் சென்று வணங்கியபின் அவரருகே ஒரிரக்கையில் அமாந்தவாறு கூறினார்: "ஐயன்மீர்! இஃதோர் அற்புதம்! இஃதோர் அதியசம்! ஐயன்மீர் அடங்காதவரை அடக்குபவராய் உள்ளீரே! தணிக்க முடியாதவரை எப்படித் தணிவிக்கிறீரோ! அமைதிப்படுத்த முடியாதவரை எப்படி அமைதிப்படுத்துகிறீரோ! இதோ ஒருவர்-என் வாளாலும், வேலாலும் அடக்கப்பட முடியாதவர்; ஆனால் வேலோ, வாளோ இன்றியே புத்தர் அவரை அடக்கிவிட்டீர்களே! இப்போது ஐயன்மீர்! நான் புரிய வேண்டிய பணிகள் இருப்பதால் நான் விடைபெறுகிறேன்."

27. "மேன்மைதங்கிய அரசர் விருப்பப்படி ஆகட்டும்." அதன்பின் அரசர்தம் இருக்கையிலிந்து எழுந்து, புத்தரை ஆழந்த போற்றுதலுடன் வணங்கி விடைபெற்றார்.

28. ஒரு நாள், உரியபடி துவராடை, அணிந்து, கரத்தில் கலயம் ஏந்தி, அங்குலிமாலா ஷ்ராவஸ்திக்கு தானமேற்கச் செல்கையில், ஒரு மனிதனால் வீசப்பட்ட மண்ணாங்கட்டியால் தாக்குற்றார்-மற்றொரு மனிதனால் வீசப்பட்ட மண்ணாங்கட்டியால் தாக்குற்றார்-மற்றொரு மனிதனால் வீசப்பட்ட தடியால் தாக்குற்றார்- இதனால் மண்டை உடைந்து இரத்தம் சிந்த வீழந்து-அவருடைய கலயம் நசுங்க - உடைகள் கிழிய - புத்தரின் முன் வந்தார். அவர் அருகே வருவதைக் கண்ணுற்ற புத்தர் அங்குலிமாலாவிடம் கூறினார்: "அனைத்தையும் பொறுத்துக் கொள்ளுங்கள்! அனைத்தையும் பொறுத்துக் கொள்ளுங்கள்!"

29. இவ்வாறாக கொள்ளைக்காரராயிருந்த அங்குலிமாலா நன்னெறி மனிதராக ஆகிப் புத்தரின் போதனைகளை ஏற்றுக் கொண்டவரானார்.

30. தன் விடுதலை இன்பத்தின் மகிழ்ச்சியைத் தெரிவித்தவாறு, அவர் கூறினார்: "ஆர்வமிலாவிடத்து ஆர்வமுறுபவர் எவரோ-நன்னெறியால் தம் கடந்த காலத்தை நிறைவு செய்பவர் எவரோ-இளமையில் புத்தரை அடைக்கலம் புகுபவர் எவரோ-அவர் நிலவென ஒளிவெள்ளத்தால் நிலவுலகை நிறைப்பவர் ஆவார்."

31. "இந்தப் போதனையை என் எதிரிகள் செவிமடுப்பார்களாக - அறிவின் மைந்தர்களால் தழுவப்படும் இச்சமயத்தைத் தழுவுவார்களாக. என்னுடைய எதிரிகள் அதன்பின் இச்செய்தியை-அமைதியான சகிப்பத் தன்மையைச் செவிமடுப்பார்களாக-தம் வாழ்வை இதில உறுதிப்படுத்துவார்களாக."

32. "கொள்ளைக்காரனான நான் நிலைகுலைந்து 'விரல் மாலை' யணிந்தவனாய் விழ்ச்சியுற்றுக் கொண்டிருந்தேன்-என்னைப் புத்தர் ஆட்கொண்டு நிலைப்படுத்தினார். 'விரல் மாலை' அணிந்தவனாய் நான் குருதியில் தோய்ந்திருந்தேன்-இப்போது காக்கப்பட்டுள்ளேன்."

3. பிற குற்றவாளிகளின் சமயமாற்றம்

1. இராஜகிருஹத்திற்குத் தெற்கே ஒரு பெரிய மலை இருந்தது-நகரத்திலிருந்து 200 கல் தொலைவில்.

2. அந்த மாமலையின் ஊடே ஒரு ஆழமான தனிமையான கணவாய் இருந்தது-தென் இந்தியாவிற்குப் போகும் பாதையொன்று அதில் இருந்தது.

3. அந்தக் குகைக் கணவாயில், ஐநூறு கொள்ளையர்கள் தம் வசிப்பிடத்தை ஏற்படுத்திக் கொண்டு, அவ்வழியே வந்த பயணிகள் அனைவரையும் கொன்று கொள்ளைடித்து வாழ்ந்து வந்தார்கள்.

4. அரசர் அவர்களைப் பிடிக்க தன் படைகளை அனுப்பினார். ஆனால் ஒவ்வொருமுறையும் வீணானது அவர்கள் தப்பி விட்டார்கள்.

5. அருகில் தங்கியிருந்த புத்தர், இந்த மனிதர்களின் நிலையைப் பற்றிச் சிந்தித்தார்-இந்த மனிதர்கள் தம் நடத்தையின் தன்மையைப் புரிந்து கொள்ளவில்லை-மேலும் இவர்களுக்குப் போதிக்கவே புவியில் தாம் வந்துற்றிருந்தும், அவர்களின் கண்கள் இவரைப் காணவில்லை-அவர்களின் செவிகள் இவருடைய தம்ம விதிகளைக் கேட்கவில்லை-இவ்வாறெண்ணிய புத்தர் அவர்களிடம் செல்லத் தீர்மானித்தார்.

6. அதன்விளைவாக, தன்னை ஒரு செல்வந்தனாக வேடமாற்றம் செய்து கொண்டு, மிக உயர்ந்த குதிரையொன்றில் வில்லும், வாளும் ஏந்தியவராய், வெள்ளியும், தங்கமும் நவஇரத்தினங்களும நிறைந்த பைகள் கொண்ட சேணத்தோடு, வீரமிக்க குதிரையை ஒட்டிச் சென்றார்.

7. அந்தக் குகைக்குள் நுழைகையில் அவருடைய குதிரை கணைத்தது. கணைப்பொலியைக் கேட்ட ஐநூறு கொள்ளைக்காரர்களும் எழுந்து, பயணியை உளவறிந்து தமக்குள் கூறிக்கொண்டனர். "இத்தனை வளமுடைய இரையை நாம் எப்போதும் பெற்றதில்லை; நாம் இவரைப் பிடிப்போமாக!"

8. எனவே அவர்கள் பயணியைச் சூழ்ந்து கொள்ள முனைந்தனர்-அவரைக் கண்டதும் அவர்கள் நிலத்தில் வீழந்தனர்.

9. வீழந்தவாறு அவர்கள் கூவினர், "இவர் எந்தக் கடவுள்?" "இவர் எந்தக் கடவுள்?"

10. இதைக் கண்ணுற்ற பயணி (புத்தர்) அவர்கட்கு விளக்கலானார்: அவர்கள் பிறர்க்கு உண்டாக்கும் தாக்குதல்களும் துன்பங்களும், அவர்கள் பெறும் தாக்குதல்களும் துன்பங்களும் உலகை ஆட்டிப் படைக்கும் துன்பத்தோடு ஒப்பிடப்பட்டால் மிகச் சிறயனவேயாகும். நம்பிக்கையின்மை, ஐயம் ஆகியவற்றால் ஏற்படும் காயங்கள், தம்மத்தை நன்கு கவனித்துப் பெறப்படும் அறிவால் மட்டுமே ஆற்றப்படும். அதன்பின் அவர் மேலும் கூறினர்:

11. "துன்பத்தைப் போல் வலிக்கும் காயம் வேறொன்றில்லை-பொய்மையைப்போல் ஊடுருவும் அம்பு வேறொன்றமில்லை சமய வாய்மைப் போதனைகளைக் கவனித்தல் போல் இதனை ஆற்றக் கூடிய மருந்தொன்றுமில்லை. இதிலிருந்து கருத்துக் குருடர்கள் காட்சி பெறுகிறார்கள்-வீழ்ச்சியுற்றோர் உயர்பேரறிவெய்துகிறார்கள்."

12. "கருத்துக் கண்ணற்றோர்க்களிக்கப்பட்ட கண்களாய் இவற்றால் மனிதர்கள் வழிநடத்தப்படுகிறார்கள்."

13. இது பின் நம்பிக்கையின்மையை அகற்றுகிறது; துன்பத்தைத் தீர்க்கிறது; இன்பத்தைக் கொடுக்கிறது; 'கேட்பவர்கள்' யாரோ அவர்களுக்குரியதாகிறது உயர்பேரறிவு.

14. "யாரொருவர் இப்பேறு பெறுகிறாரோ அவரே மேம்பட்டவராகிறார் (மிகவும் போற்றுதலுக்குரியவராகிறார்)"

15. இதைச் செவியுற்ற கொள்ளைக்காரர்கள் தம் தீய வாழ்வுக்காக மிகவும் வருந்தினார்கள். அவர்கள் உடலைவிட்டு அம்புகள் நீங்கின-அவர்களின் காயங்கள் ஆறின!

16. அதன் பின் அவர்கள் புத்தரின் சீடர்களாகி, அமைதியும், ஆறுதலும் அடைந்தனர்.

4. சமயமாற்றத்தில் இருந்த அபாயம்.

1. பண்டைக் காலத்தில், இராஜகிருஹத்தில் இருந்து 500 கல்தொலைவிலிருந்த ஒரு தேசத்தில் புத்தர் தங்கியிருந்தார்-அது மலைகளால் நிறைந்திருந்தது. அந்த மலைகளில் 122 மனிதர்கள் அடங்கிய ஒரு குறிப்பிட்ட குழு வசித்து வந்தது. அவர்கள் வேட்டையாடி, தம்மால் கொல்லப்பட்ட மிருகங்களின் இறைச்சியைப் புசித்து வாழ்ந்து வந்தார்கள்.

2. (புத்தர் அவ்விடத்திற்குச் சென்ற, பகல் பொழுதில் கணவர்கள் வேட்டைக்குச் சென்றிருக்கும் நேரத்தில் பெண்களைச் சமயமாற்றம் செய்து கீழ்க்கண்ட போதனைகளை அளித்து வந்தார்.)

3. எவரொருவர் மனிதத்தன்மை உள்ளவரோ, அவர் கொலைபுரிய மாட்டார் (அல்லது கொல்லாமையே மனிதத்தன்மை) அவர் எப்போதும் உயிரைக் (தம் சொந்த உயிரை?) காக்கக் கூடியவராகவே உள்ளார்.

4. "இந்தக் கொள்கை (சூ) அழிவற்றது; எவரோருவர் இதைக் கடைப்பிடிக்கிறாரோ, அந்த மனிதருக்குத் துன்பங்கள் நேர்வதில்லை."

5. அடக்கமுடைமை, உலகப் பொருள்களிடம் பற்றற்றிருத்தல், எவரையும் துன்பறுத்தாதிருத்தல், வெறுப்புக்கு இடமின்றி வாழ்தல்-இக்குணங்கள் உயர்வாழ்வுக்குரிய (சான்றோர்க்குரிய) குணங்களாகும்.

6. "நிலைகுலைந்தோர்பால் எப்போதும் நேயம் கொண்டிருந்தல்: புத்தரின் போதனைகளின்படி தூயராயிருத்தல்; போதுமானதைப் பெற்றிருத்தலை அறிதல்; எப்போது நிறுத்த வேண்டுமென அறிந்திருத்தல்; இவையே பிறப்பு, இறப்பு என்னும் சுழற்சியினின்றும் விடுபடும் வழிமுறையாகும். இச்சொற்களைக் கேட்ட பெண்கள், சமயமாற்றமுற்றனர். ஆங்கு திரும்பிய ஆண்கள், முதலில் புத்தரைக் கொல்ல விழைந்தார்களெனினும், அவர்தம் மனைவியர்களால் தடுக்கப்பட்டு, நேயம் பற்றிய இவ்வுரைகளை அவர்களும் கேட்டு, அவர்களும் சமயமாற்றமுற்றனர்.

7. அதன்பின் புத்தர் கீழ்வருவனவற்றையும் உரைத்தார்.

8. "எந்த மனிதர் இரக்கமுடைமையைக் கடைபிடிக்கிறாரோ, அனைத்து உயிகளிடமும் கனிவு காட்டுகிறாரோ அவருக்குப் பதினோரு நன்மைகள் விளைகின்றன."

9. "அவர் உடல் எப்போதும் நலமாய் உள்ளது. (மகிழ்ச்சியாய்); அவர் அமைதியான உறக்கமுடையவராய் உள்ளார்; கல்வியில் ஈடுபடுகையில் அவர் அதில் ஆழமுடிகிறது."

10. "அவருக்கு தீய கனவுகள் வருவதில்லை. அவர் சான்றோரால் போற்றப்படுபவராகவும், சாமான்யர்களால் நேசிக்கப்படுபவராகவும் உள்ளார். அவர் விஷமுள்ள பொருள்களால் வீழ்ச்சியுறுவதில்ல்; போரின் வன்முறைகளிலிருந்து அவர் விடுபடுகிறார். அவர் தீயாலோ, வெள்ளத்தாலோ துன்புறுத்தப்படுவதில்லை."

11. "அவர் எங்கு வாழ்ந்திடினும் நல்வாழ்வு வாழ்கிறார். இறந்தபின் புகழ்மிகப் பெறுகிறார். இதையே பதினோரு நன்மைகள்."

12. இச் சொற்களைப் புத்தர் கூறியதும் ஆண்களும், பெண்களும் அவருடைய சீடர் கூட்டத்தோடு சேர்த்துக் கொள்ளப்பட்டு, அமைதியுற்றனர்.

## புத்தர் எவற்றைப் போதித்தார்

### புத்தரின் தம்மத்தில் அவரது நிலை

1. புத்தர் தம் சொந்த தம்மத்தில் தமக்கென எந்த உரிமையையும் கோரவில்லை.

1. கிறிஸ்து தன்னைக் கிறிஸ்துவத்தின் இறைதூதராக அறிவித்துக் கொண்டார்.

2. மேலும் அவர் தன்னைக் கர்த்தரின் குமாரரென உரிமை கொண்டாடினர்.

3. தன்னைக் (இறைதூதராகவும்) கர்த்தரின் ஒரே பேறான குமாரராக ஏற்காத யாருக்கும் மோட்சம் சாத்தியமில்லை என்ற நிபந்தனையை ஏசு கிறிஸ்து விதித்தார்.

4. இவ்வாறாக எந்த ஒரு கிறிஸ்துவரின் முக்தியும், கிறிஸ்துவை இரட்சகராகவும், கர்த்தரின் குமாரராகவும் ஏற்பதைப் பொறுத்தே என்றதன் மூலம் கிறிஸ்துவத்தில் தன் இடத்தை ஏசு உறுதிப்படுத்திக் கொண்டார்.

5. இஸ்லாமின் தீர்க்கதரிசியான முஹம்மது, தான் கடவுளால் அனுப்பப்பட்ட தூதர் என்று உரிமை கொண்டாடினார்.

6. மற்றும் இரு நிபந்தனைகளை ஏற்காத யாரும் வீடுபேறு அடைய முடியாதென்றும் அவர் அறிவித்தார்.

7. இஸ்லாமில் வீடுபேறு அடைய விழையும் எவரும் முஹம்மது நபியை இறைதூதராக ஏற்றேயாக வேண்டும்.

8. இஸ்லாமில் வீடுபேறு அடைய விழையும் எவரும் அவரே இறுதியான இறைதூதர் என்று மேலும் ஒப்புக் கொள்ள வேண்டும்.

9. இவ்வாறாக இந்த இரு நிபந்தனைகளையும் ஏற்றுக் கொள்பவர்களுக்கே இஸ்லாமில் தன் இடத்தை உறுதிப்படுத்ததிக் கொண்டார்.

10. இவ்வாறாக எந்தவொரு இஸ்லாமியரின் முக்தியும் முஹம்மது நபியை இறைதூதராக ஏற்பதைப் பொறுத்ததே என்றதன் மூலம் முஹம்மது நபி, இஸ்லாமில் தன் இடத்தை உறுதிப்படுத்திக் கொண்டார்.

11. இதுபோன்ற நிபந்தனைகள் எதுவும் புத்தரால் விதிக்கப்படவில்லை.

12. தான் சுத்தோதனருக்கும், மகாமாயாவிற்கும் பிறந்த இயல்பான மனிதர் என்பதற்கு மேலான எந்த உரிமையையும் அவர் கோரவில்லை.

13. முக்திப் பெறுவதற்கான நிபந்தனைகளாக ஏசுவும், முஹம்மதுவும் சமயத்தில் விதித்தது போல் எந்த நிபந்தனைகளையும் விதித்து தன் சமயத்தில் தனக்கென ஓர் இடத்தைத் தக்க வைத்துக் கொள்ள புத்தர் ஒருபோதும் முனையவில்லை.

14. ஏராளமான செய்திகள் கிடைத்திருந்தும் கூட அவரைப் பற்றிச் சரியாக நாம் அறியக் கிடைப்பவை மிகக் குறைவாகவே இருப்பதற்கு இதுவே காரணம்.

15. முதல் பவுத்த பேரவைக் கூட்டம் புத்தரின் மறைவை அடுத்து ராஜகிரஹத்தில் கூட்டப்பட்டது என்பதை அனைவரும் அறிவோம்.

16. காஸ்யப்பா அந்தப் பேரவைக் கூட்டத்திற்குத் தலைமைவகித்தார். கபிலவஸ்துவைச் சேர்ந்தவர்களும், புத்தர் சென்ற இடமெல்லாம் அவரோடு சென்றவர்களும், அவர் மறையும்வரை அவரோடே இருந்தவர்களுமான ஆனந்தர், உபாலி போன்றவர்களும், அவர்களைப் போன்ற பிறரும் அந்தப் பேரவைக் கூட்டத்தில் குழுமியிருந்தார்கள்.

17. ஆனால் பேரவைக் கூட்டத் தலைவர் காஸ்யப்பா என்ன செய்தார்?

18. அவர் ஆனந்தரைத் 'தம்மத்தை' ஒப்புவிக்கச் சொன்னார், பிறகு பேரவையினரிடம், இந்த வினாவை எழுப்பினார். காஸ்யப்பா அவ்வினவுதலை முடித்துக் கொண்டார்.

19. அதன்பிறகு உபாலியிடம் 'வினயத்தை' ஒப்புவிக்கச் சொன்னார். பேரவையினரிடம் மீண்டும் இந்த வினாவை எழுப்பினார். 'இவையனைத்தும் சரிதானா?' அவையோர் 'ஆம்' என்றனர். காசியப்பர் அவ்வினவுதலை முடித்துக் கொண்டார்.

20. பிறகு காஸ்யப்பர் அவ்வாறு செய்யவில்லை. சங்கம் மேற்கண்ட இரு கேள்விகளை மட்டுமே பொருட்படுத்துகிறது என்று அவர் கருதினார்.

21. ஆனால் காஸ்யப்பர் அவ்வாறு செய்யவில்லை. சங்கம் மேற்கண்ட இரு கேள்விகளை மட்டுமே பொருட்படுத்துகிறது என்று அவர் கருதினார்.

22. புத்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கேட்டறிந்து அனைவரின் ஒப்புதலை அன்று காஸ்யப்பர் அந்தப் பேரவையில் பெற்றிருந்திருப்பாரேயானால், இன்று புத்தரின் முழுமையான, சரியான வாழ்க்கை வரலாறு நம்மிடம் இருந்திருக்கும்.

23. புத்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தொகுக்க வேண்டும் என்று காஸ்யப்பாவுக்கு ஏன் தேன்றவில்லை?

24. அக்கறையின்மைக் காரணமாய் இருந்திருக்க முடியாது. புத்தர் தன் சமயத்தில் தனக்கொரு தனிமாட உயர்பீடம் தயாதித்துக் கொள்ளவில்லை என்பது மட்டுமே இதற்கு ஒருவர் அளிக்கக் கூடிய பதிலாகும்.

25. புத்தரும் அவர் சமயமும் முற்றிலும் தனித்துவமாயிருந்தன.

26. தன் சமயத்துக்கு வெளியிலேயே புத்தர் தன்னை நிறுத்திக் கொண்டார் என்பதற்கு மற்றொரு சான்று, அவர் தன் வாரிசாக யாரையும் நியமிக்க மறுத்துவிட்டார் என்பதாகும்.

27. அவரைப் பின்பற்றுவர்களால், வாரிசு ஒருவரை நியமிக்கும்படி, இரண்டு அல்லது மூன்றுமுறை புத்தர் கேட்டுக்கொள்ளப்பட்டார்.

28. ஒவ்வொருமுறையும் புத்தர் மறுத்தார்.

29. 'தம்மமே தம்மத்தின் வாரிசாக இருக்க வேண்டும்' என்பதே அவர் பதிலாக இருந்தது.

30. 'ஒரு கொள்கை தன்னாலேயே நிலைபெற வேண்டுமேயன்றி மனிதனின் அதிகாரத்தால் அல்ல.'

31. 'ஒரு கொள்கை மனிதஅதிகாரத்தைச்சார்ந்திருந்தால்அதுகொள்கையே அல்ல'

32. 'ஒவ்வொரு முறையும் 'தம்மத்தை' நிலை நிறுத்த, அதைஉருவாக்கியவரின் பெயரைப் பயன்படுத்துதல் அவசியம் என்ற நிலை ஏற்படுமானால், அது தம்மமே அல்ல'.

33. தம்மத்தைப் பொறுத்தவரை தன் நிலை இதுவே என்பதுதான் புத்தரின் கருத்தாகும்.

2. புத்தர் தன்னால் முக்தியளிக்க முடியுமென்று உறுதி கூறவில்லை.

தான் மார்க்க தத்தரே (வழி காண்பவர்) அன்றி, மோட்ச தத்தர் (முக்தி அளிப்பவர்) அல்ல என்றார் அவர்.

1. பெரும்பாலான மதங்கள் 'மறைபொருள் வெளிப்பாடுகள்' என்றே விவரிக்கப்படுகின்றன. ஆனால் புத்தரின் சமயம் வேத வெளிப்பாடல்ல.

2. 'வெளிப்பாடான மதம்' ஏன் அவ்வாறு அழைக்கப்படுகின்றதென்றால், அது 'கடவுளால்' படைக்கப்பட்ட உயிரினங்களுக்கு, அவற்றைப் படைத்தவரை வணங்கும்படியும், அவற்றின் ஆன்மாக்களை அவர் காப்பாரென்றும் அந்த கடவுளாலேயே வெளிப்படுத்தப்பட்டதாகக் கூறப்படுதலேயாகும்.

3. பெரும்பாலும் இவ்வகைச் செய்தி, இறைதூதர் என்று அழைக்கப்படும். தெரிந்தெடுக்கப்பட்ட மனிதருக்கு வெளிப்படுத்தப்பட்டு, அவர் மூலம் பிறருக்கு வெளிப்படுத்தப்படுகிறது. பிறகு அந்த வெளிப்பாடு மதம் என அழைக்கப்படுகிறது.

4. விசுவாசிகளுக்கு மோட்சத்தை உறுதி செய்யும் கடப்பாடு இறைதூதருக்கு உண்டு.

5. விசுவாசிகளுக்கு மோட்சம் என்றால், அவர்களின் ஆன்மாக்களை நரகத்துக்கு அனுப்பப்படாமல், இரட்சிப்பது என்று பொருள், அதாவது, அவர்கள் கடவுளின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தும், குறிப்பிட்ட தீர்க்கதரிசியைக் கடவுளின் தூதர் என்று ஒப்புக் கொண்டும் நடக்கும் போது மட்டும் அவர்களை இரட்சிப்பது என்று பொருள்.

6. புத்தர் ஒரு போதும் தன்னைத் தீர்க்கதரிசி என்றோ கடவுளின் தூதர் என்றோ அறிவித்துக் கொண்டதில்லை. அத்தகைய வர்ணனைகளை அவர் மறுத்துள்ளார்.

7. இதைவிட முக்கியமானது என்னவெனில் அவருடைய சமயம் ஒரு புதிய கண்டுபிடிப்பாகும், உள்ளவாறு அது வெளிபடுத்தி அறியப்பட வேண்டியதாகும்.

8. இந்த பூமியில், மானுட வாழ்க்கைச் சூழல்கள், மனிதனோடு பிறந்த உணர்வுவின் செயல்பாட்டைப் புரிந்து கொள்ளுதல், அந்த உணர்வுகளின் உருவாக்கம், வரலாறு மற்றும் மரபுகளின் விளைவாக மனித, உணர்வுகளில் ஏற்படும் மாற்றங்கள், மயக்கங்கள், அவற்றால் மனிதனுக்கு விளையும் கேடுகள் ஆகியவை பற்றிய விசாரணை, ஆய்வு ஆகியவற்றால் விளைந்தது என்னும் பொருளில் புத்தரின் சமயம் ஒரு புதிய கண்டுபிடிப்பாகும்.

9. எல்லா தீர்க்கதரிசிகளும் மோட்சம் அளிப்பதாக உறுதி கூறியிருக்கிறார்கள், புத்தர் ஒருவரே அத்தகைய உறுதிமொழி எதையும் அளிக்காத போதகர். மோட்ச தத்தருக்கும் மார்க்க தத்தருக்கும் மிகக் கூர்மையான வேறுபாட்டை அவர் உருவாக்கினார்-அதாவது மோட்சத்தை அளிப்பவருக்கும், வழியை மட்டும் காட்டுபவருக்கும் இடையிலான வேறுபாடு.

10. அவர் மார்க்க தத்தராக மட்டுமே இருந்தார். தமக்குரிய விடுதலையை (வீட பேறு அல்லது முக்தி அல்லது மோட்சம்) ஒவ்வொருவரும் தாமே முயன்று பெற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

11. கீழ்கண்ட 'சுத்தத்தில் (Sutta) மொக்கல்லானா என்னும் பிராமணருக்கு இதை மிகவும் தெளிவாக்கினார் புத்தர்.'

12. 'ஒரு முறை மேன்மைமிக்கவரான புத்தர் ஷ்ராவஸ்தியில் கிழக்குப் பூங்காவில் இருந்த மிகாராவின் தாயாருடைய மாடி வீட்டில் தங்கியிருந்தார்'.

13. அப்போது கணக்காளர் பணிபுரியும் 'மொக்கல்லானா' மேன்மைமிக்க புத்தரிடம் கீழ்வருமாறு கூறினர்.

14. 'குரு கவுதமரே! இந்த மாடி வீட்டை ஒருவன் மேலும் கீழும் குறுக்கும் நெடுக்குமாய், படிப்படியாக இறுதிப்படி வரை பார்த்து இந்த வீட்டின் முழு தோற்றத்தையும் அறிந்து கொள்வதைப் போல, படிப்படியாக முன்னேறும் பயிற்சி பிராமணர்களாகிய எங்களுக்கு இருக்கிறது-அதாவது எங்களுடைய வேதப் பயிற்சி"

15. 'வில்வித்தைப் பயிற்சியைப் போலவே, கவுதமரே, பிராமணர்களாகிய எங்கள் பயிற்சி, முன்னேற்றம், இலக்கை அடைதல் ஆகியவற்றை நோக்கி படிப்படியாக நடைபெறுகின்றன. எடுத்துக்காட்டாகக் கணிதப் பயிற்சி.'

16. "ஒரு மாணவனைத் தனிப் பயிற்சிக்குக் சேர்த்துக் கொள்ளும் போது அவனைப் பின்வருமாறு எண்ணச் சொல்கிறோம். ஒருமுறை ஒன்று, இருமுறை இரண்டு, மும்முறை மூன்று. நான்கு முறை நான்கு...அப்படியே நூறுவரை. குரு கவுதமரே! இப்போது உங்களைப் பின்பற்றுபவர்களுக்கு உங்கள் தம்மத்தில் இவ்வாறான படிப்படியான பயிற்சி அளிக்கப்படுவதாக உங்களால் கூறமுடியும்?'

17. 'ஆம்! அது அப்படிதான் பிராமணரே! ஒரு புத்திக் கூர்மையுள்ள குதிரைப் பயிற்சியாளரை எடுத்துக் கொள்ளுங்கள். நல்ல தரமான குதிரையைப் பழக்க முற்படும் போதில் அவர் முதல் பயிற்சியில் படிப்படியாகப் பழக்கிக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடினப் பயிற்சிகளில் அதை ஈடுபடுத்துவார் அல்லவா?.'

18. 'அதைப் போலவேதான் பிராமணரே! ததாகதர் (புத்தர்) பயிற்சி அளிக்கப்பட வேண்டிய மனிதரைக் கைப்பற்றி, முதல் பாடத்தைப் போதிக்கிறார்.' 'வாரும் சோதரரே! நல்லோராய் இருங்கள். கடமை உணர்வுக்குக் கட்டுப்படுங்கள்.'

19. நல்ல செயற்பாட்டில் நன்கு பழகியபின், அற்பத் தவறுகளின் ஆபத்துகளை அறிந்து, நல்லொழுக்க விதிகளைக் கற்கும் மாணவராய்ப் பயிற்சி பெறுங்கள்.

20. 'இவையனைத்தும் கைவரப் பெற்றபின், அந்த மாணவருக்கு ததாகதர் இரண்டாம் பாடத்தைப் போதிக்கிறார்.' 'வாரும் சோதரரே! ஒரு பொருளைக் கண்டமாத்திரத்தில் அதன் தோற்றத்திலும் அம்சங்களிலும் கவர்ச்சி கொள்ளாதீர்கள்.'

21. 'ஆசையால் ஏற்படும் ஆர்வத்திலிருந்து விலகுதலில் நிலைத்திருங்கள்-அதாவது கட்டில்லாக் காட்சியால், வெள்ளம் போல் உம்மை அடித்துச் செல்லக் கூடிய புலன் உணர்வால் நிலைக்குலையாதிருங்கள். காட்சிப் புலனிடம் கவனமாயிருங்கள். காட்சிப் புலனைக் கட்டுப்படுத்தி வெல்லுங்கள்.'

22. "அதே போல் பிறபுலன்களையும் கையாளுங்கள். உங்கள் செவியால் ஒன்றைக் கேட்கும் போது, அல்லது உங்கள் மூக்கால் ஒன்றை முகரும் போது, உங்கள் நாவால் ஒன்றைருசிக்கும் போது, உடலால் கவர்ச்சியான ஒன்றை ஸ்பரிக்கும் போது, மனத்தால் ஒன்றை உணரும் போது, தோற்றத்தாலோ, கூறுகளாலோ கவர்ச்சி கொள்ளாதீர்கள்.'

23. 'இவற்றையெல்லாம் கைவரப் பெற்றவரானபின், அவருக்கு அடுத்த பாடத்தை ததாகதர் இவ்வாறு போதிக்கிறார்.' 'வாரும் சோதரரே! உண்பதில் அளவாய், ஆர்வமாய், கவனத்துடன் உண்ணுங்கள். அதாவது பகட்டுக்கோ, அழகுக்கோ, கவர்ச்சிக்கோ அல்லாமல் உடலின் உறுதிக்காக, உரத்துக்காக, தீமையிலிருந்து தற்காத்துக் கொள்ள நேரிய வாழ்வும் நல்ல நினைவும் செழிக்க உண்ணங்கள்-என் பழைய உணர்வுகளை பரிசீலிக்கிறேன்.' 'புதிய உணர்ச்சிகளுக்கு வழிதரமாட்டேன். தற்காப்பும், மகிழ்ச்சியும் எனதாகட்டும்' என்ற உணர்வோடு உண்ணுங்கள்.

24. 'பிறகு பிராமணரே உணவுக் கட்டுப்பாடு கைவரப் பெற்றபின், அந்த மாணவருக்கு ததாதகதர் அடுத்த பாடத்தைப் போதிக்கிறார்.' 'வாரும் சோதகரரே! கண்ணோட்டத்தில் கவனமாயிருங்கள். பகலில் நடக்கையிலும், இருக்கையிலும் உங்களைத் துன்புறுத்தக் கூடிய எண்ணங்கள் என்னும் மாசுகளை நீக்கி மனத்தைத் தூய்மையாக்கிக் கொண்டே இருங்கள். இரவில் மேலும் கீழுமாய் நடந்தோ, அமர்ந்து இருந்தோ சுற்றிலும் கண்ணோட்டம் விடுங்கள். இரவில் இரண்டாம் கண்ணோட்டத்தில் சிங்கம்போல், வலப்புறம்படுத்து, ஒருக்களித்து, கால்மேல், கால்போட்டு, மனத்தின்மையுடன், தன்னுணர்வுடன், முயற்சிக்கான கருத்துக்களில் முக்குளியுங்கள், இரவின் முன்றாம் கண்ணோட்டத்தில், விழித்து, மேலும் கீழுமாய் நடந்தோ இருந்தோ, உங்களுக்குத் தீமைப் பயக்கக் கூடிய எண்ணங்கள் என்னும் மாசுகளை நீக்கி மனத்தைத் தூய்மையாக்குங்கள்.'

25. 'பிறகு பிராமணரே! அந்தச் சோதரர் இவ்வாறு கண்ணோட்டத்தில் ஆழந்தபின், ததாகதர் மேலும் ஒரு பாடத்தை அவருக்கு போதிக்கிறார்.' 'வாரும் சோதரரே! மனத்தின்மை, சுயக்கட்டுப்பாடு ஆகியவற்றைக் கைக்கொள்ளுங்கள். முன்னோ, பின்னோ எதிலும் கட்டுப்பாடாயிருங்கள். முன்னோக்கோ, பின்னோக்கோ, உழைத்தலோ, ஓய்வோ உடுத்தலோ எடுத்தலோ, உண்ணலோ, சுவைத்தலோ, உரங்களோ, விழித்தலோ,பேசலோ, மவுனமோ எதிலும் உங்களை உங்கள் வசத்திலேயே வைத்திருங்கள்.'

26. பிறகு பிராமணரே! இவ்வாறு அவர் சுயக்கட்டுப்பாடு கைவரப் பெற்றபின், அவருக்குத் ததாகதர் அடுத்தப் பாடத்தை போதிக்கிறார். 'வாரும் சகோதரரே! தனியிடம் ஒன்றை தேர்ந்தெடுங்கள்-வனமோ, ஒரு மரத்தடியோ, மலையோ, குகையோ, இடுகாடோ, திறந்த வெளியோ, புற்குவியலோ, ஏதேனும் ஒன்றைத் தோந்தெடுங்கள். அவர் அப்படிச் செய்து, உண்டு முடித்து, சப்பனமிட்டு, அமர்ந்து, உடலை நிமிர்த்தி மேற்சொன்ன நான்கு நல்வழிகளையும் பயிற்சி செய்வார்.'

27. இவ்வாறு பிராமணரே! மாணவர்களாய் வரும் சோதரர்க்கு, மனக்கட்டுப்பாட்டை முன்னமே பயின்றிராதவர்களுக்கு, ஆர்வமுடையவருக்கு இவ்வழியான பயிற்சியே அளிக்கப்படுகிறது.

28. ஆனால் ஆசையை அறுத்தவர்களுக்கு, அசவங்களை நீத்தவர்களுக்கு, வாழ்க்கையைத் துய்த்தவர்களுக்கு, கடமையை முடித்தவர்களுக்கு, சுமையை இறக்கியவர்களுக்கு, தம் சொந்த வீடுபேற்றை வென்றவர்களுக்கு இந்தப் போதனைகளொல்லாம் இவ்வாழ்க்கையில் கைவரப் பெற்றதாயிருக்கும். மனத்தின்மையும் சுயக்கட்டுப்பாடும் அவர்களுக்குரியதாயிருக்கும்.

29. 'இவைகள் யாவும் உரைக்கப்பட்டபின் பிராமணர் மொக்கலானா என்னும் அந்தக் கணக்காளர் மேன்மை தங்கியவரிடம் கூறினார்.'

30. 'ஆனாலும் எனக்குக் கூறுங்கள் குரு கவுதமரே! போற்றுதலுக்குரிய தங்களின் எல்லா சீடர்களும்' முழு நிறைவான நிப்பானத்தை அடைந்து விட்டார்களா- அல்லது சிலர் அதை அடையத் தவறிவிட்டார்களா?

31. "பிராமணரே! இவ்வாறான அறிவுரையும், பயிற்சியும் என்னால் பெற்ற என் சீடர்களில் சிலர் அதை அடைந்தார்கள்-பிறர் அடையவில்லை."

32. "அப்படியானால் அதற்கென்ன காரணம் குரு கவுதமரே? ஏன் அப்படி நேர்கிறது குரு கவுதமரே?இங்கே "நிப்பானம்" இருக்கிறது. அதை அடையும் வழியும் இருக்கிறது. போற்றுதலுக்குரிய கவுதமர் அதைப் போதிக்கின்றீர்கள். நான் கேட்கிறேன். பிறகேன் அவ்வாறு பயிற்சியும், அறிவுரையும் அளிக்கப்பட்ட சீடர்களில் ஒரு சிலர் மட்டும் "நிப்பானத்தை" அடைகிறார்கள்-பிறர் அடையத் தவறுகிறார்கள்?"

33. "இந்த வினாவிற்கு நான் பதிலிறுக்கிறேன். பிராமணரே! ஆனால் அதற்கு முன் நான் கேட்கும் ஒரு கேள்விக்கு நீங்கள் உங்களுக்குச் சரியென்று தோன்றுகிற விடையைக் கூறுங்கள். இப்போது பிராமணரே, இராஜகிரஹம் போகும் பாதை உங்களுக்கு நன்கு பரிச்சமானதாய் இருக்கிறதா?"

34. "ஆம்! குருவே! உண்மையாகவே இராஜகிரகத்திற்குப் போகும் பாதை எனக்கு நன்கு பரிச்சயமானதுதான்."

35. "சரி! உங்களால் வழிகாட்டப்பட்ட பின்னும் ஒருவன் தவறான பாதையில், மேற்கு நோக்கிச் சென்று விடுகிறான் என்று வைத்துக் கொள்வோம்."

36. "பிறகு இரண்டாவதாக வரும் ஒருவன் அதே வேண்டுகோளோடு உங்களிடம் வருகிறான். நீங்களும் வழி காட்டுகிறீர்கள். உங்கள் அறிவுரையைப் பின்பற்றி அவன் சரியாக இராஜகிரஹத்திற்குச் சென்றுவிடுகிறான்."

37. "போவது அவனவன் பணி அது எனதல்லவே!"

38. "ஆம்! அதைத்தானே நானும் செய்கிறேன் பிராமணரே! ததாகதர் வழியை மட்டுமே காட்டுபவராகிறார்."

39. அவர் வீடுபேறளிப்பதாக உறுதி கூறவில்லை என்பதற்கான முழு உரை இது. அவர் வழி காட்டுபவர் மட்டுமே.

40. மேலும் வீடுபேறு என்பது தான் என்ன?

41. முஹம்மது நபியையும், ஏசுவையும் பொறுத்தவரை, வீடுபேறு என்பது, இறைதூதரின் தலையீட்டால் நரகத்திற்கு அனுப்பப்படாமல் ஆன்மா காக்கப்படுவதுதான்.

42. ஆனால் புத்தரைப் பொறுத்தவரை விடுதலை என்பது "நிப்பானமே" "நிப்பானமே" என்பது "புலனடக்கமே".

43. இத்தகைய தம்மத்தில் முக்திக்கான உறுதிமொழி எது?

3. புத்தர் தனக்கோ, தன் தம்மத்திற்கோ தெய்வீகம் இருப்பதாகக் கோரவில்லை அது மனிதனுக்காக மனிதனால் கண்டெடுக்கப்பட்டது. "அது இறை வெளிப்பாடல்ல"

1. ஒவ்வொரு மதத்தின் நிறுவனரும் தமக்கோ, தம்போதனைக்கோ தெய்வீகம் உண்டெனவே அறிவிப்பர்.

2. தனக்குத் தெய்வீகத் தோற்றுவாய் உண்டெனக் கூறிக் கொள்ளவில்லையென்றாலும் மோசே (Moses) தன் போதனைகளுக்குத் தெய்வீகத் தோற்றுவாய் உண்டெனக் கூறிக்

கொண்டார். அவர் தன்னைப் பின்பற்றுபவர்களிடம், "பாலும், தேனும் பெருக்கெடுத்தோடும் புனிதப் பூமியை அவர்கள் அடைய வேண்டுமாயின்" தன் போதனைகளை ஒப்புக் கொள்ள வேண்டும்-ஏனெனில் அவை ஜெஹோவா கடவுளால் அருளப்பட்டவை" என்றார்.

3. ஏசு தனக்கே தெய்வீகம் உண்டென்றார். தான் கர்த்தரின் ஒரே குமாரர் என்றார். எனவே, இயல்பாகவே, அவர் போதனைகள் தெய்வீகத் தோற்றுவாய் உடையனவாகக் கருதப்படுகின்றன.

4. கிருஷ்ணன் தானே கடவுள் தன் உரையே கீதை என்றார்.

5. புத்தர் தனக்கோ, தன் சாசனங்களுக்கோ இவ்வகையான தெய்வீகம் எதையும் உரித்தாய்க் கொள்ளவில்லை.

6. தான் பல மனிதர்களில் ஒருவர் என்றும், மக்களுக்கான தன் போதனை மனிதனுக்கு மனிதன் அளிப்பதே என்றும் அவர் கூறினார்.

7. தன் போதனை குறைவற்றது என்று அவர் உரிமை கொண்டாடவில்லை.

8. அவர் உரிமை கொண்டாடியதெல்லாம், தான் புரிந்து கொண்டவரையில் விடுதலைக்கான உண்மையான வழி இதுவே என்றதுதான்.

9. அது இவ்வுலகில் மனித குலம் முழுமையின் வாழ்க்கை அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டது.

10. யாரும் கேள்விகளால் பரிசீலிக்கவும், எவ்வளவு தூரம் அதில் உண்மையிருக்கிறது என்று அறியவும் கூடிய வகையில் தன் போதனை வெளிப்படையானதாய் உள்ளது என்றார் அவர்.

11. எந்த மதத்தின் நிறுவனரும் தம் மதத்தை இவ்வளவு திறந்த புத்தகமாய் வைத்ததில்லை.

## புத்தரின் தம்மம் பற்றிய பல்வேறு கண்ணோட்டங்கள்

### அவர் போதனைகள் என்று பிறர் புரிந்து கொண்டவை.

1. "புத்தரின் போதனைகள் யாவை."

2. புத்தரைப் பின்பற்றுபவர்களோ, பவுத்தத்தின் மாணவர்களோ எந்த இருவரும் இவ்வினாவிற்கு ஒரே பதிலை ஒப்புக்கொள்வதில்லை.

3. சிலருக்கு "சமாதியே" அவருடைய முக்கிய போதனை.

4. சிலருக்கு இது "விப்பாசனமே" (ஒரு வகை பிராணாயாமம்)

5. சிலருக்கு பவுத்தம் என்பது போதிக்கக் கூடிய மறைபொருள். மற்றவர்களுக்கு அது பொதுமையான மிகச் சாதாரண கோட்பாடு.

6. சிலருக்கு அது வெருமையான புலன் கடப்புத் தத்துவம்.

7. சிலருக்கு அது வெறும் ஆன்மீக தாந்திரிகம்.

8. சிலருக்கு அது உலகியலிலிருந்து தன்னலத்தோடு தப்பிக்கும் வழிமுறை.

9. சிலருக்கு அது முறையாக ஒவ்வொரு மன உணர்ச்சியையும் ஒடுக்கும் வழிவகை.

10. பவுத்தம் பற்றி பல்வேறு அபிப்ராயங்களையும் சேகரிக்க முடியும்.

11. வேறுபட்ட அபிப்ராயங்கள் வியப்பூட்டக் கூடியவை.

12. இவற்றில் சில, குறிப்பிட்ட சிலவற்றில் ஆர்வம் மிக்க ஈடுபாட்டாளர்களால் கொள்ளப்படுபவை. பவுத்தத்தின் சாரம் சமாதி, விப்பாசனம் அல்லது இரகசிய மறைபொருள் என்பதாகக் குறிப்பிடப்படும் அபிப்ராயங்கள் இவ்வகையானவை.

13. பவுத்தம் பற்றி எழுதிய பெரும்பாலோர் பண்டைய இந்திய வரலாற்றின் மாணவர்களாய் இருந்தமையால் விளைந்த அபிப்ராயங்களே மற்றவை. பவுத்தம் பற்றி அவர்கள் அறிந்தவை யாவும் தற்செயலானவை. ஆழமற்றவை.

14. அவர்களில் சிலர் பவுத்தத்தின் மாணவர்களே அல்லர்.

15. மதங்களின் தோற்றம், வளர்ச்சி பற்றிய கல்வியான மானுடவியலின் மாணவர்களாகவும் அவர்கள் இல்லை.

16. இங்கொரு கேள்வி எழுகிறது-"புத்தர் சமூகத்திற்காகக் கூறியவைதான் என்ன?"

17. இதற்கான பதிலைக் கூறும்படி நிர்பந்திக்கப்படும் போது பவுத்தத்தின் மாணவர்கள் இரு வேறு கருத்துக்களை முன் வைக்கிறார்கள். அவர்கள் கூறுகிறார்கள்.

18. "புத்தர் அஹிம்சையைப் போதித்தார்."

19. "புத்தர் அமைதியைப் போதித்தார்"

20. "புத்தர் சமூகத்திற்கான செய்தியாக ஏதேனும் அளித்துள்ளாரா?" -கேட்கப்படுகிறது.

21. "புத்தர் நீதியைப் போதித்துள்ளாரா?"

22. "புத்தர் அன்பைப் போதித்துள்ளாரா?"

23. "புத்தர் சுதந்திரத்தைப் போதித்துள்ளாரா?"

24. "புத்தர் சமத்துவத்தைப் போதித்துள்ளாரா?"

25. "புத்தர் சகோதரத்துவத்தைப் போதித்துள்ளாரா?"

26. "புத்தரால் கார்ல் மார்க்சுக்குப் பதில் கூற முடியுமா?"

27. புத்தரின் தம்மம் விவாதிக்கப்படும் போது இவ்வகை வினாக்கள் பொதுவாக விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுவது இல்லை.

28. புத்தரிடம் சமூக தத்துவம் இருந்தது என்பதே என் பதில். அவர் இந்த எல்லா வினாக்களுக்கும் விடையளிக்கிறார். ஆனால், அவையாவும் நவீன எழுத்தாளர்களால் மறைக்கப்பட்டு விட்டன.

## 2. புத்தரின் சொந்த வகைப்பாடுகள்.

1. தம்மத்தை வகைப்படுத்துவதில் புத்தர் தனித்தன்மையான ஒரு வகைப்பாட்டைப் பின்பற்றுகிறார்.

2. முதல் வகைப்பாட்டை "தம்மம்" என்றார்.

3. தம்மம் அல்லாதது (அதம்மம்) என்ற புதிய வகைப்பாட்டை உண்டாக்கினார் அவர்- "(அதுவும் "தம்மம்" என்ற பெயரையே தாங்கியிருக்கிறதெனினும்)

4. "சத்தம்மம்" என்ற மூன்றாம் வகைப்பாட்டையும் அவர் உருவாக்கினார்.

5. மூன்றாம் வகைப்பாடான "சத்தம்மம்" என்பது தம்மத்தின் தத்துவத்திற்கு வேறு பெயராகும்.

6. அவருடைய தம்மத்தை ஒருவர் புரிந்து கொள்ள வேண்டுமானால், தம்மம், அதம்மம், சத்தம்மம் ஆகிய மூன்றையும் புரிந்து கொண்டாக வேண்டும்.

## தம்மம் என்பது யாது?

1. வாழ்க்கையில் தூய்மையைக் கடைபிடிப்பது தம்மம்.

1. தூய்மையில் மூன்று வகையுண்டெனில் புறவகைத் தூய்மை எந்த வகையானது?

2. உயிர்க் கொலை, பிறர் பொருள் கவரல், தீய வாழ்க்கை ஆகியவற்றிலிருந்து ஒருவர் விலகி நிற்றல் "புற வகைத் தூய்மை" என அழைக்கப்படுகிறது.

3. சொல்வகைத் தூய்மை எந்த வகையானது?

4. ஈண்டு பொய் கூறாமை, எனக் குறிப்பிடத்தக்கது சொல்வகைத் தூய்மை...

5. "அகவத் தூய்மை எந்த வகையானது?"

6. புலன் வழிப்பட்ட ஆசை உண்டான துறவி ஒருவர் இருப்பதாகக் கொள்வோம். அவர் அதை உணர்கிறார். "எனக்குள் புலன் வழி ஆசை எழுகிறது." அப்படி எந்த ஆசையும் அவருக்குள் எழவில்லையாயின் அதையும் அவர் உணர்கிறார். இதுவரை எழாத ஆசை எப்படி எழக்கூடுமென்றம், எழுந்தால் அதை அடக்குவது எவ்வாறென்றும், எதிர் காலத்தில் அப்படியோர் ஆசை எழாமல் பார்த்துக் கொள்வது எப்படி என்றும் அவர் அறிந்து வைத்திருக்கிறார்.

7. அவருக்குள் ஏதேனும் ஒரு கேடான நினைப்பு எழுமாயின் "எனக்குள் கேடான நினைப்பு எழுகிறது" என்று அவர் அறிகிறார். அது எழுவதையும், அதை விலக்க வேண்டுமென்பதையும், எதிர்காலத்தில் மீண்டும் அது தோன்றாதிருக்கச் செய்யவும் அவர் அறிந்திருக்கிறார்.

8. "அவருக்குள் ஏதேனும் எடக்கு முடக்கான எண்ணமோ, பகட்டோ, படாடோபமோ, சொந்த ஐயமோ, ஊசலாட்டமோ எழுமாயின் அதை அவர் அறிகிறார். இவை ஒவ்வொன்றம் எப்படி எழுகிறது என்றும், அதை எப்படி விலக்குவது என்றும், எதரிகாலத்தில் மீண்ம் அது தோன்றாதிருக்கச் செய்வது எப்படியென்றம் அவர் அறிந்திருக்கிறார். இதுவே அகவகைத் தூய்மை என்ற அழைக்கப்படுவதாகும்.

9. எவர் ஒருவர் உடலால், உள்ளத்தால், உரையால் எல்லாம் தூயரோ-எவர் ஒருவர் தூய்மை மிகுந்து, தீமை அற்று உலவிடும் தூயவரோ-"தீங்கு தொலைத்தவர்" என்றே அவரைப் பெயரிட்டழைப்பர் மானிடர்.

1. "தூய்மையின் வகைகள் மூன்று...உணர்வால் தூய்மை, உரையால் தூய்மை, உள்ளத்தால் தூய்மை."

2. உணர்வால் தூய்மை எனப்படுவது யாது?

3. எவரொருவர் உயிர்க்கொலை, பிறர்பொருள் கவரல், புலன் உணர்ச்சியில் பிழைபுரிதல் ஆகியவற்றிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்கிறாரோ, அவருயை இச்செயல், "உணர்வுத் தூய்மை" என வழங்கப்படும்.

4. "உரைத்தூய்மை எனப்படுவது யாது?"

5. "எவரொருவர் பொய்மை, பயனில்சொல், புறம்பேசல் ஆகியவற்றிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்கிறாரோ, அவருடைய இச்செயல் "உரைத்தூய்மை" என வழங்கப்படும்."

6. "உளத்தூய்மை எனப்படுவது யாது?"

7. "எவரொருவர் கள்ளமும், கெடு நினைப்பும், அற்றவராய் நல்நோக்குடையவராய்த் திகழ்கிறாரோ, அவருடைய இச்செயல் "உளத்தூய்மை" என வழங்கப்படும். இம்மூன்றும் தூய்மையின் வகைகள் ஆகும்.

1. அறவழி வாழ்விற்கு ஐந்து பலவீனங்கள் தடைகளாகும். எவ்வைந்து?

2. உயிர்க்கொலை; கொடுக்கப்படாததை எடுத்துக் கொள்ளுதல்; காமம் சார்ந்த தீச்செயல்கள்; பொய்மை; சோம்பலை உண்டாக்கும் மதுவை அருந்துதல்.

3. வாழ்வில் தோல்விக்கு வழிநடத்தும் காரணங்கள் இவை ஐந்துமே தான்.

4. அறவழிப் பயிற்சிக்குத் தடைகளான இவ்வைந்தும் தகர்க்கப்படுமாயின், நல்மன நோக்குகள் நான்கும் உருவாகும்.

5. உணர்வை உணர்வாய், உடலைக் கடும் உழைப்புக்கு உரியதாய், நல்மனநோக்குடையதாய், கட்டுப்பாடு உடையதாய் ஆக்கிக் கொள்ளும் துறவிக்குப் பேராசையோ, உலகில் பொதுவானதான அதிருப்தியோ அறவே ஏற்படுவதில்லை.

6. உணர்வை உணர்வாய் ஆழ்ந்து உள்நோக்கித் தன்வயப்படுத்துவார் அவர்.

7. உளத்தை உளமாய் ஆழ்ந்து உள்நோக்கித் தன்வயப்படுத்துவார் அவர்.

8. சிந்தனையைச் சீராய், உள்நோக்குடையதாய், தன்வயப்பட்டதாய், உலகில் பொதுவாய் மலிந்துள் பேராசை, அதிருப்தி ஆகிய தீமைகள் அற்றவராய் விளங்குவார் அவர்.

9. இவ்வைந்து தடைகளும் தகர்க்கப்படுமாயின் இந்நான்கு நல்மன நோக்குகளும் உருவாகும்.

1. தவறுகள் மூன்று, ஒழுக்கத்தில் தவறு, உள்ளத்தில் தவறு, கருத்தில் தவறு.

2. ஒழுக்கத்தில் தவறு எனப்படுவது யாது? உயிர்க்கொலை, பிறர்பொருள் கவரல், காமம் சார்ந்த தீச்செயல், பொய்க்கூறல், பழிபுரிதல், தீச்சொற்கள், பயனில கூறல் ஆகியவை தவறான ஒழுக்கங்கள்.

3. உள்ளத்தில் தவறு எனப்படுவது யாது?

4. வஞ்சகமும், கள்ளமும் உள்ளத்தின் தவறுகள்.

5. கருத்தில் தவறு எனப்படுவது யாது?

6. சீரழிந்த, தீய கருத்தோடு ஈகையை தியாகத்தை, தானத்தைப் பழித்துரைத்தல்-அதாவது அவற்றால பயனில்லையென்றம், நற்செயல்-தீயசெயல் இரண்டிற்கும், விளைவுகள் ஏதுமில்லையென்றும், இம்மை, மறுமை இரண்டும் இல்லையென்றும், தந்தை பொய், தாயும் பொய், பிறப்பும் பொய் என்றும் முழுமையை, நிறைவை எய்திய நீத்தாரோ, அந்தணரோ எவரும் இல்லையென்றும், தன்னுணர்வால் இப்பூமியையும் பிறகோள்களையும் அவர்கள் உய்ந்துணர இயலாதென்றம் கருதுபவர் சிலர். இவ்வாறு கருதுவது துறவிகளே! "தவறான கருத்துக்கள்" ஆகும்.

7. துறவிகளோ, இவ்வாறான ஒழுக்கத்தில் தவறுகள், உள்ளத்தில் தவறுகள், கருத்தில் தவறுகள் ஆகியவற்றின் காரணமாக ஒருவரின் உடல் தளர்ந்து மரணம் எய்துங்கால், வீணில், துன்பத்தில், வீழ்ச்சியில் தவளநேரும். இவையே மூன்று தவறுகளாகும்.

8. துறவிகளே! வெற்றிகள் மூன்றாகும். அவை யாவை? ஒழுக்கத்தில் வெற்றி, உள்ளத்தில் வெற்றி, கருத்தில் வெற்றி.

9. ஒழுக்கத்தில் வெற்றி எனப்படுவது யாது?

10. உயிர்க்கொலை போன்றவற்றைத் தவிர்த்தலும்...தீய சொற்கள், பயனில் சொற்கள் ஆகியவற்றை விலக்கலும், ஒழுக்கத்தில் வெற்றி எனப்படும்.

11. உள்ளத்தில் வெற்றி எனப்படுவது யாது?

12. கள்ளமும், வஞ்சமும் மனத்தில் அற்றவராய் இருத்தல் உள்ளத்தில் வெற்றி எனப்படும்.

13. கருத்தில் வெற்றி எனப்படுவது யாது?

14. எவரொருவருக்கு நற்கருத்துள்ளதோ, எவர் ஈகையை நன்றென உறுதியாய்க் கருகிறாரோ, எவர் தியாகத்தை, தானத்தை நன்றெனக் கருதுகிறாரோ, எவர் இம்மை, மறுமையை

உண்மையெனக் கருதுகிறாரோ, எவர் இம்மை, மறுமையை உண்மையெனக் கொள்கிறாரோ, எவர் இப்பூமியையும் பிற கோள்களையும் நன்குணர்ந்த நீத்தாரும் அந்தணர் உளர் என்று உணர்கிறாரோ துறவிகளே! அவரே நற்காட்சியுடையவராவா ா.

15. இம்மூன்று வெற்றிகளைப் பெற்றவருக்கு வாழ்விலும், மரணத்திலும் மகிழ்ச்சியே மிஞ்சும், மூன்று வெற்றிகள் இத்தகையவை.

2. வாழ்வில் நிறைவடைவது தம்மம்

1. நிறைவுகள் மூன்றாகும்.

2. உணர்வில், உரையில், உள்ளத்தில் நிறைவடைவது.

3. உள்ளத்தில் நிறைவு எத்தகையது?

4. ஆசை அறுத்தலும், இவ்வுலக வாழ்விலேயே அதை நன்குணர்தலும், ஆழ்மன உள்நோக்கால் பற்றறுத்தலுமே "உள்ளத்தில் நிறைவடைவதாகும்". இவையே மூவகை உணர்வு நிறைவாம்.

5. பிற நிறைவுகளும் உண்டு. புத்தர் அவற்றை "கபூதி" என்பார்க்கு விளக்கினார்.

6. கபூதி: போதிசத்வரின் ஈதலின் நிறைவுக் கோட்பாடு யாது?

7. புத்தர்:அனைத்துத் தன்மைகளும் உள்ளடங்கிய அறிவுடன் இணைந்த சிந்தனைகள் ஈதல் அதாவது அசு-புற வகையின-அனைத்துயிர்க்கும் அவற்றைப் பொதுமையாக்குதல்-அவற்றை உயர்நிலை எய்த அர்ப்பணித்தல்; பிறரும் அந்நிலை எய்த உழைத்தல், எதற்கும் தயங்காமை. இவையே ஈதலின் நிறைவுக் கோட்பாடுகள்.

8. கபூதி: போதிசத்வரின் ஒழுக்க நிறைவு யாது?

9. புத்தர்: பொறுமையை எய்தலும், பிறரையும் அவ்வழிப்படுத்தலும்.

10. கபூதி: போதிசத்வரின் பொறமையின் நிறைவு யாது?

11. புத்தர்: பொறமையை எய்தலும், பிறரையும் அவ்வழிப்படுத்தலும்.

12. கபூதி: போதிசத்வரின் உள்ளொருமைப்பாடு அல்லது தியானத்தின் நிறைவு யாது?

13. புத்தர்: ஐந்துவகை நிறைவுகளிலும் ஆழ்ந்திருத்தலும், பிறரையும் அவ்வழிப்படுத்தலும்.

14. கபூதி: போதிசத்வரின் பூரண ஞானம் யாது?

15. புத்தர்: வாழ்முறைத்திறன் நிறைவால் பிறப்பறுத்தலும், பிறரையும் அவ்வழிப்படுத்தலும்.

16. கபூதி: போதிசத்வரின் பூரண ஞானம் யாது?

17. புத்தர்: அவர் எந்தத் தர்மத்தலும் சார்புடைமை கொள்வதில்லை. எல்லா தர்மங்களின் உண்மைத் தன்மையின் சாரங்களை உய்த்துணர்ந்தவராயிருப்பார். பிறரையும் அவ்வழிப்படுத்துவார்.

18. இந்த நிறைவுகளை உருவாக்கிக் கொள்ளுதல் தம்மமாகும்.

3. நிப்பானத்தில் வாழ்வதே தம்மம்

1. "நிப்பானம் போல் இன்பமளிப்பது வேறொன்றும் இல்லை."

2. புத்தர் போதித்த கோட்பாடுகளிலேயே மிகவும் மையமானது "நிப்பானக்" கோட்பாடேயாகும்.

3. "நிப்பானம்" என்பது யாது? புத்தரால் போதிக்கப்பட்ட நிப்பானம் பொருளிலும், உள்ளடக்கத்திலும் அவருக்கு முன்பிருந்தவர்கள் போதித்தவைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டுள்ளது.

4. நிப்பானம் என்றால் ஆன்மாவுக்கு முக்தி என்றே அவர்களெல்லாம் பொருள் கொண்டனர்.

5. ஆக "நிப்பானம்" என்பது நால்வகையில் கருதப்படுகிறது. (1).லௌகீகம் நிப்பானம் (உலகாயதமாய் உண்ணல், குடித்தல், மகிழல்வகை.) (2) யோக நிப்பானம். (3) பிராமண நிப்பானம். (4) உபநிஷத நிப்பானம்.

6. பிராமண நிப்பானமும், உபநிஷத நிப்பானமும் ஒரு பொதுத் தன்மையைப் பெற்றுள்ளன. அவை இரண்டும் ஆன்மாவைத் தனியிருப்புப் பொருளாகக் கருதுகின்றன, இக்கோட்பாட்டை புத்தர் மறுதலிக்கிறார். எனவே, பிராமண, உபநிஷத நிப்பானம் பற்றிய கோட்பாடகளை ஒதுக்கித் தள்ளுவது புத்தருக்குக் கடினமாயில்லை.

7. இலௌகீதத்தின் "நிப்பானம்" பற்றிய கோட்பாடு கூடுதலான பொருள் முதல் சார்பாயிருப்பதால் அதுவும் புத்தரை வசீகரிக்கவில்லை. மனிதனின் விலங்கியல் தேவைகளைத் திருப்திப்படுத்துவதற்கு மேலாய் வேறெதையும் அது கூறவில்லை. மெய்பொருள் சார்பாய் அதில் ஏதுமில்லை.

8. "நிப்பானம்" பற்றி இதுபோன்ற கோட்பாடுகளை ஏற்பது மனிதனுக்குச் செய்யும் பெறுந்தவறு என்று புத்தர் உணர்ந்தார்.

9. உணர்வுத் தேவைகளின் திருப்திப்பாடு புதிய உணர்வுத் தேவைகளை விளைவிப்பதில் தான் முடியும். இவ்வகையான வாழ்க்கை முறை மகிழ்ச்சியை அளிக்க முடியாது. மாறாக, அது போன்ற 'இன்பம்' துன்பத்தைக் கொண்டு வருவதே நிச்சயம்.

10. நிப்பானம் பற்றிய யோக நிலை துல்லியமாய் தற்காலிக நிலைப்பாடேயாகும். உலகத்திலிருந்து விலகிக் கொள்வதை அடிப்படையாகக் கொண்டது அது. துன்பத்தை விலக்குமேயன்றி அது இன்பத்தை அளிப்பதில்லை. அதனால் வரும் இன்பம் யோக நிலை நீடிக்கும் வரை நீடிக்குமே என்று கூறப்படலாம். ஆனாலும் அது நிலையானதல்ல. அது நிரந்தரமற்றது.

11. நிப்பானம் பற்றி புத்தரின் கோட்பாடு அவருக்கு முந்தியவர்களின் கோட்பாடுகளிலிருந்தெல்லாம் முற்றிலும் மாறுபட்டது.

12. அவருடைய நிப்பானம் பற்றிய கோட்பாட்டின் அடிப்படையாய் விளங்குவன மூன்று கருத்துக்கள்.

13. மனிதனுடைய உயிர் வாழ்வின் இன்பம், ஆன்மாவின் முக்திக்கு வேறாக இன்றியமையாததாய்க் கருதப்படுவது ஒன்று.

14. மனிதன் உயிர்வாழுங்காலத்தே சம்சாரத்தில் துய்க்கும் இன்பம் பற்றியது இரண்டாவது. ஆனால் ஆன்மாவின் முக்தி, இறப்புக்குப்பின் முக்தி, ஆகிய கருத்துக்கள், புத்தரின் "நிப்பானக்" கோட்பாட்டிற்கு முற்றிலும் வேறானவை-விலக்கானவை.

15. நிப்பானத்திற்கு அடிப்படையாய் விளங்கும் மூனறாவது கருத்து எப்போதும் எரியம் உணர்வுத்தீயின் பிழம்புகளைக் கட்டுப்படுத்தும் பயிற்சியாகும்.

16. உணர்வுகள், தீப்பிழம்புகள் என்பது புத்தர் கயாவில் தங்கியிருக்கையில் பிக்குகளுக்கு ஆற்றிய உரையில் வெளிப்படுத்திய கூற்றாகும். அவர் கூறியது இதுதான்.

17. "ஓ! பிக்குகளே! அனைத்தும் தீயின் மேல் உள்ளன. தீயின் மேல் உள்ள இவையெல்லாம் என்ன போதகர்களே?"

18. கண், தீயின்மேலுள்ளது பிக்குகளே! வடிவங்கள் தீயின்மேல்; கண்ணோட்டம் தீயின்மேல்; கண்களால் பெறப்படும் காட்சிகளம் தீயின் மேல், உணர்வுகள் யாவும்-இன்ப உணர்வுகளோ, துன்ப உணர்வுகளோ, வேண்டத்தக்கவைகளோ, வேண்டத்தகாதவைகளோ அனைத்தும் தீயின் மேல்".

19. "இவைகள் யாவற்றோடு தீயிலிருக்கின்றன?"

20. "நான் கூறுகிறேன்-இவை உணர்வுத்தீயோடு, வெறுப்புத்தீயோடு, வெறித்தீயோடு, பிறப்போடு, முதுமையோடு, மரணத்தோடு, துன்பத்தோடு, அழுகையோடு, கவலையோடு, விரக்தியோடு-அனைத்தும் தீயில்."

21. "செவியும் தீயில்தான்; ஓசைகளும் தீயில்தான்; நாவும் தீயில்தான்; சுவையும் தீயில்தான்; உடலும் தீயில்தான்; கருத்துக்களும் தீயில் தான்; இன் உணர்வோ, துன்ப உணர்வோ, எல்லா மனப்பதிவுகளும் தீயில்தான்."

22. "இவைகள் யாவற்றோடு தீயிலிருக்கின்றன?"

23. "நான் கூறுகிறேன்-இவை உணர்வுத்தீயோடு, வெறுப்புத் தீயோடு, வெறித்தீயோடு, பிறப்போடு, முதுமையோடு, மரணத்தோடு, துன்பத்தோடு, அழுகையோடு, கவலையோடு, விரக்கதியோடு -அனைத்தும் தீயில்."

24. "ஓ! பிக்குகளே! கற்றறிந்த மேலோர் இதைக் கண்டறிந்த பின் இதை விலக்கும் உணர்வைப் பெறுகிறார். இவ்வாறு விலக்கும் உணர்வைப் பெறுவதில் பற்றற்றவன் ஆகிறான்-பற்றுக்கள் அற்றுப் போவதால் அவன் சுதந்திரமாகிறான்-சுதந்திரமாகும் பொழுது தான் சுதந்திமாவரை உணர்கிறான்."

25. நிப்பானம் எவ்வாறு இன்பத்தை அளிக்கும்? விளக்கம் வேண்டப்படுகிற அடுத்த வினா இது.

26. மனிதன் தேவைகளால் தவிக்கும் பொழுது மகிழ்ச்சியற்றுப் போகிறான் என்பது பொதுக் கருத்து. ஆனால் எல்லா சமயங்களிலும் இது உண்மையாகி விடுவதில்லை. வளங்கள் குவிந்துள்ள போதும் மனிதன் மகிழ்ச்சியற்ற இருப்பதுண்டு.

27. மகிழ்ச்சியற்று இருப்பது பேராசையின் விளைவு. பேராசை, செல்வந்தனுக்கும், வறியவனுக்கும் ஒரே அளவில் இருக்கிற வாழ்வுக்கேடு.

28. பிக்குகளுக்காக ஆற்றிய ஓர் உரையில் புத்தர் கீழ்க் கண்டவாறு இதை விளக்குகிறார்.

29. "பேராசையால் (லோபம்) உந்தப்பட்டு, கோபத்தால் (தோசம்) கொதித்து, ஏமாற்றத்தால் (மோகம்) குருடாகி, மனம் சுமையாகி, மனம் அடிமையாகி, தங்கள் துரதிருஷ்டத்திற்காகக் கலங்கி, பிறரின் அதிர்ஷ்டத்திற்காக மயங்கி மனிதர்கள் மனத் துன்பத்தையும் வேதனையையும் அனுபவிக்கிறார்கள்."

30. ஒருவாறு பேராசை, கோபம், ஏமாற்றம் ஆகியவை ஒழிக்கப்பட்டு விட்டால் மனிதர்கள் தம் துரதிருஷ்டத்திற்காகக் கலங்கவோ, மனத்தில் துன்பச் சுமையையும் வேதனையையும் அனுபவிக்கவோ மாட்டார்கள்.

31. "சோதரர்களே! இவ்வாறாக நிப்பானம் இங்கு வாழும் வாழ்க்கைக்கே உரியது. மரணத்திற்குப் பின்னான வாழ்க்கைக்காக அல்ல. இது ஞானமுள்ள சீடனுக்கு அவசியமானது; அற்புதமானது ஏற்புடையது."

32. மனிதனைத் துன்ப மயமாக்குவது எது என்பதற்கான விளக்கம் இது. எரியும் தீயை மனிதப்பற்றுகளுக்கு உவமையாக்கி புத்தர் மனிதனின் துன்பங்களுக்குக் காரணமானவற்றை வலிமையாக விளக்குகிறார்.

33. பற்றுகளுக்கு இரையாவதாலேயே மனிதன் துன்புறுகிறான். ஒரு மனிதன் நிப்பானத்தை எய்தத் தடையாய் இருப்பவை இந்த பற்றுகளே, இந்த பற்றுகளின் தாக்கங்களிலிருந்து ஒருவன் விடுதலைப் பெற்று விடுவானேயானால், அதாவது அவன் நிப்பானத்தை அடையக் கற்றுக் கொள்வானேயானால், இன்பத்திற்கான வழி அவனுக்குத் திறந்தே இருக்கிறது.

34. புத்தரின் பரிசீலனையின்படி இந்தப் பற்றுகள் மூன்று வகையானவை.

35. முதலாவது எல்லா நிலைகளிலும் ஏற்படும் விருப்புகள் அல்லது பற்றுகள் அதாவது காமம், வெறி, பேராசை (லோபம்) போன்றவை.

36. இரண்டாவது எல்லா நிலைகளிலும் ஏற்படும் வெறுப்புக்கள்-வெறுப்பு, கோபம், விரக்கதி, அருவருப்பு (தோசம்).

37. மூன்றாவது எல்லா நிலைகளிலும் ஏற்படும் அறியாமை-ஏமாற்றம், சோம்பல், முட்டாள்தனம் (மோகம் அல்லது அவித்யை).

38. முதல் தீயும், இரண்டாவது தீயும் மனக்கிளர்ச்சிகளையும் ஒருவர் பிறரோடு கொள்ளும் உறவில் தோன்றும் உணர்ச்சிகளின் அளவையும் பொறத்தவை. மூன்றாவது தீயோ உண்மையிலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட சிநதனைகளோடு தொடர்புடையவை.

39. புத்தரின் நிப்பானக் கோட்பாட்டைப் பற்றிச் சில தவறான புரிதல்கள் இருக்கின்றன.

40. சொல்லிலக்கணப்படி நிப்பானம் என்றால் எரிந்து முடித்தல் அல்லது அணைந்து போதல் என்று பொருள்.

41. இந்தச் சொல்லின் மூலப்பொருளை எடுத்துக் கொண்டு நிப்பானக் கோட்பாட்டைப் பொருளற்றதாகக் காட்ட முயல்கிறார்கள் சிலர்.

42. அவர்கள் நிப்பானம் என்றால் மனித உணர்ச்சிகளையெல்லாம் ஒழித்து விடுதல்-மரணத்துக்குச் சமமாய் என்கிறார்கள்.

43. இந்த வகை முயற்சியால் அவர்கள் நிப்பானம் கோட்பாட்டின் மேல் வெறுப்பை விதைக்க முயல்கிறார்கள்.

44. 'தீ' பற்றிய புத்தரின் உரையை ஒருவர் நன்கு பரிசீலித்தால் நிப்பானம் என்பதற்கு இதுவல்ல பொருள் என்பது எளிதில் விளங்கும்.

45. 'தீ' பற்றிய உரை, எரிவது வாழ்க்கை என்றேர், அணைவது மரணம் என்றோ ஒரு போதும் குறிப்பிடவில்லை. பற்றுகள் தீயின்மேல் என்றே அது பகர்கின்றது.

46. 'தீ' பற்றிய உரை பற்றுகளெல்லாம் முற்றிலுமாக அணைக்கப்பட வேண்டுமென்று கூறவில்லை. எரிகிற தீயில் எண்ணெய ஊற்ற வேண்டாம் என்று மட்டுமே அது சொல்கிறது.

47. இரண்டாவதாக, நிப்பானத்திற்கும், பரிநிப்பானத்திற்கும் உள்ள வேறுபாட்டை கணக்கிலெடுக்க விமர்சகர்கள் தவறிவிடுகிறார்கள்.

48. உதானர் கூறுவது போல, "உடல் செயலற்றுப் போய், பார்வைகள் அற்றுப்போய், உணர்வுகள் இறந்துபட்டு, செயலற்று, நினைவுகள் நீங்கி விடுவதே பரிநிப்பானம். பரிநிப்பானம் என்றால் முற்றிலும் அணைந்து போதல். அதாவது மரணம்."

49. நிப்பானத்திற்கு எப்போதும் இதுவல்ல பொருள், நிப்பானம் என்றால் புலன் உணர்வுகள் மீது போதுமான கட்டுப்பாடு-அதாவது ஒருவன் நன்னெறியில் நடைபோட உந்துவதற்குத் தேவையான கட்டுப்பாடு, உண்மையில் இதற்கு மேல் வேறெந்த பொருளும் இந்தச் சொல்லுக்கில்லை.

50. புத்தர் தானே இராதாவுக்கு, நன்னெறி வாழ்வே நிப்பானத்தின் மறுபெயர் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

51. ஒரு முறை இராதா என்னும் முனிவர் மேன்மை தங்கிய புத்தரிடம் வந்தார். வந்து வணங்கி அவர் அருகில் அமர்ந்தார். அமர்ந்த பின், முனிவர் இராதா, புத்தரிடம் பின்வருமாறு கூறினார்: "உன்னதமானவரே! நிப்பானம் எதற்கென்று உரையுங்களேன்."

52. புத்தர் பதிலிறுத்தார்:"நிப்பானம் என்பதன் பொருள் புலன் உணர்வுப் பற்றுகளிலிருந்து விடுதலை என்பதே ஆகும்."

53. "ஆனால் உன்னதமானவரே! நிப்பானத்தின் இலக்கு எது?"

54. "இராதா! நிப்பானத்தின் பதிவதன் மூலம் நன்னெறி வாழ்க்கை வாழப்படுகிறது. நிப்பானம் அதன் நோக்கம். நிப்பானமே அதன் இலக்கு."

55. நிப்பானம் என்பது எல்லாவற்றையும் துறத்தல் என்று பொருள்படுவதில்லை என்று சாரிபுத்தரின் கீழக்கண்ட உரையில் தெளிவாக்கப்படுகிறது.

56. ஒரு முறை புத்தர் ஷ்ராவஸ்தியில் அநாதபிண்டிகரின் ஆராமத்தில் தங்கியிருந்தார். சாரிபுத்ரரும் அப்போது அங்கே தங்கியிருந்தார்.

57. "சோதரர்களிடம் புத்தர் கூறினார். பிக்குகளே! நீங்கள் உலக உடைமைகளைப் பகிர்நது கொள்ள வேண்டாம். என்னுடைய கோட்பாட்டைப் பகிர்ந்து கொள்ளுங்கள். உங்கள் எல்லோர் மீதும் உள்ள கருணையால் இதை உறுதிபடுத்த நான் விழைகிறேன்."

58. இவ்வாறு கூறிவிட்டு, புத்தர் எழுந்து தன் தனியிடத்திற்கு விரைந்தார்.

59. அங்கேயே இருந்த சாரிபுத்ரரிடம், நிப்பானம் என்றால் என்ன என்று விளக்குங்களேன் என்று சோதரர்கள் வினவினார்கள்.

60. பிறகு சாரிபுத்ரர் சோதரர்களுக்கு பதிலிறுத்தார், சோதரர்களே! பேராசை கேவலமானதென்றும், கேவலமானது மனக்கசப்பானது என்றும் அறியுங்கள்.

61. இந்த பேராசையையும், மனக்கசப்பையும் விட்டுத் தொலைப்பதற்கு நடுநிலையான ஒரு வழி உள்ளது. அதன் மூலம் நன்கு நோக்கவும், நன்கு அறியவும், அமைதியை, உள்நோக்கை, மகிழ்ச்சியை, நிப்பானத்தை அடையவும் முடியும்.

62. அந்த நடுநிலை வழி எது? அது எண்குணம் என்னும் உயர்வழி, நன்நோக்கு, நல் இலக்கு, நல்வாக்கு, நற்செயல், நல்வாழ்க்கை, நல்முயற்சி, நற்கண்ணோட்டம், மற்றம் நற்கவனம். இதுவே பிக்குகளே சரியான நடுநிலை வழி.

63. "ஆம்! சினம் என்பது சிறுமை! கெடு நினைப்பு சிறுமை! பொறாமையும் சிறுமை! பேரசையும்! கருமித்தனமும் சிறுமை! வஞ்சகமும் ஏமாற்றுதலும், அராஜகமும் சிறுமை! அளவின்று பொருள் குவித்தலும், சோம்பி இருந்தலும் சிறுமை!."

64. "சுரண்டலையும், சோம்பலையும் உதறுகிற நடுநிலை வழி இருக்கவே செய்கிறது. அதன் மூலம் நன்கு நோக்கவும், நன்கு அறியவும், அமைதியை, உள்நோக்கை, மகிழ்ச்சியை அடையவும் முடியும்."

65. "நிப்பானம் என்பது உன்னதமான எண்வகை மார்க்கமே அன்றி வேறில்லை."

66. புனித சாரிபுத்ரர் இவ்வாறு உரைத்ததும் பிக்குகள் மனமகிழ்சியுடன் அவர் உரை கேட்டு மகிழ்ந்தனர்.

67. நிப்பானத்தின் அடிப்படைக் கருத்து நன்னெறி வாழ்வுக்குரிய வழியே ஆகும். நிப்பானத்தின் பொருளை இதற்கு வேறாக யாரும் திரித்து விடக்கூடாது.

68. முற்றான அழிவு ஓர் எல்லை என்றால், பரிநிப்பானம் மற்றோர் எல்லை. நிப்பானம் இடைவழி.

69. இவ்வாறான புரிதலில் நிப்பானம் பற்றிய அனைத்துக் குழப்பங்களும் அஸ்தமித்துப் போகும்.

4. அவா அறுத்தலே தம்மம்

1. தம்மப் பதத்தில் புத்தர் கூறுகிறார் உடல் நலத்திற்கு மேலான நன்மையும் இல்லை. திருப்திக்கு மேலான நன்மதிப்பும் இல்லை.

2. இந்தத் திருப்தி உணர்ச்சி என்பது விட்டுக் கொடுத்தலாகவும், சூழ்நிலைக்குப் பணிந்து போவதாகவும் புரிந்து கொள்ளப்படக் கூடாது.

3. அவ்வாறான புரிதல் புத்தரின் பிற போதனைகளுக்கு முற்றிலும் மாறானதாகும்.

4. வறுமையில் உள்ளவர்கள் பாக்கியவான்கள் என்று புத்தர் கூறவில்லை.

5. துயரப்படுபவன் தன்னிலையை மாற்றிக் கொள்ள முயற்சிக்க கூடாது என்று புத்தர் கூறவில்லை.

6. மாறாக எல்லையற்ற வறுமைத் துன்பத்திற்கு எதிராக எல்லோருக்கும் வளமான வாழ்க்கையே வரவேற்கத் தக்கதென்றும், ஊக்கமிக்க செயற்பாடான வீரியமே வேண்டப்படுவதென்றும் அவர் போதித்தார்.

7. திருப்தியே உயர்ந்த செல்வம் என்று அவர் போதித்ததன் பொருள் எல்லை காண முடியாத பேராசையால் ஒருவன் அலை கழிக்கப்படக் கூடாது என்பதே.

8. பிக்கு இரதபாலர் கூறுகிறார்: பெருஞ்செல்வர்களை நான் காண்கிறேன்-அவர்கள் பொய்வழி புகுகிறார்கள்-எப்போதும் பெறுவதுண்டு தருவதில்லை. புதிய புதிய களிப்புக்களுக்காக அலைகிறார்கள்: வெற்றி கொள்ளும் மன்னர்களைக் காண்கிறேன். தம் ஆக்கிரமிப்பை கடல் வரை நீட்டிக்கிறார்கள். கடல் கடந்தும் தேசங்களை ஆக்கிரமிக்கிறார்கள். இன்னும் ரோசையால் மேலும் படை நடத்துகிறார்கள்-மன்னர்களும், குடிமக்களும் மாண்டு போகிறார்கள். ஆசைக்கும் ஏக்கத்திற்கும் இப்புவியில் அளவே இல்லை.

9. மகா-நிதான-சுத்தந்தத்தில் புத்தர் ஆனந்தருக்கு பேராசையை அடக்கும் அவசியத்தை விளக்குகிறார். அவர் உரைத்தது இது தான்.

10. "ஆனந்தரே, இலாபத்தின் வேட்கையால் பேராசை தோன்றுகிறது. இலாபத்தின் வேட்கை பொருள் மீது பற்றுக் கோடாகிறது. பொருள் மீது பற்றுக்கோடோ விடாப்பிடி குணமாகிறது. விடாப்பிடி குணமே பேராசையின் விததாகிறது."

11. "பேராசையும், பெரும்பொருள் பற்றும், அனைத்தையும் தமதாக்கிக் கொள்ளும் அதீத உணர்ச்சிக்கு காவலாய் அலைபாய்கிறது."

12. புத்தர் ஆனந்தரிடம் கூறினார்: "இந்த பேராசை உணர்ச்சி ஏன் கண்டிக்கப்பட வேண்டுமென்றால் இதிலிருந்து பல விபரீத நிலைகள் தோன்றுகின்றன. அடிதடிகள், வெட்டுக்குத்துக்கள், முரண்பாடுகள், மோதல்கள், சண்டைகள், பொய்கள், புரட்டுக்கள்- எல்லாம் இந்த பெரும் பொருள் பற்றொன்னும் பேராசையின் விளைவு. அதீத இலாப நோக்கின் அநியாய விளைவு."

13. ஐயமில்லாமல் வர்க்கப் போராட்டத்தின் சரியான விளக்கம் இது.

14. இதனால்தான் புத்தர் அவா அறுத்தலை போதித்தார்.

5. அனைததுக் கூட்டுப்பொருள்களும் நிலையற்றவை என உணர்வது தம்மம்

1. நிலையாமை பற்றிய இக்கோட்பாடு மூன்று கூறுகளையுடையது.

2. கூட்டுப் பொருள்கள் நிலையாமை உடையவை.

3. தனி உயரிகள் நிலையாமை உடையவை.

4. நிர்ப்பந்தத்துக்குட்பட்ட பொருள்களின் தன்மை நிலையாமை உடையது.

5. சிறந்த பவுத்த தத்துவஞானி "அசங்கரால்" கூட்டுப் பொருள்களின் நிலையாமை நன்கு விளக்கப்பட்டுள்ளது .

6. அசங்கர் கூறுகிறார்: "எல்லாப் பொருள்களும் காரணகாரிய சூழலின் கூட்டால் உண்டாக்கப்படுகின்றனவே அன்றி தற்சார்பான தனித்தோற்றம் உடையவையல்ல. கூட்டு கலைந்து போனால் அவற்றின் அழிவு நிச்சயமாகிறது."

7. "உயிர் வாழும் எந்த உயிரின் உடலும் நான்கு பெரும் மூலப்பொருள்களின் கூட்டேயாகும். அதாவது நிலம், நீர், தீ, காற்று ஆகியவற்றின் கூட்டேயாகும். இந்த கூட்டுப்பொருள், இந்த நான்கு மூலப்பொருள்களாகச் சிதைக்கப்படுமானால் மறைவு நிச்சயமாகிறது."

8. "இதுவே கூட்டுப் பொருள்களின் நிலையாமை என்று அழைக்கப்படுகிறது."

9. வாழும் தனி உயிரின் நிலையாமை "இருப்பு என்பது இயக்கம்" எனும் தத்துவத்தால் நன்கு விவரிக்கப்படுகிறது.

10. இந்தப் பொருளில், கடந்த காலத்தவன் ஒருவன் வாழ்ந்தான் எனலேமேயன்றி வாழ்கிறான் என்றோ, இனியும் வாழ்வான் எனறோ கூற முடியாது, வருங்கால உயிர் ஒன்று வாழும் எனலாமே அன்றி வாழ்ந்தது என்றோ வாழ்கிறது என்றோ, கூற முடியாது; தற்போது வாழும் உயிர் வாழ்கிறது எனலாமே அன்றி வாழ்ந்தது என்றோ, இனியும் வாழும் என்றோ உறுதியாய்க் கூற முடியாது.

11. சுக்கமாகக் கூறுவதானால் மனிதன் எப்போதும் மாறிக் கொண்டும், வளர்ந்து கொண்டும் இருக்கிறான். வாழ்வின் எந்த இரண்டு கட்டத்திலும் அவன் ஒரே மாதிரி இருப்பதில்லை.

12. நிலையாமைக் கோட்பாட்டின் மூன்றாவது கூறு சாதாரண மனிதர்கள் புரிந்து கொள்ளச் சற்றுக் கடினமானதாக உள்ளது.

13. எந்த உயிரும் ஏதோவொரு நேரத்தில் மரணமடையும் என்பது புரிந்து கொள்ள மிகவும் எளிதானது.

14. ஆனால் எப்படி ஒரு மனிதன் தொடர்ந்து மாறிக் கொண்டும்-உருவாகிக் கொண்டும் உயிர் வாழ்கிறான் என்பதைப் புரிந்து கொள்வது அவ்வளவு சுலபமல்ல.

15. "இது எப்படி சாத்தியம்?"-"எல்லாம் நிலையற்றது என்பதால் இது சாத்தியம்" என்பதே புத்தரின் பதில்.

16. இது பிற்காலத்தில் சூன்யவாதத்தின் தோற்றத்திற்கு வழி வகுத்தது.

17. பவுத்த சூன்யதத்துவம் முழுக்க முழுக்க அழிவைக் குறிப்பிடுவதல்ல. புறஉலகில் தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டிருக்கும் மாற்றங்களையே அது குறிப்பிடுகிறது.

18. எல்லா இருப்பும் சூன்யதத்துவத்தைப் பொறுத்ததே என்பதை மிகச் சிலரே உணர்கிறார்கள்; அது இல்லையென்றால் உலகில் எதுவுமே இயங்குதல் சாத்தியமில்லை. எல்லாப் பொருள்களின் இயல்பிலும் உள்ள நிலையாமை அல்லது மாற்றத்தைச் சார்ந்தே ஒவ்வொரு பொருளின் இருப்பும் இலங்குகின்றது.

19. பொருள்கள் யாவும் தொடர்ச்சியான மாற்றத்திற்கு உட்படாமல் மாற்றமின்றி ஒரு நிலையில் இருக்குமாயின், எல்லா உயிர்களும் ஒருநிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு உருமாறும் பரிணாமமும், வளர்ச்சியும் அற்றுப்போய் அனைத்தும் அசைவற்று நின்று நிலைகுலைந்து விடும்.

20. மனிதர்கள் இறவாமலும், மாறாமலும் எப்போதும் நிலைத்து இருந்திருப்பார்களாயின் விளைவு என்னவாக இருக்கும்? மனித இனத்தின் முன்னேற்றம் நின்று போயிருக்கும்.

21. சூன்யதத்துவம், உள்ளீடற்ற வெறுமை என்று கருதப்படுமாயின் பெரும் சிக்கல்கள் எழும்.

22. ஆனால் இது அப்படியல்ல, சூன்யதத்துவம் நீள, அகலம்றற ஓர் உட்பொருள் உடையக் குறியீடு.

23. எல்லாம் நிலையற்றவை என்ற கோட்பாடு புத்தரால் போதிக்கப்பட்டது.

24. புத்தரின் இந்தக் கோட்பாட்டின் ஒழுக்க போதனை யாது?

25. நிலையாமைக் கோட்பாட்டின் ஒழுக்க போதனை மிகவும் எளிமையானது. எதனோடும் பற்றுமிகக் கொண்டு சார்ந்து விடாதே.

26. இது பற்றற்ற தன்மையை வளர்க்கும் கோட்பாடு, சொத்துடைமையில் பற்றற்றிருப்பது-நண்பர்களிடம் சார்புப் பற்றற்றிருப்பது முதலியவற்றை வளர்க்கும் கோட்பாடு. அவர் கூறுகிறார். "இவையெல்லாம் நிலையற்றவை."

6. கம்மம் (செயற்பாடு) ஒழுக்க நியதியின் கருவியென்று உணர்வது தம்மம்.

1. பவுதிக உலகில் ஒரு ஒழுங்கு நியதி உள்ளது. கீழ்க்காணும் குறிப்பால் அது நிரூபணமாகின்றது.

2. கோள்களின் இயக்கங்களில் ஒரு குறிப்பிட்ட நியதி தென்படுகின்றது.

3. பருவங்களின் வருகையிலும், மாற்றத்திலும் ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு நியதி உள்ளது.

4. விதைகள் மரமாய் வளர்வதிலும், மரங்கள் கனிகளை நல்குவதிலும், கனிகள் விதைகளை அளிப்பதிலும் ஒரு நியதி தெரிகின்றது.

5. பவுத்தப் பெயர்க்குறிப்பில் இவைகள் 'நியமங்கள்' எனக் குறிக்கப்படுகின்றன-அதாவது எதிலும் ஒர் ஒழுங்கு நியதியை உருவாக்கும் ருது நியமம். பீஜ நியமம் போன்றவை.

6. இதே போன்ற ஒழுங்கு நியதி மனித சமூகத்திலும் உள்ளதா? எவ்வாறு அது உருவாக்கப்படுகிறது? எப்படி அது நிர்வகிக்கப்படுகிறது.

7. கடவுளின் இருப்பு பற்றிய நம்பிக்கையுடையவருக்கு இவ் வினாக்களுக்கு பதிலிறுப்பது கடினமில்லை. அவர்களின் பதில் மிகச் சுலபமானது.

8. ஒழுங்கு நியதி தெய்வீக வரையறை உடையது என்கிறார்கள் அவர்கள். கடவுளே உலகைப் படைத்தவர்-கடவுளே அதை ஆள்பவர்-கடவுளே பவுதிக விதிகளுக்கும், ஒழுக்க நெறிகளுக்கும் கர்த்தா என்கிறார்கள் அவர்கள்.

9. அவர்கள் கூற்றுப்படி, ஒழுக்க விதிகள் மனிதனுக்கு நன்மைபுரிபவை-ஏனெனில் அவை தெய்வ விருப்பத்தின் விளைவுகள், மனிதன், அவனைப் படைத்த கடவுளுக்குக் கீழ்ப்படிய வேண்டும்-அந்தக் கீழ்படிதலே ஒழுக்க நியதியை நி◌ாவகிக்கிறது.

10. ஒழுக்க நியதி தெய்வீக வரையறையுடையது என்பதற்குச் சார்பான வாதமே இது.

11. இந்த விளக்கம் எந்த விதத்திலும் திருப்திகரமானதல்ல. ஏனெனில, ஒழுக்க விதி கடவுளிடமிருந்து தோன்றியதெனறால், கடவுளே ஒழுக்க நியதியின் தொடக்கமும், முடிவும் என்றால், மனிதன் கடவுளுக்குக் கீழ்படியாமல் தப்பிக்க முடியாதென்றால், ஏன் இந்த உலகில் ஒழுக்கச் சீரழிவு மிகுந்துள்ளது?

12. தெய்வீகச் சட்டத்தின் அதிகாரம் என்னவாயிற்று? மனிதன் மீது தெய்வீகச் சட்டத்தின் பிடிப்பு என்னவாயிற்று? இவை முக்கியமான வினாக்கள். ஒழுக்க நியதிக்குத் தெய்வீக வரையறையே அடிப்படை என்று நம்புபவர்களில் யாரும் இவ்வினாக்களுக்குத் திருபதிகரமாகப் பதிலளிப்பவர்களாய் இல்லை.

13. இந்தச் சிக்கல்களைத் தீர்க்க இக்கருத்தோட்டத்தில் ஒருவாறு சில திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன.

14. இவ்வாறு கூறப்படுகிறது. 'ஐயமில்லாமல் கடவுளின் ஆணையாலேயே படைப்பு நிகழ்ந்தது. இந்த அண்டசராசரமும் அவர் விருப்பப்படியேயும், அவர் இயக்குகிறபடியேயும் தான் இயங்கலாயிற்று என்பதும் உண்மைதான். இந்தப் பிரபஞ்சம் எனும் இயந்திரத்தை இயக்குகிற சக்தியை ஒரே கணத்தில் வழங்கியவர் கடவுளே என்பதும் உண்மைதான்.'

15. ஆனால் தானளித்த மூலவிதிகளுக்குக் கீழ்படிந்து இயங்கும் உரிமையைக் கடவுள் இயற்கைக்கே விட்டுவிட்டார்.

16. எனவே ஒழுக்கநியதி கடவுள் எதிர்பார்த்தபடி இயங்கத் தவறினால், அது இயற்கையின் தவறேயன்றி, கடவுளின் தவறல்ல.

17. அந்தக் கருத்தோட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட இந்தத் திருத்தமும் சிக்கலைத் தீர்க்கவில்லை. கடவுளை, அவருடைய பொறுப்பிலிருந்து விடுவிக்கவே இது உதவுகின்றது. ஏனெனில் தன் விதிகளைச் செயற்படுத்தும் பொறுப்பை ஏன் கடவுள் இயற்கையிடம் விட வேண்டும்? என்ற கேள்வி அப்படியே இருக்கிறது. அவ்வாறான பொறுப்பற்ற கடவுளால் என்ன பயன்?

18. "எவ்வாறு ஒழுக்க நியதி நிர்வகிக்கப்படுகிறது?" என்னம் வினாவிற்குப் புத்தர் அளித்த விடை முற்றிலும் வேறுபட்டது.

19. அவர் விடை எளிமையானது. 'பிரபஞ்சத்தில் ஒழுங்கு நியதியை நிர்வகிப்பது கடவுள் அல்ல-கம்ம நியமம்!' -இதுவே இந்த வினாவிற்குப் புத்தரின் விடை.

20. பிரபஞ்சத்தின் ஒழுங்கு நியதி நன்றோ, தீதோ! ஆனால் புத்தரின் கூற்றுப்படி ஒழுக்க நியதி மனிதனைப் பொறுத்ததே அன்றி வேறெதையும் பொறுத்ததல்ல.

21. கம்மம் என்பதன் பொருள் மனிதரின் செயற்பாடே. விபாகமே அதன் விளைவு. விளைவு தீயதாயின் மனிதன் தீய கம்மங்களைச் (அகுசலக் கம்மங்களைச்) செய்கிறான் என்று பொருள், விளைவு நன்மையாயின் மனிதன் நற்கம்மங்களைச் (குசலகம்மங்களைச்) செய்கிறான் என்று பொருள்.

22. கம்மங்களைப் பற்றிப் பேசுவதோடு மட்டும் புத்தர் திருப்தியடைந்து விடவில்லை. கம்ம நியமத்திற்கு மறுபெயரான கம்ம விதியைப் பற்றியும் விவரிக்கிறார்.

23. கம்ம விதியை விளக்குவதன் மூலம் புத்தர் வலியுறுத்த விழைவது யாதெனில், செய்கையின் விளைவு செய்கையைத் தொரும்-பகலை இரவு தொடர்வது போல் உறுதியாய் என்பதே ஆகும். அதுவே நியதி அல்லது சட்ட நிச்சயம்.

24. குசல கம்மத்தின் (நற்செய்கையின்) விளைவான நற்பயனை, அதைச் செய்பவன் அடையத் தவறுவதில்லை. அகுசல கம்மத்தின் (தீய செய்கையின்) விளைவான தீமையிலிருந்து அதைச் செய்பவன் ஒருபோதும் தப்பிப்பதில்லை.

25. எனவே புத்தரின் அறிவுரை யாதெனில்: 'குசல கம்மங்களச்' (நற்செய்கைகளைச்) செய்யுங்கள். அந்தக் குசல கம்மத்தால் நிர்வகிக்கப்படும் நல்லொழுக்க நியதிகளால் மானுடம் நன்மை பெறும். அகுசல கம்மங்களைச் (தீய செய்கைகளைச்) செய்யாதீர்கள். அந்த அகுசல கம்மத்தால் விளையும் தீயொழுக்க நியதிகளால் மானுடம் துன்புறும்.

26. கம்மச் செயற்பாட்டுக் காலத்துக்கும், அதன் விளைவின் அனுபவிப்புக் காலத்துக்கும் இடையே ஒர் இடைவெளி இருக்கக் கூடும். பல சமயங்களில் இப்படித்தான் இருக்கிறது.

27. இக்குறிப்பின்படி, கம்மம் மூவகைப்படுகிறது. 1. தித்த தம்ம வேதனிய கம்மம் (உடனடி விளைவை உண்டாக்கும் கம்மம்); 2. உபபஜ்ஜ வேதனிய கம்மம் (பின்னொரு கால் விளைவை உண்டாக்கும் கம்மம்); 3. அபோரபரிய வேதனிய கம்மம் (எப்போதும் விளைவை உண்டாக்கும் கம்மம்.)

28. அஹோசி கம்மம் என்ற வகைப்படு கம்மமும் உண்டு-அதாவது விளைவேதும் உண்டாக்காத கம்மம். விளைவை உண்டாக்கும் அளவுக்குப் பலமற்றதோ, அல்லது வேறொரு கம்மத்தால் செயலற்று விடுவதோ ஆன கம்மங்கள் அனைத்தும் அஹோசி கம்மங்கள் என்று வகைப்படுத்தப்படுகின்றன.

29. ஆயினும், இத்தனைச் சலுகைகளுக்குப் பின்னரும், கம்ம விதி மாற்றப்படுவதற்கியலாதது என்னும் புத்தரின் உறுதியுரைக்கு மாற்றேதும் இல்லை.

30. கம்மத்தின் (செய்கையின்) விளைவு செய்பவனயே சாரும் என்றும், அதைப் பற்றி பிறர் கவலைக் கொள்ள வேண்டியதில்லை என்றம் கருதப்படும் தவறான கருததிற்குக் கம்ம விதித் தத்துவம் உட்படுவதில்லை. சில சமயங்களில் ஒருவனின் செயற்பாட்டின் விளைவு அவனையல்லாமல் பிறரைப் பாதிக்கக் கூடும். எவ்வாறாயினும், கம்ம விதியின் இயக்கத்தின் விளைவாகவே ஒழுங்கு நியதியின் மேம்பாடோ, சீரழிவோ அமைகிறது.

31. தனிமனிதர்கள் பிறக்கிறார்கள்-மறைகிறார்கள். ஆனால் பிரபஞ்சத்தின் ஒழுக்க நியதியான இயக்கமும், அதை நிர்வகிக்கும் கம்ம விதியும் தொடர்கின்றன.

32. இக்காரணத்துக்காகவே புத்தரின் சமயத்தில் கடவுளுக்குப் பதிலாக ஒழுக்கத்திற்கு முதன்மை அளிக்கப்பட்டுள்ளது.

33. ஆகவே, 'எவ்வாறு பிரபஞ்சத்தில் ஒழுக்கத்தின் நியதி நிர்வகிக்கப்படுகிறது?' என்ற வினாவிற்கான புத்தரின் பதில் எளிமையானதாகவும், மறுக்க முடியாததாகவும் உள்ளது.

34. இருந்தும், அதன் உண்மைப்பொருள் விளங்கிக் கொள்ளப்படுவது அரிதாகவே உள்ளது. அடிக்கடி, அல்லது பெரும் பாலும், அது தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது-அல்லது தவறாய் விவரிக்கப்படுகிறது? என்னும் வினாவிற்குப் பதிலாகவே கம்ம விதித் தத்துவம் புத்தரால் அளிக்கப்பட்டது என்பதையே பலர் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

35. புத்தரின் கம்மவிதி விளக்கத்தின் நோக்கம் இதுவே.

36. கம்மவிதித் தத்துவம் பொது ஒழுக்க நியதி பற்றிய வினாவோடு மட்டுமே தொடர்புடையது. அது தனிமனிதரின் வளத்துக்கோ, வறுமைக்கோ எவ்வகையிலும் பாரணமாவதில்லை.

37. அது, பிரபஞ்சத்தில் ஒழுக்க நியதியை நிர்வகிப்பதை மட்டுமே பொறுத்தது.

38. இதனாலேயே கம்மவிதித் தத்துவம் தம்மத்தின் பகுதியாய் உள்ளது.

## தம்மமல்லாதது யாது?

1. இயற்கைக்கு அப்பாற்பட்டதென யாதொன்றை நம்புவது தம்மம் அல்ல.

1. எந்தவொரு நிகழ்வு நிகழும்போதும், மானுடம், அது எவ்வாறு நிகழ்ந்ததென்றம், அதன் காரணம் எதுவென்றம் அறிய எப்போதும் விரும்புவதில்லை.

2. சில நேரம் ஒரு நிகழ்வின் காரணமும் விளைவும் தெளிவாகவும், வெளிப்படையாகவும் தெரியக்கூடுமாதலால, அந்நிகழ்வின் காரணத்தை விளங்கிக் கொள்ளுதல் கடினமாய் இராது.

3. ஆனால் பல நேரங்களில், விளைவும் காரணமும் உடனே விளங்கிக் கொள்ள இயலாத காலவேறுபாடு உடையதாய் இருக்கக் கூடுமாதலால், அந்நிகழ்வின் காரணத்தை விளங்கிக் கொள்ளுதல் கடினமாய் இருக்கும். காரணமே இல்லாமல் விளைவு ஏற்பட்டது போல் தோன்றும்.

4. பிறகு இக்கேள்வி எழுகிறது: இந்த நிகழ்வு எப்படி நிகழ்ந்தது?

5. பொதுவான பதில், இந்நிகழ்வுக்கு இயற்கைக்கு அப்பாற்பட்ட, அதிசயம் என்று அழைக்கப்படும் ஏதோ ஒன்று காரணமாயிருக்கிறது என்பதுதான்.

6. இந்த வினாவுக்கு, புத்தருக்கு முந்தியவர்கள் வெவ்வேறான விடைகளை அளித்துள்ளார்கள்.

7. 'பகவ்த கத்யனர்' எல்லா நிகழ்வுகளுக்கும் ஒரு காரணம் இருந்தாக வேண்டும் என்பதையே மறுக்கிறர். நிகழ்வுகள் தன்னிச்சையாய் நிகழ்வதாய் அவர் கூறுகிறார்.

8. 'மகாலி கோசலர்' ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு காரணம் இந்தாக வேண்டும் என்கிறார். ஆனால் அந்தக் காரணம் மனிதனால் தோன்றுவதல்ல-இயற்கையால், அவசியத்தால, தற்செயல் விதிகளால், முன்பே முடிவான ஊழ்வினையால், அதுபோன்ற பிறவற்றால் ஏற்படுவதே என்று போதித்தார் அவர்.

9. இந்தக் கோட்பாடுகளைப் புத்தர் விலக்கிவிட்டார். ஒவ்வொரு நிகழ்வுக்கும் ஒரு காரணம் உண்டு என்பது மட்டுமன்றி, ஒவ்வொரு காரணமும் ஏதாவதொரு மனிதச் செய்பாட்டாலோ, இயற்கை விதியாலோ விளைவதே என்று அவர் கருதினார்.

10. காலம், இயற்கை, அவசியம் போன்றவையே ஒரு நிகழ்வின் காரணங்கள் என்னும் கோட்பாட்டிற்கு எதிராக அவர் வைத்த வாதம் இதுதான்:

11. எல்லா நிகழ்வுகளுக்கும் முற்றான காரணங்களாக அமைவன காலம், இயற்கை, தற்செயல்,கடவுள்கள், ஊழ்வினை, தவிர்க்கமுடியாதவை அகியவற்றின் கரங்களில் மனிதன் வெறும் விளையாட்டுப் பொம்மைதானா?

12. காலம், இயற்கை, தற்செயல், கடவுள்கள், ஊழ்வினை, தவிர்க்கமுடியாதவை ஆகியவற்றின் கரங்களில் மனிதன் வெறம் விளையாட்டுப் பொம்மைதானா?

13. மனிதன் சுதந்திரமற்றவன் என்றால், அவன் இருப்பால் என்ன பயன்? இயற்கைக் கடந்த காரணங்களையே நம்பிக் கொண்டிருந்தால் மனிதனின் அறிவாற்றலால் என்ன பயன்?

14. மனிதன் சுதந்திரமானவன் என்றால், ஒவ்வொரு நிகழ்வும் மனிதனின் செயற்பாடு அல்லது இயற்கையின் செயற்பாடு ஆகியவற்றின் விளைவாகவே இருக்க வேண்டும். தோற்றத்தில் இயற்கையைக் கடந்து ஏற்பட்டதாக எந்த நிகழ்வும் இருக்க முடியாது.

15. ஒரு நிகழ்வின் உண்மையான காரணத்தை மனிதனால் அறிய முடியாமல் போகலாம். ஆனால் அறிவாற்றல் உடையவன் ஆயின், ஒருநாள் கட்டாயம் அதை அவன் கண்டுபிடித்தாக வேண்டும்.

16. இயற்கைக் கடந்த தத்துவத்தைப் புறக்கணிப்பதில் புத்தருக்கு மூன்று நோக்கங்கள் இருந்தன.

17. அவருடைய முதல் நோக்கம் மனிதனைப் பகுத்தறிவுப் பாதைக்கு வழிநடத்துவது.

18. அவருடைய இரண்டாவது நோக்கம் உண்மையைத் தேடிச் செல்ல அவனைச் சுதந்திரமாக்குவது.

19. அவருடைய மூன்றாவது நோக்கம் மூடநம்பிக்கையின் பலமான மூலத்தை-அதாவது எதையும் தீர விசாரித்தறியும் உணர்வைக் கொல்லும் தன்மையைத் தகர்த்தெறிவது.

20. இது 'கம்ம விதித்தத்துவம்' அல்லது 'காரணகாரிய தத்துவம்' என்று அழைக்கப்படுகிறது.

21. கம்மவிதி மற்றம் காரணகாரியத் தத்துவம் பவுத்தத்தின் மிக மையமான கோட்பாடாகும். அது பகுத்தறிவைப் போதிக்கிறது. பகுத்தறிவல்லாமல் பவுத்தம் வெறெதுவுமல்ல.

22. எனவேதான் இயற்கைக்கு அப்பாற்பட்டவற்றைப் பூசித்தல் தம்மம் அல்லாததாய் ஆகிறது.

2. ஈஸ்வரனை (கடவுளை) நம்புவது

தம்மத்தின் அடிப்படையே ஆகாது.

1. 'யார் உலகத்தைப் படைத்தது? என்பது பொதுவான வினாவாகும். உலகம் கடவுளால் படைக்கப்பட்டது' என்பதும் மிகப் பொதுவான விடையாகும்.

2. பிராமண வரையறையில், 'கடவுள்' பலபெயர்களால் அழைக்கப்படுகிறது-பிரஜாபதி, ஈஸ்வரன், பிரம்மா அல்லது மஹாபிரம்மா.

3. யார் இந்தக் கடவுள் என்ற வினாவிற்கோ, அவர் எப்படித் தோன்றினார் என்ற வினாவிற்கோ எந்தப் பதிலும் இல்லை.

4. கடவுள் நம்பிக்கையுடைவர்கள் அவரை 'எல்லாம் வல்லவர்'. 'எல்லாமறிந்தவர்' என்று விவரிக்கிறார்கள்.

5. கடவுளுக்கே உரியதாய்க் கூறப்படும் சில குறிப்பிட்ட ஒழுக்கத் தன்மைகளும் உண்டு. 'கடவுள் நல்லவர்' எனப்படுகிறார். கடவுள் 'நீதியானவர்' எனப்படுகிறார். கடவுள் 'நேசமானவர்' எனப்படுகிறார்..

6. 'பிரபஞ்சத்தைப படைத்தவர் கடவுள்' என்பதை வாழ்த்துக்குரிய தலைவர் (புத்தர்) ஒப்புக் கொண்டாரா? என்பது கேள்வி.?

7. 'இல்லை' என்பதே பதில். அவர் ஒப்புக்கொள்ளவில்லை.

8. 'கடவுளின் இருப்புக்' கோட்பாட்டை அவர் ஏன் நிராகரித்தார் என்பதற்குப் பல்வேறு அடிப்படைகள் உண்டு.

9. கடவுளைக் கண்டவர் ஒருவருமில்லை. மக்கள் கடவுளைப் பற்றிப் பேச மட்டுமே செய்கிறார்கள்.

10. கடவுள் அறியப்படவுமில்லை, காணப்படவும் இல்லை.

11. கடவுள்தான் உலகத்தைப் படைத்தார் என்று யாராலும் நிரூபிக்க முடியாது. உலகம் பரிணமித்ததே அன்றி படைக்கப்பட்டதல்ல.

12. கடவுளை நம்புவதால் என்ன பயன்? ஒரு பயனுமில்லை.

13. கடவுளை அடிப்படையாகக் கொண்ட எந்த மதமும் யூகத்தை அடிப்படையாகக் கொண்டதேயாகும் என்றார் புத்தர்.

14. எனவே கடவுளை அடிப்படையாகக் கொண்ட எந்த மதமும் ஏற்பதற்கு உரியதல்ல.

15. அது மூடநம்பிக்கையை உருவாக்குவதிலேயே முடிகிறது.

16. இந்த வினாவைப் புத்தர் இதோடு விட்டுவிடவில்லை. அவர் இவ்வினாவை அதன் பல்வேறு கூறுகளிலும் விவாதித்தார்.

17. இந்தக் கோட்பாட்டை அவர் பல்வேறு அடித்தளங்களின் மேல் நிராகரித்தார்.

18. 'கடவுளின் இருப்புக்' கோட்பாடு உண்மையை அடிப்படையாகக் கொண்டதல்ல என்று அவர் வாதித்தார்.

19. 'வாசேத்தர்', 'பாரத்வாஜர்' ஆகிய இரண்டு பிராமணர்களிடம் தாம் நடத்திய உரையாடலில் அவர் இதைத் தெளிவுபடுத்தினார்.

20. வீடுபேற்றுக்கான வழிமுறைகளில் எது உண்மையானது. எது போலியானது என்பதான விவாதமொன்று அவ்விரு பிராமணர்களுக்குள் எழுந்தது.

21. அந்நேரம் வாழ்த்துக்குரியவர் (புத்தர்) தன் பிக்குப் பரிவாரங்களளோடு கோசலை வழியாகப் பயணம் மேற்கொண்டிருந்தார். 'மனஸ்கதம்' என்னும் கிராமம் ஒன்றில், 'அகிரவதி' ஆற்றங்கரையில் இருந்த ஒரு மாந்தோப்பில் அவர் தங்கியிருக்க நேர்ந்தது.

22. 'மனஸ்கதம்' என்னும் கிராமத்தில்தான் வாசேத்தரும், பரத்வாஜரும் வாழ்ந்து வந்தார்கள். வாழ்த்துக்குரிய தலைவர் (புத்தர்) அவ்வூரில் வந்து தங்கியிருப்பதைக் கேள்வியுற்ற அவ்விருவரும்அவரிடம் சென்று தத்தமது கருத்துக்களை முன்வைத்தனர்.

23. பாரத்வாஜர் கூறினார்: "தாருக்கரின் பாதையே நேரான பாதை-இது ஒன்றே மோட்சத்திற்கான நேரிய வழியாய் இருந்து, ஒருவனைச் சரியாக வழிநடத்தி, அதன்படி நடப்பவனை பிரம்மத்துடன் ஐக்கியப்படும் நிலையை அடையச் செய்கிறது."

24. வாசேத்தர் கூறினார்: "ஓ! கவுதமரே! வெவ்வேறு பிராமணர்கள் வெவ்வேறு பாதைகளைப் போதிக்கிறார்கள். அதாவது, அத்தரியப் பிராமணர்கள், தித்திரியப் பிராமணர்கள், கஞ்சோகப் பிராமணர்கள், பீஹுவர்கியப் பிராமணர்கள், ஆகியோர். இவர்கள் போதிக்கும் வெவ்வேறு பாதைகளும், அவற்றைப் பின்பற்றுபவர்களை, பிரம்மத்தோடு ஐக்கியப்படச் செய்கின்றன."

25. "அருகிலுள்ள ஏதோவொரு கிராமத்திற்கோ, நகரத்திற்கோ பல்வேறு பாதைகள் இருந்தாலும், எந்தப் பாதையில் செல்பவரும் அதை அடைவது போல், வெவ்வேறு வகைப் பிராமணர்களால் போதிக்கப்படும் வெவ்வேறு பாதைகளும் பிரம்மத்தோடு ஐக்கியப்படுவதிலேயே முடிகின்றன."

26. "எல்லாப் பாதைகளும் சரியாகவே வழி நடத்துகின்றன என்கிறீர்களா வாசேத்தரே?" என்றார் புத்தா. "அப்படித்தான் கூறுகிறேன் கவுதமரே!" என்று பதிலிறுத்தார் வாசேத்தர்.

27. "ஆனால், வாசேத்தரே! மூன்று வேதங்களையும் நன்கு பயின்று முடித்த பிராமணர்களில் ஒருவராவது பிரம்மத்தை நேருக்கு நேர் எப்போதாவது கண்டிருக்கிறார்களா?"

28. "இல்லை கவுதமரே!"

29. மூன்று வேதங்களையும் நன்கு பயின்று முடித்த பிராமணர்களின் ஆசிரியர்களில் ஒருவராவது பிரம்மத்தை நேருக்கு நேர் கண்டிருக்கிறார்களா?

30. "இல்லை கவுதமரே!"

31. "பிரம்மத்தை யாரும் கண்டதில்லை. பிரம்மம் பற்றிய பிரத்தியட்ச அறிவு யாருக்கும் இல்லை." "ஆம்! அப்படித்தான்!" என்றார் வாசேத்தர், "பிரம்மம் உண்டு என்னும் பிராமணர்களின் கூற்று உண்மையை அடிப்படையாகக் கொண்டது என்று பின் நீங்கள் எப்படி நம்ப முடியும்?"

32. "ஒருவர் பின் ஒருவராய் நிற்கும் குருடர்களில், முதலில் இருப்பவரோ, இடையில் இருப்பவரோ, இறுதியில் இருப்பவரே யாருமே எதையும் காண முடியாது என்பதுபோல்-வசேத்தரே! பிராமணர்களின் உரைகள் குருட்டுத்தனமானவை என்றே நான் கருதுகிறேன். முதலாமவரும் காண்பதில்லை; இடையில் இருப்பவரும் காண்பதில்ல்; இறுதியில் இருப்பவரும் காண்பதில்லை. இந்தப் பிராமணர்களின் பேச்செல்லாம் நகைப்புக்கிடமானதாய், வெறும் சொற் ஜாலங்களாய், வீணானவையாய், வெறுமையாய் மட்டுமே உள்ளன."

33. "வாசேத்தரே! இது ஒருவன் தான் காணாத பெண்மேல் காதல்கொண்ட கதைபோல் இல்லையா?" "ஆம்! அப்படித் தான் இருக்கிறது." என்று பதிலிறுத்தார் வாசசேத்தரே.

34. "நல்லது நண்பரே! நீங்கள் மிக விரும்பிக் காதலிக்கும் அந்தப் பேரழகுள்ள பெண் யார்? அவள் பிரபுக்குலப் பெண்ணா? சூத்திரப் பெண்ணா? யாரவள்? என்று மக்கள் கேட்கும் கேள்விக்கு ஒருபதிலும் கூறத்தெரியாத காதலன் பற்றி நீங்கள் என்ன நினைப்பீர்கள் வாசேத்தரே?"

35. பாரத்வாஜரையும், வாசேத்தரையும் நோக்கி வாழ்ததுக்குரிய தலைவர் (தலைவர்) (புத்தர்) கூறினார்: "நண்பர்களே! அனைத்தையும் படைத்தவரெனக் கூறப்படும் மஹாபிரம்மாவின் தோற்றத்தைப் பொறுத்தவரை, அந்த பிரம்மா-அதாவது அனைத்துக்கும் முன் தோன்றியவர் இப்படி நினைத்துக் கொள்ளக் கூடும்-நான் பிரம்மா-பெரிய பிரம்மா-அனைத்தையும் வென்றவன்-வெல்லப்பட முடியாதவன்-அனைத்தையும் காண்பவன்-உருவாக்குபவன்-படைப்பவன்-முதல்வன்-அளிப்பவன்-எனக்கு நானே ஆசான்-இருப்பவை அனைத்துக்கும், இருக்கப்போகிற அனைத்துக்கும் நானே தந்தை, அனைத்தும் என்னாலேயே படைக்கப்படுகின்றன.

36. "இருப்பவை அனைத்துக்கும், இருக்கப் போகிற அனைத்துக்கும் பிரம்மாவே தந்தை என்பதே இதன் பொருள்."

37. "வணக்கத்துக்குரிய பிரம்மா, அனைத்தையும் வென்ற வரும், தான் வெல்லப்படாதவரும், இருப்பவை அனைத்துக்கும், இருக்கப்போகிற அனைத்துக்கும் தந்தையானவரும், நம்

அனைவரையும் படைத்தவரும் ஆன பிரம்மா, நிலையானவர், மாறாதவர், எப்போதும் இருப்பவர், என்றென்றம் இதே நிலையில் இருக்கக் கூடியவர் என்கிறீர்கள் நீங்கள; அப்படியானால், அந்தப் பிரம்மாவால் படைக்கப்பட்டு இவ்வுலகுக்கு வந்த நாம் மட்டும் ஏன் நிலையற்றவர்களாய், மாறுகிறவர்களாய்,மகைிறவர்களாய், உறுதியற்றவர்களாய், இறந்துபோக விதிக்கப்பட்டவர்களாய் இருக்கிறோம்?"

38. இவ்வினாவிற்கு வாசேத்தர் பதிலிறுக்கவில்லை.

39. அவருடைய மூன்றாவது வாதம் கடவுளின் எல்லாம் வல்ல தன்மையைப் பற்றியதாயிருந்தது. கடவுள் எல்லாம் வல்லவராயும் அனைத்துப் படைப்புக்கும் காரணத்தராயும் இருந்து விடுவாரேயானால், இதன் காரணமாக மனிதன், தானே எதையும் செய்ய விருப்பற்றவனாகவும், எதையும் செய்ய வேண்டிய அவசியமற்றவனாகவும், எதையும் செய்ய முடியாதவனாகவும், ஆற்றலைப் பயன்படுத்த அவசியமற்றவனாகவும் ஆகிவிடுவானே? உலக விவகாரங்களின் பங்கேதுமற்ற, கீழப்படிதலுள்ள அற்ப உயிராய் அல்லவா மனிதன் நீடிக்க வேண்டி வரும்? இதுதான் மனிதனின் நிலையெனில், பிரம்மா ஏன் மனிதனைப் படைக்க வேண்டும்?

40. இவ்வினாவிற்கும் வாசேத்தர் பதிலிறுக்கவில்லை.

41. "கடவுள் மிகவும் நல்லவர் என்றால், பின் அவரால் படைக்கப்பட்ட மனிதர்கள் ஏன் கொலைக்காரர்களாக, திருடராக, தூய்மையற்றவர்களாக, பொய்யர்களாக, இழுக்குடையவர்களாக, தீயுரை புகலும் வீணர்களாக, பறிர் பொருள் கவர்பவர்களாக உருவாகிறர்கள்? இதற்கும் ஈஸ்வரன்தானே காரணமாக இருக்க வேண்டும். அனைத்தையும் ஆக்குபவர் எனப்படும் கடவுள் நல்லவராக இருந்தால் இவ்வாறு நடக்க முடியுமா?" என்பது அவருடைய நான்காவது வாதம்.

42. அவருடைய ஐந்தாவது வாதம் கடவுள் 'எல்தலாம் அறிந்த தன்மையையும், நீதியானவர், கருணைமிக்கவர் என்று கூற்றையும் பற்றியதாயிருந்தது.'

43. "நீதிமானாகவும் கருணைமிக்கவனாகவும் உள்ள மேலான படைப்பாளி இருந்தால், ஏன் உலகில் இவ்வளவு அநீதிகள் நிலவுகின்றன?" என்று வினவினார் வாழ்த்துக்குரிய தலைவர். (புத்தர்)" கண்ணுள்ளவரரெல்லாம் துயரக்காட்சிகளைக் காண முடியுமே; தன்னால் படைக்கப்பட்டவற்றை ஏன் பிரம்மா சரிப்படுத்தக் கூடாது? எல்லையற்ற ஆற்றல் உடையவர் அவா என்றால் அவர் கரங்கள் ஏன் அனைத்தையும் நல்லவையாக்க முடியவில்லை? ஏன் அவரால் படைக்கப்பட்டவற்றை ஏன் பிரம்மா சரிப்படுத்தக் கூடாது? எல்லயற்ற ஆற்றல் உடையவர் அவர் என்றால் அவர் கரங்கள் ஏன் அனைத்தையும் நல்லவையாக்க முடியவில்லை? ஏன் அவரால் படைக்கப்பட்டவை பாதிப்புக்கும், துயருக்கும் உள்ளாகின்றன? எல்லோருக்கும் ஏன் அவர் இன்பம் அளிப்பதில்லை? ஏன் பொய்மையும் போலித்தனமும் உண்மையைத் தோற்கடிக்கின்றன? இந்த உலகைத் தீயோர் மிகுந்ததாய்ச செய்த உங்கள் பிரம்மாவை நான் மிகுந்த அநீதியாளராகவே கருதுகிறேன்.

44. எல்லாம் வல்ல ஓர் இறைவன் இருந்து, அவர் ஒவ்வொரு உயிருக்குள்ளும் இன்பம் அல்லது துன்பத்தையும், நற்செயல் அல்லது தீச்செயலையும் இட்டு நிரப்புகிறாரென்றால், அந்த இறைவர் பாவங்களால் கறைபட்டவர் என்று பொருள். ஒன்று மனிதன் தன் விருப்பப்படி இயங்கமுடியவில்லை, அல்லது கடவுள் நீதியானவராகவோ, நல்லவராகவோ இல்லை, அல்லது கடவுள் குருடாக இருக்கிறார் என்று ஆகும்".

45. கடவுளின் இருப்பு பற்றிய விவாதமே பயனற்றது என்பது கடவுள் கோட்பாட்டுக்கு எதிராக அவர் வைக்கும் அடுத்த வாதமாகும்.

46. சமயத்தின் மையப்புள்ளி மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையிலான உறவுபற்றியதாயிருக்கக் கூடாது என்பதே அவர் கருத்து. அது மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையிலான உறவு பற்றியதாகவே இருக்க வேண்டும். எல்லோரும் இன்புற்றிருக்கும் நோக்கில் ஒருவன் மற்றொருவனிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கற்பிப்பதே சமயத்தின் நோக்கமாக இருக்க வேண்டும்.

47. வாழ்த்துக்குரிய தலைவர் (புத்தர்) ஏன் கடவுள் இருப்புக் கோட்பாட்டுக்கு எதிராக இருந்தார் என்பதற்கு மற்றொரு காரணமும் இருந்தது.

48. அவர் மதச் சம்பிராதயங்கள், சடங்குகள், ஆசாரங்கள் ஆகியவற்றுக்கு எதிராய் இருந்தார். அவைகள் மூடநம்பிக்கைகளின் இருப்பிடங்களாக இருந்தமையாலும், மூடநம்பிக்கைகள், எண்வகை நன்மார்க்கத்திற்கு (அஷ்டாங்க மார்க்கம்) மிகவும் அத்தியாவசியமான சமநோக்கிற்கு (சம்மதிட்டி) விரோதமாய் இருப்பதாலும் அவற்றை அவர் எதிர்த்தார்.

49. வாழ்த்துக்குரிய தலைவர் புத்தர் கடவுள் நம்பிக்கை என்பதை மிகவும் அபாயகரமானதாய்க் கருதினார். ஏனெனில், கடவுள் நம்பிக்கை பூசையிலும், பிரார்த்தனையிலும் நம்பிக்கையை உண்டாக்குகிறது. பூசையிலும், பிரார்த்தனையிலும் நம்பிக்கை புரோகிதர்-பூசாரி நிலையைத் தோற்றுவிக்கிறது. புரோகிதர், பூசாரி, குருமார் ஆகியோர் தீயபுத்திசாலிகளாகி மூடநம்பிக்கைகளை உருவாக்குகிறார்கள், இதன் மூலம் சமநோக்கின் (சம்மதிட்டியின்) வளர்ச்சி முற்றாக அழிக்கப்படுகிறது.

50. கடவுள் இருப்புக் கோட்பாட்டுக்கு எதிரான இந்த வாதங்களில் சில நடைமுறைத் தொடர்புடையவை-சில மத ஆராய்ச்சித் தொடர்புடையவை. இவை கடவுள் இருப்பில் நம்பிக்கையை ஒழியச் செய்யத்தக்க அளவிற்குக் கடுமையானவை அல்ல என்பதை வாழ்த்துக்குரிய தலைவர் (புத்தர்) அறிவார்.

51. கடுமையான வாதங்கள் அவரிடம் இல்லை என்ற நாம் கருதிவிடக் கூடாது. ஐயமில்லாமல், கடவுள் நம்பிக்கைக்கு எதிரான மிகக் கடுமையான வாதமொன்றை புத்தர் முன்வைத்திருக்கிறார். 'பதித் சமுத்பாத்தில்'-அதாவது சார்புத் தோற்றுவாய்க் கோட்பாட்டில் இந்தக் கடுமையான வாதம் அவரால் முன் வைக்கப்பட்டிருக்கிறது.

52. இந்தக் கோட்பாட்டின்படி கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது மையக் கேள்வியல்ல. கடவுள் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தாரா இல்லையா என்பது கூட உண்மையான பிரச்சினையல்ல. படைத்தவர் உலகை எப்படிப் படைத்தார் என்பதே உண்மையான பிரச்சினைக்குரிய கேள்வி. உலகம் எவ்வாறு படைக்கப்பட்டது என்ற வினாவிற்கு அளிக்கப்படுகிற விடையைத்தான், கடவுள் நம்பிக்கைக்கான நியாயம் பொறுத்திருக்கிறது.

53. மிக முக்கியமான வினா இதுதான்: கடவுள் ஒன்றை வெறமையிலிருந்து உண்டாக்கினாரா? அல்லது ஒன்றை மற்றொன்றிலிருந்து உண்டாக்கினாரா?

54. வெறுமையிலிருந்து ஒன்று உண்டாக்கப்பட்டது என்பதை ஒப்புக் கொள்ளமுடியாது.

55. கடவுள் எனப்படுபவர் ஏதோ ஒன்றிலிருந்து மற்றவற்றை உண்டாக்கினார் என்றால், அந்த ஏதோ ஒன்ற அவருக்கு முன்பே இருந்து வந்திருப்பதாகப் பொருள். அது அவருக்கு முன்பே இருந்து வந்திருக்கிறது என்றால் அதைப் படைத்தவர் அவரில்லை என்றாகிறது.

56. கடவுளுக்கு முன்னமே, ஏதோவொன்று வேறெதனில் இருந்தோ யாராலோ படைக்கப்பட்டுள்ளது என்றால், பிறகு எல்லாவற்றையும் படைத்தவர் என்றோ மூலகாரணர் என்றோ கடவுளைக் கூற முடியாது.

57. கடவுள் இருப்பில் நம்பிக்கைக்கு எதிரான இந்த வாதம் புத்தருடைய மறுக்க முடியாத இறுதி வாதமாகும்.

58. கூற்றுக்களில் போலியாயிருப்பதால், கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்தவர் என்று நம்புவது தம்மம் அல்ல. அது போலி நம்பிக்கை மட்டுமே.

3. பிரம்மத்தோடு ஐக்கியமாவதை அடிப்படையாகக் கொண்ட தம்மம் போலியான தம்மம்.

1. புத்தர் தம் சமயத்தைப் போதித்து வந்த காலத்தில் 'வேதாந்தம்' என்னும் கோட்பாடு வழக்கிலிருந்தது.

2. அந்தக்கோட்பாட்டின் கருத்தோட்டங்கள் சிலவாகவும், எளிமையாகவும் இருந்தன.

3. பிரபஞ்சத்திற்கு அடிப்படையாய், எல்லாம் தானேயாய், உள்ள, பிரம்மம், அல்லது பிரம்மன் என்றழைக்கப்படுகிற வாழ்க்கைத்தத்துவம் உள்ளது என்கிறது அக்கோட்பாடு.

4. இநதப் பிரம்மம் ஓர் உள்பொருள்.

5. ஆன்மா பிரம்மத்தைப் போன்றதே.

6. மனிதனின் விடுதலை ஆன்மாவைப் பிரம்மத்தோடு ஒன்றாக்குவதையே பொறுத்துள்ளது. இது இரண்டாவது கொள்கை.

7. தானும் பிரம்மாவும் ஒன்றே என்று உணர்வதன் மூலம் ஆன்மா, பிரம்மத்துடனான ஐக்கியத்தை அடைய முடியும்.

8. ஆன்மாவை தான் பிரம்மமே என்ற உணரச்செய்யும் வழி 'சன்சாரத்தை' (உலகப்பற்றை) கைவிடுதலே.

9. இந்தக் கோட்பாடு வேதாந்தம் என்று வழங்கப்படுகிறது.

10. இந்தக் கோட்பாட்டின்பால் புத்தர் எந்த மரியாதையும் கொண்டிரக்கவில்லை. இக்கோட்பாடு தவறான அனுமானங்களை அடிப்படையாய்க் கொண்டதென்றும், இதன் காரணமாகவே இக்கோட்பாட்டை ஏற்பதில் பயனேதும் இல்லையென்றம் அவர் கருதினார்.

11. பாரத்வாஜர், வாசேத்தர் ஆகிய இரு பிராமணர்களோடு மேற்கொண்ட விவாதத்தில் புத்தா இதைத் தெளிவுபடுத்தினார்.

12. யாதொன்றையும் ஒருவர் உண்மையென ஏற்பதற்கு முன் அது மெய்ப்பிக்கப்பட வேண்டும் என்று வாதிட்டார் புத்தர்.

13. எதையும் மெய்ப்பிக்க இரு வழிமுறைகள் உண்டு-அவை புலன்களால் உணரப்படுதல், அல்லது அனுமானித்து அறியப்படுதல் ஆகும்.

14. "யாரேனும் 'பிரம்மத்தைக்' கண்டதுண்டா? நீங்கள் பிரம்மத்தைப் பார்த்திருக்கிறீர்களா? பிரம்மத்துடன் உரையாடியிருக்கிறீர்களா? பிரம்மத்தை நுகர்ந்திருக்கிறீர்களா?" என்று வினவினார் புத்தர்.

15. "இல்லை!" என்று விடையிறுத்தார் வாசேத்தர்.

16. "மெய்ப்பித்தலுக்கான மற்றொரு வழிமுறையான அனுமானித்து அறிதலும் பிரம்மத்தின் இருப்பை நிரூபிக்கப்போதுமானதாயில்லை."

17. "பிரம்மம் எதிலிருந்து, அல்லது எதைக்கொண்டு அனுமானித்து அறிதலும் பிரம்மத்தின் இருப்பை நிரூபிக்கப்போதுமானதாயில்லை."

18. கண்ணுக்குப் புலப்படாத பொருள்களும் உண்டு. என்று சிலர் வாதிடுவார்கள், பிரம்மம் அவ்வகையானது என்பார்கள் அவர்கள்.

19. இந்த வாதம் நடைமுறைக்கொவ்வாத வெறுங்கூற்று.

20. வாதத்திற்காக, காட்சிப் புலனுக்குட்படாத பொருள்கள் இருப்பதாகவே ஒப்புக்கொள்வோம்.

21. இவ்வகை வாதத்திற்கு நல்ல எடுத்துக்காட்டு மின்சாரம், கண்ணுக்குப் புலனாகாவிட்டாலும் அது இருக்கிறது. (அது போன்றதே பிரம்மம் என வாதிக்கலாம்.)

22. இந்த வாதம் போதுமானதல்ல.

23. கண்ணுக்குத் தெரியாமலிருக்கும் ஒருபொருள் வேறொருவித்த்தில் வெளிப்பட்டாகவேண்டும். அப்போதுதான் அது உண்மையென வழங்கப்படும்.

24. கண்ணுக்குத் தெரியாமலிருக்கும் ஒருபொருள் எந்தவிதத்திலும் வெளிப்படாதிருக்குமாயின் அது இருக்கிறது என்பதே உண்மையல்ல.

25. கண்ணுக்குப் புலனாகாவிட்டாலும், அதன் விளைவுகளைக் கொண்டு நாம் மின்சாரத்தின் இருப்பை ஒப்புக் கொள்கிறோம்.

26. மின்சாரம் ஒளியை உண்டாக்குகிறது. மின்சாரம் நமக்கு நேரடியாகப் புலனாகாவிட்டாலும், அதனால் உண்டாக்கப்படும் ஒளியைக் கொண்டு அதன் இருப்பு உண்மையென நாம் ஒப்புக்கொள்கிறோம்.

27. இந்தக் கண்ணுக்குப் புலப்படா பிரம்மம் எதை விளைவிக்கிறது? கண்ணுக்குப் புலப்படக்கூடிய எந்த விளைவுகளையாவது அது உண்டாக்குகிறதா?

28. இல்லை என்பது தானே பதில்?

29. மற்றொரு எடுத்துக்காட்டும் தரப்படலாம். சட்டத்துறையில் கற்பனைக்கு இடமளிப்பதுண்டு-நிரூபிக்கப் படாத ஒன்று இருப்பதாக வைத்துக் கொண்டு, அதன் மேல் அனுமானங்களை அடுக்கி வாதிடும் முறை பொதுவாகச் சட்டத்துறையில் கையாளப்படுகிறது.

30. இதுபோன்ற சட்டத்துறைக் கற்பனையை நாம் அனைவரும் சம்மதிக்கிறோம்.

31. இவ்வாறான சட்டத்துறைக் கற்பனை ஏன் ஒப்புக்கொள்ளப்படுகிறது?

32. சட்டத்துறைக் கற்பனை ஒப்புக் கொள்ளப்படுவதற்குக் காரணம் யாதெனில், அதனால் நல்ல, நீதியான பயன் விளைகிறது என்பதே.

33. "பிரம்மம் ஒரு கற்பனை. இதனால் என்ன நற்பயன் விளைகிறது?"

34. வாசேத்தரும், பாரத்வாஜரும் மவுனமாயிருந்தனர்.

35. இந்த வாதத்தை மேலும் தெளிவாக்க, புத்தர் வசேத்தரிடம் திரும்பி வினவினார், "தாங்கள் பிரம்மத்தைக் கண்டதுண்டா?"

36. "மூன்று வேதங்களையும் கரைத்துக் குடித்த பிராமணர்களில் ஒருவராவது பிரம்மத்தை நேருக்கு நேர் கண்டதுண்டா?"

37. "உண்மையில் இல்லை கவுதமரே!"

38. "மூன்று வேதங்களையும் கரைத்துக் குடித்த பிராமணர்களின் ஆச்சாரியார்களில் (ஆசிரியர்களில்) ஒருவராவது பிரம்மத்தை நேருக்கு நேர் கண்டதுண்டா?"

39. "உண்மையில் இல்லை கவுதமரே!"

40. "ஏழு தலைமுறைகள் வரை எந்த ஒரு பிராமணராவது பிரம்மத்தை நேருக்கு நேர் கண்டவருண்டோ வசேத்தரே?"

41. "உண்மையில் இல்லை கவுதமரே!"

42. அப்படியானால், வாசேத்தரே! பிராமணர்களின் பண்டைய ரிஷிகளாவது, 'பிரம்மத்தை' அறிவோம்-நாங்கள் கண்டிருக்கிறோம்-எங்குள்ளது பிரம்மம்-எப்படியுள்ளது பிரம்மம் என்றறிவோம்' என்று கூறியிருக்கிறார்களா?

43. "அப்படி கூறவில்லை கவுதமரே!"

44. பிராமணர்கள் இருவரிடம் தம் வினவுதலைத் தொடர்ந்த புத்தர் கூறினார்.

45. "இப்போது என்ன நினைக்கிறீர்கள் வாசேத்தரே? இது இவ்வாறாயின் பிரம்மத்தோடு ஐக்கியப்படுதல் பற்றிய பிராமணர்களின் கூற்றுகளெல்லாம் முட்டாள்தனமானவை என்றாகிறதல்லவா?"

46. "ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டு நிற்கும் குருடர்கள் வரிசையில், முதற்குருடனும் எதையம் காண்பதில்லை-இடைக்குருடனும் காண்பதில்லை-இறுதிக் குருடனும் காண்பதில்லை. இதுபோலவே, வாசேத்தரே, பிரம்மம் பற்றிப் பிராமணர்கள் கூறுவது யாவும் குருட்டு உரை என்றே நான் கருதுகிறேன். முதலாமவரோ, இடைநிற்பவரோ, இறுதியிலிருப்பவரோ எவருமே பிரம்மத்தக் கண்டவரில்லை. இந்தப் பிராமணர்களின் கூற்றுகளெல்லாம், பரிகசிக்கத்தக்க, வெறுமையான, வீணான வெற்றுரைகளே."

47. "இந்த பூமியிலேயே அழகுமிக்கப் பெண்ணை நான் அடைய எவ்வளவு விரும்புகிறேன் தெரியுமா? அவளை நான் எவ்வளவு காதலிக்கிறேன் தெரியுமா?" என்று ஒரு மனிதன் கூறுவதாக வைத்துக் கொள்ளுங்கள் வாசேத்தரே.

48. "மக்கள் அவனைக் கேட்பார்கள், "நல்லது! நல்ல நண்பரே! இந்த பூமியிலேயே அழகான பெண்ணை அடைய விரும்புகிறேன், காதலிக்கிறேன் என்கிறீர்களே-அவள் பிரபுக் குலத்தவளா, பிராமணப் பெண்ணா, வணிகர் மகளா, அல்லது சூத்திர வகுப்பா?"

49. "இவ்வாறு கேட்பதற்கு "தெரியாது!" என்று அவன் பதில் கூறுவதாக வைத்துக் கொள்வோம்."

50. "பிறகு மக்கள் அவனை மீண்டும் கேட்பார்கள், 'அதுசரி நல்ல நண்பரே! இந்த உலகிலேயே அழகான பெண்ணை அடைய விரும்புவதாகவும், காதலிப்பதாகவும் கூறுகிறீர்களே-அந்தப் பேரழகியின் பெயர் உமக்குத் தெரியுமா? அவள் குடும்பப் பெயரை அறிவீரா? அவள் உயரமானவளா, குள்ளமானவளா, நடுத்தரமானவளா? கறுத்தவளா, சிவந்தவளா, பொன்னிறமானவளா? எந்தக் கிராமத்தில், அல்லது ஊரில், அல்லது நகரில் அவள் வசிக்கிறாள்? இவ்வாறான கேள்விகளுக்கு அவன் 'எனக்கு எதுவும் தெரியாது' என்று விடை கூறுவதாக வைத்துக் கொள்வோம்.

51. "வாசேத்தரே! இப்போது நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இப்படிப் பதில கூறும் அந்த மனிதனின் பேச்சு முட்டாள்தனமானது என்றாகவில்லையா?"

52. "உண்மையில் கவுதமரே! அது அப்படிதான் ஆகிறது"-என்றனர் இரண்டு பிராமணர்களும்.

53. எனவே பிரம்மம் என்பது உண்மையல்ல-அதை அடிப்படையாகக் கொண்ட எந்த மதமும் பயனற்றதே.

## 4. ஆன்மாவில் நம்பிக்கை கொள்வது தம்மம் அல்ல.

1. ஆன்மாவை அடிப்படையாகக் கொண்ட மதம் வெறும் யூகத்தை அடிப்படையாகக் கொண்டது என்றார் புத்தர்.

2. யாரும் ஆன்மாவைக் கண்டதுமில்லை-அதனோடு உரையாடியதுமில்லை.

3. ஆன்மா அறியப்படாதது-காணப்படாதது.

4. உள்ளதெல்லாம் மனமே தவிர ஆன்மா அல்ல. மனம் ஆன்மாவுக்கு வேறானது.

5. ஆன்மாவை நம்புவது ஆதாயமற்றது.

6. எனவே ஆன்மாவை அடிப்படையாகக் கொண்ட மதம் பயனற்றது.

7. அது மூடநம்பிக்கையை உண்டாக்குவதிலேயே முடிகிறது.

8. புத்தர் ஆன்மா பற்றிய இந்த வினாவை இத்துடன் விட்டு விடவில்லை. அதன் அனைத்துக் கூறுகளிலும் விவாதித்தார்.

9. கடவுள் இருப்பின் நம்பிக்கைபோல, ஆன்மா இருப்பின் நம்பிக்கையும் மிகப்பரவலானதாகும்.

10. ஆன்மாவின் இருப்பில் நம்பிக்கை என்பது பிராமணீய மதத்தின் ஒரு பகுதி ஆகும்.

11. பிராமணீய மதத்தில் அது ஆத்மா அல்லது ஆத்மன் எனப்படுகிறது.

12. பிராமணீய மதத்தில், ஆத்மன் என்னும் பெயர், உடலுக்கு வேறாய், உடலுக்குள்ளேயே, ஒன்றின் பிறப்பு முதல் உடனிருக்கும் உட்பொருளுக்கு வழங்கப்படுவதாய்க் கருதப்படுகிறது.

13. ஆன்மாவில் நம்பிக்கை, அதனுடன் தொடர்புடைய வேறு பல நம்பிக்கைகளையும் உள்ளடக்கியதாக உள்ளது.

14. ஆன்மா உடலோடு மரணித்து விடுவதில்லை. அது மற்றொரு உடலில் புகுந்து மறுபடியும் உயிர்க்கிறது.

15. உடல் ஆன்மாவிற்கு புறத்தே அணியும் வெறும் சட்டைபோலவே பயன்படுகிறது.

16. புத்தர் ஆன்மாவை நம்பினாரா? இல்லை. இல்லவே இல்லை. ஆன்மாவைப்பற்றிய அவர் கொள்கை 'அநத்தா'-ஆன்மா இல்லை என்பதேயாகும்.

17. அருவமானது ஆன்மா என்பது பல கேள்விகளை எழுப்புகிறது. ஆன்மா என்பது யாது? எங்கிருந்து அது வந்தது? உடலின் மரணத்தின்போது அதற்கு என்ன நேர்கிறது? அது எங்கே போகிறது? அதன்பின் அது எந்த உருவத்தில் இருக்கிறது? அப்படி எவ்வளவு காலம் இருக்கிறது.? ஆன்மா இருப்புக் கொள்கையில் நம்பிக்கை கொண்டோரிடம் இந்த வினாக்களை எழுப்பி விவாதிக்க முயன்றார் புத்தர்.

18. அவர் முதலில், தன் வழக்கமான குறுக்ககு-விசாரணை முறையில் ஆன்மா பற்றிய கருத்தின் தெளிவின்மையை வெளிப்படுத்த முனைந்தார்.

19. ஆன்மா முதலில் தன் வழக்கமான குறுக்கு - விசாரனை முறையில் ஆன்மா பற்றிய கருத்தின் தெளிவின்மையை வெளிப்படுத்த முனைந்தார்.

20. ஆன்மா பற்றிய வரையரைகள் எண்ணற்றவைகளாக இருப்பதாகப் புத்தர் ஆனந்தரிடம் கூறினார். "என் ஆன்மாவுக்கு உருவம் உண்டு-ஆது மிகவும் நுட்பமானது" என்கிறார்கள் சிலர், மற்றும் சிலர், ஆன்மாவுக்கு வடிவமுண்டு-அது எல்லையற்றது-மிகவும் நுண்ணியது என்கிறார்கள். மற்றவர்கள். இத்தகைய வேறுபட்ட அம்சங்களால் ஆன்மா விளங்கிக் கொள்ளப்படுகிறது.

21. "இவ்வாறு பலவிதமாக ஆன்மா பற்றிய அபிப்பிராயங்கள் வெளிப்படுத்தப்படுகின்றன ஆனந்தரே!"

22. "ஆன்மா, அதில் நம்பிக்கை கொள்பவர்களால் என்னவாக உணரப்படுகிறது?" என்பது புத்தர் எழுப்பிய அடுத்த வினாவாகும். "என் ஆன்மா உணர்வே" என்கிறார்கள் சிலர் "இல்லை! ஆன்மா உணர்வல்ல! அது புலனறிவுடையதல்ல!" என்கிறார்கள் பிறர், மேலும், "என் ஆன்மா உணர்வல்ல- அது புலனறிவின் கூறு அதில் உண்டு" என்கிறார்கள் மற்றவர்கள். இத்தகைய வேறுபட்ட அம்சங்களால் ஆன்மா விளங்கிக் கொள்ளப்படுகிறது.

23. ஆன்மா உள்ளதென நம்புகிறவர்களை, மரணத்துக்குப் புலப்படுமா? என்ற வினாவையும் அவர் எழுப்பினார்.

25. எண்ணிலாத, தெளிவற்ற விடைகளையே அவர் பெற்றார்.

26. உடலின் மரணத்திற்குப் பின்னும் ஆன்மா தனது வடிவத்தைத் தக்கவைத்துக் கொள்கிறதா? இதைப்பற்றி மாறுபட்ட எட்டுவகை யூகங்கள் இருப்பதைக் கண்டார் புத்தர்.

27. ஆன்மா உடலோடு மரணித்து விடுகிறதா? இதைப்பற்றி எண்ணற்ற யூகங்கள் இருப்பதைக் கண்டார் புத்தர்.

28. உடல் மரணித்த பிறகு ஆன்மாவுக்கேற்படும் சுக துக்கங்களைப் பற்றிய வினாவையும் அவர் எழுப்பினார். உடலின் மரணத்திற்குப் பின் ஆன்மா இன்புற்றிருக்கிறதா? இதைப் பற்றிய கருத்திலும் துறவிகளும், பிராமணர்களும் முரண்படுகிறார்கள். ஆன்மா உடலின் மரணத்துக்குப் பின மிகவும் துன்புறுகிறது என்கிறார்கள் சிலர். சிலர் அது இன்புறுவதாகக் கூறுகிறார்கள். அது இன்புற்றும் இருக்கிறது-துன்புற்றும் இருக்கிறது என்கிறார்கள் சிலர். இல்லை-அது இன்புறுவதும் இல்லை-துன்புறுவதும் இல்லை என்கிறார்கள் பிறர்.

29. ஆன்மாவின் இருப்பு பற்றிய எல்லா கோட்பாடுகளுக்கும் புத்தர் அளித்த மறுமொழீ அவர் 'சுந்தா' என்பவர்க்களித்த விளக்கத்தை ஒத்ததுதான்.

30. அவர் சுந்தாவிடம் கூறினார்: "இப்போது, சுந்தா இக்கோட்பாடுகளை நம்புபவர்களாகவும், மேற்கொள்பவர்களாகவுமுள்ள துறவிகளிடமும், பிராமணர்களிடமும் சென்று நான் இப்படிக் கூறுவேன்: 'இது இப்படித்தானா நண்பர்களே?'-இதற்கவர்கள் 'ஆம்! இது மட்டுமே உண்மை,

மற்ற கருத்தோட்டங்கள் யாவும் அபத்தமானவை' என்று பதிலிறுப்பார்களேயாயின், நான் அவாகள் உரிமைகொண்டாடும் இக்கருத்துக்களை ஒப்புவதில்லை. ஏன் இப்படி? ஏனென்றால் இது போன்ற பிரச்னைகளில் வேறுபட்ட அபிப்பிராயங்கள் கொண்டுள்ளனர் மக்கள். இந்தக் (அல்லது அந்த) கருத்தோட்டங்களை என் சொந்தக் கருத்தோட்டத்துக்குச் சமமாகவே நான் கருதுவதில்லை-உயர்வாய் என்ற பேச்சுக்கே இடமில்லை".

31. இப்போது, ஆன்மாவின் இருப்புக்கு எதிரான புத்தரின் வாதங்கள் யாவை என்பதே மிக முக்கியமான வினா.?

32. கடவுள் இருப்பை மறுப்பதற்காதரவாய் அவர் முன்வைத்தவாதங்களைப் போன்றவையே ஆன்மாவை மறுப்பதற்காதரவாய் அவர் முன் வைத்த வாதங்களும்.

33. கடவுள் இருப்பை மறுப்பதற்காதரவாய் அவர் முன்வைத்த வாதங்களைப் போன்றவையே ஆன்மாவை மறுப்பதற்காதரவாய் அவர் முன் வைத்த வாதங்களும்.

34. கடவுள் இருப்பில் நம்பிக்கை கொள்வது எப்படி சம்மதிட்டியின் உருவாக்கத்திற்கு எதிராய் உள்ளதோ அப்படியே ஆன்மா இருப்பில் நம்பிக்கை கொள்வதும் ஆகும் என வாதித்தார் அவர்.

35. கடவுள் நம்பிக்கை எவ்வாறு மூடநம்பிக்கைக்கு மூலாக இருக்கிறதோ அப்படியே ஆன்மா இருப்பில் நம்பிக்கை கொள்வதும் இருக்கிறது என்று வாதித்தார் அவர். கடவுள் நம்பிக்கையை விட ஆன்மா இருப்பில் நம்பிக்கை கொள்வது மிகவும் ஆபத்தானது என்பதே உண்மையில் அவர் அபிப்பிராயமாகும். ஏனெனில் அது புரோகிதத்துவத்தை உருவாக்குவதோடு மட்டுமின்றி, பிற்ப்பு முதல் இறப்பு வரை மனிதனை முழுமையாய்க் கட்டுப்படுத்த புரோகிததததுவத்தை உருவாக்குவதோடு மடடுமின்றி, மூடநம்பிக்கையின் தொடக்க மூலமாய் இருப்பது மட்டுமின்றி, பிறப்பு முதல் இறப்பு வரை மனிதனை முழுமையாய்க் கட்டுப்படுத்த புரோகிதத்துவத்திற்கு அது இடமளித்து விடுகிறது.

36. இந்தப் பொது வாதங்களால் புத்தர் ஆன்மா இருப்பு பற்றிய உறுதியான அபிப்பிராயம் எதையும் வெளிப்படுத்தி விடவில்லை என்று கூறப்படுகிறது. அவர் ஆன்மா இருப்புக் கோட்பாட்டை ஒதுக்கித்தள்ளி விடவில்லை என்று மற்றவர்கள் கூறியிருக்கிறார்கள். அவர் எப்போதும் இவ்விவாதத்தைத் தவிர்த்து விடுகிறார் என்கிறார்கள் பிறர்.

37. இந்தக் கூற்றுக்கள் மிகவும் தவறானவை ஏனெனில், அவர் ஆன்மா என்று ஒரு பொருள் இல்லை என்று மிகவும் உறுதியான வார்த்தைகளில் மஹாலிக்குக் கூறியிருக்கிறார். எனவே தான் ஆன்மா பற்றிய அவருடைய கோட்பாடு அநத்தா- அதாவது ஆன்மா அற்றது என அழைக்கப்படுகிறது.

38. ஆன்மா இருப்புக்கு எதிரான பொதுவான வாதங்களுக்கு மேலாக ஆன்மா இருப்புக்கெதிராக ஆன்மா கோட்பாட்டிற்கு மரண அடியானதென அவர் கருதும் தனிச் சிறப்பான வாதமொன்றை புத்தர் வைத்திருந்தார்.

39. ஆன்மா ஒரு தனி உள்பொருளாய் இருக்கிறது என்பதற்கெதிரான அவருடைய கோட்பாடு நாம-ரூபம் என்றழைக்கப்படுகிறது.

40. இந்தக் கோட்பாடு, புலனறிவுள்ள உயிரின் மனித ஆளுமையென வேறுவிதமாய் அழைக்கப்படுகிறதன் மூலக் கூறுகளைக் கூர்மையான, கடுமையான விபஜ்ஜச் சோதனைக்குட்படுத்தியதன் விளைவாகும்.

41. நாம-ரூபம் புலனறிவுள்ள உயிர்களின் ஒரு தொகுப்புப் பெயராகும்.

42. புத்தரின் பகுப்பாராய்ச்சியின்படி, ஒரு புலனறிவுள்ள உயிர் குறிப்பிட்ட சில பவுதிக மூலங்கள், குறிப்பிட்ட சில மனஞ்சார்ந்த மூலங்கள் ஆகியவற்றின் கூட்டுப்பொருளாகும். அவைகள் கந்தங்கள் என்றழைக்கப்படுகின்றன.

43. ரூப கந்தம் முதன்மையாக நிலம், நீர், தீ, காற்று போன்ற பவுதிக மூலங்களை உள்ளடக்கியதாக உள்ளது. அவை உடல் அல்லது ரூபமாய் அமைகின்றன.

44. ரூபகந்தத்தைத் தவிர, புலனறிவுள்ள உயிரை உருவாக்கும் நாமகந்தகம் என்ற ஒன்றம் உள்ளது.

45. இந்த நாம கந்தம், வினனம் அல்லது தன்னுணர்வு என வழங்கப்படுகிறது. இந்த நாமகந்தம் மூன்று மனஞ்சார்ந்த மூலங்களை இணைத்துக் கொண்டுள்ளது. வேதனம் (உலகோடு ஆறு புலன்கள் கொள்ளும் தொடர்பிலிருந்து எழும் உணர்வு) சன்னம் (புலன்காட்சி); சங்கரம் (மனநிலைகள்). சேதனம் (தன்னுணர்வு) சில நேரங்களில் பிற மூன்று மனநிலைகளோடு சேர்ந்து அவற்றில் ஒன்றாகப் பேசப்படுகிறது. நவீன மனோதத்துவ நிவுணர் தன்னுணர்வு பிற மனோதத்துவ இயல் நிகழ்ச்சிகள் அனைத்தும் தோன்றும் மூல ஊற்றாயிருக்கிறது எனக் கூறுவர், புலன் உணர்வுள்ள உயிரின் மையமாய் வினனம் இருக்கிறது.

46. தன்னுணர்வு ப்ரிதி, அபா, தேஜ் மற்றும் வாயு ஆகிய மூலங்களின் சேர்க்கையால் விளைவதாகும்.

47. புத்தரால் நிறுவப்பட்ட தன்னுணர்வு பற்றிய இக்கோட்பாட்டுக்கு ஒரு எதிர்ப்பு எழுப்பப்படுகிறது.

48. இக்கோட்பாட்டை எதிர்ப்பவர்கள் வினவுகிறார்கள்! "தன்னுணர்வு எப்படி உருவாக்கப்படுகிறது?"

49. தன்னுணர்வு பிறப்போடு எழுந்து மரணத்தோடு வீழ்கிறது என்பதுண்மையே, இது இவ்வாறேயாயினும் தன்னுணர்வு நான்கு மூலங்களின் சேர்க்கையால் விளைகிறது-என்று கூற முடியுமா?

50. பவுதீக மூலங்களை உடன் சேர்த்தாலோ, ஒன்று சோத்தாலோ தன்னுணர்வை உண்டாக்குகின்றன என்பதல்ல புத்தரின் பதில. புத்தர் கூறியது யாதெனில் எங்கெல்லாம் 'ரூபமும் காயமும்' உள்ளதோ அங்கெல்லாம் அவைகளுடன் தன்னுணர்வும் சேர்ந்து வருகிறது என்பதே.

51. அறிவியலிருந்து ஓர் எடுத்துக்காட்டு கூறுவதாயின், மின்களம் ஒன்றுள்ளது-அம்மின்களம் உள்ள இடமெல்லாம் அது காந்தகளத்தோடுள்ளது. காந்தகளம் எப்படித் தோற்றுவிக்கப்படுகிறது அல்லது எப்படி உருவாகிறது என்று யாரும் அறியார். ஆனால் அது எப்போதும் மின்களத்தோடிருக்கிறது.

52. உடலுக்கும் தன்னுணர்வுக்கும் இதேபோன்ற உறவுத் தொடர்பு இருப்பதாய் ஏன் கூறக் கூடாது?

53. மின்களத்தோடு தொடர்புடைய காந்தக்களம் தூண்டப்பட்ட களம் என்று வழங்கப்படுகிறது. தன்னுணர்வு ஏன் 'ரூப-காய'த்தோடு தொடர்புடைய தூண்டப்பட்ட களம் என்று அழைக்கப்படக் கூடாது?

54. ஆன்மாவுக்கு எதிரான புத்தரின் வாதம் இத்துடன் முடிந்து விடவில்லை. அவர் இன்னமும் முக்கியமானதொன்றைக் கூறவுள்ளார்.

55. தன்னுணர்வு தோன்றியதும் ஒரு மனிதன் புலனறிவுள்ள உயிராகிறான். எனவே தன்னுணர்வு என்பது ஒரு மனிதனின் வாழ்வில் தலையாயதாகும்.

56. தன்னுணர்வு என்பது புலப்பாடுடையது, உணர்ச்சிவயப்படுவது, விருப்பிற்கிசைவது.

57. தன்னுணர்வு என்பது அறிவளிக்கும் போதும், செய்திகளை உணர்த்தும் போதும், அவற்றைப் போற்றும் போதும், அறிந்தேற்கும் போதும்,-அகநிலைச் செய்திகளைப் போற்றிடினும், புறநிலச் செய்திகளையும் நிகழ்வுகளையும் போற்றிடினும் புலப்பாடுடையதாகிறது.

58. தன்னுணர்வு என்பது இன்பத்தாலோ துன்பத்தாலோ உருவாக்கப்பட்ட ஸ்தாயியில் குறிப்பிட்ட அகநிலையில் இருக்கையிலும், தன்வயப்பட்ட தன்னுணர்வு உணர்ச்சியை உண்ாக்குகையிலும், அது உணர்ச்சிவயப்பட்டதாகிறது.

59. தன்னுணர்வு அதன் விருப்பிற்கிசையும் நிலையில், ஓர் உயிரை ஏதேனும் ஓர் இலக்கை எய்த முயற்சிக்கும்படி செய்கிறது. விருப்பிற்கிசையும் தன்னுணர்வு, நாம் மன உறுதி அல்லது செயல்வேகம் என்றழைப்பதைத் தோற்றுவிக்கிறது.

60. புலனறிவுள்ள உயிர்களின் செயற்பாடுகள் யாவும் தன்னுணர்வின் மூலமாகவும், அதன் விளைவாகவுமே புலனறிவுள்ள உயிர்களால் நிகழத்தப்பட்டுவிடுகின்றன என்பது இவ்வாறு தெளிவாகிறது.

61. இந்தப் பகுப்பாராய்ச்சிக்குப் பின், புத்தர் ஆன்மாவால் நிகழ்த்தப்படுவதற்கு என்ன செயற்பாடுகள் மிஞ்சியிருக்கின்றன என்று கேட்டார்? ஆன்மாவிற்கென, உரித்தாய் ஒதுக்கப்பட்டுள்ள அனைத்துச் செயற்பாடுகளும் தன்னுணர்வாலேயே நிகழ்த்தப்பட்டு விடுகின்றன.

62. செயற்பாடேதுமற்ற ஆன்மா அபத்தமானது.

63. புத்தர் ஆன்மா இல்லையென நிரூபித்தது இப்படித்தான்.

64. எனவேதான் ஆன்மா இருக்கிறது என்பது தம்மத்தின் பகுதியல்ல.

## 5. யாகத்தில் நம்பிக்கை கொள்வது தம்மம் அல்ல

1. பிராமண மதம் யாகங்களை அடிப்படையாகக் கொண்டதாகும்.

2. சில யாகங்கள் நித்தியம் என்றம் மற்ற யாகங்கள் நைமித்திகம் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

3. நித்திய யாகங்கள் கடமைகளாகவும், அவற்றால் ஒருவருக்குப் பலன் கிட்டினாலும் கிட்டாவிட்டாலும் அவை நிகழ்த்தப்பட வேண்டியவைகளாகும் உள்ளன.

4. நைமித்திக யாகங்களோ, அதை நிகழ்த்துபவர், உலகியல் லாபங்களாகச் சிலவற்றை அடைவதற்கு விரும்பி நிகழ்த்தவனவாகும்.

5. பிராமணீய யாகங்கள் மது குடித்தல், உயிர்க்கொலைபுரிந்துண்ணல், கேளிக்கைகளில் ஈடுபடல் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும்.

6. இருப்பினும் இந்த யாகங்கள் மதச்சடங்குகளாக கருதப்படுகின்றன.

7. யாகங்கள் உயர்வாய்க் கருதுவதை அடிப்படையாகக் கொண்ட ஒரு மதத்தைப் புத்தர் மதிக்க மறுத்தார்.

8. யாகங்கள் ஏன் மதத்தின் பகுதியாவதில்லை என்று அவரிடம் வந்து கருத்து வேறுபாடு கொண்டு வாதித்த பல பிராமணர்களுக்கு அவர் தன் காரணவிளக்கங்களை அளித்தார்.

9. இந்த விஷயம்பற்றி அவரிடம் மூன்று பிராமணர்கள் கருத்து வேறுபாடு கொண்டிருந்தார்கள் என்று கூறப்படுகிறது.

10. அவர்கள் கூடதண்டர், உஜ்ஜயர் மற்றும் மூன்றாமவர் உதாயினர் ஆவர்.

11. யாகங்களின் தன்மையைப்பற்றி அவர் நினைப்பதைக் கூறும்படி உயர்வெய்திய புத்தரிடம் வேண்டிக்கொண்டார் பிராமணர் குடதண்டர்.

12. உயர்வெய்திய புத்தர் கூறினார். "நல்லது, ஓ! பிராமணரே தாங்கள் செவிகொடுத்துக் கவனமாய்க் கேட்பீர்களாயின் நான் கூறுவேன்."

13. "அப்படியே ஆகட்டும் அய்யன்மீர்" குடதண்டர் பதிலாய்க் கூறினார்; உயர்வெய்திய புத்தர் கீழ்கண்டவாறு உரைக்கலானார்:

14. "ஓ! பிராமணரே! முன்னொரு காலத்தில் மஹாவிகேதர் என்ற பெயரில் ஆங்கொரு மன்னர், ஆற்றல் வாய்ந்தவராயும், பெருவளமும் மிகுந்த உடைமைகளும், வெள்ளியும் பொன்னும் குவிந்தவராயும் அனுபவிக்க அனைத்தும் உடையவராயும், தனமும், தானியமும் நிறைந்த தளும்பிய பொக்கிஷங்களும், களஞ்சியமும் கொண்டவராயும் திகழந்தார்."

15. "இப்போது ஒரு முறை மன்னர் மஹாவிகேதர் தனியே அமர்ந்து ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்த போது அவர் ஆதங்கத்தோடு எண்ணினார்:" ஒரு நிலையற்ற, அழிவிற்குரிய மானுடன் அனுபவிக்கக்கூடிய எல்லா நல்லனவும் என்னிடம் நிறைந்திருக்கிறது. அகன்று விரிந்த இப்புவி முழுவதும் வென்று அடைய எனக்கு ஏதுவாயிருக்கிறது. நெடுநாட்களுக்கு எனக்கு இன்ப வாழ்வையும், நலத்தையும் உறுதிசெய்யக் கூடிய மாபெரும்யாகம் ஒன்றை நான் நிகழ்த்தினால் நலமாயிருக்குமே."

16. "அதன்பின் குலகுருவான பிராமணர் மன்னரிடம் கூறினார்: "ஐயன்மீர்! தங்கள் மாநிலம் அலைக்கழிக்கப்படுகிறது-கொள்ளையிடப்படுகிறது. அந்நிய தேசக் கொள்ளையர்கள் நம் கிராமங்களையும், நகரங்களையும் பெருங்கொள்ளையிடுவதால், நம் சாலைகளைப் பாதுகாப்பற்றதாக்கி வருகிறார்கள். இது மாண்புமிகு மன்னர் தவறாய்ச் செயல்படுவதாகும்.

17. ஆனால் ஒருவேளை மாண்புமிகு மன்னர் இவ்வாறு எண்ணக்கூடும்: 'இந்த அயோக்கியர்களின், ஆட்டபாட்டத்திற்கு, அவர்களைப் பிடித்து இழிவுபடுத்துதல், நாடுகடத்தல், அபராதம் விதித்தல், சிறைப்படுத்தல், மரணதண்டனை விதித்தல் ஆகியவற்றால் விரைவில் ஒரு முடிவுகட்டுவேன்.' ஆனால் அவர்களின் ஒழுங்குப்புறக்கணிப்பை இதனால் திருப்திகரமாக நிறுத்திவிட முடியாது. தண்டிக்கப்படாமல் மிச்சசொச்சமாய் விடப்பட்டவர்கள் தொடர்ந்து ஆட்சிமண்டலத்தை அலைக் கழிப்பார்கள்.

18. "இவ்வகைக்கு முழுமையாய் முடிவுகட்டுதற்குரிய ஓர் வழிமுறை உள்ளது. அரசரின் ஆட்சிமண்டலத்திற்குள் யாரெல்லாம் கால்நடைகளையும், பண்ணைகளயும் நிர்வகிப்பதில்

தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்களோ, அவர்களுக்கெல்லாம் உணவும், விதைத்தானியங்களும், கால்நடைத் தீவனமும் மாண்புமிகு அரசர் அளிக்க வேண்டும். அரசரின் ஆட்சி மண்டலத்திற்குள், யாரெல்லாம் வணிகத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்களோ, அவர்களுக்குகெல்லாம் முதலீட்டுப் பணத்தை மாண்புமிகு அரசர் அளிக்க வேண்டும். அரசரின் ஆட்சி மண்டலத்திற்குள் யாரெல்லாம் அரசுப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்களோ அவர்களுக்கெல்லாம் சம்பளமும் உணவும் மாண்புமிகு அரசர் அளிக்க வேண்டும்."

19. பிறகு அவர்கள், ஒவ்வொருவரும் தத்தமது சொந்த பணிகளைத் தொடர்ந்து செய்து வருகையில், இனியொருபோதும் ஆட்சி மண்டலத்தை அலைக்கழிக்க மாட்டார்கள்; அரசரின் வருவாய் பெருகும், நாடு அமைதியும் சாந்தமும் உடையதாயிருக்கும்; மக்கள் ஒருவரையொருவர் மகிழ்வுறச் செய்வர்; மழலைகளைத் தம் கரங்களில் ஏந்தி மகிழ்ந்தாடி, அடையாநெடுங்கதவுகளுடன் அச்சமற்றுத் திகழ்வர்.'

20. "அதன் பிறகு, ஓ! பிராமணரே! மன்னர் மஹாவிகேதர் குலகுரு கூறியதை ஒப்புக்கொண்டு, அவர் கூறியவாறே செய்தார். அந்த மக்களும், அவரவர் பணியை அவரவர் தொடர்ந்து செய்து வருகையில், ஆட்சி மண்டலத்தை இனி அலைக்கழிக்காதிருந்தனர். மன்னரின் வருவாய் அதிகரித்தது, நாடு அமைதியும் சாந்தமும் உயைதாயிறறு. மக்களும் ஒருவரையொருவர் மிகழ்ச்சியுறச் செய்து, மழலைகள்த் தம் சரங்களிலேந்தி மகிழந்தாடி, அடையா நெடுங்கதவுகளுடன் அச்சமற்று வாழ்ந்தனர்."

21. "அதையும், முறைமையும் மீட்கப்பெற்றதும், மன்னர் மஹா விகேதர் தம் குலகுருவை மீண்டும் அழைத்துக் கூறினார்: ஒழுங்கின்மை முடிவுக்கு வந்தாயிற்று. நாடு அமைதியாயுள்ளது. நான் அந்தப் பெரும் யாகத்தைச் செய்ய விரும்புகிறேன்-போற்றுதலுக்குரிய தாங்கள் அதை எப்படிச் செய்வதெனக் கற்பிக்க வேண்டும்-நெடுநாட்களுக்கான என் இன்பத்திற்கும் நலத்துக்குமாக."

22. "அரசர்க்குப் பதிலிறுக்கும் வகையில் குலகுரு உரைக்கலானார்." அவ்வாறேயாகட்டும், மேன்மைதங்கிய அரசர் தம் ஆளுகைக்குட்பட்ட நகரிலுள்ளோர்க்கும் ஊரிலுள்ளோருக்கும், சத்திரியாய், கப்பம் கட்டுவோராய், அமைச்சர்களாய், அதிகாரிகளாய், அதிகாரமுள்ள அந்தணர்களாய், வசதிமிக்கக் குடி மக்களாய் உள்ள அனைவருக்கும், "நான் பொரியதொரு வேள்வி புரிய இருக்கிறேன். மேன்மைதங்கிய நீவிர் அனைவரும் பன்னெடுங்காலம் நான் பயன்மிகப்பெறும் வகையில் அதற்கு ஒப்புதலளித்துதவ வேண்டும்" என அழைப்பொன்று விடுத்தல் வேண்டும்.

23. "ஓ! கூடதண்ட பிராமணரே! அதன் பின் அரசர் தன் குலகுருவின் வார்த்தைகளை ஒப்புக்கொண்டு, அவர் கூறியபடியே செய்தார். சத்திரியர், அமைச்சர்கள், பிராமணர்கள், இல்லறத்தார் ஒவ்வொருவரும் அதே போன்ற பதிலையளித்தனர்: மாண்புமிகு மன்னர் யாகம் புரியலாம். காலம் பொருத்தமாயுள்ளது மன்னரே!"

24. "மன்னர் விகேதர் அறிவாற்றலுடையவராய், பலவழிகளிலும் பேறுபெற்றவாராய்த் திகழந்தார். அவருடைய குலகுருவும் சமஅளவில் அறிவாற்றலுடையவராயும் பேறுகள் கெற்றவாராயும் திகழ்ந்தா ா."

25. ஓ! பிராமணரே! யாகம் தொடங்கப்படுமன் அவ எவற்யையெல்லாம் உட்கொணடதாயிருக்குமென மன்னருக்கு விளக்கினார் குலகுரு.

26. "மாண்புமிகு மன்னர் மாபெரும் யாகத்தைத் தொடங்கும் முன்னரோ, அல்லது அவர் அம்மாபெரும் யாகத்தைப் புரிகையிலோ, அல்லது மாபெரும் யாகம் நிகழ்த்தப்பட்ட பின்னரோ கீழக்கண்டவாறு எந்த மனவருத்தமும் அவர் கொள்ளலாகாது;" 'அந்தோ! இதற்குச் செலவழிக்கப்பட்டது என் செல்வத்தின் பெரும்பகுதியாயிற்றே!' மன்னர் இது போன்று எவ்வருத்தமும் கொள்ளலாகாது.

27. "மேலும், பிராமணரே! யாகம் தொடங்கும் முன், அதில் பங்கேற்ற யாருக்கும் பின்னர் எந்த மனஉறுத்தலும் நேரா வண்ணம் குலகுரு கூறினார்; ஐயன்மீர்! தங்களின் யாகத்திற்கு உயிர்வாழ்வனவற்றைக் கொன்றழிக்கும் மனிதர்களும்-அச்செயலைத் தவிர்க்கும் மனிதர்களும்; கொடுக்கப்படாதவற்றை எடுத்துக் கொள்ளம் மனிதர்களும்-அவ்வாறு செய்வதைத் தவிர்க்கும் மனிதர்களும்; காமவிவகாரங்களில் கடுந்தவறு புரிபவர்களான மனிதர்களும்-அவ்வாறு செய்வதைத் தவிர்க்கும் மனிதர்களும்; பொய்யுரைக்கும் மனிதர்களும் - அவ்வாறுரையா மனிதர்களளும். புகழுக்கு இழுக்குண்டாக்கும் மனிதர்களும் அவ்வாறு செய்யாத மனிதர்களும், தீச்சொற்கள் உரைபபவர்களும் அவ்வாறு உரைக்காத மனிதர்களும், தீச்சொற்கள் உரைப்பவர்களும், தீய விருப்புடைய மனிதர்களும்-அவ்வாறு கவராத மனிதர்களும், தீய விருப்புடைய மனிதர்களும் - அவ்வாறு இல்லாதவர்களும், தவறான நோக்குடைய மனிதர்களும்; வருவார்கள். அவர்களில் ஒவ்வொருவாரிலும் தீயவை செய்வோரைத் தீமையோடே விடுங்கள். நன்மை புரிவோருக்கு மாண்புமிகு மன்னரான ஐயன்மீர் தாங்கள் வரவேற்பு முறைமைகளை ஏற்பாடு செய்து, அவர்களைப் பெருமைப்படுத்தி, தங்கள் மனம் அவர்தம் இதயங்களில் அமைதி காணும்படி செய்து கொள்ளவேண்டும்"

28. "மேலும், பிராமணரே! அந்த யாகத்தில், எருதுகள் பலியிடப்படலாகாது-ஆடுகளோ, பறவைகளோ, கொழுத்த பன்றிகளோ, உயிர்வாழ்வனவாகிய ஜந்துக்கள் எதுவுமோ கொல்லப்படலாகது. தூண்களாய்ப் பயன்படுத்தப்படுவதற்காக மரங்கள் எதுவும் வெட்டப்படலாகாது. யாகம் நடக்குமிடத்தைச் சுற்றி வேயப்படுவதற்காகத் தர்பைப் புல்லேதும் அறுக்கப்படலாகாது. பணிக்கமர்த்தப்பட்ட அடிமைககளும்,தூதுவர்களும், வேலை செய்பவர்களும் தடியாலோ அச்சத்தாலோ விரட்டப்படலாகாது-அவர்கள் தம் பணியை கண்ணீர் தோய்ந்த முகங்களுடன் அழுதவாறே புரியவும் கூடாது. உதவவிரும்புவோர் யாரும் உழைக்கலாம்-உதவவிரும்பாத யாரும் உழைக்க வேண்டியதில்லை. அவரவர் தேர்ந்தெடுக்கும் பணியை அவரவர் புரியலாம். தேர்ந்தெடுக்காத பணியை, செய்து முடிக்கப்படாமையையாலேயே யாரும் செய்ய

வேண்டியதில்லை. நெய், எண்ணெய், வெண்ணெய், பால், தேன், சர்க்கரை ஆகியவற்றோடேயே யாகம் நிறைவேற்றப்படவேண்டும்."

29. தாங்கள் யாகம் எதையேனும் செய்துதான் ஆகவேண்டுமென விரும்பினால், தங்கள் யாகம் மன்னர் விகேதர் புரிந்ததைப் போலிருக்கட்டும் யாகங்கள் வீணானவை மிருகங்களைப் பலியிடும் யாகங்கள் கொடியவை. யாகங்கள் சமயத்தின் பகுதியாயிருக்க முடியாது. ஓர் உயிரைக் கொல்வதன் மூலம் நீ மோட்சத்திற்குச் செல்லமுடியும் எனக் கூறும் மதம் தீயவகையானது.

30. நான்கேட்க்க விளைந்தேன் "ஓ! கவுதமரே! மிருகங்களைக் கொன்று பலியிடுவதைவிடப் பயன்மிக்க, இலாபகரமான யாகம் ஏதேனும் உண்டா?"

31. "ஆம்! பிராமணரே! உள்ளது."

32. "ஓ!கவுதமரே! அது என்னவாயுள்ளது?"

33. "ஒரு மனிதன் நம்பிக்கையான மனத்துடன் கீழ்க்கண்ட நற்போதனைகளை ஏற்பானாகில்-உயிரை அழித்தலைத் தவிர்த்தல்; கொடுக்கப்படாததை எடுக்காதிருத்தல; காம விவகாரங்களில் தீய நடத்தையைத் தவிர்ததல்; பொய் கூறலைத் தவிர்த்தல்; வலிய போதையளிக்கும், பேதமையாக்கும், பொறுப்பற்றதன்மைக்கு விதைதெளிக்கும் மதுபானம் அருந்துவதைத் தவிர்த்தல்-ஆகிய இவையே தாராளச் செலவோடு புறநிலையில் செய்யப்படும் எந்த யாகத்தை விடவும், தொடர்ந்து தானமளிப்பதை விடவும், பூதானம் அளிப்பதைவிடவும், சடங்கு முறைகளை ஏற்றொழுகுவதை விடவும் சிறந்ததியாகமாகும்.

34. அவர் இவ்வாறுரைத்த பின் கூடதண்ட பிராமணர், உயர்வெய்திய புத்தரிடம் கூறினார்: உயர்வெய்திய புத்தரிடம் கூறினார்: "மிக அருமை! ஓ! கவுதமரே! தங்கள் வாய்ச்சொற்கள் மிக அருமை!.

1. இப்போது பிராமணரான உஜ்ஜயர் னேம்மைதங்கியவரிடம் கூறினார்:

2. "மாண்புக்குரிய கவுதமர் யாகங்களைப் போற்றுகின்றீர்களா? எனக் கூற வேண்டுகிறேன்."

3. "இல்லை, பிராமணரே! நான் யாகங்கள் அனைத்தையும் போற்றுவதில்லை, எனினும், நான் யாகங்கள் எதையுமே போற்றாது தவிர்ப்பதும் இல்லை. பிராமணரே! எந்தெந்த யாகங்களில் பசுக்கள் பலியிடப்படுகின்றனவோ-ஆடுகளும் ம்மறிகளும் பலியிடப்படுகின்றனவோ, கோழிகளும் பன்றிகளும் பலியிடப்படுகின்றனவோ-பல்வேறு உயிரனங்கள் அழிக்கப்படுகின்றனவோ-அத்தகைய யாகங்கள்-பிராமணரே-அத்தகு கொலை பாதகங்களை உள்ளடக்கியவற்றை நான் போற்றுவதில்லை," "ஏன் அப்படி?"

4. "இது போன்ற யாகங்கள்-பிராமணரே-கொலை பாதகங்களை உள்ளடக்கியவற்றை நல்லோரோ, நல்வழியில் புகுந்தோரோ நாடவே மாட்டார்கள்."

5. "ஆனால், பிராமணரே! எந்தெந்த யாகங்களில் பசுக்கள் பலியிடப்படவில்லையோ-உயிரினங்கள் அழிக்கப்படவில்லையோ, கொலை பாதகங்களை உள்ளடக்கியதில்லையோ, அவற்றை நான் போற்றுகிறேன். எடுத்துக்காட்டாக, நெடுக நிறுவப்பட்டு வரும் அறநிலையங்கள், இல்லறச் செழுமைக்காக இயற்றப்படும் அறச்செயல்கள் ஆகியவற்றைப் போற்றுகிறேன்."

6. "ஏன் அப்படி?" "ஏனெனில், பிராமணரே! நல்லோரும், நல்வழி புகுந்தோரும், கொலைபாதகங்களுக்குட்படாத இத்தகைய தியாகங்களையே நெருங்கி நாடுகிறார்கள்."

1. பிராமணர் உதாயினர், பிராமணர் உஜ்ஜயர் வினவியதே போன்ற வினாவை மேன்மைதங்கிய புத்தரிடம் வினவினார்.

2. மாண்புக்குரிய கவுதமர் யாகங்களைப் போற்றுகின்றீர்களா? எனக் கூற வேண்டுகிறேன்! புத்தர் உஜ்ஜயருக்களித்ததைப் போன்ற பதிலையே அளித்தார்.

3. அவர் கூறினார்.

"பொருத்தமான தியாகங்களை உரியபோது புரிவதும்

பொறுப்பினோடு துன்பமேதும் புரியமறுத்து இருப்பதும்

அருள்மிகுந்த வாழ்க்கையாக்கி அரியபயிற்சி பெற்றவர்

அருளடைமை ஆன இந்த நற்செயல்கள் புரிகையில்

அன்புமிக்க இதயதன்னை ஆகுதியாய் ஆக்கியே

நன்மதிப்பு நற்களத்தில நிலவிவாழும் தூயவர்

நல்லவாழ்வு நல்லதியாகம் ஏற்றுவாழ்வர் புவியினில்

நன்மைமிக்க அவரளிக்கும் நல்லவைகள் யாவையும்

நல்லோரேற்று நன்குமகிழ்ந்து நாளுமவரை வாழ்த்துவர்

தின்மையான ஈகைநன்று திருத்தமான சிந்தைநன்று

திகழுமிவற்றைக் கொண்டவர்க்குத் திகழுமாங்கு பேரறிவு

அன்பினாலே அகிலம்யாவும் அவர்கள் வெல்லல் ஆகுமே!

அனைவருக்கும் துன்பம் நீங்கி ஆங்கேயின்பம் தோன்றுமே!"

6. யூகத்தை அடிப்படையாகக் கொண்ட நம்பிக்கை தம்மம் அல்ல.

1. கீழ்வருவன போன்ற வினாக்கள் வழக்கமாக வினவப்படுகின்றன. 1. நான் கடந்த காலங்களில் இருந்ததுண்டா? 2. நான் கடந்த காலங்களில் இருந்தில்லையா? 3. அப்போது நான் என்னவாக இருந்தேன்? 4. எதிலிருந்து எதற்குக் கடந்தேன்? 5. எதிர்வருங்காலத்தில் நான் இருப்பேனா? 6. எதிர்வருங்காலத்தில் இருக்க மாட்டேனா? 8. அப்போது நான் எப்படி இருப்பேன்? 9. எதிலிருந்து எதற்குக் கடப்பேன்? அல்லது, மறுபடியும், இன்றைய 'தான்' பற்றி அவன் ஐயத்திலிருந்து, தன்னையே வினவிக் கொள்வான்-1. நான் உள்ளேனா? 2. நான் எப்படி உள்ளேன்? 3. நான் என்னவாயுள்ளேன்? 4. நான் எப்படி உள்ளேன்? 5. என் இருப்பு வந்ததெப்போது? 6. இது செல்லுமிடம் எது?

2. பிரபஞ்சத்தைப் பொறுத்தும் வெவ்வேறு வினாக்கள் எழுப்பப்படுகின்றன. அவற்றில் சில பின்வருமாறு;

3. "பிரபஞ்சம் எவ்வாறு படைக்கப்பட்டது? அது என்றும் நிலைத்திருப்பதா?"

4. முதல் வினாவிற்கு விடையாய்ச் சிலர் அது என்றும் நிலைத்திரப்பது என்று கூறினர். மற்றவர்கள் அது அப்படியில்லை என்றனர். சிலர் அது எல்லையுடையது என்றனர். மற்றவர்கள் அது எல்லையற்றது என்றனர்.

5. இரண்டாம் வினாவிற்கு விடையாய்ச் சிலர் அது என்றும் நிலைத்திருப்பது என்று கூறினர். மற்றவர்கள் அது அப்படியில்லை என்றனர். சிலர் அது எல்லையுடையது என்றனர் மற்றவர்கள் அது எல்லையற்றது என்றனர்.

6. இந்த வினாக்களைப் பொருட்படுத்தவே மறுத்தார் புத்தர். இவைகள் தவறான சிந்தையுடையவர்களால் மட்டுமே வினவப்படுகிற, பொருட்படுத்தப்படுகிற வினாக்கள் என்றார் அவர்.

7. இந்த வினாக்களுக்கு விடையளிக்கிற அனைத்தையும் அறிந்தவர்கள் வேவையில்லை.

8. இந்த வினாக்களுக்கு விடையளிக்கிற அளவுக்கு தான் அனைத்தையும் அறிந்தவராய் இல்லை என்று அவர் கூறினார். அறியக் கிடைக்கிற அனைத்தையும் அறிந்து விட்டதாக யாரும் உரிமைகோர இயலாது-எப்போதேனும் நாம் அறிய விரும்புகிற அனைத்தையும் ஒரே

நேரத்தில் அறிந்து விடுவதுமில்லை. எப்போதும் அறியப்படாததென சில இருக்கவே செய்கின்றன.

9. இந்தக் காரணங்களுக்காகவே புத்தர் இது போன்ற கொள்கைகளைத் தம் சமயத்திலிருந்து விலக்கியே வைத்தார்.

10. தன் பகுதியாக இத்தகைய கொள்கைகளைக் கொள்கிற மதம் ஏற்பதற்குரியதேயல்ல என அவர் கருதினார்.

1. புத்தரின் சமகாலத்தவர்கள் தங்கள் மதங்களின் அடிப்படையாக ஆக்கியிருந்த கொள்கைகள் 1) தான்; மற்றும் 2) பிரபஞ்சத்தின் தோற்றம் ஆகியவற்றைப் பொறுத்திருந்தன.

2. அவர்கள் 'தான்; என்பது பற்றி குறிப்பிட்ட சில வினாக்களை எழுப்பினர். அவர்கள் வினவினர் 1. நான் கடந்த காலங்களில் இருந்ததுண்டா? 2. நான் கடந்த காலங்களில் இருந்தில்லையா? 3. அப்போது நான் என்னவாக இருந்தேன்? 4. எதிலிருந்து எதற்குக் கடந்தேன்? 5. எதிர்வருங்காலத்தில் நான் இருப்பேனா? 6. எதிர்வருங்காலத்தில் நான் இருக்க மாட்டேனா? 7. அப்போது நான் என்னவாக இருப்பேன்? 8. அப்போது நான் எப்படி இருப்பேன். 9. எதிலிருந்து எதற்குக் கடப்பேன்? அல்லது, மறுபடியும் இன்றைய 'தான்' பற்றி அவன் ஐயத்திலிருந்து, தன்னையே வினவிக் கொள்வான். 1. நான் உள்ளேனா? 2. நான் இல்லையா? 3. நான் என்னவாய் உள்ளேன்? 4. நான் எப்படி உள்ளேன். 5. என் இருப்பு வந்தது எப்போது 6. இது செல்லுமிடம் எது?

3. பிரபஞ்சத்தின் தோற்றத்தைப் பற்றி மற்றவர்கள் வினா எழுப்பினார்கள்.

4. சிலர் அது பிரம்மத்தால் படைக்கப்பட்டது எனக் கூறினர்.

5. மற்றவர்கள், அது தன்னையே அர்ப்பணித்துப் பிரஜாபதியயாலேயே படைக்கப்பட்டது எனக் கூறினர்.

6. மற்ற குருமார்கள் பிற வினாக்களை எழுப்புபவர்களாயிருந்தனர்: "உலகம் என்றும் நிலைத்திருப்பது-உலகம் என்றும் நிலைத்திருப்பது அல்ல-உலகம் எல்லையுடையது-உலகம் எல்லையற்றது, உடலே உயிராயுள்ளது (ஜீவன்)-உடல் ஒன்றாயுள்ளது, உயிர் வேறொன்றாயுள்ளது-உண்மை காண்பவர் மரணத்திற்குப் பின்னும் வாழ்கிறார்-உண்மை காண்பவர் மரணத்திற்குப் பின் வாழ்வதில்லை-மரணத்திற்குப் பின் அவர் இருப்பதுமில்லை, இல்லாமலுமில்லை."

7. இந்த வினாக்கள் தவறான சிந்தையுடையவர்களால் கேட்கப்படுகிறவைகளாக இருக்கின்றன.

8. இந்த மதக் கொள்கைக் கோட்பாடுகளைப் புத்தர் கண்டித்ததற்கு மூன்று காரணங்கள் இருந்தன.

9. முதலாவதாக, இவைகளை மதத்தின் கூறுகளாய் ஆக்க எந்தக் காரணமுமில்லை.

10. இரண்டாவதாக, இந்த வினாக்களுக்கு விடையளிக்க அனைத்தையும் அறிந்தவர்கள் வேவை-அப்படி யாரும் இல்லை. அவர் தம் உரைகளில் இதை வலியுறுத்தினார்.

11. குறிப்பிட்ட ஒரே நேரத்தில் யாரொருவரும் அனைத்தையும் காண்பதுமில்லை-அறிவதுமில்லை. அறிவு என்றும் இறுதியாவன்று, எப்போதும் அறிய வேண்டியவை சில இருந்து கொண்டேயிருக்கும் என்றார் அவர்.

12. இந்தக் கோட்பாடுகளுக்கு எதிரான மூன்றாவது வாதம், அவைகளெல்லாம் வெறும் யூகங்களாய் உள்ளன என்பதாகும். அவைகள் ஒப்புநோக்கிச் சரிபார்க்கப் பட்டவையன்று-ஒப்புநோக்கிச் சரிபார்க்கத் தக்கவையுமன்று.

13. கட்டின்றி விடப்பட்ட வெறும் கற்பனைகளின் விளைவுகளே அவைகள், அவைகளுக்குப் பின் உண்மையில்லை.

14. அதுவுமல்லாமல், இந்த யூகக்கோட்பாடுகளால், மனிதர்களோடு தொடர்பு கொண்டு வாழும் மனிதர்களுக்கு என்ன நன்மை? யாதொன்றம் இல்லை.

15. உலகம் படைக்கப்பட்டது எனப் புத்தர் நம்பவில்லை, உலகம் பரிணாமமுற்றது என அவர் நம்பினார்.

7. தம்ம நூல்களைக் கற்றல் தம்மம் அல்ல.

1. பிரமாணர்கள் நூல் அறிவையே (வேதம்) அனைத்துமாய் வலியுறுத்துகின்றனர். அந்நூலறிவே அனைத்தின் இருப்புமாய் உள்ளது-அனைத்தின் இறுதியுமாய் உள்ளது என அவர்கள் கற்பிக்கிறார்கள். இதற்கு மேல் எதுவும் கருதப்பட வேண்டியதில்லை என்கிறார்கள்.

2. இதற்கு மாறாகப் புத்தர் அனைவருக்கும் கல்வி என்பதை ஆதரிப்பவராய் இருந்தார். இதுவேயன்றி, அவர் நூலறிவைப் பற்றியதை விட மனிதன் எவ்வாறு அறிதலைப் பயன்படுத்திக் கொள்கிறான் என்பதைப் பற்றியே அதிக அக்கறை செலுத்தினார்.

3. அதன் விளைளவாக, யாரொருவன் அறிதலுடையவனாய் இருக்கிறானோ, அவன் சீலம் (நன்னடத்தை) உடையவனாகவும் இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துவதில் மிகவும் குறியாயிருந்தார்-சீலமற்ற நூலறிவு மிகவும் ஆபத்தானது.

4. பிரக்ஞைக்கு மாறாக சீலத்தின் முக்கியத்துவம் அவர் பிக்கு பதிசேனருக்குக் கூறியவற்றால் நன்கு எடுத்துக்காட்டப்படுகிறது.

5. முன்னொரு காலத்தில் புத்தர் ஷ்ராவஸ்தியில் வசித்து வருகையில், இயல்பிலேயே சாதுரியமற்ற மந்தத் தன்மையுடையவரான முதிய பரதேசி ஒருவர் இருந்தார்-அவரால் ஒரு 'கீதத்' தையும் மனப்பாமாய் கற்ற இயலவில்லை.

6. இது இவ்வாறிருக்கவும், நாள்தோறும் அவருக்கு பாடம் சொல்ல 500 அறவோர்களுக்குப் புத்தர் ஆணையிட்ார்-ஆனால் மூன்றாண்டுகளக்குப் பின்னும் அவரால் ஒரு கீதத்தைக் கூட நினைவில் இறுத்த முடியவில்லை.

7. அதன்பின் நாட்டுமக்கள் அனைவரும் (நால்வகை மக்களும்) அவருடைய அறியாமையை அறிந்து அவரைக் கேலி செய்யத் தொடங்கிய போது-புத்தர் அவருக்காகப் பரிவு கொண்டு, தம்மருகே அவரை அழைத்துக் கீழ்க்கண்ட செய்யுள்பிரிவை மெவாய் மீண்டும் மீண்டும் கூறினார்: "நாகாப்பவன் எவனோ, நினைவைக் கட்டுக்குள் நிறுத்துபவன் எவனோ, தன்னுடலால் பிறருக்குத் துன்பமிழைக்காதவன் எவனோ-இப்படியாய்ச் செயல்படுபவனே விடுதலை அடையக்கடவன்."

8. பிறகு குருவின் நற்றன்மையுணர்வால் உந்தப்பட்ட பதிசேனர், தம் இதயம் திறக்கப்பட்டதாய் உணர்ந்து, ஒரே முறையில் அச்செய்யுள் பிரிவைத் திரும்பக் கூறினார்.

9. புத்தர் அதன்பின் மேலும் அவரிடம் உரைத்தார்-"முதியவரே! இப்போது உங்களால் ஒரு செய்யுள் பிரிவை மட்டுமே திரும்பக் கூற முடிகிறது-இதையறியும் மனிதர்கள் இன்னமும் உம்மை கேலிசெய்வர்-எனவே நான் இப்போது அந்தச் செய்யுளின் பொருளை உமக்கு விளக்குகிறேன்-தாங்கள் தங்கள் பங்குக்கு இதைக் கவனமாய்க் கேளுங்கள்."

10. பிறகு, புத்தர் உடலோடு தொடர்புடைய மூன்று காரணங்களையும், நாவோடு தொடர்புடைய நான்கு காரணங்களையும் அறிவித்து, அவற்றை அழிப்பதன் மூலம் மனிதர்கள் விடுதலை எய்த இயலுமென்றம் விளக்கியதன் பேரில் அத்துறவி, அவ்வாறு விள்க்கப்பட்ட உண்மையை முழுமையாய் உணர்ந்து கொண்டதால் அறவோர் நிலையை எய்தினார்.

11. இப்போது, இந்த நேரத்தில், ஆங்கு விஹாரில் வசித்து வந்த 500 பிக்குணிகள், தங்களில் ஒருவரை புத்தரிடம் அனுப்பி, தங்களுக்கு தம்மத்தில் பயிற்சியளிக்க ஒரு போதகரை அனுப்புமாறு வேண்டச் செய்தனர்.

12. இவ்வேண்டுகோளைக் கேள்வியுற்ற புத்தர் முதிய துறவியான பதிசேனர் இந்த நோக்கத்திற்காக அவர்களிடம் செல்ல வேண்டுமென விரும்பினார்.

13. இந்த ஏற்பாடு செய்யப்பட்டதை அறிந்ததும், அனைத்துப் பெண் துறவிகளும் சேர்ந்து சிரிக்கத் தொடங்கி, மறுநாள் அவர் வந்ததும், அந்த கீதத்தைத் தவறாய்ச் (தலைகீழாய்)

சொல்லி அந்த முதியவரைக் குழப்பி வெட்கமுறச் செய்வதெனத் தமக்குள் முடிவெடுத்துக் கொண்டனர்.

14. பிறகு, மறுநாள் அவர் வந்ததும் பெரியவர் சிறியவருமான அனைத்துப் பிக்குணிகளும், அவரை முன் சென்று வணங்கவும், அவ்வாறு செய்கையில் ஒருவரைக் கண்டு ஒருவர் புன்னகைக்கவும் செய்தனர்.

15. அதன்பின் அமர்ந்து, அவருக்கு உணவளித்தனர், உண்டு முடித்து கைகழுவிய பின், அவர்கள் அவருடைய உரையைத் தொடங்கும்படி வேண்டினர், அதன் படி அந்த முதிய துறவி உயர்த்தப்பட்ட ஆசனத்தில் ஏறி அமர்ந்து உரையைத் தொடங்கினார்.

16. சகோதரிகளே! என் அறிவுத்திறன் சிறிது, என் கல்வியோ மிகச் சிறிது. நான் ஒரேயோரு கீதத்தையே அறிவேன் எனினும், அதைக் கூறிவிட்டு அதன் பொருளை விளககுவேன். தாங்கள் கவனமாய்க் கேட்டுப் புரிந்து கொள்ளுங்கள்.

17. உடனே எல்லா இளம் பெண்துறவிகளும் அந்தக் கீதத்தைத் தலைகீழாய்ச் சொல்லத் தொடங்க முயன்றனர்; ஆனால் அந்தோ! அவர்களால் வாய் திறக்க முடியாமல், வெட்கத்தால் நிரம்பி, வருத்தத்தில் அவாகள் தலைகவிழ்ந்தனர்.

18. பிறகு, பதிசேனர் அக்கீதத்தைத் திரும்பக் கூறிவிட்டு, அதை புத்தர் பயிற்றுவித்தபடியே விளக்கத் தொடங்கினார்.

19. பிறகு, அவர் சொற்களைக் கேட்ட அனைத்து பிக்குணிகளும், ஆச்சரியத்தால் நிரம்பி, அத்தகு விளக்கத்தைக் கேட்க மிகமகிழந்து, ஒரே இதயத்தோடு அதை ஏற்று, அறவோர் ஆயினர்.

20. அடுத்த நாள், மன்னர் பிரசேஞ்சித் புத்தரையும், போதகர் திருக்கூட்டம் முழுமையையும் தன் அரண்மனைக்கு வந்து விருந்தோம்பலை ஏற்க அன்பழைப்பு விடுத்திருந்தார்.

21. எனவே, பதிசேனரின் உயர்ந்த, வணக்கத்திற்குரிய தோற்றத்தை உணர்ந்த புத்தர், தன் பிட்சாபாத்திரத்தை ஏந்தித் தன்னைத் தொடர்ந்து அவர் வரவேண்டுமென விரும்பினார்.

22. ஆனால் அவர்கள் அரண்மனை வாயிலுக்கு வந்தபோது, அவருடைய குணாம்சங்களை (முன்னமே) அறிந்திருந்த வாயிற் காவலர் அவரை உட்கூடத்துக்குள்ளே விடாமல் தடுத்துக் கூறினார்: "ஒரு ஒரு கீதமன்றி வேறொன்றும் அறியாத போதகர்களுக்கு நாங்கள் விருந்தோம்பல் புரிவதில்லை; உங்களைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு இங்கு இடமில்லை-உம்மினும் சிறந்தோ◌ாக்கு இடம் விட்டு நீங்கள் சென்றுவிடுங்கள்."

23. இதன்படி பதிசேனர் வாயிலுக்கு வெளியே அமர்ந்து விட்டார்.

24. இப்போது மேடையேறிய புத்தர், தன் கைகளைக் கழுவியபின், அந்தோ! பிட்சாபாத்திரம் ஏந்திய உள்ளங்கைகளையுடைய பதிசேனரின் கரங்களையும் தாமே கழுவியபின், அந்தோ! பிட்சாபாத்திரம் ஏந்திய உள்ளங்கைகளையுடைய பதிசேனரின் கரங்களையும் தாமே கழுவிய பின், அறைக்குள் நுழைந்தார்.

25. பின், இந்தக் காட்சியைக் கண்ட அரசரும், அமைச்சர்களும், அவையினர் அனைவரும் ஆச்சரியத்தால் நிரம்பிக் கூறினர்: "ஆ! யார் இவர்?"

26. இதற்குப் புத்தர் பதிலிறுத்தார், "இவர் தான் துறவிபதிசேனர். இப்போதுதான் இவர் ஞானமெய்தினமையால், என் பிட்சாபாத்திரத்தை இவர் ஏந்தி என்பின் வரவேண்டுமென நான் விழைந்தேன்; எனினும் வாயிற்காப்போன் இவருக்கு அனுமதி மறுத்துவிட்டார்."

27. இதன்பின் அவர் அனுமதிக்கப்பட்டு அவைக்குள் நுழைந்தார்.

28. பிறகு, பிரசேஞ்சித் புத்தரிடம் திரும்பிக் கூறினார்: பதிசேனர் திறன் குறைந்தவர் என்றும், ஒரேயொரு கீதம் மட்டுமே அறிந்தவர் என்றும், நான் கேள்விப்பட்டிருக்கிறேன். பிறகெப்படி இவர் உயர்ஞ்ானமெய்தினார்?

29. இதற்குப் புத்தர் பதிலிறுத்தார்: "அதிகம் கற்க வேண்டிய அவசியமில்லை; ஒழுக்கமே (சீலம்) முதன்மையானது."

30. இந்தப் பதிசேனர், இந்த ஒரு கீதத்தின் உட்பொருள் ஒழுங்கை தன் உணர்வுக்குள் ஊடுருவச் செய்துகொண்டார்; அவர் தம் உடலும், நாவும், எண்ணங்களும் பூரண அமைதி எய்தின; ஏனெனில் ஒரு மனிதன் எவ்வளவுதான் அறிந்திருப்பினும், அவனுடைய அறிவு அவன் வாழ்க்கையோடு பொருந்தவில்லையாயின், அழிவை நோக்கி அவனை அழைத்துச் செல்லும் சக்திளினின்று அவனை அது விடுவிக்கவில்லையாயின், அவன் கற்றவை அனைத்தினாலும் என்னதான் பயன்?

31. பிறகு புத்தர் கூறினார்:

32. "ஒரு மனிதன் ஆயிரம் செய்யுட்பகுதிகளை (பிரிவுகளை) ஓதினாலும், தான் திரும்பிக் கூறும் வரிகளின் பொருளைப் புரிந்து கொள்ளாதவனாயிருப்பின் அவனுடைய செய்கை, நன்கு புரிந்து உச்சரிக்கப்பட்டு, கேட்டதும் எண்ணத்தைக் கட்டுப்படுத்தக்கூடிய ஒரு வரியைக் கூறுவதற்கு ஒப்பாகாது. புரிந்து கொள்ளாமல் ஆயிரம் சொற்களை ஓதுவதில் என்ன பயனிருக்கிறது? ஆனால் ஒருண்மையைப் புரிந்து கொண்டு, அதன்படி ஒழுகுவதற்காக அதைக் கேட்பது என்பதே விடுதலை காணும் வழியாகும்."

33. "ஒரு மனிதன் பல வேத நூல்களை மனப்பாடமாய் ஓதக் கூடியவனாயிருந்தும் அவற்றை விளக்க முடியாதவனாயிருப்பின் இதில் என்ன லாபம் இருக்கிறது? ஆனால் ஒழுக்க விதியின்

ஒரு வாக்கியத்தை நன்கு விளக்கி, அதன்படி நடப்பதே, உயர் ஞானம் எய்துதற்குரிய வழியாகும்."

34. இச்சொற்களைக் கேட்ட இருநூறு பிக்குகளும், அரசரும், அமைச்சர்களும் மகிழ்ச்சியில் நிரம்பினர்.

8. தம்ம நூல்களில் தவறே நேராது என நம்புவது தம்மம் அல்ல.

1. பிராமணர்கள்வேதங்கள் புனிதமானவை மட்டுமல்லாது அதிகாரபூர்வத்தைப்பொறுத்தவரை முடிவானவையென்று அறிவித்துள்ளார்கள்.

2. வேதங்கள் முடிவானவை என்று பிராமணர்கள் அறிவித்துள்ளதோடு மட்டுமல்லாமல் அவை தவறேயற்றவை என்றும் அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

3. இந்த விஷயத்தில் புத்தர் பிராமணர்களுக்கு முழு எதிர்ப்பாய் விளங்குகிறார்.

4. வேதங்கள் புனிதமானவை என்பதை அவர் மறுத்தார். வேதங்கள் கூறுவன யாவும் முடிவானவை என்பதை அவர் மறுத்தார். வேதங்கள் தவறேயற்றவை என்பதை அவர் மறுத்தார்.

5. அவர் செய்ததைப் போன்றே முடிவெடுத்த பல போதகர்கள் இருந்தனர். எப்படியோ, பின்னர் அவர்களோ, அவர்களைப் பின்பற்றியவர்களோ, மரியாதை நிமித்தமோ, பிராமணர்களின் நல்லெண்ணத்தைப் பெறவோ, அவர்களுடைய தத்துவ முறைகளுக்கு விட்டுக் கொடுத்து விட்டார்கள். இந்த விஷயத்தில் புத்தர் ஒருபோதும் அடிபணிந்து விடவில்லை.

6. த்விஜ்ஜ சுத்தத்தில், வேதங்கள் நீரற்ற பாலைவனங்கள்-பாதையற்ற பெருவனங்கள்-உண்மையில் அவைகள் பூரண அழிவுகள் என்று புத்தர் அறிவித்தார். அறிவுத் தாகமும், ஒழுக்கத் தாகமும் உடைய எந்த மனிதனும், தன் தாகத்தைத் தணித்துக் கொள்ளும் நம்பிக்கையில் வேதங்களை அணுக முடியாது.

7. வேதங்கள் தவறற்றவை என்பது பற்றிக் கூறுகையில், அவர் தவற்றவை யாதுமேயல்ல-வேதங்களுந்தான் எனக் கூறினார். அனைத்துமே பரிசீலனைக்கும் மறுபரிசீலனக்கும் உட்பட்டாக வேண்டும் என்றார் அவர்.

8. இதை அவர் காலாமர்களுக்கான தன் உரையில் தெளிவு படுத்தினார்.

9. ஒருமுறை கோசலர்களின் நாட்டு வழியே கடந்து செல்கையில், உயர்வெய்திய புத்தர், பெருவாரியான தன் சீடர்களுடன் காலாமர்கள் வாழ்ந்து வந்த கேசபுத்தம் என்னும் நகருக்கு வந்தார்.

10. அவருடைய வருகையை அறிந்த போது, காலாமர்கள், அவர் இருந்த இடத்திற்கு வந்துற்று ஓர் பக்கத்தில் அமர்ந்தனர். அவ்வாறு அமர்ந்த கேசபுத்த காலாமர்கள் உயர்வெய்திய புத்தரிடம் இவ்வாறு பேசினர்:

11. "இங்கே கேசபுத்தத்துக்கு வருகிற சில முனிவர்களும் துறவிகளும் தங்கள் சொந்தக் கொள்கைகளை விவரிக்கிறார்கள்-உயர்வாய்க் கூறுகிறார்கள்-ஆனால் மற்றவர்களின் கொள்கைகளைத் தூற்றுகிறார்கள்- சிதறிடிக்கிறார்கள், ஏசுகிறார்கள், எதிர்க்கிறார்கள். கேசபுத்தத்துக்கு வரும் மற்ற முனிவர்களும், துறவிகளும் கூட தங்கள் சொந்த நம்பிக்கைகளை விவரிக்கிறார்கள், பெரிதுபடுத்துகிறார்கள்-ஆனால் மற்றவர்களுடைய நம்பிக்கைகளை அழிக்கிறார்கள், ஒடுக்குகிறார்கள் இகழ்கிறார்கள்."

12. "எனவே, ஐயன்மீர்! இந்த போற்றுதலுக்குரிய முனிவர்களில் யார் பேசுவது உண்மை யார் பேசுவது பொய்மையென நிச்சயிக்க முடியாமலும் ஐயப்பாட்டிலும் இருக்கிறோம் நாங்கள்."

13. "காலாமர்களே! தாங்கள் நிச்சயிக்க முடியாமலும், ஐயப்படவும் காரணங்கள் நன்றாகவே உள்ளன" என்றார் உயர் வெய்திய புத்தர். "உண்மையில் பொருத்தமான சூழலில் தான் தங்களுக்குள் நிச்சயமற்ற தன்மையும், ஐயமும் எழுந்துள்ளன."

14. "ஓ! காலாமர்களே! தாங்கள் வாருங்கள்!" தொடர்ந்தார் உயர்வெய்திய புத்தர். தாங்கள் கேட்டவற்றை அப்படியே பின்பற்றாதீர்கள். புனித நூல்களில் எழுதப்பட்டுக் காணப்படுவனவற்றை அப்படியே பின்பற்றாதீர்கள். அறிவுவாதத்தின் நுடப திட்பங்களை அப்படியே பின்பற்றாதீர்கள். வெறும் காட்சித் தோற்றங்களை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்களை அப்படியே பின்பற்றாதீர்கள். ஒப்புக்கொள்ளத் தக்கதாய்த் தோன்றும் நம்பிக்கைளையும், கொள்கைகளையும் அப்படியே பின்பற்றாதீர்கள். சரியாகத் தோன்றுவதை அப்படியே பின்பற்றாதீர்கள்: உயர்ந்தோர், முனிவர் ஆகியோரின் வார்த்தைகளை அப்படியே பின்பற்றி விடாதீர்கள்.

15. "அப்படியாயின் நாங்கள் என்னதான் செய்ய வேண்டும்? எந்தப் பரிசோதனையை நாங்கள் மேற்கொள்ள வேண்டும்? காலாமர்கள் கேட்டனர்."

16. "சோதனைகள் இவையே!" உயர்வெய்திய புத்தர் பதிலுரைத்தார். "இவைகள் யாவும் நன்மை பயக்காதவை; இவைகள் யாவும் குற்றஞ்சாட்டத்தக்கவை; இவைகள் யாவும் அறிஞர்களால் கண்டிக்கப்படுபவை; இவைகள் யாவும் செய்யப் பட்டாலோ, செய்யமுனைந்தாலோ, தீயநிலைக்கோ, துன்பத்திற்கோ ஆட்படுத்துபவை' என்று நீங்கள் அறிந்திருக்கின்றீர்களா என்று உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள்."

17. "காலாமர்களே! மேலும் நீங்கள் கற்பிக்கப்படும் இக்கோட்பாடுகள் பேராசையை, வெறுப்பை, ஏமாற்றுதலை, வன்முறையை ஊக்குவிப்பனவா எனக் கேட்டுக் கொள்ளுங்கள்."

18. "இது மட்டும் போதாது காலாமர்களே! நீங்கள் மேலும் இந்தக் கோட்பாடுகள், மனிதனைத் தன் உணர்ச்சிகளுக்குக் கட்டுப்படச் செய்கின்றனவாய் இல்லையா, உயிர் வாழும் ஐந்துகளைக் கொல்லும்படி தூண்டுவனவாய் இல்லையா, கொடுக்கப்படாதவற்றை எடுக்கவும், பிறன்மனை விழையவும், பொய் புகலவம் இது போன்றவற்றைப் பிறர் செய்யவும் காரணமாவதாகவும் இல்லையா என்று சோதித்து பாருங்கள்."

19. "இறுதியாக நீங்கள் கேட்க வேண்டும்." "இவைகள் ஒருவனின் தீயநிலைக்கும் துன்பத்திற்கும் வழிவகுக்குமா என்று."

20. "இப்போது, காலாமர்களே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

21. "இவைகளெல்லாம் மனிதனின் தீயநிலைக்கு வழிவகுக்கின்றனவா? நன்னிலைக்கு வழிவகுக்கின்றனவா?"

22. "அவனுடைய தீயநிலைக்கே ஐயன்மீர்!" பதிலிறுத்தனர் காலாமர்கள்.

23. "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் காலாமர்களே! இவைகள் யாவும் நன்மை பயப்பனவா-நன்மை பயவாதனவா?"

24. "அவைகள் நன்மை பயவாதன ஐயன்மீர்!"

25. "இவைகள் யாவும் குற்றஞ்சாட்டத் தக்கவையா?"

26. "குற்றஞ்சாட்டத்தக்கவையே ஐயன்மீர்!" பதிலிறுத்தனர் காலாமர்கள்.

27. "அறிஞர்களால் கண்டிக்கப்படுபவைகளா அங்கீகரிக்கப்படுபவைகளா?"

28. "அறிஞர்களால் கண்டிக்கப்படுபவை." காலாமர்கள் பதிலிறுத்தனர்.

29. "செய்யப்பட்டாலோ, செய்முனைந்தாலோ, இவைகள் தீயநிலைக்கும் துன்பத்திற்கும் வழிவகுக்கும்."

30. "செய்யப்பட்டாலோ, செய்ய முனைந்தாலோ இவைகள் தீயநிலைக்கும் துன்பத்திற்குமே வழிவகுக்கும்."

31. "இதைக் கற்பிக்கும் 'புனித' நூலை முடிவானதென்றம் தவறற்றதென்றும் ஒப்ப முடியாதல்லவா?"

32. "ஒப்புவதற்கில்லை ஐயன்மீர்!" காலாமர்கள் கூறினர்.

33. "ஆனால் காலாமர்களே! நான் கூறியது சரியாக இதுதான். நான் கூறியதெல்லாம் "நீங்கள் கேட்பதனாலேயே அவற்றை அப்படயே பின்பற்றாதீர்கள். ஒனருவர் வழிவழியாய் அடுத்தவர்க்குரைத்ததை அப்படியே பின்பற்றாதீர்கள். அறிவு வாதத்தின் நுட்ப திட்பங்களை அப்படியே பின்பற்றாதீரகள். தர்க்கத்தின் நுட்ப திட்பங்களை அப்படியே பின்பற்றாதீர்கள்; வெறும் காட்சித் தோற்றங்களை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்களை அப்படியே பின்பற்றாதீர்கள் ஒப்புக் கொள்ளத்தக்கதாய்த் தோன்றும் நம்பிக்கைகளையும் அப்படியே பின்பற்றாதீர்கள். உயர்ந்தோர், முனிவர் ஆகியோரின் வார்த்தைகளை அப்படியே பின்பற்றாதீர்கள்."

34. "இவைகள் யாவும் நன்மை பயக்காதவை; இவைகள் யாவும் குற்றஞ்சாட்டத்தக்கவை; இவைகள் யாவும் அறிஞர்களால் கண்டிக்கப்படுபவை; இவைகள் யாவும் செய்யப்பட்டாலோ, செய்ய முனைந்தாலோ தீயநிலைக்கோ துன்பத்திற்கோ ஆட்படுத்துபவை." என்று உங்களுக்கு நீங்கள் விலக்கிவிட வேண்டும்."

35. "மிக அருமை! ஐயன்மீர்! மிக அருமை! நாங்கள் உயர்வெய்திய புத்தரான ஐயன்மீரை, அடைக்கலத்திற்கும் அறிவுரைக்கும் அடைகிறோம். ஐயன்மீர்! உயர்வெய்திய புத்தர் தாங்கள் எம்மைத் தங்களைப் பின்பற்றுபவர்களாய் ஏற்க வேண்டும்-இன்று முதலாக இறுதிவரையிலும் நீங்களே எங்கள் அடைக்கலம்."

36. இந்த விவாதத்தின் உட்பொருள் வெளிப்படையானது. நீங்கள் யாருடைய போதனையையும் அதிகாரபூர்வமானதாய் ஏற்பதற்கு முன், அது புனித நூல்களில் உள்ளதென்பதால் அதை அப்படியே பின்பற்றாதீர்கள்-அது தர்க்க நுட்பதிட்பங்களுடையதென்பதால் அப்படியே பின்பற்றாதீர்கள் - காட்சித் தோற்றங்களின் அடிப்படையைக் கருதி அப்படியே பின்பற்றாதீர்கள்-போதிக்கப்படும் நம்பிக்கைகளும் கொள்கைகளும் ஒப்புக் கொள்ளக் கூடியவையாய்த் தோன்றுவதால் அப்படியே பின்பற்றாதீர்கள்-அந்த நம்பிக்கைகளும் கொள்கைகளும் முனிவர்களுடையவை, உயர்ந்தோருடையவை என்பதற்காக அப்படியே பின்பற்றாதீர்கள்.

37. ஆனால் நாடி ஏற்பதற்குரியதாக அந்த நம்பிக்கைகளும் கொள்கைகளும் நன்மைபயவாதனவா-நன்மை பயபபனவா, குற்றஞ்சாட்டத்தக்கனவா-குற்றஞ்சாட்டத்தகாதனவா, தீயநிலைக்கு வழிநடத்துவனவா-நன்னிலைக்கு வழிநடத்துவனவா எனச் சோதியுங்கள்.

38. இந்த நிலைப்பாட்டிலேயே ஒருவன் யாருடைய போதனைகளையும் ஒப்புக் கொள்ள முடியும்.

## சத்தம்மம் என்பது யாது?

### பிரிவு1.
### சத்தம்மத்தின் பணிகள்.

1. ஒரு முறை உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில் தங்கியிருந்த காலை, கோசலர்களின் மன்னரான பிரசேஞ்சித் அவர் தங்கியிருந்த இடத்திற்கு வந்து, தன் தேரினின்றும் இறங்கி, ஆழந்த மரியாதையுடன், பணிவன்புடன் போதகரை அணுகினார்.

2. அவரை அடுத்தநாள் தன் நகருக்குள் வந்து, தன் தன்மையின் கொள்கைகளின் சிறப்புக்களை மக்களுக்கு எடுத்துக்காட்டும் நோக்கில் மக்கள் அவரை நம்பும் தகைமையில் தன்விருந்தோம்பலை ஏற்கவேண்டும் என்று அழைத்தார்.

3. ஒப்புக்கொண்ட புத்தர் அடுத்தநாள், தன் சீடர்கள் அனைவரோ ாடும் நகருக்குள் நுழைந்து, நகரின் நாற்சந்திகளைக் கடந்து, குறிக்கப்பட்ட இடத்திற்கு வந்தமர்ந்தார்.

4. உணவு முடிந்தபின், அரசரின் வேண்டுகோளக்கிணங்க, நாற்பெருஞ் சாலைகளின் நடுவே கேட்க மிகப்பலர் கூடியிருந்த காலை போதிக்கத் தொடங்கினார்,

5. அந்நேரம் அவருடைய இரு வணிகர்கள் கேட்டுக் கொண்டிருந்தனர்.

6. அவர்களில் ஒருவர் தம் கருத்தை எதிரொலித்தார்: "இது போன்ற கொள்கைகளை பொதுவில் போதிக்கும் படி செய்தமன்னரின் அறிவுதான் எத்தனை சிறந்தது! இவற்றின் செயற்பாட்டுப் பொருத்தங்கள் தான் எவ்வளவு விரிந்தவை-அவற்றின் சிறப்பம்சங்கள் தான் எவ்வளவு தேடற்குரியவை!"

7. அடுத்தவர் தம் கருத்தை இவ்வாறு பிரதிபலித்தார்: "இந்த மனிதரை இங்கழைத்துப் போதிக்கச் செய்த மன்னரின் தரப்பு எத்தனை தவறானது!"

8. "வண்டியோடு பிணைக்கப்பட்ட மாட்டைப் பின்தொடர்ந்து, இங்குமங்கும், கத்திக் கொண்டே செல்லும் கன்றுக்குட்டியைப் போல் புத்தர் அரசரைப் பின்தொடர்கிறார்." நகரை விட்டு நீங்கிய இரு வணிகர்களும், தாங்கள் தங்கியிருந்த விடுதியைச் சென்றடைந்தனர்.

9. உலகை காக்கும் நான்குவித நல்லுணர்வுகளால் பாதுகாக்கப்பட்டவரான நல்ல வணிகர் மிகச் சிறிதே மதுவருந்தி கட்டுபாடுடையவராயிருந்தார்.

10. இதற்கு மாறாக, மற்றவர் தீய உணர்வுகளால் தூண்டப்பட்டு, மென்மேலும் குடித்து, இறுதியில் தன்னிலையிழந்து உறங்கும் நிலையுற்று, விடுதிக்கருகிருந்த சாலையில் போய் வீழ்ந்தார்.

11. அதிகாலையில், அவ்விடம் விட்டுச் செல்லும் வண்டிகளின் ஓட்டுநர்கள் சாலையில் வீழ்ந்துள்ள மனிதரைப் பார்க்காமல் சென்றதால், வண்டிச் சக்கரங்களில் அகப்பட்டு அவர் இறந்தார்.

12. மற்றொரு வணிகர், தூர தேசமொன்றிற்கு வந்து, புனித குதிரையொன்று மண்டியிட்டு வணங்கியதால் தேர்ந்தெடுக்கப்பட்டு மன்னரின் வாரிசாய் ஆனார். அதன்படி அவர் அரியணை ஏற்றப்பட்டார்.

12. மற்றொரு வணிகர், தூர தேசமொன்றிற்கு வந்து, புனித குதிரையொன்று மண்டியிட்டு வணங்கியதால் தேர்ந்தெடுக்கப்பட்டு மன்னரின் வாரிசாய் ஆனார். அதன்படி அவர் அரியணை ஏற்றப்பட்டார்.

13. அதன்பின், நடந்தேறிய நிகழ்ச்சிகளின் இவ்வதிசயத் திருப்பத்தைக் கருத்தில் கொண்டு, புத்தரை, தன்னைக் காணவும் மக்களுக்குப் போதிக்கவும், வருமாறு அன்பழைப்பு விடுத்தார்.

14. அந்நிகழ்ச்சியில் உலகம் போற்றும் உத்தமராம் புத்தர் தீய-மனத்து வணிகரின் மரணத்திற்கான காரணத்தையும், அறிவுடைமையோடு சிந்தித்தவரின் வளநலத்திறகான காரணத்தையும் அறிவித்து, கீழக்கண்டவற்றையும் கூறினார்:

15. "மனமே இவையனைத்துக்கும் மூலமானது-மனமே குரு-மனமே காரணம்."

16. "மனத்தினிடை தீய எண்ணம் மருவுமாயின், வாக்கினிடை தீயனவே தோன்றும்; செயலனைத்தும் தீயனவே ஆகும். துன்பமோடு தீமை மிகச் சேரும்."

17. மனமே இவையனைத்துக்கும் மூலமானது, மனமே ஆணையிடுவது, மனமே திட்டம் தீட்டுவது, இழுப்பவனைத்தேர் தொடர்தல் போல இவைகள்தான் மனிதனவனைத் தொடரும்.

18. "மனத்தினிடை நல்ல எண்ணம் முகிழ்ப்பின், வாக்கினிடை நல்லனவே தோன்றம்; செயலனைத்தும் நல்லனவே ஆகும். நல்லின்பம் நன்னடத்தையின் விளைவாய், நல்மனிதன் அவனை நன்கு தொடரும் நிழலொன்ற பொருளைத் தொடருமாப் போல்."

19. இச் சொற்களைக் கேட்ட அரசரும், அமைச்சர்களும், எண்ணிலாப் பிறரும், மனம்மாறி புத்தரின் சீடர்களாயினர்.

## 2. உலகை நீதியரசாக்குதல்

1. மதத்தின் நோக்கம் யாது?

2. வெவ்வேறு மதங்கள் வெவ்வேறு விடைகளை அளித்துள்ளன.

3. மனிதன் கடவுளைத் தேடுமாறு செய்வதும், அவன் ஆன்மாவைக் காக்க வேண்டியதன் இன்றியமையாமையை அவனுக்குப் போதிப்பதுமே இவ்வினாவிற்கு ஒருவர் பெறக்கூடிய மிகப் பொதுவான விடையாகும்.

4. பெரும்பாலான மதங்கள் மூன்று இராஜ்யங்களைப் பற்றிப் பேசுகின்றன.

5. ஒன்று மோட்ச சாம்ராஜ்யம்-இரண்டாவது இவ்வுலக இராஜ்யம்-மூன்றாவது நரக சாம்ராஜ்யம் என அழைக்கப்படுகின்றன.

6. மோட்ச சாம்ராஜ்யம் கடவுளால் ஆளப்படுவதாகக் கூறப்படுகிறது. நரக சாம்ராஜ்யத்தில் தீமையின் ஆதிக்கம் கேள்விகேட்க யாருமற்றுக் கொடிகட்டிப்பறப்பதாய் விவரிக்கப்படுகிறது. பூமியின் இராஜ்யம் விவாதத்துக்குரிய களமாகும். அது தீமையின் ஆதிக்கத்திலும் இல்லை. அதே நேரத்தில் கடவுளின் ஆளுகையில் அதனை வந்து அடைந்து விடவில்லை. ஓர் நாள் அவ்வாறு ஆகலாம் என நம்பப்படுகிறத.

7. சில மதங்களில், மோட்ச சாம்ராஜ்யம் கடவுளால் நேரடியாக ஆளப்படுவதால் ஐயமின்றி, நீதி நிலவும் இராஜ்யமாயிருப்பதாகக் கூறப்படுகிறது.

8. மற்ற மதங்களில் மோட்ச சாம்ராஜ்யம் பூமியில் இல்லை, அது சொர்க்கத்திற்கு மறு பெயர்.கடவுளையும் அவர்தம் தீர்க்க தரிசியையும் நம்பும் ஒருவனால் அதை அடைய முடியும். அவன் சொர்க்கத்தை அடைந்ததும் வாழ்க்கையின் புலனின்பங்கள் யாவும் விசுவாசமுள்ள அனைவரும் அடையதக்க இடத்தில் வைக்கப்பட்டிருக்கும்.

9. அனைத்து மதங்களும், இந்த சொக்க சாம்ராஜ்யத்தை அடைவதே மனிதனின் இலட்சியம் என்றும், அதை எப்படி அடைவது என்பதே அனைத்தின் முடிவும் என்றும் போதிக்கின்றன.

10. "சமயத்தின் நோக்கமென்ன?" என்னும் வினாவிற்குப் புத்தரின் விடை மிகவும் வித்தியாசமானதாயுள்ளது.

11. மக்களிடம் அவர் கற்பனையான சொர்க்கத்தை அடைவது அவர்களின் இலட்சியமாக இருக்கவேண்டும் என்று கூறவில்லை. நீதியின் அரசாட்சி நிலவுலகிலேயே இருக்கின்றதெனவும், அதை மனிதன் நீதியான நடத்தையாலேயே அடைய முடியுமென்றும் கூறினார்.

12. மக்களிடம் அவர்களின் துன்பத்தை நீக்கிக் கொள்ள ஒவ்வொருவரும் பிறருடனான தன் நடத்தையில் நீதியுடையவராய் இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டுமென்றும் அதனால் இப்புவியை நீதியின் அரசாட்சியாய் ஆக்க வேண்டுமென்றும் கூறியதே அவர் செய்ததாகும்.

13. இதுதான் அவருடைய சமயத்தைப் பிற மதங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதாகும்.

14. அவருடைய சமயம்-பஞ்சசீலம், அஷ்டாங்க மார்க்கம், பாரமிதாங்கள் ஆகியவற்றையே வலியுறுத்தவதாகும்.

15. ஏன்அவர் இவற்றைத் தன் சமயத்தின் அடிப்படையாக்கினார்? ஏனெனில் இவைகள் மட்டுமே மனிதனை நீதியுடையவனாக்கும் வாழ்முறைகளை உண்டாக்குபவையாயுள்ளன.

16. மனிதனின் துன்பம் மனிதன் அடுத்த மனிதனிடம் கொள்ளும் அநீதியின் விளைவேயாகும்.

17. நீதியுடமை மட்டுமே இந்த அநீதியையும் அதன் விளைவான துன்பத்தையும் நீக்க முடியும்.

18. இதனால்தான் அவர், சமயம் போதிப்பதோடு மட்டுமின்றி மனிதனின் மனத்தில் அவன் தன் நடத்தையில் நீதியுடையவனாக இருக்க வேண்டியதன் மிகுந்த இன்றியமையாமையை விதைக்கவும் வேண்டும் என்று கூறினார்.

19. நீதியுடைமையை விதைக்கும் நோக்கத்திற்காகச் சமயம், குறிப்பிட்ட வேறுசில பணிகளையும் எடுத்துக் கொண்டாக வேண்டும் என்றார் அவர்.

20. சமயம் மனிதனுக்கு எது சரியானது என்றும் சரியானது எதுவோ அதையே பின்பற்ற வேண்டும்.

21. சமயம் மனிதனுக்கு எது தவறானது என்றம் தவறானது எதுவோ அதைப் பின்பற்றவே கூடாது என்றும் போதிக்க வேண்டும்.

22. சமயத்தின் இந்த நோக்கங்களேயன்றி, அவர் மிக முக்கியமானவையாய்க் கருதிய வேறு இரு நோக்கங்களையும் வலியுறுத்தினார்.

23. முதலாவது, மனிதனின் இயல்புணர்ச்சியையும், நடத்தையையும், வழிபாடு செய்தல், சடங்குகளை நிகழ்த்துதல், யாகங்கள் புரிதல் ஆகியவற்றிலிருந்து வேறாக பயிற்றுவித்தல்.

24. தேவதஹ சுத்தத்தில் சமணத்தை விளக்குகையில், இதை புத்தர் தெளிவுபடுத்தினார்.

25. சமணத்தை நிறுவியவரான மஹாவீரர், உறுதியாயுரைத்தது யாதெனில், தனிமனிதனின் அனுபவங்கள் எதுவாயினும்-அது இன்பமாயினும் அல்லது துன்பமாயினும், அவை அனைத்தும் முற்பிறவியில் அவன் செய்தனவற்றினின்றும் வந்தனவே என்பதாகும்.

26. இது இவ்வாறிருப்பதால், பழைய வினைகள் விட்டொழித்தும், கழித்தும் விடுவதாலும், புதிய தீவினைகள் புரியாதிருத்தலாலும், எதிர்காலத்திற்கு ஒன்றும் சேர்ந்துவிடாமலிருப்பதால், தீவினைகள் அழிந்து போகும்; துன்பம் அழிந்து போவதால் உணர்ச்சிகள் அழிந்து போகும்; உணர்ச்சிகள் அழிந்து போவதால், அனைத்துத் துன்பங்களும் அற்று நீங்கிப் போகும்.

27. இதுவே சமணம் உறுதிப்படுத்தியுரைத்ததாகும்.

28. இது குறித்து புத்தர் இவ்வினாவை எழுப்பினார், "இப்போது இங்கே, தீயவினைகள் விடுவிக்கப்பட்டு நல்வினைகள் அடையப்படுகின்றன என்று நீர் அறிவீரா?"

29. "இல்லை" என்பது விடையாயிருந்தது.

30. "தீயவினைபுரிவதிலிருந்து நல்வினை புரிவதற்கு மனத்திற்குப் பயிற்சி ஏதும் இல்லையாயின், பழைய தீவினைகளைப் புரியாதிருப்பதால் என்ன பயன்? புதிய தீவினைகளைப் புரியாதிருப்பதால் என்ன பயன்?" என்று கேட்டார் புத்தர்.

31. அவருடைய அபிப்பிராயத்தில், இது மதத்திலுள்ள மிக முக்கியமான குறைபாடாகும். நல்ல நடத்தை மட்டுமே நிரந்தர தன்மைக்கு நிரந்தரமான அடிப்படையும், உத்தரவாதமுமாகும்.

32. எனவே தான் புத்தர், மனிதனின் நடத்தைக்கான பயிற்சியைப் போலவே, மனத்திற்கான பயிற்சிக்கும் முதலிடம் அளித்தார்.

33. இரண்டாவதாக அவர் மிகவும் முக்கியத்துவம் அளித்தது, தனித்திருப்பினும் கூட ஒருவன் நல்லவற்றின் பக்கம் நிற்கத் துணிவு கொள்ளல் என்பதாகும்.

34. இந்தக் கருத்தைப் புத்தர் சல்லேக-சுத்தத்தில் வலியுறுத்தியுள்ளார்.

35. அவர் கூறியது இதுதான்:

36. "பிறர் துன்புறுத்துபவராயினும், நீ துன்புறுத்தாதவனாய் இருக்கத் தீர்மானித்துக் கொண்டு, அதை நீக்க வேண்டும்."

37. "பிறர் கொல்வாராயினும், நீ கொல்லாமையோடிருக்க வேண்டும்."

38. "பிறர் திருடுபவராயினும், நீ அப்படிச் செய்யலாகாது."

39. "பிறர் சிறந்த வாழ்வு நடத்தவில்லையாயினும், நீ நடத்த வேண்டும்."

40. "பிறர் பொய் கூறினும், பழி கூறினும், இழித்துரைப்பினும் புறம் கூறினும், நீ அவ்வாறு செய்யலாகாது."

41. "பிறர், பிறர்பொருள் கவர்பவராயினும், நீ கவரலாகாது."

42. "பிறர், வெறுப்புடையவராயினும், நீ வெறுப்பவனாய் இருக்கலாகாது."

43. "பிறர் தவறான நோக்கு, தவறான நோக்கம், தவறான பேச்சு, தவறான செயல்கள், தவறான சிந்தனையுடையவராயிருப்பினும், நீ (எண்குண நல்வழியான) நல்ல நோக்கு, நல்ல நோக்கம், நல்ல உரை, நல்ல செயல், நல்ல வாழ்முறை, நல்லமுயற்சி, நல்ல கண்ணோட்டம், நல்ல சிந்தனை ஆகியவற்றையே பின்பற்ற வேண்டும்."

44. "பிறர் உண்மை பற்றியும், விடுதலை பற்றியும் தவறானக் கருத்துடையோராயிருப்பினும், நீ உண்மைபற்றியும், விடுதலை பற்றியும் சரியான கருத்துடனிருக்க வேண்டும்."

45. "பிறர் எடக்குமுடக்கானவராயிருப்பினும், நீ அவற்றிலிருநது விடுபட்டவனாயிருக்க வேண்டும்."

46. "பிறர் தற்பெருமையால், தம்மைவியப்பவராயிருப்பினும், நீ மன அடக்கமுடையவனாயிருக்க வேண்டும்."

47. "பிறர் ஐயங்களால் குழம்பியிருப்பினும், நீ அவற்றிலிருந்து விடுபட்டவனாயிருக்க வேண்டும்."

48. "பிறர், சினத்தை, கெடு நினைப்பை, பொறாமையை, பொச்சரிப்பை, கருமித்தனத்தை, பேராசையை, கபடத்தை, சூதை, மூடியமுளையை, கர்வத்தை, முத்திடும் தன்மையை, தீயநட்பை, மந்தகுணத்தை, நம்பிக்கையின்மையை, வெட்கமற்ற தன்மையை, கவனமற்றிருந்தலை, கல்லாதிருத்தலை, தளர்ந்திருத்தலை, குழமபியிருத்தலை, அறிவீனத்தை நிலைகொண்டிருப்பினும், நீ இவற்றிற்கெல்லாம் மாறாக இருத்தல் வேண்டும்."

49. "பிறர் புறவியல் வாழ்க்கையைச் சார்ந்து பற்றியும், தழுவியும், பிடிதளர்த்தலும் இருப்பினும், நீ புறயியல் அல்லாதவற்றைப் பற்றித் தழுவியவனாய் துறவைப் பின் தொடர வேண்டும்."

50. "சரியான தன்னுணர்வு நிலைகளில் விரும்பிய பயனைத் தருகிற விருப்பாற்றலை வளர்ப்பது என நான் கூறுகிறேன்-சொல்லையும், செயலையும் பற்றிக் கூறவே வேண்டியதில்லை, எனவே, சந்தா, நான் விவரித்த மேற்கண்ட அனைத்து முடிவுகளிலும் விருப்பாற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும்."

51. புத்தரால் கருதப்பட்ட சமயத்தின்நோக்கங்கள் இவையேயாகும்.

பிரிவு 2

தம்மம் சத்தம்மமாயிருக்க பிரதன்யத்தை முன்னேற்ற வேண்டும்.

1. கற்றலை அனைவருக்கும் உரித்தாக்குகையில் தம்மம் சத்தம்மம் ஆகிறது.

1. அறிவப் பெறுதல் அனைவருக்கும் உரியதாக்கப்பட இயலாது என்பது பிராமணீயக் கோட்பாடாகும். அது ஒரு சிலருக்கே உரியதாக்கப்படல் அவசியம் என்கிறது அது.

2. அறிவைப் பெறும் உரிமையை அவர்கள் பிராமணர், சத்திரியர் மற்றும் வைசியர்க்கே அனுமதித்தனர். ஆயினும், இந்த மூன்ற வகுப்புக்களின் ஆண்பாலருக்கு மட்டுமே அது.

3. பிராமண, சத்திரிய, வைசிய, என்னும் எவ்வகுப்பைச் சேர்ந்த பெண்களும்-ஆண்களோ, பெண்களோ எப்பாலராயினும் சூத்திரர்களும் அறிவைப் பெறுவதிலிருந்து தடுக்கப்பட்டிருந்தனர்-வெறும் படிப்பறிவு கூட.

4. பிராமணர்களின் இந்த அராஜகக் கோட்பாட்டுக்கு எதிராக ஓர் புரட்சி செய்தார் புத்தர்.

5. அறிவுப்பாதை அனைவருக்கும் திறக்கப்பட வேண்டும்-ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் என்று போதித்தார் அவர்.

6. பல பிராமணர்கள் அவர் கருத்தை எதிர்த்து வாதம் செய்ய முனைந்தனர். லோஹிக்கர் என்னும் பிராமணரோடு அவர் செய்த விவாதம் அவருடைய கருத்துக்களை நன்கு வெளிப்படுத்துகின்றது.

7. மேன்மைதங்கிய புத்தர் ஒருமுறை தன் அணியைச் சார்ந்த பெருவாரியான உறுப்பினர்களோடு, கோசல நாட்டு வட்டாரங்களில் பயணம் மேற்கெண்டிருந்த காலை சால மரவரிசைகளால் சூழப்பட்ட சாலவதிகா என்னும் கிராமத்திற்கு வந்திருந்தார்.

8. அந்தச சமயத்தில், உயிர்ப்புடன் திகழ்ந்த, வனத்தாலும் தானிய தனத்தாலும் பசுமை மிகுந்திருந்த சாலவதிகாவில், போசல மன்னர் பசேநதியால், அரசர்கிணையான சரியாசனத்தைத் கொடையாய் வழங்கப் பெற்றிருந்த லோஹிக்கர் என்னும் பிராமணர் வாழ்ந்து வந்தார்.

9. பிராமணர் லோஹிக்கர், ஒரு சாமணரோ, பிராமணரோ, தாம் அறிவுற்ற பின், அதைப் பெண்களுக்கோ, சூச்திரருக்கோ வழங்கிவிடக் கூடாது என்னும் அபிப்பிராயமுடையவராயிருந்தார்.

10. பிறகு, பிராமணர் லோஹிக்கர், உயர்வெய்திய புத்தர் சாலவதிகாவில் தங்கியிருப்பதைக் கேள்வியுற்றார்.

11. இதைக் கேள்வியுற்ற அவர் பேசிகர் என்னும் நாவிதரிடம் கூறினார்: "நல்ல பேசிகரே! இப்போது நீங்கள் சாமண கோதமர் தங்கியிருக்குமிடத்திற்குச் சென்று சேர்ந்தபின், அவருடைய உடல் நலமின்மையும், நோயும் தீர்ந்துவிட்டதா, அவர் நலமும் ஆற்றலும், நிலையும் நன்குள்ளதா என என் பெயரால் நலம் விசாரித்துவிட்டு, அவரிடம் கூறுங்கள்: "போற்றுதலுக்குரிய கவுதமரும், அவர் அணியைச் சார்ந்த சகோதரர்களும், தம் நாளைய உணவைப் பிராமணர் லோஹக்கரிடம் ஏற்றுக்கொள்ள முடியுமா?"

12. "அப்படியே ஆகட்டும் ஐயன்மீர்!" என்றார் நாவிதர்.

13. பிராமணர் லோஹக்கரின் வார்த்தைகளை அப்படியே ஏற்று, கட்டளைக்கிணங்கச் செயல்பட்டார் அவர். மேன்மை தங்கிய புத்தர் அவருடைய வேண்டுகோளை மவுனமாய் ஏற்றார்.

14. அடுத்த நாள் அதிகாலை, மேன்மை தங்கிய புத்தர் துவராடை பூண்டு, பிட்சாபாத்திரத்தை ஏந்தித் தன் அணியைச் சார்ந்த சோதர்களுடன் சாலவதிகாக்குப் புறப்பட்டார்.

15. லோஹக்கரால் மேன்மைதங்கிய புத்தரை அழைத்துவர அனுப்பப்பட்ட நாவிதர் பேசிகர், மேன்மை தங்கிய புத்தருக்குப் பின் அடிமேல் அடிவைத்து நடந்தார். வழியில் அவர், மேன்மை தங்கிய புத்தரிடம், ஒரு சாமணரோ, பிராமணரோ எந்த அறிவையும் கல்வியையும் பெண்களுக்கும், சூத்திரர்களுக்கும் அளிக்கவே கூடாதென்னும் மோசமான அபிப்பிராயமுடையவராயிருக்கிறார் பிராமணர் லோஹிக்கர் என்றார்.

16. "அது அப்படித்தானிருக்கும்-பேசிகரே-அது அப்படித்தான் இருக்கும்" என்று பதிலிறுத்தார் உயர்வெய்திய புத்தர்.

17. மேன்மை தங்கிய புத்தர் பிராமணர் லோஹக்கரின் இருப்பிடத்திற்குச் சென்று, ஆங்கு தமக்காக இருத்தப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

18. அதன்பின் அந்தப் பிராமணர் லோஹக்கர் புத்தருக்கும், அவர் தலைமையிலான அணியினர் அனைவர்க்கும் மென்மையும் வன்மையும் ஆன இனிய உணவை, அவர்கள் போதும் போதும் எனும் அளவிற்குத் தம் கரங்களாலேயே பரிமாறி உபசரித்தார்.

19. மேன்மை தங்கிய புத்தர் தம் உணவை உண்டு முடித்து, தம் பிட்சாபாத்திரத்தையும் கரங்களையும் கழுவியபின், பிராமணர் லோஹக்கர் ஓர் தாழ்வான ஆசனத்தைத் தருவித்து அவருக்கு அருகே அதில் அமர்ந்தார்.

20. அவ்வாறு அமர்ந்த அவரிடம், மேன்மை தங்கிய புத்தர் கூறினார்: "லோஹக்கரே! தாங்கள் சாமணரோ, பிராமணரோ அறிவை அல்லது கல்வியை பெண்களுக்கும் சூத்திரருக்கும் அளிக்கக் கூடாது என்னும் அபிப்ராயம் உடையவராயிருப்பதாகக் கூறுகிறார்களே-அது உண்மையா?"

21. "ஆம்! அது அப்படித்தான் கவுதமரே!"-பதிலிறுத்தார் லோஹிக்கர்.

22. "இப்போது லோஹிக்கரே! தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்? தாங்கள் சாலவதிகாவில் நிலைபெற்றிருக்கிறீர்கள் அல்லவா?" "ஆம்! அப்படித்தான் கவுதமரே!"

23. "ஒருவேளை, லோஹிக்கரே, ஒருவன் இப்படிப் பேசுவதாக வைத்துக் கொள்வோம்: 'பிராமணர் லோஹிக்கருக்கு சாலவதிகாவில் ஆட்சியதிகாரம் இருக்கிறது. சாலவதிகாவில் விளைவன யாவும், வருவாய் யாவும் அவரொருவரே அனுபவிக்கட்டும்-வேறெருவரும் ஒரு சிறிதும் பெறவிடாமல்!' தங்களைச் சார்ந்திருந்து வாழும் மனிதரைப் பற்றி அவ்வாறு கூறுபவன் ஆபத்தை விளைவிப்பவனா இல்லையா? "

24. "அவன் ஆபத்தை விளைவிப்பவனேயாவான், கவுதமரே."

25. "இந்த ஆபத்தை விளவிப்பவன், அவர்கள் நலத்தின் மீது அனுதாபமுள்ளவன் என்று கருதப்படுவானா?"

26. "இல்லை, அவன் அவர்களின் நலனைக் கருதுபவன் ஆகான் கவுதமரே!" லோஹிக்கர் பதிலிறுத்தார்.

27. "அவர்களின் நலனைக் கருதாத அவனுடைய இதயம் அவர்கள் பால் அன்பில் நிலைப்பதா? அல்லது பகைமையில் நிலைப்பதா?"

28. "பகைமையில் தான் கவுதமரே."

29. "ஒருவனின் இதயம் பகைமையோடு நிலைகொண்டிருப்பின் அவ்வாறாக்கிய கோட்பாடு நல்லதா? தீயதா?"

30. "அது தீய கோட்பாடுதான் கவுதமரே."

31. "இப்போது லோஹிக்கரே! தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்? கோசல மன்னரான பசேநதி காசியையும், கோசலத்தையும் உடைமையாயுடையவராய் உள்ளாரல்லவா?"

32. "ஆம்! அப்படித்தான் கவுதமரே!"

33. "ஒருவேளை, லோஹிக்கரே, ஒருவன் இப்படிப் பேசுவதாக வைத்துக் கொள்வோம்; 'கோசல மன்னரான பசேநதி காசியையும், கோசலத்தையும் உடைமையுடையவராய் உள்ளார், காசியிலும், கோசலத்திலும் விளைவன யாவும், வருவாய்யாவும் அவரொருவரே அனுபவிக்கட்டும்-வேறெவரும் ஒரு சிறிதும் பெறவிடாமல்! கோசல மன்னரான பசேநதியைச் சார்ந்திருந்து வாழும் தாங்களும் மற்றவர்களுமான மனிதரைப் பற்றி அவ்வாறு கூறுபவன் ஆபத்தை விளைவிப்பவான இல்லையா.?"

34. "அவன் ஆபத்தை விளைவிப்பவனேயாவான் கவுதமரே."

35. "இந்த ஆபத்தை விளைவிப்பவன், அவர்கள் நல்த்தின் மீது அனுதாபமுள்ளவன் என்று கருதப்படுவான?"

36. "இல்லை அவன் அவர்களின் நலனைக் கருதுபவன் ஆகான் கவுதமரே! லோஹிக்கர் பதிலிறுத்தார்."

37. "அவர்களின் நலனைக் கருதாத அவனுடைய இதயம் அவர்கள்பால் அன்பில் நிலைப்பதா? அல்லது பகைமையில் நிலைப்பதா?"

38. "பகமையில் தான் கவுதமரே."

39. "ஒருவனின் இதயம் பகைமையோடு நிலைகொண்டிருப்பின் அவ்வாறாக்கிய கோட்பாடு. நல்லதா? தீயதா?"

40. "அது தீய கோட்பாடுதான் கவுதமரே."

41. "அப்படியாயின் லோஹிக்கரே! சாலவதிகாவில் பணியில் இருக்கும் தாங்கள், யாருக்கும் ஒரு சிறிதும் அளிக்காமல், தாங்களே விளைவன யாவற்றையும், வருவாயையும் அனுபவிக்க வேண்டுமெனக் கூறுபவனும்; கோசல மன்னரான பசேநதி, காசியையும் கோசலத்தையும் ஆளும் ஆதிக்கம் பெற்றிருக்கின்றாரெனவே, யாருக்கும் ஒரு சிறிதும் அளிக்காமல் அவரே, விளைவன யாவற்றையும், வருவாயையும் அனுபவிக்க வேண்டுமெனக் கூறுபவனும், உங்களைச் சார்ந்திருப்பவர்களுக்கும், அரசரைச் சார்ந்திருந்து வாழும் உங்களுக்கும் பிறருக்கும் ஆபத்தை விளைவிக்கிறவனாகிறான் என்று தாங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள். இவ்வாறாக அடுத்தவர்க்கு ஆபத்தை விளைவிக்கிறவர்கள் அனுதாபமற்றவர்களாயும், தம் இதயங்கள் பகைமையில் நிலைகொண்டவர்களாயுமே உள்ளார்கள். இவ்வாறு ஒருவனின் இதயம் பகைமையில் நிலைகொள்ளச் செய்கிற கோட்பாடு தீமையான கோட்பாடேயாகும்."

42. "லோஹிக்கரே! எவனொருவன், ஒரு சாமணரோ, பிராமணரோ தம் அறிவையும் கல்வியையும், பெண்களுக்கும், சூத்திரர்களுக்கும் அளிக்கக் கூடாதெனக் கூறுகிறானோ அவன் இவ்வாறானவனே."

43. "எவனொருவன் இவ்வாறு கூறுபவனோ, அவன் அடுத்தவர் தம் அறிவு வளர்ச்சிப் பாதையில் தடையுண்டாக்குபவனாயும், அவர்கள் நலனில் அனுதாபமற்றவனாயுமே இருப்பான்."

44. "அவாகளின் நலனில அனுதாபமற்றிருப்பதால், அவனுடைய இதயம் பகைமையில் நிலைப்பட்டதாகிவிடுகிறது; எப்போது ஒருவனின் இதயம் பகைமையில் நிலைப்பட்டு விடுகிறதோ, அவனை அவ்வாறாக்கிய கோட்பாடு தீமையான கோட்பாடு."

## 2. வெறும் படிப்பு போதுமானதன்று

அது பகட்டு நூலறிவிற்கு வழி வகுத்துவிடும் என்ற போதிக்கும் போது தம்மம் சத்தம்மம் ஆகிறது.

1. ஒரு முறை புத்தர் கவுசாம்பி நாட்டில் தங்கியிருந்த காலை 'இனிய ஓசை' என்றழைக்கப்பட்ட ஓர் குறிப்பிட்ட விஹாரில் தங்கிக் கூடியிருந்த மக்களுக்குப் போதிக்கையில் ஆங்குக் குறிப்பிட்ட பிரம்மச்சாரி ஒருவர் இருந்தார்.

2. அந்தப் பிரம்மச்சாரி தான் புனித நூல்களில் நிகரில்லாப் புலமையுடையவனென்றும், வாதங்களில் தமக்கிணையானவர் ஒருவரையும் தம்மால் காணமுடியவில்லையென்றும், கருதி, தான் போகுமிடமெல்லாம் (பகலிலும் கூட) ஒரு விளக்கை ஏந்திச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

3. ஒரு நாள் ஒரு குறிப்பிட்ட நகரில், ஒரு கடைவீதியில் அவரை அப்படிக் கண்ட ஒரு மனிதர், அவருடைய இந்த விசித்திர நடத்தைக்கான காரணத்தை வினவியதற்கு, அவர் பதிலிறுத்தார்.

4. "உலகம் மிகவும் இருளாயிருக்கிறது; மனிதர்கள் மிகவும் மயங்கியிருக்கிறார்கள்; என்னால் முடிந்தவரை ஒளியூட்டவே இந்த விளக்கை ஏந்திச் செல்கிறேன்."

5. இதைக் கண்ட புத்தர் உடனே அந்த பிரம்மச்சாரியிடம் வினவினார்: "என்ன இது! இந்த விளக்கோடு நீங்கள் தேடுவது எதை?"

6. பிரம்மச்சாரி பதிலிறுத்தார்: "அனைத்து மக்களும் அறியாமையாலும் இருளாலம் மிகவும் மூடுண்டு கிடக்கிறார்களென்பதால், அவர்களுக்கு ஒளியூட்டவே இதை ஏந்திச் செல்கிறேன்."

7. பிறகு உயர்வெய்திய புத்தர் மீண்டும் அவரை வினவினார்: "தாங்கள் புனித நூல்களுக்கிடையே விளங்கும் நான்கு சாத்திரங்களிலும் (வித்யா)-இலக்கிய சாத்திரங்களிலும், போர்க்கலை சாத்திரங்களிலும் பரிச்சயம் அடைகிற அளவுக்கு மிகவும் கற்றவரா?"

8. இவைகளிலெல்லாம் தமக்குப் பரிச்சயமில்லை என்று ஒப்புக் கொள்கிற நிலைக்கு அந்த பிரம்மச்சாரி தள்ளப்பட்டவுடன், அவர் தன் விளக்கத்தைத் தூர எறிந்தார்- மேலும் இந்த வார்த்தைகளை உரைத்தார் புத்தர்.

9. "ஒரு மனிதன், கற்றவனோ-கல்லாதவனோ, தன்னை மிக உயர்வாய்க் கருதிக் கொண்டு அடுத்த மனிதர்களை இகழ்வானேயாகில், அவன் கையில் விளக்கேந்தும குருடனுக்கு ஒப்பானவன்-தானே குருடாயிருந்து கொண்டு அடுத்தவருக்கு ஒளியூட்ட முனைபவன்."

3. தேவையானது பிரதன்யமே என்று போதிக்கும் போது தம்மம் சத்தம்மமாய் இருக்கிறது.

1. பிராமணர்கள் 'வித்யா'வை (அறிதல், ஓதுதல்) தன்னளவில் நிறைவான மதிப்புடையது எனக் கருதுகிறார்கள். வெறும் ஓதுதலையும், அறிதலையும் உடையவனாதலே ஒரு

மனிதனைப் போற்றுதலுக்குரியவனாக்கிவிடும்- அவன் ஒழுக்கமுடையவனாயினும் சரி இல்லாதவனாயினும் சரி என்கிறார்கள்.

2. உண்மையில் அவர்கள், அரசனொருவன் தன் நாட்டில் மட்டுமே மதிக்கப்படுகிறான்- ஆனால் கற்றவனோ உலகெங்கும் மதிக்கப்படுகிறான் என்கிறார்கள்-இதன் மூலம் கற்றவன் மன்னனைவிட உயர்ந்தவன் என்று கருத்தறிவிக்கிறார்கள்.

3. புத்தர் வித்யாயையும் பிரதன்யத்தையும் வேறுபடுத்தினார்-அதாவது அறிதலையும், உய்த்தறிதலையும்.

4. பிராமணர்கள் கூட பிரதன்யத்தையும் வித்யாயும் வேறுபடுத்தியிருக்கிறார்களே என்று கூறப்படலாம்.

5. அது உண்மையாயிருக்கலாம். ஆனால் புத்தரின் பிரதன்யத்திற்கும், பிராமணர்களின் பிரதன்யத்திற்கும் மிகப்பெரிய வேறுபாடுண்டு.

6. அங்குத்தர நிகாயத்தில் அறிவிக்கப்பட்டுள்ள உரையில் இந்த வேறுபாடு புத்தரால் நன்கு வெளிப்படுத்தப்பட்டது.

7. ஒரு குறிப்பிட்ட வேளையில் மேன்மைதங்கிய புத்தர் ராஜகிருஹத்திற்கு அருகே அணில்கள் உண்டு மகிழும் மூங்கில் தோப்பில் தங்கியிருந்தார்.

8. அந்த நேரத்தில மகத நாட்டு பெரிய அதிகாரியாயிருந்த பிராமணர் வஸ்ஸகரர் என்பவர் மேன்மைதங்கிய புத்தரைச் சந்திக்க வந்து, அவரைக் கனிவுடன் வணங்கி, வாழ்த்துக்களையும், விநயத்தையும் பரிமாறிக் கொண்டபின் ஒருபுறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்தபின், பிராமணர் வஸ்ஸகரர் மேன்மை தங்கிய புத்தரிடம் இவ்வாறுரைத்தார்.

9. "குரு கோதமரே! பிராமணர்களாகிய நாங்கள், ஒரு மனிதன் நான்கு தன்மைகளுடையவனாயிருப்பின், அவனைப் பேரறிவாளன், மாமனிதன் என்று அறிவிக்கிறோம். அந்த நான்கு தன்மைகய் யாவை?"

10. "குரு கோதமரே! இங்கே அவன் கற்றறிந்தவனாயிருப்பான், தான் கேட்பன யாவற்றின் பொருளையும் அது உச்சரிக்கப்பட்ட மாத்திரத்திலேயே அவன் புரிந்து கொண்டு கூறுவான்: "அந்தக் கூற்றின் பொருள் இதுவே!" மேலும், அவனுக்கு நல்ல நினைவாற்றல் உண்டு- முன்னெப்போதோ செய்யப்பட்ட ஒன்றையோ, சொல்லப்பட்ட ஒன்றையோ நிவைில் கொண்டு அவனால் மீண்டும் கூறமுடியும்."

11. "மறுபடியும், இல்லறத்தானின் காரியங்களில் அவன் தேர்ந்தவனாகவும், ஊக்கமுடையவனாகவும், அதன் வழி செய்யத்தக்கனவற்றையும், ஒழுங்குபடுத்தப்பட வேண்டியவற்றையும் ஆய்ந்தறியத் தக்கவனாகவும், இயன்றவனாகவும் இருப்பான்."

12. "இப்போது, குரு கோதமரே! இந்தத் தன்மைகளை உடையவனாயிருப்பவன், நாங்கள் பேரறிவாளன், மாமனிதன் என்று அறவிக்கிறோம். இப்போது, இதற்காக, மாண்புமிகு கோதமர் என்னைப் போற்றற்குரியவன் என எண்ணினால் போற்றலாம்-தூற்றற்குரியவன் என எண்ணினால் தூற்றலாம்."

13. "நல்லது, பிராமணரே! நான் தங்களைப் போற்றவுமில்லை-தூற்றவுமில்லை. என் வரையில் நான், தாங்கள் விவரித்தவற்றிற்கு மிகவும் மாறுபட்ட நான்கு தன்மைகள் உடையவனாய் இருக்கும் ஒருவனையே பேரறிவாளன் என அறிவிப்பேன்."

14. "ஈண்டு, பிராமணரே! மக்கள் பலருக்கு நலன்புரிபவரும், அம்மக்கள் பலருக்கு இன்பம் பயப்பவரும் ஆன ஒரு மனிதர் இருக்கிறார். அவரால் அம்மக்கள் பலர் எவ்வழி ஏற்றற்குரிய நல்வழியோ- எவ்வழி பயன்மிகு இயல்புடைய வழியோ-அவ்வாறான ஆரிய வழிமுறையில் நிலைக்கிறார்கள்."

15. எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்த அவர் விரும்புகிறாரோ-அவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்கு அவர் பொருத்திக் கொள்வா; எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்த அவர் விருமபவில்லையோ-அவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்கு அவர் பொருத்திக் கொள்வதில்லை.

16. "எவற்றை விழைய அவர் விரும்புகிறாரோ-அவற்றை விழைகிறார் விழைய விரும்பாதனவற்றை விடுகிறார். ஆக அவர் சிந்தனாவழியில் தன் மனத்தினை ஆள்பவராக உள்ளார்."

17. எக்கடினமும் இன்றி, எத்தொல்லையுமின்றி, விழைந்தவாறே உயர்நிலை எண்ணஞ் சார்ந்த (இவ்வாழ்விலேயே எய்தி அனுபவித்தற்குரிய பேரின்பங்களான)-நால்வகை ஆழ்சிந்தனைகளை அடையத்தக்கவராவார் அவர்.

18. "இவ்வாழ்விலேயே அசவங்களை (விலங்குகள்) அழிப்பதன் மூலமும், தனக்குத்தானே அவற்றை முழுமையாய் உள்ளடக்கி உணர்தல் மூலமும் அவர் தன் மனத்தின் விடுதலையை அதாவது அறிவின் வழிப்பட்ட விடுதலையை உணர்ந்து-எய்தி அதை அனுபவித்து வாழ்கிறார்."

19. "இல்லை பிராமணரே! நான் தங்களை ஈண்டு போற்றவும் இல்லை, தூற்றவும் இல்லை. ஆனால் இந்த நான்குவித குணங்களை உடையவராயிருக்கும் மனிதரை உயர்பேரறிவு எய்திய ஒருவரென்றம், உன்னதமான மனிதரென்றம் நான் அறிவிக்கிறேன்."

20. "குரு கோதமரே! இது ஆச்சரியமானது! இது அற்புதமானது! இது எத்துனை அருமையாய் மதிப்பிற்குரிய கோதமரால் உரைக்கப்பட்டது."

21. "மதிப்பிற்குரிய கோதமரே இந்த நான்குவித குணங்களையும் உடையவராயுள்ளார் என எனக்கு நானே உணர்கிறேன். உண்மையில் மதிப்பிற்குரிய கோதமர் பல்வேறு மக்களின்

நலத்திற்கும், பல்வேறு மக்களின் மகிழ்ச்சிக்கும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவராயுள்ளார். அவராலேயே 'அரிய முறைில் பல்வேறு மக்கள் நிலைப்படுத்தப்பட்டுள்ளார்கள். சுருங்கக் கூறினால் எது அழகுடைய முறையோ, எது பயனுள்ள முறையோ அம்முறை வாழ்வில்."

22. "உண்மையில், மதிப்பிற்குரிய கோதமரே, ஒருவர் எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்திக் கொள்ள விரும்புகிறாரோ, அந்தச் சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்திக் கொள்கிறாரோ, ...நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் சிந்தனை வழியில் மனத்தின் தலைவரேயாவார்."

23. "நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் நால்வித எண்ணங்களைத் தம் விருப்பினால் எய்தக் கூடிய ஒருவராய் உள்ளார்....நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் அசவங்களை அழிப்பதன் மூலம்...மனத்தின் விடுதலையை உணர்பவராய், உயர்பேரறிவை எய்துபவராய்...அந்த எய்துதல் என்றம் ஆங்கு நிலைக்கத்தக்க நிலையில் உள்ளவராய் உள்ளார்."

24. ஈண்டு, புத்தரின் கருத்துப்படியான பிரன்யாவிற்கும், பிராமணர்களின கருத்துப்படியான பிரதன்யாவிற்கும் உள்ள வேறுபாடு தெளிவான கூற்றுகளில் உரைக்கப்பட்டுள்ளது.

25. பிரதன்யா, வித்யாவைவிட முக்கியமானதெனப் புத்தர் கருதியது ஏன் என்னம் அவர் கருத்து ஈண்டு நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

3. தேவையானது பிரதன்யமே என்று போதிக்கும் போது தம்மம் சத்தம்மமாய் இருக்கிறது.

1. பிராமணர்கள் 'வித்யா'வை (அறிதல், ஓதுதல்) தன்னளவில் நிறைவான மதிப்புடையது எனக் கருதுகிறார்கள். வெறும் ஓதுதலையும், அறிதலையும் உடையவனாதலே ஒரு மனிதனைப் போற்றுதலுக்குரியவனாக்கிவிடும்- அவன் ஒழுக்கமுடையவனாயினும் சரி இல்லாதவனாயினும் சரி என்கிறார்கள்.

2. உண்மையில் அவர்கள், அரசனொருவன் தன் நாட்டில் மட்டுமே மதிக்கப்படுகிறான்- ஆனால் கற்றவனோ உலகெங்கும் மதிக்கப்படுகிறான் என்கிறார்கள்-இதன் மூலம் கற்றவன் மன்னனைவிட உயர்ந்தவன் என்று கருத்தறிவிக்கிறார்கள்.

3. புத்தர் வித்யாயையும் பிரதன்யத்தையும் வேறுபடுத்தினார்-அதாவது அறிதலையும், உய்த்தறிதலையும்.

4. பிராமணர்கள் கூட பிரதன்யத்தையும் வித்யாயும் வேறுபடுத்தியிருக்கிறார்களே என்று கூறப்படலாம்.

5. அது உண்மையாயிருக்கலாம். ஆனால் புத்தரின் பிரதன்யத்திற்கும், பிராமணர்களின் பிரதன்யத்திற்கும் மிகப்பெரிய வேறுபாடுண்டு.

6. அங்குத்தர நிகாயத்தில் அறிவிக்கப்பட்டுள்ள உரையில் இந்த வேறுபாடு புத்தரால் நன்கு வெளிப்படுத்தப்பட்டது.

7. ஒரு குறிப்பிட்ட வேளையில் மேன்மைதங்கிய புத்தர் ராஜகிருஹத்திற்கு அருகே அணில்கள் உண்டு மகிழும் மூங்கில் தோப்பில் தங்கியிருந்தார்.

8. அந்த நேரத்தில மகத நாட்டு பெரிய அதிகாரியாயிருந்த பிராமணர் வஸ்ஸகரர் என்பவர் மேன்மைதங்கிய புத்தரைச் சந்திக்க வந்து, அவரைக் கனிவுடன் வணங்கி, வாழ்த்துக்களையும், விநயத்தையும் பரிமாறிக் கொண்டபின் ஒருபுறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்தபின், பிராமணர் வஸ்ஸகரர் மேன்மை தங்கிய புத்தரிடம் இவ்வாறுரைத்தார்.

9. "குரு கோதமரே! பிராமணர்களாகிய நாங்கள், ஒரு மனிதன் நான்கு தன்மைகளுடையவனாயிருப்பின், அவனைப் பேரறிவாளன், மாமனிதன் என்று அறிவிக்கிறோம். அந்த நான்கு தன்மைகய் யாவை?"

10. "குரு கோதமரே! இங்கே அவன் கற்றறிந்தவனாயிருப்பான், தான் கேட்பன யாவற்றின் பொருளையும் அது உச்சரிக்கப்பட்ட மாத்திரத்திலேயே அவன் புரிந்து கொண்டு கூறுவான்: "அந்தக் கூற்றின் பொருள் இதுவே!" மேலும், அவனுக்கு நல்ல நினைவாற்றல் உண்டு-முன்னெப்போதோ செய்யப்பட்ட ஒன்றையோ, சொல்லப்பட்ட ஒன்றையோ நிவைில் கொண்டு அவனால் மீண்டும் கூறமுடியும்."

11. "மறுபடியும், இல்லறத்தானின் காரியங்களில் அவன் தேர்ந்தவனாகவும், ஊக்கமுடையவனாகவும், அதன் வழி செய்யத்தக்கனவற்றையும், ஒழுங்குபடுத்தப்பட வேண்டியவற்றையும் ஆய்ந்தறியத் தக்கவனாகவும், இயன்றவனாகவும் இருப்பான்."

12. "இப்போது, குரு கோதமரே! இந்தத் தன்மைகளை உடையவனாயிருப்பவன், நாங்கள் பேரறிவாளன், மாமனிதன் என்று அறவிக்கிறோம். இப்போது, இதற்காக, மாண்புமிகு கோதமர் என்னைப் போற்றற்குரியவன் என எண்ணினால் போற்றலாம்-தூற்றற்குரியவன் என எண்ணினால் தூற்றலாம்."

13. "நல்லது, பிராமணரே! நான் தங்களைப் போற்றவுமில்லை-தூற்றவுமில்லை. என் வரையில் நான், தாங்கள் விவரித்தவற்றிற்கு மிகவும் மாறுபட்ட நான்கு தன்மைகள் உடையவனாய் இருக்கும் ஒருவனையே பேரறிவாளன் என அறிவிப்பேன்."

14. "ஈண்டு, பிராமணரே! மக்கள் பலருக்கு நலன்புரிபவரும், அம்மக்கள் பலருக்கு இன்பம் பயப்பவரும் ஆன ஒரு மனிதர் இருக்கிறார். அவரால் அம்மக்கள் பலர் எவ்வழி ஏற்றற்குரிய

நல்வழியோ- எவ்வழி பயன்மிகு இயல்புடைய வழியோ-அவ்வாறான ஆரிய வழிமுறையில் நிலைக்கிறார்கள்."

15. எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்த அவர் விரும்புகிறாரோ-அவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்கு அவர் பொருத்திக் கொள்வா; எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்த அவர் விருமபவில்லையோ-அவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்கு அவர் பொருத்திக் கொள்வதில்லை.

16. "எவற்றை விழைய அவர் விரும்புகிறாரோ-அவற்றை விழைகிறார் விழைய விரும்பாதனவற்றை விடுகிறார். ஆக அவர் சிந்தனாவழியில் தன் மனத்தினை ஆள்பவராக உள்ளார்."

17. எக்கடினமும் இன்றி, எத்தொல்லையுமின்றி, விழைந்தவாறே உயர்நிலை எண்ணஞ் சார்ந்த (இவ்வாழ்விலேயே எய்தி அனுபவித்தற்குரிய பேரின்பங்களான)-நால்வகை ஆழ்சிந்தனைகளை அடையத்தக்கவராவார் அவர்.

18. "இவ்வாழ்விலேயே அசவங்களை (விலங்குகள்) அழிப்பதன் மூலமும், தனக்குத்தானே அவற்றை முழுமையாய் உள்ளடக்கி உணர்தல் மூலமும் அவர் தன் மனத்தின் விடுதலையை அதாவது அறிவின் வழிப்பட்ட விடுதலையை உணர்ந்து-எய்தி அதை அனுபவித்து வாழ்கிறார்."

19. "இல்லை பிராமணரே! நான் தங்களை ஈண்டு போற்றவும் இல்லை, தூற்றவும் இல்லை. ஆனால் இந்த நான்குவித குணங்களை உடையவராயிருக்கும் மனிதரை உயர்பேரறிவு எய்திய ஒருவரென்றம், உன்னதமான மனிதரென்றம் நான் அறிவிக்கிறேன்."

20. "குரு கோதமரே! இது ஆச்சரியமானது! இது அற்புதமானது! இது எத்துனை அருமையாய் மதிப்பிற்குரிய கோதமரால் உரைக்கப்பட்டது."

21. "மதிப்பிற்குரிய கோதமரே இந்த நான்குவித குணங்களையும் உடையவராயுள்ளார் என எனக்கு நானே உணர்கிறேன். உண்மையில் மதிப்பிற்குரிய கோதமர் பல்வேறு மக்களின் நலத்திற்கும், பல்வேறு மக்களின் மகிழ்ச்சிக்கும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவராயுள்ளார். அவராலேயே 'அரிய முறைில் பல்வேறு மக்கள் நிலைப்படுத்தப்பட்டுள்ளார்கள். சுருங்கக் கூறினால் எது அழகுடைய முறையோ, எது பயனுள்ள முறையோ அம்முறை வாழ்வில்."

22. "உண்மையில், மதிப்பிற்குரிய கோதமரே, ஒருவர் எவ்வகையான சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்திக் கொள்ள விரும்புகிறாரோ, அந்தச் சிந்தனை வரிசையைத் தனக்குப் பொருத்திக் கொள்கிறாரோ, ...நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் சிந்தனை வழியில் மனத்தின் தலைவரேயாவார்."

23. "நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் நால்வித எண்ணங்களைத் தம் விருப்பினால் எய்தக் கூடிய ஒருவராய் உள்ளார்....நிச்சயமாக மதிப்பிற்குரிய கோதமர் அசவங்களை அழிப்பதன் மூலம்...மனத்தின் விடுதலையை உணர்பவராய், உயர்பேரறிவை எய்துபவராய்...அந்த எய்துதல் என்றம் ஆங்கு நிலைக்கத்தக்க நிலையில் உள்ளவராய் உள்ளார்."

24. ஈண்டு, புத்தரின் கருத்துப்படியான பிரன்யாவிற்கும், பிராமணர்களின கருத்துப்படியான பிரதன்யாவிற்கும் உள்ள வேறுபாடு தெளிவான கூற்றுகளில் உரைக்கப்பட்டுள்ளது.

25. பிரதன்யா, வித்யாவைவிட முக்கியமானதெனப் புத்தர் கருதியது ஏன் என்னம் அவர் கருத்து ஈண்டு நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## பிரிவு 3

## தம்மம் சத்தம்மமாயிருக்க மைத்ரியை முன்னேற்ற வேண்டும்

1. வெறும் பிரதன்யம் போதுமானதன்று: அது சீலத்துடன் இணைந்திருக்க வேண்டுமெனப் போதிக்கும் போது தம்மம் சத்தம்மம் ஆகிறது.

1. பிரதன்யம் அவசியமானது. ஆனால் சீலமோ அத்தியாவசியமானது. சீலமற்ற பிரன்யம் அபாயகரமானது.

2. வெறும் பிரதன்யம் அபாயகரமானது.

3. பிரதன்யம் ஒரு மனிதனின் கையிலுள்ள வாளைப் போன்றது.

4. சீலமுடைய ஒரு மனிதனின் கையிலிருக்கும் போது அது ஆபத்திலிருக்கும் மனிதனைப் பாதுகாப்பதற்குப் பயன்படுத்தப்படும்.

5. ஆனால் சீலமற்ற ஒரு மனிதனின் கையிலிருக்கும் போது அது கொலைக்காகப் பயன்படுத்தப்படும்.

6. எனவேதான் சீலம் பிரதன்யத்தைவிட அதிக முக்கியமானதாயிருக்கிறது.

7. பிரதன்யம் என்பது விசாரதம்மம் அல்லது சரியான சிந்தனை. சீலம் என்பது ஆசார தம்மம்- சரியான செயற்பாடு.

8. புத்தர் சீலத்தைப் பொறுத்து ஐந்து அடிப்படைக் கொள்கைகளை விவரித்தார்.

9. ஒன்று உயிர்க்கொலை தொடர்பானது.

10. இரண்டாவது திருடுதலோடு தொடர்புடையது.

11. மூன்றாவது காமம் சார்ந்த தீயொழுக்கம் தொடர்புடையது.

12. நான்காவது பொய் கூறலோடு தொடர்புடையது.

13. ஐந்தாவது மதுவருந்தலோடு தொடர்புடையது.

14. இந்த ஒவ்வொன்றைப்பற்றியும். உயர்வெய்திய புத்தர் மக்களிடம், கொல்லக் கூடாதென-திருடக் கூடாதென பொய் கூறக் கூடாதென-காமம் சார்ந்த தீயொழுக்கத்தில் ஈடுபடக் கூடாதென-மதுவருந்தலில் ஈடுபடக் கூடாதென வழிகாட்டினார்.

15. புத்தர் ஏன் அறிவைவிட சீலத்திற்கு அதிக முக்கியத்துவமளித்தார் என்பதற்கான காரணம் மிகத் தெளிவானது.

16. அறிவின் பயன்பாடு ஒரு மனிதனின் சீலத்தைப் பொறுத்தது. சீலத்திற்குப் புறம்பான அறிவினால் பயனேதும் இல்லை. இது தான் அவர் கூறியது.

17. மற்றோரிடத்தில் அவர் கூறினார்: "இவ்வுலகில் சீலம் இணையற்றது."

18. "சீலமே தொடக்கமும் புகலிடமும் ஆகும். சீலமே நன்மையனைத்துக்கும் அன்னையாகும். எல்லா நன்னிலைகளிலும் நனி சிறந்தது அது. எனவே உங்கள் சீல்த்தைத் தூய்மைபடுத்துங்கள்."

2. பிரதன்யத்துக்கும், சீலத்துக்கும் மேலாகக் கருணை அவசியமெனப் போதிக்கும் போது தம்மம் சத்தம்மம் ஆகிறது.

1. புத்தரின் தம்மத்தின் அடிப்படை பற்றிய விஷயத்தில் சில கருத்து வேறுபாடுகள் உள்ளன.

2. அவரது சமயத்தின் அடிப்படையாக பிரதன்யம் மட்டுமே உள்ளதா? கருணை மட்டுமே அவருடைய சமயத்தின் அடிப்படையாக உள்ளதா?

3. இந்தக் கருத்து வேறுபாடு புத்தரைப் பின்பற்றுபவர்களை இருபிரிவினராகப் பிரித்துவிட்டது. ஒரு பிரிவு புத்தருடைய சமயத்தின் அடிப்படை பிரதன்யம் மட்டுமே எனக் கருதுகிறது. மற்றொரு பிரிவு புத்தருடைய சமயத்தின் அடிப்படை கருணை மட்டுமே என்று கருதுகின்றது.

4. இந்த இரு பிரிவுகளும் இன்னமும் பிரிந்தே உள்ளன.

5. புத்தரின் சொந்தக் கருத்துக்களின் ஒளியில் தீர்மானிக்கப் பட்டால், இரண்டு பிரிவுகளுமே தவறாயிருப்பதாகத் தோன்றுகிறது.

6. புத்தருடைய சமயத்தின் இரு தூண்களில் ஒன்றாக பிரதன்யம் உள்ளது என்பதில் அபிப்பிராய பேதம் இல்லை.

7. கருணையும் அவருடைய சமயத்தின் ஒரு தூண்தானா என்பது தான் விவாதம்.

8. கருணை அவருடைய சமயத்தின் ஒரு தூண் என்பது விவாதத்திற்கப்பாற்பட்டதாகும்.

9. இதற்கு ஆதரவாக அவருடைய சொந்தக் கருத்துக்களையே மேற்கோள் காட்டமுடியும்.

10. முன்னமொரு காலத்தில் காந்தாரம் என வழங்கப்பட்ட தேசத்தில் முதிய பரதேசி ஒருவர், மிகவும் அருவருப்பான நோயொன்றினால் பீடிக்கப்பட்டு, அவரிருந்த இடமெல்லாம் சீர்கேடடையச் செய்யும் நிலையிலிருந்தார்.

11. அவ்விடத்தைச சேர்ந்த ஒரு குறிப்பிட்ட விஹாரில் இருந்த அவரருகே யாரும் நெருங்கவோ, அவர் துன்பத்தில் உதவவோ இயலவில்லை.

12. ஆங்கே தம் 500 சீடர்களுடன் வந்த புத்தர், தேவயான பாத்திரங்களையும், வெந்நீரையும் பெற்றுக் கொண்டு, அவர்களுடன், அந்த முதிய பரதேசி படுத்திருந்த இடத்திற்குச் சென்று கண்டார்.

13. அந்த மனிதர் மேல் பிக்குகள் அனைவரும் வெறுப்பு கொள்ளத் தக்க அளவிற்கு அந்த இடம் மிகவும் துர்நாற்ற முடையதாயிருந்தது. ஆனால் உலகம்போற்றும் உத்தமர் புத்தரோ, சக்ரதேவரை வெந்நீர் கொண்டுவரச் செய்து, தன் கரங்களாலேயே, அந்தப் பரதேசியின் உடலைக் கழுவிச் சுத்தம் செய்யத் தொடங்கி அவர் வியாதிக்குச் சிகிச்சையளித்தார்.

14. அப்போது பூமியே குலுங்கியது போலவும், அவ்விடம் முழுவதும் மகிழ்ச்சி ஒளியால் நிறைந்தது போலவுமாகி, அரசரும், அமைச்சர்களும், வான்புகழெய்திய நல்லோரும் (சான்றோர், நாகர் முதலானோர்.) அவ்விடத்தைச் சேர்ந்து புத்தரைக் கொண்டாடினர்.

15. அவ்வாறு செய்தபின் அவர்கள் உலகம் போற்றும் உத்தமர் புத்தரை நோக்கி அவரளவிற்கு உயர்ந்து மேன்மை தங்கிய ஒருவர் எப்படி இத்துனை தாழ்ந்த பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ள முடிந்தது எனக் கேட்கவும் புத்தர் விஷயத்தை இவ்வாறு விளக்கினார்.

16. மானுடச் சமூகத்துக்குள் ததாகதர் புகுந்ததன் நோக்கமே, ஏழைகளையும், ஆதரவற்றவர்களையும், பாதுகாப்பற்றவர்களையும் ஆதரித்து உதவவும்,

வியாதியஸ்தர்களைப் பேணவும், சாமணர்களோ, அநாதைகள், முதியோர் ஆகியோருக்கு உதவவும், அவ்வாறு செய்ய பிறரை உடன்படச் செய்யவுமேயாகும்.

3.கருணையைவிட மிகவும் அவசியமானது மைத்ரி எனப் போதிக்கும்போது மட்டுமே தம்மம் சத்தம்மம் ஆகிறது.

1. புத்தர் கருணையைப் போதித்ததோடு நின்றுவிடவில்லை.

2. கருணை மனித உயிர்களிடம் கொள்ளும் அன்பு மட்டுமே. புத்தர் அதற்கும் அப்பால் சென்று மைத்ரியைப் போதித்தார். உயிர்வாழ்வன அனைத்துக்கும் அன்பு கொள்ளல் மைத்ரி ஆகும்.

3. மனிதன் கருணையோடு நின்று விடாமல், மனிதகுலத்துக்கும் அப்பால் சென்று அனைத்து உயிர்களிடமும் மைத்ரி உணர்வை விருத்தி செய்து கொள்ள வேண்டும் என்று விரும்பினார் புத்தர்.

4. உயர்வெய்திய புத்தர் ஒருநேரம் ஷ்ராவஸ்தியில் தங்கியிருக்கையில், ஒரு சத்தத்தில் அவர் இதை நன்கு விளக்கினார்.

5. மைத்ரி பற்றி உரையாடுகையில், உயர்வெய்திய புத்தர் பிட்சா பிக்குகளிடம் கூறினார்:

6. ஒரு மனிதன் நிலத்தைத் தோண்டுவதாக வைத்துக் கொள்வோம். அந்த நிலம் கோபம் கொள்ளுமா?

7. "இல்லை ஐயன்மீர்!" பிட்சாபிக்குகள் பதிலிறுத்தனர்.

8. "ஒரு மனிதன் அரக்குகளையும், வண்ணங்களையும் எடுத்துக் கொண்டு காற்றில் படம் வரைய வருவதாக வைத்துக் கொள்வோம். அவன் அதைச் செய்ய முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

9. "இல்லை ஐயன்மீர்!"

10. "ஏன்?" "ஏனெனில் ஆழந்த இருட்திட்டுகள் காற்றில் இல்லை." எனறனர் பிக்குகள்.

11. "இதே போல்தான் நீங்கள் உங்கள் தீய உணர்வுகளின் பிரதிபலிப்புக்களான ஆழ்ந்த இருட்திட்டுகள் எதையும் உங்கள் மனத்தில் இறுத்திக் கொள்ளக் கூடாது."

12. "ஒரு மனிதன் கங்கைக்குத் தீமூடட காட்டுக்குச்சிகளால் கட்டப்பட்ட எரியும் தீப்பந்தம் ஒன்றை ஏந்தி வருகிறான் என்று வைத்துக் கொள்வோம். அவனால் அது இயலுமா?"

13. "இயலாது அய்யன்மீர்!"

14. "ஏன்?" "ஏனெனில் கங்கை தன் நீரில், எரியும் தன்மை எதையும் கொண்டிருக்கவில்லை."

15. தன் உரையாடலின் முடிவுரையாய், உயர்வெய்திய புத்தர் கூறினார்: "தான் தாக்கப்பட்டதாய் உணர்வதோ, சினங்கொள்வதோ அற்ற பூமியைப் போல், தனக்கெதிரான எச்செயலுக்கும் வழிபடாத காற்றைப்போல, தீயினால் தடைப்படுத்தப்படாமல் பாய்ந்தோடும் கங்கையைப் போல், பிக்குகளே! நீங்களும் உங்களுக்கிழைக்கப்படும் அவமதிப்பையும், அநீதயையும் அனைத்தையும் பொறுத்துக் கொள்ளவும், உங்களைத் தொல்லைபடுத்துவர்களுக்கும் மைத்ரியுடடையவராய் இருக்கவும் வேண்டும்."

16. "எனவே! பிட்சா பிக்குகளே! மைத்ரி என்றென்றைக்கும் பாய்ந்து கொண்டேயிருக்க வேண்டும். பூமியைப் போல் உறுதியாகவும் காற்றைப்போல் தூய்மையாகவும், கங்கையைப் போல் ஆழமாகவும் உங்கள் மனத்தை வைத்திருந்தல் உங்கள் நற்கடமையாகட்டும். இவ்வாறு நீங்கள் செய்வீராயின், ஒரு செயல் எத்தனை இன்னாததாயினும் உங்கள் மைத்ரி எளிதில தடைப் படுத்தப்படாது. உங்களுக்குத் தீங்கிழைப்பவர் யாவரும் விரைவில் சோர்ந்து போவர்."

17. "உங்கள் மைத்ரியின் பரப்பு உலகளவு எல்லையற்றதாயும், உங்கள் எண்ணங்களின் விரிவு அளவுகடந்ததாகவும், வெறுப்பின் நினைவே அற்றதாகவும் விளங்கட்டும்."

18. "என் தம்மத்தின் படி கருணை புரிதல் மட்டுமே போதுமானதன்று, மைத்ரி புரிதல் அவசியமானது."

19. உரையாற்றலின் ஊடே உயர்வெய்திய புத்தர் பிட்சாபிக்களுக்கு, நிவைிலிறுத்தத்தக்க கதையொன்றைக் கூறினார்.

20. "முன்னொரு காலத்தில் ஷ்ராவஸ்தியில் விதேஷிகா என்ற பெயருடைய, பண்பான, சாதுவான, மென்மையான பெண்மணியெனப் பேர் பெற்ற ஒரு பெண் வாழ்ந்து வந்தார். அவரிடம் டார்கி என்ற பெயருடைய, புத்திசாலியான, அதிகாலையிலேயே எழுந்து நன்கு பணிபுரியும் ஒரு பெண் வேலைக்காரியாக இருந்தாள். டார்கி நினைத்தாள், 'நன்கு புகழப்படும் என் எஜமானி உண்மையிலேயே கோபமுடைய வராயிருந்து அதை வெளிக்காட்டாமலிருக்கிறாரா-அல்லது அவர் கோபமே அற்றவராயிருக்கிறாரா என்று ஆச்சரியப்படுகிறேன். அல்லது அவர் கோபக்காரராயிருந்தும், அதைக் காட்டமுடியுமா வகையில் நான் என் வேலையை மிக நன்கு செய்து கொண்டிருக்கிறேனா? நான் அவரைப் பரீட்சித்துப் பார்க்கப் போகிறேன்.'

21. "எனவே, அடுத்தநாள் காலை அவள் தாமதமாக விழித்தெழுந்தாள். 'டார்கி! டார்கி!

கத்தினார் எஜமானி. 'என்ன அம்மா!' பதிலிறுத்தாள் அந்தப்பெண்.'நீ ஏன் இவ்வளவு தாமதமாய் விழித்தெழுந்தாய்?' 'ஓ! அது ஒன்றுமில்லை அம்மா.'ஆமாம்! அது ஒன்றுமில்லைதான்-குறும்புப் பெண்ணே! 'சினத்தாலும், வெறுப்பினாலும் முகஞ்சுளித்தவாறே நினைத்தாள் ஜமானி.'

22. "ஆக, அவர் வெளிக்காட்டாவிட்டாலும் அவருக்குக் கோபமிருக்கிறது"-வேலைக்காரி நினைத்தாள். 'நான் என் வேலையை மிக நன்றாகச் செய்து விடுவதால் அவர் அதைக் காட்டுவதில்லை. நான் மேலும் பரிசோதிக்கப்போகிறேன்.' எனவே அவள் மறுநாள் காலை இன்னமும் தாமதமாய் விழித்தெழுந்தாள். 'டார்கி! டார்கி!' கத்தினார் எஜமானி. 'என்ன அம்மா!' பதிலிறுத்தாள் அந்தப் பெண்.'நீ என் இவ்வளவு தாமதாமாய் விழித்தெழுந்தாய்?' 'ஓ! அது ஒன்றமில்லை அம்மா!' 'ஆமாமாம்' அது ஒன்றுமில்லைதான்-குறும்புப் பெண்ணே!' தன் சினத்துக்கும், வெறுப்பிற்கும் வார்த்தை வடிவம் தந்து விளித்தாள் எஜமானி.

23. "ஆம்," வேலைக்காரி நினைத்தாள். 'நான் மிக நன்றாக என் வேலையைச் செய்து விடுவதால், அவருக்குக் கோபமிருந்தும் அதை அவர் காட்டமுடிவதில்லை, அவரை இன்னும் நான் பரிசோதிக்கப் போகிறேன்.' எனவே, அடுத்த நாள் காலை அவள் இன்னமும் சற்று தாமதமாய் விழித்தெழுந்தாள். 'டார்கி! டார்கி!' கத்தினார் அவளுடைய எஜமானி. 'என்ன அம்மா!' பதிலிறுத்தாள் அந்தப்பெண்.'நீ ஏன் இவ்வளவு தாமதமாய் விழித்தெழுந்தாய்? 'ஓ! அது ஒன்றுமில்லை அம்மா!'

24. "ஆமாமாம்! இப்படித்தாமதமாய் விழித்தெழுவது ஒன்றுமில்லைதான்!" கூவிய எஜமானி, தன் சினத்திலும் வெறுப்பிலும், அங்கிருந்த ஒரு அச்சாணியை எடுத்து அவள் மண்டையிலடித்தார்- இரத்தம் வந்துவிட்டது.

25. இரத்தம் வடியும் தன் உடைந்த மண்டையோடு, டார்கி கூச்சலோடு அக்கம்பக்கமுள்ளவர்களை எழுப்பினாள்:'பாருங்கள் அம்மா! இந்த பண்பாளி செய்ததை! பாருங்கள் அம்மா! இந்த சாது செய்ததை! பாருங்கள் அம்மா! இந்த மென்மையானவள் செய்ததை! எல்லாம் எதற்காக! அவருடைய ஒரே வேலைக்காரி தாமதமாய் எழுந்ததற்காக- இவ்வள்வு கோபமும் வெறுப்பும் கொண்டு இவள் குதிதெழுந்து அச்சாணியால் தலையிலடித்து உடைத்து விட்டாளே.'

26. "இதன் விளைவாக அந்தப் பெண்மணி விதேஷிகா வன்மையானவள்-சாதுவுமில்லை, மென்மையானவளுமில்லை எனப் பேர்பெற்றுவிட்டார்."

27. "இதேபோலதான்-ஒரு பிட்சா பிக்கு தனக்கெதிராக அவதூறான எதுவும் சொல்லப்படாதவரை பண்பாளராய், சாதுவாய், மென்மையாய் இருக்கக்கூடும். அவருக்கெதிராக அவதூறு சொல்லப்படும் போது தான் உங்களால் அவர் மைத்தரியும் இணக்கமும் உடையவரா என்று சோதிக்க முடியும்."

28. அடுத்து அவர் தொடர்ந்தார்: "உடையும், உணவும் பெற மட்டும் அதைக் காட்டுபவரை மைத்ரி உணர்வுடையவரென்று நானழைக்க மாட்டேன். கொள்கையிலிருந்து மைத்ரி எழுகிற வரைத்தான் பிட்சா பிக்குவாக நான் அங்கீகரிப்பேன்."

29. ஓ, பிக்குகளே! ஆன்மீக உயர்வை எய்த மேற்கொள்ளப்படும் எந்த மதச்சாதனமும் அன்பான நேயததின் மதிப்பில் அரைவீசமும் பொறாது. இதயத்தின் சுதந்திரமாயிலங்குகிற அன்பான நேயம், அனைத்தையும் ஈர்த்துக் கொள்கிறது. அது ஔரிகிறது-தகதகக்கிறது-மேலும் கனல்கிறது.

30. "இதே வகையில்தான், ஓ! பிக்குகளே! நிலவொளியின் மதிப்பில், அனைத்து விண்மீன்களின் ஒளியும் அரைவீசமும் பொறாது, ஆனால், நிலவொளி அதை ஈர்த்துக்கொண்டு ஒளிர்கிறது-தகதகக்கிறது மேலும் கனல்கிறது; இதே வகையில் தான் ஓ! பிக்குகளே, ஆன்மீக உயர்வை எய்த மேற்கொள்ளப்படும் எந்த மதச் சாதனமும் அன்பான நேயத்தின் மதிப்பில் அன்பான நேயம், அவற்றை ஈர்த்துக் கொள்கிறது; அது ஔரிகிறது-தகதகக்கிறது-மேலம் கனலகிறது.

31. இதேவகையில் தான், ஓ! பிக்குகளே! மாரிக்காலத்தின முடிவில், சூரியன், தூய முகிலற்ற வானில் தோன்றி இருட்திட்டுககையெல்லாம் விரட்டி ஒளிர்கிறது-தகதகக்கிறது-மேலும் கனல்கிறது. அதேபோல், ஓ! பிக்குகளே! ஆன்மீக உயர்வை எய்த மேற்கொள்ளப்படும் எந்த மதச்சாதனமும் அன்பான நேயத்தின் மதிப்பில் அரைவீசமும் பொறாது. இதயத்தின் சுதந்திரமாயிலங்குகிற அன்பான நேறம் அவற்றை ஈர்த்துக்கொள்கிறது; அது ஒளிர்கிறது-தகதகக்கிறது-மேலும் கனல்கிறது.

தம்மம் சத்தம்மம் ஆகச் சமூகத்தடைகள் அனைத்தையும் தகர்க்க வேண்டும்.

1. தம்மம் சத்தம்மம் ஆக மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள தடைகளை உடைத்தாக வேண்டும்.

1. இலட்சிய சமுதாயம் எது? பிராமணர்களின் கருத்துப்படி எது இலட்சிய சமுதாயம் என வேதங்கள் வரையறுத்துள்ளன-வேதங்கள் தவறற்றவையாதலால், அதுவே மனிதன் ஏற்கக் கூடிய இலட்சிய சமுதாயமாகும்.

2. வேதங்களால் அறிவுறுத்தப்படுகிற இலட்சிய சமுதாயம் சதுர்வர்ணம் என்ற பெயரால் அறியப்படுகிறது.

3. வேதங்களின்படி, அத்தகைய சமுதாயம் மூன்று நிபந்தனைகளை நிறைவேற்றவேண்டும்.

4. அது நான்கு வகுப்புக்களை-அதாவது பிராமணர், சத்திரியர், வைசியர் மற்றும் சூத்திரர்-உட்கொண்டதாய் இருக்க வேண்டும்.

5. இவ்வகுப்புக்களுக்கு இடையேயான தொடர்புறவுகள் படிப்படியான சமத்துவமின்மையால் ஒழுங்கமைக்கப்பட வேண்டும். வேறு விதமாகக் கூறுவதானால், இந்த வகுப்புக்கள் சமநிலையில் இல்லாமல், அந்தஸ்திலும், உரிமைகளிலும் சலுகைகளிலும் ஒன்றுக் கொன்று மேம்பட்டதாய் இருக்கவேண்டும்.

6. பிராமணர்கள் உயர்நிலையில் வைக்கப்பட்டனர்; சத்திரியர் பிராமணருக்குக் கீழ்நிலையில் -ஆனால் வைசியருக்கு மேல் நிலையில் வைக்கப்பட்டனர்; வைசியர்கள் சத்திரியருக்குக் கீழ் நிலையில் ஆனால், சூத்திரருக்கு மேல்நிலையில் வைக்கப்பட்டனர். மற்றும் சூத்திரர்கள் அனைவரிலும் கீழான நிலையில் வைக்கப்பட்டனர்.

7. சதுர்வர்ணத்தின் மூன்றாவது அம்சம், ஒவ்வொரு வகுப்பும் தனக்கென விதிக்கப்பட்ட தொழிலையே புரிய வேண்டும் என்பதாகும், பிராமணர்களின் தொழில் ஓதல், ஓதுவித்தல, மதச் சடங்குகளைத் தலைமையேற்று நடத்தல் ஆகியவை. சத்திரியர்களின் தொழில் ஆயுதங்களைத் தாங்கிப் போர்புரிதல், வைசியர்களின் தொழில் வியாபாரம்-வணிகம். சூத்திரர்களின் தொழில் மூன்று உயர் வகுப்பினர்க்கெல்லாம் இழிதொழில் செய்தல்.

8. எந்தவோர் வகுப்பும் பிறவகுப்பினர்க்குரிய தொழிலில் மீறித்தலையிட்டு கைக்கொள்லாகாது.

9. இலட்சிய சமுதாயத்துக்கான இந்தக் கோட்பாடு பிராமணர்களால் ஆதரிக்கப்பட்டு, மக்களுக்குப் போதிக்கப்பட்டது.

10. மிகத் தெளிவாக இந்தக் கோட்பாட்டின் சாரம் சமத்துவ மின்மையாய் இருக்கின்றது. இந்தச் சமூகர் சமத்துவமின்மை வரலாற்று வளர்ச்சியின் விளைவன்று. சமுத்துவமின்மை பிராமணீயத்தின் அதிகாரபூர்வக் கோட்பாடாகும்.

11. இதைப் புத்தர் வேரோடும் வேரடி மண்ணோடும் எதிர்த்தார்.

12. சாதியின் மிக வலிய எதிரியாகவும் சமத்துவ ஆதரவாளர்களில் மிக முந்தியவராகவும், மிக உறுதியானவராகவும் இருந்தார் அவர்.

13. சாதிக்கும், சமத்துவமின்மைக்கும் ஆதரவான எந்த வாதமும், அவரால் மறுத்துரைக்கப்படாததாயில்லை.

14. இந்த விஷயத்தில் பல பிராமணர்கள் புத்தரிடம் எதிர் வாதமிட்டார்கள். ஆனால் அவர்களை அவர் முழுமையாக அடக்கி வென்றார்.

15. அஸ்ஸலாயன-சுத்தத்தில் விவரிக்கப்படும் ஒரு நிகழ்வின்படி, ஒரு முறை பிராமணர்கள் தங்களில் ஒருவரான அஸ்ஸலாயனர் என்னும் பெயருடையவரைப் புத்தரிடம் சென்று சாதி

மற்றும் சமத்துவமின்மைக்கு எதிரான அவருடைய கொள்கைகளை மறுத்து எதிர்வாதம் செய்யத் தூண்டினர்.

16. அஸ்ஸலாயனர் புத்தரிடம் சென்று பிராமணரின் உயர் தன்மைக்கு ஆதரவாக அவர் முன் வழக்கிட்டார்.

17. அவர் கூறினார். "கவுதமரே! பிராமணர்கள் உயர்குலத்தவராய் அமைந்திருப்பதாகவும், மற்ற வகுப்பினர் யாவரும் கீழபனவராய் இருப்பதாகவும், பிராமணர்கள் வெண்ணிற வகுப்பாரென்றும், மற்ற அனைத்து வகுப்பினரும் கறுப்பர்களென்றம், பிராமணர்கள் மட்டுமே பிரம்மனின் சட்டபூர்வப் பிள்ளைகள்-அவர் வாயினின்றம் பிறந்தவர்கள் அவரினின்று கிளைத்தவாக்ள-அவரால் படைக்கப்பட்டவர்கள்-அவருடைய வாரிசுகள என்றும் கருதுகிறார்கள். இதைப்பற்றிக் கவுதமர் என்ன கூறுகிறீர்கள்?"

18. புத்தரின் பதில் அஸ்ஸலாயனரை நொறுக்கிவிட்டது.

19. புத்தர் கூறினார்: "அஸ்ஸலாயனரே! பிராமணர்களின் பிராமண மனைவியர் மாதவிலக்குற்று, கூடி, கருவுற்று பிள்ளை பெறுவதாய் அறியப்படவில்லையா? இதைத் தடுக்க வொண்ணா பிராமணர்கள்-அவர்களே பிற எவரையும் போலப் பெண்களிடமிருந்து பிறந்தவர்களாயிருந்தும் கூட."

20. அஸ்ஸலாயனர் பதிலேதும் கூறவில்லை.

21. புத்தர் மேலும் சென்று அஸ்ஸலாயனரை மற்றொரு கேள்வி கேட்டார்.

22. "ஒரு இளைய பிரபுக்குலத்தவன் ஒரு பிராமண இளம் பெண்ணுடன் இணைவதாய் வைத்துக் கொண்ால் விளைவு என்னவாகும்? பிறப்பது மனிதக் குழந்தையாய் இருக்குமா? மிருகக் குட்டியாய் இருக்குமா?"

23. மீண்டும் அஸ்ஸலாயன ஒரு பதிலும் கூறவில்லை.

24. "ஒழுக்க வளர்ச்சியின் சாத்தியத்தைப் பொறுத்தவரை, இந்த நாட்டிலுள்ளவர்களில், பிராமணனைத் தவிர, வேறு வகுப்பார் மூவரில் எவராலும், மனத்தில் அன்பை வளர்க்கவும், வெறுப்பறியாதவராயும், தீயவிருப்பற்றவராயும் இருக்கவியலாதா?"

25. "அப்படியில்லை நான்கு வகுப்பாரனைவராலும் அப்படிச் செய்ய இயலும்." பதிலிறுத்தார் அஸ்ஸலாயனர்.

26. அஸ்ஸலாயனரே! யவனம், கம்போஜம் முதலான நாடுகளிலும், அதையடுத்துள்ள நாடுகளிலும் எஜமானனொருவன் அடிமையாகவும் முடியும், அடிமை எஜமானனாகவும்

முடியுமென்றும் நீங்களெப்போதேனும் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? என்று வினவினார் புத்தர்.

27. "ஆம் அவ்வாறு நான் கேள்வியுற்றிருக்கிறேன்." பதிலிறுத்தார் அஸ்ஸலாயனர்.

28. உங்கள் சதுர்வர்ணம் இலட்சிய சமுதாயமாயின், அது ஏன் உலகம் தழுவியதாயில்லை?"

29. இந்த விஷயங்கள் எதுவொன்றிலும் தம் சாதி மற்றும் சமத்துவமின்மைக் கோட்பாட்டைக் கலந்துக் கொள்ள அஸ்ஸலாயனரால் இயலவில்லை. அவர் முழுமையாக அடங்கிப் போனார். அவர் புத்தரின் சீடரா◌ாவதில் முடிந்தார்.

30. உயர்வெய்திய புத்தரின் சமயத்தைத் தழுவினார் வாசேத்தர் என்னும் பெயரிய பிராமணர் ஒருவர். பிராமணர்கள் அவருடைய மத மாற்றத்துக்காக அவரை வசைபாடும் வழக்க முடையவராயிருந்தனர்.

31. ஒரு நாள் அவர் புத்தரிடம் சென்று பிராமணர்கள் தம்மைப் பற்றிக் கூறியதை வெளிப்படுத்தினார்.

32. அப்போது வாசேத்தர் கூறினார்: ' ஒரு பிராமணன் மட்டுமே சமூகத்தில் நல்லுயர் நிலையுடையவன்; மற்ற நிலையாவும் கீழ்நிலையே, ஒரு பிராமணன் மட்டுமே தெள்ளிய நிறமுடையவன்; மற்றர் நிறமெலாம் கருநிறமே; பிராமணர் மட்டுமே தூய பிறப்பாளர்; பிராமணரல்லாதார் யாரும் அவ்வாறில்லை; பிராமணர் மட்டுமே பிரம்மனின் உண்மையான பிள்ளைகள்-அவர் வாயினின்றும் பிறந்தவர்கள்-அவரினின்றும் கிளைத்தவர்கள்-அவரால் படைக்கப்பட்டவர்கள்-அவருடைய வாரிசுகள்.

33. உன்னைப் பொறுத்தவரை, நீ நல்லுயர் விலையைத் துறந்து விட்டுக் கீழ்வகுப்பாரிடம் சென்று விட்டாய்-மொட்டை யடித்த துறவிகளிடம், இழிந்த செல்வந்தரிடம், கருநிறத் தோலுடையாரிடம் அதுவும், நீ, உயர்வகுப்பைத் துறந்து, கீழ்வகுப்பாரிடம் தொடர்புற்று, அதாவது-மொட்டைத் துறவியருடன், சாதாரண மக்களுடன், இழிதொழிற் புரிவாருடன், இருண்ட நிறத்தோலுடையாருடன், நம்மவரின் காலிற்பிறந்தவருடன் சேர்ந்திருக்கும் உன்னுடைய இவ்வகையான செயற்பாடு சரியன்று."

34. "இவ்வார்த்தைகளில், ஐயன்மீர், பிராமணர்கள் கஞ்சத்தனமற்று, ஏராளமான வசைச் சொற்களால் என்னைக் குற்றஞ்சாட்டி ஏசுகிறார்கள்."

35. "உறுதியாக, வாசேத்தரே! பிராமணர்கள் அவ்வாறு கூறுகையில் பண்டைய பாரம்பரிய முறையை முற்றிலும் மறந்து விடுகிறார்கள். அதற்கு மாறாக, பிராமணர்களின் மனைவிகள், மற்ற எல்லா வகுப்பாரின் பெண்களைப் போலவே, குழந்தைகளைக் கருவுறுகிறார்கள். பெறுகிறார்கள்-பேணுகிறார்கள். இருந்தும், இந்த கருவில் பிறந்த பிராமணர்களே பிரம்மனின் உண்மையான பிள்ளைகள் தாமேயென்றும்-அவருடைய வாயினின்றும்

பிறந்தவர்களென்றம்-அவரினின்றும் கிளைத்தவர்கள் என்றும்-அவரால் படைக்கப்பட்டவர்கள் என்றும்-அவருடைய வாரிசுகளென்றும் கூறிக் கொள்கிறார்கள். இந்தக் கோட்பாட்டின் மூலம் பிரம்மத்தின் இயல்பைக் கேலிக்குள்ளதென உணர்த்துகிறார்கள் அவர்கள்." என்றார் புத்தர்.

36. ஒருமுறை ஏசுகாரி என்னும் பிராமணர் புத்தரிடம் மூன்று கேள்விகளை விவாதிக்கச் சென்றார்.

37. அவர் எழுப்பிய முதல் வினா தொழில்களின் நிரந்தரப் பிரிவுகளோடு தொடர்புடையதாகும். அந்த முறைக்குப் பாதுகாப்பாக அவர் பேசத்தொடங்கினார். "நான் தங்களை ஒரு கேள்வி கேட்க வந்துள்ளேன். தாங்கள் அனைவர்க்கும் மேலானவர்களாய் இருப்பதால், தாங்கள் யாருக்கும் தொண்டூழியம் செய்யக் கூடாது என்று பிராமணர்கள் கூறுகிறார்கள், மற்றவர் ஒவ்வொருவரும் அவர்களுக்குத் தொண்டூழியம் செய்யவே பிறந்திருக்கிறார்கள்."

38. "தொழில்கள் நால்வகையாய்ப் பிரிக்கப்பட்டுள்ளன-பிராமணர்களின் தொழில், சத்திரியப் பிரபுக்களின் தொழில், நடுத்தர வகுப்பு மனிதரின் தொழில் அல்லது உழவரின் தொழில்; ஒரு உழவருக்கு உழவர்தான் தொண்டு புரிய முடியும்-வேறெவர் புரிவர்?" மாண்புமிகு கவுதமர் இதுபற்றி என்ன கூறுகிறீர்கள்?

39. ஒரு கேள்வி கேட்டதன் மூலம் அவருக்குப் பதிலிறுத்தார் புத்தர்: "அவர்களின் நால்வகைத் தொழில் பிரிவுகளில் உலகம் முழுவதும் பிராமணர்களோடு ஒத்துப் போகிறதா?" கேட்டார் புத்தர்.

40. "என்னைப் பொறுத்தவரை, எல்லாத் தொழில்களும் செய்யப்பட வேண்டுமென்றோ, எல்லாத் தொழில்களும் மறுக்கப்பட வேண்டுமென்றோ நான் வலியுறுத்தவில்லை. ஒரு மனிதனை ஒரு தொழில் தீயவனாகவோ நல்லவன் அல்லாதனவாகவும் செய்யுமாயின், அத்தொழில் அவனால் செய்யப்படலாகாது; ஆனால் அது அவனை நல்லவனாகவும், தீயவனற்றவனாகவோ செய்யுமாயின், பின் அது அவனால் செய்யப்பட வேண்டும்."

41. "பிரபுக்கள், பிராமணர், நடுத்தர வகுப்பு மக்கள் அல்லது உழவர்கள் ஆகியோர் அனைவர்க்கு பொதுவாய் அவர்களின் நடத்தையை நிர்ணயிக்க இதுவே வழிகாட்டு நெறியாய் இருக்க வேண்டும்; ஒவ்வொரு தனிமனிதனும் அவனை இழிவுபடுத்தும் தொழிலை மறுக்கவேண்டும்-அவனை சிறந்தவனாக்கும் தொழிலை ஏற்கவேண்டும்."

42. அடுத்த வினா 'ஏசுகாரியால்' எழுப்பப் பட்டதாகும். "ஒரு மனிதனின் அந்தஸ்தை நிர்ணயிப்பதில் பரம்பரையும், வம்சமும் ஏன் இடம் பெறக்கூடாது?"

43. இந்த வினாவிற்குப் புத்தர் இவ்வாறு விடையிறுத்தார்: "பாரம்பரியப் பெருமைக்குப் புறம்பாக, ஒரு மனிதன் எந்த இருப்பு நிலையில் பிறக்க நேர்கிறானோ, அந்நிலை, அவன்

பிரபு அல்லது பிராமணன் அல்லது நடுத்தர வர்க்கத்தோன் அல்லது குடியானவன் என்னும் தொழில் தகுதியை மட்டுமே நிர்ணயிக்கிறது. எப்படி ஒரு தீ அது எப்பொருளின்று உண்டாக்கப்பட்டதோ அதன்படி பெயரிட்டு அழைக்கப்படுகிறதோ-அதாவது விறகுத்தீ, சிக்கிமுக்கித் தீ கடுப்புத் தீ, சாணத்தீ-அப்படியே ஒவ்வொரு மனிதர்க்கும் உரியதான உண்மைச் செல்வம் உயரிய மேம்பட்ட கொள்கையேயாகும் என நான் உறுதியாய் உரைக்கிறேன், பிறப்பு நால்வகைத் தொழில் வகுப்பில் ஒன்றை வெறுமனே நிர்ணயிப்பதேயாகும்."

44. "குலச்சார்பு ஒரு மனிதனின் இருப்பிற்குள் நன்மையையோ தீமையையோ புகுத்துவதில்லை, நல்லதோற்றமோ, செல்வமோ அவ்வாறு செய்வதில்லை. ஏனெனில் உயர்குடிப் பிறப்பாளன் ஒருவன் கொலைகாரனாய், திருடனாய், விபச்சரியனாய், பொய்யனாய், இழுக்குடையவனாய், தீய சொல்லினனாய், புறங்கூறுபவனாய், பிறர்பொருள் கவர்பவனாய், காழ்ப்புணர்ச்சி உடையவனாய், தவறான பார்வையுடையவனாய் இரப்பதை நீங்கள் காணக்கூடும்-எனவே உயர்குடிப்பிறப்பாளன் ஒருவன் இக்குற்றங்கள் அனைத்தையும் அறியாதவனாய் இருக்கக்கூடும். எனவே ஒருவனைத் தீய மனிதனாக்குவது குலச் சார்பன்று என நான் உறுதியாயுரைக்கிறேன்."

45. ஒவ்வொரு வகுப்பார்க்கும் விதிக்கப்பட்டுள்ள வாழ்க்கைக்கான ஊதியம் தேடும் வழிமுறைகள் பற்றி ஏசுகாரி எழுப்பிய வினா மூன்றாவதாகும்.

46. பிராமணர் ஏசுகாரி புத்தரிடம் கூறினார்: "வருவாய்க்குரிய வழிகளாகப் பிராமணர் வகுத்துள்ளவை நான்காகும்-பிராமணர்க்குத் தானமேற்றலால்-சத்திரியர்க்கு வில்லோடும் அம்போடும்-நடுத்தர வர்க்கத்தார்க்கு உழுதும் கால்நடை வளர்த்தும்-குடியானவர்க்குத் தோளில் ஏரேந்தியும் சுமை சுமக்கும் வண்டியோட்டியும். இவர்களில் எவரேனும் தம் தொழிலை விட்டு வேறொருவர் தொழில் புரிவராயின், அவர் தாம் செய்யத்தகாதனவற்றைச் செய்தவராகிறார்-தமக்குரிய தல்லாததை எடுத்துக் கொள்பவர்க்கு இவர் சற்றும் குறைந்தவரல்லர். இது பற்றி மேன்மைதங்கிய கவுதமர் கூறுவது யாது?"

47. "உலகம் முழுவதும் பிராமணர்களின் வகைப்படுத்தலின் கோட்பாட்டின்படியுள்ளதா?" புதகர் வினவினார்.

48. "இல்லை." பதிலிறுத்தார் ஏசுகாரி.

49. வாசேத்தருக்குப் புத்தர் கூறினார்: "முக்கியமானது யாதெனில் உயர்ந்த இலட்சியங்களேயன்றி பிறப்புயர்வல்ல."

50. "சாதியல்ல; சமத்துவமின்மையல்ல; உயர்குலமல்ல; தாழகுலமல்ல; அனைவரும் சமமானவரே. இதுவே என் கடப்பாடு."

51. "மற்றவர்களோடு இணங்குங்கள், அவர்கள் எப்படியோ நான் அப்படியே. நான் எப்படியோ, அவர்கள் அப்படியே." இவ்வாறு உரைத்தார் புத்தர்.

2. தம்மம் சத்தம்மம் ஆக, மனிதனின் அளவுகோல் பண்பேயன்றி பிறப்பல்ல எனப் போதிக்க வேண்டும்.

1. பிராமணர்களால் போதிக்கப்படும் சதுர்வர்ணக் கோட்பாடு, பிறப்பை அடிப்படையாய்க் கொண்டதாகும்.

2. பிராமணப் பெற்றோர்களுக்குப் பிறந்த காரணத்தால் ஒருவன் பிராமணனாய் இருக்கிறான். சததிரியப் பெற்றோர்களுக்குப் பிறந்த காரணத்தால் ஒருவன் சத்திரியனாய் இருக்கிறான். வைசியப் பெற்றோர்களுக்குப் பிறந்த காரணத்தால் ஒருவன் வைசியனாய் இருக்கிறான். மற்றும் சூத்திரப் பெற்றோருக்குப் பிறந்த காரணத்தால் ஒருவன் சூத்திரனாய் இருக்கிறான்..

3. பிராமணர்களின் கருத்துப்படி ஒரு மனிதனின் பண்பு அவனுடைய பிறப்பை அடிப்படையாய்க் கொண்டதாகும்-வேறெதையும் அல்ல.

4. சதுர்வர்ணக் கோட்பாட்டைப் போலவே இக்கோட்பாடும் புத்தருக்கு எதிர்ப்பிற்குரியதாயிருந்தது.

5. அவருடைய கொள்கை பிராமணர்களின் கொள்கைக்கு நேரெதிரானதாய் இருந்தது. பண்பேயன்றி பிறப்பு ஒரு மனிதனின் அளவுகோல் அல்ல என்பது அவர் கொள்கையாகும்..

6. புத்தர் அவருடைய இக்கொள்கையை ஆராய்நத காலம் தனிக் கவனத்திற்குரியதாயிருந்தது.

7. ஒரு நேரம் உயர்வெய்திய புத்தர் அநாத பிண்டிகரின் ஆசிரமத்தில் தங்கியிருந்தார். ஒருநாள் முற்பகலில், அவர் தன் பிட்சாபத்திரத்தை ஏந்திக் கொண்டு பிட்சைக்காக ஷராவஸ்திக்குள் நுழைந்தார்.

8. அந்நேரத்தில் ஆங்கு ஒரு வேள்வித் தீ எரிந்து கொண்டிருந்தது-யாகம் ஏற்பாடாகிக் கொண்டிருந்தது. பிறகு, உயர்வெய்திய புத்தர், ஷ்ராவஸ்தியில், வீடு வீடாகப் பிட்சைக்குக் சென்று கொண்டிருந்தவர் அக்கிகர் என்னும் பிராமணரின் வீட்டை அடைந்தார்.

9. உயர்வெய்திய புத்தர் தூரத்தில் வந்து கொண்டிருந்ததைக் கண்ட அந்தப் பிராமணர் சினங்கொண்டு கூறினார்: "அங்கேய நில்-மொட்டைத்தலையரே-அங்கேயே நில் கஷ்டப்படுகிற ஒதுக்கப்பட்டவரே."

10. அவர் அவ்வாறு பேசியதும், உயர்வெய்திய புத்தர் அவரிடம் கீழ்க்கண்டவாறு உரைக்கலானார்; "ஓ! பிராமணரே! ஒதுக்கப்பட்டவர் யாரென்றும், ஒரு மனிதனை ஒதுக்கத்தக்கவனாக்குவது எவையென்றும் நீங்கள் அறிவீர்களா?"

11. "இல்லை, கவுதமரே, ஒதுக்கப்பட்டவர் யாரென்றும், ஒரு மனிதனை ஒதுக்கத்தக்கவனாக்குவது எவையென்றும் நானறியேன்."

12. யார் ஒதுக்கப்பட்டவர் என்று அறிவதில் இழப்பேதுமில்லையென்று வாதிட்டார் புத்தர். "அதை நான் அறிந்து கொள்ள வேண்டுமென, நீங்கள் இப்போது வற்புறுத்துகிறீர்கள். சரி தொடர்ந்து விளக்குங்கள்" என்று கூறினார் பிராமணர் அக்கிகர்.

13. பிராமணர் இசைந்ததும், உயர்வெய்திய புத்தர் கீழ்கண்டவாறு பேசினார்.

14. எந்த மனிதன் வெறுப்புடையவனனோ காழ்ப்புணர்ச்சி உடையவனோ, தீய நெறியுடையவனோ, இகழ்பவனோ, கருத்துக் கோணலுடையவனோ, ஏமாற்றுகிறவனோ-அவனே ஒதுக்கப்பட வேண்டியவன் என அறிந்து கொள்ளுங்கள்.

15. இந்த உலகில், ஒரு பிறப்பாளனோ-இரு பிறப்பாளனோ யாரெரருவன் உயரிவாழ்வனவற்றுக்குத் துன்பமிழைக்கிறானோ-யாருக்கு உயிர் வாழ்வனவிடத்தில் தயை இல்லையோ-அவன் தான் ஒதுக்கப்பட வேண்டியவனென அறிந்து கொள்ளுங்கள்.

16. "யாரொருவன் கிராமங்களையும், குக்கிராமங்களையும் முற்றுகையிட்டு அழிக்கிறானோ-மேலும் யாரொருவன் ஒடுக்குபவன் என்று அறியப்படுகிறனோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள்."

17. "ஊரிலோ, வனத்திலோ எவனொருவன் திருட்டினால் பிறருக்குரிய பொருளையோ, கொடுக்கப்படாததையோ அபகரிக்கிறானோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள."

18. "எவனொருவன் உண்மையில் கடன் வாங்கிக் கொண்டு ஓடியொளிந்து, நிர்ப்பந்திக்கப்பட்டால். 'நான் உனக்குக் கடனொன்றும் தரவேண்டியதில்லையே' என்கிறானோ அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள்."

19. "எவனொருவன் அநாவசிய விருப்பத்தில்-சாலையில் தனித்துப் போகும் ஒருவனைக் கொன்று கொள்ளையடிக்கிறானோ, அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள்."

20. "எவனொருவன் தன் சொந்த நலனுக்காக, அல்லது பிறர் நலனுக்காக, அல்லது செல்வத்திற்காக, சாட்சி கேட்கப்படும் போது பொய்யுரைக்கிறானோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள்."

21. "எவனொருவன் பலாத்காரமாகவோ, ஒப்புதலோடோ உறவினரின் அல்லது நண்பர்களின் மனைவியரோடு எல்லை மீறுகிறானோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிந்து கொள்ளுங்கள்."

22. எவனொருவன் செல்வந்தனாயிருந்தும், இளமைகடந்த முதிய தாய் தந்தையரைப் பேணாதிருக்கிறானோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என்று அறிந்து கொள்ளுங்கள்.

23. "எவனொருவன், எது நல்லது என வினவப்படும்போது-எது கெட்டதோ அதை அறிவுறுத்தி, மறைவான வழியில் போதிக்கிறானோ-அவனே ஒதுக்கப்பட்டவன் என அறிறது கொள்ளுங்கள்."

24. யாரொருவனும் பிறப்பினால் ஒதுக்கப்பட்டவன் இல்லை-யாரொருவனும் பிறப்பினால் பிராமணனும் இல்லை.

25. இதைக் கேட்டதும், தாம் உயர்வெய்திய புத்தர் மீது வீசிய வசவுகளுக்காக மிகவும் வெட்கப்பட்டார் அக்கிகர்.

3. தம்மம் சத்தம்மம் ஆக மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே சமத்துவத்தை உருவாக்க வேண்டும்.

1. மனிதர்கள் சமமின்றிப் பிறக்கிறார்கள்.

2. சிலர் பலசாலிகள், மற்றவர்கள் பலவீனர்கள்.

3. சிலர் அதிக அறிவுடையவர்கள், பிறர் குறைவாகவோ இல்லாமலலோ இருக்கிறார்கள்.

4. சிலர் அதிகத் திறனுடையவர்கள், பிறர் குறைவாய் உடையவர்கள்.

5. சிலர் வசதியானவாகள், பிறர் ஏழைகள்.

6. எல்லோரும் வாழ்க்கைக்கான போராட்டம் என்றழைக்கப்படுவதில் புக வேண்டியுள்ளது.

7. வாழ்க்கைக்கான போராட்டத்தில், போரின் விதியாக சமத்துவமின்மை, அங்கீகரிக்கப்பட்டால் பலவீனர்கள் எப்போதும் கடைநிலைக்கே தள்ளப்படுவார்கள்.

8. வாழ்க்கையின் விதிமுறையாக இந்த சமத்துவமின்மைவிதி அனுமதிக்கப்பட வேண்டுமா?
9. இது வல்லவன் நிலைப்படுவதை விளைவாய்க் கொண்டுள்ளது என்னுமடிப்படையில் இதற்கு உடன்பாடாய்ப் பதிலிறுக்கிறார்கள் சிலர்.

10. எப்படியாயினும் வினா இதுதான்; சமுதாயத்தின் பார்வையில் வல்லவன் தான் நல்லவனா?

11. யாரும் உடன்பாடான பதிலளிக்க இயலாது.

12. இந்த ஐயத்தின் காரணமாகத்தான் சமயம் சமத்துவத்தைப் போதிக்கிறது. ஏனெனில் சமத்துவம் நல்லவன் நிலைப்பட உதவும்-நல்லவன் வல்லவனாக இல்லையாயினும்.

13. சமுதாயம் விரும்புவதெல்லாம் நல்லவனையே வல்லவனையல்ல.

14. எனவே, இதுதான் ஏன் சமயம் சமத்துவத்தை ஆதரிக்கிறது என்பதற்கான முதன்மைக் காரணம்.

15. இதுவே புத்தரின் கருத்து-இதன் காரணமாகவே அவர் சமத்துவத்தைப் போதிக்காத மதம் ஏற்புடையதன்று என வாதித்தார்.

16. அடுத்தவர்களுக்குத் துன்பம் உண்டாக்குவதன் மூலம் ஒருவன் தனக்கு இன்பம் தரும் செயல்களையும், ஒருவன் தனக்குத் துன்பமுண்டாக்கிக் கொள்வதன் மூலம் பிறருக்கு இன்பம் தரும் செயல்களையும் பரிந்துரைக்கும் ஒரு மதத்தை நீங்கள் மதிக்கவோ நம்பவோ இயலுமா?

17. தன்கும் இன்பத்தை-பிறருக்கும் இன்பத்தை ஒரே நேரத்தில் அளிக்கப் கூடிய-அடக்குமுறை எதையும் பொறுத்துக் கொள்ளாத சமயமே சிறந்ததல்லவா?

18. சம்துவத்தை எதிர்த்த பிராமணர்களை அவர் கேட்ட முக்கிய வினாக்களில் சில இவை.

19. ஒரு மனிதனின் சொந்த மதிப்புமிக்க நாட்டத்தில் இருந்து ஊற்றெடுக்கும் நிறைவான நீதியாக் புத்தரின் சமயம் உள்ளது.

## மதமும் தம்மமும்

1. மதம் என்பது என்ன?

1. மதம் என்கிற சொல் ஒரு குறிப்பிட்ட நிணையிக்கப்பட்ட பொருளுடைய சொல் அல்ல.

2. பல பொருள்களுடைய ஒரு சொல் அது.

3. இது ஏனென்றால் மதம் பல கட்டங்களைத் தாண்டி வரநேர்ந்ததால் தான். ஒவ்வொரு காலகட்டடத்திலும் மதம் என்பதற்கு ஒரு கருத்துரு அமைக்கப்பட்டு வருகிறது. ஒரு காலகட்டத்தில் வழங்கப்பட்ட அதே பொருள் மதம் என்று சொல்லுக்குப் பிறிதொரு கால கட்டத்தில் இருந்ததில்லை.

4. மதம் என்ற சொல்லின் கருத்து எப்போதும் நிர்ணயிக்கப்பட்டதில்லை.

5. காலத்துக்குக் காலம்அது மாறிக் கொண்டே வந்துள்ளது.

6. ஏனென்றால் மின்னல், மழை, வெள்ளம் போன்றவை ஏற்பட்ட போதெல்லாம் தொடக்க கால மனிதனுக்கு அவற்றைப்பற்றிய எந்த விவரமும் விளங்கவில்லை. அவற்றைத் தணிவிப்பதற்கு மந்திர தந்திரங்களோடு சம்பந்தப்பட்டதாய் அப்போது கருதப்பட்டது.

7. அடுத்து மதத்தின் பரிணாமத்தின் அடுத்த கட்டம் தோன்றியது. இக்கட்டத்தில் மதம், நம்பிக்கைகள், சடங்குள், பிரார்த்தனைகள், பலியாகங்கள் ஆகியவற்றோடு சம்பந்தப்படுத்தப்பட்டது.

8. ஆனால் மதம் பற்றிய இந்தக் கருத்து வெறும் புறநிலைக்கருதுகோள் மட்டும்.

9. மதத்தின் மையக்கருத்து ஆதி மனிதன் விளங்கிக் கொள்ள முடியாமல் தவித்த, மின்னல், மழை, வெள்ளம் போன்றவற்றை உருவாக்கும் ஏதோ ஒரு பெரும்சக்தி இருப்பதாக நம்புவதிலிருந்தே தொடங்குகிறது. மந்திர தந்திரம்தான் மதம் என்னும் கருத்து இக்கால கட்டத்தில் அடிப்பட்டுவிட்டது.

10. தொடக்கத்தில் அந்தச்சக்தி பயங்கரமானதாகக் கருதப்பட்டது. ஆனால் காலம் செல்லச் செல்ல அது உதவிகராமான சக்தியாகவும் கருதப்படலாயிற்று.

11. நம்பிக்கைகள், சடங்குகள், பூசைகள், பலி யாகங்கள் ஆகியவை உதவிகரமான சக்திகளுக்குக் கோபத்தைத் தணிக்கவும் அவசியமானவையாகக் கருதப்பட்டன.

12. பிறகு அந்தச சக்தி தெய்வம் அல்லது படைத்தவன் என்று அழைக்கப்பட்டது.

13. அதற்கடுத்து வந்த மூன்றாவது கட்டத்தில் அந்தக் கடவுள் தான் உலகத்தையும் மனிதனையும் படைத்தவர் என்று கருதப்பட்டது.

14. மனிதனுக்கு ஆன்மா உள்ளது என்றும், அந்த ஆன்மா அழியாதது என்றும் மனிதன் செய்யும் எல்லாச் செயல்களுக்கும் அந்த ஆன்மா கடவுளுக்குப் பதில் கூறியாக வேண்டும் என்றும் கருதுகிற நம்பிக்கை இந்தத் தெய்வ நம்பிக்கையைத் தொடர்ந்து ஏற்பட்டது.

15. மதம் என்னும் கருத்துருவாக்கத்தின் பரிணாம வளர்ச்சிபற்றிய சுருக்கம் இதுதான்

16. இதுதான் மதம் தோன்றிய விதம், இதுதான் மதத்தின் சாராம்சம்-கடவுள் மீது நம்பிக்கை ஆன்மாவின் இருப்பில் நம்பிக்கை, கடவுளை வணங்குதல், தவறிழைக்கும் ஆன்மாவைச் சரிசெய்தல், பிரார்த்தனையால் கடவுளை வசீகரித்தல், சடங்குகள், பலி யாகங்கள் முதலியன.

2. தம்மம் எவ்வாறு மதத்திலிருந்து மாறுபடுகிறது?

1. புத்தரால் தம்மம் என்று அழைக்கப்படுவது அடிப்படையிலேயே மதம் என்று அழைக்கப்படுவதிலிருந்து மாறுபடுகிறது.

2. தம்மம் என்று புத்தரால் அழைக்கப்படுவது ஐரோப்பிய தத்துவவாதிகளால் மதம் என்று அழைக்கப்படுவதோடு ஓரளவு ஒப்புமை உடையது போல் தோன்றுகிறது.

3. ஆனால் இவ்விரண்டுக்கும் இடையில் அதிக ஒற்றுமையில்லை. மாறாக இவ்விரண்டுக்கும் இடையிலான வேற்றுமைகள் மிகப்பெரிது.

4. இவ்வகை காரணத்துக்காகவே சில ஐரோப்பிய தத்துவவாதிகள் புத்தரின் தம்மைத்தை மதம் என்று ஒப்புக் கொள்ள மறுத்து விடுகிறார்கள்.

5. இதற்காக யாரும் வருந்த வேண்டியதில்லை. இதனால் நட்டம் அவர்களுக்குதான். இதனால் தம்மத்திற்கு ஒரு குறைவுமில்லை, மேலும் மதம் என்பதன் குறைபாடுதான் இதனால் விளக்கமாகிறது.

6. இந்தக் கருத்து மாறுபாட்டுக்கான சர்ச்சைக்குள் இறங்குவதைவிட தம்மம் என்பது யாது எனவும் அது மதம் என்பதிலிருந்து எவ்வாறு வேறுபடுகின்றது என்றும் விளங்கிக் கொள்வது மிகவும் நல்லது.

7. மதம் என்பது தனிப்பட்டது, தனியொருவன் அதைத் தனக்கென வைத்துக் கொள்ள வேண்டியது என்றும் கூறப்பட்டுள்ளது. பொது வாழ்வில் அது பங்காற்ற ஒருவன் அனுமதிக்கப் கூடாதெனக் கூறப்படுகிறது.

8. ஆனால் இதற்கு மாறாக தம்மம் என்பது சமூக சம்மந்தப்பட்டது. அடிப்படையாகவும், சாராம்சத்திலும் தம்மம் சமூக வயப்பட்டது.

9. தம்மம் என்பது ஒழுக்கம்-அதாவது வாழ்வில் எல்லா அம்சங்களிலும் மனிதனுக்கும், மனிதனுக்கும் இடையில் நிலவ வேண்டிய சரியான உறவை விளக்குவது அது.

10. ஒருவன் தனிமனிதனாக வாழ்வானேயானால் அவனுக்குத் தம்மமே தேவைப்படாது என்று இதிலிருந்து தெரிகிறது.

11. ஆனால் ஒருவருக்கொருவர் தொடர்புடன் இரு மனிதர்கள் வாழும் போது, தம்மத்திற்கு அவர்கள் வாழ்வில் இடம் தந்தாக வேண்டும்-அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவர்கள் இருவரில் ஒருவரும் அதனிடமிருந்து தப்ப முடியாது.

12. வேறு வகையில் சொல்வதானால் தம்மமில்லாமல சமூகம் இயங்க முடியாது.

13. மூன்று வெவ்வேறு நிலைப்பாடுகளிலிருந்து ஒரு நிலைப்பாட்டைச் சமூகம் தேர்வு செய்து கொள்ள வேண்டும்.

14. அரசாங்கத்தின் கருவியாக தம்மம் எதையும் சமூகம் தெரிவு செய்து கொள்ளாமலிருக்கலாம். அரசாங்கத்தின் கருவியாக இல்லாவிடில் தம்மம் ஏதுமற்றதாகிவிடும்.

15. இவ்வழியில் சென்றால், அதாவது தம்மத்தின் வழியில் அரசு நடத்தப்படவில்லை என்றால் சமூகம் அராஜகப் பாதையைத் தேர்வு செய்து கொண்டதாக அர்த்தம்.

16. இரண்டாவதாகச் சமூகம் போலீஸ் வழியை அதாவது அரசாங்கத்தின் கருவியாக எதேச்சாதிகாரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

17. மூன்றாவதாக, சமூகம் தம்மத்தையும், தம்மத்தை மக்கள் பின்பற்ற தவறாமல் பார்த்துக் கொள்ள நீதிமானையும் (மாஜிஸ்திரேட்) தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

18. அராஜக அரசிலும், எதேச்சதிகார அரசியலும் சுதந்திரம் பறிபோய்பிடும்.

19. மூன்றாவது வழியான தம்ம அரசில்தான் சுதந்திரம் வாழும்.

20. எனவே சுதந்திரத்தை விரும்பும் எவரும் தம்மத்தைக் கைக்கொள் வேண்டும்.

21. ஆமாம்! தம்மம் என்பது தான் என்ன? தம்மம் ஏன் அவசியமாகிறது. புத்தரின் கூற்றுப்படி தம்மம் என்பது பிரக்ஞை, கருணை ஆகியவற்றால்லானது.

22. பிரக்ஞை என்றால் என்ன? ஏன் வேண்டும் பிரக்ஞை? பிரக்ஞை என்பது எதையும் உள்ளது உள்ளபடி புரிந்து கொள்ளுதல், தனது தம்மத்தின் முக்கியத் தூணாக புத்தர் பிரக்ஞையை அமைத்தார், ஏனென்றால் மூட நம்பிக்கைக்கு ஒரு சிறிய வாய்ப்பும் அளிக்க அவர் விரும்பவில்லை.

23. கருணை என்றால் என்ன? ஏன் வேண்டும் கருணை? கருணையே அன்பு கருணையாம். அன்பு இல்லாமல் சமூகம் வாழவும் முடியாது வளரவும் முடியாது. அதனால்தான் புத்தர் தமது தம்மத்தின் இரண்டாவது தூணாகக் கருணையை அமைத்தார்.

24. இதுதான் புத்தரின் தம்மம் பற்றிய வரையறை.

25. தம்மத்தின் வரையறை மதத்தின் வரையறையிலிருந்து எவ்வளவு மாறுபட்டிருக்கிறது...?

26. புத்தர் தந்த தம்மத்தின் வரையறை மிகவும் பழமையானது-ஆனாலோ மிகவும் புதுமையானது.

27. தொன்று தொட்டு வருவது-ஆனால் தொடர்ந்து மாறா உண்மையாயிருப்பது.

28. எவரிடமிருந்தும் கடன் பெற்ப்படாதது - ஆனால் எப்போதக்கும் உண்மையாயிருப்பது.

29. பிரக்ஞை, கருணை ஆகியவற்றின் அற்புதக் கூட்டுப் பொருளே புத்தர் அளித்த தம்மம்.

30. இதுவே மதத்திற்கும், தம்மத்திற்கும் உள்ள வேறுபாடு. ஆம்! மதம் வேறு! தம்மம் வேறு!

3. மதத்தின்நோக்கமும், தம்மத்தின்நோக்கமும்.

1. மதத்தின் நோக்கம் யாது? தம்மத்தின் நோக்கம் யாது.? இரண்டும் ஒன்றுதானா? அல்லது வேறு வேறா?

2. இவ்வினாக்களுக்கான விடை புத்தரின் இரு உரையாடல்களில் காணப்படுகிறது-ஒன்று புத்தருக்கும் சுநக்கத்தருக்கும் இடையே நடந்தது, மற்றொன்று புத்தருக்கும் போத்தபாதர் என்னும் பிராமணருக்கும் நடைபெற்றது.

3. மேன்மை தங்கிய புத்தர் ஒருமுறை 'மல்லர்கள்' மத்தியில் அவர்களுடைய நகரங்களில் ஒன்றான 'அநுபியா' என்பதில் தங்கியிருந்தார்.

4. ஒருநாள் அதிகாலையில் மேன்மை தங்கிய புத்தர் தம் ஆடையை அணிந்துக் கொண்டு, பிட்சா பாத்திரத்துடன் நகருக்குள் புகுந்தார்.

5. தாம் வெகு சீக்கிரம் புறப்பட்டு விட்டதாக வழியில் அவருக்குத் தோன்றியது. எனவே 'பக்கவர்' என்னும் துறவியின் இருப்பிடத்திற்குச் சென்று அவரைச் சந்தித்தார் புத்தர்.

6. உயர்வெய்திய புத்தரைக் கண்டதும் பக்கவர் எழுந்து வணங்கிக் கூறினார் 'தயவு செய்து அமருங்கள் ஐயா! தங்களுக்கான இருக்கை தயாராயுள்ளது.'

7. ம்மைதங்கிய புத்தர் அவ்விருக்கையில் அமரவும், பக்கவர் சற்றுத் தாழ்வான, இருக்கையில் அவருக்கருகில் அமாந்தார். அமர்ந்த துறவியான பக்கவர், மேன்மைதங்கிய புத்தரிடம் பின்வருமாறு உரையாடினார்!.

8. "சில நாட்களுக்கு முன்-இல்லை-வெகு நாட்களுக்கு முன் 'லிச்சாவி' பகுதியைச் சேர்ந்த சுநக்கத்தர் என்னிடம் கூறினார். நான் இப்போது மேன்மை தங்கிய புத்தரின் தொடர்பை விட்டுவிட்டேன், இனி அவரை என் போதகராக நான் ஏற்கப் போவதில்லை" என்று தெரிவித்தார், அவர் கூறியது உண்மைதானா ஐயா?

9. ஆம்! பக்கவரே! லிச்சாவியை சேர்ந்த சுநக்கத்தர் கூறியது உண்மைதான் என்று பதிலிறுத்தார் உயர்வெய்திய புத்தர்.

10. சில நாட்களுக்கு முன்-இல்லை-வெகு நாட்களுக்கு முன், லிச்சாவியைச் சேர்ந்த சுநக்கத்தர் வந்து என்னைச் சந்தித்தப் பின்வருமாறு கூறினார். ஐயா! இப்போது நான் மேன்மைத்தங்கிய தங்களை விட்டு நீங்கி விடுகிறேன். இனி தங்களை என் போதகராக நான் எப்போதாவது தங்களை என்னிடம் சீடராக வந்திருக்கும்படி அழைத்ததுண்டா?

11. இல்லை ஐயா! அவ்வாறு தாங்கள் என்னை அழைத்தில்லை.

12. "அல்லது தாங்கள் எப்போதாவது என்னிடம் ஐயா! மேன்மை தங்கிய தங்களை ஆசிரியராக ஏற்றுத் தங்களுடன் இருக்கிறேன் என்று கூறியதுண்டா?"

13. "இல்லை ஐயா! அவ்வாறு நான் கூறியதில்லை."

14. பின்னர் அவரை கேட்டேன் நானும் தங்களை அவ்வாறு கேட்டதில்லை-தாங்களும் அவ்வாறு கூறியதில்லை-பின்விட்டு நீங்குவதை பற்றிப் பேச நீங்கள் யார்? நான் யார்? அறியாமை கொண்டவரே! நீங்களே தங்கள் தவறை உணருங்கள்.

15. நல்லது ஐயா! ஆனால் மேன்மைதங்கிய புத்தரான தாங்கள் சாதாரண மனிதசக்திக்கு அப்பாற்பட்ட ஆன்மீக அற்புதங்கள் எதையும் எனக்கு நிகழ்த்தவில்லையே!

16. சநக்கத்தரே! நான் தங்களிடம் எப்போதாவது வாருங்கள் சுநக்கத்ரே! என்னைத் தங்கள் ஆசானாக ஏற்றுக் கொள்ளுங்கள் நான் சாதாரண மனிதசக்கிக்கு அப்பாற்பட்ட ஆன்மீக அற்புதங்களை உமக்கு நிகழ்த்துகிறேன், என்று கூறியதுண்டா?

17. இல்லை ஐயா! தாங்கள் அவ்வாறு கூறியதில்லை.

18. அல்லது தாங்கள் எப்போதாவது என்னிடம், ஐயா! மேன்மைதங்கிய புத்தராகிய தங்களை நான் என் ஆசானாக ஏற்றுக்கொள்கிறேன்-எனக்காக சாதாரண மனித சக்திக்கு அப்பாற்பட்ட, ஆன்மீக அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுங்கள்' என்று கேட்டதுண்டா?

19. இல்லை ஐயா! தாங்கள் அவ்வாறு கூறியதில்லை.

20. நானும் தங்களிடம் அவ்வாறு கூறியதில்லை நீங்களும் என்னிடம் அதைக் கேட்டதில்லை-பின் விட்டு நீங்குவதைப் பற்றிப் பேச நீங்கள் யார்? நான் யார்? அறியாமை கொண்டவரே! சுநக்கத்தரே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? சாதாரண மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஆன்மீக அற்புதங்கள் நிகழ்த்தப போதிப்பதன் நோக்கம் தீமை செய்பவனின் தீமையை முற்றிலுமாக அழிப்பது தானே?

21. "ஆம்! மேன்மை தங்கியவர் போதிக்கும் தம்மத்தின் நோக்கம் அது தான்."

22. 'அப்படியாயின் சுநக்கத்தரே! தம்ம நோக்கத்திற்கு, அற்புதங்களை நிகழ்த்துதல் ஒரு பொருட்டல்ல என்றால், அவற்றை நிகழ்த்துவதால் என்ன பயன்? அறியாமை கொண்டவரே! தங்கள் தவறைத் தாங்களே உணருங்கள்.'

23. ஆனாலும் ஐயா! மேன்மைதங்கிய புத்தரான தாங்கள் பிரபஞ்சத்தின் தோற்றத்தைப் பற்றி எனக்கு எதுவும் வெளிப்படுத்தவில்லையே.

24. சுநக்கத்தரே! எப்போதாவது நான் தங்களிடம் வாரும் சுநக்கத்தரே என் சீடராக நீர் இருப்பின் பிரபஞ்சப் பொருள்களின் தோற்றத்தை உங்களுக்கு வெளிப்படுத்துகிறேன் என்று கூறியதுண்டா?

25. இல்லை ஐயா தாங்கள் அவ்வாறு கூறியதில்லை.

26. அல்லது தாங்கள் எப்போதாவது என்னிடம் மேன்மை தங்கிய புத்தராகிய தாங்கள் எனக்குப் பிரபஞ்சப் பொருளின் தோற்றத்தை வெளிப்படுத்தினால் - நான் தங்கள் சீடராக இருக்கிறேன் என்று கூறியதுண்டா?

27. இல்லை ஐயா! நான் தங்களிடம் அவ்வாறு ஒரு போதும் கூறியதில்லை.

28. நானும் தங்களிடம் அவ்வாறு கூறியதில்லை தாங்களும் என்னிடம் அவ்வாறு கேட்டதில்லை. பின்,ரு குறித்து விட்டு நீங்குவதைப் பற்றிப் பேச நீங்கள் யார்? நான் யார்? அறியாமை கொண்டவரே! சுநக்கத்தரே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பிரபஞ்சப் பொருள்களின் தோற்றம் வெளிப்படுத்தப்பட்டாலும், இல்லையென்றாலும் நான் தம்மத்தை போதிப்பதன் நோக்கம் தீமை செய்பவனின் தீமையை முற்றிலுமாக அழிப்பது தானே?

29. ஆம்! மேன்மை தங்கிய புத்தராகிய தாங்கள் போதிக்கும் தம்மத்தின் நோக்கம் அதுதான்.

30. அப்படியாயின், சுநகத்தரே! தம்மத்தின் நோக்கத்திற்கு பிரபஞ்சத்தின் தோற்றம் வெளிப்படுத்தப்படுவதால் பயனேதும் இல்லையல்லவா?

31. மதம் பிரபஞ்சப் பொருள்கள் தோற்றத்தை வெளிப்படுத்துவதைப் பொருட்படுத்துகிறது. தம்மம் அவ்வாறு பொருட்படுத்துவதில்லை என்பதை இவ்வுரையாடல் நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

மதத்திற்கும் தம்மத்திற்கும் இடையிலுள்ள மற்ற வேறுபாடுகள் உயர்வெய்திய புத்தருக்கும் போத்தபாதருக்கும் இடையில் நடைபெற்ற விவாதத்தில் வெளிப்படுகின்றன.

1. உயர்வெய்திய புத்தர் ஒருமுறை 'ஷ்ராவஸ்தி' என்னும் ஊரில் அநாதபிண்டிகரின் 'ஜேதவன' சோலையில் தங்கியிருந்தார். அதே வேளையில் அரசி மல்லிகாவின் சோலையில் உள்ள கூடத்தில் தத்துவமுறைகள் பற்றிய விவாதத்திற்காகப் போத்தபாதர் என்னும் துறவி தங்கியிருந்தார்.

2. அவருடன் தத்துவ விசாரணையைக் கேட்டறியப் பெரும்பான்மையான துறவிகள்-சுமார் முந்நூறு பேர் வீற்றிருந்தார்கள். உயர்வெய்திய புத்தருக்கும் போத்தபாதகருக்கும் இடையே அப்போது ஒரு விவாதம் எழுந்தது, போத்தபாதர் வினவினார்:

3. "அப்படியானால் குறைந்தபட்சம் இதற்கு உறுதியாகப் பதில் கூறுங்கள், இந்த உலகம் என்றும் நிலைப்பெற்றிருப்பதா? இது தான் உண்மையெனில், மற்ற கருத்துக்கள் யாவும் பொய்மையா?"

4. "போத்தபாதரே! இதைப்பற்றி நான் கருத்து எதுவும் கூறவதில்லை" என்று பதிலிறுத்தார் உயர்வெய்திய புத்தர்.

5. பிறகு அதே வகையில் கீழ்கண்ட ஒவ்வொரு வினாவையும் தொடுத்தார் போத்தபாதர்!

(1) இந்த உலகம் நிலையற்றதா?

(2)இந்த உலகம் எல்லையுடையதா?

(3) இந்த உலகம் எல்லையற்றதா?

(4) ஆன்மாவும் உடலும் ஒன்றா?

(5) ஆன்மாவும் உடலும் வேறுவேறா?

(6) உண்மையை உணர்ந்தவன் மரணத்துக்குப் பின்னும் வாழ்கிறானா?

(7) அவன் மரணத்துக்குப்பின் வாழ்வதில்லையா?

(8) மரணத்துக்குப்பின் அவன் வாழவும் செய்கிறான் வாழாமலுமிருக்கிறான் எனலாமா?

(9) மரணத்துக்குப் பின் அவன் வாழ்வதுமில்லை வாழாமலுமில்லை எனலாமா?

6. இந்த வினாக்கள் ஒவ்வொன்றிற்கும், உயர்வெய்திய புத்தர் ஒரே பதிலையே கூறிவந்தார்.

7. "போததபாதரே, இவற்றைப்பற்றி நான் கருத்து எதுவும் கூறுவதில்லை."

8. "மேன்மை தங்கிய புத்தர் இதைப்பற்றி ஏன் எக்கருத்தும் கூறுவதில்லை?"

9. "ஏனென்றால் இவ்வினாவால் எந்தப் பயனும் இல்லை, இவ்வினா தம்மத்தோடு தொடர்புடையவை அல்ல, நல்லொழுக்கத்திற்கோ பற்றற்ற தன்மைக்கோ, அவா அறுத்தலுக்கோ, உள்ளத் தூய்மைக்கோ, சமநிலைக்கோ, உண்மை அறிவிற்கோ, உள்நோக்குடைய மிக உயரிய நற்பாதைக்கோ, நிப்பானத்துக்கோ இந்த வினாக்கள் பயன்படுவதில்லை. எனவே இவ்வினாக்களுக்கு நான் விடைதேடுவதில்லை."

10. அப்படியாயின் மேன்மை தங்கிய புத்தராகிய தாங்கள் எதைத்தான் பொருட்படுத்துகின்றீர்கள்?

11. "போத்துபாதுரே! துக்கம் என்பது என்னவென்றும், துக்கத்தின் தொடக்கம் எதுவென்றும், துக்க-ஒழிப்பு எனில் யாதென்றும், துக்கத்தை ஒழிக்கும் வழி இன்னதென்றும் நான் விளக்கியிருக்கிறேன்."

12. "இது பற்றி மேன்மை தங்கிய புத்தராகிய தாங்கள் விளக்குவது ஏன்?"

13. ஏனெனில், துக்கம் பற்றிய இவ்வினாக்கள் பயனுடையவை, தம்மத்தோடு தொடர்புடையவை, நல்லொழுக்கத்தின் பற்றறுத்தலின், அவா அறுத்தலின், அமைதியின் உள்ளத் தூய்மையின், சமநிலையின், உண்மை அறவின், உள்ளுணர்வின், உயர்நிலையின், நிப்பான மார்க்கத்தின் தொடக்கங்களோடு தொடர்புடையவவை. எனவே, போத்தபாதரே, இவை பற்றியே நான் விளக்குகிறேன்.

14. மதத்தின் அடிப்படை கோட்பாடுகள் தம்மத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் அல்ல என்பதை இந்த உரையாடல் மிகத் தெளிவாக வெளிப்படுத்துகின்றது. மதமும் தம்மமும் விலகிநிற்கும் இருவேறு துருவங்கள்.

15. மதத்தின் நோக்கம் உலகத்தின் தோற்றத்தை விளக்குவது, தம்மத்தின் நோக்கமோ உலகைப் புனரமைப்பது.

4. ஒழுக்கமும் மதமும்.

1. மதத்தில் ஒழுக்கத்தின் இடம்யாது?

2. உண்மையில் மதத்தில் ஒழுக்கத்திற்கு இடமேயில்லை.

3. கடவுள், ஆன்மா, பிரார்த்தனை, தொழுகை, சடங்குகள், பூசைகள், பலி யாகங்கள் ஆகியவைகள மட்டுமே உடையது மதம்.

4. ஒழுக்கம் என்பது மனிதன் மற்றொரு மனிதனோடு தொடர்பு கொள்ளும் போது மட்டுமே தோன்றுகின்ற விஷயம்.

5. அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்ட வேண்டிய அவசியத்தின் அடிப்படையிலேயே ஜன்னல் காற்றாய் மதங்களுக்குள் ஒழுக்கம் வருகிறது.

6. மதம் என்பது ஒரு முக்கோணத் துண்டு.

7. "உன்னை அடுத்திருப்பவனிடம் நீ நல்லவனாக இரு- ஏனென்றால் நீங்கள் இருவரும் கடவுளின் குழந்தைகள்."

8. இதுதான் மதங்களின் வாதம்.

9. எல்லா மதங்களும் ஒழுக்கத்தைப் போதிக்கின்றன-ஆனால் ஒழுக்கம் மதத்தின் அடிப்படையல்ல.

10. ஒழுக்கமென்பது மதம் என்ற எஞ்சினுடன் இணைக்கப்படும் தொடர் வண்டிப் பெட்டித்தான் - தேவைக்கேற்ப அது இணைக்கப்படும்-கழற்றப்படும்.

11. மதத்தின் இயக்கத்தில் ஒழுக்கம் கட்டாயமானதோ எப்போதும் இருக்கவேண்டியதோ அல்ல.

12. எனவே மதத்தில் ஒழுக்கம் என்பது உறுதியான விளைவுகளற்றது-உதிரியானது.

5. தம்மமும் ஒழுக்கமும்

1. தம்மத்தின் ஒழுக்கத்தின் இடம் யாது.?

2. எளிய விடை இதுதான்: தம்மம் தான் ஒழுக்கம்: ஒழுக்கம் தான் தம்மம்.

3. வேறுவகையில் சொல்வதானால் மதத்தில் கடவுளுக்கு என்ன இடம் வழங்கப்படுகிறதோ அந்த இடம் தம்மத்தில் ஒழுக்கத்திற்கு வழங்கப்படுகின்றது-தம்மத்தில் கடவுளுக்கு இடம் இல்லை.

4. தம்மத்தில் பிரார்த்தனைக்கோ, புனித யாத்திரைக்கோ, சடங்குகளுக்கோ, பூசைக்கோ தொழுகைக்கோ, பலியாகத்திற்கோ இடமேயில்லை.

5. தம்மத்தின் சாரம் ஒழுக்கம் தான், அது இல்லாமல் தம்மமே இல்லை.

6. மனிதன் மனிதனை நேசிக்க வேண்டிய அவசியத்தின் நேரடி விளைவாக தம்மத்தின் ஒழுக்கம் தோன்றுகின்றது.

7. கடவுளின் அங்கீகரிப்பு தம்ம ஒழுக்கத்திற்கு தேவையில்லை. மனிதன் ஒழுக்கத்தோடு நடக்க வேண்டுமென்பது கடவளை மகிழ்விக்க என்று மதங்கள் கூறுவது போல் தம்மம் போதிக்கவில்லை. மனிதன் மனிதனை நேசிக்க வேண்டியிருப்பதால் அவனுடைய நன்மைக்காகவே மனிதன் ஒழுக்கமாய் நடந்தாக வேண்டும். இதுவே தம்மம்.

6. வெறும் ஒழுக்கம் மட்டும் போதுமானதன்று, அது உன்னதமானதாகவும் உலகளாவியதாகவும் இருக்க வேண்டும்.

1. ஒன்று எப்போதும் உன்னதமாகிறது? ஒன்று ஏன் உன்னதமாகிறது?

2. ஒவ்வொரு மனித சமுகத்திலும், தொடக்க நிலையினதாயினும், முன்னேறியதாயினும், அதில் சில பொருள்கள் அல்லது நம்பிக்கைகள் உன்னதமானவையாய்க் கருதப்படும்-மற்றவை தாழ்ந்தவையாய் எண்ணப்படும்.

3. ஒரு பொருள் அல்லது நம்பிக்கை உன்னத நிலையை (பிவத்திரம்) அடைகிறதெனின், அது மீறப்படக் கூடாதென்று பொருள். உண்மையில் அது, தொவும் ஏலாதது. அது தடுக்கப்பட்டது.

4. இதற்கு மாறாக ஒரு பொருள், அல்லது நம்பிக்கை தாழ்ந்ததாயின் (அபவித்ரம்)-அதாவது உன்னதத்திற்கப்பாற்பட்டதாயின் அது மீறப்படலாம். இதன் பொருள் அதை ஒருவன் எதிர்த்துச் செயல்படலாம்-அச்சம், குழப்பம், மனவருத்தம் ஆகிய எவ்வுணர்ச்சியுமின்றி.

5. உன்னதமானது 'புனித' மானதாய்க் கருதப்படுகிறது. அதை மீறுவது தீச்செயலாய்க் கருதப்படுகிறது.

6. ஒரு பொருள் ஏன் உன்னதமாகக்கப்படுகிறது? நம் கவனத்திலுள்ள இச் செய்தியைப் பொறுத்த வரையறைக்குள் அடங்குவதாயின் ஏன் ஒழுக்கம் உன்னதமானதாயிருக்க வேண்டும்?

7. ஒழுக்கத்தை உன்னதமாக்குவதற்குச் செயல்படும் கூறுகள் மூன்றாகும்.

8. முதல் கூறு சிறந்தவற்றைப் பாதுகாத்தலுக்கான சமூகத் தேவை.

9. இந்த வினாவின் பின்னணி வாழ்விற்கான போராட்டம், பலமுள்ளது வாழும் என்றழைக்கப்படுகிறது.

10. இது பரிணாம தத்துவத்தினின்று எழுவதாகும், ஆதியில் உணவுபற்றாக்குறையிருந்த காலத்தில் வாழ்வுக்கான போராட்டத்தினால், பரிணாமம் தோன்றியது என்பது பொது அறிவாகும்.

11. அந்தப் போராட்டம் மிகக் கடுமையானது. இயற்கையின் நகங்களும், பரிணாமம் தோன்றியது என்பது பொது அறிவாகும்.

12. இநதக் கடுமையான கொடுமையான போராட்டத்தில் வலியவையே வாழ்ந்தன.

13. சமூகத்தின் உண்மைநிலை இதுவே.

14. ஆதிகால நிலையில் யாரோ ஒருவர் இவ்வினாவை எழுப்பியிருக்க வேண்டும். "தக்கது (வலியது) சிறந்ததா? மிகச் சிறந்தவற்றால் சமூகத்தின் நோக்கங்களை அடைவதற்காக பலவீனமானவை பாதுகாக்கப்படலாகாதா?"

15. அன்று நிலவிய சமூகநிலை இதற்கான உடன்பாட்டுப் பதிலையே அளித்ததாகத் தெரிகிறது.

16. அதன்பின் இவ்வினா வருகிறது. பலவீனர்களைப் பாதுகாப்பது எப்படி?

17. வலியவற்றின் மீது சிலகட்டுப்பாடுகளை விதிப்பதைத் தவிர வேறுவழயில்லை.

18. ஒழுக்கத்திற்கான தேவையின் தொடக்கம் இதில் தான் அடங்கியுள்ளது.

19. இந்த ஒழுக்கம் உன்னதமானது ஏதெனில் அது தொடக்கத்தில் தக்கதன் மேல் விதிக்கப்பட்டது அதாவது வலியதன் மேல்.

20. இது கடுமையான விளைவுகளை உண்டாக்கியது.

21. முதலாவதாக, ஒழுக்கம் சமூகமயமாகையில், சமூக விரோதமாயிற்றா?

22. திருடர்களுக்கிடையே ஒழுக்கம் இல்லை என்பதில்லை. வர்த்தகரிடையே ஒழுக்கம் இருக்கிறது. ஒரு சாதியாரிடையே ஒழுக்கமுள்ளது. கொள்ளைக் கூட்டாத்தாரிடமும் ஒழுக்கமுள்ளது.

23. ஆனால் இந்த ஒழுக்கம் தனிப்பட்டதாய், அதற்கே உரியதாய் உள்ளது. இந்த ஒழுக்கம் 'குழு நலத்தைப்' பாதுகாப்பதாய் உள்ளது. எனவே இது சமூகவிரோதமானது.

24. இந்த வகை ஒழுக்கத்தின் தனிமைப்படலும், உரிமையாதலும் இந்த விடுவிப்பில் சமூகவிரோதத் தன்மையைச் சேர்க்கின்றன.

25. ஒரு குழு தன் நலத்தில் கொண்டுள்ள அக்கறை காரணமாய்க் கடைபிடிக்கும் ஒழுக்கத்தைப் பொறுத்தும் இந்நிலை உண்மையாகிறது.

26. இந்தச் சமூகத்தில் குழு அமைப்பின் விளைவுகள் பலவாகும்.

27. சமூகம் சமூக-விரோதக் குழுக்களை உடையதாயிருப்பின், சமூகம் ஒருங்கமையாததாய் உடைத்து சிதறிய சமூகமாகவே இருக்கும்.

28. ஒருங்கமையாத உடைந்து சிதறிய சமூகத்தின் ஆபத்து யாதெனில் அரு பல்வேறு மாதிரிகளையும், அளவீடுகளையும் உடையதாய் இருக்கும்.

29. பொது மாதிரிகள், பொது அளவீடுகள் இல்லாதபட்சத்தில் சமூகம் ஒரு ஒருங்கமைந்த முழுமையாய் இராது.

30. ஒரு சமூகம் மற்றொரு குழுவின்மேல் ஒரு குழுவின் உயராதிக்கத்தைப் பொறுத்ததாய் அமைந்து விடுகிறது-பகுத்தறிவிற்கும், விகிதாசார உரிமைக் கோரல்களுக்கும் எதிராக-இதனால் மோதல் எழுகிறது.

32. இந்த மோதலுக்கு ஒரு முடிவுகட்ட ஒரேவழி ஒழுக்கம் பற்றிய எல்லோர்க்கும் உன்னதமான பொது விதிகளை உருவாக்கிக் கொள்வதே.

33. ஒழுக்கம் உன்னதமானதாகவும் உலகளாவிய பொதுத்தன்மை உடையதாகவும் ஆக்கப்பட வேண்டுமென்பதற்கான மூன்றாவது காரணம் இதுவே. அது தனிமனிதனின், வளர்ச்சியைப் பாதுகாப்பதேயாகும்.

34. குழு ஆளுகையின் கீழ் வாழ்வு நிலைக்கான போராட்டத்தில, தனிமனிதர்களின் நலன்கள் பாதுகாக்கப்படுதில்லை.

35. அமைக்கப்பட்ட குழு ஒரு தனிமனிதன் தன் மன இயைபை அடைவதினின்றும் தடுக்கிறது-ஒரு சமூகம் பொதுக் கருத்துக்கள், பொது மாதிரிகள் உயைதாயிருப்பின் மட்டுமே அத சாத்தியம், அவனுடைய எண்ணங்கள் சிதறிப்போகின்றன. ஒற்றுமையைக் காண விழையும் அவன் உள்ளம் சீரழிக்கப் படுகிறது. சிதறடிக்கப்படுகிறது.

36. இரண்டாவதாக குழு அமைப்பு ஏற்றத்தாழ்விற்கும், நீதி மறுப்பிற்கும் இட்டுச் செல்கிறது.

37. குழு அமைப்பு வகுப்பு பேதங்களுக்கு வழிவகுக்கிறது. ஆதிக்கமுடையோர் ஆதிக்கமுடையோராகவும், அடிமையாய்ப் பிறந்தோர் அடிமைகளாகவுமே நீடிக்கின்றனர். உடைமையாளர் உடைமையாளர்களாகவும் உழைப்போர் உழைப்போராகவும் நீடிக்கின்றனர். ஆண்டைகள் ஆண்டைகளாகவும் அடிமைகள் அடிமைகளாகவுமே நீடிக்கின்றனர்.

38. சிலருக்குச் சுதந்திரம், பலருக்கு இல்லை என்பதே இதன் பொருள். ஆங்கு சிலருக்கே சமத்துவம்-பெரும்பான்மை யோர்க்கில்லை என்பதே இதன் பொருள்.

39. இதற்கு பரிகாரம்தான் யாது? சகோதரத்துவத்தை உலகளாவிய பொதுத்தாக்கமுற்றத் தத்துவமாய் ஆக்குவது ஒன்றே பரிகாரம்.

40. சகோதரத்துவம் என்பது யாது? மாந்தர்கள் அனைவர்க்குள்ளும் சமத்துவம் என்பதன் மறுபெயரே அது-ஒழுக்கத்தின மறுபெயரே அது.

41. எனவேதான் புத்தர் தம்மமே ஒழுக்கம்-தம்மம் உன்னதமானது-ஒழுக்கமும் அவ்வாறே எனப் போதித்தார்.

எப்படி சொல்லமைப்பின் ஒற்றுமை அடிப்படை வேறுபாட்டை மறைக்கிறது.

மறுபிறப்பு

1. முன்னோட்டம்.

1. மரணத்திற்குபின் என்ன நேர்கிறது என்பது அடிக்கடி கேட்கப்படும் ஒரு கேள்வியாகும்.

2. புத்தரின் சமகாலத்தவர்கள் இருவேறு கருத்துடையவர்களாய் இருந்தார்கள். ஒரு குழுவினர் அமரத்வவாதிகள் என்றும் மற்றொரு குழுவினர் நிலையாமைவாதிகள் என்றும் அழைக்கப்பட்டனர்.

3. ஆன்மா மரணமுறுவதில்லை என்றனர் அமரத்வவாதிகள்; எனவே வாழ்க்கை அமரத்வமானது. அது மறுபிறப்பால் புதுபிக்கப்படுகிறது.

4. நிலையாமைவாதிகளின் கொள்கை ஒரே சொல்லில் சுருக்கத் தொகுப்பாய்-மரணம் அனைத்துக்கும் இறுதியாகிறது-மரணத்திற்கு பின் விஞ்சுவது ஏதுமில்லை, என்று பொருள்தரும் உச்சேதவாதம் எனப்படுகிறது.

5. ஆன்மா அழிவற்ற தனித்தன்மையுடையது என்பதை எதிர்பபவரான புத்தர், அக்கொள்கையை உள்ளடக்கிய அமரத்வவாதியாயில்லை.

6. புத்தர் ஒரு நிலையாமை வாதியா? ஆன்மா இல்லாதது என்னும் அவருடைய நம்பிக்கையால், அவர் நிலையாமை வாதியாகவே இருப்பார் என இயல்பாய் எதிர்பார்க்கப்படும்.

7. ஆனால் அலகத்துபம்ம சுத்தத்தில், தாம் உண்மையில் அப்படி இல்லாதிருக்கையில், தாம் நிலையாமைவாதியென அாக்கப்படுவதாய் முறையிடுகிறார் புத்தர்.

8. அவர் கூறுவது இதுதான்: "நான் உறுதிப்படுத்துவதும் போதிப்பதும் இதுவேயெனில், சில துறவிகளும் பிராமணர்களும் தவறாகவும், பொய்யாகவும், போலியாகவும், உண்மைக்கு மாறாக, என்னை நிலையாமைவாதியென்றும், மனித குலத்தைச் சிதறடிக்கிற, சீரழிக்கிற, களைகிற வகையில் போதிப்பதாகவும் குறைகூறுகிறார்கள்.

9. "நான் இந்த நல்ல மக்களால் தவறாக, பொய்யாக, போலியாகக் குறைகூறப்பட்டு அழிவுவாதியாய் சித்தரிக்கப்படுகிறேனே-உண்மையில் நான் அவ்வாறில்லை-நான் அப்படி உறுதிப்படுத்தவுமில்லை."

10. இக்கூற்று சரியானதாயிருப்பின், பவுத்தக் கோட்பாட்டைச் சிதைக்க எண்ணிய பிராமணரின் இடைச் செருகல் அன்றாயின், இக் கூற்று மிகக் கடினமானதொரு முரண்பாட்டை விளைவிக்கின்றது.

11. புத்தர் ஆன்மாவின் இருப்பில் நம்பிக்கையற்றவராக இருந்தும் தான் ஒரு அழிவுவாதியில்லை என எப்படிக் கூற முடியும்?

12. இது இக்கேள்வியை எழுப்புகிறது: புத்தர் மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டாரா?

2. எதன் மறுபிறப்பு?

1. புத்தர் மறுபிறப்பை நம்பினாரா?

2. பதில் உடன்பாடானதாயுள்ளது.

3. இந்த வினாவை மேலும் இரு பிரிவுகளாகப் பிரித்துக் கொள்ளுதல் சிறப்பாகும் 1. எதன் மறுபிறப்பு மற்றும் 2) யாருடைய மறுபிறப்பு.

4. இந்த வினாக்களில் ஒவ்வொன்றையும் தனித்தனியாய் எடுத்துக் கொள்வது சிறப்பாகும்.

5. நாம் முதல் வினாவைக் கருதுவோம். எதன் மறுபிறப்பு?

6. இந்த வினா பெரும்பாலும் அசட்டை செய்யப்படுகிறது. ஏனெனில் இவ்விரு வினாக்களும் ஒன்றாக்கப்படுவதால் இத்தனை குழப்பம் ஏற்படுகின்றது.

7. புத்தரின் கருத்துப்படி ஒரு உடலை உருவாக்கும் இருப்பு நிலையின் மூலங்கள் நான்காகும். அவையாவன 1. ப்ரித்வி; 2. அபா; 3.தேஜ்; மற்றும் 4. வாயு.

8. உடல் மரணமடையும் போது இந்த நான்கு மூலங்களுக்கு என்ன நேர்கிறது என்பது வினா, அவைகளும் மரணமுற்ற உடலோடு சோந்து மரணித்து விடுகின்றனவா? அவை அப்படிச் செய்வதாகச் சிலர் கூறுகிறார்கள்.

9. இதனை மறுத்தார் புத்தர். அவை வெளியிடத்தில (விணணில்) மிதக்கும் அவற்றையொத்த மூலங்களின் தொகுதியோடு இணைந்து விடுகின்றன.

10. இந்த மிதக்கும் தொகுதியில் இருந்து நான்கு மூலங்கள் ஒன்றாயிணையும் போது ஒரு புதிய பிறப்பு இடம் பெறுகிறது.

11. மறுபிறப்பு பற்றி புத்தர் கருதியது இதுவே.

12. இந்த மூலங்கள் இறந்த ஒரே உடலிலிருந்தவையாயிருக்க வேண்டிய அவசியமுமில்லை-கட்டாயமுமில்லை. அவை இறந்த வெவ்வேறு உடல்களிலிருந்து சேர்ந்த தொகுதியிலிருந்து ஈர்க்கப்பட்டிருக்கலாம்.

13. உடல் இறக்கிறது என்பது கவனிக்கப்பட வேண்டும். ஆனால் மூலங்கள் எப்போதும் வாழ்கின்றன.

14. இவ்வகையான மறுபிறப்பிலேயே புத்தர் நம்பிக்கை கொண்டிருந்தார்.

15. மஹாகோத்திதரோடு சாரிபுத்ரரால் மேற்கொள்ளப்பட்ட உரையாடலில் இவ்விஷயம் மகிநன்கு விளக்கப்பட்டது.

16. ஒருமுறை புத்தர் ஷ்ராவஸ்தியில், அநாதபிண்டிகரின் ஆசிரமத்திலுள்ள ஜேதவனச் சோலை விஹாரில் தங்கியிருக்கையில் மாலைநேர தியானங்களிலிருந்து எழுந்த மஹா கோத்திதர் சாரிபுத்ரரிடம் சென்று தம்மைத் தொல்லைப்படுத்தும் சில வினாக்களைத் தெளிவுபடுத்தும்படி கேட்டுக்கொண்டதாகக் கூறப்படுகிறது.

17. கீழ்வருவது அவற்றில் ஒன்று.

18. மஹாகோத்திதர் வினவினார்: "முதற்பெருமகிழ்ச்சி (தியானம்) வெளிவிடும் காரணிகளும் தானிருத்திக் கொள்ளும் காரணிகளும் எத்தனை?

19. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: ஒவ்வொரு வகைக்கும் ஐந்து விட்டொழிபவை காமம், குரோதம், சோம்பல், கவலை, மற்றும் ஐயம், உற்று நோக்கல், உய்த்துணரல், ஊக்கமுடைமை,திருப்தி மற்றும் ஒருமுகப்பட்ட மனம் ஆகியவை நிலைத்திருப்பவை.

20. மஹாகோத்திதர் வினவினார்: பார்வை, ஒலி, வாசம், சுவை, ஸ்பரிஸம் ஆகியவற்றின் ஐம்புலன்களை எடுத்துக் கொள்வோம்-ஒவ்வொன்றும் தன் சொந்த தளத்திலும்,

எல்லையிலும், தனியாகவும் பரஸ்ரம் வேறுபட்டும் இயங்கும். அவற்றின் இறுதி அடிப்படை யாது? அவற்றின் ஐந்து தளங்களையும்,எல்லைகளையும் அனுபவவிப்பது யார்?

21. சாரிபுத்ரர் பதிலிறுத்தார். "மனம் (மனோ)."

22. மஹாகோத்திதர் வினவினார்: "புலன்களின் இவ்வைந்து செயல்திறன்களும் எதைப் பொறுத்துள்ளன?"

23. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "உயிர்ச்சக்தியை"

24. மஹாகோத்திதர் வினவினார்: "உயிர்ச்சக்தி எதைப் பொறுத்துள்ளது?"

25. சாரிபுத்ரர் "வெப்பத்தை"

26. மஹாகோத்திதர் வினவினார்: "வெப்பம் எதைப் பொறுத்துள்ளது?"

27. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "உயிர்ச்சக்தியை."

28. மஹாகோத்திதர் வினவினார்: "உயிர்ச்சக்தி வெப்பத்தைப் பொறுத்துள்ளது என்கிறீர்கள், வெப்பம் உயிர்ச்சக்தியைப் பொறுத்திருக்கிறது என்றும் கூறுகிறீர்கள்! இதற்குக் கொள்ளப்பட வேண்டிய சரியான பொருள்தான் என்ன?"

29. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "நான் தங்களுக்கொரு எடுத்துக்காட்டு தருகிறேன். ஒரு விளக்கில் நிகழ்வது போல, ஒளிசுடைர வெளிப்படுத்துகிறது, சுடர் ஒளியை வெளிப்படுத்துகிறது-அதே போல் உயிர்ச்சக்தி வெப்பத்தைப் பொறுத்துள்ளது, வெப்பம் உயிர்ச்சக்தியைப் பொறுத்துள்ளது."

30. மஹாகோத்திதர் வினவினார்: "உணர்ச்சியற்ற ஒரு மரத்துண்டைப் போல உடல் தூர தூக்கி எறியப்படும் முன், அதை விட்டு எத்தனை பொருள்கள் சென்றுவிடும்?"

31. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "உயிர்ச்சக்தி, வெப்பம், தன்னுணர்வு."

32. மஹாகோத்திதர் வினவினர்: "காணும் உணர்வும், உணர்ச்சிகளும் செயலற்று நிற்க, உறங்குகிற பிட்சா பிக்குவிற்கும், உயிரற்ற பிணத்திற்குமிடையே என்ன வேறுபாடு?"

33. சாரிபுத்ரர் பதிலிறுத்தார்: "பிணத்தில், உடலின் வேதியல் இயங்குசக்திகளும், பேச்சும் மனமும் அடங்கிச் செயலற்றுப் போவதோடு மட்டுமின்றி, உயிர்ச்சக்தி அற்றுப்போய், வெப்பம் நீங்கி, புலன்களின் செயல்திறன் இற்று விடுகிறது; ஆனால் உறங்கும் பிட்சாபிக்குவிடம், சுவாசம் குறைந்து, உற்றுநோக்கலும், பார்வையும் செயலற்று

நின்றிருப்பினும், உயிர்ச்சக்தி நிலவுகிறது, வெப்பம் நிலைத்திருக்கிறது மற்றும் செயல்திறன்கள் தெளிவாயிருக்கின்றன."

34. பெரும்பாலும், மரணம் அல்லது அழிவு பற்றி இதுவே மிகச்சிறந்ததும், முழுமையானதும் ஆன விளக்கமாகும்.

35. இந்த உரையாடலில் விடுபட்ட இடைவெளி ஒன்றே ஒன்றுதான். மஹாகோத்திதர் சாரிபுத்ரரை ஒரு கேள்வி கேட்டிருக்க வேண்டும், வெப்பம் என்பது யாது?

36. சாரிபுத்ரர் என்ன பதிலைத் தந்திரப்பார் என்பதைக் கற்பனை செய்வது சுலபமன்று, ஆனால் வெப்பம் என்பதன் பொருள் 'சக்தியே' என்பதில் எந்த ஐயமும் இல்லை. உடல் மரணிக்கையில் என்ன நிகழ்கிறது?

37. இவ்வாறு விரித்துரைக்கப்பட்டபின் இவ்வினாவிற்கு உண்மையான விடை இதுவே: உடல் 'சக்தியை' உருவாக்குவது முடிந்து போகிறது.

38. ஆனால் இது விடையின் ஒரு பகுதி மட்டுமே ஏனெனில் என்னென்ன சக்திகள் உடலிலிருந்து விடுபடுகின்றனவோ அவையாவும் பிரபஞ்சத்தில் உலவிக் கொண்டிருக்கும் சக்தியின் பொதுத்தொகுப்பில் இணைந்து விடுகிறது என்பதும் மரணத்தின் பொருளாகும்.

39. எனவே நிலையாமை இருவித அம்சங்களையுடையது. ஒரு அம்சத்தில் ஆற்றல் உருவாக்கம் முடிந்து போகிறது என்று அது பொருள்படுகிறது. மற்றோரம்சத்தில் மிதக்கும் சக்தியின் பொதுத் தொகுப்பின் இருப்பில் ஒரு புதிய சேர்க்கை என்று பொருள்படுகிறது.

40. அநேகமாக அழிவின் இந்த இருவித அம்சங்களின் காரணமாகத்தான் புத்தர் தான் ஒரு முற்றான அழிவுநிலைவாதி அல்லவெனக் கூறினார். ஆன்மாவைப் பொறுத்தவரை அவர் ஓர் அழிவுநிலைவாதிதான், பருப்பொருளைப் பொறுத்தவரை அவர் ஓர் அழிவுநிலைவாதியல்ல.

41. இவ்வாறான விளக்கத்தினால், தான் ஓர் அழிவுநிலை வாதியல்லவெனப் புத்தர் கூறியதைப் புரிந்து கொள்ளல் எளிதாகும். பருப்பொருளின் புத்துருவாக்கத்தில் அவர் நம்பிக்கை கொண்டாரேயன்றி ஆன்மாவின் மறுபிற்ப்பில் அல்ல,

42. இவ்வாறான விளக்கத்தினால், புத்தரின் கொள்கை விஞ்ஞானத்தோடு இசைந்ததாக உள்ளது.

43. இந்தக் கருத்திலேயே புத்தரை மறுபிறப்பில் நம்பிக்கை கொண்டவர் எனக் கூறமுடியும்.

44. சக்தி என்றும் அழிவதில்லை, விஞ்ஞானத்தால் இது உறுதிப்படுத்தப்படுகிறது. மரணத்திற்குப் பின் எதுவுமே விட்டு வைக்கப்படுவதில்லை என்னும் பொருளிலான அழிவு நிலைவாதம் விஞ்ஞானத்துக்கு முரணானதாகும். ஏனெனில் சக்தி கொள்ளளவில் மாறாததாயில்லையென அது பொருள்பட்டுவிடும்.

45. இந்தத் தடுமாற்றம் தீர்க்கப்பட இதுவொன்றே வழியாகும்.

3. எவருடைய மறுபிறப்பு?

1. எவருடைய மறுபிறப்பு என்பது மிகவும் கடினமான பிரச்சினையாகும்.

2. இறந்த அதே மனிதன் புதிய பிறப்பெடுக்கிறானா?

3. இந்தக் கோட்பாட்டை புத்தர் நம்பினாரா? "பெரும்பாலும் ஒப்புவதற்கு இல்லை" என்பதே பதில்.

4. இறந்த மனிதனின் எஞ்சிய மூலங்கள் ஒன்றாய் இணைந்து புததுடலாய் உருவாதல் நேருமாயின், பின் அதே புலனறிவுடைய உயிர் மறுபிறப்பெய்தும் சாத்தியக்கூறு சாத்தியப்படும் என்பதைப் பொறுத்தது இப்பதில்.

5. இறந்த வெவ்வேறு மனிதர்களின் வெவ்வேறு மூலங்களின் கலப்பால் ஒரு புத்துடல் உருவாகுமாயின், பின், ஆங்கு மறுபிறப்பு உண்டு-ஆனால் அதே புலனறிவுள்ள உயிரின் மறுபிறப்பு அன்று.

6. இச்செய்தி மன்னர் பசேநதிக்குப் பிக்குணி கேமாவினால் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

7. ஒருமுறை மேன்மைதங்கிய புத்தர் ஷராவஸ்திக்கருகில், அநாதபிண்டிகரின் ஆசிரம்திலிருந்த ஜேதவனச் சோலை விஹரில் தங்கியிருந்தார்.

8. அச்சமயத்தில், கோசலனத்தில் தன் பயணத்தை முடித்துக் கொண்டு பிக்குணி கேமா, ஷ்ராவஸ்திக்கும், சாகேதத்துக்கும் இடையிலிருந்த தோரனவத்துவில், தன் தங்குமிடத்திற்குச் சென்றார்.

9. அப்போது கோசல மன்னர் பசேநதி சாகேதத்திலிருந்து ஷ்ராவஸ்திக்குப் பயணித்துக் கொண்டிருந்தார்-சாகேதத்துக்கும் ஷ்ராவஸ்திக்கும் இடைவழியில், தோரனவத்துவில் ஓரிரவு தங்கலுற்றார்.

10. மன்னர் பசேநதி ஒரு குறிப்பிட்ட மனிதரை அழைத்துக் கூறினார்: "வாருங்கள்! நல்லவரே! நான் இன்று சந்தித்திட ஏற்ற துறவி அல்லது பிராமணர் யாரேனும் உள்ளாரா? என்று அறிந்து வாருங்கள்."

11. "அப்படியே! மாண்புமிகு மன்னரே," எனக் கோசல மன்னர் பசேநதிக்குப் பதில் கூறி விட்டு, அதன்பின் தோரணவத்து முழுதும் சுற்றியலைந்தும், மன்னர் பசேநதி சந்திக்க ஏற்ற துறவியையோ, பிராமணரையோ ஒருவரையும் காணவில்லை அந்த மனிதர்.

12. பின் அந்த மனிதர், தோரனவத்துவில் தங்க வந்த பிக்குணி கேமாவைக் கண்டார். அவரைக் கண்டதும், கோசல மன்னர் பசேநதியிடம் திரும்பிச் சென்று அவர் கூறினார்.

13. "மாண்புமிகு மன்னரே! தாங்கள் சந்திக்கத்தக்க துறவியோ, பிராமணரோ ஒருவரும் தோரணவத்துவில் இல்லை. ஆனாலோ! மன்னர் பெருமானே! அந்த மேன்மைதங்கிய புத்தரின் பெண் சீடரான கேமா என்னும் பிக்குணி மட்டும் உள்ளார். இப்போது இந்தப் பெண்மணி பற்றி ஒரு நயத்தகு நற்செய்தி நாடெங்கும் பரவியுள்ளது-அவர் ஒரு அரஹத்-நிறைவானவராம்-கூர்மையானவராம்-கல்வியில் மேம்பட்டவராம்-நல்லறிவுமிக்க உரையாளராம்-நயத்தகு பண்பானராம், தாங்கள் அவரைச் சந்திக்கலாமே."

14. எனவே, கோசல மன்னர் பசேநதி பிக்குணி கேமாவைக் காணச் சென்றார்-அவரைக் கண்டு வணங்கி ஒருபுறம் அமர்ந்தார். அமர்ந்தபின் அவரிடம் வினவினார்.

15. "அம்மணியே! தாங்கள் என்ன கூறுகிறீர்கள்? ததாகதர் இறப்புக்குப் பின்னும் இருப்பவரா?"

16. "மாமன்னரே! மேன்மைதங்கிய புத்தரால் அதுவொன்று வெளிப்படுத்தப்படவில்லையே!"

17. "பின் அது எப்படி?" இறப்புக்குப் பின்னும் ததாகதர் இருப்பவரா? என வினவப்படுகையில், 'மேன்மைதங்கிய புத்தரால் அதுவொன்றம் வெளிப்படுத்தப்பட வில்லையே' எனப் பதிலிறுக்கிறீர்கள்....நான் பிற வினாக்களை வினவுகையிலும் தாங்கள் அதே பதிலைக் கூறுகிறீர்கள். என்ன காரணம்? என்ன அடிப்படை? ஏன் மேன்மைதங்கிய புத்தரால் இது வெளிப்படுத்தப்படவில்லை? அம்மணியே! கூற வேண்டுகிறேன்!"

18. இவ்விஷயத்தில் மாமன்னரே! நான் உங்களைக் கேள்வி கேட்கிறேன் உங்களுக்குச் சரியெனத் தோன்றும் பதிலை நீங்கள் கூறுங்கள். சில கணக்கர்கள், சில வாய்ப்பாடுகள், சில கணக்கிடும் கருவிகள் ஆகியவற்றை வைத்துக் கொண்டு கங்கைக் கரை மணலை எண்ணி, ஆங்கு இத்தனை நூறு மணலிருக்கிறது, அல்லது இத்தனை ஆயிரம் மணலிருக்கிறது. அல்லது இத்தனை நூறாயிரம் மணலிருக்கிறது என எண்ணிக் கூற முடியுமா மாமன்னரே?

19. "உண்மையில் இல்லை, அம்மணி."

22. "அது எப்படி?"

23. " கடல் மிகவலியது-ஆழந்தது- எல்லையற்றது-அளக்கலாகாதது."

24. "அதுபோல்தான், மாமன்னரே! உடல் வடிவில் ஒருவர் ததாகதரை வரையறுக்க முயன்றால், ததாகதரின் உடல் வடிவம் கைவிடப்படும்-வேரற்றுக் கட்டுக்குலைந்திடும்-வெட்டிய பனையென வீழ்ந்திடும்-இல்லா ஒன்றாகிவிடும்-எதிர்காலத்தில் மீண்டும் எழவியாலா இயல்புடையதாகிடும், மாமன்னரே! ததாகதர் உடல்வடிவ வரையினின்றம் விடுபட்டவர். அவர் வலிய கடலென ஆழமானவர்-அளக்கலாகாதவர்-எல்லையற்றவர்." 'ததாகதர் இறப்பிற்குப் பின்னும் இருக்கிறார்' என்பது பொருந்தும் பொருந்துவதில்லை.'ததாகதர் இறப்பிற்குப் பின் இல்லை என்பதும் பொருந்துவதில்லை.'ததாகதர் இறப்பிற்குப் பின் இருக்கவும் செய்வார்-இல்லாமலும் இருப்பார் என்பதும், இருப்பதுமில்லை- இல்லாமலுமில்லை என்பதும் பொருந்துவதில்லை."

25. "உணர்வினால் ஒருவர் ததாகதரை வரையறுக்க முயன்றால், ததாகதரின் உணர்வு கைவிடப்படும்-வேரற்றுக் கூட்டுக் குலைந்திடும்...மாமன்னரே! ததாகதர் உணர்வு வரையினின்றும் விடுபட்டவராய் இருந்தும், அவர் ஆழமானவர்-அளக்கலாகாதவர்-எல்லையற்றவர். ததாகதர் இறப்பிற்குப் பின்னும் இருக்கிறார் ...இறப்பிற்குப் பின் இல்லை என்று கூறுவதெல்லாம் பொருந்துவதில்லை."

26. அதே போல்தான் ஒருவர் ததாகதரை காட்சியால், செயல்களால், தன்னுணர்வால் வரையறுக்க முயன்றால்...தன்னுணர்வு வரையினின்றம் விடுபட்டவராய் உள்ள ததாகதர் ஆழமானவர்-அளக்கலாகாதவர்-எல்லையற்றவர், 'ததாகதர் இறப்பிற்குப் பின்னும் இருக்கிறார்...இறப்பிற்குப்பின் இல்லை' என்று கூறுவதெல்லாம் பொருந்துவதில்லை.

27. பிறகு, பிக்குணி கேமாவின் உரையால் மகிழ்ந்த கோசல மன்னர் பசேநதி, ஆங்கு நன்கின்புற்றார். தம் இடத்தைவிட்டு எழுந்து அவரை வலப்புறம் வணங்கிச் சென்றார்.

28. வேறோரு சமயத்தில் மன்னர் மேன்மைதங்கிய புத்தரைக் காணச் சென்று, வந்து வணங்கி ஒருபுறம் அமர்ந்தார். அமர்ந்த பின் அவர் மேன்மைதங்கிய புத்தரை வினவினார்:

29. "ஐயன்மீர்! ததாகதர் இறப்பிற்குப் பின்னும் இருப்பவரா?-உரைக்க வேண்டுகிறேன்."

30. "இவ்விஷயம் என்னால் வெளிப்படுத்தப்படுவதில்லை மன்னரே!"

31. "அப்படியாயின் ஐயன்மீர் ததாகதர் இறப்பிற்குப்பின் இருப்பதில்லையா?"

32. "அதுவும் கூட என்னால் வெளிப்படுத்தப்படுவதில்லை மன்னரே."

33. அவர்பின் வேறு வினாக்களையும் வினவி அதே விடையைப் பெற்றார்.

34. "அதெப்படி ஐயன்மீர்! 'ததாகதர் இறப்பிற்குப் பின்னும் இருக்கிறவரா?...இல்லாதவரா?' என நான் வினவும் வினாவிற்கு, 'அது என்னால் வெளிப்படுத்தப்படுவதில்லை' என

விடையிறுக்கிறீர்கள் தாங்கள், இந்த விஷயம் ஏன் மேன்மை தங்கிய புத்தரால் வெளிப்படுத்தப்படுவதில்லையெனக் கூற வேண்டுகிறேன் ஐயன்மீர்!"

35. "மாமன்னரே! இப்போது நான் உங்களை வினவுகிறேன். தங்களுக்குச் சரியெனத் தோன்றுவதைப் பதிலாய்க் கூறுங்கள். இப்போது மன்னரே, நீங்கள் என்ன கூறுவீர்கள்? கங்கைக்கரை மணலை எண்ணிக் கணக்கிட ஒரு கணக்கரோ...(யாவும் முன் வந்தவாறே)"

36. "ஆச்சரியம் ஐயன்மீர்! அதிசயம் இது ஐயன்மீர்! குருவும் சீடரும் ஆன இருவரும் கூறும் விளக்கங்கள் கூற்றிலும் பொருளிலும் 'ஒத்ததாய், ஒருமையுடையதாய், உட்தொடர்புடையதாய்-உயர்வெய்தியவர் பற்றிய கருத்தொவ்வொன்றும் அப்படியே உள்ளதே.'

37. "ஒரு குறிப்பிட்ட சமயம், ஐயன்மீர், நான் பிக்குணிகேமாவைச் சந்திக்கச் சென்று, இவ்விஷயம் பற்றி விளக்கம் கேட்டபோது, விளக்கத்தை அவர் மேன்மைதங்கிய புத்ததர் பயன்படுத்திய இதே சொற்களில், அசைகளில் எனக்குப் பதிலளித்தார். ஆச்சரியம் ஐயன் மீர்! குருவும் சீடரும் ஆன இருவரும் கூறும் விளக்கங்கள் கூற்றிலும், பொருளிலும் ஒத்ததாய், ஒருமையுடையதாய், உட்தொடர்புடைதாய்-உயர்வெய்தியர் பற்றிய கருத்தொவ்வொன்றும் அப்படியே உள்ளதே."

38. "நல்லது! ஐயன்மீர்! நாம் இப்போது செல்ல வேண்டும். நாம் பணிமிகுந்த மனிதர்கள். எமக்குப் பல பணிகள் உள்ளன."

39. "எது செய்ய இது நேரனெக் கருதுகிறீர்களோ அதைச் செய்யுங்கள் மாமன்னரே."

40. அதன்பின் கோசல மன்னர் பசேநதி மேன்மை தங்கிய புத்தரின் கூற்றுக்களால் மகிழ்வுற்று அவர்களுக்கு வந்தனம் தெரிவித்தார். அதன்பின் இருக்கையை விட்டெழுத்து மேன்மை தங்கிய புத்தரை வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

## பிரிவு 2

### கர்மா

1. கம்மம் பற்றிய கொள்கை பிராமணக் கொள்கை (கர்மம்) போன்றதா?

1. புத்தரின் தம்மத்தில் கர்மக் கொள்கை போல இத்தனைக் குழம்பிக் கொள்ளப்படும் கொள்கை வேறெதுமில்லை.

2. புத்தரின் தம்மத்தில் அதன் இடம் யாதென்றும், அதன் முக்கியத்துவம் யாதென்றும் ஏறகனவே கூறப்பட்டுள்ளது.

3. முற்றிலும், புரிதலின்மையாலேயே, அறியாத இந்துக்கள் சொல்லாக்க ஒற்றுமையை ஒப்பிடுவதன் மூலம் பவுத்தம், பிராமணீயம் அல்லது இந்துமதம் போன்றதே எனக் கூறுகின்றனர்.

4. பிராமணர்களில் கற்றவர்களும் வைதீகர்களுமான பிரிவினரும் இதையே செய்கின்றனர், அவர்கள், அறியாத வெகுமக்களை தவறாக வழிநடத்த வேண்டுமென்றே வெளிப்படையாக இதைச் செய்கின்றனர்.

5. புத்தரின் கர்மவிதி பிராமண கர்மவிதியினின்றும் முற்றிலும் வேறுபட்டதெனக் கல்வியுடைய பிராமணர்கள் மிக நன்கறிவார்கள். இருந்தும் அவர்கள் பவுத்தம், பிராமணீயம் அல்லது இந்துமதம் போன்தே என்று கூறிக்கொண்டேயிருக்கிறார்கள்.

6. அவர்களின் இந்தப் போலியான, தீய எண்ணங்கொண்ட பிரசாரத்திற்கு சொல்லாக்கத்திலுள்ள ஒற்றுமை பிடிப்புத் தருகிறது.

7. எனவே நிலையை நெருக்கமாய்ப் பரிசீலித்தல் அவசியமாகிறது.

8. சொற்களில் எத்தனைதான் ஒற்றுமையிருப்பினும், புத்தரின் கர்மவிதியும், பிராமணீயக் கர்மவிதியும் கட்டும் பொருளில் ஒன்றாயிருக்க வியலாது.

9. இரண்டின் கூற்றுகளும் மிக விரிந்த வேறுபாடுடையவை-உண்மையில் மகிவிரிவாய் எதிர்மறையானவை-அதன் விளைவுகள் ஒன்றல்ல. அவை வெவ்வேறாயிருப்பவை.

10. ஹிந்து கர்ம விதிக் கொள்கைகள் வசதிக்காக இவ்வாறு வரிகைப்படுத்தப்படலாம்.

11. ஹந்து கர்மவிதி ஆன்மாவை அடிப்படையாகக் கொண்டது. பவுத்தத்தினுடையது அப்படியன்று, உண்மையில் பவுத்தத்தில் ஆன்மா இல்லை.

12. பிராமணீய கர்மவிதி வழிவழி வருவது.

13. அது ஒரு பிறப்பிலிருந்து மற்றொன்றிற்குத் தொடர்கிறது. இது ஏனெனில் ஆன்மாவின் கூடுவிட்டுக் கூடு பாய்கிற தன்மையால்.

14. பவுத்த கர்மவிதியைப் பொறுத்தவரை இரு உண்மையாக வியலாது. இதுவும் ஏனெனில் ஆன்மா இல்லையென்பதால்.

15. உடலுக்கு வேறான ஆன்மாவின் இருப்பை அடிப்படையாகக் கொண்டது ஹிந்து கர்மவிதி, உடல் மரணிக்கும் போது ஆன்மா மரணிப்பதில்லை. ஆன்மா பறந்து விடுகிறது.

16. பவுத்த கர்மவிதியைப் பொறுத்தவரை இது உண்மையல்ல.

17. ஹிந்து கர்மவிதியைப் பொறுத்தவரை இது உண்மையல்ல.

17. ஹந்து கர்ம விதியின்படி ஒரு மனிதன் ஒரு செயல் புரியும் போது நடப்பது இதுதான். அச்செயல் இருவித விளைவுகளை உண்டாக்குகிறது. அது செய்பவனைப் பாதிக்கிறது. இரண்டாவதாக அவனுடைய ஆன்மாவின் மீது அது பதிவுகளை உண்டாக்குகிறது.

18. அவன்புரியும் ஒவ்வொரு செயலும், அவன் ஆன்மாவின் மீது ஒரு பதிவை உண்டாக்குகின்றன.

19. ஒரு மனிதன் இறக்கும்போது, அவனுடைய ஆன்மாவிடுபட்டுத் தப்பிக்கும்போது, அவ்வான்மா அவ்வகைப் பதிவுகளால் நிறைந்திருக்கிறது.

20. அவனுடைய எதரிவரும் ஜென்மத்தில, அவனடைய பிறப்பையும், அந்தஸ்தையும் இந்தப் பதிவுகளே நிர்ணயிக்கின்றன.

21. இந்த ஹிந்துக் கோட்பாடு, புத்தரின் ஆன்மா இல்லையென்னும் கோட்பாட்டோடு முரண்பட்டுள்ளது.

22. இந்தக் காரணங்களால் பவுத்தக் கர்ம தத்துவம் ஹிந்து கர்ம தத்துவத்தைப் போன்றதாய் இல்லை. இருக்கவியலாது.

23. எனவே சாதாரணமாகவே, பவுத்தக் கர்மதத்துவம் பிராமணீய கர்ம தத்துவம் போன்றதே எனப் பேசுவது அறவீனமாகும்.

24. ஒருவர் கூறக்கூடியதெல்லாம் இந்த ஏமாற்று வித்தைகளிடம் எச்சரிக்கையாயிருங்கள் என்பதே.

2. கடந்த பிறவியின் கர்மங்கள் எதிர்கால வாழ்வின் மீது பாதிப்பை ஏற்படுத்தும் என்பதில் புத்தர் நம்பிக்கை கொண்டாரா?

1. கர்ம விதி புத்தரால் தெளிவாக்கப்பட்டது "விதைத்தபடி அறு" என முதலில் கூறியவர் அவர்.

2. கர்மபவிதியின் உறுதியான பின்பற்றல் இல்லாதவரை ஒழுக்க முறையேதும் இருக்க முடியாதென்று கருதிய அளவில் கர்மவிதி பற்றி அவர் மிகவும் உறுதியாயிருந்தார்.

3. புத்தரின் கர்மவிதியும், அதன் பாதிப்பும் தற்கால வாழ்வுக்கு மட்டுமே பொருந்துவதாகும்.

4. எப்படியோ, கர்மக் கொள்கையின் விரிவாக்கம் ஒன்றும் உண்டு, அதன்படி கர்மம் என்பது கடந்த பிறவி, அல்லது பிறவிகளில் புரியப்பட்ட கர்மங்களையும் உள்ளடக்கியதாகும்.

5. ஒருவன் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்திருக்கிறான் என்றால், அதற்கு கடந்தபிறவியில் அவன்புரிந்த தீய கர்மங்களே காரணம், ஒருவன் வசதியான குடும்பத்தில் பிறந்திருக்கிறான் என்றால், அதற்குக் கடந்த பிறவியில் அவன் புரிந்த நல்ல கர்மங்களே காரணம்.

6. ஒருவன் உடல் ஊனத்தோடு பிறந்திருக்கிறான் என்றால், அதற்குக் கடந்த பிறவியில் அவன் புரிந்த தீய கர்மங்களே காரணம்.

7. இது மிகவும் தீங்கிழைக்கக்கூடிய கொள்கையாகும். ஏனெனில், இந்தக் கர்ம விளக்கத்தில் மனித முயற்சிக்கு இடமே அளிக்கபபடவில்லை. அவனுக்கான அனைத்தும் அவனடைய முற்பிறவி கர்மங்களால் முன்முடிவு செய்யப்பட்டுள்ளன.

8. இந்த விரிவாக்கப்பட்ட கொள்கை அடிக்கடி புத்தரோடு தொடர்பு படுத்தப்பட்டுக் காணப்படுகிறது.

9. புத்தர் இதுபோன்ற கொள்கையை நம்பினாரா?

10. இந்த விரிவாக்கப்பட்ட கொள்கையைச் சரியாகப் பரிசீலிக்க வேண்டுமாயின், இது வழக்கமாய் வெளிப்படுத்தப்படும் கருத்தைச் சற்று மாற்றினால் சிறப்பாக இருக்கும்.

11. கடந்த பிறவியின் கர்மம் பெறப்படுகிறது எனக் கூறுவதற்குப் பதிலாக, கடந்த பிறவியின் கர்மம் வாரிசுரிமையாய்ச் சுவீகரிக்கப்படுகிறது என்று கூறுவது சிறப்பாயிருக்கும்.

12.இந்தக் கருத்து மாற்றம், இதை வாரிசுரிமை விதிகளால் சோதிக்க உதவும். அதே சமயத்தில், இது அக்கொள்கையின் உரிமைத்தன்மை அல்லது நிதர்சனம் ஆகிய எந்த வகையான பொருள் சுட்டுதலுக்கும் இடையூறு ஏதும் ஏற்படுத்தாது.

13.இவ்வகையான கருத்துச் சீரமைப்பு, இரு கேள்விகளை முன்னிருத்த வழி செய்கிறது- இவ்விரண்டு கேள்விகளை முன்னிறுத்தாமலும் அவற்றிற்கான பதில்களைப் பெறாமலும், இவ்விஷயத்தைத் தெளிவுபடுத்த இயலாது.

14.முதற்கேள்வி கடந்த பிறவியின் கர்மம் எப்படி வாரிசுரிமையாய் சுவீகரிக்கப்படுகிறது?அதன் வழிமுறை யாது?

15.வாரிசுரிமையைப் பொறுத்தவரை கடந்த பிறவிக் கர்மத்தின் இயல்பு யாது?அது தற்சார்பு இயல்பான தன்மையா? அல்லது பெறப்பட்ட தன்மையா?

16.நாம் நம் பெற்றோர்களிடமிருந்து வாரிசுரிமையாய் எவற்றைப் பெறுகிறோம்?

17.விஞ்ஞானத்தோடு தொடங்குகைளில், ஒரு புதிய மனிதன் உயிரணு, முட்டைக்குள் புகுகையில் தோன்றுகிறான். உயிரணுவின் தலைப்பகுதி தாயின் கருமுட்மையின் உட்கருவினுள் நுழைந்து உயிர்த்தலைக் கருவுயிர்த்தல் உட்கொண்டுள்ளது.

18.உயிர்வாழ் பொருட்கள் இரண்டின் அம்சங்களின் சேர்க்கையிலிருந்தே ஒவ்வொரு மனிதனின் தோற்றமும் உண்டாகிறது-தாயினிடமிருந்து தோன்றம் கருமுட்டையை தந்தையிடமிருந்து தோன்றும் உயிரணு கருவுயிர்க்கச் செய்வதாலேயே.

19.இவ்விஷயம் பற்றித் தன்னுடன் விவாதிக்க வந்த யக்கர் என்பவரிடம், மனிதப்பிறப்பு மரபியல் சார்ந்தது எனக் கூறினார் புத்தர்.

20.மேன்மைதங்கிய புத்தர் அப்போது இராஜகிருஹத்திற்கு அருகேயிருந்த 'இந்திரச் சிகரம்' எனப்பட்ட மலையில் தங்கியிருந்தார்.

21.அப்போது, அந்த யக்கர், மேன்மைதங்கிய புத்தரை நெருங்கி வந்து, அவரிடம் கீழக்கண்டவாறுரைத்தார்:

"உடலெனும் புற வடிவம் வாழும் உயிரன்று
ஞானமெய்திய புத்தர் இங்ஙனம் கூறுகின்றீர்.
அஃதப்படியாயின் உயிர் எங்ஙனம் உடலை உடையதாயுள்ளது?
எலும்புக் குவியலும் உள்ளுருப்புக்களும் எங்கிருந்து உயிரை வந்தடைந்தன?
தாய்க் கருப்பைக் குகையினுள் உயிர் தங்கியுள்ளது எப்படியோ?"

22.இதற்கு மேன்மைதங்கிய புத்தர் பதிலிறுத்தார்:

"ஆதியில் 'கலல' பிறப்பபெடுக்கின்றது
அடுத்து 'அபுத்தே'
ஆங்கிருந்து 'பேசி' வளர்கிறது.
'கன' த்தில் முடியின் தோற்றம். அடுத்து நகங்கள்,
அன்னை கொள்ளும் உணவும் நீரும்
பிள்ளைக்கும் ஆங்கே ஆகிக்
கருவறையில் பிள்ளை வாழும்-வளரும்."

23.ஆனால் ஹந்து தத்துவம் மாறுபடுகிறது.

24.உடல் மரபியல் சார்ந்தது என்கிறது அது, ஆனால் உயிர் அவ்வாறன்று. அது புறத்தேயிருந்து உடலுக்குள் ஊன்றப்படுகிறது-இந்தக் கொள்கையால் மூலாதாரத்தைக் குறித்துக் காட்ட முடியவில்லை.

25.கடந்த பிறவிக் கர்மாவின் இயல்பு யாது என்னும் இரண்டாம் வினாவுக்குத் திரும்புவோமாயின், அது தற்சார்பு இயனல்பான தன்மைய அல்லது பெற்பட்ட தன்மையா என்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

26.இந்த வினாவிற்கு விடை வராதவரையில், அது, வாரிசுரிமை பற்றிய விஞ்ஞானக் கோட்பாட்டால் சோதிக்கப்படவியலாது.

27.ஆனால் இவ்வாறோ, அவ்வாறோ இதற்கு ஒர் பதிலிருப்பதாகச் கொள்வதன் மூலம், இது அறிவுபூர்வமான கோட்டாடாயினும் மூடத்தனமான கோட்பாடாயினும், எப்படி விஞ்ஞானத்திலிருந்து எதாவது உதவி பெற ஏதுவாகும்?

28.விஞ்ஞானத்தின் படி, ஒரு குழந்தை தன் பெற்றோர்களின் பண்புகளை வாரிசு மரபுரிமையாய்ப் பெறுகிறது.

29.ஹிந்து கர்மக் கொள்கையின்படி, ஒரு குழந்தை தன் பெற்றோரிடமிருந்து வாரிசு மரபுரிமையாய் உடலைத் தவிர வேறெதையும் பெறுவதில்லை. ஹிந்து கொள்கைப்படி, கடந்த பிறவியின் கர்மமே வாரிசுமரபுரிமையாய்க் குழந்தைக்குக் குழந்தையால் குழந்தைக்காகப் பெறப்படுகிறது.

30.பெற்றோர்கள் பங்களிப்பது ஏதுமில்லை. குழந்தையே அனைத்தையும் கொண்டுவருகிறது.

31.இத்தகைய ஒரு கோட்பாடு அபத்தத்திற்குக் கொஞ்சமும் குறைந்ததல்ல.

32.மேற்காட்டியபடி, புத்தர் இத்தகைய அபத்தத்தை நம்புபவரல்ல.

33."அது மறுபிறப்புறவில்லையெனில் ஆம்! ஆமெனில் இல்லை."

34."எனக்கோர் எடுத்துக்காட்டு தாருங்கள்."

35."ஓ! மன்னரே! ஒரு மனிதன் பிறனுடைய மாம்பழங்களைத் திருடுவதாய் வைத்துக் கொள்வோம்-அந்தத் திருடன் தண்டனைக்குரியவனா?"

36."ஆம்!"

37."மற்றவன் பூமிக்குள் விதைத்து வைத்த மாம்பழங்களை அவன் திருடவில்லையே, பின் அவன் ஏன் தண்டமைக்குரியவனாகிறான்?"

38."ஏனெனில், அவன் திருடியவை, விதைக்கப்பட்டவைகளின் விளைவுகளாயிற்றே."

39."அப்படியேதான், மாமன்னரே! இந்த நாமமும்-ரூபமும் வினைகளைப் புரிகின்றன-அவை நல்வினையோ-தீவினையோ-அந்தக் கர்மங்களினால், மற்றொரு நாம-ரூபம் புதுபிறப்பெய்துகிறது. எனவே அது அதன் தீவினைகளிலிருந்து விடுபட்டு விடவில்லையா?"

40."மிக நன்று, நாகசேனரே!"

41.மன்னர் கூறினார்: "ஒரு நாம-ரூபத்தால் வினைகள் புரியப்படும் போது, அந்த வினைகளுக்கு என்ன நேர்கின்றன நாகசேனரே!"

42."ஓ மன்னரே! விட்டு நீங்கா நிழலென அதை அவ்வினைகள் தொடர்கின்றன."

43."யாரேனும் அவ்வினைகளை, "அவ்வினைகள் இதோ உள்ளன-அதோ உள்ளன" எனச் சுட்டிக்காட்ட முடியுமா?"

44."முடியாது."

45."எனக்கேர் எடுத்துக்காட்டு தாருங்களேன்"

46.நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் மன்னரே!இன்னும் காய்க்காத மரத்தின் பழங்களை யாரேனும் இப்படிக் கூறுவதன் மூலம் சுட்டிக்காட்ட முடியுமா?

47."இதோ இவைகள்-அதோ அவைகள்."

48. "நிச்சயம் முடியாது, ஐயா."

49. "அதேபோல்தான் மாமன்னரே! வாழ்க்கைத் தொடர்ச்சி இடையறுந்து போகாதவரை, புரியப்பட்ட வினைகளின் பலனை இனங்காட்ட இயலாது."

50. "மிக நன்று, நாகசேனரே!"

### 3. முந்தைய கர்மவினைகள் எதிர்வரும் வாழ்வில் தாக்கமுறுவன எனப் புத்தர் நம்பினாரா? - தீர்வு.

1. புத்தரின் கடந்த கர்மவினைக் கோட்டபாடு இவ்வாறாக அறிவியலுடன் ஒத்துப் போவதாயுள்ளது.

2. அவர் கடந்த கர்மவினைப்பயன் வாரிசு உரிமையாய்த் தொடர்கிறது என்பதை நம்பவில்லை.

3. பிறப்பு உயிரியல்பானது எனவும் பிள்ளைக்கு வருவன யாவும் பெற்றோரிடமிருந்தே வருகின்றன எனவும் கருத்துக் கொண்டிருந்த அவரால் இது எப்படி முடியும்?

4. தர்க்கத்துக்கு அப்பாலும் இந்தக் கருத்து குறித்த நேரடிச் சான்றுகள் சூள-துக்க-கந்த-சுத்தம் எனப்படும் சுத்தத்தில் உள்ளன-இரு புத்தருக்கும் சமணர்களுக்கும் இடையே நடந்த ஒரு உரையாடலை உள்ளடக்கியுள்ளது.

5. இந்த உரையாடலில் புத்தர் கூறுவது இதுவே: "நிகந்தர்களே, நீங்கள் கடந்த காலத்தில் தீமை புரிந்துள்ளீர்கள்; இப்போது கடுமையான தவச் செயல்களால் அவற்றை அழிக்கீறீர்கள். இப்போதைய உடல்-உரை-உள்ளம் ஆகியவற்றின் ஒவ்வொரு செயலின் தாக்கமும் இதன் பின் கடந்த கால் தீமைகளை தவத்தின் மூலம் அழிப்பதாலும், புதிய தீமைகள் புரியாமையாலும் எதிர்காலம் தூயதாகிறது; எதரிகாலம் தூயதாவ்தால் கடந்தகாலம் அழிக்கப்படுகிறது; கடந்தவையனைத்தும் அற்றுப் போகின்றன. இனி ஒரு துன்பமுமில்லை; துன்பமேதுமின்மையின் (துயரமயமான) உணர்வுகளும் இனியில்லை; துயரமயமான உணர்வுகள் இன்மையின் துன்பம் முற்றாகத் தீர்க்கப்படுகிறது-இந்தப் போதனை எமக்கு ஏற்புடையதாகவே உள்ளது. நாம் இதில் மகிழ்கிறோம்."

6. இவற்றிற்கு மேல் நிகந்தர்களுக்கு நான் கூறுகிறேன்; "போற்றுதலுக்குரிய ஐயன்மீர்! இதற்கு முன் தாங்கள் இருப்புடையோராய் இருந்தீர் எனவும், இருப்புடையோராய் இல்லாமலிருந்ததில்லை எனவும் நீர் அறிவீரா?"

7. "இல்லை அய்யா."

8. "பழைய பிறவியில் தாங்கள் தீயோராகவோ, தீமையற்றோராகவோ-குற்றங்களைப் பொறுத்து இருந்தமையை அறவீரா?"

9. "இல்லை."

10. "(கடந்த பிறவியின் இருப்பில்) நீங்கள் குற்றமுடையவராகவோ-குற்றமற்றவராவோ-இந்த அல்லது அந்தக் குறிப்பிட்ட தீச்செயல்கள் பற்றியதாய்-இருந்ததை அறிவீரா?"

11. "இல்லை."

12. இரண்டாவதாக புத்தர், ஒரு மனிதரின் அந்தஸ்து சூர்நிலையால் ஆளப்படுவதுபோல், பிறப்புரிமையால் ஆளப்படுவதில்லை என உறுதி கூறுகிறார்.

13. தேவதஹ-சுத்தத்தில் புத்தர் உரைப்பது இதுவேயாகும்; சில துறவிகள் அல்லது பிராமணர்கள், ஒரு தனிமனிதன் அனுபவிப்பவை யாவும்-மகிழ்ச்சிக்குரியதோ-துன்பத்திற்குரியதோ-ஏதுமற்றதோ எதுவாயினும் பழைய வினைகளிலிருந்தே அவையாவும் வருகின்றன எனக் கூறுபவர்களாகவும், கருதுபவர்களாகவும் உள்ளனர். எனவே, அந்தப் பழைய தீவினைகளை நீக்குதலாலும் அழித்தலாலும், புதிய தீவினைகளைப் புரியாமலிருப்பதாலும் எதிர்காலம் வினைக் கூட்டமற்றதாய் விளங்கும்-தீவினைகள் அழிந்து போகின்றன-தீவினைகள் அழிந்து போவதால், தீமை அழிந்து போகிறது-தீமை அழிந்து போவதால், உணர்ச்சிகள் அழிகின்றன-உணர்ச்சிகள் அழிவதால் அனைத்துத் துன்பங்களும் இற்று நீங்கிப் போகின்றன. இதையே நிகந்தர்கள் உறுதிப்படுத்துகின்றனர்.

14. அவைகள் தம் பிறப்பின் சூழ்நிலையால் உயிர்கள் இன்பதுதுன்பங்களை அனுபவிப்பதாயின், நிகந்தர்கள் குற்றச்சாட்டுக்குரியவர்களாவர். அவற்றின் காரணம் சூழ்நிலையன்று எனினும் அவர்கள் குற்றச்சாட்டுக்குரியவர்களேயாவர்.

15. இப்போது புத்தரின் இந்தக் கூற்றுக்கள் மிகவும் பொருத்தமானவை-அவர் பழைய, கர்மபினைகளில் நம்பிக்கையுடையவராயிருப்பின் அவற்றின் மீது அவர் எப்படி ஐயம் கொள்ள முடியும்? பழைய கர்ம வினையே இப்போதைய இன்பதுன்ங்களுக்குக் காரணம் என அவர் நம்பியிருப்பின், புத்தர் எப்படி இப்போதைய வாழ்வின் இன்பதுன்பங்களுக்குச் சூர்நிலையே காரணம் என்று கருதியிருக்க முடியும்?

16. பழைய கர்மவினைக் கோட்பாடு முழுக்க முழுக்க பிராமணீயக் கோட்பாடாகும். பழைய கர்மவினை இப்போதைய வாழ்வில் தாக்கம் ஏற்படுத்துகிறது என்னும் கருத்து பிராமணீய ஆத்மா கோட்பாடு, ஆத்மாவின் மீது வினயின் தாக்கம் ஆகியவற்றோடு முழு இசைவுடையதாயுள்ளது. ஆனால் புத்தரின் ஆத்மாஇல்லையென்னும் கோட்பாட்டோடு இது சற்றும் இசைந்து போவதன்று.

17. பவுத்தத்தை இந்து மதத்தோடு இணையவைப்பதற்காக யாராலோ இது உருவாக்கிச் சேர்க்கப்பட்டது அல்லது பவுத்தக் கோட்பாட்டை அறியாத யாராலோ ஏற்படுத்தப்பட்டது.

18. "புத்தர் இத்தகைய தத்துவத்தைப் போதித்திருக்க முடியாது என்பதற்கு இது ஒரு காரணமாயுள்ளது."

19. மற்றொரு, இன்னும் பொதுவான காரணம் ஒன்றுண்டு-புத்தர் இத்தகைய தத்துவத்தைப் போதித்திருக்க முடியாது என்பதற்கு.

20. இந்து மதத் தத்துவமான பழைய கர்மவினை எதரிகால வாழ்வைக் கட்டுப்படுத்துகிறது, என்னும் கோட்பாடு நேர்மையற்றதாயுள்ளது. இத்தகையக் கோட்பாட்டைக் கண்டு பிடித்ததன் நோக்கம் யாதாக இருக்கும்?

21. ஒருவர் கருதக்கூடிய ஒரே காரணம், ஏழையரின், தாழ்ந்தோரின் நிலைக்கான பொறுப்பிலிருந்து அரசையும், சமூகத்தையும் தப்பிக்கச் செய்யும் ஒரே நோக்கமாகும்.

22. அவ்வாறில்லையேல், இத்தகைய மனிதாபிமானமற்ற, அபத்தமான கோட்பாடு கண்டுபிடிக்கப்பட்டிருக்காது.

23. மஹா கருணையாளர் என்று அறியப்பட்டுள்ள புத்தர் இத்தகைய கோட்பாட்டை ஆதரித்தார் என்று கற்பனை செய்து கூடப்பார்க்க முடியாது.

## பிரிவு 3.
## அஹிம்சை

1. அது விளக்கப்படுகிற, பின்பற்றப்படுகிற பல்வேறு விதங்கள்.

1. அஹிம்சை அல்லது கொல்லாமை புத்தரின் போதனைகளில் ஒரு மிக முக்கிய பகுதியாய் அமைகிறது.

2. அது கருணை, மைத்ரி ஆகியவற்றோடு உள்ளார்ந்த தொடர்புடையதாய் உள்ளது.

3. எப்படியிருப்பபினும், அவருடைய அஹிம்சை முழுமையான கடப்பாடயுள்ளதா அல்லது சார்பு மட்டும் உடையதா என்னும் வினா எழுப்பபடுகிறன்றது. அது வெறும் கொள்கையா? அல்லது அது ஒரு சட்ட விதியா?

44. புத்தரின் போதனைகளை ஏற்கும் மக்கள் அஹிம்சையை முழுமையான கடப்பாடாய் ஏற்பதைக் கடினமெனக் காண்கிறார்கள். அஹிம்சைப் பற்றிய இவ்வகையான வரையறை நன்மையைத் தீமைக்குப் பலிகொடுப்பதை, தீச்செயலுக்கு தற்செயலை பலிகொடுப்பதை உள்ளடக்கும் என்கிறார்கள் அவர்கள்.

5. இந்த வினா தெளிவாக்கப்பட வேண்டியதாயுள்ளது. இந்த அஹிம்சை பற்றிய செய்தியை விட வேறந்தச் செய்தியும் இவ்வளவு குழப்பமானதாய் இல்லை.

6. பவுத்த நாடுகளின் மக்கள் அஹிம்சையை எப்படி புரிந்து கொண்டுள்ளார்கள்? நடைமுறைப்படுத்துகிறார்கள்?

7. கவனத்திலெடுத்துக் கொள்ளப்பட வேண்டிய முக்கிய வினா இது.

8. இலங்கையின் துறவிகள் பிறநாட்டுப் படையெடுப்பாளர்களை எதிர்த்துத் தாமும் போர் புரிந்தார்கள்-தம் மக்களைப் போராடும்படிக் கூறினார்கள்.

9. இதற்கு வேறாக, அந்நியப் படையெடுப்பாளர்களை எதிர்த்துப் போராட பர்மியத் துறவிகள் மறுத்தார்கள்-போராட வேண்டாமென மக்களைக் கேட்டுக் கொண்டார்கள்.

10. பர்மிய மக்கள் முட்டைகளை உண்கிறார்கள் ஆனால் மீன் உண்பதில்லை.

11. அஹிம்சை புரிந்து கொள்ளப்படவதும் பின்பற்றப்படுவதும் இப்படிதான்.

12. அண்மையில் ஜெர்மானிய பவுத்தர் சங்கம், பஞ்சசீலத்தில் அஹிம்சையை விவரிக்கும் முதல் சீலத்தைத் தவிர மற்ற சீலங்கள் அனைத்தையும் ஏற்பதாகத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியுள்ளது.

13. அஹிம்சைக் கோட்பாட்டின் நிலை இதுவே.

2. அஹிம்சையின் உண்மைப் பொருள்.

1. அஹிம்சை யென்றால் என்ன பொருள்?

2. புத்தர் எவ்விடத்தில் அஹிம்சைக்கான வரையறை எதையும் வழங்கிவிடவில்லை. உண்மையில், குறிப்பிட்ட சொற்களில் இவ்விஷயம் பற்றி மகி அரிதாகவே அவர் கூறியுள்ளார்.

3. ஆகையால், ஒருவர், சூழ்நிலைத் தடயங்களைக் கொண்டே அவரின் உள்நோக்கை வெளிப்படுத்த வேண்டியுள்ளது.

4. இவ்விஷயம் குறித்து முதல் சூழ்நிலைத் தடயமாவது யாதெனில், அவருடைய தானத்தின் பகுதியாக அளிக்கப்படும் இறைச்சியை உண்பதற்கு அவர் மறுப்பேதும் கொண்டிருக்க வில்லை என்பதே.

5. உயிர்க் கொலைப் புரிவதில் பங்குதாரராய் இல்லாதவரை, அளிக்கப்பட்ட அவ்விறைச்சியை பிக்கு உண்ணலாம்.

6. தானமாய் அளிக்கப்படும் இறைச்சியை பிக்குகள் உண்ணுவது தடைசெய்யப்பட வேண்டும் என்று தேவதத்தர் வலியுறுத்தி எழுப்பிய எதரிப்பை மறுதலித்தார் புத்தர்.

7. இவ்விஷயம் குறித்து அடுத்த சூழ்நிலைத் தடயமாவது யாதெனில், அவர் யக்ஞங்களில் (யாகம்) விலங்குள் பலியிடுவதை மட்டுமே எதிர்த்தார். இதை அவரே கூறியுள்ளார்.

8. "அஹிம்சா பெர்மோ தர்மா" என்பது ஒரு தீவிரக் கொள்கையாகும். அது சமணக் கொள்கையாகும். அது பவுத்தக் கொள்கையன்று.

9. ஏறத்தாழ அஹிம்சையின் வரையறையாக விளங்கக் கூடிய சூழ்நிலைத் தடயங்களுக்கும் மேலானதான இன்னொரு நேரடித் தடயம் உண்டு. அவர் கூறியுள்ளார்: "எதையும் நீங்கள் கொல்ல விரும்பாவண்ணம் அனைத்தையும் நேசியுங்கள்." அஹிம்சைக் கொள்கையை விவரிக்கின்ற உறுதியான உடன்பாட்டு வழி இது.

10. இதிலிருந்து அஹிம்சைக் கொள்கை 'கொல்லாதே' எனக் கூறாமல், 'அனைத்தையும் நேசி' எனக் கூறுவதாகவே தோன்றுகிறது.

11. இந்தக் கூற்றுக்களின் ஒளியில், அஹிம்சை என்பதற்குப் புத்தர் கொண்ட பொருள் யாதெனத் தெளிவாய்ப் புரிந்து கொள்வது மிகவும் எளிமையானதேயாகும்.

12. 'கொல்ல விரும்புதலுக்கும், 'கொலலுதலின் தேவைக்கும்' இடையிலான வேறுபாட்டையே புத்தர் குறித்தார் என்பது மிகவும் தெளிவாகிறது.

13. எங்கே கொல்லுதல் தேவையோ அங்கே அதை அவர் தடுக்கவில்லை.

14. எங்கே வேறெந்தத் தேவையுமின்றி கொல்லுதலில் விருப்பம் மட்டும் நிலவுகிறதோ அங்குக் கொல்லுதலை அவர் தடை செய்தார்.

15. இவ்வாறு புரிந்து கொள்ளப்படுகையில் அஹிம்சைப் பற்றிய பவுத்தக் கொள்கையில் குழப்பம் ஏதுமில்லை.

16. ஒவ்வொருவரும் மதிக்க வேண்டிய முழுநிறைவான, திடமான ஒழுக்கக் கோட்டபாடாகவே அது உள்ளது.

17. ஐயமின்றி ஆங்கே கொல்லுதற்கு அவசியமுள்ளதா, என்பதை ஒழுக்கக் கோட்பாடாகவே அது உள்ளது.

18. ஓர் ஒழுக்கமுள்ள மனிதன் சரியான நிலைப்பாட்டில் வரையறைச் செய்து கொள்வான் என நம்பமுடியும்.

19. பிராமணீயம் தன்னில் கொல்லுதலில் விருப்பத்தைக் கொண்டுள்ளது.

20. சமணம் தன்னில் எப்போதும் கொல்லாமையில் விருப்பத்தைக் கொண்டுள்ளது.

21. புத்தரின் அஹிம்சை முற்றிலும் நடுநிலைப்பாதையைக் கொண்டதாய் உள்ளது.

22. வேறுவகையாய்க் கூறுவதெனில் புத்தர் கொள்கைக்கும், விதிக்கும் இடையே வேறுபாட்டை உண்டாக்கினார், அஹிம்சையை அவர் விதியெனக் குறிக்கவில்லை. அதை ஓர் கொள்கை அல்லது வாழ்க்கை நெறியாய் விளக்கினார் அவர்.

23. இதில் அவர் ஐயமின்றி மிக விவேகமாய்ச் செயல்பட்டள்ளார்.

24. ஒரு கொள்கை உங்களுக்குச் செயல்பாட்டுச் சுதந்திரம் அளிக்கிறது. விதி அப்படியன்று, விதி உம்மைச் சிதைக்கிறது-அல்லது நீங்கள் விதியைச் சிதைக்கிறீர்கள்.

## உயிர் மறுஉடல் புகுதல்

1. உயர்வெய்திய புத்தர் மறுபிறப்பு உண்டெனப் போதித்தார். ஆனால் உயர்வெய்திய புத்தர் உயிர்மறு உடல்புகுதல் இல்லையென்றும் போதித்தார்.

2. இவ்வளவு முரண்பாடான கோட்பாடுகளாகத் தாங்கள் கருதியவற்றைப் போதித்தமைக்காகப் புத்தரை விமர்சிக்காத மக்களே இல்லாமல் இல்லை.

3. உயிர் மறுஉடல் புகுதல் இல்லையெனில், ஆங்கே எவ்வாறு மறுபிறப்பு இருக்க முடியும்? விமர்சகர்கள் வினவினர்.

4. உயிர் மறுஉடல் புகுதலில்லாமல் ஒரு மறுபிறப்பு உள்ளதாம். இது இருக்க முடியுமா? அவர்களே கேட்டனர்.

5. இதில் ஒரு முரண்பாடுமில்லை, கூடுவிட்டுக் கூடுபாய்தல் இல்லாவிடினும் மறுபிறப்பு இருக்கக் கூடும்.

6. மன்னர் மிலிந்த்தின் வினாக்களுக்கு நாகசேனா அளித்த விடைகளில் இது மிக நன்கு விளக்கப்பட்டுள்ளது.

7. பேக்டரிய நாட்ட மன்னர் மிலிந்த் நாகசேனாவை வினவினார்-"புத்தர் மறுபிறப்பபை (உயிர் மறுஉடல் புகுதல்) நம்பினாரா?"

8. அவருடைய பதில் "ஆம்" என்பதாயிருந்தது.

9. "இது முரண்பாடாயில்லையா?"

10. நாகசேனர் பதிலிறுத்தார். "இல்லை"

11. "ஆன்மா இல்லாமல் மறுபிறப்பு இருக்க முடியுமா?"

12. நாகசேனர் கூறினார் "ஆம்! உண்மையில் இருக்க முடியுமே."

13. எப்படி அது இருக்க முடியுமென விளக்குங்கள்."

14. மன்னர் கூறினார். "உயிர் மறுஉடல்புகுதல் இல்லாத போது எப்படி மறுபிறப்பு இருக்கமுடியும், நாகசேனரே?"

15. "ஆம் இருக்க முடியும்"

16. "ஆனால் எப்படி அது இருக்க முடியும்? எனக்கு ஓர் எடுத்துக்காட்டைக் கூறுங்கள்."

17. "ஒரு மனிதன் ஒரு விளக்கினால் மற்றொரு விளக்கை ஏற்றுவதாக வைத்துக் கொள்ளுங்கள்-ஒன்று மற்றொன்றிலிருந்தோ, அல்லது அது மற்றொன்றிற்கோ கூடுவிட்டுக் கூடுபாய்வதாகக் கூறமுடியுமா?"

18. "நிச்சமயாய் இல்லை."

19. "மாமன்னரே! அதேபோல்தான் உயிர் மறுஉடல் புகுதல் இல்லாத மறுபிறப்பும்."

20. "மேலுமொரு எடுத்துக்காட்டு கூறுங்களேன்"

21. "மாமன்னரே! நாங்கள் சிறுவனாய் இருந்த போது, தாங்கள் தங்கள் ஆசிரியரிடம் கற்ற செய்யுள்களில் ஒன்றையோ, மற்றொன்றையோ உங்களால் நிவுபடுத்திக் கொள்ள முடியுமா?"

22. "ஆம்! நான் நினைவுப்படுத்திக் கொள்கிறேன்."

23. "அப்படியாயின் அந்தச் செய்யுள் உங்கள் ஆசிரியரிடமிருந்து இடம் பெயர்ந்து விட்டதா?"

24. "நிச்சயமாய் இல்லை."

25. "மாமன்னரே! அதேபோல்தான், உயிர் மறுஉடல் புகுதல் இல்லாத மறுபிறப்பும்."

26. "மிக நன்று நாகசேனரே!"

27. மன்னர் கூறினார். "நாகசேனரே! ஆன்மா எனப்படும் ஒன்ற உள்ளதா?"

28. ஓ மன்னரே! "மிக உயர்ந்த உணர்வில் அப்படியொன்று இல்லவே இல்லை."

29. "மிக நன்று, நாகசேனரே!"

இந்தத் தவறானப் புரிதலின் காரணங்கள்.

1. புத்தரால் போதிக்கப்பட்டவையாவும், பெரும்பாலும் பிக்குகள் நிறைந்த கூட்டத்தால் கேட்கப்பட்டவையே.

2. எந்த ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றியும் புத்தா கூறியயாவும் வெகுமக்களுக்குப் பிக்குகளால் எடுத்துரைக்கப்பட்டவையே.

3. அப்போது எழுதும் கலை இன்னும் வளர்ந்திருக்கவில்லை. எனவே பிக்குகள் தாங்கள் கேட்டவற்றை மனப்பாடம் செய்ய வேண்டியிருந்தது. தாம் கேட்டவற்றை மனப்பாடம் செய்வதில் அனைத்து பிக்குகளம் கவனம் செலுத்திடவில்லை. ஆயினும், மனப்பாடம் செய்வதையே தம் தொழிலாக்கிக் கொண்ட பிக்குகள் சிலரும் இருந்தனர். அவர்கள் பாணகர்கள் என அழைக்கப்பட்டனர்.

4. பவுத்தக் கொள்கை இலக்கியங்கள் கடலளவு பரந்திருந்தன. இவையனைத்தையும் மனப்பாடம் செய்வது உண்மையில் மிக அரிய செயலாகும்.

5. புத்தர் கூறியதை எடுத்துரைப்பதில் அடிக்கடி அவை தவறாக எடுத்துரைக்கப்பட்டதாய்க் காணப்படுகிறது.

6. புத்தர் உயிருடனிருக்கும் போரே, இவ்வாறானத் தவறான எடுத்துரைத்தல்கள் பற்றிய நிகழ்வுகள் அவர் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டன.

7. இது போன்ற ஐந்து நிகழ்ச்சிகளைக் குறித்து எடுத்துக் காட்டுகளைக் கூறமுடியும், அலகத்துபம சுத்தத்தில் ஒன்றும், மஹா-கம்மவிபங்க சுத்தத்தில் மற்றொன்றும், கண்ணகத்தல சுத்தத்தில் மூன்றாவதும், மஹா-தண்ஹா-சாங்கிய சுத்தத்தில் நான்காவதும், மற்றும் ஜீவக சுத்தத்தில் ஐந்தாவதும் குறிப்பிடப்படுகின்றன.

8. ஒரு வேளை இதுபோன்ற தவறான எடுத்துரைத்தல்கள் இன்னும்பல இருந்திருக்கக்கூடும். ஏனெனில், இது போன்ற தற்செயலாக நிகழும் சம்வங்களின்போது நாம் என்ன செய்ய வேண்டுமெனக் கூறும்படி கேட்க பிக்குகளே புத்தரிடம் சென்றதாக நாம் அறிகிறோம்.

9. கர்மம், மறுபிறப்பு ஆகியவற்றைப் பொறுத்து தவறான எடுத்துரைத்தல்கள் மிகப் பொதுவாயிருந்தன.

10. இக்கோட்பாடுகள் பிராமண மதத்திலும் இடம்பெற்றிருந்தமையின் விளைவாக, பிராமணீயக் கொள்கைகளை பவுத்த சமயத்திற்குள் இணைந்துவிடுவது பாணகர்களுக்கு எளிதாயிருந்தது.

11. எனவே, பவுத்தக் கொள்கை இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளவற்றில் புத்தரின் வார்த்தைகளாக எவற்றை ஏற்பதென்பதில் ஒருவர் மிகக் கவனமாக இருக்க வேண்டியுள்ளது.

12. எப்படியோ ஒரு சோதனைக் கைவசமுள்ளது.

13. தன்னம்பிக்கையோடு எதையேனும் கூறமுடியமெனில் அது இதுதான்; பகுத்தறிவாளராய் இல்லையெனிலோ, தர்க்க ரீதியாய் அவர் இல்லையெனிலோ, புத்தர் ஏதுமற்றவர். மற்றவை அனைத்தும் பொருந்தியபின், எதுவெல்லாம் பகுத்தறிவானதோ, தர்க்க ரீதியானதோ, அதுவே புத்தரின் வார்த்தையெனக் கொள்ளத்தக்கதாகும்.

14. மனிதனின் நலத்திற்கு உதவாத எந்த விவாதத்திலும் புகுவதை, புத்தர் பொருட்படுத்தவேயில்லையென்பது இரண்டாவது விஷயமாகும். எனவே மனித நலத்திற்குத் தொடர்பற்ற எதுவும் புத்தரோடு சார்புறுத்தப்படுமாயின் அது புத்தரின் வார்த்தையாக ஏற்கப்படலாகாது.

15. மூன்றாவது சோதனை ஒன்று உள்ளது. எல்லா விஷயங்களையும் புத்தர் இரண்டு வகைகளாகப் பிரித்தார்-தான் நிச்சயமாய் அறிந்தவையென்றும் தான் அறிந்தது நிச்சயமில்லை என்றும், முதல் வகையைச் சேர்ந்த விஷயங்கள் பற்றிய, தம் கருத்துக்களை அவர் உறுதியாகவும், இறுதியாகவும் தெரிவித்தார். இரண்டாவது வகையைச் சேர்ந்த

விஷயங்கள் பற்றியும் அவர்தம் கருத்துக்களைத் தெரிவித்தார். ஆனால் அவை தற்காலிகமான கருத்துக்கள் மட்டுமே.

16. ஐயமும் வேறுபாடும், உள்ள இம்மூன்று விஷயங்களைப் பற்றிய விவாதத்தில் புத்தரின் கருத்தென்ன என்று தீர்மானிப்பதற்கு முன் இந்தச் சோதனைகளை மனத்தில் தாங்குதல் மிக அவசியமாகும்.

பவுத்த வாழ்முறை

1. நன்மை, தீமை, பழிச்செயல் பற்றி

1. நன்மைப் புரி, தீமையில் பங்கேற்காதே, பழிச்செயல் புரியாதே.

2. இதுவே பவுத்த வாழ்முறை.

3. எது நல்லதோ அதையே செய்ய வேண்டிய மனிதன் அதை மேலும், மேலும் செய்து, அதன்வழி அவன் தன் உள்ளத்தினின்றும் அவாவை விரட்டுவானாக, நன்மையின் தொகுப்பே இன்பம்.

4. நன்மைப் பற்றி ஒரு போக்காய் எண்ணிக் கொண்டு "அது எங்கே எனக்குக் கிட்டப் போகிறது" எனக் கூற வேண்டாம். நீர்க்குடம் துளித்துளியாய்த் தானே நிரம்புகின்றது. சிறிது சிறிதாய்ச் சேர்ந்து நன்மை பெருகுகின்றது.

5. ஆயின் நன்கு புரியப்பட்ட ஒரு செயல் ஒருவனுக்கு எவ்வருத்தத்தையும் கொணர்வதில்லை- அதன் பயனாகியக்கனி மகிழ்ச்சியோடும் திருப்பதியோடும் அடையப்படுகிறது.

6. நன்கு புரியப்பட்ட ஒரு செயல் நிச்சயம் எவ்வருத்தத்தையும் கொணர்வதில்லை-அதன் பயனாகியக் கனி மகிழ்ச்சியோடும் திருப்பதியோடும் அடையப்படுகிறது.

7. ஒரு மனிதன் எது நல்லதோ அதைச் செய்வானேயாயின் அவன் அதை மேலும், மேலும் செய்வானாக: அதில் அவன் மகிழ்வானாக; நன்மையின் தொகுப்பு இன்பமயமானது.

8. தன் நற்செய்கைகளின் பயன்கனி பழுக்காத தீ நாட்களை ஒரு நல்லவன் காண்பானேயாயினும்-அவன் புரிந்த நற்செயல்கள் கனியுங்களால், அந்நல்லவன் நன்மைகளை நிச்சயம் காண்பான்.

9. தன்னை அது நெருங்கப் போவதில்லை என ஒருவன் தன்மனத்தில் கூறிக் கொண்டு நற்செயல் பற்றி எளிதாய் எண்ண வேண்டாம். நீர்த்துளிகளால் சிறுகச்சிறுகக் குடம் நிறைவது போலவே-அறிவுள்ள மனிதன், சிறுகச்சிறுகச் சேர்தத்த நன்மைகளால் நிறைவான்.

10. நல்லொழுக்கத்தின் மணம் சந்தனம், கற்பூரம், தாமரை அல்லது மல்லிகை ஆகியவற்றைக் காட்டிலும் நனியுயர்ந்தது.

11. சந்தனம், கற்பூரம் ஆகியவற்றின் மணம் மங்கக் கூடும்- ஆனால் நல்லொழுக்க மணமோ உயர்பீடமேறும்.

12. அது என்னை அண்டாது எனக் கூறித் தீமையை எளிதாய்க் கருதவேண்டாம். துளித்துளியாய் நீர்குடம் நிறைவதுபோல், சிறுகச்சிறுக சேரும் தீமை தொகுப்பாகிவிடும்.

13. வருத்தம் விளைவிக்கும் செயலைப் புரிதல் நன்றன்று-அதன் பயன்கனி கண்ணீரோடும் புலம்பலோடம் அடையப் படும்.

14. ஒரு மனிதன் தீயமனத்துடன் பேசினால் அல்லது செயல்பட்டால் காளையின் குளம்படியைத் தொடரும் வண்டிச்சக்கரம் போல் துயரம் அவனை நெருக்கமாய்த் தொடரும்.

15. தீயவைகளைப் பின்தொடராதீர்கள். அசிரத்தையில் நிலைப்படாதீர்கள், தவறானச் சிந்தனைகளைப் பேணாதீர்கள்.

16. சிறந்தவற்றை நோக்கி விரையுங்கள்-தீய நினைவுகளை ஒடுக்குங்கள், நன்மை புரிவதில் எவன் பின்தங்குகிறானோ, அவன் மனம் தீமையில் மகிழ்கிறது.

17. வருத்தம் விளைவிக்கும் அச்செயலைப்புரிதல் நன்றன்று-தன் பயன்கனி கண்ணீரோடும், புலம்பலோடும் அடையப்படும்.

18. தீச்செயல் புரியும் ஒருவன் தன் தீச்செயல்களின் பயன் கனி பழுக்காதவரை மகிழ்ச்சியைக் காண்பானாயினும் அவனுடைய தீச் செயல்கள் பழுக்கையில், அத்தீச்செயல் புரிபவன் தீமைகளைக் காண்கிறான்.

19. 'அது என்னை நெருங்கப் போவதில்லை' என ஒருவன் தன் மனத்தில் கூறிக் கொண்டு தீச்செயல்பற்றிச் சாதாரணமாக எண்ணவேண்டாம். நீர்த்துளிகளால் குடம் சிறுகச்சிறுக நிறைவது போலவே, மூடன் சிறுகச்சிறுகச் சேர்த்தத் தீமையால் நிறைவான்.

20. ஒரு மனிதன் நன்மையை நோக்கி விரைய வேண்டும்-நல்லெண்ணங்களைத் தீமையைவிட்டு விலக்கிவைக்க வேண்டும், நல்லதை மிகச் சோம்பலாய்ப் புரிபவனின் மனம் தீமையில் மகிழும்.

21. ஒரு மனிதன் பழிச்செயல் புரிந்துவிட்டால் அவன் அதை மீண்டும் செய்யாமலிருப்பானாக; அவன் பழிச்செயலில் மகிழாமலிருப்பானாக; தீமையின் தொகுப்பு துன்பமயமானது.

22. நல்லொழுக்க விதியைப்பின்பற்றுங்கள். பழிச்செயலைப் பின்பற்றாதீர்கள், நல்லொழுக்கமுடையவன் இவ்வுலகில் பேரின்பம் துய்க்கிறான்.

23. காமஇச்சையிலிருந்து துன்பம் பிறக்கிறது; காம இச்சையிலிருந்தே அச்சம் பிறக்கிறது. காம இச்சையிலிருந்து முழுமையாய் விடுபட்டவனுக்கு துன்பமும் இல்லை-அச்சமும் இல்லை.

24. பிணிகளிலே (அங்கங்களின்) மிகமோசமானது பசிப்பிணியே, துன்பங்களில் மோசமானது பிறவித்துன்பமே, சரியான உண்மை பற்றிய இவ்வறிவுக்கேற்ப நிப்பானம் மிக்குயர்ந்த பேரின்பமாகிறது.

25. ஒருவன் புரியும் தீமை, தானே பெற்றதாய் தன்னால் வளாக்கப்பட்டதாய் விளங்கி, வைரம் இரத்தினக் கல்லையும் அறுப்பதுபோல், புரிந்தவனையே நசித்துவிடும்.

26. தீமை மிகுந்தவனாய் இருப்பவனுக்கு, அது, அவன் எதிரி. அவனுக்கு நேரவிருப்பும் நிலைக்குக் கீழப்படுத்திவிடும்-மரத்தைச் சுற்றிக் கொள்ளும் விஷக்கொடி செய்வதுபோல்.

27. நமக்குத் துன்பம் தரக்கூடிய தீயசெயல்களைச் செய்வது எளிது. நன்மைபயக்கக் கூடிய நற்செயல்களைச் செய்வது அரிது.

## 2. அவா மற்றும் காமம் பற்றி

1. அவாவினாலோ அல்லது காமத்தினாலோ ஆட்கொள்ளப்பட வேண்டாம்.

2. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

3. விருப்பின் நிறைவேற்றம் செல்வ மழையில் காணப்படலாகாது. "என்றும் தீராதது, துன்பமயமானது விருப்பங்கள்" என்பதை நல்லறிஞர் நன்கறிவர்.

4. விண்முட்டும் உலகச்சுகங்களிலும் அவர் மகிழ்ச்சியுறுவதில்லை; அவா அறுத்தலிலேயே அவர்க்கின்பமுள்ளது. அவர் மேலான விழிப்புற்ற புத்தரின் சீடராவார்.

5. அவாவினின்றும் துன்பம் பிறக்கிறது. அவாவினின்றும் அச்சம் பிறக்கின்றது. அவாவினின்றும் முழு விடுதலை எய்தியவர்க்குத் துன்பமும் இல்லை-அச்சமும் இல்லை.

6. வேணவாவினின்றும் துன்பம் பிறக்கிறது. வேணவாவினின்றும் அச்சம் பிறக்கின்றது. வேணவாவினின்றம் முழு விடுதலை எய்தியவருக்குத் துன்பமும் இல்லை-அச்சமும் இல்லை.

6. வேணவாவினின்றும் துன்பம் பிறக்கிறது. வேணவாவினின்றும் அச்சம் பிறக்கின்றது. வேணவாவினின்றும் முழு விடுதலை எய்தியவருக்குத் துன்பமும் இல்லை-அச்சமும் இல்லை.

7. தற்பெருமைக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்பவன், (வாழ்வின் உண்மை இலக்கை) மறந்தவனாய், சுகங்களில் பற்றுடையவனாய் இருப்பவன், சரியான நேரத்தில், தியானத்தில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவனிடம் பொறாமைக் கொள்வான்.

8. எந்த மனிதனும் எதன்மீதும் பற்றுக் கொள்ளலாகாது; அதன் இழப்பு துன்பம் தரும். எதன்மீதும் வேண்டுதல் வேண்டாமை அற்றவர்கள் கட்டற்றவர்களாய் விளங்குவார்கள்.

9. இச்சையினின்றும் இன்னல் வருகிறது; இச்சையினின்றும் அச்சம் வருகிறது; இச்சைகளின்றும் விடுபட்டவன் இன்னலையோ அச்சத்தையோ அறியாதவனாயிருக்கிறான்.

10. பற்றினின்றும் இன்னல் வருகிறது. பற்றினின்றும் அச்சம் வருகிறது. பற்றுக்களினின்றும் விடுபட்டவன் இன்னலையோ அச்சத்தையோ அறியாதவனாயிருக்கிறான்.

11. காமத்தினின்றும் இன்னல் வருகிறது; காமத்தினின்றும் அச்சம் வருகிறது; காமத்தினின்று விடுபட்டவன் இன்னலையோ அச்சத்தையே அறியாதவனாயிருக்கிறான்.

12. பேராசையினின்றும் இன்னல் வருகிறது. பேராசையினின்றும் அச்சம் வருகிறது. போராசையினின்றும் விடுபட்டவன் இன்னலையோ அச்சத்தையோ அறியாதவனாயிருக்கிறான்.

13. நல்லொழுக்கம் நல்லறிவும் உடையவனாகவும், நீதிமானாகவும், உண்மையே உரைப்பவனாகவும், தன் பணிகளை மட்டும் புரிபவனாகவும், உள்ளவன் எவனோ அவனை உலகம் உவக்கிறது.

14. உற்றாரும், நண்பர்களும் உள்ளன்பினரும் வெகு தூரம் சென்று ஆங்கிருந்து பத்திரமாய்த் திரும்பியவனை வந்தனம் கூறி வரவேற்பர்.

15. அவ்வண்ணமே வெகுதூரம் சென்று திரும்பியவனை உற்றார் வரவேற்பதைப்போல, ஒருவன் நன்மை புரிந்துவிட்டுச் செல்வானாகில், அவனுடைய நற்செயல்கள் அவனுக்கு நல்ல வரவேற்பளிக்கின்றன.

### 3. துன்புறுத்தல் மற்றும் தீயவிருப்பம் கொள்ளல் பற்றி.

1. துன்பமிழைக்காதே; தீய விருப்பம் கொள்ளாதே.

2. பவுத்த வாழ்முறை இதுவேயாகும்.

3. விரைவுமிக்க குதிரை சாட்டையடி பெறச்சந்தர்ப்பம் அளிக்காமை போல, உலகெங்கும் எந்த மனிதனேனும் ஏச்சுக்கு இடமளிக்காத வகையில், குற்றமற்றவனாய் விளங்குகின்றானா?

4. தன்னம்பிக்கையால், நல்லொழுக்கத்தால், நற்சக்தியால் தியானத்தால், உண்மைக்குள் ஆராய்ந்து ஊடுருவவலால், அறிவின் நிறைவால், நன்னடத்தை நிறைவால், நினைவால் நீங்கள் இப்பெருந்துயரைப் பின் விடுங்கள்.

5. நீண்ட துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் பயிற்சியே தவப்பயிற்சிகள் யாவற்றிலும் மிகச்சிறந்ததாகும்; "அனைத்திலும் மிகச் சிறந்தது நிப்பானமே" என்றுரைக்கிறார் புத்தர் அடுத்தவர்க்குத் துன்பம் இழைப்பவன் எவனும் துறவியன்று; அடுத்தவர் துயருக்குக் காரணமானவன் எவனும் சீடனன்று.

6. இன்னா கூறாமை, இன்னா செய்யாமை, ஒழுக்கத்திற்குப் பொருந்தக் கட்டுப்பாடுடைமையைப் பயிலுதல்-இவையே புத்தரின் ஆலோசனை.

7. கொலை புரியவும் வேண்டாம்-கொலை புரியக் காரணமாகவும் வேண்டாம்.

8. தன் சொந்த நல்லின்பம் விழைபவன், அவ்வண்ணமே நல்லின்பம் விழையும் பிறரைத் தண்டிக்கவோ கொல்லவோ கூடாது-அவன் இன்புறுவான்.

9. உடைந்த உலோகத் தகடென (சேகண்டி) ஒலியேதும் பாதிருப்பாயாயின், நீ நிப்பானம் அடைந்து விட்டாய் சினத்தை நீ அறியாய்.

10. அப்பாவியான, தீமையற்ற ஒருவனுக்குத் துன்பமிழைப்பவன் விரைவிலேயே துன்புறுவான்.

11. எவரொருவர், தூய துவராடை அணிந்தவராய், அமைதியானவராய், பணிவுடையவராய், தூயராய், அடுத்த உயிர்கள் அனைத்திடமும் குறையேதும் காணாதவராய். இருக்கிறாரோ அவரே உண்மையில் துறவி (சாமணர்) தவசி (பிக்கு) ஆவார்.

12. இழிவையும் பொறுத்துக் கொள்பவராய், ஒறுத்தல் செய்யாதவராய், சாட்டையடியைப் பொறுத்துக் கொள்ளும் உயர்வகைக் குதிரை போன்றவராய் எவரேனும் இவ்வுலகில் உள்ளனரா?

13. தீமையற்ற தூய, பொறையுடைய மனிதனை ஒருவன் துன்புறுத்தினால், அந்த அறிவிலியை, துரும்பை அலைக்கழிக்கும் காற்று போல தீமை அவனை ஆட்கொள்ளும்.

## 4. சினமும் பகைமையும் பற்றி

1. சினத்தை வளர்க்காதீர், உங்கள் பகைமையை மறந்து விடுங்கள். அன்பால் பகைவரையும் வெல்லுங்கள்.

2. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

3. சினமென்னும் தீ அணைக்கப்படவேண்டும்.

4. "அவன் என்னை ஏசினான், அவன் என்னைத் தகதாவாறு நடத்தினான், என்னை ஆட்கொண்டான், கொள்ளையிட்டான்" என்னும் நினைவுகளைச் சுமப்பவன் தனக்கும் சினம் அடங்குவதில்லை.

5. அவ்வகை நினைவுகளைச் சுமக்காதவனுக்குள் சினம் அணைந்து போகும்.

6. பகைவன் பகைவனுக்குத் தீமை கருதுகிறான்-வெறுப்பவன் வெறுப்பவனுக்கு - ஆனால் தீமை யார்க்குரியது.

7. ஒருவன் அன்பால் சினத்தை வெல்லட்டும், அவன் தீமையை நன்மையால் வெல்லட்டும்; பேராசையை வள்ளன்மையால் வெல்லட்டும், பொய்யனை உண்மையால்.

8. உண்மையே உரை, சினத்திற்கு ஆட்படாரே; சிறிதே கேட்கப்படினும் நிறையக் கொடு.

9. ஒரு மனிதன் சினத்தை விடட்டும்-தற்பெருமையை உதறட்டும்-பற்றுக்கள் யாவற்றையும் வெல்லட்டும்; நாம ரூபத்தின்பால் பற்றுக் கொள்ளாத ஒருவன்மேல் எத்துன்பமும் வீழ்வதில்லை-அவன் தனதென எதையும் கொள்ளாமையினால்.

10. உருளும் தேரென எழும் சினம் அடக்குபனை நான் நல்ல ஓட்டுநர் என்றழைக்கிறேன். மற்றவர் அனைவரும் கடிவாளம் மட்டும் கைப்பிடித்தவரே.

11. ஆக்கிரமிப்பு பகைமையைப் பிரசவிக்கிறது; ஆக்கிரமிக்கப்பட்டவன் துன்பம் உறுகிறான். நடுநிலையுற்றவன் வெற்றி தோல்வி இரண்டையும் ஒன்றாய் விலக்கி மகிழ்ச்சியில் ஆழ்கிறான்.

12. காமம் போன்ற தீ எங்கனும் இல்லை. வெறுப்பினைப் போன்ற கெடுதி இல்லை. வாழ்வின் அமைப்பன்ன துன்பம் இல்லை. நிப்பான அமைதிக்கு மேலான இன்பம் இல்லை.

13. எப்போதும் வெறுப்பினால் வெறுப்பு அழிவதில்லை. அன்பினாலேயே வெறுப்பு அழியும். இஃதோர் பண்டைய விதியாகும்.

## 5. மனிதன், மனம் மற்றும் மாசுகள் பற்றி

1. மனிதன, அவனை மனம் ஏதாய் ஆக்குகிறதோ அஃதேயாவான்.

2. மனத்தின் நன்மையை நாடும் பயிற்சியே, அறவழியின் முதற்படியாகும்.

3. இதுவே பவுத்த வாழ்முறையின் முதன்மையான போதனையாகும்.

4. அனைத்திலும் முதற்கூறு மனமேயாகும். மனம் முதற்சிறப்புடையதாகும்.

5. வண்டியை இழுக்கும் விலங்கின் குளம்படியை வண்டிச் சக்கரம் தொடர்வதுபோல் நெருக்கமாய், தீயதை ஒரு மனிதன் பேசினாலும், செய்தாலும், துன்பம் அவனைத் தொடர்கிறது.

6. ஒரு மனிதன் மனத்தின் நேர்நெறி நின்று பேசினாலோ, செயல்புரிந்தாலோ, அவனைத் விட்டகலா நிழலென நெருக்கமாய் அவனை இன்பம் தொடர்கிறது.

7. காக்க கடினமான, வழிநடத்தக் கடினமான இந்த நிலையற்ற, தடுமாற்றமான மனத்தை அறிஞன், அம்பை நிமிர்த்தும் கொல்லனென நேர்ப்படுத்துவான்.

8. நீர்வாழ் மீன் நீரைவிட்டு நிலத்திலெறியப்படுகையில் நடுங்கித் துடிப்பதுபோல், மாறனின் (அவாவின்) ஆளுகைக்குட்படும் மனம் நடுங்கித் துடிக்கிறது.

9. எப்போதும் மகிழ்ச்சியைத் தேடும் மனம் கட்டுப்படுத்தக் கடினமானது-நிலையற்றது. மனத்தை அடக்குதல் நன்மைபயப்பது. அடக்கப்பட்ட மனம் இன்பம் கொணர்கிறது.

10. உன்னையோர் தீவாய் உருவாக்கிக் கொண்டு, கடினமாய் உழைப்பாயாகில், உன் மாசுகள் யாவும் அகற்றப்படுகையில், குற்றங்களிலிருந்து நீ விடுவிக்கப்படுகையில், வையத்துள் வாழ்வாங்கு வாழ்த்து வான்புகழ் எய்துவோர் உலகில் நீ புகுவாய்.

11. நல்லறிஞன், வெள்ளியின் களிம்பை விலக்கும் பொற்கொல்லன்போல், ஒன்றன்பின் ஒன்றாய், சிறுகச் சிறுக, காலகாலத்துக்கும் தன் மாசுகளை விலக்கியொழிப்பானாக.

12. இரும்பினின்றும் துரு தோன்றுகையில், அது இரும்பையே அழித்தல் போலவே, எல்லை மீறுபவனின் சொந்தச் செயல்களே அவனை அழிவுப்பாதைக்கு அழைத்துச் செல்லும்.

13. ஆனால் மாசுகளிலேயே மிக மோசமான மாக ஒன்றுள்ளது. அறியாமையே மிகப்பெரிய மாசாகும். ஓ! துறவிகளே! அந்த மாசினை அகற்றிவிட்டு, மாசற்றவராகுங்கள்.

14. வெட்கமற்றவனாய், தீமைப்புரிபவனாய், இழிவுபடுத்துபவனாய், அசட்டுத்தைரியமுடைய தீயனாய் விளங்குபவனுக்கு வாழ்க்கை சுலபமாகவே இருக்கும்.

15. ஆனால், எப்போதும் தூயவற்றையே நாடி, பற்றற்று, அமைதியர்ய், மாசற்று, அறிவுற்று விளங்குபவனுக்கு வாழ்க்கை கடினமானதாகவே இருக்கும்.

16. எவனொருவன் உண்மையற்றதை உரைத்து, உலகில் தனக்குரியதல்லாததைக் கவர்ந்து கொண்டு, பிறன்மனை விழைகிறவனாய் உள்ளானோ அவன் வாழ்க்கையை அழித்துக் கொள்கிறான்.

17. எவனொருவன் போதையூட்டும் மதுவிற்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறானோ அவன் உயிருடனிருக்கையிலேயே தனக்குப் புதைகுழி வெட்டிக் கொள்கிறான்.

18. தற்கட்டுப்பாடற்றவர்கள் தீயநிலையில் உள்ளார்கள் பேராசையும், குற்றங்களும் உனக்கு நெடுங்காலத்திற்குமாய் வருத்தத்தைக் கொணராவண்ணம் கவனமாயிரு-ஓ! மனிதனே! இதையறிவாயாக.

19. நம்பிக்கைக்கும், மகிழ்ச்சிக்கும் ஏற்ற அளவே உலகம் அளிக்கிறது: ஒரு மனிதன் அடுத்தவர்க்களிக்கப்படும் உணவுக்கும் நீருக்குமாகக் கவலைக் கொள்வானாகில் பகலும், இரவும் அவன் அமைதி கொள்வதேயில்லை.

20. எந்த மனிதனிடம் அவ்வுணர்வு அழிக்கப்பட்டுள்ளதோ, வேரோடு களையப்பட்டுள்ளதோ, அவன் பகலும் இரவும் அமைதிகொள்கிறான்.

21. பற்றினைப் போன்ற தீ இல்லை, பேராசைப் போன்ற வெள்ளமுமில்லை.

22. அடுத்தவர்தம் குற்றம் உடனே காணப்படுகிறது-ஆனால் தம் குற்றம் காணல் கடினமாயுள்ளது. ஒருவன் பிறர் குற்றத்தை உமியென தூற்றுகிறான்-ஆனால் தன் குற்றத்தைத் தான் மறைத்துக் கொள்கிறான்-ஆட்டத்தில் வெற்றிக்கு உதவாசோழியை ஏமாற்றுக்காரன் மறைத்துக் கொள்வதுபோல.

23. ஒரு மனிதன் அடுத்தவன் குற்றத்தையே பார்த்துக்கொண்டு, எப்போதும் குற்றஞ்சாட்டிக் கொண்டிருப்பானாகில் அதை பற்றுகளை ஒழிப்பதினின்றும் வெகுதூரம் விலகியிருப்பான்.

24. அனைத்துத் தீயவற்றினின்றும் ஒதுங்கியிருங்கள்; நல்லனவற்றைப் பண்படுத்துங்கள்; உங்கள் சித்தையைத் தூயதாக்குங்கள். இதுவே புத்தரின் போதனை.

### 6. தன்னுணர்வும், தன்னை வெல்லலும் பற்றி.

1. ஒருவனுக்குத் தன்னுணர்விருப்பின், அவன் தன்னை வெல்லப் பயிலட்டும்

2. இதுவே பவுத்த வாழ்முறை.

3. தனக்குத் தலைவன் தன்னுணர்வேயாகும்-வேறெவர் தலைவர் ஆகிவிடக் கூடும்? நன்கடங்கிய தன்னுணர்வுடைய மனிதன், வெகுசிலரைப் போல், கண்டடையத்தக்க தலைவனைக் காண்கிறான்.

4. போற்றுதலுக்குரியோரின் (அறவோர்), தெரிந்தெடுக்கப்பட்டோரின் (அரியர்), ஒழுக்கமுடையோரின் விதிகளை அலட்சியம் செய்து, போலிக்கொள்கைகளைப் பின்பற்றும் அறிவிலியான மனிதன் தன் அழிவிற்கான கனிகளைத் தானே சும்க்கிறான்-கத்தகக் கோரையின் கனிபோல்.

5. ஒருவனுக்குத் தீமை தனக்குத்தானே புரிந்துக் கொள்ளப்படுகிறது. தன்னாலேயே ஒருவன் துன்புறுகிறான்-ஒருவன் தீமையைப் புரியாதிருப்பதும் தன்னாலேயே-ஒருவன் தூய்மையாவதும் தன்னாலேயே, தூயவனும், மாசுடையோனும் (வாழ்வதும், வீழ்வதும்) தம்மாலேயே-ஒருவனைத் தூய்மைப்படுத்த மற்றெவனாலும் இயலாது.

6. இச்சைகளை மட்டுமே நாடி இச்சிப்பவன், கட்டுப்பாடற்ற புலன்களுடையவனாய், மிகையுணவு புசிப்பவனாய், சோம்பலும் தளர்ச்சியும் உடையவனாய் இருந்து, தன் சொந்த மிகைச் செயல்களாலேயே, பட்டமரம் புயலால் வீழத்தப்படுவது போல வீழத்தப்படுவான்.

7. இச்சைகளை நாடாமல் வாழ்பவன் எவனோ, எவனுடைய புலன்கள் நன்கடங்கியுள்ளனவோ, எவன் அளவாய்ப் புசிப்பவனோ, நம்பிக்கையும் பலமுடையவனெவனோ, அவன், காற்றால் வீசியெறிய முடியாத கல்மலைபோல், வீழ்ச்சியுறாதிருப்பான்.

8. தன்னைத்தானேயொருவன் நேசிப்பானாகில், அவன் தன்னைக் கூர்ந்து கவனித்த வண்ணமிருக்கட்டும்..

9. முதலில் உன்னை நீயே சரியான நெறியில் நிலைநிறுத்திக்கொள்-அதன்பின் பிறருக்கு அறவழி கூறலாம். அறிவுடையோன் அவமதிப்புக்கு வாய்ப்பளிக்காதிருப்பானாக.

10. ஒருவன் தன்னைத்தானே கட்டப்படுத்திக் கொள்வதே கடினமென்கிறார்கள் அவர்கள். பிறர்க்கறிவுறுத்துகிற வண்ணமே தன்னைத்தானே உருவாக்கிக் கொள்பவனாகில், தன்னை நன்கடக்கிய அவன் பிறரைக் கட்டுப்படுத்த இயலும்.

11. ஒரு மனிதன் தான் புரிந்த தீமைக்குத் தானே பலியாகிறான்-தான்புரிந்த நன்மையால் தானே தூய்மைப்படுத்தப்படுகிறான்-எவனொருவனும் மற்றொருவனைத் தூய்மையாக்க இயலாது.

12. போரில் ஒருவன் ஆயிரமாயிரம் மனிதர்களை வெல்ல வேண்டியிருப்பினும், எவனொருவன் தன்னைத்தான் வெல்பவன் ஆவானோ, அவனே, வெற்றிவீரர்களில் தலையானவனாகிறான்.

13. பிறர்க்கறிவுறுத்துகிற வண்ணமே தன்னைத்தான் ஒருவன் உருவாக்கிக் கொள்வானாகில், தன்னை நன்கடக்கிய அவன் பிறரைக் கட்டுப்படுத்த இயலும். ஒருவன் தன்னைத்தான் கட்டுப்படுத்திக் கொள்வதே கடினமென்கிறார்கள் அவர்கள்.

14. ஒருவன் தனக்குத் தானே முழுமையாய்த் தற்காப்போன் ஆவான், வேறொரு காப்பாளன் யாரிருக்க முடியும்? தன்னைத் தான் தற்காக்கின், பெறற்கரிய காவலை ஒருவன் பெற்றவனாகிறான்.

7. ஞானம், நீதி, நல்லோரிணக்கம் பற்றி.

1. அறிவுற்றிரு. நீதியாயிரு. நல்லோரோடிணங்கு.

2. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

3. தவிர்க்க வேண்டியவை எவையென உனக்குக் காட்டுபவராகவும், குறை கூறுதலைப் பொறுத்துக் கொள்பவராகவும், அறிவுற்றவராகவும் உள்ள ஒரு அறிஞரை நீ காண்பாயேயாகில், செல்வப் புதையலைப் பற்றி உனக்குக் கூறுபவரை நீ பின்பற்றுவது போல் அவரைப் பின்பற்று, அவரைப் பின் பற்றுபவனுக்கு நன்மையே அன்றி தீமையில்லை.

4. அவர் அறிவுறுத்தட்டும், அவர் போதிக்கட்டும், 'அவர் தவறானதைத் தடுக்கட்டும் - அவர் நல்லோரால் நேசிக்கப்படுவார், தீயோரால் வெறுக்கப்படுவார்.'

5. தீமைப் புரிவோரை நண்பராய்க் கொள்ளாதே. இழிந்தோரை நண்பராய் ஏற்காதே. ஒழுக்கமுடைய மக்களை நண்பர்களாகக்கொள், மாந்தரில் சிறந்தோரை நண்பராய் ஏற்பாயாக.

6. தம்மத்தைப் பருகுபவன் தெளிந்த மனத்துடன் இன்புற்று வாழ்கிறான்; தெரிந்தெடுக்கப்பட்டோரால் போதிக்கப்படும் தம்மத்தில் எப்போதும் மகிழ்பவர் பிக்கு ஆவார்.

7. கிணறு தோண்டுவோர் (தாம் விரும்பும் இடமெல்லாம்) நீர் கொணர்வர்; வீரர் அம்பை எய்வர்; தச்சர் மரத்தை இழைப்பர்; அறிஞரோ தம்மைத்தாமே நேர்படுத்திக் கொள்வர்.

8. வலிய கற்பாறை காற்றால் அசைக்கப்படாமைப் போல் அறிஞர்கள் இகழ்ச்சிக்கிடையிலோ புகழ்ச்சிக்கிடையிலோ தடுமாறுவதில்லை.

9. அறிஞர் பெருமக்கள் தம்மத்தைக் கேட்டறிந்தபின் ஆழந்த சலனமற்ற அமைதியான ஏரியைப் போல் தெளிவுறுகின்றனர்.

10. எல்லாச சூழ்நிலைகளிலும் நன்மக்கள் உண்மையில் (கனமாய்) நடக்கின்றனர். நன்மக்கள் புலன்களின் திருப்தியை விழைந்து பேசுவதில்லை. அறிஞர் பெருமக்கள் இன்பத்தாலோ துன்பத்தாலோ தூண்டப்படுகையில் மகிழவதுமில்லை, துவள்வதுமில்லை.

11. தீமை கணியுமுன்பே அது தேனினும் இனிமையுடையதாய் எண்ணுகிறான் அறிவிலி. ஆனால் தீமை கனிந்ததும் அந்த அறிவிலி துன்புறத் தொடங்குகிறான்.

12. ஓர் அறிவில தான் எப்போது தீச்செயல் புரிகிறோம் என அறிவதில்லை. ஆனால் ஒரு தீயவன் தன் சொந்தத் தீச்செயல்களால் தீயினால் கருகுதல் போல் கருகிப்பபோகிறான்.

13. விழித்திருப்பவனுக்கு இரவு நெடியது; களைத்திருப்பவனுக்கு ஒரு கல் தொலைவே நெடுந்தொலைவு; மெய்யான தம்மத்தை அறியாத அறிவிலிக்கு வாழ்க்கை நெடியது.

14. தன்னினும் சிறந்தவனையோ, அல்லது தனக்கு நிகரானவனையோ காணாதப் பட்சத்தில் ஒரு பயணித் தானே தன்னந்தனியனாய் உறுதியாய் தன் பயணத்தை மேற்கொள்ளட்டும். அறிவிலி பயணத் துணையாகான்.

15. "இந்தப் பிள்ளைகள் எனக்குரியவர்கள்-இந்தச் சொத்து எனக்குரியது."- இத்தகைய எண்ணங்களால் ஓர் அறிவிலி சித்திரவதைப்படுகிறான். அவன் தனக்குத் தானே உரியவனல்ல; பின் எப்படி பிள்ளைகளும் சொத்தும் அவனுக்குரியனவாகும்?

16. தன் மடமையைத் தான் அறிந்துள்ளவரை, குறைந்தபட்சம் அவ்வளவிற்கு ஓர் அறிவிலி அறிஞனேயாவான். ஆனால் தன்னை அறிஞன் என்று எண்ணிக் கொள்ளும் அறிவிலி உண்மையில் பெரும் மூடனாவான்.

17. சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியும் அளவிற்கே, தன்வாழ்நாள் முழுவதும் அறிஞருடன் கூடியிருப்பினும் மூடன் அவ்வளவிற்கே உண்மையை உணரமுடியும்.

18. அறிவுற்ற ஒரு மனிதன் அறிஞனோடு ஒரு நிமிடமே கூடியிருப்பினும் அவன் விரைவில் உண்மையை உணர்வான்-நாக்கு கறிச்சுவையை உணர்வது போல்.

19. குறைவான புரிதலுடைய மூடர்கள் தமது மிகப்பெரிய எதிரிகளாகத் தம்மைத்தாமே கொண்டிருப்பர்-ஏனெனில் கசக்கும் கனிகளை விளைவிக்கிற தீச்செயல்களை அவர்கள் புரிவதால்.

20. ஒரு மனிதன் தான் நன்குபுரியாதச் செயலுக்காக வருந்தியாக வேண்டும். அச்செயலின் பயனாக அழுகையையும் கண்ணீரையும் அடைகிறான்.

21. ஒரு மனிதன் நன்கு புரியப்பட்ட தன் செயலுக்காக வருத்த வேண்டியதில்லை. அச்செயலின் பயனாக மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் அடைகிறான் என்பதை அறிவீர்களாக.

22. புரியப்பட்ட தீச்செயல் பயன்கனி விளைவிக்காத வரையிலும் மூடன் அதை தேனைப் போல் எண்ணுகிறான்-ஆனால் அதன் பயன் கனிந்ததும் அந்த மூடன் துன்பத்தால் வருந்துகிறான்.

24. மூடன் போலிப்புகழுக்கு ஆசைப்படுகிறான்; பிக்குகளில் முதன்மையாயிருக்க விரும்புகிறான். சங்கங்களில் தலைமைப் பெற விரும்புகிறான். மக்களால் வணங்கப்பட வேண்டுமென விழைகிறான்.

25. தலைநரைத்த மனிதனெல்லாம் பெரியோனன்று, அவன் வயது முதிர்ந்திரப்பினும் அவன் 'முதிய வீணன்' என்றே அழைக்கப்படுவான்.

26. எவரிடத்தில் உண்மையும், ஒழுக்கமும், இரக்கமும், தன்னடக்கமும், நடுவுநிலையும் உள்ளதோ அவர் மாசற்றவர், அறிஞர், அவரே சான்றோர் என அழைக்கப்படுகிறார்.

27. ஒரு பொறாமையுள்ள, கருமியான, நேர்மையற்ற மனிதன், நிறை பேசுவதன் மூலம் மட்டுமோ அல்லது உடலழகினால் மட்டுமோ மதிப்பிற்குரியவனாவி விடவதில்லை.

28. எவனொருவனுக்குள் இவையெல்லாம் அழிந்துபடுகிறதோ, வேருடன் களையப்படுகிறானோ, அறிஞனாயுள்ளானோ அவன் மதிப்பிற்குரியவன் என்று அழைக்கப்படுகிறான்.

29. ஒரு விஷயத்தை வன்முறையால் கொண்டு செல்கிற மனிதன் நீதியானவனில்லை; இல்லவே இல்லை. எவனொருவன் சரியானவற்றையும், தவறானவற்றையும் வேறுபடுத்துகிறானோ, எவனொருவன் கற்றறிந்து, மற்றவர்களை வன்முறையால் அன்றி அதே தம்மத்தால் வழி நடத்துகிறானோ, தம்மத்தின் காவலனாகவும், அறிஞனாகவும் இருக்கிறானோ அவனே நீதிமானென்று அழைக்கப்படுகிறான்.

30. அதிகம் பேசுவதனாலேயே ஒருவன் கற்றவன் என்பதில்லை; எவனொருவன் பொறமையாயுள்ளானோ, வெறுப்பினின்றும் அச்சத்தினின்றும் விடுபட்டள்ளானோ அவனே கற்றவன் என்று அழைக்கப்படுகிறான்.

31. ஒரு மனிதன் அதிகம் பிரசங்கிப்பதாலேயே அவன் தம்மமத்தின் காவலனாகி விடுவதில்லை. ஒரு மனிதன் குறைவாகவே கற்றறிந்தாலும் தம்மத்தை உயிரோட்டமாய்க் கண்டால் அவனே தம்மத்தின் காவலனாவான்-அம்மனிதன் தம்மத்தை எப்போதும் கைவிடுவதில்லை.

32. ஒரு மனிதன் தன்னோடிணைந்து நடக்கும் கவனம்மிக்க துணைவரை அறிஞரை, அமைதியான மனத்துடன் வாழ்பவரைக் காண்பானேயாகில், அனைத்து ஆபத்துக்களையும் வென்று, இன்புற்று, அன்புடனும் பணிவுடனும் அவருடன் இணங்கி நடக்கலாம்.

33. ஒரு மனிதன் தன்னோடிணைந்து நடக்கத்தக்க கவனம்மிக்க துணைவரை, அறிஞரை, அமைதியான மனத்துடன் வாழ்பவரைக் காணாவிடில், அவன் தனியாகவே பயணிக்கட்டும்-

தான் வென்ற நாட்டைத் தன்பின் விட்டுவிட்டுத் தனியே காட்டு யானைபோல் வரும் மன்னனைப் போல.

34. மூடனோடு இணங்கி வாழ்தலை விடத் தனித்து வாழ்வதே மிவும் சிறந்ததாகும், ஒரு மனிதன் தனித்து வாழட்டும்; அவன் பழிச்செயலேதும் புரியாமல், குறைந்தபட்ச விருப்பங்களோடு தனித்து காட்டும் யானைபோல் வாழட்டும்.

35. சூழல் தோன்றினால், நண்பர்கள் மகிழ்ச்சிக்குக் காரணமாவர்-அவர்களோடிருப்பது மகிழ்ச்சிக்குரியது. காரணம் எதுவாயினும் நற்செயல் மகிழ்ச்சிக்குரியது. காரணம் எதுவாயினும் நற்செயல் பொன்றுங்கால் பொன்றாத் துணையாவது; வருத்தமனத்தையும் விட்டுத் தொலைப்பது மகிழ்ச்சிக்குரியது.

36. உலகில் தாய்மைப்பேறு மகிழ்ச்சிக்குரியது; தந்தைப்போறு மகிழ்ச்சிக்குரியது; சாமணப்பேறு மகிழ்ச்சிகுரியது.

37. முதுமை வரை நீடிக்கும் நல்லொழுக்கம் மகிழ்ச்சிக்குரியது ஆணிவேரென நிலைக்கும் நம்பிக்கை மகிழ்ச்சிக்குரியது; அறிவுடைமையுறுதல் மகிழ்ச்சிக்குரியது; பழிச்செயல் தவிர்த்தல் மகிழ்ச்சிக்குரியது.

38. மூடர் தம்மிடை நடப்பவன் நெடுங்காலம் துன்புறுகிறான்; பகைவரிடை வாழ்வதுபோல் மூடரிடை வாழ்வதுவும் துன்பமயமானதே. அறிஞரிடை வாழ்வது உற்ற உறவினரைக் காண்டல் போல் இன்புறற்குரியது.

39. எனவே ஒருவன், அறிஞரை அறிவுற்றவரை, கற்றுணர்ந்தவரை, மிகுமுயற்சியுடையவரை, கடமையுணர்வுள்ளவரை, தெரிசெய்யப்பட்டவரை-இவ்ண்ணமான நல்லறிஞரை விண்மீன் வழிசெல்லும் நிலவெனத் தொடரவேண்டும்.

40. தற்பெருமை, இச்சை, காமம் ஆகியவற்றைக் துய்த்தல் போன்றவற்றைப் பின்பற்றவேண்டாம். எவனொருவன் நேர்மையானவனோ அவன் போதிய இன்பத்தை அடைகிறான்.

41. கற்றுணர்ந்தவன் நேர்மையால் தற்பெருமையை விரட்டுகையில், அந்த நல்லறிஞன், நல்லறிவின் உச்சிமுகட்டுக்கேறி, கீழிருக்கும் மூடர்களைக் காணும்நிலை எய்தி, துன்பத்தினின்று தான் விடுபட்டவனாய், துன்புறம் கூட்டத்தைக் காண்கிறான்-சமவெளியில் நிற்பவரை மலைமேல் நின்று காண்பவனைப் போல.

42. சிந்தனையற்றவரிடை நேரிய சிந்தனையாளனாய், உறங்குவோரிடை விழிப்புற்றிருப்பவனாய், அறிஞன், பலவீனமான குதிரையைப் பின்விட்டு முன்விரையும் புரவியென முன்னேறுகிறான்.

8. ஆழ்ந்த சிந்தனையுடைமையும், நற்கவனமுடைமையும் பற்றி.

1. அனைத்திலும் ஆழ்ந்த சிந்தனைக் கருத்தாழம் உடையவனாயிரு, அனைத்திலும் கவனம்மிக்கவனாயிரு-அனைத்திலும் நேர்மையாய்த் துணிவுடையவனாயிரு.

2. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

3. நாம் யாதாக இருக்கிறோமோ அவையாவும், நாம் யாது சிந்தித்தோமோ அவைகளே; அவை நம் சிந்தனைகளை அடிப்படையாய்க் கொண்டவை. அவை நம் சிந்தனைகளால் உருவானவை. ஒரு மனிதன் தீய சிந்தனையுடன் பேசினாலோ, செயல்புரிந்தாலோ இன்பம் அவனைத் தொடர்கிறது. எனவே தூய சிந்தனைகளே இன்றியமையாதனவாகும்.

4. சிந்தனையற்றிருக்காதே! உன் சிந்தனைகளைக் கவனி! சேற்றிலிருந்து விடுபடும் யானையென தீய பாதையிலிருந்து உன்னை விலக்கிக் கொள்.

5. அறிவுற்ற மனிதன் தன் எண்ணங்களைக் காக்கட்டும்-ஏனெனில் அவை காணக் கடினமானவை, கலைமயமானவை, எண்ணுந்தோறும் தோன்றுபவை-நன்கு காக்கப்பட்ட எண்ணங்கள் நல்லின்பத்தைக் கொணர்கின்றன.

6. நன்கு வேயப்படாத கூரை வீட்டினுள் மழைநீர் புகுவது போல் சிந்திக்காத மனத்தினுள் பற்றுக்கள் புகுந்துவிடும்.

7. நன்கு வேயப்பட்ட கூரைவீட்டினுள் மழைநீர் புக இயலாமைபோல் நன்கு சிந்திக்கும் மனத்தினுள் பற்றுக்கள் புகுவதில்லை.

8. முன்பெல்லாம் என் மனம் எண்ணுந்தோறும் தன் விருப்பப்படி தான் மகிழும் வண்ணம் அலைவுறும். ஆனால் தற்போது மதம் பிடித்த யானையை அங்குசத்தால் அடக்கும் பாகனென மனத்தை முழுமையாய் நான் வசப்படுத்தியுள்ளேன்.

9. எண்ணந்தோறும் அலைவுறும் மனத்தை இறுகப் பிடித்து தன் வசப்படுத்தல் கடினமெனினும் அதனை அடக்குதல் நன்று அடக்கப்பட்ட மனம் நல்லின்பம் கொணர்கிறது.

10. நெடுந்தூரம் பயணிக்கும் தம் மனத்தைக் கடிவாளம் இடுபவர்கள் உணர்ச்சியின் கட்டுக்களிலிருந்து விடுதலைப் வெற்றவராவர்.

11. ஒரு மனிதனின் நம்பிக்கை நிலையற்றதாயிருப்பின் அவன் மெய்யான தம்மத்தை அறிவதே இல்லை. அவன் மனத்தில் அமைதி சிதறுமேயானால் அவனுடைய அறிவு என்றும் நிறைவுறுவதில்லை.

12. வெறுப்புடையவன் மற்றொரு வெறுப்புடையவனுக்கு யாது செய்யினும் ஒரு பகைவன் மற்றொரும பகைவனுக்கு யாது செய்யினும், தவறாய் வழிநடத்தப்பட்ட மனம் ஒருவனுக்கு அதனினும் அதிகத் தீங்கு செய்யும்.

13. நன்கு வழிநடத்தப்பட்ட மனம் செய்யுமளவிற்கு நன்மையை தாயும் செய்யாள், தந்தையும் செய்யார், வெறந்த உற்றார் உறவினரும் செய்யர்.

9. விழிப்புடைமையும் அக்கறையுடைமையும் துணிவுடைமையும் பற்றி.

1. விழிப்புற்றிருக்கையில், அறிவுற்ற மனிதன் அசட்டையைத் தன்னிலிருந்து விலக்கி ஞானக்கோபுரம் மீதினியேறி, துன்பத்தினின்றம் விடுபட்டவனாய், துன்புறும் மனிதகுலத்தினைக் கண்ணுறுவான். அறிவுற்ற மனிதன் மலைமேலிருப்பது போல் பள்ளத்தாக்கில் வீழந்துள் மூடரைப் பரிவுடன் காண்பான்.
2. அசட்டையாயிருப்போரிடை விழிப்புற்றவனாய், உறங்கிக் கிடப்போரிடை விழித்திருப்பவனாய், படையில் துயர்விலைவிக்கும் குதிரையைப் பின்விட்டு முன் விரையும் வீரன்போல், அறிஞன் விரைகிறான்.

3. அசட்டைதனத்திற்கு ஆட்படாதீர்கள். உடலிச்க்கு உட்படாதீர்கள், விழிப்புற்றவன் ஆழ்ந்தச் சிந்தனைக்குட்படுகிறான்.

4. அக்கறையுடைமை மரணமிலா நிலைக்கு இட்டுச் செல்கிறது. அசட்டையுடைமையோ மரணவழியாகிறது. அக்கறையுடைமையைத் தொடர்பவர் அழிவதேயில்லை, அசட்டையுடைவரோ இருந்தும் இறந்தவர்.

5. பிறிதொன்றிற்காக உங்கள் இலக்கை விட்டு விலகி வீழாதீர்கள்-அப்பிறதொன்று எத்துனைப் பெரிதாயிருப்பினும், ஒரு முறை உங்கள் இலக்கைக் கண்டு கொண்டபின் அதை உறுதியாய் இறுகப் பற்றிக் கொள்ளுங்கள்.

6. விழிப்பாயிருங்கள்! சோர்வை கைவிடுங்கள்! மெய்யான பாதையில் பயணியுங்கள்! அவ்வாறு நடப்பவன் யாவரும் இவ்வுலகில் இன்புற்று வாழ்வர்.

7. சோம்பியிருந்தல் ஓர் இழிவாகும், மாறாத் சோம்பல் மாசாகும். கடின முயற்சியாலும், உள்நோக்காலும் சோர்வென்னும் விஷ அம்பை நீங்கள் வெளியிழுக்க வேண்டும்.

8. அசட்டைத் தனத்திற்கு ஆட்படாதீர்கள், உடலிச்சைக்கு உட்படாதீர்கள், விழிப்புற்றிருத்தலும், ஆழ்ந்து சிந்தித்தலும் வெள்ளப் பெருக்கென இன்பம் விளைக்கும்.

9. அக்கறையுள்ள ஓர் மனிதன் தன்னைத்தானெழுப்பி, மறதியற்றவனாய், தூய செயலுடைவோனாய், கருத்துடன் செயல்படுபவனாய, தன்னைத்தான் தற்காப்பவனாய் இருப்பானாகில் அம்மனிதன் தம்மவழியில் வாழ்கிறான்-அவன் புகழ்பெருகும்.

10. துன்பமும் இன்பமும்:

கொடையும் கருணையும் பற்றி.

1. வறுமை துன்பத்தை விளைவிக்கிறது.

2. ஆனால் வறுமையை அகற்றுவது என்பதே கட்டாயமாக இன்பத்தை விளைவிப்பதாய் அமைந்து விடுவதில்லை.

3. வாழக்கைக் தர உயர்வன்று, ஆனால் பண்பாட்டுத்தர உயர்வு இன்பமிளப்பதாய் உள்ளது.

4. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

5. பிணிகளில் கொடியது பசிப்பிணியே.

6. பெறத்தக்கனவற்றில் பெரியது ஆரோக்கியமே-செலவங்களில் சிறந்தது திருப்தியுடைமையே-நம்பிக்கையுடைமையே நல்லுறவு-நிப்பானமே மிக்குயர்ந்த பேரின்பம்.

7. உண்மையில் இன்புற்று வாழ நாம் கற்றுக்கொள்ள வேண்டும்-நம்மை வெறுப்போரை வெறுக்க அன்று.

8. உண்மையில் இன்புற்று வாழ நாம் கற்றுக் கொள்ளவேண்டும்- பிணியோரிடை பிணியற்று.

9. உண்மையில் இன்புற்று வாழ நாம் கற்றுக் கொள்ளவேண்டும்-பேராசையுடையோரிடை பேராசையற்று.

10. பற்றினால் மனிதகுலம் சீரழிந்துள்ளது-களைபினால் நிலம் சீரழிவது போல்; எனவே பற்றற்ற உயிர்கட்குப் புரியப்படும் கொடை பெரும்பயன் விளைவிக்கிறது.

11. தற்பெருமையால் மனிதகுலம் சீரழிந்துள்ளது-களையினால் நிலம் சீரழிவது போல்; எனவே தற்பெருமையினின்றும் விடுபட்டவர்க்குப் புரியப்படும் கொடை பெரும் பயன் விளைவிக்கிறது.

12. காமத்தால் மனிதகுலம் சீரழிந்தள்ளது-களையினால் நிலம் சீரழிவது போல், எனவே காமத்தினின்றும் விடுபட்டவர்க்குப் புரியப்படும் கொடை பயன்மிக விளைவிக்கிறது.

13. தம்மத்திற்கான கொடை அனைத்துக் கொடைகளையும் விஞ்சுகிறது. தம்மத்தின் இனிமை தம்மத்தையே விஞ்சுகிறது தம்மத்தில் மகிழ்ச்சி அனைத்து மகிழ்ச்சியையும் விஞ்சுகிறது.

14. வெற்றி வெறுப்பை விளைவிக்கிறது-ஏனெனில் வெல்லப்பட்டவன் துன்புறுகிறான். வெற்றி, தோல்வி இரண்டையும் விட்டவன், திருப்தியுற்றவன், அவனே இன்புறுகிறான்.

15. பற்றினையொத்த தீ யாண்டும் இல்லை; வெறுப்பினையொத்த இழப்பும், வீழ்ச்சியும் யாங்கனும் இல்லை, உடலினையொத்த துன்பம் இல்லை; அமைதிக்கு மேலான இன்பமுமில்லை.

16. பிறருடைய தீச்சொற்கள், தீய செயல்கள் ஆகியவற்றின் மீது கண்பதிக்க வேண்டாம்-பிறர் புரிந்து-புரியாமல் விடுத்தது எதனையும் பொருட்படுத்த வேண்டாம். மாறாக உன்னால் புரியப்பட்டது-புரியப்படாதது யாதெனப் பார்.

17. நடுவுநிலையுடையோனுக்கு எப்போதும் வாழ்வு கடினமாகவேயிருக்கும்-அவன் தூய்மையை நாடுபவன்-பற்றற்றவன்-இளைப்பாறுபவன்-வாழ்வில் தூயவன்-பகுத்துணர்பவன்.

18. சாட்டையடிக்கு இடமேயளிக்காத வண்ணம் விரையும் சிறந்த உணர்வுள்ள குதிரைபோல், ஏச்சுக்கு இடமேயளிக்காத வண்ணம், குற்றமற்றவனாய் எந்த மனிதனேனும் இவ்வுலகில் இருக்கிறானா? சாட்டையடிக்கு இடமளிக்காத சிறந்த உணர்வுள்ள குதிரைபோல் விழித்திருங்கள், விரைந்திடுங்கள்.

19. எவரிடமும் கடுமையாய்ப் பேசாதீர்கள்; அவ்வாறு பேச்சுற்றவர் உமக்கும் அவ்விதமே பதிலளிப்பர், கடுஞ்சொல் துன்பமயமானது. அடித்த அடி உம்மையே திரும்ப வந்தடையும்.

20. சுதந்திரம், நல்லிணக்கம், நல்விருப்பம், தன்னலமின்மை இவையே உலகுக்கானவை, தேருக்கு அச்சாணிபோல்.

21. இதுவே, பவுத்த வாழ்முறையாகும்.

## 11. போலி நடிப்புப் பற்றி.

1. எவரொருவரும் இன்னாசொல் உரையாதிருப்பாராக. எவரொருவரும் மற்றொருவரை இன்னாசொல் உரைக்கச் செய்யாதிருப்பாராக- மேலும் இன்னாசொல் உரைப்பாயின் செயலை அங்கீகரிக்காதிருப்பீராக, அனைத்துவகைப் பொய்களும் இன்னாசொற்களும் உம்மிடையிருந்து விலக்கப்படுவதாக.

2. நிறைவானவர் என்ன சொல்கிறாரோ அதையே செய்கிறார். நிறைவானவர் என்ன செய்கிறாரோ அதையே சொல்கிறார். மேலும் அவர் செய்கிறபடி சொல்வதால், சொல்லியபடி செய்வதாலேயே, அவர் நிறைவானவர் என அழைக்கப்படுகிறார்.

3. இதுவே பவுத்த வாழ்முறையாகும்.

12. நல்வழி தொடர்தல் பற்றி.

1. நல்வழியைத் தெரிவுசெய். அதனை விட்டகலாதே.

2. ஈண்டு பாதைகள் பல உண்டு; அனைத்துமே நல்வழிக்கு இட்டுச்செல்வன அன்று.

3. நல்லபாதை என்பது ஒரு சிலரின் இன்பத்திற்கு மட்டும் ஆனதன்று-ஆனால் அனைவர்க்கும் ஆனது.

4. அது தொடக்கத்திலும் நன்மையானதாய் இருக்க வேண்டும், இடையிலும் நன்மையானதாயிருக்க வேண்டும். இறுதியிலும் நன்மையானதாயிருக்க வேண்டும்.

5. நல்வழியைத் தொடர்வதுதென்பது பவுத்த வாழ்முறையைப் பின்பற்றுவதாகும்.

6. சிறந்தவழி எண்மார்க்கமேயாகும்; உண்மைகளில் சிறந்தவை நாற்சொற்களாகும்; நல்லொழுக்கங்களில் சிறந்தது பற்றற்றிருத்தலேயாகும்; மனிதர்களில் சிறந்தவன் கண்ணோட்ட முடையவனாவான்.

7. இதுவே வழி, அறிவுடைமையைத் தூயதாக்குவதற்கு முனையவேறொரு வழியுமில்லை. இவ்வழியே செல்க.

8. இவ்வழியில் செல்வீராயின், நீங்கள் துன்பத்திற்கோர் முடிவுகட்டுவீர்கள், முட்கள் நீக்குதல் பற்றி (உடற்சதைினின்று) நான் புரிந்து கொண்டபோது, என்னால் போதிக்கப்பட்ட வழி இது.

9. உங்களுக்கு நீங்களே முயற்சியெடுக்க வேண்டும். ததாகதர்கள் போதகர்கள் மட்டுமே.

10. 'ஆக்கப்பட்ட அனைத்தும் அழியும்.' இதைக் கண்டறிவன் எவனோ அவன் துன்பத்திலும் அமைதியாயிருக்கிறான்.

11. 'அனைத்து வடிவங்களும் மெய்யன்று'-இதைக் கண்டறிபவன் எவனோ அவன் துன்பத்திலும் அமைதியாயிருக்கிறான்.

12. எழுச்சியுறவேண்டி நேரத்தில் எழுச்சியுறாதவனாய், இளமையாய், வலிமையாய் இருந்தும், சோம்பலால் நிறைந்தவனாய், எவனிருக்கிறானோ, எவனுடைய விருப்பமும், எண்ணமும் பலவீனமாயுள்ளதோ, அந்தச் சோம்பலான, வீணான மனிதன் அறவிற்கான வழியை என்றம் அறியான்.

13. தன் வாக்கைக் கவனிபவனாய், நன்கு கட்டுப்பாடுடைய மனமுடையவனாய், ஒரு மனிதன் எப்போதும் தன் காயத்தால் தவறிழைக்காதிருப்பானாக! இம்மூன்று செயல் வழிகளையும் ஒருவன் தெளிவாய்க் கைக்கொள்வானாகில், அவன் அறிவுற்றோர் போதித்த வழியை அடைவான்.

14. உண்மையின் மூலம் அறிவுப் பெறப்படுறது; உண்மையின்மையால் இருவழிகளை அறிந்துக் கொள்கிற மனிதன் யாரோ அவன் தனக்குத்தானே இவ்வாறாக அறிவை வளர்த்துக்கொள்கிறான்.

15. இலையுதிர்காலத் தாமைரையைப் போல், தன்னல உணர்வை உன் கையாலேயே கிள்ளியெறி, அமைதிக்கான பாதையைச் செம்மையாக்கு, சுகதாவால் நிப்பானம் காட்டப்பட்டுள்ளது.

16. தீமையின் விதியைப் பின் பற்றாதே! சிந்தனையற்று வாழாதே. தவறான கொள்கைகளைப் பின்பற்றாதே!.

17. நீயே விழித்தெழு சோம்பியிராதே! நல்லெழுக்க விதியைப் பின்பற்று, ஒழுக்கமுடையவன் இவ்வுலகில் பேரின்பத்தில் அமைதியுறுகிறான்.

18. கடந்தகாலக் கண்மூடித்தனங்களிலிருந்து எவனொருவன் தெளிவுறுகிறானோ அவன் முகில்களினின்றும் விடுபட்ட முழுமதியென, உலகை ஒளிமயமாக்குகிறான்.

19. எவனொருவன் தீச்செயல்களை நற்செயல்களால் இடம் பெயர்க்கிறானோ அவன், முகிலகளினின்றும் விடுபட்ட முழு மதியென, உலகை ஒளிமயமாக்குகிறான்.

20. ஒரு மனிதன் ஓர் விதியை மீறியவனாய், பொய்யுரைப்பவனாய் இருப்பின் அவன் செய்யாதத் தீமையேதுமில்லை.

21. எப்போதும் விழிப்புற்றவராய், இரவும் பகலும் கற்பவராய், நிப்பானத்திற்கு முயல்பவராய் உள்ளவர்க்கு பற்றுக்கள் அற்றுப்போகும்.

22. 'மவுனமாயமர்ந்திருப்பவனயும் குறைகூறுகிறார்கள். அதிகம்பேசுபவனையும் குறைகூறுகிறார்கள்.' குறைவாய் பேசுபவனையும் கூட, குறைகூறுகிறார்கள் என்பது ஒர் பழமொழி, உலகில் குறைகூறப்படாதவன் ஒருவனுமில்லை.

23. எப்போதும் இகழப்படுபவனாகவோ, எப்போதும் புகழப்படுபவனாகவோ எவனும் இருந்ததுமில்லை-இருக்கப்போவதுமில்லை-இப்போது இருக்கவுமில்லை.

24. நாவின் சினத்துக்கு அஞ்சுக-நாகாக்க, மனத்தின் பழிச்செயல்களை விடுக. மேலும் நல்லொழுக்கத்தை மனதில் பயிற்சி செய்க.

25. நேர்மை நிப்பானத்திற்கு வழி, சிந்தனையின்மை அழிவின் பாதை, யார் நேர்மையாளரோ அவர்கள் இறவாப்புகழுடையோர்-யார் சிந்தனையற்றவரோ அவர்கள் இருந்தும் இறந்தோரேயாவர்.

13. மெய்யான தம்மத்தை பொய்யான தம்மத்தோடு ஒன்றிணைக்காதீர்.

1. எவ்வெவர் பொய்யை மெய்யெனவும், மெய்யைப் பொய்யெனவும் கொண்டு மயங்குகின்றார்களேஆங்கவர்க்கு மனத்தவறு நேர்கிறது-அவர்கள் வாய்மையை உணர்வதில்லை.

2. எவ்வெவர் மெய்யைப் பொய்யெனவும், பொய்யை மெய்யெனவும், கொண்டு மயங்குகின்றார்களோ-ஆங்கவர்க்கு தவறான மனவுணர்வு நேர்கிறது-அவர்கள் வாய்மையை உணர்வதில்லை.

3. எவ்வெவர் மெய்மை மெய்யெனவும், பொய்யை பொய்யெனவும் உணர்கிறார்களோ-ஆங்கவர்க்கு சரியான மனவுணர்வு நேர்கிறது-இவர்கள் வாய்மையை உணர்கிறார்கள்.

4. சரியாக வேயப்படாத கூரைவீட்டுக்குள் மழை நீர் புகுவது போல் சரியாகப் பயிற்சி பெறாத மனத்தினுள் அவா நுழைகிறது.

5. சரியாக வேயப்பட்ட கூரைவீட்டுக்குள் மழைநீழ் புகாமை போல் சரியாகப் பயிற்சிபெற்ற மனதில் அவா நுழைவதில்லை.

6. எழு! அசட்டையாயிராதே! போதனையின் நல்வழியில் நட! போதனை வழி நடப்பவன் உலகெங்கிலும் இன்புறுகிறான்.

7. போதனையின் நல்வழியில் நட; தீய வழிகளில் நடவாதே போதனை வழிநடப்பவன் உலகெங்கிலும் இன்புறுகிறான்.

அவருடைய பேருரைகள்

இல்லறத்தார்க்குரிய பேருரைகள்.

1. இன்புறும் இல்லறத்தார்.

1. ஒரு முறை அநாதபிள்கர் மேன்மைதங்கிய, புத்தர் தங்கியிருந்த இடத்திற்கு வந்தார்; மேன்மைதங்கிய புத்தரை வணங்கி, அவரருகே ஓர் ஆசனத்தில அமர்ந்தார்.

2. இல்லறத்தார்க்கு இன்பம் எதிலுள்ளதென அறிய அநாதபிண்டிகர் ஆவலுற்றிருந்தார்.

3. அதன்படி, அநாதபிண்டிகர், இல்லறத்தாரின் இன்பம் பற்றிய இரகசியத்தை விளக்குமாறு புத்தரை வினவினார்.

4. முதன்மையான இன்பம் உடைமையின்பம் எனவுரைத்தார் புத்தர், இல்லறத்தான் நீதியாகவும், ஒழுங்காகவும், உழைப்பினாலும், கர வலிமையாலும், சிந்தும் வியர்வையாலும் (நெற்றியினின்று) பாடுபட்டுச் சேர்த்த உடைமை உடையவனாயுள்ளான். 'நீதியாய்ச் சேர்த்த நிதியுடைமை உடையவனாய் இருக்கிறேன் நான்' என்னும் நினைவால் அவன் இன்பமெய்துகின்றான்.

5. இரண்டாவது இன்பம் துய்ப்பு இன்பம், ஓர் இல்லறத்தான் நீதியாகவும், ஒழுங்காகவும், உழைப்பினாலும், கரவலிமையாலும், சிந்தும் வியர்வையாலும் (நெற்றியினின்று) பாடுபட்டுச் சேர்த்த அவன் தன் உடைமையைத் துய்த்து, நற்செயல்கள்புரிகிறான். 'நீதியாய்ச் சேர்த்த நிதியுடைமையைக் கொண்டு புகழ்க்குரிய நற்செயல்கள் புரிகிறேன் நான்' என்னும் நிவைால் அவன் இன்பமெய்துகின்றான்.

6. மூன்றாவது இன்பம் கடனற்றிருத்தல், ஓர் இல்லறத்தான் யாருக்கும் சிறிதளவோ பேரளவோ கடன்பட்டில்லாமல், அதனால் இன்பமெய்துகிறான்-அவ்வாறாக 'நான் எம்மனிதனுக்கும் எக்கடனும் பட்டில்லை' என்றவாறு அவன் இன்பமெய்துகின்றான்.

7. நான்காவது இன்பம் குற்றமற்றிருத்தல், ஓர் இல்லறத்தான் உடலால், உரையால், உணர்வால் குற்றமற்றவனாய்த் திகழ்வானாகில், அவன் குறைகளற்றவன் எனும் வகையில் இன்பமெய்துகின்றான்.

8. அநாதபிண்டிகரே! இந்நான்கு வித இன்பங்களும் இல்லறத்தான் எப்போதும் எய்துதற்குரியவை-அவன் முயல்வானேயாகில்.

2. மகள் மகனைவிடச் சிறந்திருக்கக் கூடும்.

1. மேன்மைத் தங்கிய புத்தர் ஒருமுறை ஷ்ராவஸ்தியில் இருக்கையில், கோசலர்களின் மன்னர் பசேந்தி அவரைக் காணவந்தார்.

2. உயர்வெய்திய புத்தருடன் மன்னர் உரையாடலில் ஈடுபட்டிருக்கையில், அரண்மனையிலிருந்து சேவகர் ஒருவர் வந்து, மன்னரை அடைந்து அவர் செவியில், இரகசியமாய் அரசி மல்லிகா ஒரு பெண்குழந்தையை ஈன்றெடுத்தச் செய்தியை அறிவித்தார்.

3. அரசர் வருத்தமாகவும் தளர்ந்தும் காணப்பட்டார். உயர்வெய்திய புத்தர் மன்னரின் சோகத்திற்கான காரணத்தை வினவினார்.

4. அரசி மல்லிகா ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்த சோகச் செய்தியைத் தற்போதுதான் பெற்றேன் என மன்னர் பதிலிறுத்தார்.

5. அதைத் தொடர்ந்து மேன்மை தங்கிய புத்தர் அவ்விஷயத்தைப் பகுத்துணர்ந்தபடி உரைத்தார்: ஓ! மாந்தரின் தலைவரே! ஆண்குழந்தையைவிடப் பெண்குழந்தை சிறந்த பெறுமதியாய் எச்சமாய் திகழக்கூடும். ஏனெனில் அவள் அறிவுற்று, ஒழுக்கமுடையவளாய் வளர்ந்து, அவளுடைய மாமியால் மகளெனப் புகழ்பெறக்கூடும்.

6. அவளால் ஈன்றெடுக்கப்படும் ஆண்மகவு பெருஞ்செயல்கள் புரிந்து, பேரரசை ஆண்டு, மேலும், அத்தகைய நன்மனைவியால் ஈன்றெடுக்கப்பட்ட மகன் நாட்டை வழிநடத்தலாவது நனி நன்றன்றோ!

### 3. கணவனும் மனைவியும்.

1. ஒரு முறை மேன்மைத் தங்கிய புத்தர் மதுராவிற்கும் நெரஞ்சாவிற்கும் இடையிலான நெடுஞ்சாலையில் நுழைந்தார், மதுராவிற்கும் நெரஞ்சாவிற்கும் இடையிலான நெடுஞ்சாலையில் பற்பல இல்லறத்தாரும் அவர் தம் மனைவியரும் கூட இணைந்து கொண்டனர்.

2. அதன்பின் மேன்மை தங்கிய புத்தர் சாலையை விட்டு ஒரு குறிப்பிட்ட மரத்தடியில் ஓர் ஆசனத்தில் அமர்ந்தார். மேன்மைதங்கிய புத்தரை ஆங்குக் கண்ட இல்லறத்தார்களும், அவர் தம் மனைவியரும் அம்மரத்தடியில் அவர் அமர்ந்திருந்ததைக் கண்டனர்.

3. அவ்வாறு கண்டதும் மேன்மை தங்கிய புத்தர் இருந்த இடத்திற்கு அவர்கள் வந்துற்றனர். வந்துற்ற அவர்கள் மேன்மை தங்கிய புத்தரை வணங்கி ஓர்புறம் அமர்ந்து, கணவனுக்கும் மனைவிக்கும் இடையிலான சரியான உறவு பற்றி உயர்வெய்திய புத்தரை வினவினர். அவ்வாறு அமர்ந்த இல்லறத்தார்க்கும் அவர்தம் மனைவியர்க்கும் மேன்மை தங்கிய புத்தர் இவ்வாறுரைக்கலானார்.

4. "இல்லறத்தோரே! ஒரு கணவனும் மனைவியும் உடனுறைந்து வாழ்வதற்கான நான்கு வழிகள் ஈண்டுள்ளன. ஒரு தீய மனிதன் தீய பெண்ணுடன் வாழ்கிறான். ஒரு தீய மனிதன் நனிச்சிறந்த நல்மங்கையுடன் வாழ்கிறான். ஒரு நனிச்சிறந்த நல்மனிதன் ஒரு தீய பெண்ணுடன் வாழ்கிறான். ஒரு நனிச்சிறந்த நல்மனிதன் ஒரு நனிச்சிறந்த நல்மங்கையுடன் வாழ்கிறான்."

5. "இல்லறத்தோரே! ஒரு கணவன் கொலை புரிகிறான், திருடுகிறான்; மாசுடைச் செய்கைகளைப் புரிகிறான்; பொய் புகல்கிறான். மேலும் போதைதரும் மதுவருந்தலில் ஈடுபடுகிறான்-தீயவனாய், பழியுடையவனாய்த் திகழ்கிறான்-அவன் நெஞ்சம் பேராசையால் நிறைந்துள்ளது-அவன் ஒழுக்கமுடையோரை ஏசிப்பேசி இல்வாழ்வு வாழ்கிறான். அவன் தன் மனைவியும் கொலைப் புரிகிறாள்; திருடுகிறாள்; மாசுடைச் செய்கைகளைப் புரிகிறாள்; பொய்ப் புகல்கிறாள், மேலும் போதைதரும் மதுவருந்தலில் ஈடுபடுகிறாள்-தீயவளாய் பழியுடையவளாய்த் திகழ்கிறாள்-அவள் நெஞ்சம் பேராசையால் நிறைந்துள்ளது-அவள் ஒழுக்கமுடையோரை ஏசிப்பேசி இல்வாழ்வு வாழ்கிறாள். உண்மையில், இல்லறத்தோரே-இவ்வாறே ஒரு தீய மனிதன் தீய பெண்ணுடன் வாழ்கிறான்.

6. "இல்லறத்தோரே! ஒரு கணவன் கொலைப் புரிகிறான்; திருடுகிறான்; மாசுடைச் செய்கைகளைப் புரிகிறான்; பொய்ப்புகல்கிறான்; மேலும் போதைதரும் மதுவருந்தலில் ஈடுபடுகிறான்-அவன் நெஞ்சம் பேராசையால் நிறைந்துள்ளது-அவன் ஒழுக்கமுடையோரை ஏசிப்பேசி இல்வாழ்வு வாழ்கிறான் ஆனால் அவன்தன் மனைவியோ கொலைப்புரிவதின்றும், திருடுதலினின்றும், காம மாசுகளிடத்தினின்றும் தவிர்ந்து தற்காத்துக் கொள்கிறாள். அவன்தன் மனைவி ஒழுக்கமுடையவளாய், நன்னடத்தை உடையவளாய், பேராசையிலிருந்து விடுபட்ட உள்ளமுடையவளாயட, ஒழுக்கமுடையோரை ஏசிப் பேசாதவளாய், இல்வாழ்வு வாழ்கிறாள். உண்மையில், இல்லறத்தோரே-இவ்வாறாகவே ஒரு தீய மனிதன் ஒரு நனிச்சிறந்த நல்மங்கையுடன் வாழ்கிறான்.

7. "இல்லறத்தோரே! ஒரு கணவன் கொலைப் புரிவதினின்றும், திருடுதலினின்றும், மாசுகளினின்றும், பொய்ப் புகல்வதினின்றும், போதைதரும் மதுவருந்தலினின்றும் தவிர்ந்து தற்காத்தவனாய், நல்லொழுக்கமும் நன்னடத்தையும் உடையவனாய், பேராசையின் கறைகளினின்று விடுபட்ட மனத்தினனாய், ஒழுக்கமுடையோரை ஏசிப்பேசாதவனாய் இல்வாழ்வு வாழ்கிறான். ஆனால் அவன்தன் மனைவியோ கொலைப் புரிகிறாள், பொய்ப் புகல்கிறாள், போதைத்தரும் மதுவருந்தலில் ஈடுபடுகிறாள். தீயவளாய், பழியுடையவளாயிருக்கிறாள்; பேராசையால் வாழ்வு வாழ்கிறாள் அவள். உண்மையில் இல்லறத்தோரே இவ்வாறாகவே ஒரு நனிசிறந்த நல்மனிதன் ஒருவன் நனிச்சிறந்த நல்மங்கையுடன் வாழ்கிறான்.

9. "இல்லறத்தோரே! இவை நான்குமே கூடி வாழும் வகைகள்."

நல்லொழுக்கம் உடைமையின் அவசியம் பற்றிய பேருரை.

1. மனிதனின் வீழ்ச்சியை உருவாக்குவது யாது?

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்திக்கருகே, ஜேதசோலையில், அநாதபிண்டிகரின் ஆசிரமத்தில் தங்கியிருந்தார்.

2. அப்போது நடு நிசி கடந்த வேளையில், ஜேத சோலையை ஒளிமயமாக்குமளவிற்கு அறிவொளிப் படைத்த குறிப்பிட்ட ஒருவர், உயர்வெய்திய புத்தர் முன்வந்துற்று, நெருங்கி, பணிவுடன் அவரை வணங்கி ஓர்புறம் நின்றார். அவ்வாறு நின்று, உயர்வெய்தி புத்தரிடம் உரைக்கலானார்.

3. "உயர்வெய்திய தங்களை வினவுவதற்காக வந்த நான், ஓ! கோதமரே! வீழ்ச்சியுறும் மனிதனைப்பற்றித் தங்களை வினவுகிறேன. ஒருவனின் வீழ்ச்சிக்கான காரணம் பற்றி விளக்கும்படி வேண்டுகிறேன், உயர்வெய்தி புத்தர் மனிதனின் வீழ்ச்சிப் பற்றி விளக்க ஒப்புக்கொண்டார்."

4. "முற்போக்குடையவன் யாரென எளிதாய் அறியப்படுகிறான், பிற்போக்குடையவன் யாரென எளிதாய் அறியப்படுகிறான். தம்மத்தை நேசிப்பவன் முற்போக்குடையவன்-தம்மத்தை வெறுப்பவன் பிற்போக்குடையவன்."

5. "தீ நெறியாளன் தன்னையே உவப்பான், ஒழுக்கமுடையோரிடம் அவன் மகிழ்ச்சிக்குரிய எதையும் காண்பதில்லை. தீ நெறியாளர் கொள்கைகளையே அவன் ஆதரிப்பான்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கான இரண்டாவது காரணமாகும்."

6. "துஞசுகிறவனாய், உழைப்பற்ற கூட்டத்தை உவப்பவனாய், சோம்பலுடையவனாய, சினத்தை வெளிப்படுத்துபவனாய் ஒரு மனிதனிருப்பின்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கான மூன்றாவது காரணமாகும்."

7. "எவனொருவனேனும் செல்வந்தனாயிருந்து அவன்தன் இளமையைக் கடந்த முதிய தாய் தந்தையரைப் பேணாதிருப்பானேயாகில்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கான நான்காவது காரணமாகும்."

8. "எவனொரவனேனும் நேர்மையின்மையால், ஒரு ரிஷியாயுள்ள பிராமணரையோ அல்லது துறவியையோ, முனிவரையோ வஞ்சிப்பானாகில்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கான ஐந்தாவது காரணமாகும்."

9. "எம்மனிதனேனும் நிறைவான செல்வங்களுடையவனாய், பொன்னும், உண்பொருளும் மிக்குடையவனாய் இருந்தும்- அவ்வருஞ்சுவைப் பொருட்கள்னைத்தையும் தான் மட்டும் தனியாய்த் துய்க்கிறவனாய் உள்ளானாகில்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கான ஆறாவது காரணமாகும்."

10. "எம்மனிதனேனும் பிறப்பினால் அல்லது வளத்தினால் அல்லது குலத்தினால் பெருமிதமுற்று ஒருவன் தன் சொந்த உற்றார் உறவினரை இகழ்வானாகில்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கு ஏழாவது காரணமாகும்."

11. "எம்மனிதனேனும் தீயொழுக்கமுடையவனாய், மதுவருந்துபவனாய், சூதாடுபவனாய, தன்னுடைமைகளைப் பாழாக்குப்வனாய் உள்ளானாகில்-இரு ஒருவனின் வீழ்ச்சிக்கு எட்டாவது காரணமாகும்."

12. "ஒருவன் தன் மனைவியோடு நிறைவுறாமல், வேசிகளிடையிலும் பிறன் மனைவியரிடையிலும் காணப்படுவானாகில்-இது ஒருவனின் வீழ்ச்சிக்கு ஒன்பதாவது காரணமாகும்."

13. "எவனொருவனேனும் நல்லுணர்வற்ற, ஊதாரியான மங்கையையோ, அதே இயல்புடைய மனிதனையோ அதிகாரத்திலிருத்துவானேயாகில் - அது ஒருவனின் வீழ்ச்சிக்கான பத்தாவது காரணமாகும்."

14. "அரசப் பிறப்பாளனான எவனொருவனேனும் குறுகிய படைச்சாதனங்களோடும் பெருகிய பேராசையோடும் பேரரசாட்சிக்கு முயல்வானேயாகில்-அது ஒருவனின் வீழ்ச்சிக்கான பதினொன்றாவது காரணமாகும்."

15. "அறிவொளியுடையோரே! வீழ்ச்சிக்கான இக்காரணங்களை நீவீரறிந்து, இவற்றை மீறிவென்றுவிடுவீராகில் நீர் காக்கப்படுவீர்."

## 2. தீய மனிதன்.

1. உயர்வெய்திய புத்தர், பயணித்துக் கொண்டிருக்கையில், அவருடைய வழக்கப்படி, அவரோடு பயணித்த பிக்குகளுக்குக் கீழ்கண்ட பேருரையை வழங்கினார்.

2. பிக்குகளை நோக்கி புத்தர் உரைத்தார்: "ஒரு தீய மனிதனை இனங்காணுவதெவ்வாறென நீங்கள் அறிவீர்களா?" "அறியோம் ஐயன்மீர்!" எனப் பதிலிறுத்தனர் பிக்குகள்.

3. "தீய மனிதனின், நடத்தைகளை நானுமக்குக் கூறுவேன்."

4. "கேக்கப்படாதபோதே பிறருடைய குற்றங்களைக் காட்டுபவனாய் இருக்கிறான் ஒரு மனிதன்-கேட்கப்பட்டால் சொல்லவே வேண்டியதில்லை! உண்மையில் கேள்விகளால் வினவப் படும்போதோ, துளைக்கப்படும்தோதோ அடுத்தவரைப் பற்றி விடாமலும், மறைக்காமலும் முழுவிவரத்தோடும் குறைகூறிக்கொண்டேயிருக்கிறான். சோதரர்களே! அத்தகைய மனிதன் ஓர் தீயமனிதனாவன்."

5. "கேட்கப்படுகையில், பிறருடைய நற்குணங்களைக் குறிப்பிடுபவனாயில்லாதிருக்கிறான் ஒரு மனிதன்-கேட்கப்படாவிடில் சொல்லவே வேண்டியதில்லை! உண்மையில் கேள்விகாளால் வினவப்படும்போதோ, துளைக்கப்படும்போதோ அடுத்தவர் பற்றிய நல்லனவற்றை உரைக்கிறான் அவன்."

6. "கேட்கப்படுகையில் தன் சொந்தத் தீயகுணங்களை வெளிப்படுத்தாதிருக்கிறான் ஒரு மனிதன்-கேட்கப்படாவிடில் சொல்லவே வேண்டியதில்லை! உண்மையில் கேள்விகளால் வினவப்படும்போதோ, துளைக்கப்படும்போதோ தன்சொந்தத் தீய குணங்களை அவன் குறிப்பிடுகிறானெனினும், அவற்றை முழு விவரத்தோடு கூறாமல் குறைத்துக் கூறுகிறான்-அல்லது மறைத்து விடுகிறான், சோதரர்களே! அத்தகைய மனிதன் ஓர் தீயமனிதனாவான்."

7. "மேலும் சோதரர்களே! கேட்கப்படாமலே, ஒரு மனிதன் தன் நற்குணங்களை வெளிப்படுத்துபனாக இருக்கிறான்-கேட்கப்பட்டால் செல்லவேவேண்டியதில்லை, சோதரர்களே! உண்மையில் கேள்விகளால் வினவப்படும்போதோ, துளைக்கப்படும்போதோ, தன் சொந்த நற்குணங்களை முழுவிவரத்தோடு, குறைக்காமலும், மறைக்காமலும் குறிப்பிடுகிறான். சோதரர்களே! அத்தகைய மனிதன் ஒரு தீய மனிதனாவான்."

3. சிறந்த மனிதன்

1. உயர்வெய்திய புத்தர், பயணித்துக் கொண்டிருக்கையில் அவருடைய வழக்கப்படி, அவரோடு பயணித்த பிக்குகளுக்குக் கீழக்கண்ட பேருரையை வழங்கினார்.

2. பிக்குகளை நோக்கி புத்தர் உரைத்தார்: "உலகில் காணப்படும் மனிதர்களில் நால்வகையினர் உள்ளனர் சோதரர்களே!"

3. "எவனொருவன் தன் சொந்த நலத்திற்கோ, பிறர் நலத்திற்கோ உழைக்காதிருக்கிறானோ அவன்: எவனொருவன் தன் சொந்த நலனுக்கன்றி பிறர் நலத்திற்காகவே உழைப்பவனோ அவன்; எவனொருவன் பிறர் நலத்திற்கன்றி தன் சொந்த நலத்திற்காகவே உழைக்கிறானோ அவன்; எவனொருவன் தன் சொந்த நலத்திற்காகவும், பிறருடையதற்காகவுமாய் இரண்டுக்கும் உழைப்பவனோ அவன்."

4. "எவனொருவன் தன்சொந்த நல்திற்காகவோ, பிறர் நலத்திற்காகவோ உழைக்காதவனோ, அவன் சுடலைக் கொள்ளியிலிருந்தெடுக்கப்பட்ட, இருமுனைகளிலும் எரிகறி-ஆனால் இடையில் சாணத்தால் மெழுகப்பட்ட தீப்பந்தம் போன்றவனாவான். அவன் ஊருக்கோ வனத்திற்கோ ஒளியூட்டப்போவதில்லை. அவன் உலகிற்கே பயனற்றவன். அவன் தனக்குத்தானே பயனற்றவனாவான்."

5. "எவனொருவன் தன் சொந்த நலத்தையுமிழந்து, பிறர் நலத்திற்காய் உழைக்கிறானோ அவன் இருவரில் சிறந்தவனும் திறமுடையோனும் ஆவான்."

6. "மேலும், சோதரர்களே! எவன் தன் சொந்த நலத்திற்காகவும், பிறர் நலத்திற்காகவும் ஆன இரண்டிற்காகவும் உழைக்கிறானோ அவனைப் பொறுத்தவரை-இந்நான்கு போகளிலும் அவனே சிறந்தவன்-தலையானவன்-உயர்வெய்தியவன்-மேலானவன்-மிக்குயர்ந்தவன்."

4. அறிவுஒளி எய்திய மனிதர்.

1. ஒருமுறை மேன்மைதங்கிய புத்தர் உக்கத்தா, சேதப்பியா (இரு நகரங்கள்) ஆகியவற்றிற்கிடையிலான நெடுஞ்சாலையை அடைந்தார். அப்போது தோனர் என்னும் பெயரிய பிராமணரும் உக்கத்தா சேதப்பியா ஆகிய இரு நகரங்களுக்கு இடையிலான அந்நெடுஞ்சாலையை அடைந்திருந்தார்.

2. அப்போது மேன்மைதங்கிய புத்தர் சாலையை விட்டு ஓர் மரத்தடியில் சம்மணமிட்டு அமர்ந்தார். பின்னர் பிராமணர்தோனர், மேன்மைதங்கிய புத்தரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, மரத்தடியில், பறங்கொளிதவழ, மகிழ்ச்சியூட்டும் தோற்றத்துடன் அடங்கிய புலன்களுடன், தணிந்த மனத்துடன், உயர்வுற அடங்கி, தற்காத்து, வலிவுடன் திகழந்தமர்ந்து கொண்டிருந்த அவரைக் கண்டார், அவ்வாறு கண்டு, மேன்மைதங்கிய புத்தர் வீற்றிருந்த இடத்தை அடைந்தார்.

3. வந்துற்ற அவர் புத்தரிடம் வினவினார்:

"போற்றுதலுக்குரிய நீவிர் தேவரல்லவா?"
"பிராமணரே! உண்மையில் நான் தேவன்று,"
"போற்றுதலுக்குரிய நீவிர் பின் கந்தர்வரல்லவா?"
"பிராமணரே! உண்மையில் நான் கந்தர்வனன்று,"
"போற்றுதலுக்குரிய நீவிர் பின் யக்கரல்லவா?"
"பிராமணரே! உண்மையில் நான் யாக்கனன்று"
"போற்றுதலுக்குரிய நீவிர் பின் மானுடன் அல்லவா?"
"பிராமணரே! உண்மையில் நான் மானுடன் அன்று."

4. உயர்வெய்திய புத்தர் இவ்வாறு பதிலிறுத்ததைக் கேட்ட பிராமணர் கூறினார்:

"தாங்கள் தேவரா என வினவப்படும்போது
தாங்கள் கூறுகிறீர்கள்-இல்லையென்று,
தாங்கள் கந்தர்வரா என வினவப்படும்போது
தாங்கள் கூறுகிறீர்கள்-இல்லையென்று,
தாங்கள் யக்கரா என வினவப்படும்போது
தாங்கள் கூறுகிறீர்கள்-இல்லையென்று,
தாங்கள் மானுடரா என வினவப்படும்போது
தாங்கள் கூறுகிறீர்கள்-இல்லையென்று."
"அவ்வாறாயின் போற்றுதலுக்குரிய
நீவிர் யாராய் இருக்கிறீர்கள்?"

5. "பிராமணரே! உண்மையில் என்னிலிருந்து நானே மயக்கங்களை வெளியேற்றாதவரை நான் தேவனாய், கந்தர்வனாய், யக்கனாய், மானுடனாய் இருந்தேன்-மீண்டும்

முளைக்கவியலாவாறு அடியோடு அழிக்கப்பட்ட பனையென, இந்த மயக்கங்களனைத்தையும் இப்போது நான் அவற்றின் வேரோடுகளைந்து விட்டொழித்து விட்டேன்-இனி எதிர்காலத்தில் அவை இருக்கவியலாவண்ணம்."

6. "நீர்த்தாவரமான தாமரை அல்லது அல்லி நீரியேயே தோன்றி, நீரியேயே வளர்ந்து, நீரினின்றே எழுந்திடினும், அது நீரினால் கறைபடாதிருப்பது போலவே, உலகில் பிறந்தும், உலகில் வளர்ந்தும், உலகியல் கறைபடியாமல் நான் உலகைவென்றுள்ளேன்."

7. "எனவே பிராமணரே! என்னை அறிவுஒளியுற்ற மனிதரெனக் கருதுங்கள்."

5. நீதியாளரும் நல்லவருமான மனிதர்

1. சோதரர்களை விளித்து புத்தர் உரைத்தார்: "நீங்கள் நல்லவரும் நீதியாளரும் யாரென உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமாயின், நீங்கள் நால்வகையாயிருக்கிற மனிதர்களை வேறுபடுத்தி அறியக் கற்றுக் கொள்ளவேண்டும்."

2. "மனிதர்களில் ஒருவகையினர் தம் சொந்த நலத்திற்காக மட்டுமன்றி, பிறர்நலத்திற்காக உழைக்காதவராய் உள்ளனர் சோதரர்களே!"

3. "சோதரர்களே! ஈண்டு ஒரு மனிதன் தனக்குத் தானே தன் காமஉணர்வை அழித்துக்கொள்ளப் பயிற்சி செய்வனாய் இருக்கிறான்-ஆனால் பிறரிடமுள்ள காமஉணர்வை அழிக்கத் தூண்டுபவனாய் இல்லை. தனக்குத் தானே தன் தீயவிருப்பத்தை அழித்துக்கொள்ளப்பயிற்சி செய்பவனாய் இருக்கிறான்- ஆனால் பிறரிடமுள்ள தீய விருப்பத்தை அழிக்கத் தூண்டுபவனாய் இல்லை. மேலும், தனக்குத் தானே தன் அறியாமையை அழித்துக் கொள்ள பயிற்சி செய்பவனாய் இருக்கிறான்-ஆனால் பிறரிடமுள்ள அறியாமையை அழிக்கத் தூண்டுபவனாய் இல்லை."

4. "உண்மையில் சோதரரே! இந்த மனிதன் தன் சொந்த நலத்தைப் பேணுபவனாய் உள்ளான்-ஆனால் பிறர்நலத்தையன்று."

5. "சோதரரே! மனிதர்களில் ஒரு வகையினர் பிறர் நலத்திற்காக உழைப்பவர்களாய் உள்ளனர்-ஆனால் தம் சொந்த நலத்திற்காகவன்று."

6. சோதரரே! ஈண்டு, ஒரு மனிதன் தனக்குத் தானே தன்னிலுள்ள காமஉணர்வை, தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்க உழைக்காமலிருக்கிறான்-ஆனால் பிறரிடமுள்ள காம உணர்வை, தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்கத் தூண்டுபவாயிருக்கிறான்.

7. "சோதரரே! உண்மையில் இந்த மனிதனை பிறருடைய நலத்திற்காக உழைப்பவனாய் இருக்கிறான்-தன் சொந்த நலத்திற்காக அன்று."

8. "சோதரரே! மனிதர்களில் ஒரு வகையினர் தம் சொந்த நலத்திற்காகவோ, பிறருடைய நலத்திற்காகவோ உழைக்காதவராய் உள்ளனர்."

9. "சோதரரே! ஈண்டு ஒரு மனிதன், தனக்குத்தானே தன்னிலுள்ள காம உணர்வை; தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்கப் பயிற்சி செய்பவனாகவோ பிறரிடமுள்ள காம உணர்வை, தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்கத் தூண்டுபவனாகவோ இல்லாமலிருக்கிறான்.

10. "சோதரரே! இந்த மனிதன் தன் சொந்த நலத்திற்காகவோ, பிறர் நலத்திற்காகவோ உழைக்காதவனாயிருக்கிறான்"

11. "சோதரரே! மனிதர்களில் ஒரு வகையினர் தம் சொந்த நலத்திற்காகவும், பிறர்நலத்திற்காகவும் ஆன இரண்டிற்காகவும் உழைப்பவர்களாய் உள்ளனர்."

12. "சோதரரே ஈண்டு ஒரு குறிப்பிட்ட மனிதன் தனக்குத் தானே தன்னிலுள்ள காம உணர்வை, தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்கப் பயிற்சி செய்பவனாயிருப்பதோடு, பிறரிடமுள்ள காம உணர்வை, தீயவிருப்பத்தை, அறியாமையை அழிக்கத் தூண்டுபவனாயும் இருக்கிறான்."

13. "சோதரா! இந்த மனிதன் தன் சொந்த நலத்திற்காகவும், பிறர் நலத்திற்காகவும் உழைப்பவனாய் இருக்கிறான்."

14. "இந்தக் கடைசி மனிதனே நீதிமானாகவும், நல்லவனாகவும் உள்ளவனெனக் கொள்ளப்பட வேண்டும்."

6. நற்செயல்களைப் புரிவதன் அவசியம்.

1. ஒரு முறை சோதரர்களிடம் மேன்மை தங்கிய புத்தர் இவ்வாறுரைத்தார்.

2. "சோதரரே! நற்பணிகளுக்கு அஞ்சியிராதீர்கள், இன்பத்திற்கு மறுபெயராகும் அது - எவை விரும்பப்படுகிறதோ, நேசிக்கப்படுகிறதோ, நேயமானதோ, மகிழ்ச்சியானதோ அதற்குரிய சொல் 'நற்பணிகள்', நெடுங்காலத்திற்கு நற்பணிகளின் பயனை, விரும்பியவற்றை, நேசித்தவற்றை, நேயமானவற்றை, மகிழ்ச்சிக்குரியவற்றைப் பெற்றுள்ளமைக்கு நானே சாட்சியாய் திகழ்கிறேன்."

3. "நான் அடிக்கடி கேட்டுக் கொள்கிறேன் 'இந்தப் பயன் கனிகள் எச்செயல்களுக்கானவை? இப்போது நான் இன்புற்றும், நிறைவுற்றும் இருப்பதாகக் கனிந்த என் செயல்கள் யாவை?"

4. "எனக்குக் கிட்டும் பதில் இதுவே: மூன்று செயல்களின் பயன்கனி இது. மூன்று செயல்களில் கனிந்த விளைந்த விளைவது-கொடைப்பணி-தன்னடக்கம்-தற்காப்பு."

5. "பயன்மிக்கதாக, கோலாகலமாக, மகிழ்ச்சியாக, உயர்வாகப் புலர்ந்த விடியலிது, மிகச்சிறந்த நல்லோர்க்குத் தானமளிக்கப்பட்ட நாள் நன்னாள்-நற்போது; நற்செயல்கள், நற்சொற்கள், நல்லெண்ணங்கள், நன்முயற்சிகள் அவற்றைப் பயிற்சி புரிந்தவருக்கு நற்பயனை நல்கிடும் போது."

6. "அத்தகைய நற்பயன் உய்துவோர் நனிமிக மகிழ்வார்-அவ்வழி நல்வளமுறுவர், பிணியற்ற, மகிழ்வுற்ற நல்வழியில் நீவிரும் உம் உற்றாரோடு வளமுற வாழ்க."

7. நன்முடிவுகள் எடுப்பதற்கான அவசியம்.

1. ஒருமுறை ஷ்ராவஸ்தியில் உள்ள ஜேதசோலையில் மேன்மைதங்கிய புத்தர் இருந்தகாலை சோதரர்களிடம உரைத்தார்.

2. "சோதரரே! ஒரு தூய இன்ப வாழ்வுக்கு நன்முடிவுகள் எடுக்கப்பட வேண்டியது மிக மிக அவசியமாயுள்ளது."

3. "உங்கள் முடிவுகள் யாதாயிருக்க வேண்டுமென நான் உரைப்போன்."

4. "என் வாழ்நாள் முழுவதும் நான் என் பெற்றோரைப் பேணுவேனாக. என் குலத்தலைவரை நான் மதித்துப் போற்றுவேனாக. நான் இன்சொல்லுடையவனாய் இருப்பேனாக. எவரைப்பற்றியும் இன்னாத கூறாதவனாய் இருப்பேனாக. தன்னலக் கறையற்றதாய் என் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவேனாக. ஈகையுடையவனாய், கறையற்ற கரத்தவனாய், தருவதில் இன்புறுபவனாய் இல்லறம் நடத்துவேனாக-ஈட்டியவற்றைப் பிறரோடு பகிர்ந்துக் கொள்ளும் இன்பத்தைக் கோரும் நிறைவான மனிதனாய் விளங்குவேனாக" எனத் தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

5. "என் வாழ்நாள் முழுவதும், நான் சினமற்றவனாய், சினமெழுத்திடில், உடன் அதைத் தவிர்ப்பவனாய் இருப்பேனாக."

6. இவ்வேழு முடிவுகளுமெடுப்பதன் மூலமும், ஆற்றுவதன் மூலமும் நீங்கள் இன்புற்றத் தூய நிலை எய்துவீர்கள்.

## நன்னெறி பற்றிய பேருரைகள்

### 1. நன்னெறியாவது யாது.

1. ஒருமுறை புத்தர் கோசலத்தில் தானம் பெறும் பிட்சா பிக்குகளின் பெருங் குழுவினரோடு தானம் பெறும் பயணத்தை மேற்கொண்டிருக்கையில், கோசலத்தின் சாலா என்னும் பிராமண கிராமமொன்றிற்கு வருகைப்புரிந்தார்.

2. கோசலத்தின், சாலா கிராமத்திலுள்ள பிராமணக் குடும்பத் தலைவர்களின் செவிக்கு, தானம் பெறும், பயணமாக உயர்வெய்திய புத்தர் வந்துள்ளச் செய்தி எட்டியது.

3. அவரைச் சென்று காணல் நலமானதென அவர்கள் உணர்ந்தனர். எனவே சாலாவின் பிராமணர்கள் புத்தரிடம் சென்று, சம்பிரதாய வந்தனங்களைப் பரிமாறிக் கொண்டபின் ஒருபுறம் தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

4. உயர்வெய்திய புத்தரை, நன்னெறியெனில் யாதென அவர் பொருள் கொள்கிறாரென விளக்குமாறு வேண்டினர்.

5. எனவே கவனமாய்க் கேட்கும் பிராமணர்களிடம் புத்தர் கூறினார்: "ஈண்டு உடல்தொடர்பான தீயநெறிகளும், தீச்செயல்களும்,மூவகையாயுள்ளன. உரைதொடர்பாய் நான்கு; எண்ணங்கள் தொடர்பாய் மூன்று.

6. உடல் தொடர்பான தீயநெறிகளைப் பொறுத்தவரை ஒரு மனிதன் i வேட்டுவனாய் குருதிதோய்ந்தக் கரங்களோடு உயிர் வதைப் புரிபவனாய், உயிர் வாழ்வனவற்றைக் கொல்லவும், வெட்டவுமாய் அவற்றினால் இரக்கமற்றிருப்பான்; அல்லது ii. வழிப்பறியால் ஊரிலோ, காட்டிலோ பிறமக்களுக்குரியதைத் தனதாக்கிக் கொள்வதன் மூலம் தனக்குரியதல்லாததை எடுத்துக் கொள்பவனாய் இருப்பான். அல்லது iii. தாய் அல்லது தந்தை அல்லது தனயன் அல்லது தமக்கை, உறவினர் பொறுப்பிலிருக்கும், உறுதி செய்யப்பட்ட, ஒப்புக்கொடுக்கப்பட்ட, மணஉறுதி மாலை அணிந்துள்ள பெண்களோடு கூட உறவுகொள்பவனான ஒரு காமந்தக்காரனாய் இருப்பான்.

7. "உரை தொடர்பான தீயநெறியைப் பொறுத்தவரை ஒரு மனிதன் i. ஒரு பொய்யனாக இருக்கலாம்; சாட்சி கூற ஒரு கிராமக்கூட்டச் சபை அல்லது ஒரு குடும்பக் குழுமம் அல்லது இராஜகுடும்ப விவகாரம் அல்லது அவனது குழுமம் ஆகியவற்றில் அழைக்கப்படும் போது, தான் அறியாதவற்றை அறிந்ததாகவும், அறிந்தவற்றை அறியேன் என்றும், காணாதவற்றை அவன் கண்டதாகவும், அவன் கண்டவற்றைக் காணவில்லை என்றும், வேண்டுமெனறே தன்சார்பாகவோ அல்லது பிறருக்காகவோ அல்லது சாதாரண இலாபத்திற்காகவோ பொய் கூறுபவனாயிருக்கிறான். அல்லது ii அவன் ஒரு தூற்றுதல்காரனாய் இருக்கலாம்; ஒரு மனிதக் குழுவை கேட்டவற்றை நம்பச் செய்ய எங்கோ தான் கேட்டவற்றை ஈண்டுத் திரும்பக் கூறித்திரிபவனாகவும், ஈண்டுக் கேட்டவற்றை பிறிதோரிடத்தில் திரும்பக் கூறித்திரிபவனாகவும் இருப்பான்; அவன் ஒற்றுமையைக் குலைப்பதும், பூசலைத் தூண்டுபவனுமாய், அவனுடைய கூற்றுக்களையே பேதப்படுத்திவிடுவான்; அவனுடைய மகிழ்ச்சி, இன்பம், சந்தோஷம் ஆகியவற்றுக்காக அல்லது iii அவன் நா கடுமையானதாயிருக்கும். அவன் கூறுவன யாவும் கடினமாய், கடுமையாய், பிறரைத் துன்புறுத்துவதாய்ச் சொல்லால் காயப்படுத்துவதாய், பிறரைத் துன்புறுத்துவதாய்ச் சொல்லால் காயப்படுத்துவதாய், சினமூட்டுவதாய், திசைதிருப்புவதாய் இருக்கும். அல்லது iv அவன், வம்பளப்பவனாய்,பொருந்தாதனவற்றை உரைப்பவனாய், உண்மையைப்

பொருட்படுத்தாதனவாய், பயனற்றவற்றையே பேசுபவனாய், எப்போதும் கொள்கையற்றவனாய், எப்போதும் சட்டத்தைச் சட்டைச் செய்யாதவனாய், எவ்இலக்கையும் அடைய இயலாதப் பயனற்றவனாய்ப் பேசித்திரிவான்."

8. "சிந்தனைத் தொடர்பானத் தீயநெறியைப் பொருத்தவரை ஒரு மனிதன் i பிறர் பொருள் கவர்பவனாக அனைத்தும் தனதாக்கிக் கொள்ளும் ஆசை வெறியுடன் பிறர்க்குரிய பொருள்களைக் கவர்பவனாக, இருக்கலாம். அல்லது ii அவன் தீங்கிழைப்பதில் விருப்பமுடையவனாய் மனத்தில் தீயவனாய்-தன்னைச் சுற்றியுள்ள உயிர்கள் கொல்லப்படவும், அழிக்கப்படவும், ஒழிக்கப்படவும், அற்றுப்போகவும் வேண்டுமென விரும்புபவனாய் இருக்கலாம் அல்லது iii அவன் தன் பார்வையில் தவறுடையவனாய் கருத்துக்களில் குறையுடையவனாய்-ஈகை, தியாகம், தானம் ஆகிய எவையும் இல்லையென்று கருதுபவனாயும், நற்செயல், தீச்செயல் ஆகியவற்றுக்கான பயன்களோ, விளைச்சலோ இல்லையென்றம், உலகமே இல்லாததென்றம், பெற்றோரோ அல்லது உற்றார் உறவினரோ யாருமல்லையென்றும், நல்வழி நடந்த, நன்னடத்தையுள்ள தமக்குத் தாமே உலகை நன்கறிந்தும் நன்குணர்த்துமுள்ள இவற்றைப் பிறரும் அறியச் செய்கிற துறவிகளோ அந்தணர்களோ ஒருவரும் இல்லை என்றும் கருதுபவனாய் இருக்கலாம்."

9. இதற்கு நேர்மாறாக ஈண் உடல் தொடர்பான நன்னெறிகள் நன்மைகள் மூன்றும், உரை தொடர்பானவை நான்கும் சிந்தனைத் தொடர்பானவை மூன்றம் உள்ளன.

10. "உடல் தொடர்பான நன்னெறியைப் பொருத்தவரை, ஒரு மனிதன் i தன்னிடமிருந்து கொல்லுதல் அனைத்தையும் தவிர்த்தவனாய், எதையும் கொல்லுதலினின்றும் நீங்கியவனாய், குறுந்தடி, வாள் ஆகியவற்றை வீசியெறிந்தவனாய் களங்கமற்ற இரக்கமிக்க, வாழும் உயிர்கள் அனைத்தினுக்கும் கருணையும் காருண்யமும் நிறைந்தவனாய் வாழ்கிறான். iiதிருடுதலை அவன் தன்னிடமிருந்து நீக்கியவனாய், பிறரால் அவனுக்கு அளிக்கப்பட்டதைத் தவிர பிறரிடம் உள்ள எதையும் தவிர்ப்பவனாய் அவன் நேர்மையான வாழ்வு வாழ்கிறான். iii புலன்களின் தவறான நடத்தை அனைத்தையும் தன்னிலிருந்து நீக்கியவனாய், தவறான காமம் தவிர்த்தவனாய், தாய் அல்லது தந்தை அல்லது தனையன அல்லது தமக்கை, உற்றார் உறவினர் ஆகியோர் பொறுப்பிலிருக்கும், உறுதிசெய்யப்பட்ட, ஒப்புக்கொடுக்கப்பட்ட, மணஉறுதி மாலை அணிந்துள்ள பெண்களோடு உறவு கொள்ளாதவனாக இருக்கிறான்.

11. வாக்கு தொடர்பான நன்னெறியைப் பொறுத்தவரை, i ஒரு மனிதன் தன்னிலிருந்தப் பொய்மையை நீக்கியவனாய், பொய்மையிலிருந்து தவிர்த்தவனாய் சாட்சி கூற ஒரு கிராம கூட்டச்சபை அல்லது ஒரு குடும்பக் குழுமம் அல்லது இராஜ குடும்ப விவகாரம் அல்லது அவனது குழுமம் ஆகியவற்றிலிருந்து அழைக்கப்படும் போது தாம் அறியாதவற்றை அறியவில்லையென்றும் கூறுபவனாகவும், அறிந்தவற்றை அறிந்தேனென்று கூறுபவனாகவும் காணாதவற்றைக் காணவில்லையென்று கூறுபவனாகவும், கண்டவற்றை கண்டேன் எனறு கூறுபவனாகவும், வேண்டுமென்றே தன் சார்பாகவோ அல்லது பிறருக்காகவோ அல்லது சாதாரண இலாபத்துக்காகவோ பொய் கூறாதவனாய் இருக்கிறான். iiஅவன் தூற்றுதலை நீக்கியவனாகவும், தூற்றுதலிலிருந்து தவிர்ந்தவனாகவும்

இருக்கிறான். ஒரு மனிதக் குழுவை, கேட்டவற்றை நம்பச் செய்ய எங்போ தான் கேட்டவற்றை ஈண்டுத் திரும்பக் கூறித்திரியாதவானாகவும். அவண் ஈண்டுக் கேட்டவற்றைப் பிறிதோரிடத்தில் திரும்பக் கூறித்திரியாதவனாகவும் இருக்கிறான்; அவன் ஒற்றுமையை மேம்படுத்துபவனாகவும், நல்லெண்ணத்தைக் காப்பவனாகவும் அவனுடைய மகிழ்ச்சி, இன்பம், சந்தோஷம் ஆகியவற்றைப் பேணுபவனாகவும் இருக்கிறான் iii அவனது நா கடுமையற்றதாய் உள்ளது; அவன் கடுஞூசொற்களிலிருந்து தவிர்த்திருக்கிறான்; அவன் கூறுவன யாவும் குறையற்றதாய், இனியதாய், நட்புடையதாய், மனப்பூர்வமானதாய் நாகரீக நயமுடையதாய், ஒப்புக்கொள்ளத்தக்கதாய், அனைவராலும் வரவேற்கத் தக்கதாய் உள்ளது iv வம்பளப்பவனல்லாதவன் வம்பளப்பதினின்றும் நீங்கியிருக்கிறான்; பொருத்த உரைப்பவனாய் உண்மைக்கேற்ப உரைப்பவனாய் எப்போதும் பயனுள்ளவற்றையே பேசுபவனாய், கொள்கைக்கும் விதிக்கும் பொருத்த உரைப்பவனாய், தேவைக்கேற்பவும், நினைவில் நிற்கத்தக்கதாகவும், ஒளிமிக்கதாகவும், நன்னெறிபடுத்தப்பட்டதாகவும், மிக்க பயன் உடையதாகவுமே அவன் பேசுகிறான்.

12. "எண்ணங்கள் தொடர்பான நன்னெறிகளைப் பொறுத்த வரை ஒரு மனிதன் i பிறர்பொருள் கவர்தலைத் தவிர்ந்தவனாய், அனைத்தும் தனதாக்கிக் கொள்ளும் ஆசைவெறியுடன் பிறர்க்குரிய பொருள்களைக் கவர எண்ணாதவனாய் இருக்கிறான். ii அவன் தீங்கிழைப்பதில் விருப்பமற்றவனாய் தீயமனமற்றவனாய்-தன்னைச் சுற்றியுள்ள உயிர்கள் யாவும் அமைதியாகவும் இன்புற்றும் பகைமை, ஒடுக்குமுறை ஆகியவற்றினின்று பாதுகாப்பாகவும் வாழ விரும்புபவனாய் இருக்கிறான். iiiதன் பார்வையில் சரியானவனாகவும், தன் கருத்துக்களில் முறையானவனாகவும் இருக்கிறான்.

13. "நன்னெறி-தீநெறி ஆகியவற்றிற்கு நான் கொள்ளம் பொருள் இதுவே ஆகும்."

## 2. நன்னெறியின் அவசியம்

1. பிறகு மேன்மைத் தங்கிய புத்தர் உபாசக சோதரர்களுக்குப் பாடலிகாமாவில் உரையாற்றினார்:

2. "இல்லறத்போரே! தீயவனான, ஒழுக்கமற்ற மனிதனை அண்டும் இழப்புக்கள் உள்ளன."

3. "தீயவனான ஒழுக்கமற்ற மனிதன், சோம்பலின் விளைவாய், பெரும் செல்வ இழப்புக்கு ஆளாகிறான்."

4. "மீண்டும், அவனைப்பற்றி ஒரு தீய அபிப்பிராயம் நிலவி, அவனை உலகத்தின் கண்களில் இகழ்வுக்காளாக்குகிறது."

5. "பிரபுக்களின் கூட்டம், பிராமணர்களின் கூட்டம், இல்லறத் தலைவர்கள் கூட்டம், அல்லது துறவிகள் கூட்டம் ஆகிய எந்தக் கூட்டத்தினுள் அவன் நுழைந்தாலும், அவன்

வெட்கத்துடனும் குழம்பிய மனத்துடனும் தான் நுழைவான். அவன் அச்சமற்றில்லை. இது மூன்றாவது இழப்பு."

6. "மேலும், அவனுக்கு மன அமைதியில்லை-மற்றும் அவன் இறக்கும் போதும் மனத்துன்பமெய்தி மடிகிறான். இது நான்காவது இழப்பாகும்."

7. இத்தகைய இழப்புக்கள் தீய, ஒழுக்கமற்ற மனிதனை வந்தடைகின்றன இல்லறத்தோரே!

8. "ஒழுக்கமான வாழ்வு வாழும் நன்னெறியுள்ள மனிதனை வந்தடையும் இலாபங்களைக் கருதிப்பாருங்கள்."

9. "நன்னெறியுள்ள, ஒழுக்கமாய், வாழும் மனிதனை, அவன் சொந்த முயற்சியினாலேயே, ஒருபெருஞ்செல்வம் வந்தடையும்."

10. பின், மேலும் அவனைப்பற்றிய நற்புகழும் பரவிநிற்கும். அவன் எங்கும் மதிக்கப்படுவான்.

11. "பிரபுக்களின் கூட்டம், பிராமணர்களின் கூட்டம், இல்லறத்தலைவர்கள் கூட்டம், அல்லது துறவிகள் கூட்டம் ஆகிய எந்தக் கூட்டத்தினுள் அவன் நுழைந்தாலும், அவன் துணிவுடனும் தன்னம்பிக்கையுடனும் நுழைவான்."

12. "மேலும், அவன் மன அமைதியை அனுபவித்து, மனத்துயரில்லாமல் இறுதி எய்துவான்."

13. "அறிவிலி தன் குறைகளை அறியாமல் தீங்கிழைக்கிறான், தீயைப்போல் அவன் சொந்தச் செயல்களே அறிவிலியை விழுங்கிவிடுகின்றன."

14. எவனொருவன் தீங்கற்ற அப்பாவியைத் துன்புறுத்துகிறானோ அவன் விரைவில் துன்பமயமான அழிவுக்கு ஆளாகிறான், அல்லது மனஅமைதியற்று, உற்றார் உறவினரை இழந்து, செல்வத்தையும் இழப்பான்.

3. நன்னெறியும் உலக உரிமைக் கோரல்களும்.

1. ஒருமுறை புத்தர் இராஜகிரஹத்தில் அணில்கள் உண்டு மகிழும் மூங்கில் சோலையில் தங்கியிருந்த போது, போற்றுதலுக்குரிய சாரிபுத்ரர் தானமேற்கும் பெருங்குழுவோடு தென்மலைப்பகுதியில் தானமேற்கும் பயணத்தை மேற்கொண்டிருந்தார்.

2. தன் வழியில் அவர், இராஜகிரகத்தில் மழைக்காலத்தைக் கழித்து மீணட தானமேற்போரைச் சந்தித்தார். தோழைமையான, சம்பிரதாய வந்தனைகளைப் பரிமாறிக் கொண்டபிறகு, சாரிபுத்ரர் புத்தரின் நலம்பற்றி விசாரித்து, அவர்கள் நலமாயிருப்பதாகக் கூறக்கேட்டார். பின் தோழைமைக் கூட்டுறவோடு, இராஜகிரஹத்தில், தண்டுல-பால வாயிலில் இருக்கும் பிராமணர் தனஞ்ஜனியின் நலம் பற்றியும் சாரிபுத்ரர் விசாரித்தார்.

3. "பிராமணர் தனஞ்ஜனி உற்சாகமுள்ளவராயும், அக்கறையுடையவராகவும் உள்ளாரா?" என்று தானம்பெறுவோரை சாரிபுத்ரர் மேலும் வினவினார்.

4. "தனஞ்ஜனியிடம் எப்படி அக்கறையுள்ள உற்சாகம் தங்கியிருக்க முடியும்?" எனப் பதிலிறுத்தனர் தானம் பெறும் துறவிகள். அவர் பிராமணர்களிடமும், இல்லறத்தாரிடமும் பணம் பறிக்க அரசரைப் பயன்படுத்துகிறார், அரசரிடம் பணம் பறிக்க அவர்களைப் பயன்படுத்துகிறார். மேலும், அவருடைய கடமையுணர்வுடைய, கடமைப்பேணும் பரம்பரியத்திலிருந்து வந்த மனைவி இறந்துபோய் விட்டார். இப்போது அவர், கடமையுணர்வற்ற பாரம்பரியத்திலிருந்து வந்த, கடமையுணர்வற்ற ஒரு பெண்ணை மனைவியாக ஏற்றுள்ளார்."

5. "இது தீயசெய்தி, தனஞ்ஜனியின் உற்சாகக் குறைவு பற்றிக் கேட்கும் இச்செய்தி மிகத்தீய செய்தி" எனக் கூறினார் சாரிபுத்ரர். "ஒரு வேளை, எப்படியோ ஏதோ ஓர்சமயம் ஏதோ ஓரிடத்தில் அவரச் சந்தித்து அவரிடம் பேச நான் விரும்புகிறேன்."

6. தாம் விரும்பிய காலம் வரை தென்மலைகளில் தங்கியிருந்த பின் சாரிபுத்ரர் இராஜகிரகத்தை அடையும் வரை தம் தானமேற்கும் பயணத்தை மேற்கொண்டார். ஆங்கு மூங்கிற்சோலையில் அவர் தங்கலுற்றார்.

7. பிராமணர் தனஞ்ஜனி நகரை விட்டுவெளியே மாட்டுத்தொழுவத்தில் பசுக்கள் பால்கறக்கப்படுவதைப் பார்வையிடச் சென்றிருந்தபோது, அதிகாலை நேரத்தில் சாரிபுத்ரர் கைகளில் பிட்சாபாத்திரம் ஏந்தி, உரிய உடை உடுத்துத் தானத்திற்காக இராஜகிரஹத்திற்குச் சென்றார்.

8. தம் பயணத்தை முடித்துக் கொண்டு, உணவருந்தியபின், சாரிபுத்ரர் பிராமணரைத் தேடிச சென்றார். அவர் வருவதைக் கண்ட பிராமணர் அவரை, உணவருந்துவதற்கு முன் பாலருந்த அவர்களுக்குச் சற்று நேரம் இருப்பதாகக் குறிப்பிட்டவாறே வந்து அவரைச் சந்தித்தார்.

9. "அப்படியில்லை, பிராமணரே! நான் என் உணவை இன்று உண்டாயிற்று-பிறபகலில் ஒரு மரத்தடியில் சற்று இளைப்பாறுவேன். ஆங்கு நீங்கள் வாருங்கள்."

10. தனஞ்ஜனி ஒப்புக்கொண்டு, தம் உணவை முடித்தபின் சாரிபுத்ரரிடம் வந்துற்று, வந்தனம் கூறியபின் அவரருகே அமர்ந்தார்.

11. சாரிபுத்ரர் கூறினார். "தனஞ்ஜனி! தங்களிடம் உற்சாகமும், அக்கறையும், நன்னெறியும் அப்படியே தங்கியுள்ளதாக நான் உறுதிகொள்ளலாமா?"

12. "அது எப்படி முடியும்? நான்தான் என் பெற்றோர்களை, என் மனைவியை, என் குடும்பத்தை, என் அடிமைகளை, என் பணியாளரைக் காக்க வேண்டியுள்ளதே. மற்றும் என் நண்பாகளை, அறிமுகமானவர்களை, உற்றார் உறவினரை, விருந்தினரை உபசரிக்க

வேண்டியுள்ளதே. மற்றும் இறந்து போன என் முன்னோர்க்கும் தெய்வங்களுக்கும், அரசருக்கும் நான் கடமைப புரிய வேண்டியுள்ளதே-மற்றும் எனக்கு நானே ஊணுக்கும் குடிக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியுள்ளது பற்றிக் கூறவே தேவையில்லை."

13. "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் தனஞ்ஜனி? ஒரு மனிதன் தன் பெற்றோருக்காக நன்னெறியினின்றும் நடுநிலை நேர்மையினின்றும் விலகியமைக்காக பிடிபட்டு விட்டான் என்று வைத்துக் கொள்வோம்-அவன் நன்னெறியினின்றும் நடுநிலை நேர்மையினின்றும் விலகி நடந்தது அவன் பெற்றோர்களுக்காகவே என்றும் அதனால் தன்னைப் பிடிக்கக் கூடாது எனவும் அவன் தற்சார்பாய் வாதிடுவானாகிய அதற்கவன் அனுமதிக்கப்படுவானா?"

14. "இல்லை, அவன் வேண்டுதல் அனைத்துக்கும் மாறாக, காவலர்கள் அவனைச் சிறைக்குள் தான் தள்ளுவார்கள்."

15. அவன் தற்சார்பாகவும் அல்லது அவனுடைய மனைவி மற்றும் குடும்பத்தினராலும், அவன் நன்னெறியினின்றும், நடுநிலை நேர்மையினின்றும் விலகி நடந்தது அவர்களுக்காகவே என்று வாதிப்பார்களேயானால் ஒப்புக் கொள்ளப்படுமா?

16. "இல்லை."

17. "அவனுடைய அடிமைகள் அல்லது பணியாளர்கள் அவனுக்காக வாதிடுவார்களேயாயின் ஒப்புக் கொள்ளப்படுமா?"

18. "இம்மியளவும் ஒப்புக் கொள்ளப்படமாட்டாது."

19. "அல்லது அவனுடைய நண்பர்கள் அல்லது அவனுக்கு அறிமுகமானோர் அவனுக்காக வாதிட்டால் ஒப்புக் கொள்ளப்படுமா?"

20. "இம்மியளவும் ஒப்புக் கொள்ளப்படமாட்டாது."

21. "அல்லது அவனுடைய உற்றார் உறவினரோ, அல்லது அவனுடைய விருந்தினரோ அவனுக்காக வாதிட்டால்?"

22. "இம்மியளவும் ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது."

23. "அவனுடைய முன்னோரின், மூதாதையரின், வழி பாட்டுக்குரியவர்களின், அரசனின் பரிந்துரைகளேனும் பயன்படுமா?"

24. "இம்மியளவும் பயன்படாது."

25. "அவன் தற்சார்பாகவோ பிறரைக் கொண்டோ தன் ஊணுக்காகவும் பானத்திற்காகவும் தன்னைத்தானே காக்கவும், நன்னெறியினின்றும் நடுநிலை நேர்மையினின்றும் விலகியதாக வாதிடுவானேயாகில் அது ஒப்புக் கொள்ளப்படுமா?"

26. "இல்லை."

27. "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் தனஞ்ஜனி? யார் நல்ல மனிதன்? தன் பெற்றோருக்காக, நன்னெறியினின்றும் நடுநிலையினின்றும் விலகி நடப்பவனா? அல்லது என்ன நடந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் நன்னெறியிலும் நடுநிலை நேர்மையிலும் நடைபோடுபவனா?"

28. "இரண்டாமவன்தான்." பதிலிறுத்தார் தனஞ்ஜனி, "ஏனெனில் நன்னெறியிலும் நடுநிலை நேர்மையிலும் நடப்பது அவற்றினின்றும் விலகுவதை விட சிறந்தது."

29. "மேலும், தனஞ்ஜனி, தமக்குத் தாமே நன்னெறியானவையாய் நிர்ணயிக்கப்பட்டுள்ள வேறு வழிமுறைச் செயல்களும் உள்ளன-அவற்றின் மூலம் ஒருவன் தீச்செயல்களைத் தவிர்த்தும் நேர்வழி நடந்தும் தன் பெற்றறோற்றர்களை ஆதரிக்க முடியும். இப்போது இதே சிந்தனைமுறை மனைவியையும் குடும்பத்தையும் மற்ற அனைத்தையும் ஆதரிக்கவும் பொருந்துமல்லவா?"

30. "ஆம்! அது பொருந்துகிறது சாரிபுத்ரரே."

31. இதன்பின் போற்றுதலுக்குரிய சாரிபுத்ரர் கூறியவற்றில மகிழ்வுற்ற பிராமணர், அவருக்கு நன்றி கூறி, எழுந்து, தன் வழியே சென்றார்.

4. நன்னெறி நடத்தையில் நிறைவினை அடைவது எவ்வாறு

1. ஒரு முறை புத்தர் ஷ்ராவஸ்தியிலுள்ள ஜேதவன சோலையில் தங்கியிருக்கையில் ஐநூறு உபாசக் சோதரர்கள் அவரிடம் வந்தனர். அவர்களில் ஒருவர் தம்மிகர்.

2. தம்மிகர் புத்தரை வினவினா: "உங்களைப் பின்பற்றுபவர்களை நன்னெறி நடத்தையில் நிறைவடையச் செய்யத்தக்க கோட்பாடுகள் யாவை?"

3. "நான் தங்களை இவ்வினா வினவுவது ஏனெனில் தாங்களே மனிதர்களின் நற்போறுகளுக்கான ஈடிணையற்ற நீதிபதியாய் விளங்குகிறீர்கள்."

4. "பயிற்சி பெற்ற ஜைனர்களும், துறவிகள் அனைவரும் தங்களை வெல்ல இயலவில்லை. வயது முதிர்ந்த - பிறரிடம் தம் கருத்தை வலியுறுத்தக்கூடிய - பயிற்சிமிக்க பிராமணர்களும் தங்களுடைய காக்கும் உண்மைகளையே தழுவும்படியாகிறது. ஏனெனில் தங்களின் காக்கும் உண்மை நுட்பமானதாகவும் அனைவரும் விரும்பத்தக்கவாறும் மிக நன்கு போதிக்கப் படுவதாகவும் உள்ளது. ஐயன்மீர்! எங்களுக்குத் தயவுசெய்து ஓர் பதிலுரையுங்கள்."

5."உபாசக சீடர்கள் தங்கள் வாய்ச்சொற்களினின்று உயர்ந்த கோட்பாடுகளைக் கற்றுக்கொள்ளட்டும்."

6. "உபாசக சீடர்களுக்காக இரங்கி உயர்வெய்திய புத்தர் உரைத்தார் "எனக்குச் செவி கொடுங்கள், நன்னெறி நடத்தைக்கான கோட்பாடுகளை நான் விளக்குகிறேன். அவைகளை கேட்டுப் பின்பற்றுங்கள்.

7. "கொல்லாதீர், கொலைப்படவிடாதீர், கொல்லுதலை ஒப்பாதீர், வலியனவோ, எளியனவோ எவ்வுயிர்க்கும் சிறிதும் வன்முறைத் துன்பம் இழைக்காதீர்."

8. "ஒருவரும் திருடலாகாது-திருடச்செய்யலாகாது-திருட்டை ஒப்பலாகாது-அடுத்தவர் ஈவதைத் தவிர எதையும் ஏற்கலாகாது."

9. "தவறான காம வேட்கையைத் தீக்குழியெனக் கருதி ஒதுக்குங்கள். காமவேட்கைத் தவறால் மனைவியை நெறிதவறச் செய்யாதீர்."

10. "அந்தரங்க கூட்டத்திலோ, நீதிமன்றத்திலோ, உரையாடலிலோ ஒருவன் பொய் கூறாதிருக்கட்டும் அவன் பொய்யை ஆதரிக்கவோ, அங்கீகரிக்கவோ கூடாது-அவன் உண்மையற்றவற்றை விட்டொழிக்கட்டும்."

11. "இவ்விதியை பின்பற்றுங்கள், மதுக்குடியைத் தவிருங்கள், எம்மனிதனையும் மதுவருந்தச் செய்யாதீர், மதுவருந்துதலை அங்கீகரிக்காதீர், மது எவ்வாறு போதைக்கு ஆட்படுத்தும் என்பதைக் குறித்துக் கொள்ளுங்கள்."

12. "மதுக்குடியின் மூலம் அறிவிலிகள் பழிச்செயல்கள் புரிகிறார்கள். சோதரர்கள் மூடர்களால் இப்பழிச் செயலுக்கு ஆட்படுத்தப்படுகிறார்கள். எனவே இந்த பைத்தியக்காரத்தமான குற்றத்திலிருந்தும், குறையிலிருந்தும், அறிவிலிகளின் மகிழ்ச்சியிலிருந்தும் அகன்றோடுங்கள்."

13. "கொல்லாதீர், திடாதீர், பொய்கூறாதீர், மதுக்குடியினின்றும் விலகியிருப்பீர், சிற்றின்ப ஒழுக்கக் கேட்டினின்றும் தவிர்த்து கொள்வீர், இரவில் பொருந்தா உணவை ஏற்காதீர்."

14. வாசனைத்திரவியங்களையும், மலர்மாலைகளையும் தவிறுங்கள்; வெறும் தரையில் உங்கள் படுக்கையை விரியுங்கள், வாரத்திற்கு வாரம் உங்கள் விரத சபதங்களைத் தூயமனத்தோடும் எண்மார்க்க கொண்டாட்டங்களோடும் நிறைவேற்றுங்கள்.

15. காலையில் இவ்விரதங்களைப் பொறுப்புடன் நிறைவேற்றி, மனத்தால் நன்றியுடையவராய், அறிவுற்றோராய், தங்கள் சேமிப்பிலிருந்து தானமேற்போருக்கு உணுவும், நீரும் வழங்குங்கள்.

16. தாங்கள் பெற்றோரை நன்கு பேணுங்கள், நல்வழிப்பட்ட வணிகத்தை மேற்கொள்ளுங்கள், இவ்வாறாய் இல்லறத்தார் உயர்நிலை எய்துதற்குரியோராதல் வேண்டும்.

### 5. நன்னெறிப் பாதையில் நடைபோட ஒரு துணைவர் வேண்டுமென்று ஒருவர் காத்திருக்கத் தேவையில்லை.

1. போர்க்களத்தில் ஒரு யானை தன்மீது எய்யப்பட்ட அம்பினைத் தாங்குவது போல, உலகில் உள்ள அனைத்துத் தீங்குகளையும் மனிதர்களின் கடுச்சொற்களையும் நாம் தாங்கிக் கொள்ள வேண்டும்.

2. பக்குவப்படுத்தப்பட்ட அது அவர்களால் போர்க்களத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறது, பக்குவப்படுத்தப்பட்ட அதன் முதுகில் மாமன்னர் ஏறிக்கொள்கிறார். சுடுச்சொற்கள் துன்புறுத்தாவண்ணம் பக்குவப்பட்டு இருப்பவன், உயிர்களில் சிறந்தவன்.

3. நன்கு பக்குவப்படுத்தப்பட்ட கோவேறு கழுதைகள் நல்லவை, பாரம்பரியப் புகழ்மிக்க சிந்தியன் குதிரைகள் நல்லவை, உண்மையில் வலிய தந்தமுள்ள யானை நல்லவை, தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டவன், மனிதர் அனைவரிலும் சிறந்தவன்.

4. இருந்தும் இத்தகு ஏற்றங்கள் நமக்கு நிப்பான வழிகாட்டுதலாய் அமைந்து விடாது. தன்னடக்கமான தன் சொந்த பயணத்தினாலேயே நாம் இலக்கை அடைய முடியும்.

5. அக்கறை உடைமையில் மகிழ்ச்சி கொள்ளுங்கள், எண்ணங்களைக் கவனிப்பதில் என்றும் களைப்புறாதீர்கள். தீய பாதையிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளங்கள், கொம்பன் யானையை சேற்றிலிருந்து விடுவியுங்கள்.

6. நேரிய, உறுதியான, அறிவிற்சிறந்த துணைப் பயணி ஒருவரை கண்டீர்களா? உங்கள் கவலைகளையெல்லாம் உங்கள் பின்விடுத்து மகிழ்ச்சியாய் நல்நோக்கோடு அவருடன் நீங்கள் நடக்கலாம்.

7. நேரிய, அறிவிற்சிறந்த துணைப் பயணி எவரையும் நீங்கள் காணவில்லையா? காட்டுயானையைப்போல், பகையால் தேடப்பட்டு, தன் எல்லைகளை விட்டுச் செல்லும் மன்னனைப் போல் தன்னந்தனியே உங்கள் வழி செல்லுங்கள்.

8. அறிவிலிகள் துணைவர்களாகார்-தனி வாழ்க்கையே சிறந்தது. தனியே வாழ்ந்து தீங்கிழைக்காமல், தனியே வாழ்ந்து தேவைகள் குறைந்து, வலிய யானை வனத்தில் உண்பதை போல் தன்னந்தனியே வாழுங்கள்.

9. தீய எண்ணங்கள் அனைத்தையும் தீய்த்து விடுங்கள்.

10. தீய்ப்பதற்கு இது தான் வழி.

11. பிறர் தீங்கிழைப்போராயிருப்பினும் நீங்கள் தீங்கிழைக்காதவராய் இருக்கத் தீர்மானிப்பதன் மூலம் அதைத் தீய்க்கலாம்.

12. பிறா கொல்பவராயினும் நீங்கள் எப்போதும் கொல்லலாகாது.

13. பிறர் திருடுபவராயிருப்பினும் நீங்கள் எப்போதும் திருடலாகாது.

14. பிறர் உயர் வாழ்வு வாழாவிடினும் நீங்கள் வாழவேண்டும்.

15. பிறர் பொய்புகன்றிடினும், பழித்திகழ்ந்திடினும், விட்டோடிவிடினும், குதலைபேசிடினும், நீங்கள் அவவாறிராதீர்.

16. பிறர்பொருள் கவர்பவராய் பிறர் இருப்பினும், நீங்கள் கவரலாகாது.

17. பிறர் பழிகூறுபவராயிருப்பினும் நீங்கள் அன்புடையோராயிருங்கள்.

18. பிறர் தவறான பார்வைக்கும், தவறான நோக்கிற்கும், தவறான பேச்சுக்கும், தவறான செயல்களுக்கும், தவறான வாழ்முறைக்கும், தவறான முயற்சிக்கும், தவறான கவனத்திற்கும், தவறான சிந்தனைக்கும் ஆட்பட்டிருப்பினும், நீங்கள் நற்பார்வை, நல்நோக்கு, நற்போச்சு, நற்செயல்கள், நல்வாழ்முறை, நன்முயற்சிகள், நற்கவனம், நற்சிந்தனை ஆகிய உயர்ந்த எண்மார்க்கப் பாதையைப் பின்பற்றுங்கள்.

19. பிறர் உண்மையைப் பற்றி தவறாகவும் விடுதலைப் பற்றி தவறாகவும் கருதிடினும் நீங்கள் உண்மைப் பற்றியும் விடுதலைப் பற்றியும் சரியாய்க் கருதியிருங்கள்.

20. சோம்பலாலும் செயலற்றத் தன்மையாலும் பிறர் ஆட்கொள்ளப்பட்டிருப்பினும் நீங்கள் அவற்றினின்று உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள்.

21. பிறர் தற்புகழ்ச்சியால் வீங்கிடினும் நீங்கள் தணிந்த மனத்தினராய் இருங்கள்.

22. பிறர் ஐயங்களால் குழம்பியிருப்பினும் நீங்கள் அவற்றினின்று விடுபட்டிருங்கள்.

23. பிறர் சினத்தை, கெடுநினைப்பை, பொறாமையை, பொச்சரிப்பை, கருமித்தனத்தை, பேராசையை, கள்ளங்கபடத்தை, சூதை, மூடிய மனத்தை, கர்வத்தை, முந்திக்கொள்ளவை, மனசாட்சியற்று நடத்தலை, பயிற்சிக் குறைவை, மந்தமான தன்மையை, குழப்பத்தை மற்றும் அறிவீனத்தை நிலை நிறுத்தியவராய் இருக்கலாம்-நீங்கள் இவையனைத்திற்கம் மாறானவராய் இருப்பீராக!

நிப்பானம் பற்றிய பேருரைகள்

1.நிப்பானம் என்பது யாது?

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில் சாரிபுத்ரரும் தங்கியிருந்த அநாதபிணடிகரின் ஆராமத்தில் தங்கியிருந்தார்.

2. சோதரர்களை விளித்து புத்தர் கூறினார்: "தானமேற்போரே! நீங்கள் உலகப் பெருமைகளின் பங்காளிகளாய் இராமல் என் கொள்கையின் பங்காளிகளாய் இருங்கள். உங்கள் மீது எனக்குள்ள கருணையினால் இதை உறுதி செய்து கொள்ள நான் பேரார்வம் உடையவனாய் இருக்கிறேன்."

3. இவ்வாறு உரைத்தபின் ஆங்கிருந்து புத்தர் எழுந்து தன் சொந்த இருப்பிடத்திற்குச் சென்றார்.

4. சாரிபுத்ரர் பின் ஆங்கேயே தங்கினார் சோதரர்கள் நிப்பானம் என்றால் யாதென விளக்குமாறு அவரைக் கேட்டனர்.

5. பிறகு சாரிபுத்ரர் சோதரர்களுக்கு பதிலாக உரைத்தார், "சோதரரே! பேராசைக் குற்றமானதென்றும் குற்றம் மனக்கசப்பானதென்றும் அறியுங்கள்."

6. "இநத பேராசையையும் இந்த மனக்கசப்பையும் கைவிட நமக்கு பார்க்க கண்களை அளிப்பதும், அறியச் செய்வதும். அமைதிக்கும் உள்நோக்கிற்கும், அறிவொளிக்கும், நிப்பானத்திற்கும் வழிநடத்துவதுமான நடுநிலைப்பாதை உள்ளது."

7. "இந்த நடுநிலைப்பாதையாவது யாது?"நற்பார்வை, நல்நோக்கு, நற்பேச்சு, நற்செயல், நல்வாழ்முறை, நன்முயற்சி, நற்கவனம், நற்சிந்தனை ஆகியவற்றின் உயர்ந்த எண்மார்க்க பாதைத் தவிர வேறேதுமில்லை. தானமேற்போரே, இதுதான் நடுநிலைப்பாதை.

8. "ஆம் சோதரரே; சினம் தீயது, கெடுநினைப்பு தீயது, பொறாமையும், பொச்சரிப்பும் தீயன, கருமித்தனமும், பேராசையும் தீயன, வஞ்சகமும், சூதும், கர்வமும் தீயன. மிகைப்படல் தீயது மற்றும் சோர்வும் தீயது.

9. "மிகைப்படலையும் சோர்வையும் கைவிடுவதற்கான நடுநிலைப்பாதை உள்ளது-பார்க்கக் கண்களை அளிப்பதாய், அறியச் செய்வதாய், அமைதிக்கம், உள்நோக்கலுக்கும், அறவொளிக்கும் நம்மை வழிநடத்துவதாய்."

10. "நிப்பானம் என்பது அந்த உயர்ந்த எண்மார்க்கப் பாதையைத் தவிர வேறில்லை."

11. போற்றுதலுக்குரிய சாரிபுத்ரர் இவ்வாறுரைத்தார்- தானமேற்போர் மனமகிழ்ச்சியுற்றோராய் அவர் கூறியது கேட்டு இன்புற்றனர்.

## 2. நிப்பானத்தின் வேர்கள்

1. ஒருமுறை போற்றுதலுக்குரிய ராதா மேன்மைதங்கிய புத்தரிடம் வந்துற்றார். அவ்வாறு வந்து மேன்மைதங்கிய புத்தரை வணங்கியபின் ஒருபுறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்த போற்றுதலுக்குரிய ராதா மேன்மைதங்கிய புத்தரிடம் இவ்வாறு விளித்தார். "ஐயன்மீர்! எதற்காக நிப்பானம் என்றுரைக்க வேண்டுகிறேன்."

2. "நிப்பானம் என்றால் பற்றுக்களிலிருந்து விடுதலை என்று பொருள்" புத்தர் பதிலிறுத்தார்.

3. "ஆனால் ஐயன்மீர், நிப்பானத்தின் நோக்கம் யாது?"

4. "ராதா, நிப்பானத்தின் மூலமாகத்தான் நன்னெறி வாழ்க்கை வாழப்படுகிறது. நிப்பானமே அதன் இலட்சியம். நிப்பானமே அதன் நோக்கம்."

1. ஒருமுறை மேன்மைதங்கிய புத்தர்ஷ்ராவஸ்தியில் ஜேதவனச் சோலையில் அநாத பிண்டிகரின் பூங்காவில் தங்கியிருந்தார். அப்போது மேன்மைதங்கிய புத்தர் சோதரர்களை அழைத்து விளித்தார், "சோதரர்களே! 'ஆம் ஐயன்மீர்,' - மேன்மைதங்கிய புத்தருக்கு சோதரர்கள் பதிலிறுத்தனர், மேன்மைதங்கிய புத்தர் இவ்வாறுரைத்தார்.

2. "உலகில் கீழானவற்றோடு நம்மைப் பிணிக்கிற ஐந்து விலங்குகளைப் பற்றி நான் போதித்ததை, சோதரர்களே நீங்கள் நெஞ்சில் நிறுத்தியுள்ளீர்களா?"

3. இதன்படி போற்றுதலுக்குரிய மாலுன் கிய புத்ரர் மேன்மை தங்கிய புத்தரிடம் உரைத்தார்.

4. "ஆம் ஐயன்மீர், நான் அவ்வைந்து விலங்குகளைப் பற்றிய போதனையை நெஞ்சில் நிறுத்தியுள்ளேன்."

5. "மாலுன்கிய புத்ரரே, நீங்கள் அவற்றை, எப்படி நெஞ்சில் நிறுத்தியுள்ளீர்கள்?"

6. "மேன்மைதங்கிய புத்தர் போதித்தவாறு நான் நெஞ்சில் நிறுத்தியுள்ளேன் ஐயன்மீர், உடல்சார் பார்வை, தடுமாற்றம், சடங்குச் சம்பிரதாயங்களைப் பொறுத்ததாய் அமைகிற ஒழுக்கநிலைப்பாடு, புலனின்பணர்ச்சி, மற்றம் கெடுநினைப்பு ஆகிய ஐந்து விலங்குகளும் உலகில் கீழானவைகளோடு நம்மைப் பிணிப்பவை என்று மேன்மைதங்கிய புத்தரால் போதிக்கப்பட்டுள்ளது. ஐயன்மீர் இந்த ஐந்து விலங்குகளைப் பற்றிய போதனையை நான் நெஞ்சில் நிறுத்தியுள்ளேன்."

7. மாலுன்கியபுட்டரே, யாருக்குப் போதிக்கப்பட்டதோ அவ்வாறே ஐந்துத் தடைகள் பற்றியவற்றைத் தாங்கள் மனத்திலிறுத்தியுள்ளீர்களா? வேறு சமயஞ்சார்ந்த துறவிகள் தம் இகழ்தலுக்கு ஒரு இளம் சிசுவின் உவமைக் கதையைப் பயன்படுத்திக் கீழ்க் கண்டவாறு கூறித் தங்களை இகழந்துரைப்பதுண்டல்லவா?

8. "ஆயினும், மாலுன்கியபுட்டரே, ஓர் இளம் சிசுவான ஆண் குழந்தைக்கு உடலுணர்வு இராதல்லவா?-அது உணர்ச்சியற்று மல்லாந்து கிடக்கையில் பின் எப்படி உடலுணர்வு அவனுக்குள் எழமுடியும்? இருந்தும் உண்மையில் உடலுணர்வென்னும் நுண்ணுணர்ச்சி அவனுக்குள் ஊடுருவித்தானே இருக்கும்?"

9. "அதேபோல, மாலுன்கியபுட்டரே, ஓர் இளம் சிசுவான ஆண் குழந்தைக்கு - அது உணர்ச்சியற்று மல்லாந்து கிடக்கையில், மன உணர்வுகள் ஏதும் இருக்க முடியாது. பின் எப்படி மன உணர்வின் சலனங்கள் ஏதும் அதற்கு இருக்க முடியும்? இருந்தும் சலனத்தன்மை அவனுக்குள் ஊடுருவி உள்ளதே!"

10. "அவ்வாறே, மாலுன்கியபுட்டரே, அவன் எந்த ஒழுக்க நடைமுறைகளும், உடையவனாய் இருக்க இயலாது. பின் எப்படி, அவனுக்குள் ஒழுக்கத்தன்மையோ, சடங்கு, சம்பிரதாயச் சார்போ இருக்க முடியும்? இருந்தும் அவற்றின் தன்மை அவனுக்குள் ஆங்கு ஊடுருவியுள்ளதே!"

11. "மேலும் மாலுன்கியபுட்டரே, அந்த இளம்சிசு புலன் உணர்வேதும் அற்றதாயுள்ளது. பின் எப்படி, புலன் மகிழ்ச்சியை அது அறிந்து கொள்ள முடியம்? இருந்தும் ஆங்கு அதனிடம் அத்தன்மையுள்ளதே."

12. "இறுதியாக, மாலுன்கியபுட்டரே, அந்த இளம் சிசுவைப் பொறுத்தவரை அதனால் உயிர்களின் இருப்பை அறிய இயலாது. பின் எப்படி அது உயிர்களிடம் வெறுப்பைக் கொண்டு விளங்க முடியும்? இருந்தும் அந்தத் தன்மை அதனிடம் உள்ளதே."

13. "இப்போது, மாலுன்கியபுட்டரே, பிறசமயம் சார்ந்த துறவிகள் இவ்வாறு இளம்சிசுவான ஆண்குழந்தைப் பற்றிய உவமைக் கதையைப் பயன்படுத்தி உம்மை இகழ்வதில்லையா?"

14. இது உரைக்கப்பட்டபின், போற்றுதலுக்குரிய ஆனந்தர் உயர்வெய்திய புத்தரை நோக்கி உரைக்கலானான்: "உயர்வெய்திய புத்தரே! நேரமாகிவிட்டது. ஓ! வழிப்போக்கரே! இப்போது உயர்வெய்திய புத்தரின் ஓய்வுக்கான நேரம் வந்து விட்டது."

## தம்மம் பற்றிய பேருரைகள்

### 1. ஏன் நல்நோக்குகள் முதலிடம் வகிக்கின்றன.

1. உயர்ந்த எண்மார்க்கப் பாதையிலேயே மிக்குயர்ந்தது நல்நோக்கமாகும்.

2. உயர்வாழ்க்கையிலும் அறியாமையிலும் மற்ற அனைத்தினுக்கும் முன்னுரையாகவும் திறவுகோலாகவும் உள்ளது நற்சிந்தனையே ஆகும்.

3. புரிதல் குறையே அனைத்துத் தீமையின் வேராய் உள்ளது.

4. நல்நோக்கை வளர்த்துக் கொள்ள வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் ஒருவன் காரணக்காரிய விதிமுறையாகக் காணல் வேண்டும். நல்நோக்குடைமை என்பது காரணக்காரிய விதியை அறிந்தேற்றல் என்பதே ஆகும்.

5. சோதரர்களே யாரொரு தனிமனிதன் நேரற்ற பார்வையை, தவறான நோக்கத்தைத் தீதான பேச்சைச், செயலை அல்லது வாழ்வை, குறையுடைய முயற்சியைக் கவனத்தைச் சிந்தனையைத் தொடர்கிறானோ, யாருடைய அறிவும் தெளிவும் குறுகலாகி உள்ளதோ, அவனுடைய ஒவ்வொரு செயல்பாடும், சொல்லும், சிந்தனையும் அவ்வாறான நேரற்ற பார்வைக்கேற்பவே செய்யப்படுகிறது மற்றும் அடையப்படுகிறது, அவன் விரும்பிப் புரியும் அனைத்துச் செயல்களும் விழைவுகள் அனைத்தும், தீர்மானங்கள் அனைத்தும் அவனுடைய செயல்கள் அனைத்தும், இவைகள் அனைத்துமே சுவையற்றனவாய் மகிழ்ச்சியூட்டாதனவாய், தீங்குறும் தன்மை உடையனவாய், இலாபமற்றனவாய், துன்பம் தருவனவாய் இருக்கவே உதவுகின்றன. ஏனப்படி? எல்லாம் அவனுடைய தீயப் பார்வையால் தான்."

6. சரியாய் இருப்பது மட்டுமே போதாது, ஒரு குழந்தை சரியாய் உள்ளது என்தே அக்குழந்தைச் சரியானது எதுனெ அறிந்துள்ளதாய் பொருளாகாது. ஒருவன் சரியாய் இருக்க சரியானவற்றை அறிந்திருக்க வேண்டும்.

7. "ஆனந்தரே, யாரை தானமேற்கும் துறவியென சரியாய் விவரிக்கலாம்? எவையெல்லாம் பகுத்தறிவாய் இயல்வது எவையெல்லாம் பகுத்தறிவின்பாற்பட்டு இயலாதது என்பதை அறிந்து தோந்தவர் எவரோ அவரை மட்டுமே."

### 2. மரணத்திற்குப் பின்னான வாழ்க்கை பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்.

1. ஒரு குறிப்பிட்ட சமயத்தில் போற்றுதலுக்குரிய மாபெரும் காஸ்ஸப்பரும் போற்றுதலுக்குரிய சாரிபுத்ரரும் பனாரசுக்கு அருகில் இசிப்பட்டணாவில் மான் சோலையில் தங்கியிருந்தனர்.

2. அப்போது போற்றுதலுக்குரிய சாரிபுத்ரர் தியானத் தனிமையிலிருந்து எழுந்து போற்றுதலுக்குரிய மாபெரும் சாஸ்ஸப்பரிடம் சென்று ஒருபுறம் அமர்ந்தார்.

3. அவ்வாறு அமர்ந்த போற்றுதலுக்குரிய சாரிபுத்ரர் போற்றுதலுக்குரிய மாபெரும் காஸ்ஸப்பரிடம் கூறினார், "எப்படி நண்பர் காஸ்ஸப்பரே? ததாகதர் மரணத்திற்குப் பின்னும் வாழ்பவரா?"

4. "நண்பரே, மேன்மைத்தங்கிய புத்தரால் ததாகதர் மரணத்திற்குப்பின் வாழ்கிறாரா என்பது வெளிப்படுத்தப்படவில்லை."

5. "அப்படியாயின் நண்பரே, ததாகதர் மரணத்திற்குப்பின் வாழ்கிறார் என்றும், வாழவில்லை என்றும் இரண்டும் ஆகுமா?"

6. "நண்பரே இதுகூட மேன்மைத் தங்கிய புத்தரால் வெளிப்படுத்தப்படவில்லை."

7. "அதெப்படி நண்பரே, ததாகதர் மரணத்திற்குப்பின் வாழ்வதில்லையா? அதுகூட நண்பரே மேன்மைதங்கிய புத்தரால் வெளிப்படுத்தப்படவில்லை."

8. "ஆனால் நண்பரே இது ஏன் மேன்மைதங்கிய புத்தரால் வெளிப்படுத்தப்படவில்லை?"

9. "இந்த வினா மானுடத்திற்கோ, உயரிய வாழ்க்கையின் முதன்மையான கோட்பாடகளுக்கோ, அவசியமானதாய் இல்லை. இது நிறைவான அறிவினுக்கோ அல்லது நிப்பானத்திற்கோ இட்டுச் செல்வதாய் இல்லை. இது மேன்மைத்தங்கிய புத்தரால் வெளிப்படுத்தப்படாதது இதனால்தான் நண்பரே."

### 3. கடவுளுக்கான பிரார்த்தனைகளும் பூசைகளும் பயனற்றவை.

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் வாசேத்தரிடம் உரையாடகையில் கூறினார்.

2. "இந்த அசிரவதி ஆறு நீரால் நிறைந்து விளிம்புவரை ததும்பி வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து ஓடுகையில், மறுகரையில் புரிய வேண்டிய பணிகள் உள்ள ஒரு மனிதன், இக்கரைக்கு வந்துற்று ஆற்றைக் கடக்க விரும்புகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள்."

3. அவன் இக்கரையில் நின்று கொண்டு அக்கரையை நோக்கிக் கூறுகிறான் 'ஓ! அக்கரையே வா இங்கே! இந்தப் பக்கத்திற்கு வா!'

4. இப்போது வாசேத்தரே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அந்த மனிதனின் பாடலால் பிராத்தனையால், நம்பிக்கையால், புகழ்ச்சிகளால் அசிரவதியின் மறுகரை இப்பக்கத்திற்கு வந்துவிடுமா?

5. "இதே வகையில் தான் வாசேத்தரே மூன்று வேதங்களிலும் மூழ்வி எழுந்த பிராமணர்கள் ஒரு மனிதனை உண்மையில் பிராமணனாகத்தக்க உயர் குணங்களை பயிற்சிச் செய்வதைக் கைவிட்டு, ஒரு மனிதனை பிராமணனல்லாதவனாக்கத் தக்கத் தொழில்களைப் பயிற்சிச் செய்வதைப் பின்பற்றிக் கொண்டே இவ்வாறு கூறுகிறார்கள்."

6. "இந்திரனே உன்னை நாங்கள் அழைக்கிறோம், பிரம்மனே உன்னை நாங்கள் அழைக்கிறோம், ஈசானே உன்னை நாங்கள் அழைக்கிறோம், பிரஜாபதியே உன்னை நாங்கள் அழைக்கிறோம், பிரம்மனே உன்னை நாங்கள் அழைக்கிறோம். நாங்கள் அழைக்கிறோம், நாங்கள் அழைக்கிறோம்."

7. இப்படியேதான் வாசேத்தரே! இந்தப் பிராமணர்கள் தங்கள் பால்களாலும், பிரார்த்தனைகளாலும், நம்பிக்கையாலும், புகழ்ச்சிகளாலும் மரணத்திற்குப்பின் பிரம்மத்தோடு ஐக்கியமாகப் பார்க்கிறார்கள்-இப்படியான நிலைமைகள் அறிவுடைமை ஆகாதே.

4. நீங்கள் உண்ணும் உணவு எதுவோ அது உங்களைத் தூய்மையாக்காது.

1. ஒரு பிராமணர் புத்தரைச் சந்திக்க நேர்ந்த போது ஒரு மனிதனின் குணநடத்தையின்பால் உணவினால் ஏற்படும் தாக்கம் பற்றிய வினாவை எழுப்பினார்.

2. பிராமணர் கூறினார்: தானியங்கள், பழங்கள், கொட்டைகள், பருப்புக்கள், கனிச்சுளைகள், தண்டுகள், கீரைகள்' ஆகிய சரியான வழியில் பெறப்பட்ட இவ்வுணவுகள் நல்வாழ்வை என்றும் உறுதிச்செய்வன, 'செத்த விலங்குகளின் இறைச்சியை உண்பது தீயது.'

3. மேன்மைத்தங்கிய புத்தர் பதிலிறுத்தார்:"(ஐயன்மீர்) தாங்கள் செத்த விலங்குகளின் இறைச்சியைத் தொடுவதில்லை எனக் கூறடினும், பறவைகளின் தசைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட தோந்த உணவுகளை உண்கிறீர்கள்-'செத்த விலங்குளின் இறைச்சி' எனத்தாங்கள் குறிப்பது எதனை என வினவுகிறேன்.

4. "கொல்லுதலும், வெட்டுதலும், துண்டித்தலும், அடிமைப்படுத்தலும், திருடுதலும் பொய்கூறுதலும், வஞ்சித்தலும் ஏமாற்றுதலும், காமத்தவறிழைத்தலும் தான் செத்தவற்றை உண்ணல் என்றாகும். ஆனால் இறைச்சி உணவேற்றலன்று."

5. "அற்பசந்தோஷம் தேடலும், காமக்களஞ்சியமாயிருத்தலும், மாசுடை வாழ்க்கையும், கருத்து வேறுபாடுற்று சச்சரவிடுதலும் செத்தவற்றை உண்ணல் என்றாகும்-ஆனால் இறைச்சி உணவேற்றலன்று."

6. "புறங்கூறல், துன்புறுத்தல், ஆள்காட்டல், இரக்கமற்றத் தற்பெருமை, இழிந்தக் கருமித்தனம் ஆகிய இவைகளே செத்த மிருகங்களை உண்ணுதல் என்றாகும்-ஆனால் இறைச்சி உணவேற்றலன்று."

7. "சினம், அகந்தை, கிளர்தல், வஞ்சனை, பொறாமை, வீம்புரை, தற்புகழ்ச்சி, சிற்றினஞ்சேரல் (கூடாவொழுக்கம்) - ஆகிய இவைகளே செத்த மிருகங்களை உண்ணுதல் என்றாகும்-ஆனால் இறைச்சி உணவேற்றலன்று."

8. "இழிவாழ்வு, இகழ்ச்சியுண்டாக்கல், வஞ்சகம், ஏமாற்றுதல், தந்திர உபாயங்கள், தவறான தற்புகழ்ச்சி ஆகிய இவைகளே செத்த மிருகங்களை உண்ணுதல் என்றாகும்-ஆனால் இறைச்சி உணவேற்றலன்று."

9. இந்தக் கொல்லும் சினம், திருடுதல் போன்ற இக்குற்றங்கள் அழிவோடடையப்பட்டு வாழ்வைத் துன்பமயமாக்குவதில் முடியுமே-இவைகளே செத்த மிருகங்களை உண்ணுதல் என்றாகும்-ஆனால் இறைச்சி உணவேற்றலன்று.

10. இறைச்சியும், மீனும் உண்பதினின்று தவிர்தல் அன்று-நிர்வாணமாயிருத்தலன்று-குடுமிவைத்தலன்று, மழித்தலன்று-உரோம உடை உடுத்தலன்று-யாகத்தீவளர்த்தலன்று-எதிர்க்காலப் பேரின்பத்தை வாங்கப்போதி வழிமுறைகள் இவைகளன்று-தன்னை வருத்தலும்-வேள்வித்தீயில் தானப் பொருள் இழத்தலும், சடங்குகளும் ஐயமுற்ற மனிதனைத் தூய்மைப் படுத்தி விடாது.

11. உங்கள் புலன்களை அடக்குங்கள்-உங்கள் சக்திகளை ஆளுங்கள்-உண்மையைக் கடைபிடியுங்கள்-இரக்கத் தோடிருங்கள்-அனைத்துக் கட்டுக்களையும் விட்ட, தீமைகளை வென்ற துறவி-தான் கண்டவற்றாலும் கேட்டவற்றாலும் களங்கப்படுவதில்லை.

12. செத்தவற்றை உண்ணலைத் தவிர்க்கும், தீமைகளை விலக்கும், இந்த ஆழ்ந்து காக்கும் உண்மைகளைப் புத்தர் போதிக்கக் கேட்ட பிராமணர், மவுனமாய் அவர் மலரடி வீழ்ந்து ஆங்கேயே அப்போதே தன்னையோர் பிக்குவாய் ஏற்றுக்கொள்ள வேண்டினார்.

## 5. உணவன்று தீயச்செயல்களே கவனத்துக்குரியவை.

1. ஆமகந்தர் எனும் பெயரிய ஒரு பிராமணர் ஹிமாலயப் பகுதியில் தன் சீடர்களுடன் வாழ்ந்துவந்த ஓர் துறவியாவார்.

2. அவர்கள் மீனையோ, இறைச்சியையோ உண்பதில்லை. ஆண்டுதோறும் அவர்கள் தம் ஆசிரமத்தை விட்டு உப்பும் புளியும் தேடிக் கீழே வருவார்கள். கிராமக் குடிமக்கள் அவர்களை தன் மதிப்புடன் வரவேற்று நான்கு மாதங்கள் நன்கு உபசரிப்பர்.

3. ஒரு சமயம் உயர்வெய்திய புத்தர் தம் துறவிகளுடன் அந்தக் கிராமத்தை அடைந்தார். புத்தர் தம்மத்தைப் போதிப்பதைக் கேட்ட மக்கள் அவரைப் பின்பற்றுபவர்களாயினர்.

4. அவ்வாண்டு ஆமகந்தரும் அவர்தம் சீடர்களும் வழக்கப்படி கிராம மக்களிடம் சென்றனர்- ஆனால் கிராம மக்கள் வழக்கப்படியான ஆர்வம் காட்டவில்லை.

5. மீனையும், இறைச்சியையும் உண்ணுவதை புத்தர் தடை செய்யவில்லை என்பதைக் கேட்ட ஆமfகந்தர் ஏமாற்றமடைந்தார். விஷயத்தை உறுதிசெய்து கொள்ள விரும்பி, உயர்வெய்திய புத்தர் தங்கியிருந்த ஷ்ராவஸ்தியில் உள்ள ஜேதவனதிற்குச் சென்று கூறினார்.

6. "கம்பு, சிங்குலஅவரை, பட்டாணி, உண்ணத்தக்க இலைகள், கிழங்குகள், எந்தக் கொடியிலும் விளைந்தப் பழங்கள் ஆகியவற்றை நல்வழியில் பெற்று உண்ணும் நன்னெறியாளன் சந்தோஷத்திற்காகப் பொய்யுரைப்பதில்லை."

7. "நல்வழியில் பெறப்பட்ட, நன்கு தயாரிக்கப்பட்ட, தூய சிறந்த உணவை பிறாளிக்கத் தாங்கள் உண்கிறீர்கள். அரிசியினால் தயாரிக்கப்பட்ட அவ்வகை உணவை ஏற்று மகிழ்ந்துண்பவர் ஆமகந்தரம் (தீயவை) உண்பவராகிறார், பறவையின் இறைச்சியோடு நன்கு தாயரிக்கப்பட்ட சோற்றுணவு உண்பவரை ஆமகந்தக் குறைசாராது என்கிறீர் தாங்கள்."

8. "நான் தங்களிடம் இதன் பொருளறிய விழைகிறேன். தங்கள் ஆமகந்தம் எவ்வகையானது."

9. புத்தர் பதிலிறுத்தார், "உயிரெடுத்தல், அடித்தல், வெட்டுதல், அடக்குதல், திருடுதல், பொய்கூறல், வஞ்சித்தல், எமாற்றுதல், பயனிலா அறிவிடையவனாயிருத்தல், தவறான காம ஒழுக்கம்-இவையே தீமைகள்-ஆமகந்தம்!-இறைச்சி உண்பதன்று."

10. இவ்வுலகில் புலனின்பங்களில் கட்டுப்பாடற்றவர்களாய், இனிய பொருள்களில் பேரவா உடையவர்களாய், மாசுடைச் செயல்களோடு கூட்டுறவுடையவர்களாய், அழிவுநிலைப் பார்வையுடையவர்களாய், குறுகிய மதியினராய், பின்பற்றக் கடினமானவர்களாய், இருப்பவர்களே தீயர்-ஆமகந்தம்-இறைச்சி உண்பவரன்று.

11. இவ்வுலகில் எவர் கடுமையானவராய், கடினமானவராய் புறங்கூறுபவராய் நம்பிக்கைக்த் துரோகம் புரிபவராய், கருணையற்றவராய், அளவுக்கதிமாய்த் தற்சார்புடையவராய் கருமியாய், எவருக்கும் ஏதும் அளிக்காதவராய் இருக்கிறார்களோ அவர்களே தீயர்-ஆமகத்தம்-இறைச்சி உண்பவரன்று.

12. "சினம், தற்பெருமை, வஞ்சகம், பொறாமை, தற்புகழ்ச்சி, அளவுக்கதிகமான தற்சார்புடைமை, தீயநெறியாளரோடு கூட்டுறவு-இவையே தீயவை-ஆமகந்தம்!-இறைச்சி உணவேற்பதன்று."

13. "எவர் தீயொழுக்கமுடையவரோ, கடனைத்திருப்பித்தர மறுப்பவரோ, இகழ்ச்சியுடைப்பவரோ, தம் தொழிலில் ஏமாற்றுக்காரராய் உள்ளாரோ, பாசாங்குக்காரரோ, இவ்வுலக மனிதர்களிலேயே குற்றம் மிக்கவரோ, தீச்செயல் புரிபவரோ-அவர்களே தீயர்-ஆமகந்தம்! - இறைச்சி உண்பவரன்று."

14. "எந்த மனிதர்கள் இவ்வுலகில் பிற உயிர்களிடம் கட்டப்பாடற்றுள்ளனரோ, பிறருக்குத் துன்பமிழைப்பதில் குறியாயுள்ளவரோ, பிறர்பொருள் கவர்பவரோ, தீயொழுக்கம் உள்ளவரோ, கொடியவரோ, கடினமானவரோ, மரியாதையற்றவரோ-இவர்களே தீயர்!-ஆமகந்தம்! இறைச்சி உணவேற்பரென்று."

15. பேராசையாலோ, விரோதத்தாலோ பிற உயிர்களைத் தாக்குபவர், தீமையிலேயே குறியாயிருப்பவர் இறப்புக்குப் பின்னும் இருள்மயமான தீயபெயருறுவர்-இவர்களே தீயர்!-ஆமகந்தம்! இறைச்சி உணவேற்பவரன்று.

16. மீனையும், இறைச்சியும் தவிர்த்து நிர்வாணமாய், மழித்தத் தலையராய் அல்லது சடைமுடியராய், சாம்பல் பூசியவராய், மான் தோலுடுத்தவராய், யாகத்தீவளர்ப்பவராய், உலகிலுள்ள அனைத்துச் சடங்குகளும், புரிபவராய், பூஜை செய்பவராய், பருவத்திறகேற்ற யாகம்புரிபவராய் இருப்பினும் தன் ஐயம் நீங்கப் பெறாத ஒருவர் இவற்றால் தூய்மையுறுவதில்லை.

17. எவரொருவர் காக்கப்பட்ட, வெல்லப்பட்ட புலன்களுடையவராய், தம்மத்தில் நிலைப்பவராய், தேரிய வழியில் மகிழப்வராய், நல்லோராய், பற்றுக்களைக் கடந்தவராய், துன்பமனத்தையும் நீத்தவராய-வாழ்கிறாரோ, அந்தப் பேரறிவாளரே கண்டவை, கேட்டவையோடு ஒன்றிவிடவதில்லை.

18. ஆமகத்தத்தை உருவாக்குவது தீயசெயல்களேயன்றி மீனையோ, இறைச்சியையோ உண்பதன்று.

### 6. புறத்தூய்மை போதுமானதன்று.

1. ஒரு முறை மேன்மை தங்கிய புத்தர் ஷ்ராவஸ்தியில் தங்கியிருந்தா ா. சங்கரவர் என்னும் பிராமணரும் ஆங்கு தங்கியிருந்தார். அப்போதவர் நீரால் தூய்மைச் செய்து கொள்பவராய், நீரால் தூய்மைப்படுதலைப் பயிற்சி செய்பவராய் இருந்தார். இரவும் பலும் நீராடும் பழக்கமுடையவராய் அவர் வாழ்ந்து வந்தார்.

2. அப்போது போற்றுதலுக்குரிய ஆனந்தர், அதிகாலையில் துவராடைப் பூண்டு மேலுடையும், பிட்சாபத்திரமும் கைக் கொண்டு ஷ்ராவஸ்தியில் தானமேற்கச் சென்றார். ஷ்ராவஸ்தியில் கற்றுதலை முடித்து உணவுண்டபின், திரும்பியவர், மேன்மை தங்கிய புத்தரிடம் சென்று வணங்கி ஒருபுறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்த போற்றுதலுக்குரிய ஆனந்தர் கூறினார்:

3. "ஐயன் மீர்! ஈண்டு ஷ்ராவஸ்தியில் சங்கரவர் என்னும் பிராமணர் ஒருவர் தங்கியுள்ளர்-அவர் நீரால் தூய்மைச் செய்து கொள்பவராய, நீரால் தூய்மைப்படுதலைப் பயிற்சி செய்பவராய் உள்ளர். இரவும் பகலும் நீராடும் வழக்கத்திற்குட்பட்டவராய் உள்ளர் அவர். ஐயன்மீர்! இது இவ்வாறிருப்பதனால் மேன்மை தங்கிய புத்தர், அவர் மீதுள்ள கருணையினால் அவரைச் சந்திக்கலாமல்லவா!"

4. தன் மவுனத்தால் மேன்மைதங்கிய புத்தர் ஒப்புதல் அளித்தார்.

5. எனவே அடுத்தநாள் அதிகாலை, மேன்மைதங்கிய புத்தர்தம் துவராமையணிந்து கொண்டு, மேலுடையும், பிட்சா பாத்திரமும் கைக்கொண்டு பிராமணர் சங்கரவர் தங்கியுள்ள இடத்திற்குச் சென்று, அவ்விடமடைந்த போது அவருக்காக அமைக்கப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார்.

6. அதன்பின் சங்கரவ பிராமணர் மேன்மை தங்கிய புத்தரிடம் வந்துற்று, வணங்கி, ஒருவர்க்கொருவர் வந்தனம் பரிமாறிக் கொண்டபின், ஓர்புறம் அமர்ந்தார்.

7. அவ்வாறு அவர் அமர்ந்தபின், மேன்மைதங்கிய புத்தர் சங்கரவ பிராமணரிடம் இதைக் கூறினார்: "பிராமணரே, தாங்கள் நீரால் தூய்மைப்படுத்திக் கொள்பவர் என்றும், நீரால் தூய்மைப்படுத்திக் கொள்ளலைப் பயிற்சி செய்பவராயுள்ள தாகவும் இரவும் பகலும் நீராடும் வழக்கம் உடையவராகவும் அவர்கள் கூறுவது உண்மைதானா?"

8. "அது உண்மைதான், கவுதம போதகரே".

9. "இப்போது, என்ன பயனைக் கருதிக் தாங்கள் நீராடும் பழக்கத்தையும் பயிற்சி செய்வதையும் பறிவற்றையும் மேற் கொள்கின்றீர்கள்?"

10. "போதகர் கவுதமரே! இவ்வழியில், நான் பகலில் செய்யும் தீங்குகளை அன்றைய மாலை நீராடல் போக்கிக் கொள்கிறேன். இரவில் புரியும் தீங்குகளை அடுத்த நாள் காலை நீராடுவதன் மூலம் கழுவிக் கொள்கிறேன். நீராடுதல் மூலமும் தூய்மைப்படுத்துவதன் மூலமும் கழுவிக் கொள்கிறேன். நீராடுதல் மூலமும் தூய்மைப்படுத்துவதன் மூலமும் பிறவற்றின் மூலமும் இந்தப் பயனையே நான் எதிர் நோக்குகிறேன்."

11. பிறகு மேன்மை தங்கிய புத்தர் உரைத்தார்;

12. "இலட்சியமே திருக்குளம். அது தெளிவானது-களங்கமற்றது."

13. "இதில் நீராட வருபவர்கள், பாரம்பரியப் போதகர்களாய், அனைத்து அங்கங்களும் தூய்மைப்பட்டு, அக்கரை அடைவர்."

14. இதன்படி, பிராமணர் சங்கரவர் மேன்மைதங்கிய புத்தரிடம் உரைத்தார்: "இது மிகச்சிறப்பாயுள்ளது, போதகர் கவுதமரே. போதகர் கவுதமராகிய தாங்கள் என்னைத் தங்கள் சீடராய், இன்று முதல் என்வாழ்நாள் நீடிக்கும் வரை, தங்களிடம் அடைக்கலம் பெற்றவனாக ஏற்பீராக."

7. நனிசிறந்த உயர் வாழ்வு யாது.

1. ஒரு முறை உயர்வெய்திய புத்தர் பயணித்துக் கொண்டிருககையில், அவருடைய வழக்கப்படி, அவருடன் வந்த பிக்குகளுக்குக் கீழ்கண்ட உரை நிகழ்த்தினார்.

2. பிக்குகளை விளித்துப் புத்தர் கூறினார்: இந்த பிக்கு வாழ்முறையான உயர்வாழ்வு நெறி மக்களை ஏய்க்கவோ, அவர்களின் ஆதரவைப் பெறவோ, இலாபம் கருதியோ, பயன்கருதியோ, புகபக்காகவோ, முரண்பாடுகளின் சிக்கல்களிலிருந்து விடுபடவோ, மக்களால் இன்னின்னார் என்று அறியப்படும் பெருமை பெறுவதற்காகவோ பயிற்சி செய்யப்படுவதன்று, உண்மையில், சோதரர்களே, இந்த பிக்கு வாழ்முறையாகிய உயர் வாழ்வு நெறி, (உடல், சொல், ஆகியவற்றினை) கட்டுப்படுத்திக் கொள்ளவும், தூய்மைப்படுத்திக் கொள்ளவும் (தவறுகள் ஏற்படாமலும்) மற்றும் பற்றற்றுக்கவும், (பற்றுடைமையினின்று) தவிர்த்துக் கொள்ளவும் (பேராசைகளை) ஏற்கப்படுவதாகும்."

சமூக அரசியல் பிரச்சனைகள் பற்றிய பேருரைகள்

1. அரசர்களின் ஆதரவைச் சார்ந்து இராதீர்.

1. ஒரு முறை மேன்மைதங்கிய புத்தர் இராஜகிரஹத்தில் அணிலுண்ணும் சோலையிருந்த மூங்கில் வனத்தில் தங்கியிருந்தார்.

2. அச்சமயத்தில், உயர்வெய்திய புத்தர்பால் பகைமைக் கொண்டிருந்த தேவதத்தனுக்கு ஆதரவளித்து வந்தார் அரசர் அஜாத சத்ரு.

3. ஐந்நூறு கலங்களில் உணவேற்றிவரும் ஐந்நூறு வண்டிகளை அளித்து தேவதத்தனின் ஆதரவாளாகளை அவர் உபசரித்து வந்தார்.

4. அப்போது பற்பல சோதரர்கள் மேன்மை தங்கிய புத்தரிடம் வந்துற்று, வணங்கி ஓர்புறம் அவர்ந்தனர். அவ்வாறு அமர்ந்த அவர்கள், மேன்மை தங்கிய புத்தரிடம் இதைப்பற்றி யெல்லாம் உரைத்தனர்.

5. பின் உயர்வெய்திய புத்தர் சோதரர்களை விளித்து உரைத்தார்; "நீங்கள் அரசர்களிடமிருந்து பயனையோ, ஆதரவையோ, புகழ்ப்பெருமையோ பெற விழையாதீர்கள், சோதரர்களே! தேவதத்தருக்கு ஐந்நூறு கலங்கள் உணவேந்திய ஐந்நூறு வண்டிகள் அளித்து அரசர் அஜாதசத்ரு முன்பும் இப்போதும் உதவிவரும் வரை, தேவத்தருக்கு இது அழிவாகும் என எதரிப்பார்க்கலேமேயன்றி, நன்னிலைக்கான வளர்ச்சியாக கருதவியலாது."

6. "சோதரர்களே-ஒரு பைத்தியம் பிடித்த நாயின் முகத்தில் ஒர் இறைச்சித்துண்மை வீசியெறிவது மேலும் அதைப் பைத்திய மாக்கும் என்பதைப் போல, அரசர் அஜாதசத்ரு இவ்வாறு நோக்கச் செய்யமேயன்றி நன்னிலைக்கான வளர்ச்சிக்குதவாது. சோதரர்களே! அரசர்களின் பொருளுதவியும், ஆதரவும், புகழ்ப் பெருமையும் இவ்வளவு கேடானது."

7. "அனைத்தையும் கடந்த உறுதிமிக்க அனுமதிஅடைவதற்குக் கடுமையான தடையாக இவையுள்ளன.

8. "எனவே, சோதரர்களே! நீங்கள் உங்களை இவ்வாறாகப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும். 'இலாபங்கள், உதவிகள், புகழ்பபெருமை ஆகியவை நம்மை வீழ்த்தி விடும்போது, நாம் அவற்றை ஒதுக்கிவிட வேண்டும் அவை நம்மை வீழ்த்திவிடும் எனும்போது. அவை நம் இதயத்தில் இடம்பெறவோ நிலைப்படவோ, நம்மை அரசர்களின் அடிகைளாக்கவோ நாம் விடக்கூடாது!"

2. அரசர் நன்னெறியாளராயிருப்பின் அவருடைய குடிமக்களும் நன்னெறியாளராயிருப்பர்.

1. ஒருமுறை புத்தர் தானமேற்போரை விளித்து உரைத்தார்;

2. "அரசர்கள் தீயநெறியாளர்களாயிருக்கும் சமயத்தில், அமைச்சர்களும், அலுவர்களும் கூட தீயநெறியாளர்களாய் ஆகிவிடுகின்றனர். சோதரர்களே! அமைச்சர்களும், அலுவலர்களும் கூட தீயநெறியாளர்களாய் இருக்கையில் பிராமணர்களும் இல்லறத்தாரும் தீயநெறியாளர்களாய் உள்ளனர். பிராமணர்களும் இல்லறத்தாரும் தீயநெறியாளர்களாய் இருக்கையில், நகர மக்களும் கிராமத்தவர்களும் தீயநெறியாளர்களாகி விடுகின்றனர்."

3. "ஆனால் அரசர்கள் நன்னெறியாளர்களாய் இருக்கையில், அவர்தம் அமைச்சர்களும் அலுவர்களும் நன்னெறியாளர்களாய் ஆகின்றனர். அரசர்களின் அமைச்சர்களும் அலுவர்களும் நன்னெறியாளர்கள் ஆகுகையில், பிராமணர்கும் இல்லறத்தாரும் கூட நன்னெறியாளர்களாய் ஆகுகையில், நகர மக்களும் கிராமத்தவர்களும் கூட நன்னெறியாளராய் ஆகின்றனர்."

4. "பசுக்கள் கடந்து செல்கையில், முதிய காளை ஒதுங்கிச் சென்றால், அனைத்து மாடுகளும் அதன்வழியே தொடர்ந்து செல்கின்றன. அதேபோல், மனிதர்களிலும், தலைமையாய் ஏற்கப்பட்டவன் குறுக்காய் நடப்பானாயின், மற்றவர்களும் குறுக்காய்ச் செல்கின்றனர்."

5. "அதேபோல், அரசன் தவறிழைக்கும் போது இராஜ்யம் முழுவதுமே துன்புறுகிறது. பசுக்கள் கடந்து செல்கையில் காளை நேர்வழி சென்றால், அதன்வழி, நேராயிருப்பதால் அவையனைத்தும் சரியாகவே செல்கின்றன. அவ்வாறே மனிதரிடையிலும், தலைமையாய் ஏற்கப்பட்டவன் நன்னெறி நடப்பானாயின், மற்றவர்களும் சரியாய் வாழ்கின்றனர். அரசன் நல்லவனாயிருப்பின் அனைத்து ராஜ்யமுமே மகிழ்ச்சியாக வாழ்கிறது."

3. அரசியல் மற்றும் இராணுவ வலிமை சமூக அமைப்புமுறையையே சார்ந்துள்ளன.

1. ஒருமுறை புத்தர் இராஜகிரஹத்தில், கழுகு மலைச் சிகரம் என்றழைக்கப்பட்ட இடத்தில் தங்கியிருந்தார்.

2. அப்போது அச்சமத்தில், விதேஹ வம்சத்துப் பட்டத்தரசியின் மகனான அஜாதசத்ரு மகதத்தின் மன்னராயிருந்தார். அவர் வஜ்ஜினர்களைத் தாக்க விழைந்து தமக்குத் தாமே கூறிக்கொண்டார்: "நான் வஜ்ஜினர்களை வேரோடு வீழ்த்துவேன்-அவர்கள் எவ்வளவு வலிமையும் சக்தியும் உடையவர்களாயிருப்பினும், வஜ்ஜினர்களை தான் அழிந்து விடுவேன்-வஜ்ஜினர்களுக்கு முற்றான அழிவைக் கொண்டு வருவேன்."

3. எனவே மகத்தின் பிரதம அமைச்சரான வஸகரர் என்னும் பிராமணரிடம் கூறினார்.

4. "ஓ! பிராமணரே! வாரும்! தாங்கள் உயர்வெய்திய புத்தரிடம் சென்று, பணிவுடன் என் சார்ாக அவர் பாதமலர்களை வணங்கி, அவர் உடல்நலமுற்றுள்ளாரா எனவும், உரிய உடல்வலியோடும் அமைதியாகவும் ஆனந்தமாகவும் உள்ளாரா என்றும் நலம் விசரித்தறியுங்கள்."

5. "பிறகு அவரிடம் விதேஹியின் மகனும் மகத மன்னனுமான அஜாதசத்ரு வஜ்ஜினர்களை, அவர்கள் வலிமையாகவும் சக்தி மிக்கவர்களாகவும் இருப்பினும் தாக்க ஆர்வமாய் இருப்பதாகவும், வஜ்ஜினர்களை அழிப்பேனென்றும், அவர்களுக்கு முற்றான அழிவைக் கொணர்வேன் என்றும் கூறுங்கள்."

6. "உயர்வெய்திய புத்தர் முன்னுரைப்பன யாவற்றையும் என்னிம் அப்படியே தாங்கள் கூறவேண்டுமென்பதை நினைவிற் கொள்ளுங்கள்-ஏனெனில் புத்தர் உண்மையற்ற எதையும் உரைப்பதில்லை."

7. அரசரின் கூற்றுக்களைச் செவிமடுத்தபின் பிராமணர் வஸகரர் கூறினார், "தாங்கள் கூறியவாறே ஆகட்டும்." பின் பற்பல ஆடம்பரத் தேர்களைத் தயார்படுத்திக் கொண்டு கழுகு மலைக்கு அவர் சென்றார்.

8. ஆங்கு வந்துற்ற அவர் உயர்வெய்திய புத்தருடன் வணக்கத்தையும் வந்தனங்களையும் பரிமாறிக் கொண்டபின் அரசர் ஆணையிட்டவாறு செய்தியை வெளிப்படுத்தினார்.

9. அச்சமயத்தில் உயர்வெய்திய புத்தருக்குப் பின் போற்றதலுக்குரிய ஆனந்தர் நின்றிருந்தார். உயர்வெய்திய புத்தர் அவரிடம் உரைத்தார். "ஆனந்தரே! தாங்கள் வஜ்ஜினர்கள் அடிக்கடி பொதுச் சபைகளைக் முழுமையாய்க் கூட்டுவதைக் கேள்ளவிப்பட்டீர்களா?"

10. "ஆம் ஐயன்மீர்! அவ்வாறுதான் நான் கேள்வியுற்றேன்" அவர் பதிலிறுத்தார்.

11. உயர்வெய்திய புத்தர் தொடர்ந்தார், "ஆனந்தரே! வஜ்ஜினர்கள் இந்த முழுமையான பொதுச் சபைகளை அடிக்கடி முழுமையாகக் கூட்டும் வரை, அவர்கள் வளம்பெறுவரேயன்றி, வீழ்ச்சியுறுவார்கள் என்ற எதிர்பார்க்க முடியாது."

12. உயர்வெய்திய புத்தர் தொடர்ந்தார், " ஆனந்தரே! வஜ்ஜினர்கள் ஒற்றுமையாய்க் கூடி, ஒற்றுமையாய் எழுச்சியோடும், தம் பணிகளை ஒற்றுமையாய்ப் புரியும் வரை.

13. ஏற்கனவே நிறுவப்பட்டவற்றைத் தவிர வேறெதையும் அவர்கள் சட்டமாக்கி கொள்ளாதவரை, ஏற்கனவே சட்டமாக்கப்பட்டவை எதையும் அவர்கள் ரத்து செய்து விடாதவரை, பண்டைக் காலத்தில் நிறுவப்பட்ட வஜ்ஜினர்களின் பழமையான நிறுவனங்களுக்கேற்ப அவர்கள் செயல்படுகின்ற வரை:

14. "அவர்கள் முதிய வஜ்ஜினர்களை மதித்தும் ஏற்றும், போற்றியும், ஆதரித்தும் வரும்வரை, அவர்களின் சொற்களை செவிமடுப்பதை ஒரு கடமைக் குறிப்பாக ஆக்கிக் கொள்ளும் வரை;"

15. "அவர்களின் குலத்தைச் சார்ந்த மங்கையரையோ, பெண்களையோ பலாத்காரத்தினாலோ கடத்தலினாலோ அவர்களுக்குள் சிறைப்படுத்தாத வரை:"

16. "வஜ்ஜினர்கள் சமயத்தை போற்றியும் பின்பற்றியும் வரும்வரை:"

17. "ஆனந்தரே! அதுவரை வஜ்ஜினர்கள் வீழ்ச்சியடைவார்கள் என்று எதிர்பார்க்க இயலாது-மாறாக வளமுற்று செழிப்பார்கள்-ஒருவரும் அவர்களை ஒழிக்க இயலாது."

18. சுருக்கமாகக் கூறுவதெனில் வஜ்ஜினர்கள் ஜனநாயத்தில் நம்பிக்கைக் கொள்ளும் வரையிலும் ஜனநாயகத்தை நடைமுறையில் கொண்டிருக்கும் வரையிலும் அவர்கள் அரசுக்கு ஓர் ஆபத்தும் இல்லை என்று அறிவித்தார் உயர்வெய்திய புத்தர்.

19. பின் உயர்வெய்திய புத்தர் வஸகரரை விளித்து உரைத்தார்:

20. "ஓ! பிராமணரே, நான் ஒருமுறை வைசாலியில் தங்கியிருக்கையில் வஜ்ஜினர்களுக்கு தன்னலம் பற்றியும் இந்நிலைகளைப் போதித்தேன்."

21. "அப்படியாயின் வஜ்ஜினர்களின் நல்வாழ்வையே நாம் எதிர்பார்க்கலாம்-வீழ்ச்சியை அன்று-அவர்கள் இந்நிலைகளை நடைமுறைப்படுத்தும் வரை. ஆகவே கவுதமரே மகத ன்னரால் வஜ்ஜினர்களை வெல்ல முடியாது என்று பதிலிறுத்தார் பிராமணர்."

22. உயர்வெய்திய புத்தரின் சொற்களைக் கேட்ட வஸகரர் தன் இருக்கையிலிருந்து எழுந்து புத்தர் கூறியதை மன்னரிடம் அறிவிப்பதற்காக இராஜகிரஹத்திற்குத் திரும்பிச் சென்றார்.

## 4. போர் தவறானது.

1. மகத மன்னர் அஜாதசத்ரு குதிரைப்படை, காலாட்படை ஆகியவற்றைத் திரட்டிக் கொண்டு மன்னர் பசேனதியின் அரசாட்சியின் ஒரு பகுதியான காசியின்மீது படையெடுத்தார். அரசாட்சியின் ஒரு பகுதியான காசியின் மீது படையெடுத்தார். இப்படையெடுப்பைப் பற்றி கேள்வியுற்ற பசேனாதியும் அதே போன்ற படையைத் திரட்டிக் கொண்டு அவரை சந்திக்க போர்க்களம் சென்றார்.

2. அவர்கள் இருவரும் ஒருவேராடொருவர் போரிட்டதில் மன்னர் அஜாதசத்ரு, மன்னர் பசேனதியைத் தோற்கடித்து, தன் சொந்தத் தலைநகரான ஷ்ராவஸ்திக்கு சிறைபிடித்துச் சென்றார்.

3. தம் தானப் பயணத்திலிருந்து திரும்பியதும், சஷ்ராவஸ்தியிலிருந்த பிக்குகள் போர் பற்றியும், சிறை பிடித்தல் பற்றியும் மேன்மை தங்கிய புத்தரிடம் கூறினர்.

4. "தானமேற்போரே, மகத மன்னர் அஜாதசத்ரு தீயன அனைத்துக்கும் தோழராய்த் திகழ்கிறார். மன்னர் பசேனதி நல்லன அனைத்துக்கும் நண்பராய்த் திகழ்கிறார். தற்போதைக்கு, பசேனதி தோல்வியுற்ற மனிதராய் துன்பத்தில் உழன்று காலம் கழிப்பவராய் இருப்பார்."

5. "போர் வெற்றி, வெறுப்பை விளைவிக்கிறது; வெற்றிப்பெற்றவர் துன்பத்தில் உழல்கிறார். ஆனால் எவரொருவர் அமைதியாகவும் பற்றற்றும் இருக்கிறாரோ, அவர் மகிழ்ச்சியில் திளைக்கிறார். வெற்றி, தோல்வி இரண்டையும் அவர் கைவிடுகிறார்."

6. மீண்டும் அவ்விரு மன்னர்களும் போர்க்களத்தில் இரண்டாம் முறையாக சந்திக்க நேர்ந்தது. ஆனால் அந்தப் போரில் கோசல மன்னர் பசேனதி அஜாதசத்ருவைத் தோற்கடித்து உயிருடன் சிறைபிடித்து விட்டார். பின் மன்னர் பசேனதி எண்ணினார்; "இம்மன்னனை துன்புறுத்தாத என்னை, இம்மன்னன் துன்புறுத்தினாரெனினும் அவர் என் மருமகனாய் உள்ளார். நான் இப்போது அவருமைய படை முழுவதையும், ரத, கஜ, த்ரோக, பதாதி படைகளை எல்லாம் கைப்பற்றிக் கொண்டு அவரை மட்டும் உயிரோடு விட்டுவிட்டால் என்ன?" அவ்வாறே அவர் செய்தார்.

7. ஷ்ராவஸ்தியில் தானப் பயணத்திலிருந்து மீண்டு கொண்டிருந்த தானமேற்போர் மேன்மைத்தங்கிய புத்தருக்கு இதைப் பற்றிய செய்தியைச கொணர்ந்தனர். இதன்பேரில் மேன்மைத் தங்கிய புத்தர் கூறினார்; "ஒரு மனிதன் மற்றொருவனைக் கெடுக்கலாம்-அது அவன் நோக்கத்திற்குப் பயனளிக்கும் வரை, ஆனால் அவன் மற்றவரால் கெடுக்கப்படும் போது, அவன், கெடுவதோடு, மறுபடியும் கெடுக்கலாம்."

8. "தீமையின் கனி பழுக்காதவரை அறிவில 'இதுதான் நேரம், இதுதான் வாய்யப்பு' என்று மகிழ்கிறான். ஆனால் செயல் விளைவைத் தாங்குகையில் அவன் துன்புறுகிறான்."

9. ஒரு கொலைஞன் பதிலுக்கு தன்னைக் கொல்பவனைப் பெறுகிறான். போரில் வெல்பவன் தன்னை வெல்லும் ஒருவனைப் பெறுகிறான். ஏசுபவன் தன்னை ஏசும் மற்றொருவனை அடைகிறான்.

10. "இவ்வாறாக செய்கையின் பரிணாமத்தால் தீங்கிழைப்பவன் பதிலுக்குத் தீங்கிழைக்கப்படுகிறான்."

### 5. அமைதியை வென்ற வெற்றியாளனின் கடமைகள்.

1. போரில் அமைதியை வெல்லுகையில் வெற்றியாளன் தோற்றவனை அடிமைப்படுத்தவில்லையாயினும், மேலும் இழிவு படுத்தவேனும் உரிமைக் கொள்கிறான். புத்தர் இவ்விஷயத்தில் முற்றிலும் வேறான பார்வையுடையவராய் இருந்தார். அவருடைய பார்வையில், அமைதிக்கு ஏதேனும் அர்த்தமிருக்குமானால் வெற்றியாளன் தோற்றவனுக்கு தொண்டு செய்யவே அவன் தன் வெற்றியைப் பயன்படுத்த வேண்டும் என்பதே அது. இவ்விஷயத்தைப் பற்றி பிக்குகளுக்கு அவர் உரைத்தது இதுதான்.

2. "அமைதி வெல்லப்பட்டதும் போரில் வென்றவன் தன்னை ஆற்றலுடையவனாய் நன்னெறியாளனாய், நல்லுரையானனாய், நல்லெண்ணமுடையவனாய், கொடுங்கோன்மை அற்றவனாய், எளியவனாய், நன்றி உணர்வுள்ள விருந்தினனாய், ஒழுங்கு நெறிப்பட்ட புலனுணர்வு, விரைந்து செயல்படும் ஆற்றல், குறையற்ற தன்மை, ஆதிக்க மனமற்ற தன்மை ஆகியவை உடையவனாய், தன்னை அவன் நிரூபித்துக் கொள்ளவேண்டும். இழிவான, தாழ்வான, கொடிய, பழிவாங்கும் செயல்களுக்கு எப்போதும் அவன் ஆட்பட்டுவிடக் கூடாது."

3. "அனைத்து உயிர்களும் நலத்திலும் அமைதியிலும் நிறைந்தனவாய் அனைத்தும் எப்போதும் சாந்தமுமையனவாய், எளிய உயிர்களோ, வலிய உயிர்களோ, அனைத்தும், சிறிய உயிர்களோ, வலிய உயிர்களோ, அனைத்தும், கண்ணுக்குப் புலப்படா உயிர்களோ, அருகிலோ தூரத்திலோ கண்ணுக்குப் புலப்படத்தக்கனவாய் வாழும் உயிர்களோ, பிறந்தனவோ, பிறக்க இருக்கனிறனவோ-அனைத்து உயிர்களும் அமைதியில் இன்புறட்டும்!"

4. "யாரும் எங்கும் யாரிடமும் இளித்தும் யாரையும் இழித்தும் வாழாதிரப்பார்களாக, யாரும் யாருக்கும் சினத்தினாலோ வெறுப்பினாலோ துன்பம் இழைக்காதிருப்பார்களாக."

5. "தன்னுயிரைத் தந்தும் ஒரு தாய் தன் சொந்த ஒரே குழந்தையை தாக்குதலினின்று காக்க முயல்வது போல், வாழும் உயிர்கள் அனைத்தையும் தழுவிய எண்ணங்கள் உமதாகட்டும்; உலகனைத்தையும் தழுவும் வண்ணம் உங்கள் அன்பு உயர்வுற்றதாய், ஆழமானதாய் அகலமானதாய், இடையறாததாய், வெறுப்பால் கறை படியாததாய், பகைமையை விளைவிக்காத தாய்த் திகழட்டும்."

6. "எனவே நீங்கள் நிற்கையிலும் நடக்கையிலும் இருக்கையிலும், படுக்கையிலும் உங்கள் ஆற்றல்கள் அனைத்தினோடும் உங்களுக்குள் ஆழமாய் சிந்தியுங்கள்; நனிமிகச் சிறந்த நன்னிலை."

சங்கம்

1. சங்கமும் அதன் அமைப்பும்

1. உயர்வெய்திய புத்தரைப் பின்பற்றியவர்கள் இருவகையாகப் பிரிக்கப்பட்டனர். பிக்குகள் மற்றும் இல்லறத்தாராய் இருந்து அவரைப் பின்பற்றியவர்கள் உபாசகர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

2. பிக்குகள் ஒரு சங்கமாக அமைக்கப்பட்டனர். உபாசகர்கள் அவ்வாறன்று.

3. பவுத்த பிக்கு முதலில் ஒரு பரிவ்ராஜகர்கள்,இந்த பரிவ்ராஜக நிறுவனம் பவுத்த பிக்கு அமைப்பைவிட பழமையானதாகும்.

4. பழைய பரிவ்ராஜகர்கள் குடும்ப வாழ்வைத் துறந்தவர்களாகவும் வெறுமனே சுற்றிவரும் கூட்டத்தாராகவும் இருந்து வந்தனர்.

5. வெவ்வேறு போதகர்கள் தத்துவ ஞானிகள் ஆகியோரோடு தொடர்பு கொண்டு, அவர்தம் பேருரைகளைச் செவிமடுத்தும் அறவியல், தத்துவம், இயற்கை, ஆன்மீகம் போன்றவற்றில் விவாதம் மேற்கொண்டும், இவற்றில் வழி உண்மையை உறுதிப்படுத்திக் கொள்ளும் நோக்கத்தில் அவர்கள் அலைபவர்களாய் இருந்தனர்.

6. பரிவ்ராஜகர்களில் சில பழைய வகையினர் மறறொரு போதகரைக் காணும் வரை ஒரு போதகரிடம் வாழ்ந்து வந்தனர். மற்றவர்கள் குருவாக எவரையும் ஏற்காமல் தனியே வாழ்ந்தனர்.

7. இப்பழைய வகையான பரிவ்வராஜகர்களில் பெண் பரிவு ராஜகர்களும் இருந்தனர். பெண் பரிவ்ராஜகர்கள் சில சமயம் ஆண் பரிவ்ராஜகர்களோடு வாழ்ந்தனர்-சிலசமயம் அவர்கள் தங்களுக்குத் தாங்களே தனியாக வாழ்ந்தனர்.

8. இந்தப் பழையவகை பரிவ்ராஜகர்கள் சங்கம் உடையவராய் இல்லை-ஒழுக்கநெறி விதிகள் உடையர்களாய் இல்லை-முயன்று அடையத்தக்க இலக்கேதும் உடையவர்களாய் இல்லை.

9. முதன்முறையாக, உயர்வெய்திய புத்தரே தம்மைப் பின்பற்றியவர்களைச் சங்கமாகவோ அல்லது சோதரக் குழுவாகவோ அமைத்து, அவர்களுக்கு ஒழுக்க நெறி விதிகளை அளித்து அவர்கள் தொடரத்தக்கதும் அடையத்தக்கதுமான இலக்கொன்றை அவர் தம்முன் நிலை நிறுத்தியவராவார்.

## 2. சங்கத்திற்குள் சேர்க்கை

1. சங்கம் அனைவர்க்கும் பொதுவானது.

2. அங்கு சாதி அடிப்படையில் தடையேதுமில்லை.

3. அங்கு பால் அடிப்படையில் தடையேதுமில்லை.

4. அங்கு அந்தஸ்து அடிப்படையில் தடையேதுமில்லை.

5. சங்கத்தில் சாதிக்கு இடமே இல்லை. அடிப்படையில் தடையேதுமில்லை.

6. சங்கத்தில் சமூக அந்தஸ்திற்கு இடமே இல்லை.

7. சங்கத்திற்குள்ளே அனைவரும் சமமானவரே.

8. சங்கத்திற்குள் உயர்நிலைப் படிமுறை ஒழுங்குபடுத்தப்படுவது சிறப்பினாலன்றி பிறப்பினாலன்று.

9. உயர்வெய்திய புத்தர் உரைத்தவாறு, சங்கம் ஒரு சமுத்திரம்-பிக்குள் அந்தச் சமுத்திரத்திற்குள் சங்கமிக்கும் நதிகளைப் போன்றவர்கள்.

10. நதிக்குத் தனிப் பெயருண்டு-மற்றும் தனித்தன்மையுண்டு.

11. ஆனால் கடலுக்குள் புகுந்ததுமே நதி தன் தனிப்யெரை இழக்கிறது-தனித்தன்மையை இழக்கிறது.

12. அது பிறவற்றோடு ஒன்றாகி விடுகிறது.

13. சங்கத்திலும் இதே நிலைதான் ஒரு பிக்கு சங்கத்திற்குள் இணைந்தவுடனே அவர் மற்றவர்களோடு ஒன்றிப் போகிறார்-சமுத்திரத்தில் சங்கமித்துவிடும் நதிநீர்போல.

14. அவர் தன் சாதியை இழந்து விடுகிறார். அவர் தன் அந்தஸ்தை இழந்து விடுகிறார் என்றுரைத்தார் புத்தர்.

15. சங்கத்திற்குள் காணப்பட்ட ஒரே ஒரு வேறுபாடு பாலின வேறுபாடுதான், பிக்கு சங்கம் பிக்குனி சங்கத்திலிருந்து அமைப்பளவில் வேறாய் இருந்தது.

16. சங்கத்தில் இணைந்தவர்கள் இருவகையாய்ப் பிரிக்கப்பட்டனர். சிராமணர்கள் மற்றும் பிக்குகள்.

17. இருபது வயதிற்குக் கீழான எவரும் ஒரு ஷ்ராமணேர் ஆகலாம்.

18. திரிசரணங்களை எடுத்துக் கொள்வதன் மூலமும், பத்து போதனைகளை ஏற்றுக் கொள்வதன் மூலமும் ஒரு சிறுவன் சிராமணர் ஆகிறார்.

19. "நான் புத்தரைப் பின்பற்றுகிறேன்; நான் தம்மத்தைப் பின்பற்றுகிறேன்; மற்றும் நான் சங்கத்தைப் பின்பற்றுகிறேன்" இவைகளே திரிசரணங்கள்.

20. நான் கொலைபுரிவதில் இருந்தும் தவிர்த்திருப்பேன், நான் திருடமாட்டேன், நான் பிரம்மச்சரியத்தைப் பின்பற்றுவேன், நான் உண்மையல்லாதனவற்றை உரைக்க மாட்டேன், நான் மது அருந்துதலில் இருந்தும் தவிர்த்திருப்பேன்.

21. நான் தகாத நேரத்தில் உணவருந்துதலில் இருந்தும் தவிர்த்திருப்பேன், நான் முறையற்ற ஒழுக்கமற்ற செயல்களில் இருந்தும் தவிர்த்திருப்பேன், நான் அணிமணிகளால் என்னை நானே அலங்கரித்துக் கொள்வதில் இருந்தும் தவிர்த்திருப்பேன், நான் ஆடம்பரங்களில் இருந்தும் தவிர்த்திருப்பேன், பொன், வெள்ளி போன்றவற்றில் ஆசை கொள்வதில் இருந்தும் நான் தவிர்ந்திருப்பேன்.

22. இவைகள் பத்து போதனைகள்.

23. ஒரு சிராமணர் எந்த நேரத்திலும் சங்கத்தை விட்டு வெளியேறி இல்லறத்தாராகலாம். ஒரு சிராமணர் ஒரு பிக்குவிடம் தொடர்புற்று அந்தப் பிக்குவுக்கு தொண்டாற்றுதில் தன் நேரத்தைச் செலவழிப்பவராய் இருப்பார். அவர் பரிவ்ராஜம் எடுத்துக் கொண்டவரல்ல.

24. ஒரு பிக்குவின் நிலை இரு படிநிலைகளில் அடையப்படவேண்டும், முதற்படிநிலை பரிவ்ராஜம் என்று அழைக்கப்படுகிறது-இரண்டாவது படிநிலை உபசம்பதா என்று அழைக்கப்படுகிறது. உபசம்பதாத்திற்குப் பின்னரே அவர் பிக்கு ஆகிறார்.

25. முழுமையாய்ப் பிக்கு ஆகிற நோக்கத்தோடு பரிவ்ராஜம் ஏற்க விழையும் ஒருவர் உபாத்தியாயராய் இயங்க உரிமையுள்ள ஒரு பிக்குவை நாட வேண்டும். ஒரு பிக்கு, தான் பிக்கு ஆனபின் பத்து ஆண்டுகள் கழிந்த பின்னர் மட்டுமே உபாத்தியாயர் ஆக முடியும்.

26. உபாத்தியாயரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அத்தகைய சீடர் ஒருவர் பரிவ்ராஜகர் என்றழைக்கப்படுகிறார்-அவர் அந்த உபாத்தியாயரிடம் கற்பவராகவும் அவருக்குத் தொண்டாற்றுபவராகவும் இருக்க வேண்டும்.

27. கற்கும் பருவம் முடிந்ததும் அவருடைய உபாத்தியாயர் அவர்தம் மாணாக்கரின் பெயரை அதற்கென பிரத்தியேகமாக உபசம்பதா நோக்கத்துடன் கூட்டப்பட்ட சங்கத்தின் கூட்டத்தில் அவருடைய பெயரை முன்மொழிய வேண்டும்-அந்த மாணவர் சங்கத்தாரிடம் உபசம்பதா வேண்டுதல் வேண்டும்.

28. பிக்கு ஆக்கப்படுவதற்கு அவர் தக்கவரே, தகுதியான மனிதரே என சங்கம் திருப்தியுற வேண்டும். இநத நோக்கிற்காக மாணவர் விடையளிக்க வேண்டிய சில வினாத்தொகுதிகள் உண்டு.

29. உபசம்பதாத்திற்கான அனுமதியை சங்கம் வழங்கிய பிறகு மட்டுமே 'உபசம்பதா' அளிக்கப்பட்டு அம்மாணாக்கர் 'பிக்கு' ஆகிறார்.

30. பிக்குணி சங்கத்தில் அனுமதிக்கான விதிமுறைகளும் ஏறக்குறைய பிக்கு சங்கத்தின் அனுமதிக்கான விதிமுறைகளைப் போன்றவையே ஆகும்.

## 3. பிக்குவும் அவருடைய உறுதிப்பாடுகளும்.

1. ஓர் இல்லறத்தார் அல்லது ஒரு சிராமணர் போதனைகளை ஏற்கிறார். அவற்றைப் பின்பற்றுவது அவர் கடமையாகும்.

2. ஒரு பிக்கு போதனைகளை ஏற்பதற்கும் மேலாய் அவற்றை அவர் மீறக்கூடாது உறுதிப்பாடாகவும் ஏற்க வேண்டும். அவர் அவற்றை மீறுவாராயின் அவர் தண்டனைக்குரியவராகிறார்.

3. ஒரு பிக்கு பிரம்மச்சாரியாய் தொடர்ந்து இருக்க உறுதி மேற்கொள்கிறார்.

4. ஒரு பிக்கு திருட்டுச் செயல் புரியாதிருக்க உறுதி மேற்கொள்கிறார்.

5. ஒரு பிக்கு தற்பெருமை கொள்ளாதிருக்க உறுதிமேற்கொள்கிறார்.

6. ஒரு பிக்கு கொல்லாதிருக்கவும், உயிர் போக்காதிருகவும் உறுதி மேற்கொள்கிறார்.

7. ஒரு பிக்கு விதிமுறைகள் அனுமதிப்பவற்றைத் தவிர வேறெவற்றையும் சொந்தமாக்கிக் கொள்ளாதிருக்க உறுதி மேற்கொள்கிறார்.

8. எந்த பிக்குவும் கீழ்க் கண்ட எட்டு பொருட்களுக்கு மேல் எதையும் உடையவராய் இருக்கலாகாது.

1. தன் உடலை மறைத்துக் கொள்ள மூன்று அடைகள்.

i. அன்தர்வாஸக என்றழைக்கப்படும் கீழாடை.

ii. உத்தரசங்க் என்றழைக்கபடும் மேலாடை.

iiiகுளிரைத் தவிர்க்க போர்த்திக் கொள்ளும் சங்காத்தி என்றழைக்கப்படும் ஆடை.

2. கோவணத்திற்கான ஓர் அரைக்கச்சை.
3. ஒரு பிட்சா பாத்திரம்.
4. ஒரு மழிக்கும் கத்தி.
5. ஓர் ஊசி.
6. ஒரு தண்ணீர் வடிப்பான்.

9. ஒரு பிக்கு எளிமைக்கான உறுதி மேற்கொள்கிறார். அவர் தம் உணவிற்காக தானம் கோர வேண்டும். அவர் தானத்தைக் கொண்டே வாழவேண்டும். அவர் ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவை உண்டே உயிர் வாழவேண்டும். சங்கத்திற்கான விஹார் கட்டப்படாத இடத்தில் அவர் ஒரு மரத்தில் கீழயே வசிக்க வேண்டும்.

10. ஒரு பிக்கு கீழப்படிதலுக்கான உறுதியை மேற்கொள்வதில்லை. வெளித்தோற்றமான மரியாதையோ உபசரிப்போ தம் மேல்நிலையாரிடம் ஒரு சாதாரண மனிதர் காட்டவேண்டுமென எதிர்பர்க்கப்படும். ஒரு போதகர் என்ற நிலையில் ஒரு பிக்குவின் விடுதலைத் தீர்வும் பயன்பாடும் அவர்தம் சொந்தபண்பாட்டைப் பொறுத்ததேயாகும். அவர் தன் மேல்நிலையாருக்குக் கீழ்ப்படிய வேண்டும். அவருடைய மேல்நிலையார் இயற்கையை மீறிய ஞானம் எதையுமோ முற்றறிவையோ பெற்றவரன்று, பிக்கு ஒருவர் நிலைநிற்றலோ வீழ்ச்சியுறுதலோ தமக்குத் தாமே புரிந்து கொள்வதே ஆகும். அவ்வளவிற்கு அவர் சிந்தனைச் சுதந்திரம் உடையவராய் இருத்தல் வேண்டும்.

11. ஒரு பிக்குவால் ஏற்கப்பட்ட எந்தவொரு உறுதிப்பாட்டின் மீறலும் 'பாராஜிகா' குற்றத்தில் முடிகிறது. பாராஜிகாத்திற்கான தண்டனை, சங்கத்திலிருந்து வெளியேற்றப்படுதலே ஆகும்.

4. பிக்குவும் சமயத்தொடர்பான குற்றங்களும்,

1. எடுத்துக்கொண்ட உறுதிப்பாடுகளை எந்த பிக்குவேனும் மீறுவது தம்மத்திற்கெதிரான குற்றமாகும்.

2. இநதக் குற்றங்களுக்கு மேலாக அவர் ஆட்படக்கூடிய குற்றங்கள் வேறு சிலவும் உள்ளன, அவைகள் சங்காதிகோ-சமயத்தொடர்பான குற்றங்கள் என்றழைக்கப்படுகின்றன.

3. வினய பிடகத்தில் உள்ளடக்கப்பட்டுள்ள அத்தகைய குற்றங்களின் எண்ணிக்கை பதின்மூன்றாகும்.

4. அவை பாராஜிகாத்தோடு உடன் வைத்தெண்ணப்படுகிறது.

5. பிக்குவும் கட்டுப்பாடுகளும்.

1. ஒரு பிக்கு குற்றமற்றவராய் இயங்குவதோடு, அவர் சில குறிப்பிட்ட கட்டுப்பாடுகளையும் மேற்கொண்டு ஒழுக வேண்டும்-பிறரைப் போல் கட்டுப்பாடற்று இருக்க இயலாது.

2. அத்தகைய கட்டுப்பாடுகளில் ஒரு வகை நிஸ்ஸக்கிய-பாசித்திய என்றழைக்கபடுகிறது. அது பிக்குவால் ஏற்றொழுகப்படவேண்டிய 26 கட்டுப்பாடுகளை உடையதாயுள்ளது.

3. அவைகள் உடைகள், கம்பளிப்பாய்கள், பிட்சா-பாத்திரம் மற்றும் மருத்துவத் தேவைகள் ஆகியவற்றைத் தானமாய் ஏற்பதோடு தொடர்புடையவை.

4. அவைகள் பொன், வெள்ளி ஆகியவற்றை ஏற்பதோடும் தொடர்புடையவை, சங்கத்திற்கென அளிக்கப்பட்ட சொத்துக்களைத் தமக்கு ஒரு துறவி சொந்தமாக்கிக் கொள்ளுதல், வாங்குதல் மற்றும் விற்றல் ஆகியவற்றில் ஈடுபடுதல்.

5. இந்தக் கட்டுப்பாடுகளை மீறுவதற்கான தண்டனை அவற்றைத் திரும்பப்பெறுதல் (திஸ்ஸக்கிய) மற்றும் தவறுக்காக வருத்தத்தை வெளிப்படுத்துதல் (பாசித்திய) ஆகியவையாகும்.

6. இந்தக் கட்டுப்பாடுகளுக்கு மேலாக ஒரு பிக்கு அனுசரிக்க வேண்டி இதர கட்டுப்பாடுகளும் உண்டு. அவைகள் பாசித்திய என்றழைக்கப்படுகின்றன. அவைகள் எண்ணிக்கையில் தொண்ணூற்றியிரண்டாகும்.

6. பிக்குவும் நன்னடத்தை விதிமுறைகளும்.

1. ஒரு பிக்கு மிக நல்ல நடத்தையுள்ளவராய் இருத்தல் வேண்டும், அவர் தம் நடத்தையின் வழிமுறைகளிலும், நடையுடை பாவனைகளிலும் முன்மாதிரி மனிதராகத் திகழ்ந்தாக வேண்டும்.

2. இந்த நோக்கத்தை நிறைவுறச் செய்ய உயர்வெய்திய புத்தர் நன்னடத்தை விதிமுறைகள் பலவற்றை வகுத்தளித்துள்ளார்.

3. இந்த நன்னடத்தை விதிமுறைகள் சேகிய தம்மம் என வழங்கப்படுகின்றன. அவைகள் எண்ணிக்கையில் எழுபத்தைந்தாகும்.

7. பிக்குவும் குற்றங்களின் விசாரணையும்.

1. இந்தச் செய்யத்தக்கன, செய்யத்தகாதன பற்றிய விதிமுறைகள் வெறும் சம்பிரதாயமானவை அல்ல. அவைகள் சாராம்சத்தில் சட்டபூர்வமானவை-நிச்சயமான குற்றச்சாட்டு, விசாரணை, தண்டனை ஆகியவற்றை உள்ளடக்கியவை.

2. எந்த பிக்குவும் முறையாக அமைக்கப்பட்ட சங்க நீதிமன்றத்தில் விசாரணையின்றி தண்டிக்கப்படமாட்டார்.

3. குற்றம் நடைபெற்ற இடத்திற்கருகிலுள்ள பிக்குகளின் வசிப்பிடத்தில் நீதிமன்றம் அமைக்கப்படவேண்டும்.

4. தகுதிவாய்ந்த பிக்குகளால் கூடி அமைக்கப்படாத நீதிமன்றத்தில் விசாரணை இடம்பெற இயலாது.

5. ஒரு நிச்சயமான குற்றச்சாட்டு இல்லையெனில் எந்த விசாரணையும் சட்டபூர்வமாகாது.

6. குற்றஞ்சாட்டப்பட்டவரின் முன்னிலையில் விசாரணை நடைபெறாவிடில் அந்த விசாரணை சட்டபூர்வமானதாகாது.

7. குற்றஞ்சாட்டப்பட்டவர் தம்மைத் தற்காத்துக் கொள்ளம் வகையில் வாதிக்க முழு வாய்ப்பு தரப்படாவிடில் அந்த விசாரணை சட்டபூர்வமானதாகாது.

8. குற்றவாளியென நிரூப்பிக்கப்பட்ட பிக்குவுக்குக் கீழ்க்கண்ட தண்டனைகள் வழங்கப்படக்கூடும்.

iதர்ஜனீய கர்மம் (எச்சரித்து விடுவித்தல்)
iiநியஸ்ஸ கர்மம் (அறிவு திரிந்தவர் என அறிவித்தல்)
iiiப்ரவ்ராஜ்னீய கர்மம் (சங்கத்திலிருந்து வெளியேற்றப் படுதல்)
ivஉத்ஸ்கெப்ணீய கர்மம் (ஒதுக்கிவைத்தல்)
vபரிவாஸ கர்மம் (விஹாரிலிருந்து வெளியேற்றப்படுதல்)

9. வெளியேற்றப்படுதல் என்பது அப்பான கர்மத்தால் தொடரப்படும். அப்பான கர்மம் என்பது நீக்கப்பட்ட உறுப்பினரை மீண்டும் உறுப்பினர் ஆக்கப்படுதல் ஆகும். இச்செயல் தகுந்த பரிவாஸ கர்ம நடப்பினால் சங்கம் திருப்தியுற்று மன்னிப்பு வழங்குவதைத் தொடர்ந்து நடைபெறுவதாகும்.

## 8. பிக்குவும் குறை ஏற்பும்

1. பிக்குகளை அமைப்பின் கீழ்க் கொண்டுவர உயர்வெய்திய புத்தர் உருவாக்கிய மூலமான முழுமையான குறைஏற்பு அமைப்பு உபோசத் என்றழைக்கப்படும்.

2. உயர்வெய்திய புத்தர், குற்றங்களுக்கென விதித்தவற்றை நடைமுறைபடுத்துதல் சாத்தியமானவை என்று அவர் உணர்ந்திருந்தார். ஆனால் குற்றங்களல்லாத சில குறிப்பிட்ட கட்டுப்பாடுகளையும் அவர் விதித்திருந்தார். நற்குண நலனை உருவாக்குதற்கும் நடைமுறைப்படுத்துதற்கும் ஐக்கியத் தொடர்புள்ளனவாக இக்கட்டுப்பாடுகள் உள்ளன என்று அவர் கூறினார். எனவே அவை அவ்வளவிற்கு நடைமுறைப்படுத்தப்படுவது அத்தியாவதியமாகும் என்றார்.

3. ஆனால் அவற்றைக் கட்டாய நடைமுறையாக்கப் பயன்மிக்க வழியேதும் புத்தருக்குப் புலப்படவில்லை. எனவே அவர் பிக்குவின் மன உணர்வை ஒழுங்கமைக்கவும், அது ஒரு பிக்கு தவறான அல்லது குறையுடைய நடத்தை மேற்கொள்வதை தடுக்கும் காவலனாக இயங்கவும், ஒரு வழிமுறையாக, வெளிப்படையாக, தவறை ஒப்புக்கொள்ளுதல் என்பதை வகுத்தார் புத்தர்.

4. குறைஏற்றல் கட்டுப்பாடுகளை மீறுதல் (பதிமொக்க என்றழைக்கப்பட்டவை) என்பவற்றோடு எல்லையிடப்பட்டதாகும்.

5. ஒருகுறையேற்றலுக்காக ஒரு குறிப்பிட்ட பகுதியில் உள்ள பிக்குகளின் கூட்டம் நடைபெற வேண்டும், பதினான்கு நாட்களுக்குள் அதுபோன்ற மூன்று கூட்டங்கள் நடைபெறவேண்டும்-ஒவ்வொன்றும் சதுர்தசி, பஞ்சதசி, அஷ்டமி ஆகிய நாட்களில். அந்நாட்களில் பிக்குள் உண்ணா நோன்பிருப்பர். எனவேதான் அந்நாள் உபோசத் என்றும் அழைக்கப்படுகிறது.

6. அக்கூட்டத்தில் ஒரு பிக்கு பதிமொக்கத்தில் உள்ள கட்டப்பாட்டுவிதிகள் ஒவ்வொன்றையும் வரிசையாக வாசிப்பார். ஒரு கட்டுப்பாட்டு விதியை வாசித்தபின் கூடியுள்ள பிக்குகளிடம் அவர் கூறுவார். "உங்களின் யாரொருவரும் இவ்விதியை மீறவில்லையென நான் கருதிகொள்கிறேன்-அதனால்தான் நீங்கள் மவுனமாயிருக்கிறீர்கள்" இதை அவர் மும்முறை கூறுகிறார், பிறகு அடுத்த கட்டுப்பாட்டு விதியை எடுத்துக் கொள்கிறார்.

7. இதே போன்ற குறைஏற்புக் கூட்டங்கள் பிக்குணி சங்கங்களிலும் நடைபெற வேண்டியுள்ளது.

8. ஒரு குறையேற்பைத் தொடர்ந்து குற்றம் சாட்டும் விசாரணையும் நடைபெறும்.

9. குறையேற்க மறுப்பின், கட்டுப்பாட்டு விதி மீறலை, கண் கண்ட சாட்சியாக உள்ள ஒரு பிக்கு அறிவிப்பார். பின் குற்றச்சாட்டும் விசாரணையும் தொடரும்.

## பிக்கு-அவர் பற்றிய புத்தரின் கருத்தாக்கம்

1. பிக்கு எவ்வாறிருக்க வேண்டுமென்பது பற்றிய புத்தரின் கருத்தாக்கம்.

1. புத்தர் பிக்குகளிடம், பிக்குகள் என்ற நிலையில், தாநம் எதிர்பார்ப்பவை யாதென அவரே பிக்குகளுக்குரைத்தார். அவர் கூறியன இவையே:

2. "தீயவற்றினின்று தம்மைத் தாமே தூய்மைப் படுத்திக் கொள்ளாதவரும், புலனடக்கத்தையும் உண்மையையும் புறக்கணித்தவரும், துவராடை அணிந்து கொள்ள விழைவாராயின் துவராடைக்கு அவர் அருகதையற்றவரேயாவார்."

3. "ஆனால் எவரொருவர் தீயவற்றினின்று தம்மைத்தாமே தூய்மைப் படுத்திக் கொண்டவரோ, எவரொருவர் நல்லொழுக்க நெறியினில் நிலைப்பட்டவரோ, புலனடக்கத்தையும் உண்மையையும் பொருளாய் உற்றவரோ, உண்மையில் அவரே துவராடை அணியத் தக்கவராவார்."

4. "பிறரிடம் தானம் ஏற்பதொன்றாலேயே ஒரு மனிதன் துறவோன் (பிக்கு) ஆவதில்லை; எவரொருவர் ஒழுக்க விதிகள் அனைத்தையும் ஏற்றொழுகுகிறாரோ அவரே பிக்கு ஆவார். வெறும் தானமேற்போர் அன்று."

5. "எவரொருவர் தீயவற்றிற்கு அப்பாற்பட்டவரோ, கற்பொழுக்கமுற்றவரோ, உலகில் விழிப்புடன் இயங்குபவரோ, உண்மையில் அவரே பிக்கு என அழைக்கப்படுவதற்குரியவர்."

6. "ஒழுக்கங்கள் உறுதியேற்றல், அதிகம் கற்றல், தியானத்தில் வீழ்தல், தனித்துறங்கல் ஆகியவற்றால் மட்டுமே, உலகோர் அறிந்திரா உன்னத இன்பத்தை நான் அடைந்துவிடவில்லை. ஓ! பிக்குகளே! எவரொருவர் அவா அறுத்தவரோ அவரே நம்பிக்கையுற்றவராவார்."

7. "யாரொரு பிக்கு நாகாக்கிறாரோ, யாரொருவர் அறிவுடைமையோடும், அமைதியோடும் உரையாடுபவரோ, தம்ம நெறியின் பொருளைப் போதிப்பவரோ, அவர்தம் வாய்ச் சொல் இன்சொல்லாகும்."

8. "எவரொருவர் தம்மத்தில் முகிழ்பவரோ, தம்மத்தில் மகிழபவரோ, தம்மத்தில் ஆழந்து தோய்பவரோ, மீண்டும் மீண்டும் தம்மத்தை எண்ணுபவரோ, அத்தகு பிக்கு உண்மை தம்தமத்தினின்று வீழ்வதேயில்லை."

9. "அவர் தாம் பெற்றதை இகழவோ, பிறர்பால் அழுக்காறு கொள்ளவோ கூடாது; பிறர்பால் அழுக்காறு கொள்ளும் ஒரு துறவி எப்போதும் மன அமைதி உறுவதேயில்லை."

10. "யாரொரு பிக்கு, தாம் பெறுவது குறைவேயெனினும், பெற்றதை இகழ்வதில்லையோ அவரை உலகோர் ஏத்துவர்-அவர் வாழ்வு தூயதாய், அவர் சோம்பலற்றவராய் இருப்பதால்."

11. "எவரொருவர் தம்மை எந்தப் பெயரோடும் வடிவத்தோடும் நிகராக்கிக் கொள்வதில்லையோ, இழந்த எதற்கும் இன்னலுறு மாட்டாரோ, உண்மையில் அவரே பிக்குவென அழைக்கப்படுவதற்குரியவர்."

12. "கருணையோடு நடக்குமொரு பிக்கு, கொள்கையில் இன்பம் காண்பவர் நிச்சயம் நிப்பானம் எய்துவார்-இயல்பாயெழும் பற்றுக்களின் நீக்கத்தினின்றெழும் இன்பம்எய்துவார்."

13. “ஓ! பிக்குவே! இந்தப் படகைக் காலி செய்யுங்கள்! காலியாக்கப்பட்ட படகு, வேண்டுதல் வேண்டாமையென்னும் இரு தளைகளும் அறுந்து விரைந்தோடும், தாங்கள் நிப்பானம் அடையலாம்.”

14. “ஐந்து தளைகளை அறுத்தெறியுங்கள்-ஐந்தை நீத்து விடுங்கள்-ஐந்துக்கும் மேலெழுங்கள். இந்த ஐந்து தளைகளிலிருந்து விடுபட்ட பிக்கு 'ஒகத்தீன்னா' - வெள்ளத்தினின்று காக்கப்பட்டவர் என்று அழைக்கப்படுகிறார்.”

15. “ஓ! பிக்குகளே! சிந்தனையில் ஆழ்ந்திருங்கள் -விழிப்பற்றிராதீர்கள்! மகிழ்வூட்டுவனவற்றில் மனம் செலுத்தாதீர்கள்”.

16. “அறிவுடைமையின்றேல் ஆழ்சிந்தனையில்லை. ஆழ்சிந்தனையினறேல் அறிவுடைமை இல்லை, எவரொருவர் அறிவுடைமையும், ஆழ்சிந்தனையும் உடையவரோ அவர் நிப்பானத்திற்கு நெருக்கமாயிருக்கிறார்.”

17. “தன் வெறுமைக்குள் புகுந்துவிட்ட ஒரு பிக்கு, அவர் தம் மனம் சலனமற்றிருப்பின், சாதாரண மனித இன்பத்திற்கு மேலானவற்றை உணர்கிறார்-தம்மத்தை அவர் தெளிவுறக் காண்கையில்.”

16. “அறிவுடைமையின்றேல் ஆழ்சிந்தனியில்லை. ஆழ்சிந்தனையின்றேல் அறிவுடைமை இல்லை, எவரொருவர் அறிவுடைமையும், ஆழ்சிந்தனையும் உடையவரோ அவர் நிப்பானத்திற்கு நெருக்கமாயிருக்கிறார்.”

17. “தன் வெறுமைக்குள் புகுந்துவிட்ட ஒரு பிக்கு, அவர்தம்மனம் சலனமற்றிருப்பின், சாதாரண மனித இன்பத்திற்கு மேலானவற்றை உணர்கிறார்-தம்மத்தை அவர் தெளிவுறக் காண்கையில்.”

18. “ஒரு அறிவுறு பிக்குவிற்கு ஈண்டுஇது தொடக்கமாகும், புலன்களின் மேல் கவனமாயிருத்தல், திருப்பதியுறல், தம்மத்திற்குக் கட்டுப்படல், தூய வாழ்வுடையோராம் நல்லோரோடு நட்பைப் பேணுதல், சோம்பலற்றிருத்தல்.”

19. “அவர் தானத்தில் வாழ்பவராயிருக்க வேண்டும்-அவர்தம் கடமைகளை நிறைவேற்றுவதில் நிறைவுறுதல் வேண்டும். பின் மகழ்வின் முழுமையில் அவர் தம் துன்பத்தை முடிபுக்குக் கொண்டுவர முடியும்.”

20. “ஓ! பிக்குகளே! உங்களை உங்களாலேயே எழுப்புவீராக. தாங்கள் தங்களிடமே சரண்புகுவீராக, இவ்வாறாகத் தற்காப்புற்றும், கவனமுற்றும் உள்ள தாங்கள் இன்புற்று வாழ இயலும்.”

21. “ஏனெனில் தானே தனக்குத் தலைவன், தானே தனக்குச் சரண்; எனவே ஒரு வணிகன். உயர்ரகக் குதிரையை அடக்குவதுபோல், உங்களை நீங்களே அடக்கிக் கொள்ளுங்கள்.”

22. “தன் நேர்மையல் மகிழும் ஒரு பிக்கு (துறவோர்), சிந்தனைய்ற்றிருப்பதற்கு அஞ்சும் பிக்கு, தன் சிறியதும், பெரியதுமான தளைகளைச் சுட்டெரிக்கும் தீயென இயங்குவார்.”

23. “உள்நோக்குப் பரிசீலனை உடையவராய், சிந்தனையற்றிருப்பதற்கு அஞ்சுபவராய் உள்ள ஒரு பிக்கு, (தன் நிறைவுறு நிலையினின்று) வீழ்ச்சியுறார்-அவர் நிப்பானத்திற்கு நெருக்கமானவர்”.

24. “கவுதமரின் (புத்தரின்) சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் எண்ணங்கள் இரவும் பகலும் எஞ்ஞான்றும் புத்தரின் பாலே நிலைத்திருக்கும்.”

25. “கவுதமரின் சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் எண்ணங்கள் இரவும், பகலும் எஞ்ஞான்றும் சங்கத்தின் பாலே நிலைத்திருக்கும்.”

26. “கவுதமரின் சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் எண்ணங்கள் இரவும், பகலும் எஞ்ஞான்றும் கருணையின் பாலே நிலைத்திருக்கும்.”

27. “கவுதமரின் சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் எண்ணங்கள் இரவும் பகலும் எஞ்ஞான்றும் அவர்கள்தம் உடலின்பாலே நிலைத்திருக்கும்”

28. “கவுதமரின் சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் மனங்கள் இரவும் பகலும் எஞ்ஞான்றும் கருணையின் பாலே நிலைத்திருக்கும்.”

29. “கவுதமரின் சீடர்கள் எப்போதும் விழிப்புற்றிருப்பர்-அவர்தம் மனங்கள் இரவும் பகலும் எஞ்ஞான்றும் ஆழ்சிந்தனையின் பாலே நிலைத்திருக்கும்.”

30. “உலகை நீத்தல் கடினமானது (முற்றும் துறந்த முனியாய்) உலகின்பம் துய்த்தல் கடினமானது-விஹார் வாழ்வு கடினமானது-இல்லற வாழ்வு கடினமானது, தமக்கு இணையானவரோடு உறைதல் கடினமானது (அனைத்தையும் சமமாய்ப் பகிர்ந்துக் கொண்டு)-தூயராகத் துறவோரும் இன்னலுறுகிறார்.”

31. “நிறைவுறு நம்பிக்கையுடைய ஒரு மனிதன், ஒழுக்கமும் புகழும் உடையவராய் இருப்பின், தான் விரும்பும் யாண்டுச் செல்லினும் பெரிதும் போற்றி வரவேற்கப்படுவார்.”

2. பிக்குவும் முனிவரும்.

1. பிக்கு ஒரு முனிவரா? விடை எதிர்மறையாயுள்ளது.

2. நிக்ரோத் என்னும் துறவியுடனான கலந்துரையாடலில் உயர்வெய்திய புத்தர் தாமே இவ்வகையான எதிர்மறை விடையை அளித்துள்ளார்.

2. மேன்மை தங்கிய புத்தர் ஒரு முறை இராஜகிரகத்திற்கு அருகில், கழுகு மலையில், தங்கியிருந்தார். அப்போது, ஆங்கு துறவோர்க்கென ஒதுக்கப்பட்டிருந்த அரசி உதும்பரிகையின் சோலையில், துறவி நிக்ரோத், துறவோரின் பெரும் பரிவாராம் ஒன்றுடன் ஆங்கு வருகை புரிந்தார்.

4. அப்போது மேன்மைதங்கிய புத்தர் கழுகு மலையிலிருந்து இறங்கி, சமகதா ஆற்றங்கரையிலிருந்த மயிலுண்ணும் திடலுக்கு வந்துற்று, ஆங்கு திறந்தவெளியில் மேலும் கீழுமாய் உலவலானார். பின் அவர் அவவ்வாறு உலவுவதைக் கண்ணுற்றார். நிக்ரோத்-அதைக் கண்ட அவர் தம் துறவோர் பரிவாரத்தை அழைத்து உரைக்கலானார்: "அமைதியாய் இருங்கள் ஐயன் மீர்! சத்தமிடாதீர்! சாமண கவுதமர் ஈண்டுச் சமகதா ஆற்றங்கரையில் உள்ளார்." இவ்வாறு அவர் கூறியபோது துறவோர் அமைதியாயினர்.

5. அதன்பின் மேன்மைதங்கிய புத்தர் துறவியாம் நிக்ரோத்திடம் சென்றார். நிக்ரோத் அவரிடம் இவ்வாறுரைத்தார், "மேன்மைதங்கிய புத்தருக்கு நல்வரவு. மேன்மைதங்கிய புத்தருக்கு இவ்வாறு வந்துற்று நெடுநாட்களாகின்றன, ஈண்டு ஒரிருக்கையை ஏற்றுக் கொள்ளுதல் மேன்மைதங்கிய புத்தரை மகிழ்விக்கட்டும். இதோ ஈண்டு இருக்கை தயாராயுள்ளது."

6. மேன்மைதங்கிய புத்தர் தமக்கெனத் தயாராயிருந்த ஒரிருக்கையில் அமர்ந்தார். நிக்ரோத் அதனினும் தாழ்ந்ததோர் இருக்கையில் அவரருகே அமர்ந்தார்.

7. அதன்பின் நிக்ரோத் மேன்மைதங்கிய புத்தரிடம் உரைத்தார், "எங்கள் கூட்டத்திற்கு சாமண கவுதமர் வநதுற்றமையால், நாங்கள் அவரிடம் இவ்வினாவைக் கேட்க விழைகிறோம், ஐயன்

மீர்! மேன்மைதங்கிய புத்தர், தம் சீடர்களுக்குப் பயிற்றுவிப்பதும், மேன்மைதங்கிய புத்தரால் பயிற்றுவிக்கப்படும் அச்சீடர்கள் தம் நலத்தினை வென்றெடுக்கவும், தம்மைக் காப்பதானக் கொள்கைகளாய் ஏற்கவும், ஆதரிக்கவும், நல்லொழுக்க அடிப்படைக் கோட்பாடாய்க் கொள்ளவுமானதாய் உள்ள சமய போதனைகள் தான் யாவை?"

8. "நிக்ரோத்தே! பிறசமயக் கண்ணோட்டமுடையவர்க்கும், பிறசமயத்தைப் பின்தொடர்வோர்க்கும், பிற சமயச் சார்பாளர்க்கும், பயிற்சியோ போதனையோ இல்லாமல், நான் என் சீடர்க்கு அவர்கள் தம் நன்மைக்கும், பாதுகாப்புக்கும், நல்லொழுக்க அடிப்படைக்கும் உரியதாகப் போதிப்பதைப் புரிந்து கொள்வது கடினமானது."

9. ஆனாலும் நிக்ரோத்தே, தங்கள் சொந்தக் கோட்பாடுகள் பற்றிய-வாழ்வின் சாரமுறு கோட்பாடு பற்றிய-எக்கோட்பாட்டில் நிறைவு தஙகியுள்ளதோ-எக்கோட்பாட்டில் நிறைவின்மை தன்னலிவில் தள்ளிவிடுமோ அவற்றைப் பற்றிய வினாவை என்னிம் எழுப்புங்கள்.

10. அதன்பின் நிக்ரோத் மேன்மைதங்கிய புத்தரிடம் உரைக்கலானார், "ஐயன்மீர்! நாங்கள் தன்னை வருத்தும் சடங்குகளை மேற்கொள்கிறோம், அவை இன்றியமையாதவை எனக் கொள்கிறோம், அவைகளை நாங்கள் உறுதியாய்ப் பற்றிக் கொள்கிறோம். இவற்றின் நிறைவேற்றமோ, நிறைவேற்றமின்மையோ எதில் தங்கியுள்ளது?"

11. "நிக்ரோத்தே! ஒரு முனிவர் நிர்வாணமாய், சில உருப்படியற்ற பழக்கங்களுடையவராய், தம் கைகளை எச்சிற்படுத்துபவராய், எதிலும் மரியாதையற்றவராய், நின்று நிலைக்காதவராய், கொணரப்பட்ட, கூறப்பட்ட எதையும் ஏற்காதவராய்த் திரிவதாய் வைத்துக்கொள்வோம். சமையற்பானையிலிருந்து எடுக்கப்பட்ட எதையும், விட்டு வாயிலில் வைக்கப்பட்ட எதையும், உரலில் உள்ள எதையும், கழிகளுக்கிடையே உள்ள எதையும், திருகுக்கல்லிடையிலுள்ள எதையும் அவர் ஏற்பதில்லை. இருவர் கூடி உண்ணுகையில் அவர்களிடத்திருந்தும், பேறுகாலப் பெண்ணிடமிருந்தும், குழந்தைக்குப் பாலுட்டிப் பேணும் தாயிடமிருந்தும் ஒரு மனிதனோடு உடலுறவு கொண்ட பெண்ணிடமிருந்தும், பெறப்பட்ட உணவையோ, பஞசத்தில் சேகரிக்கப்பட்ட உணவையோ, ஒரு நாயுள்ள இடத்தினின்று பெறப்பட்ட உணவையோ, ஈக்கள் பறக்கும் இடத்தின் உணவையோ, அவர் ஏற்பதில்லை. மீனோ, கறியோ அவர் உண்பதில்லை. கடினமான பானங்களையோ, போதைப் பொருள்களையோ, கஞ்சியையோ அவர் அருந்துவதில்லை. அவர் ஓரில்லத்தாரன்று-ஒருவாய் உணவுக்காரருமன்று. அவர் ஈரில்லத்தாரன்று. இருவாய் உணவுக்காரருமன்று. அவர் ஏழில்லத்தாரன்று. ஏழுவாய் உணவுக்காரருமன்று. அவர்தானம் பெற்றோ ஒன்றோ, இரண்டோ, ஏழோ தன்னைப் பேணிக் கொள்பராயுள்ளார். அவர் ஒரு நாளைக்கொரு முறையோ, அல்லது இரு நாட்களுக்கொரு முறையோ, அல்லது ஏழு நாட்களுக்கொரு முறையோ மட்டுமே உணவருந்துகிறார். இவ்வாறாக அவர் விதிப்படி, தக்க இடைவெளியில் உணவருந்தும் வழக்கத்திற்குத்தம்மைப் பயிற்றிப் பழக்கப்படுத்திக் கொண்டவராய் ஒரு அரைமாத காலம் கூட இருப்பராய் உள்ளார். அவர் பானையிலிடப்பட்ட மூலிகைகளையோ, வரகு அரிசியையோ, நிவார விதைகளையோ, நெற்பதரையோ, மாவைவயோ, எண்ணெய்

வித்துக்களையோ, தோல் கழிவையோ, ஹதாவையோ, நெல் உமியையோ நெற்பதரையோ, மாவையோ, எண்ணெய் வித்துக்களையா, காட்டுக் கிழங்குகளையோ, காற்றில் உதிர்ந்தவற்றையோ மட்டுமே புசித்து வாழ்பவராயுள்ளார். அவர் கந்தலுடை உடுப்பவராய், கந்தலான கலப்புடை உடுப்பவராய், நல்லுடைகளை போர்வைகளை, திர்தியா-பட்டை உடைகளை நீக்கியவராய் உள்ளார். மான் தோல், அல்லது பின்னியவலை அல்லது குசப்புல்லுடை, அல்லது கம்பளியுடை அல்லது கசங்கிய உடை அல்லது மனிதமயிர் கொண்டு பின்னப்பட்ட போர்வை, அல்லது ஒரு குதிரை முடிகொண்டு பின்னப்பட்ட போர்வ, அல்லது ஆந்தையின் இறகுகள் கொண்டு செய்யப்பட்ட ஆடை ஆகியவற்றையே அணிகிறார். அவர் தம் தலைமுடி-தாடி ஆகியவற்றைத் தாமே பிடுங்கிமழித்துக் தலைமுடி-தாடி ஆகியவற்றைத் தாமே பிடுங்கிமழித்துக் கொள்பவராயுள்ளார்-இரண்டையும் பறிப்பதிலான பயிற்சியைப் பழகிக் கொண்டவராயுள்ளார், நின்றும், ஓடியும் தவித்தும் தாவியும் முன் படுக்கை மனிதனாய் வாழபவராயுள்ளார் தன் படுக்கையில் இரும்பு ஆணிகள் அல்லது முட்களைப் பரப்புபவராயுள்ளார், ஓர்புறமே ஒருக்களித்துப் படுப்பவராயுள்ளார், அழுக்குடையராய், வெட்டவெளி மனிதராய், கண்ட இடத்தில் அமர்பவராய், கண்டதையும் உண்பவராய், இவற்றை உண்பதைப் பயிற்றிக் கொண்டப் பழக்கமுடையவராய் குளிர்மிகு நீர் குடிப்பவராய் மனிதரில் மூனறாமவராய் உள்ளார்."

12. நிக்ரோத்தே! இதையெல்லதம் செய்தபின், உயர்வெய்திய புத்தர் தொடாந்நதார், "தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இவையாவும் இவ்வாறிருப்பின் தன்னை வருத்தும் இத்தவச்சடங்குகள் நிறைவேறினவாகும் அல்லவா?" "ஐயன்மீர்! உண்மையில் இவை இவ்வாறிருப்பின் தன்னை வருத்துமித் தவச் சடங்குகள் நிறைவேறினவேயாகும். "

13. "இப்போது, நிக்ரோத்தே! இத்தகு தன்னை வருத்துமித்தவச்சடங்குகள் பலவகைகளில் குற்றமுடையவை என உறுதி கூறுகிறேன்."

14. "ஐயன்மீர்! இவைகள் குற்றங்களை உள்ளடக்கியவை என எவ்வழியில் தாங்கள் உறுதிப்படுத்துகிறீர்கள்?"

15. "நிக்ரோத்தே! ஒரு முனிவர் இச்சடங்குமுறை ஒன்றை அனுசரிக்கையில், அம்முறையில், அவர் தன்னமைதியுறுவாராயின் அவர் நோக்கம் திருப்தியுற்றுவிடுகிறது. இப்போது இது அந்த முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

16. மேலும் நிக்ரோத்தே! ஒரு முனிவர் இத்தகு சடங்குமுறை ஒன்றை அனுசரிக்கையில், அவ்வாறான அனுசரிப்பில் தன்னை உயர்த்திக் கொண்டு பிறரைத்தாழ்த்துகிறார். இதுவும் முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது.

17. "மேலும் நிக்ரோத்தே! ஒரு முனிவர் இத்தகு சடங்குமுறை ஒன்றை அனுசரிக்கையில், அவ்வாறான அனுசரிப்பில், அவர் போதையுற்றவராய், சித்தபிரமையுடையவராய் பொறுப்பற்றவராய் வளர்பவர் ஆகிவிடுகிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

18. மேலும் நிக்ரோத்தே! ஒரு முனிவர் இத்தவச்சடங்கு முறையை அனுசரிக்கையில், அவ்வாறான அனுசரிப்பில், பேறு பாராட்டு, போற்றுதல் ஆகியவற்றைப் பெறுகிறார். இதனால் அவர் தன் நோக்கத்தில் திருப்தியுறுகிறார். இதுவும் ஒரு முனிவருக்கு ஓர் குற்றமாகிவிடுகிறது.

19. "மேலும் நிக்ரோத்தே! பரிசில், பாராட்டு, புகழ் ஆகியவற்றால் அவர் உயர்வுற்றவராகிப் பிறரைத் தாழ்த்தி விடுகிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

20. "மேலும் நிக்ரோத்தே! பரிசில், பாராட்டு புகழ் ஆகியற்றால் அவர் போதையுற்றவராய், சித்தபிரமையுடையவராய், பொறுப்பற்று வளர்பவராய் ஆகிவிடுகிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர்குற்றமாகிவிடுகிறது."

21. "மேலம் நிக்ரோத்தே! ஒரு முனிவர் இத்தவச்சடங்கு முறையினை அனுசரிக்கையில், அவ்வாறான அனுசரிப்பில், அவர் உணவுவகைகளை வேறுபடுத்தி அறியவும் செய்கிறார். "இது எனக்குத் தகும். இது எனக்குத் தகாது" எனக் கூறியப்படி பின்னதை வெளிப்படையாய் அவர் தள்ளிவிடுகிறர். முன்னதில் அவருக்குப் பேராதையும் பெருவிருப்பும் உண்டாகிறது-அதனுடன் ஒன்றிப் போகிறார்-அவற்றிலுள்ள ஆபத்தை உணராமல்-பாதுகாப்பற்றதென அதை உணராமல் அதை அவர் அனுபவிக்கிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

22. "மேலும் நிக்ரோத்தே! பேறும், புகழும், பாராட்டும் விரும்புகிற காரணத்தால் அவர் நினைக்கிறார். அரசர்கள் என்மீது கவனம் கொள்வர், அவ்வாறே அதிகாரிகளும்-அவ்வாறே பிரபுக்களு, பிராமணர்களும், இல்லறத்தாரும் தத்துவ வித்தகர்களும். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

23. "மேலும் நிக்ரோத்தே! சில துறவிகளிடமோ, பிராமணரிடமோ அதிருப்தி கொண்டு கூறுகிறார், அந்த மனிதர் அனைத்துமுடையவராய் வாழ்கிறார், கிழங்குகள், தண்டகள், கனிகள், பட்டைகள், சாரமற்றவை, விதைகள் என்று அனைத்தையும் புசித்து, அரைத்து, சுவைத்து வாழ்கிறார்-அப்படியும் அவரை புனிதமனிதரெனப் புகழ்கின்றனர்," இதுவும் ஒரு முனிவரிடம் குற்றமாகிவிடுகிறது.

24. "மேலும் நிக்ரோத்தே! ஒரு முனிவர் ஒருகுறிப்பிட்ட துறவியையோ, பிராமணரையோ பேறுபெறுபவராய், போற்றப்படுபவராய், பாராட்டப்படுபவராய், மற்றும் பரிசிலளித்து மக்களால் கவுரவிக்கப்படுபவராய் இருக்கக் காண்கிறார். இவற்றைக் கண்ட அவர் எண்ணுகிறார், மக்கள் வசதியுற்று வாழும் இந்த மனிதனிடம் கவனம் செலுத்துகிறார்கள், அவனை வணங்குகிறார்கள்-போற்றுகிறார்கள்-தானமளித்தக் கவுரவிக்கிறார்கள். முனிவனான எனக்கோ அவர்கள் போற்றுதலோ, வணக்கமோ, பாராட்டோ, பரிசிலோ ஒன்றும் அளிப்பதில்லை. இவ்வாறு அவர் மக்கள் மீது குறைகூறி முனகுபவராயும் பொறாமையுற்றவராயும் உள்ளார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகி விடுகிறது."

25. "மேலும் நிக்ரோத்தே! இந்த முனிவர் புலனாகாப் புதிர்களையும் பாதித்து விடுகிறார், இதை நீங்கள் ஒப்புகிறீர்களா என கேட்கப்படுகையில், ஒப்பாதபோது அவர் கூறுகிறார் ஆம் ஒப்புகிறேன், ஒப்பும்போது கூறுகிறார், இல்லை! நான் ஒப்பவில்லை. இவ்வாறாக மனமறிய அவர் பொய்யுரைக்கிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

26. "மேலும் நிக்ரோத்தே! இந்த முனிவர் தன் கட்டுப்பாட்டை மீறக்கூடியயவராயும், பகைமையைச் சுமப்பராயும் உள்ளார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

27. "மேலும் நிக்ரோத்தே! இந்த முனிவர் வஞ்சகராகவும் ஏமாற்றுக்காராராகவும் இருக்க ஏதுவாகிறது-அவர் பொறாமைக்காரராய்ப் பொருமிக் கொண்டிருக்கும் வரை, அவர் தந்திர முன்னளவராய், வஞசகமுள்ளவராய், கடின சிந்தையராய், வீணானவராய், தீய விருப்பங்களுக்குட்படுபவராய் அவற்றின் ஆளுகைக்குட்பட்டவராய் ஆகிவிடுகிறார். தவறான அபிப்ராயங்களுக்காட்பட்டவராய், போலிக் கொள்கைக்குட்பட்டவராய் அவர் ஆகிவிடுகிறார் தன் அனுபவங்களுக்கு அவர் தவறான அர்த்தங்கள் கூறுகிறார். பொறாமையுடையவராய் துறவுக்குத் தகாதவராய் ஆகிவிடுகிறார். இதுவும் ஒரு முனிவரிடம் ஓர் குற்றமாகிவிடுகிறது."

28. "நிக்ரோத்தே! இதுபற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இவைகள் தன்னை வருத்துமித்தவச்சடங்குகளின் குற்றங்களா இல்லையா?"

29. "ஐயன்மீர்! வெகுவாக இவைகள் தன்னை வருத்துமித் தவச்சடங்குகளின் குற்றங்களேயாகும். ஐயன்மீர்! ஒரு முனிவர் இந்த எல்லாக் குற்றங்களும் உடையவராயும், இவைகளுக்கு மேலான குற்றங்களும் உடையவராய் இருப்பது சாத்தியமே."

30. பிக்குகள் இத்தகைய குற்றங்களுக்காட்பட்டவர்கள் அன்று.

## 5. பிக்குவும் பிராமணரும்

1. பிக்குவும் பிராமணரும் ஒன்றுதானா? இந்த வினாவிற்கான விடையும் கூட எதிர்மறையானதே.

2. எந்த ஒரிடத்தில் இவ்விஷயத்தைப் பற்றிய விவாவதத்தில் மையமான கவனம் செலுத்தப்பட்டிருக்கவில்லை. அது பலவிடங்களிலும் பரவலாயுள்ளது. ஆனால் வேறுபாடு பற்றிய விவரங்கள் எளிதில் தொகுத்தறியப்படலாம்.

3. ஒரு பிராமணர் ஒரு புரோகிதராய் உள்ளார். அவருடைய முக்கிய பணி பிறப்ப, திருமணம், மற்றும் இறப்பு ஆகியவற்றுடன் தொடர்புடைய குறிப்பிட்ட சடங்குகளை நடத்திவைப்பதேயாகும்.

4. கடவுள் மற்றும் ஆன்மாவில் நம்பிக்கை காரணமாக இந்தச் சடங்குகள் அவசியமாயின ஏனெனில் ஆதிபாவங்களின் கோட்பாடுகளின் காரணமாக அவற்றைக் களைவதற்காக.

5. இந்தச் சடங்குகளுக்காக ஒரு புரோகிதர் அவசியப்படுகிறார். ஒரு பிக்கு ஆதிபாவத்திலேயோ, கடவுளிலேயோ, ஆன்மாவிலேயோ நம்பிக்கையற்றவர். எனவே நடத்திவைக்கப்பட வேண்டிய சடங்குகள் ஏதுமில்லை. எனவே அவர் ஒரு புரோகிதரில்லை.

6. ஒரு பிராமணர் பிறப்பினால் பிராமணர் ஆகிறார். ஒரு பிக்கு உருவாக்கப்படுகிறார்.

7. ஒரு பிராமணர் சாதியுடையவர், ஒரு பிக்கு சாதியற்றவர்.

8. ஒரு முறை பிராமணர் எப்போதும் பிராமணரே, எந்தப் பழிச்செயலும், எந்தக் குற்றமும் அவரைப் பிராமணரல்லாதாராக்க இயலாது.

9. ஆனால் ஒரு முறை பிக்கு ஆனவர் எப்போதும் பிக்குவன்று, ஒரு பிக்கு உருவாக்கப்படுகிறார். எனவே அவர் தம் நடத்தையால் பிக்குவாய் நிலைப்பதற்குத் தகுதியற்றவராய் தம்மை ஆக்கிக் கொண்டால், அவர் பிக்குவல்லாதவராக்கப்படலாம்.

10. ஒருவர் பிராமணராய் இருப்பதற்கு எந்த மனப்பயிற்சியும் ஒழுக்கப்பயிற்சியும் (எதிர்பார்க்கப்படுவது அது மட்டுமே) அவர் தன் மதத்தின் பாரம்பரியத்த அறிந்திருக்க வேண்டும் என்பதே.

11. பிக்குவின் விஷயம் முற்றிலும் வேறானது மனப்பயிற்சியும் ஒழுக்கப்பயிற்சியும் அவருக்கு உயிரானது.

12. ஒரு பிராமணர் தனக்கெனத் தான் அளவற்ற தொத்தை உடைமையாக்கிக் கொள்ள சுதந்திரமுள்ளவராயுள்ளார். இதற்கு மாறாக ஒரு பிக்குவால் இது முடியாது.

13. இது ஒரு சாதாரண வேறுபாடன்று. ஒரு மனிதனின் சிந்தனையையும் செயல்பாட்டையும் பொறுத்தவரை, அவன் தன் மனத்தின், ஒழுக்கத்தின் சுதந்திரத்தின் மீது சொத்துடைமை என்பது மிகக்கடுமையான கட்டுப்பாட்டினையுடையதாயுள்ளது. இரண்டுக்கும் இடையில அது முரண்பாட்டைத் தோற்றுவிக்கிறது. இதன் காரணமாகத்தான் பிராமணர் எப்போதும் மாற்றத்தை எதிர்ப்பவராயுள்ளனர் ஏனெனில் அவருக்கு மாற்றம் என்பது அதிகாரத்தின் இழப்பு, மற்றும் உடைமயின் இழப்பு என்று பொருள்படும்..

14. உடைமையேதுமற்ற ஒரு பிக்கு மனத்தாலும் ஒழுக்கத்தாலும் சுதந்திரமுடையவராய் உள்ளார். அவர் விஷயத்தில் நேர்மைக்கும், ஒருமைப்பாட்டிற்கும் குறுக்கே நிற்கக் கூடிய எந்தச் சொந்த ஆசாபாசமும் இல்லை.

15. அவர்கள் பிராமணர்கள், இருப்பினும் ஒவ்வொரு பிராமணரும் தன்னளவில் தான் ஒரு தனிநபர். அவர் கட்டுப்பட வேண்டிய எந்த சமய நிறுவனமும் இல்லை. ஒரு பிராமணர் தனக்குத் தானே விதியாவார். அவர்கள் பொருளியலான பொது அக்கறைகளாலேயே ஒருங்கிணைக்கப்பட்டவர்கள்.

16. இதற்கு மாறாக ஒரு பிக்கு எப்போதும் சங்கத்தின் ஓர் உறுப்பினராயுள்ளார். ஒரு சங்கத்தின் உறுப்பினராயில்லாமலே ஒருவர் பிக்குவாக இருக்க முடியும் என்பதைக் கருதிப்பார்க்கவே இயலாது. ஒரு பிக்கு தனக்குத்தானே விதியானவர் அன்று. அவர் சங்கத்திற்குக் கட்டுப்பட்டவர். சங்கம் ஒரு சமயநிறுவனம்.

4. பிக்குவும் உபாசகரும்.

1. தம்மத்தில் பிக்குவின் தம்மத்திற்கும், உபாசகரின் அல்லது இல்லறத்தாரின் தம்மத்திற்கும் இடையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு ஒன்று உள்ளது.

2. பிக்கு பிரம்மச்சரியத்துக்குக் கட்டுப்படுத்தப்பட்டவர். உபாசகர் அவ்வாறன்று. அவர் மணமுடித்துக் கொள்ளலாம்.

3. பிக்கு இல்லமுடையவராய் இருக்கலாகாது, அவர் குடும்பமுடையவராய் இருக்கலாகது. உபாசகர் அவ்வாறன்று. உபாசகர் இல்லமுடையவராய், குடும்பமுடையவராய் இருக்கலாம்.

4. பிக்கு உடமையேதும் உடையவராய் இருக்கலாகாது, ஆனால் ஓர் உபாசகர் உடைமையுடையவராய் இருக்கலாம்.

5. பிக்கு கொல்லுவதினின்றும் தடுக்கப்பட்டிருக்கிறார். உபாசகர் அவ்வாறன்று, அவர் செய்யலாம்.

6. பஞ்சசீலம் இருவருக்கும் பொதுவானது. ஆனால் பிக்குவுக்கு அவை உறுதிப்பாடகள், அபராதத்திற்கு ஆட்படாமல் அவற்றை அவர் மீறவியலாது. உபாசகருக்கு அவை பின்பற்றத்தக்க போதனைகள்.

7. பஞ்சசீல இருவருக்கும் பொதுவானது. ஆனால் பிக்குவுக்கு அவை உறுதிப்பாடுகள், அபராதத்திற்கு ஆட்படாமல் அவற்றை அவர் மீறவியலாது, உபாசகருக்கு அவை பின்பற்றத்தக்க போதனைகள்.

7. பஞ்சசீல நடைமுறைகள் பிக்குவுக்குக் கட்டாயமானவை. உபாசகருக்கு அந்நடைமுறைகள் விரும்பியேற்க வேண்டிய கடப்பாடுகள்.

8. உயர்வெய்திய புத்தர் ஏன் இந்த வேறுபாட்டை உருவாக்கினார்? இதற்குத் தகுந்த நற்காரணங்கள் சில இருக்கவேண்டும். ஏனெனில் உயர்வெய்திய புத்தர் தகுந்த நற்காரணம் இல்லாத வரை எதையும் செய்வதில்லை.

9. மேன்மைதங்கிய புத்தரால் இந்த வேறுபாட்டக்கான காரணம் வெளிப்படையாக எங்கும் கூறப்படவில்லை. அது அனுமானத்திற்கு விடப்பட்டுள்ளது. அதேசமயத்தில் இந்த வேறுபாட்டிற்கான காரணத்தை அறிவது அவசியமாகவும் உள்ளது.

10. புவியின் மீது நன்னெறியின் அரசாட்சியை தம்மத்தின் மூலம் நிறுவ மேன்மை தங்கிய புத்ர் விழைந்தார் என்பதில் எந்த ஐயமும் இல்லை. இதற்காகத்தான் அவர் தம் தம்மத்தை பிக்குகள், இல்லறத்தார் ஆகிய இருதரப்பாராகிய அனைவருக்கும் வேறுபாடின்றிப் போதித்தார்.

11. ஆனால் பொதுமனிதருக்குத் தம்மத்தைப் போதிப்பதன் விளைவாய் மட்டுமே நன்னெறியை அடிப்படையாகக் கொண்ட இலட்சிய சமுதாயத்தை உருவாக்கிவிட முடியாது என்பதையும் மேன்மை தங்கிய புத்தர் அறிந்திருந்தார்.

12. ஒரு இலட்சியம் நடைமுயையானதாக இருக்க வேண்டும்-நடைமுறக்குகந்தெனக் காட்டப்பட வேண்டும். அப்போரே, அப்போது மட்டுமே மக்கள் அதனைப் பின்பற்றவும், உணரவும் தலைப்படுவர்.

13. இந்த முயற்சியை உருவாக்கவும், இலட்சியத்தின் அடிப்படையில் இயங்கும் சமுதாயத்தைப் படம்பிடித்தக் காட்டவும், அதன்மூலம் சாதாரண மனிதருக்கு அந்த இலட்சியம் நடைமுறை சாத்தியமற்றதன்று எனவும், மாறாக உய்த்துணரத் தக்கதே எனவும் நிரூபிக்கவும் வேண்டும்.

14. மேன்மை தங்கிய புத்தரால் போதிக்கப்பட்ட தம்மத்தைச் செயற்பாட்டின் மூலம் உய்த்துணர்ந்த சமுதாயத்தின் ஒரு முன்மாதிரி அமைப்பே சங்கமாகும்.

15. இதன் காரணமாகவே மேன்மைதங்கிய புத்தர் பிக்குவுக்கும் உபாசகருக்கும் இடையிலான இவ்வேறுபாட்டை உண்டாக்கினார். பிக்கு புத்தரின் இலட்சிய சமுதாயத்திற்கான முன்னோடியாவார். தன்னால் இயன்றவரை நெருக்கமாய் உபாசகர் பிக்குவைப் பின்தொடர வேண்டும்.

16. விடை காணவேண்டி மற்றொரு வினாவும் உள்ளது. பிக்குவின் பணிகள் யாவை?

17. தன்னை பண்பு நிறைவு நெறிப்படுத்திக் கொள்ளவே பிக்கு தன்னைத்தான் அர்ப்பணித்துக் கொள்வதா அல்லது மக்களை நெறிப்படுத்த அவர் தொண்டு புரிவதா?

18. இரண்டும் பணிகளையுமே அவர் அற்றியாக வேண்டும்.

19. தன்னளவில் பண்பு நிறைவு நெறியற்றிருப்பின் பிறரை நெறிப்படுத்த அவர் தகுந்தவரன்று. எனவே அவர் தனக்குத்தானே நிறைவான சிறந்த மனிதராய், ஒழுக்க நெறியுடையவராய், மேன்மையுற்ற மாமனிதராய் இருந்தாக வேண்டும். இதற்காக அவர் தன் பண்பு நெறி நிறைவுக்கான பயிற்சி மேற்கொள் வேண்டும்.

20. ஒரு பிக்கு தன் இல்லத்தை விட்டு வெளியேறுகிறார். ஆனால் அவர் உலத்தை விட்டு வெளியேறி விடுவதில்லை. அவர், இல்லத்தோடு தொடர்புடையவராய் ஆனால் துன்பமும்,

துயரமும் மகிழ்ச்சியின்மையும் மிக்க வாழ்வுடையோராய், தமக்குத் தாமே உதவிக் கொள்ள இயலாதோராய் உள்ள மக்களுக்குத் தொண்டு புரிய சுதந்திரமும், வாய்ப்பும் பெறும் வகையில் தம் இல்லத்தைத் துறக்கிறார்.

21. தம்மத்தின் சாரமான கருணைக்கு ஒவ்வொருவரும் பிறரை நேசிக்கவும், பிறருக்குத் தொண்டுபுரியவும் வேண்டுமென்பது அவசியமாகிறது. பிக்கு இதற்கு விதிவிலக்கல்ல.

22. மனிதகுலத்தின் துன்பங்களை உதாசீனப்படுத்துபவராயுள்ள பிக்கு தன் பண்பு நெறியில் எத்துனை நிறைவுடையவராய் இருப்பினும், அவர் பிக்குவே அல்ல, அவர் வேறெவராகவும் இருக்கலாம்-ஆனால் அவர் பிக்குவன்று.

## பிக்குவின் கடமைகள்

### 1. சமயம் மாறியோருக்கு பிக்குவின் கடமைகள்.

1. யசா மற்றம் அவர்தம் நான்கு நண்பர்கள் தம்மத்திற்குச் சமயமாற்றம் மேற்கொண்ட செய்தி விரிவாகவும் பரவலாகவும் பரவியது. அதன் விளைவாக நாட்டில் உயர் குடும்பங்களைச் சார்ந்த இல்லறத்தாரும் அவருக்கடுத்த நிலையினரும் மேன்மை தங்கிய புத்தரின் கோட்பாடுகளில் போதனைப் பெறம், அவரிடமும் அவர்தம் தம்மத்திடமும் அடைக்கலம் பெறவும் வருபவராயினர்.

2. தம்மத்தில் போதனைப் பெற அவரிடம் மக்கள் பலர் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தாமே நேரடியாய்ப் போதனை அளிப்பது கடினம் என்பதை புத்தர் அறிந்தார். நாளுக்கு நாள் எண்ணிக்கையில் அதிகரித்து வரும் பரிவுராஜகர்களை ஒரு சமயமுறைமையில் அமைப்பின் கீழ்க் கொண்டு வரும் அவசியத்தை உணர்ந்து, அதனைச் சங்கம் என்று அவர் அழைக்கலானார்.

3. அதன்படி அவர் பரிவ்ராஜகர்களைச் சங்கத்தின் உறுப்பினர்களாக்கி, வினயம் என்று அழைக்கப்பட்ட ஒழுக்க நியதிகளை வகுத்து, அவைகள் சங்க உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும் வகையில் அமைத்தார்.

4. உயர்வெயதிய புத்தர் அதன்பின், பிக்குவாகும் முன் சீடர்கள் உட்புகுந்து கடக்க வேண்டிய இரு நிலைகளை விதித்தார். முதலாவதாக ஒரு சீடர் பரிவ்ராஜகராக ஆகி குறிப்பிட்ட சில ஆண்டுகள் ஒரு பிக்குவோடிணைக்கப்பட்டு அவரிடம் பயிற்சிப் பெறுபவராயிருக்க வேண்டும். அவருடைய பயிற்சிக் காலம் முடிந்ததும், பரிசோதனைக் குழுவினரை, தான் தகுதி பெற்றதாகத் திருப்தியறச் செய்தபின் அவர் உபசம்பதா ஏற்க அனுமதிக்கப்படுவார். அதன்பிறகுதான் அவர் பிக்குவாக ஆகவும், சங்கத்தின் உறுப்பினராக ஆகவும் அனுமதிக்கப்படுவார்.

5. தம்மத்தின் தொடக்க நிலைகளில் இத்தகைய ஏற்பாடுகளைச் செய்ய நேரம் ஏதும் இல்லை. எனவே புத்தர் அவர்களைப் பிக்குகளாக்கி, சமயநெறி பரப்புனர்களாய் அவருடைய சமயத்தைப் பரப்ப அவர்களை அங்கிங்கெனாதபடி எங்கும் அனுப்பி வைத்தார்.

6. அவ்வாறு அவர்களை அனுப்பும் முன் உயர்வெய்திய புத்தர் பிக்குகளிடம் கூறினார்: "ஓ! பிக்குகளே! நான் மானுடமான, அதனினம் உயர்ந்த அனைத்துக் கட்டுக்களினின்றும் விடுபட்டிருக்கிறேன். நீங்களும், பிக்குகளே அவ்வாறாகுங்கள். இப்போது, நீங்கள் மிகப்பலரின் நன்மைக்காகவும், மிகப்பலரின் நலத்திற்காகவும், உலகின் மீதுள்ள கருணையாலும், நல்லனவற்றின் பொருட்டும். உயர்வெய்தி மனிதரின், மற்றும் பிறரின் உன்னத நன்மைக்காகவும் நலத்திற்காகவும் உழைத்துப் பயணியுங்கள்."

7. "உங்களில் இருவர் ஒரே இடத்திற்குச் செலலற்க, பிக்குகளே! தொடக்கத்திலும் மேன்மையானதாய், தொடர்ச்சியிலும் மேன்மையானதாய், முடிவிலும் மேன்மையானதாய், உணாவாலும் மொழியாலும் உன்னதமானதாய் உள்ள கோட்பாடுகளைப் போதியுங்கள், செறிவான, நிறைவான, தூய நல்வாழ்வைப் பிரகடனப்படுத்துங்கள்."

8. "பின்னர் அனைத்துத் தேசங்களுக்கும் செல்லுங்கள், இதுவரை சமயமாற்றம் கொள்ளாதோரை மாற்றுங்கள். துன்பத்தால் தகிக்கும் பூமியெங்கனும் நற்போதனைக் குறையுடைய யாங்கனும் அவற்றைப் போதியுங்கள்."

9. "எங்கெலாம் மாமுனிவரும், இராஜரிஷிகளும், பிராமணரிஷிகளும் கூடத் தங்கள் கொள்கைப் பிரிவின் படி மக்களை ஈர்த்துக் கொண்டள்ளனரோ அங்கெல்லாம் செல்லுங்கள்."

10. "எனவே ஒவ்வொருவரும் தமக்குத்தாமே பயணம் மேற் கொள்ளுங்கள்- கருணையால் நிரம்பியவராய்-விடுவிக்கவும் பெறவும் செல்லுங்கள்."

11. உயர்வெய்திய புத்தர் மேலும் கூறினார்:

12. "தம்மப் பரிசு அனைத்துப் பரிசுகளையும் விஞ்சியது, தம்மத்தின் இனிமை அனைத்து இனிமைகளையும் விஞ்சியது, தம்மத்தில் இன்பம் அனைத்து இன்பங்களையும் விஞ்சியது."

13. "நிலங்கள் களைகளால் நிலைகுலைந்து உள்ளன், மானுடம் அவாவினால் நிலைகுலைந்து உள்ளது, எனவே தம்மப்பரிசு பெரும்பேற்றை நல்குகிறது."

14. "நிலங்கள் களைகளால் நிலைகுலைந்து உள்ளன, மானுடம் வெறுப்பினால் நிலைகுலைந்து உள்ளது, எனவே தம்மப்பரிசு பெரும்பேற்றை நல்குகிறது."

15. "நிலங்கள் களைகளால் நிலைகுலைந்து உள்ளன, மானுடம் தற்பெருமையினால் நிலைகுலைந்து உள்ளது, எனவே தம்மப்பரிசு பெரும்பேற்றை நல்குகின்றது."

16. ""நிலங்கள் களைகளால் நிலைகுலைந்து உள்ளன, மானுடம் மிகைக் காமத்தால் நிலைகுலைந்து உள்ளது, எனவே தம்மப்பரிசு பெரும்பேற்றை நல்குகின்றது."

17. பின்னர் சமயநெறி பரப்புதல் பற்றிய ஆணைகளைப் பெற்று அறுபது பிக்குகள் தம்மத்தைப் பரப்ப ஒவ்வொரு தேசத்திற்கும் செல்லலாயினர்.

18. புத்தர் அவர்களுக்கு சமயமாற்றம் பற்றிய மேலும் சில போதனைகளை அளித்தார்.

2. சமயமாற்றம் அற்புதச் செயல்களால் ஆக்கப்படலாகாது.

1. மேன்மைத்தங்கிய புத்தர் ஒரு முறை மல்லர்களிடையே, அவர்களின் நகரங்களில் ஒன்றான அநபியத்தில் தங்கியிருந்தார்.

2. அப்போது ஒருநாள் அதிகாலையில் மேன்மைத்தங்கிய புத்தர்தம் துவராடையை அணிந்து கொண்டு மேலாமையுடுத்து, பிட்சாபாத்திரமேந்தி, ஐயமேற்க நகருக்குள் நுழைந்தார்.

3. உயர்வெய்திய புத்தர் எண்ணினார்: "அநபியத்திற்குள் ஐயமேற்கச் செல்ல எனக்கு இது மிகவிரைந்த நேரமாயுள்ளது. பக்கவர் என்னும் துறவி தங்கியுள்ள சோலைவனத்திற்குச் சென்று அவரைச் சந்திக்கலாம்."

4. எனவே மேன்மைத்தங்கிய புத்தர் அந்தச் சோலைக்குச் சென்று துறவி பக்கவர் இருந்த இடத்தை அடைந்தார்.

5. அதன்பின் மேன்மைத் தங்கிய புத்தரிடம் பக்கவர் உரைத்தார், "மேன்மைதங்கிய புத்தர் அருவே வருவீராக, மேன்மைத்தங்கிய புத்தருக்கு நல்வரவு! மேன்மைத்தங்கிய புத்தர் நம்மிடம் வரும் வாய்ப்பை நாம் பெற்று நாட்கள் பலவாயின, ஐயன்மீர்! தங்களின் இவ்வாசனத்தில் தாங்கள் அமர்ந்து மகிழ வேண்டுகிறேன்."

6. அதன்படி ஆங்கு மேன்மைத் தங்கிய புத்தர் அமரவும், பக்கவர் அதனினும் சற்றத்தாழ்வான இருக்கையில் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்தத் துறவி பக்கவர் மேன்மைத்தங்கிய புத்தரிடம் இவ்வாறு உரையாடினார்.

7. "ஐயனமீர்! சில நாட்களுக்கு முன் 'லிட்சாவி' பகுதியைச் சார்ந்த சநகத்தர் என்னைச் சந்தித்து உரைத்தார், ஐயா! நான் இப்போது மேன்மைத்தங்கிய புத்தரின் தொடர்பை விட்டுவிட்டேன். இனியும் நான் அவரை என் ஆசிரியராய் ஏற்றிருந்து அவர் கீழிருக்கப் போவதில்லை. இச்செய்தி உண்மையா?

8. "பக்கவரே! லிச்சாவியைச் சேர்ந்த சுநகத்தர் கூறியது உண்மைதான்."

9. "பக்கவரே! சில நாட்களுக்கு முன்-இல்லையில்லை-பல நாட்களுக்கு முன் லிச்சாவி பகுதியைச் சேர்ந்த சுநகத்தர் என்னை வந்து சந்தித்து உரைத்தார், "ஐயா! நான் இனி மேன்மைத் தங்கிய புத்தரின் தொடர்பை விட்டு விட்டேன். எனவே இனியும் நான் அவரை என் ஆசிரியராக ஏற்று அவர் கீழிருக்கப் போவதில்லை." அவர் இவ்வாறு என்னிடம் கூறியதும் நான் அவரிடம் வினவினேன். "ஆயினும் சுநகத்தரே! நான் எப்போதேனும் தங்களிடம் உரைத்தேனா? வாரும் சுநகத்தரே! என்கீழ் என் சீடராய் இருங்கள் என்று?"

10. "இல்லை ஐயா! நீங்கள் அவ்வாறு உரைத்ததில்லை" பதிலிறுத்தார் சுநகத்தர்.

11. "அல்லது தாங்கள் எப்போதேனம் இவ்வாறு கூறியதுண்டா?" ஐயா! நான் மேன்மைதங்கிய புத்தரை ஏற்று (ஆசானாய்) அவர்தம் கீழ் மகில்வுடன் இருக்கிறேன்."

12. "இல்லை அய்யா! நான் அவ்வாறு உரைத்ததில்லை"-கூறினார் சுநகத்தர்.

13. "நானும் அவ்விதம் கூறாதபோது, தாங்களும் அவ்விதம் கூறாத போது, கைவிடுவதாகத் தாங்களுக்கு உரைக்க நான் யார்? தாங்கள் தான் யார்?"

14. "அது சரிதான் அய்யா! எனினும் மேன்மைத்தங்கிய புத்தர் எனக்காகச் சாதாரண மனிதனின் சக்திக்கப்பாற்பட்ட சித்து அற்புதங்கள் எதையும் புரிந்ததில்லையே."

15. "ஏன் சுநகத்தரே! நான் எப்போதேனும் தங்களிடம் இவ்வாறு கூறினேனா? சுநகத்தரே வாருங்கள்! என்னைத் தாங்கள் ஆசானாய் ஏற்றுக் கொள்ளங்கள் தங்களுக்காக நான் சாதராண மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்ட அற்புதச் சித்துக்கள் புரிகிறேன்" என்றேனா?"

16. "அப்படித் தாங்களுரைக்கவில்லை ஐயா!"

17. "அல்லது தாங்கள் எபபோதேனும் என்னிடம் இவ்வாறு கூறினீர்களா? ஐயா, சாதாரண மனிதனின் சக்தியைக் கடந்த அற்புதச் சித்துக்களை எனக்காகப் புரிவீர்கள் என்பதற்காகத் தங்களை என் ஆசானாக ஏற்றுத் தாங்கள் கீழ்வதிவதில் மகிழ்வேன்" என்று.

18. "நான் அவ்வாறு கூறியதில்லை ஐயா!"

19. "நானும் அவ்விதம் கூறாதபோது, தாங்களும் அவ்விதம் கூறாத போது, நான் யார்? தாங்கள் யார்? தாங்கள் என்னை விட்டு விடுவதாய் கூறுவது எங்ஙனம் அறியாமையுடையவரே! சுநகத்தரே! என்ன நினைக்கிறீர்கள்?"

20. "சாதாரண மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்ட அற்புதச்சித்துக்கள் அடையப்பட்டாலும், அவ்வாறில்லையென்றாலும் என்னால் போதிக்கப்படும் தம்மத்தின் இலக்கு அதுவல்லவே, அதைப் புரிபவனின் தீமையை முற்றாயழிக்க வழிகோலுவதேயன்றோ?"

21. அது அடையப்பட்டாலும், அவ்வாறில்லையென்றாலும், மேன்மைத்தங்கிய புத்தரால் போதிக்கபடும் உயர் இலக்கு உண்மையில் அதுவன்றோ?

22. "ஆயினும், பக்கவரே, சநகத்தர் தொடர்ந்து என்னிடம் உரைத்தா ா, ஐயா பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாய் பற்றி மேன்த்தங்கிய புத்தர் எனக்கு வெளிப்படுத்தவில்லையே."

23. "ஏன்! சுநகத்தரே! எப்போதேனும் தங்களிடம் நான் இவ்வாறு உரைத்தேனா? வாருங்கள் சுநகத்தரே! என் சீடராய் நீங்கள் இருப்பின் பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாயை உங்களுக்கு நான் வெளிப்படுத்துகிறேன் என்று?"

24. "இல்லை ஐயா! அப்படி நான் கூறியதில்லை."

25. "அல்லது தாங்கள் எப்போதேனும் என்னிடம் இவ்வாறு உரைத்ததுண்டா? பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாயை எனக்கு வெளிப்படுத்துவார் என்பதால் நான் மேன்மைத்தங்கிய புத்தரின் சீடராய ஆவேன் என்று."

26. "இல்லை ஐயா! அப்படி நான் கூறியதில்லை."

27. "ஆயின் நானம் அவ்வாறு உரைத்ததில்லை-தாங்களும் அவ்வாறு கூறியதில்லை-பின், விட்டு நீங்குவதைப் பற்றிப் பேச நீங்கள் யார்? நான் யார்? அறியாமை கொண்டவரே, சுநகத்தரே! தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாய் வெளிப்படுத்தப்பட்டாலும், இல்லையென்றாலும், நான் தம்மத்தைப் போதிப்பதன் இலக்கு யாது, அதைப் புரிபவரின் தீமையை முற்றாக அழிப்பதற்கு வழிகோலுவதே யன்றோ?"

28. "அவைகள் வெளிப்படுத்தப்பட்டாலும், படாவிட்டாலும், மேன்மைத்தங்கிய புத்தரால் போதிக்கப்படும் தம்மத்தின் இலக்கு உண்மையில் இதுதான்."

29. "சுநகத்தரே! பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாய் வெளிப்படுத்தப்பட்டாலும், படாவிட்டாலும் அது இலக்குக்கு ஒரு பொருட்டல்ல என்பதாயின், பின், பிரபஞ்சப் பொருள்களின் தோற்றுவாய் வெளிப்படுத்தப்படுவதால், தங்களுக்கு என்ன பயன்?"

30. "சுநகத்தரே! தாங்கள் வஜ்ஜினர்களிடையே என்னைப் பற்றிப் பலவழிகளில் புகழ்ந்து பேசியுள்ளீர்கள்."

31. "சுநகத்தரே! தாங்கள் வஜ்ஜினர்களிடையே தம்மத்தைப் பற்றிப் பலவழிகளில் புகழ்ந்து பேசியுள்ளீர்கள்."

32. "சுநகத்தரே! தாங்கள் வஜ்ஜினர்களிடையே சங்க அமைப்புப் பற்றிப் பலவழிகளில் புகழ்ந்து பேசியுள்ளீர்கள்."

33. "சுநகத்தரே! நான் தங்களுக்குரைக்கிறேன், தங்களைப் பொறுத்து இவ்வாறு உரைப்பவர்கள் இருப்பார்கள் என நான் தங்களுக்குத் தெரிவிக்கிறேன், "லிச்சாவியைச் சேர்ந்த சுநகத்தாரால் துறவியான கவுதமரின் கீழ் தூய வாழ்வு வாழ இயலவில்லை, அதை அவரால தொடர்ந்து கடைப்பிடிக்க இயலாமையால், அந்நெறியைத் துறந்து அதனினம் கீழானவை நோக்கி திரும்பிவிட்டார்."

34. "இவ்வாறாக, பக்கவரே! லிச்சாவியைச் சேர்ந்த சுநகத்தரை நோக்கி நான் உரைத்தபின் அவர் கொள்கைகளையும், முறைமையையும் விட்டு விலகிவிட்டார்-அழிவுக்கு ஆட்பட்ட ஒருவர் போல."

25. புத்தரின் கொள்கையையும் முறைமையையும் விட்டு விலகிய உடனே சநகத்தர் மக்களிடம், புத்தரின் மிக்குயர்ந்த பேரறிவு, உள்நோக்கு ஆகிய பெரும்பரிசுகளில் மனித சக்திக்கு மேம்பட்டது ஏதுமில்லை என்று கூறத் தொடங்கி விட்டார். மேலும் புத்தர் அவருடைய சொந்த சிந்தனையைக் கொண்டே, அவருடைய சொந்த கோட்பாட்டை பரிணமிக்கச் செய்து வடித்தெடுத்து -எவரொருவர் அப்போதனைகளைச் செவிமடுக்கிறாரோ அவர், தம் நலத்திற்கென அவர்தாமே அவற்றைச் செயற்படுத்துமாறு வழிநடத்தப்பட்டு தம் துன்பங்களை முடிவுக்குக் கொண்டு வர வேண்டியுள்ளாதாய்ச் செய்கிறார்.

36. சுநகத்தர் புத்தரை இகழ்ந்துரைத்தாரெனினம், அவர் மக்களிடம் கூறிக் கொண்டிருந்தது உண்மையே, ஏனெனில், புத்தர் எப்போதுமே தம் கொள்கையைப் பரப்ப மனித சக்தியை மீறிய அற்புதச் சித்துக்களில் அடைக்கலம் கொண்டதில்லை.

3. சமயமாற்றம் வன்மையால் ஆக்கப்படலாகாது.

1. உயர்வெய்திய புத்தர் ஒரு முறை இராஜகிரஹத்திற்கும் நாளந்தாவிற்கும் இடையேயிருந்த நெடுஞ்சாலையில் பெரும் சோதரப் பரிவாரத்துடன் சென்று கொண்டிரந்தார். ஏறத்தாழ ஐந்நூறு சோதரர்களிருப்பர். இராஜகிரஹத்திற்கும் நாளந்தா விற்குமிடையே இருந்த அந்நெடுஞ்சாலையில் தன் சீடரான இளைஞர் பிரம்மதத்தரோடு துறவி கப்பியரும் கூடச் சென்று கொண்டிருந்தார்.

2. அப்போது, ஆங்கே துறவி சுப்பியர் புத்தரைப் பற்றி இகழ்ச்சியாகவும், தம்மத்தைப் பற்றி இகழ்வாகவும், சங்கத்தைப் பற்றி இகழ்வாகவும் பலவழிகளில் பேசிக் கொண்டிருக்கலானார். ஆனால், அவருடைய சீடரான இளையவர் பிரம்மத்தரோ புத்தரைப் பற்றி புகழ்ச்சியாகவும், தம்மத்தைப் பற்றிப் புகழ்ச்சியாகவும், சங்கத்தைப் பற்றிப் புகழ்சியாகவும் உரையாடிக் கொண்டிருக்கலானார்.

3. இவ்வாறாக, குரு சீடரான அவ்விருவரும் நேரெதிராய் ஒருவருக்கொருவர் முரண்பட்டவாறு, உயர்வெய்திய புத்தரையும் அவர்தம் சோதரப் பரிவாரத்தையும் அடிமேல் அடிவைத்தத் தொடர்ந்து கொண்டிருந்தனர்.

4. அப்போது உயர்வெய்திய புத்தாரும், அவருடன் அவர்தம் சோதரப்பரிவாரமும் அவ்விரவைக் கழிப்பதற்கு அம்பலத்தில் சோலையிலிருந்த இராஜ மாளிகையில் தங்கியிருந்தனர். அவ்வாறே துறவி சுப்பியரும் அவருடன் அவருடைய இளைய சீடர் பிரம்த்தரும் கூட ஆங்குத் தங்கியிருந்தனர். ஆங்கு, அந்த மாளிகையில், தொடர்ந்து நடத்தினர்.

5. அதிகாலையில் விழித்தெழுந்த பெருமளவு சோதரர்கள் முற்றத்தில கூடினர், அவர்களின் பேச்சுக்கான பொருளாய் அவர்களிடையே எழுந்தது சுப்பியருக்கும் பிரம்மதத்தருக்கும் இடையே ஏற்பட்ட உரையாடலேயாகும்.

6. அப்போது உயர்வெய்திய புத்தர், அவர்களுடைய பேச்சின் போக்கை உணர்ந்தமையால், அவருக்காக விரிக்கப்பட்ட பாயில் அமாந்தார். அவ்வாறு அமர்ந்தபின் அவர் உரைத்தார், "இங்கு அமர்ந்து தாங்கள் ஈடுபட்டிருக்கும் உரையாடல் யாது? தங்களுக்கிடையே நடைபெறும் உரையாடலின் பொருள் யாது?" அவர்கள் அவருக்கு அனைத்தையும் கூறினர். அவர் உரைத்தார்:

7. "சோதரர்களே! வெளியார் எனக்கு எதிராகவோ அல்லது தம்மத்திற்கெதிராவோ, சங்கத்திற்கெதிராகவோ பேசினாலும், அது குறித்து தாங்கள் வெறுப்புறவோ, அல்லது குரோதத்தால் துன்புறவோ, அல்லது பகை கொள்ளவோ கூடாது."

8. நீங்கள் அது குறித்து, சினமுறவோ பாதிக்கப்படவோ நேரின், அது தங்கள் சொந்த 'தன்னை வெல்லலுக்கு' த் தடையாகிவிடும். பிறர் நமக்கு எதிராய்ப் பேசுகையில், தாங்கள் அதனால் சினம் கொள்வீராயின், வெறுப்படைவீராயின், பின் தாங்கள் எங்ஙனம் அவர்களின் பேச்சு, சரியாயுரைக்கப்பட்டதா தவறாயுரைக்கப்பட்டதா எனத் தீர்ப்பளிக்க உங்களால் முடியும்?

9. "ஆம்! அது அவ்வாறு முடியாது தான் ஐயா."

10. "ஆனால் வெளியார் என்னைப் பற்றியோ அல்லது தம்மத்தைப் பற்றியோ அல்லது சங்கத்த் பற்றியோ இகழ்ச்சியாகப் பேசுகையில், அவற்றில் தவறானவற்ப் பிரித்தெடுத்து, தவறென்று சுட்டிக்காட்டிக் கூற வேண்டும். இந்த அல்லது அந்தக் காரணம் பற்றி இரு உண்மையன்று-இது அவ்வாறன்று-இத்தகையது எங்களிடம் காணப்படவில்லை-எங்களில் இலை"

11. ஆனலும், சோதரர்களே! வெளியார்கள் என்னைப் பற்றிப் புகழ்ச்சியாக, தம்மத்தைப் பற்றிப் புகழ்ச்சியாக, சங்கத்தைப்பற்றிப் புகழ்ச்சியாகக் கூட பேசக்கூடும். அவர்கள் என்னைப் புகழ்ச்சியாகக் கூறுகையில் தாங்கள் கூறுவனயாதாயிருக்கும்?

12. "அவர் கூறலாம்: உயிர்வாழ்வனவற்றைக் கொல்லுதலை தூர விலக்கியவராய்த் துறவி கவுதமர், உயிர்களை அழிப்பதினின்றும் தூர விலகியிருக்கிறார், அவர் கோடரியையும் வாளையும் விலக்கி வைத்துள்ளார், முரட்டுத்தனமாயிருக்க வெட்குகிறார். இரக்கத்தால்

நிரம்பியவராய், உயிருள்ள அனைத்து ஜீவன்களிடத்தும் கருணையும், அன்பும் உடையவராய் வாழ்கிறார், இவ்வாறாக சமயமாற்றமுறாத மனிதர் ததாகதரைப் புகழ்கையில் பேசலாம்."

13. "அல்லது அவர் கூறலாம் கொடுக்கப்பட்டதைத் தூரவிலக்கியவராய்த் துறவி கவுதமர், அவருக்குச் சொந்தமல்லாதவற்றைக் கவாந்து கொள்வதினின்றும் தூர விலகி வாழ்கிறார். கொடுக்கபடுவது எதுவோ அதை மட்டுமே அவர் எடுத்துக் கொள்கிறார். அப்பரிசுகள் கிட்டுமென அவர் எதிர்பார்க்கிறார். அவர் தம் வாழ்க்கையை நேர்மையிலும் மனத்துய்மையிலும் நடத்தகிறார்."

14. "அல்லது அவர் கூறரலாம், கற்பின்மையை விலக்கியவராய் துறவி கவுதமர் கற்புநெறி பிறழாதவராயுள்ளார். தீய நெறிக் காமச் செயல்களினின்றும் விலகியவராய், வெகு தூரம் விலகியவராய் உள்ளார் அவர்."

15. "அல்லது அவர் கூறலாம் பொய்ச் சொற்களைத் தூரவிலக்கியவராய்த் துறவி கவுதமர், பொய்மையினின்றும் தம்மை விலக்கிக் கொள்கிறார். அவர் மெய்மையே புகல்கிறார். உண்மையினின்று எப்போதும் ஒருவர் ஒதுங்கிவிடுவதில்லை, உண்மைமிக்கவராய், நம்பிக்கைக்குரியவராய் உள்ள அவர் உலகையே பெறுவதற்கெனினும் தம் ஒரு வாக்கையும் மீறுவதில்லை."

16. "அல்லது அவர் கூறலாம் தூற்றுதலைத் தூர விலக்கியவராய், துறவி கவுதமர் பழிகூறலின்றும் தன்னை விலக்கிக் கொண்டவராய் உள்ளார். இங்குள்ள மக்களுக்கெதிராய் சச்சரவை எழுப்பும் வண்ணம் ஈண்டு அவர் கேட்பதை வேறெங்கும் அவர் திருப்பிக் கூறுவதில்லை. ஆங்கள்ள மக்களுக்கெதிராய் சச்சரவை எழுப்பும் வண்ணம் வேறெங்கோ அவர் கேட்டதை கண்டு அவர் கூறுவதில்லை. இவ்வாறாக அவர் பிரிவுபட்டோரை ஒன்றாயிணைப்பவராய், நட்புடையோரை ஊக்குவிப்பவராய், அமைதியை உண்டாக்குபவராய், அமைதியை உருவாக்கும் சொற்களையே உரைப்புவராய் உள்ளார்."

17. "அல்லது அவர் கூறலாம் கடுஞ்சொற்களைத் தூரவிலக்கியவராய், துறவி கவுதமர் கடுமையான மொழியினின்றும் தன்னை விலக்கிக் கொண்டவராய் உள்ளார். எவையெல்லாம் குற்றமற்ற சொற்களோ, கேட்க மகிழ்ச்சியூட்டும் சொற்களோ, இனியவையோ, இதயத்தை அடைபவையே, நாகரீகமானவையோ, மக்கள் நேசத்திற்குரியவையோ-அத்தகு சொற்களையே அவர் உரைக்கிறார்".

18. "அல்லது அவர் கூறலாம் அறப்மான பேச்சுக்களைத் தூர விலக்கியவராய், துறவி கவுதமர் வீண்வாதங்களிலிருந்து தம்மை விலக்கிக் கொண்டவராய் உள்ளார். தேவைப்படும் சமயங்களில், உண்மைக்கேற்ப, பொருள் பொதிந்த சொற்களை, சமயம் பற்றி, சங்க முறைமை பற்றி அவர் பேசுகிறார். உரிய நேரத்தில, ஒருவரின் இதயத்தில் பதிய வைத்துக் கொள்ளத் தகுதியான சொற்களை, முழு எடுத்துக்காட்டுக்களோடு, தெளிவாய் வகுத்து, இலக்குக்குரிய வகையில் அவர் உரைக்கிறார்."

19. "அல்லது அவர் கூறலாம் துறவி கவுதமர் விதைகள் அல்லது செடிகளுக்குக் கூட துன்பமிழைப்பதினின்றும் தம்மை விலக்கிக் கொண்டவராயுள்ளார்.

" அவர் ஒரு நாளைக்கு ஒரு முறையே உணவுண்கிறார்-இரவில் உண்பதில்லை-காலம் கடந்த பின் (நடுப்பகலுக்குப் பின்) உணவேற்றலினின்றும் தவிர்த்து விடுகிறார்."

"அவர் வேடிக்கைக் காட்சிகள், சந்தைகள், மாதர்களின் நடனங்கள், பாடல்கள், இசைகள் ஆகியவற்றினின்றும் தவிர்த்து விடுகிறார்."

"அவர் ஆபரணங்களை அணிவது, அலங்காரம் செய்து கொள்வது, பூமாலை சூடிக்கொள்வது, நறுமண திரவியங்களைப் பூசிக் கொள்வது, நறுநெய் பூசுவது ஆகியவற்றினின்றும் தவித்திருக்கிறார்."

அவர் பொன்மையும் வெள்ளியையும் ஏற்பதினின்றும் தவிர்த்திருக்கிறார்.
அவர் சமைக்கப்படாத தானியங்களை ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.
அவர் மகளிரையோ, பெண்களையோ ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.

அவர் அடமை மனிதனையோ, அடிமைப் பெண்ணையோ ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.
அவர் ஆடுமாடுகளை உடைமையாய் ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.
அவர் கோழிகளையோ அல்லது பன்றிகளையே உடையாய் ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.
அவர் யானைகளையோ, கால்நடைகளையோ, குதிரைகளையோ, கழுதைகளையோ ஏற்பதின்றும் தவிர்த்திருக்கிறார்.

அவர் பண்படுத்தப்பட்ட அல்லது தரிசாய் விடப்பட்ட நிலங்களை உடைமைகளாய் ஏற்பதினின்றும் தவிர்ந்திருக்கிறார்.
அவர் இடைத்தரகராகவோ, தூதுவராகவோ இயங்குவதினின்றும் தவிர்ந்திரக்கிறார்.

அவர் வியாபாரத்தினின்றும் தவிர்ந்திருக்கிறார்.

அவர் கஜக்கோல்களாலோ, எடைக்கற்களாலோ, படி, மரக்காலகளாலோ ஏமாற்றுவதினின்றும் தவிர்ந்திருக்கிறார்.

அவர் குறுக்கு வழிகளான இலஞ்சம், ஏமாற்று, வஞ்சித்தல் ஆகியவற்றினின்றும் தவிர்ந்திருக்கிறார்.

அவர் குத்துவெட்டுகள், கொலைகள், கொத்தடிமைப்படுத்தல், வழிப்பறி, கொள்ளை, வன்முறை ஆகியவற்றினின்றும் தவிர்ந்திருக்கிறார்.

20. சோதரர்களே! சமயமாற்றமுறாத ஒரு மனிதர் ததாகதரைப் பற்றிப் புகழ்ந்து பேசுகையில் இவ்வாறான செய்திகளையெல்லாம் கூறக்கூடும். ஆனால் இவைகளைக் குறித்துக் கூட மகிழ்ச்சியால் அல்லது பூரிப்பால் நிறைந்தோ, அல்லது இதய எழுச்சி பெற்றோ

இருந்துவிடக்கூடாது. அவ்வாறு நீங்கள் இருந்துவிடின், அது கூட, உங்களின் தன்னை வெல்லும் தகைமைக்குத் தடையாய் நின்றிடக் கூடும். வெளியார் என்னைப் பற்றியோ, அல்லது தம்மத்தைப் பற்றியோ, அல்லது சங்கத்தைப் பற்றியோ புகழ்ந்துரைக்கையில், உண்மையில் சரியானது யாதென நீங்கள் அறிந்தேற்று இவ்வாறுரைக்க வேண்டும். "இதன் காரணமாக அல்லது அதன் காரணமாக இது உண்மையாய் உள்ளது. அது அவ்வாறுள்ளது- இத்தகைய செய்தி நம்மிடம் காணப்படுகிறது-நமக்குள் உள்ளது."

4. ஒரு பிக்கு நன்னெறியைப் (தம்மத்தை) பரப்பப் போராட வேண்டும்.

1. பிக்குகளை விளித்து புத்தர் ஒரு முறை உரைத்தார்.

2. "ஓ! சீடர்களே நான் உலகத்துடன் சச்சரவிடுபவனன்று." புத்தர் உரைத்தார், "ஆனால் உலகம் தான் என்னுடன் சச்சரவிடுகின்றது. உண்மையில் போதகர் ஒருவர் ஒருபோதும் உலகத்திலுள்ள ஒருவருடனும் சச்சரவிடவதில்லை"

3. "ஐயன் மீர்! நாம் நம்மைப் போராளிகள், போராளிகள் என்று அழைத்துக் கொள்கிறோமே எந்த வழியில் நாம் போராளிகளாய் உள்ளோம்."

4. "ஓ! சீடர்களே! நாம் போர்த்தொடுக்கிறோம். எனவே நாம் போராளிகளாய் உள்ளோம்?"

5. "ஐயன் மீர்! நாம் எங்கெங்கு எதற்காகப் போர்தொடுக்கிறாம்?"

6. "பரந்து உயர்ந்த நன்னெறிகளுக்காக, உயர்ந்த உன்னத நன் முயற்சிகளுக்காக, தேர்ந்து தெளிந்த நல்லறிவிற்காக-இவைகளுக்காகவே நாம் போ ாத்தொடுக்கிறாம். எனவேதான் நாம் போராளிகள் என்று அழைக்கப்படுகிறோம்."

7. "எங்கெல்லாம் நன்னெறி அபாயத்தில் உள்தோ அங்கெல்லாம் போராடுவத் தவிர்க்காதீர்கள் -வாயடைத்து நிற்காதீர்கள்."

பிக்குவும் இல்லறத்தாரும்

1. ஐயமிடும் கடப்பாடு.

1. சங்கமென்பது அமைப்பாக்கப்பட்ட ஒரு நிறுவனமாகும். அதில் உறுப்பினர்களின் சேர்க்கை அனைவருக்கும் பொதுவானதன்று.

2. பரிவ்வராஜகராக இருப்பது மட்டுமே, ஒரு பரிவ்ராஜகருக்கு சங்கத்தின் உறுப்பினர் பொறுப்பு அளிப்பதற்கு போதுமானதாயில்லை.

3. பரிவ்ராஜகர் உபசம்பதாத்தை அடைந்த பின்னர் மட்டுமே அவர் சங்கத்தின் உறுப்பினராக ஆக முடியும.

4. சங்கம் என்பது ஒரு சுயேச்சையான நிறுவனம். அது நிறுவனரிடமிருந்து கூட சுயேச்சையானது.

5. அது சுயாட்சியுடையது. அது தான் விரும்பும் எவரையும் தன் உறப்பினராக ஏற்க முடியம். உறுப்பினர் எவரையும் விநயபீடக விதிகளின் படியோ அது உறுப்பினர் பொறுப்பிலிருந்து நீக்க முடியும்.

6. பிக்குவையும் இல்லறத்தாரையும் இணைக்கும் ஒரே தொடர்பு ஐயமிடுதல் மட்டுமே ஆகும்.

7. பிக்கு தானத்தைக் சார்ந்திருக்கிறார். அந்தத் தானத்தை இடுபவர் இல்லறத்தாராயிருக்கிறார்.

8. இல்லறத்தார் அமைப்பாக்கப்பட்டவரன்று.

9. ஒரு மனிதரை சங்கத்தில் புகுவிக்கும் அடையாளமான சங்க தீக்ஷா அல்லது செயல்முறை ஒன்று உள்ளது.

10. சங்க-தீக்ஷா, சங்கத்திற்குள்ளும், தம்மத்திற்குள்ளுமான இரண்டிற்குள்ளும் புகுவித்தலை உள்ளடக்கியது.

11. இல்லத்திலிருந்து இல்லமற்ற நிலைக்குச் செலவதை விளைவாகக் கொண்ட சங்க உறுப்பினர்களாய் ஆகாமல், தம்மத்தில் மட்டும் புகுவதற்கு விரும்புவோருக்குத் தனியான தம்மதீக்சைக்ஷ இல்லை.

12. இது பயங்கரத் தவிர்ப்பாயுள்ளது. இந்தியாவில் பவுத்தத்தின் வீழ்ச்சிக்கு முடிவான காரணங்களில் இதுவும் ஒன்றாயிற்று.

13. இந்தப் புகுவிப்பு செயல்முறை விடுபட்டமையால், இல்லறத்தாரை ஒரு மதத்தினின்று இன்னொரு மதத்திற்குத் தாவவும், மிகக் கேடாக, ஒரே சமயத்தில் வெவ்வேறு மதங்களைப் பின்பற்றவும் கூட சுதந்திரம் உடையவராக்கி விட்டது.

## 2. ஒத்திசைந்த செல்வாக்கு

1. எவ்வாறாயினும், ஒரு பிக்கு, தவறிழைக்கும் இல்லறத்தாரை சீர்படுத்த தானமேற்கும் கடப்பாடே போதுமானது.

2. இதன் தொடர்பாக அங்குத்தர நிகாயத்தில் உரைக்கப்பட்டள்ள கீழ்வரும் விதிகள் கவனத்துக்குரியவை.

3. இந்த விவரங்களோடு கூட, ஏதேனும் குறும்புகள், தவறான நடத்தைகள் இருப்பின் ஒரு பிக்குவின் மேல் பிறபிக்குகளிடம் குறை கூற இல்லறத்தாருக்குப் பொது உரிமை உண்டு.

4. இதுபோன்ற குறைகூறல்கள் புத்தரை எட்டிய உடனே, அவர் அவற்றைப் பரிசீலித்து விநயபிடகத்தில் தொடர்புடைய விதியில் திருத்தம் மேற்கொண்டார்-அத்தகைய நடத்தை மீண்டும் புரியப்பட்டால், அது சங்கத்திற்கு எதிரான குற்றமாகும் என்னும் வகையில்.

5. விநயபிடகம் என்பது இல்லறத்தார் கூறும் குறைகளைக் களைவது தவிர வேறேதுமன்று.

6. பிக்குவுகும் இல்லறத்தாருக்கும் இடையிலான தொடர்பு இத்தகையதாயிருந்தது.

## இல்லறத்தாருக்குரிய விநயம்.

### 1. செல்வந்தருக்குரிய விநயம்.

1. உயர்வெய்திய புத்தர் ஏழ்மையை, உயர்வான வாழ்நிலை என அழைத்து மேன்மைப்படுத்தியதில்லை.

2. அவர் ஏழைகள் உள்ளதோடேயே திருப்தி கொண்டு, அதன்வழி உலகையே பெற்றுய்யலாம் என்ற அவர்களுக்குக் கூறவுமில்லை.

3. இதற்கு மாறாக, அவர் செல்வம் வரவேற்புக்குரியது என்று கூறினார். ஆனால் அவர் வலியுத்தியது யாதெனில், செல்வத்தை அடைதல் விநயத்திற்குட்பட்ட வழியில் அமைந்தி வேண்டுமென்பதே.

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் இருந்த இடத்திற்கு அநாதபிண்டிகர் வந்துற்றார், வந்துற்று, மேன்மைத்தங்கிய புத்தருக்கு வணக்கம் செலுத்திய அவர் ஓர்புறம் ஓர் இருக்கையில் அமாந்து வினவினார், "பூரண அறிவு பொலிந்த புத்தர் ஓர் இல்லறத்தாருக்கு எவையெல்லாம் விரும்பியேற்பதற்குரியவை, இனியவை, ஒப்புக் கொள்ளத்தக்கவையாக- ஆனால் அடைதற்கரியவையாக உள்ளன என்று கூறவேண்டும்."

2. பூரண அறிவு பொலிந்த புத்தர் அவரிடம் வினவப்பட்ட இவ்வினாவைக் கேட்டதும், உரைத்தார், "அத்தகையவற்றில் செல்வத்தை முறைப்படி அடைதல் முதலாவதாகும்."

3. "இரண்டாவது உங்கள் உறவினர் கூட முறையான வழியில் செல்வத்தை அடையும்படிச் செய்வதாகும்."

4. "மூன்றாவது முதுமை அடையும் வரை நீண்ட நாள் வாழ்தலாகும்."

5. "ஒரு உண்மையான இல்லறத்தாருக்கு இம்மூன்றையும் எய்துதல், இவ்வுலகில் விரும்பியேற்கத்தக்கதும், இனியதும் ஒப்புக் கொள்ளத்தக்கதும்-ஆனால் பெறுவதற்கரியதும் ஆவதோடு, இதற்கு நான்கு முன்தேவையான நிபந்தனைகளும் உண்டு. அவையாவன நல்லுணர்வெனும் மேன்மை, நன்னடத்தையெனும் மேன்மை, வள்ளன்மையென்னும் மேன்மை, பேரறிவென்னும் மேன்மை."

6. "நல்லுணர்வெனும் மேன்மையும், நன்னம்பிக்கையெனும் மேன்மையும், கீழ்க்கண்டவற்றைப் போதிக்கும், ததாகதர் பற்றிய உயர்பேரறிவைக் கொண்டதாகும், மேன்மைத்தங்கியவர் இவரே! மிக்குயர் நன்னெறியாளர்! மிக உன்னத விழிப்புற்றவர்! நல்லறிவிலும் நன்னடத்தையிலும் நிறைவெய்தியவர்! அனுகூலமானவர் உலக வழக்கெலாமுணர்ந்தவர்! ஒப்பிலா மனிதப் பயிற்றுநர்! மனிதகுல போதகர்."

7. உயிர்கொலையினின்றும், களவு புரிவதின்றும், கற்பின்மையினின்றும், பொய்புகல்வதினின்றும், போதையூட்டும் மதுவருந்ததலினின்றும் தவிர்ந்திருத்தல் ஆகிய நடத்தை நன்னெறி மேன்மையாகும்.

8. "வள்ளன்மையெனும் மேன்மை, ஓர் இல்லறத்தார் பேராசையென்னும் தொற்றினின்றும் விடுபட்ட மனத்துடன் வாழ்பவராய், ஈகைக் குணமுடையவராய், வாரி வழங்கும் கையராய், உள்ளதைப் பிறர்க்களிப்பதில் அர்ப்பணிப்புடையோராய் இருப்பதை உள்ளடக்கியதாகும்."

9. "பேரறிவுடையென்னும் மேன்மை எங்கு, எதில் உள்ளடங்கியுள்ளது? எவரொரு இல்லறத்தார், பொறாமையின், பேராசையின், தீய விருப்பத்தின், சோம்பலின், மனமயக்கத்தின், அலைபாயும் மனத்தின், குழப்பத்தின் ஆளுகைக்குட்பட்ட மனத்தோடு, இருக்கிறாரோ, அவர், தவறுமிக்க செயல்களைப் புரிபவராய், செய்யத்தக்கனவற்றைச் செய்யாதவராய், அவ்வாறிருப்பதன் மூலம் மகிழ்ச்சியையும் மதிப்பையும் இழந்தவராய் ஆகிறார் என்பதை நீங்கள் அறியுங்கள்."

10. "பொறாமை, பேராசை, தீயவிருப்பம், சோம்பல், மனமயக்கம், அலைபாயும் மனம், குழப்பம், மற்றும் சந்தேகம் ஆகியவை மனத்தின் கறைகளாகும். இந்தக் கறைகளிடமிருந்து விடுபட்டவர் எவரோ, அவ்வில்லறத்தார் உயாபேரறிவை, அளவிலா பேரறிவை, தெளிந்த பார்வையை, நிறைந்த பேரறிவை அடைகிறார்."

11. "இவ்வாறாக, செல்வத்தை முறையாகவும், நீதிநெறிப்படியும், பேருழைப்பால் பெற்றதாகவும், கருவிகணங்களாலும், வியர்வை சிந்தியும் (நெற்றி வியர்வை) உழைத்துச சேர்க்கப்பட்டதாகவும் அடையப்பட்ட செல்வம் ஒரு பெரும் மேன்மையாகும். இவ்வகைப்பட்ட இல்லறத்தார் தன்னைத்தான் மகிழ்ச்சியுடையவராய், பூரிப்புடையவராய் ஆக்கிக் கொண்டு தளும்பும் மகிழ்ச்சியைத் தனதாக்கிக் காக்கிறார்-மேலும் தம் பெற்றோரை, மனைவியை, மக்களை, பணியாளரை, மற்றும் தொழிலாளரை, நண்பரை, உற்றாரை மகிழ்ச்சியுடையோராயும், பூரிப்புடையோராயும் ஆக்கி அவர்களை மகிழ்ச்சியால் நிறைந்தோராக்கிக் காக்கிறார்."

## 2. இல்வாழ்வார்க்குரிய விநயம்

இந்தச் செய்தி பற்றிய புத்தரின் எண்ணங்கள் சீகாளரோடு அவர் நடத்திய பேருரையில் உருவகப்படுத்தப்பட்டுள்ளன.

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் இராஜகிரஹத்தில் வேலுவனத்திலுள்ள 'அணிலூட்டும் திடலில்' இருந்தார்.

2. அப்போது, அச்சமயத்தில் ஓர் இல்லறத்தாரின் மகனான, இளைய சீகாளர் உரிய நேரத்தில் எழுந்து, இராஜகிரஹத்தில் இருந்து சென்ற, ஈரத்தலைமுடியுடனும், ஈர உடையுடனும், கூப்பி உயர்ந்த கரங்களுடனும் பூமிக்கும் வானுக்கும் வணக்கம் செலுத்தினார்-கிழக்கு நோக்கியும், தெற்கு நோக்கியும், மேற்கு நோக்கியும், வடக்கு நோக்கியும், கீழ்நோக்கியும், மேல் நோக்கியும் பலப்பகுதிகளிலும் வணங்கினார்.

3. அவ்வதிகாலையில் மேன்த்தங்கிய புத்தா, உடுத்துக் கொண்டு, பிட்சா பாத்திரமும், மேலுடையும் ஏந்தி, தான மேற்பதற்காக இராஜகிஹத்திற்குள் புகுந்தார். இளைய சீகாளர் வணங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு அவரை வினவினார். "தாங்கள் ஏன் பூமியின், வானத்தின் பலபகுதிகளுக்கும் வணக்கம் செலத்துகிறீர்கள்?"

4. "என்னுடை தந்தை இறக்குத் தறுவாயில் என்னிடம் கூறினார். அன்பார்ந்த மகனே! நீ பூமியின் மற்றும் வானத்தின் திசைகள் யாவற்றையும் வணங்க வேண்டும். எனவே, ஐயா! நான் என் தந்தையின் சொல்லை மதித்து இவ்வையில் வணங்குகிறேன்."

5. "ஆனால் உலக மனிதன் ஒருவனுக்குரிய உண்மை மதமாக இது எப்படியிருக்க முடியும்?" என்று வினவினார் உயர்வெய்திய புத்தர். சீகாளர் பதிலிறுத்தார். வேறெது மனிதனின் சமயமாக இருக்க முடியும்? அவ்வாறு ஏதேனும் இருக்குமாயின் அது அதி சிற்புடையதாயிருக்கும். மேன்தைத்தங்கிய புத்தர் அவற்றை யாதென்று எனக்கு உரைப்பீராக."

6. "அவ்வாறாயின் இளைய இல்லறத்தாரே! என் வார்த்தகளுக்குச் செவி கொடுங்கள், அது யாதென்று நான் தங்களுக்குரைப்பேன். அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்! இளைய சீகாளர் ஒப்புதளித்தார். மேன்மைத்தங்கிய புத்தர் உரைத்தார்."

7. "ஒரு மதம் மனிதனுக்குரிய சமயமாக இருக்க வேண்டும்மாயின், அது அவனுக்கு தீய நடத்தைகளை தவிர்க்கக் கற்பிக்க வேண்டும். உயிரை அழித்தல், கொடுக்கப்படாததைக் களவாடல், கட்டுப்பாடற்ற நடத்தல், மற்றும் பொய்யுரை புகலல், ஆகிய நான்கும் அவன் தவிர்க்க வேண்டிய நடத்தைக் குற்றங்கள்."

8. "சீகாளரே! நீர் அறிவீராக! நடுவுநிலையின்மை, பகைமை, அறிவீனம், அச்சம் ஆகிய நோக்கங்களிலிருந்தே தீயசெயல்கள் புரியப்படுகின்றன. ஒருவன் இந்த நோக்கங்களால் ஈர்க்கப்படவில்லையாயின், அவன் எந்தத் தீச்செயலையும் புரியமாட்டான்."

9. "ஒரு மதம் மனிதனின் சமயமாக இருக்க வேண்டுமாயின் அது அவனுக்கு அவனுடைய செல்வத்தைப் பாழாக்கதிருக்கக் கற்பிக்க வேண்டும். செல்வத்தைப பாழடித்தலென்பது போதையூட்டும் மதுவுக்கடிமையாதல், அகாலத்தில் அநாவதியமாய் ஊர் கற்றல், கண்காட்சிகளில் அலைதல், சூதாட்டத்தில் வெறி கொள்ளல், கூடாநட்பு கொள்ளல், சோம்பலான பழக்கம் ஆகியவற்றிலிருந்து விளைகிறது."

10. "சீகாளரே! ஈண்டு போதையூட்டும் மதுவுக்கடிமையாதலைத் தொடர்ந்து ஆறுவித அபாயங்கள் நேரும்-உள்ள செல்வம் இழத்தல், சண்டைசச்சரவை அதிகரித்தல் - நோய்வாய்ப்படுதல், நன்னடத்தையை இழத்தல், அநாகரிகமாய்த் தோன்றல், முடங்கிய அறிவு ஆகியவை."

11. "அகாலத்தில் ஒருவன் அநாவசியமாய் ஊர்சுற்றலிருந்து ஆறுவிதத் துன்பங்கள் விளையும், அவனால் தன்னைத்தானே தற்காக்கவோ, பாதுகாக்கவோ இயலாது. மேலும் அவன் தன் மனைவியையும் குழந்தைகளையும் பாதுகாக்க முடியாது. அவ்வாறே அவனடைய உடமைகளையும் காக்க இயலாது. அதற்கும் மேலாக கண்டு பிடிக்கப்படாத குற்றங்களை அவன் செய்ததாகச் சந்தேகிக்க இடமேற்படும்-அவன் மீது வீண்வதந்திகள் பரப்பப்படும்-அவன் சந்திக்க வேண்டிய தொல்லைகள் பலவாகும்."

12. "வேடிக்கை கண்காட்சிகளில் ஒருவன் நடமாடுதலிருந்து ஆறுவிதத் துன்பங்கள் விளைகின்றன. அவன் எப்போதும் எண்ணியபடி இருப்பான்-எங்கே நடனம் நடக்கிறது? எங்பே பாடல் கேட்கிறது? எங்கே இசை ஒலிக்கிறது.? எங்கே பஜனை? எங்கே தாளம்? எங்கே முரசு ஒலி?"

13. "சூதாட்டத்தில் வெறிகொண்டவனுக்கு ஆறுவிதத் துன்பங்கள் விளைகின்றன. வெற்றி பெற்றவனாயின் பிறர் வெறுப்புக்காளாகிறான். வெற்றி பெற்றவனாயின் பிறர் வெறுப்புக்காளாகிறான் தோல்வியுற்றால் தன் செல்வ இழப்புக்கு வருந்துகிறான். அவன் உண்மைத்திறன் வீணாகிறது. அவன் வார்த்தைகளுக்கு நீதி மன்றத்தில் மதிப்பில்லை. அவன் நண்பர்களாலும், அதிகாரிகளாலும் இகழப்படுகிறான். அவன் திருமணக் கொள்வினை கொடுப்பினைக்காக யாராலும் நாடப்படுவதில்லை-ஏனெனில் அவர்கள் அவன் ஒரு சூதாடியென்றும், அவனால் ஒரு மனைவியை வைத்து வாழ்க்கை நடத்த முடியாதென்றும் கூறுவார்கள்."

14. "தீயவரோடு கூடியிருந்ததிலிருந்து ஆறுவிதத் துன்பங்கள் விளைகின்றன, யாரேனும் ஒரு மதுக்குடியன், யாரேனும் ஒரு ஏமாற்றுக்காரன், யாரேனும் ஒரு கையாடலகாரன், யாரேனும் ஒரு வன்முறையாளன் அவனுக்கு நண்பனாகவும் கூட்டாளியாகவும் இருப்பான்."

15. "சோம்பியிருக்கும் பழக்கத்திலிருந்து ஆறுவிதத் துன்பங்கள் விளைகின்றன, அவன், அப்போது மிகவும் குளிராயிருக்கிறது எனக்கூறி உழைக்காமலிருப்பான், அப்போது மிகவும் வெப்பமாயிருக்கிறது எனக் கூறி உழைக்காமலிருப்பான், அப்போது அது மிகச் சீக்கிரம் அல்லது மிகத் தாமதம் எனக் கூறி உழைக்காமலிருப்பான். அவன்தான் மிகவும் பசியாய் இருப்பதாய்க் கூறி உழைக்காமல் இருப்பான். அவன் தான் அதிகமாய் உணவுண்டு விட்டதாய்க் கூறி உழைக்காமலிருப்பான். அவன்தன்னால் முடிந்த அனைத்தையும் செய்யாமலிருப்பான், அவன் புதிய செல்வங்களைப் பெறுவதில்லை என்பதோடு உள்ள செல்வத்தையும் இழந்து விடுவான்."

16. "ஒரு மதம் மனிதனின் சமயமாய் இருக்க வேண்டுமாயின், அது அவனுக்கு உண்மையான நண்பன் யார் என அறியக் கற்பிக்க வேண்டும்."

17. "நண்பர்கள் போலிருப்பவர்களுக்குள் பகைவர்களை அடையாளங்காணுதல் அவசியமாகும். சரியாய்க் கூறினால்-ஒரு பேராசைப் பிடித்தவன்-செயலற்ற வீண்பேச்சுக்காரன்-முகத்துதி செய்பவன்-உடனிருக்கும் ஊதாரி ஆகியோரை."

18. "இவர்களின் முதலாமவன் நண்பர்கள் போல் தோன்றுபவர்களில் பகைவனாக அறியப்பட வேண்டியவன், ஏனெனில் அவன் பேராசையுடையவன் - சிறிதே தருபவன்-பெரிதாய்க் கேட்பவன-அவன் தன் வேலையை அஞ்சிச் செய்பவன்-எப்போதும் அவன் தன்னலத்தையே தொடர்பவன்."

19. "எவனொருவன் செயலற்றவனாய், வெறும் பேச்சுக்காரனாய் மட்டுமுள்ளானோ, அவன் நண்பர்கள் போல் தோன்றுபவர்களில் பகைவனாய் அடையாளம் காணப்பட வேண்டியவன், ஏனெனில் அவன் கடந்த காலம் பற்றி நயத்தகு வழியில் நட்பாய்ப் பேசுவதைத் தொழிலாய்க் கொள்பவன். அவன் எதிாகாலம் பற்றி நயத்தகு வழியில் நட்பாய்ப் பேசுவதைத் தொரிலாய்க் கொள்பவன். அவன் வெற்றுப் பேச்சால் உங்கள் உதவியைப் பெற முயலுகிறான்-ஆனால் தொண்டு செய்யத் தேவை ஏற்படுகையில், அவன் தன் இயலாமையை ஒப்புக் கொள்கிறான்."

20. "முகத்துதிக்காரன் நண்பர்கள் போல் தோன்றுவோரில், பகைவனாக அடையாளம் காணப்பட வேண்டியவன், ஏனெனில் அவன் தீமையைப் புரியவும், நன்மை புரியதிருக்கவும் ஆக இரண்டையும் ஒப்புக் கொள்பனாயிருப்பான். அவன் உங்கள் முகத்தெதிரே புகழ்வான்-பிறரிடம் உம்மைப் பற்றி இகழந்துரைப்பான்."

21. "அவ்வாறே உடனிருந்து ஊதாரியாய்ச் செலவழிக்கும் கூட்டாளியும், நண்பர்கள் போல் தோன்றுவோரில் பகைவனாக அடையாளம் காணப்பட வேண்டியவன், ஏனெனில் உங்களுக்குத் துணையாயிருப்பான், நீங்கள் வேடிக்கைக் கண் காட்சிகளுக்குச் செல்கையில் அவன் உங்களுக்குத் துணைவருவான். நீங்கள் சூதாட்ட வெறிக் காட்டுபடுகையில் அவன் உங்களுக்குத் துணைவருவான்."

22. "நான்குபேர் இதயத்திற்கிணங்கிய நல்ல நண்பர்களாய் இனம் காணப்படவேண்டியவராவர், உதவிபுரிபவர், இன்பத்திலும் துன்பத்திலும் ஒரே நிலையாய் நண்பராயிருப்பவர், நல்ல ஆலோசனைகளை வழங்குபவர், அனுதாபமுடைய நண்பர்."

23. "எந்த நண்பர் உதவிபுரிபவராயுள்ளாரோ அவர் இதயத்துக்கிணங்கிய நல்லோராய் அடையாளம் காணப்பட வேண்டியவராவர். ஏனெனில், அவர் நீங்கள் பாதுகாப்பற்றுப் போகையில் உம்மை பாதுகாக்கிறார்-நீங்கள் பாதுகாப்பற்றுப் போகையில் உம் உடைமைகளைப் பாதுகாக்கிறார்-நீங்கள் அஞ்சுகையில் உமக்கு அடைக்கலமாயிருக்கிறார்-நீங்கள் புரிய வேண்டிய பணிகளிருக்கையில் உம் தேவைகளை ஒன்றுக்கிரண்டாய் அவர் அளித்து உதவுகிறார்."

24. "இன்பத்திலும் துன்பத்திலும் ஒரே நிலையில் நண்பராயிரப்பவர் உங்கள் இதயத்துக்கிணங்கிய நல்லோராய் இனங்காணப்பட வேண்டியவராவார். ஏனெனில் அவர் தம் இரகசியங்களை உங்களுக்குரைப்பவராகவும் உம் இரகசியங்களை இரகசியமாய் வைத்திருப்பவராகவும், உங்கள் துன்பங்களில் உங்களைக் கைவிடாதவராகவும், உங்கள் பொருட்டு உயிரையே தருபவராகவும் இருப்பார்."

25. "தாங்கள் செய்ய வேண்டியனவற்றை அறிவிக்கும் நண்பர் இதயத்துக்கிணங்கிய நல்லோராய் இனங்காணப்பட வேண்டிய வராவார், ஏனெனில் அவர் நீங்கள் தவறுபுரிவதினின்றும் உம்மைத் தடுப்பவராய், நல்லவற்றைப் புரிவதில் உம்மோடு இணைபவராய், தாங்கள் இதுவரை கேட்டிராதவற்றைத் தங்களுக்கறிவிப்பவராய், உயர்நிலை எய்துதற்கான வழிகளை உமக்கு வெளிப்படுத்துபவராய் இருக்கிறார்."

26. "அனுதாபம் கொள்ளும் நண்பர் இதயத்துக்கிணங்கிய நல்லோராய் இனங்காணப்பட வேண்டியவராவார், ஏனெனில் தங்கள் இடர்ப்பாடுகளில் அவர் மகிழ்வதில்லை, தங்கள் வளத்திலேயே அவர் மகிழ்வடைகிறார். உங்களைக் குறித்து அவதூறு பேசுவதினின்று எவரையும் அவர் தடுக்கிறார்.உங்களைப் புகழ்வோரை அவர் ஆதரிக்கிறார், மேன்மைத்தங்கிய புத்தர் இவ்வாறுரைத்தார்."

27. "ஒருவனுக்கு ஆறுதிசைகளுக்கு வணக்கம் செலுத்தக் கற்பிப்பதைவிட ஒரு மதம், மனிதனின் சமயமாய் இருக்க வேண்டுமாயின், அவனுக்குத் தன்னை மதிக்கவும், தன் பெற்றோரை மதித்துப் போற்றவும் தன் ஆசிரியரை, மனைவியை, மக்களை, நண்பரை, தோழரை, பணியாளரை, தொழிலாளரை, சமய போதகர்களை மதிக்கவும் கற்பிக்க வேண்டும்."

### 3.குழந்தைகளுக்கான விநயம்.

"ஒரு குழந்தை தன் பெற்றோர்களிடம் இவ்வாறு கூறி ஒப்புக் கொடுக்க வேண்டும், ஒரு போதும் அவர்களால் ஆதரிக்கப்பட்ட நான் இப்போது அவர்களை ஆதரிப்பேன், அவர்கள் மீது பொறுப்புள்ள கடைமைகளை நான் புரிவேன். என் குடும்பத்தின் மரபையும், பண்பையும்

நான் காப்பேன். என் பா ாரம்பரியத்திற்குத் தகுதியுள்ளவனாய் நான் இருப்பேன். ஏனெனில் பெற்றோர்கள் அவன்பால் அன்புகாட்டியுள்ளார்கள். அவனைக் குற்றங்களிலிருந்து தடுத்துள்ளார்கள். அவனை நன்னெறி நோக்கி நடத்தியுள்ளார்கள். அவனுக்கு தொழில் கற்பித்துள்ளார்கள் அவன் திருமணத்தைப் பொருத்தமாக நடத்தியுள்ளார்கள். இதற்கிடையே தம் செல்வத்திற்கும் அவனை வாரிசாக்கி உள்ளார்கள்."

4. மாணவருக்குரிய விநயம்.

ஒரு மாணவன் தன் இருக்கையிலிருந்து எழுந்து, அவனுடைய ஆசிரியருக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும். அவர்களுக்காகக் காத்திருந்து, வணங்கி, கற்கும் ஆர்வத்தோடும், அவர்க்குத் தனித் தொண்டாற்றுவதன் மூலமும், கவனத்தோடு அவர்கள் கற்பிப்பதைக் கற்றறிய வேண்டும். ஏனெனில் ஆசிரியர்கள் தம் மாணவனை நேசிக்கிறார்கள். அவர்கள் அவனுக்குக் கற்க வேண்டியவற்றில் பயிற்சியளித்து, கற்றபடி நிற்கவும், நின்று நலம்பெறும், பயிற்றுவிக்கிறார்கள். கலைகள் அனைத்தையும் ஆழமாய் முழுமையாய்க் கற்பிக்கும் அவர்கள் அவனைப்பற்றி பகர்கிறார்கள். எவ்விடத்திலும் அவனுக்கு அவர்கள் பாதுகாப்பளிக்கிறார்கள்.

5. கணவனுக்கும் மனைவிக்கும்உரிய விநயம்.

ஒரு கணவன் தன் மனைவிக்கு மரியாதை காட்டுவதன் மூலமும், கருணையோடும், நல்லுணர்வோடும், ஒப்புக் கொடுக்க வேண்டும். அவளுக்கு முழு அதிகாரம் அளின்பதன் மூலம் அவளை அலங்கரிக்க வேண்டும். ஏனெனில், மனைவி அவனை நேசிக்கிறாள்-அவளது கடமைகள் நன்கு புரியப்படுகின்றன இருவரின் உறவினர் பாலும் இரக்கம் கொள்கிறாள், நல்லுணர்வுடையவளாய், நன்மையைப் பெற்றுத்தருபவளாய், அவன் ஈட்டியவற்றைக் காப்பவளாய் திறனாலும் உழைப்பாலும் தன் பணிகளைப் புரிகிறாள்.

2. ஒரு குடும்பத் தலைவன் தன் நண்பருக்கும், தோழருக்கும் வள்ளன்மையாலும், கருணையாலும், நல்லுதவியாலும் ஒப்புக் கொடுத்துத் தன்னைப்போல் அவர்கள் நடத்த வேண்டும்-அவன் தன் சொல்லைப்போல் அவர்களை நடத்த வேண்டும்- அவன் தன் சொல்லைப்போல் நல்ல செயலுடையவனாய் இருக்க வேண்டும். ஏனெனில் அவன் நண்பர்களும் உற்றாரும் அவனை நேகிக்கின்றனர். அவன் பாதுகாப்பற்றிருக்கையில் அவர்கள் அவனைக் காக்கின்றனர். அந்நேரங்களில், அவன் உடமையைக் காக்கின்றனர். ஆபத்துக்களில் அவர்கள் அவனுடைய அடைக்கலமாகின்றனர். அவன் தொல்லையில் இருக்கையில் அவர்கள் அவனைத் துறந்தோடுவதில்லை. அவன் குடும்பத்தின்பால் அவர்கள் அக்கறை காட்டுகின்றனர்.

6. எஜமானருக்கும் வேலையாளுக்கும் உரிய விநயம்.

1."ஒரு எஜமானர் அவருடைய பணியாட்களிடமும், தொழிலாளரிடமும். அவர்கள் சக்திக்கேற்ப வேலையை விதிக்கவும், தேவைக்கேற்ப அவர்களுக்கு உணவும், ஊதியமும் வழங்கவும் அவர்களை நோயுற்ற காலத்தில் பராமரிக்கவும் அற்புதமான பண்டங்களை அவர்களோடு பகிர்ந்து கொள்ளவும். அவ்வப்போது அவர்களுக்கு விடுமுறை அளிக்கவும் ஒப்புக் கொடுக்க வேண்டும். ஏனெனில் பணியாட்களும் தொழிலாளரும் எஜமானரை நேசிக்கின்றனர். அவருக்கு முன் விழித்தெழுகின்றனர் அவருக்குப் பின்னரே அவர்கள் ஓய்வெடுக்கப்படுகின்றனர். அவர்களுக்கு அளிக்கப்படுவதைக் கொண்டே அவர்கள் திருப்தியுறுகின்றனர். அவர்கள் தங்கள் பணிகளை நன்கு புரிகின்றனர். அவர்கள் தம் எஜமானரின் புகழையும், நற்பெயரையும் பரப்புகின்றனர்."

2. "ஒரு குடும்பத் தலைவன் சமயபோதகர்களுக்கு, பற்று மிக்க செயலாலும், மனத்தாலும் தம் இல்லத்தை அவர்களுக்காகத் திறந்து வைத்து வரவேற்றும், அவர்களின் உலகியல் தேவைகளை அளித்தும் ஒப்புக் கொடுக் வேண்டும். ஏனெனில் சமயபோதகர்கள் அவனைத் தீமையினின்றும் தடுக்கிறார்கள் நல்வழியில் அவனை ஆற்றுப்படுத்துகிறார்கள்-அவர்கள் அவனை நல்ல நினைவுகளுடன் நேசிக்கிறார்கள்-அவன் கேள்வியுற்றவற்றை அவனுக்கு அவர்கள் சரிப்படுத்துவர், தூய்மைப் படுத்துவர்."

7. முடிவுரைகள்

1. மேன்மைத்தங்கிய புத்தர் சீகாளரிடம் இவ்வாறுரைத்த போது, அவ்விளைய இல்லறத்தார் இதனைக் கூறினார். "அருமை! ஐயன்மீர்! அருமை! வீசியெறிந்து வீழ்த்தப்பட்டதை மீண்டுமொருவர் கட்டியமைத்தாற்போல்-மறைக்கப்பட்டதை ஒருவர் வெளிப்படுத்தியதைப் போல்-அல்லது வழிதெரியாதவனுக்குப் பாதையைக் காட்டுவதுபோல் அல்லது இருளுக்குள் தீபம் ஏந்திச் செலவது போல்-கூறினீர்கள், கண்களுடையோர் காண்பர்! இதனினும் மேலாய் மேன்மைத்தங்கிய புத்தரால் பேருண்மைப் பலவழிகளிலும் புலப்படுத்தப்பட்டதை ஒருவர் வெளிப்படுத்தியதைப்போல்-அல்லது வழிதெரியாதவனுக்குப் பாதையைக் காட்டுவதுபோல் அல்லது இருளுக்குள் தீபம் ஏந்திச் செல்வது போல்-கூறினீர்கள், கண்களுடையோர் காண்பர்! இதனினும் மேலாய் மேன்மைத்தங்கிய புத்தரால் பேருண்மைப் பலவழிகளிலும் புலப்படுத்தப்பட்டது."

2. "நான்-நானும்கூட அவரிடம் அடைக்கலம் புகுகிறேன்-மெய்மையாம் தம்மத்திடம் சங்கத்திடமும் சரண்புகுகிறேன். மேன்த் தங்கிய புத்தர், இந்நாள் முதலாய் என் வாழ்வின் இறுதிநாள்வரை தங்களின் அடைக்கலமாக என்னை ஏற்பீராக."

8.மகளிருக்கான விநயம்.

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் பத்தியத்திற்கருகில் ஜாதிய வனத்தில் தங்கியிருந்தார். ஆங்கு மெண்டகரின் பேரரான உக்கஹா அவரைக் கண்டுற்று, வணங்கியபின் ஓர்புறம் அமர்ந்தார், அவ்வாறமர்ந்து மேன்மைத்தங்கிய புத்தரிடம் அவர் கூறினார்.

2. ஐயன் மீர்! மேன்மைத்தங்கிய புத்தர் நாளை என் இல்லத்தில் நான் காமவராய் (உங்கள் மூவருடன்) உணவேற்க வேண்டும்.

3. மேன்மைத் தங்கிய புத்தர் மவுனத்தால் ஒப்புக்கொண்டார்.

4. அதன்பின் உக்கஹா, மேன்மைதங்கிய புத்தர் ஒப்புக் கொண்டதைக் கண்டு, தன் இருக்கையை விட்டு எழுந்து, வணங்கி, தன் வலப்புறமாய் மேன்மைத்தங்கிய புத்தரை வலம் வந்துவிடைபெற்றார்.

5. இரவுகடந்தபின், மேன்மைத்தங்கிய புத்தர் வைகறைப் போதிலதுவராடை அணிந்து, பிட்சாபாத்திரமும் மேலாடையும் ஏந்தி உக்கஹாவின் இல்லத்திற்குச் சென்று, ஆங்கு அவர்க்கென இடப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார். அப்போது உக்கஹா தன் கரங்களாலேயே மேன்மைத்தங்கிய புத்தருக்கு நல்லுணர்வு படைத்து அவரைத் திருப்தியுறச் செய்தார்.

6. மேன்மைத்தங்கிய புத்தர் தன் பிட்சாபாத்திரத்தினின்று உணவுண்டு முடித்தபின் ஓர் புறம் அமர்ந்தார். அமர்ந்து இவ்வாறு உரைக்கலானார்.

7. "ஐயன்மீர்! என் இப்புதல்விகள் விரைவில் தம் கணவர்களின் குடும்பங்களோடு இணையவிருக்கிறார்கள், ஐயன்மீர்! மேன்மைத்தங்கிய புத்தர் அவர்களுக்கு ஆலோசனைப் புகல்வீர்களாக, மேன்மைத் தங்கிய புத்தர் அவர்களுக்கு அறிவுறுத்துவீர்களாக, அவர்களின் நலனுக்காவும் நெடுங்கால மகிழ்ச்சிக் காகவும்!"

8. பின் மேன்மைத்தங்கிய புத்தர் அவர்களிடம் பேசியவாறு உரைத்தார், "யாண்டிருப்பினும், குழந்தைகளே! தங்களை இவ்வழிகளில் பயிற்றுவித்துக் கொள்ளுங்கள். நம்முடைய நல்வாழ்வை விழைந்து, நம் இன்பத்தை நாடி, கருணையுடையுடன் எவ்வகையான கணவர்க்கு நம்மை நமபெற்றோர் மணமுடித்துக் கொடுப்பினும்-அவர்பால் அன்புடைமையின் விளைவாய், முன்எழுந்து, பின் உறங்குவோராய், விரும்பி உழைப்போராய், கோருபவற்றை இன்சொற்களால் இனிமையாய்க் கோருபவராய் இருத்தல் வேண்டும். குழந்தைகளே! இவ்வாறு உம்மை நீங்கள் பண்படுத்திக் கொள்ளுங்கள்."

9. "குழந்தைகளே! மேலும், இவ்வாறான வழியிலும் உம்மை நீங்கள் பயிற்றுவித்துக் கொள்ளுங்கள்: நாம் நம் கணவரின் உறவினர் அனைவரையும், அவர்தம் தாய் ஆயினும் தந்தை ஆயினும், துறவோரையும், பெரியோரையும், மதித்து, போற்றி, அவர்கள் வருகையில், இருக்கையும், நீருமளித்து உபசரிக்க வேண்டும், குழந்தைகளே! உம்மை இவ்வாறாகப் பண்படுத்திக் கொள்ளுங்கள்."

10. "பெண்களே! நீங்கள் உங்கள் கணவரது எந்தவித வேலைகளிலும் பயிற்சி கொள்ளல் வேண்டும். அது உரோமம் அல்லது பருத்தி சம்பந்தப்பட்டதோ ஆகிலும், அவற்றில் திறமையும் விரைந்து செயல்படும் ஆற்றலும் உடையவராய் பயிற்றுவித்துக் கொள்ளுங்கள்."

11. "பெண்களே! மேலும் இவ்வாறான வழிகளில் உங்களை நீங்களே பண்படுத்திக் கொள்ளுங்கள், செய்தியாளர், பணியாளர் ஆகிறோர் ஒவ்வொருவரின் பணித்திறனையும், அவர்கள் செய்து முடித்த பணிகளிலிருந்து அறிந்து கொண்டும், அவர்கள் செய்த தவறுதலை அறிந்தும், மேலும் நோயாளியின் பலத்தையும் பலவீனத்தையும் அறிந்துக் கொண்டு, கடின உணவையோ அல்லது மென்மையான உணவையோ அவர்களுக்கு வழங்க வேண்டும். இவ்வாறாக பயிற்றுவித்துக் கொள்ளுங்கள்."

12. "குழந்தைகளே! மேலும் இவ்வாறான வழியிலும் உம்மை நீங்கள் பயிற்றுவித்துக் கொள்ளுங்கள், தன்கணவர் வீட்டுக்கு ஈட்டிவரும் பணம், தானியம், வெள்ளி மற்றும் பொன்னைப் பாதுகாப்பாய் வைக்கவும், கண்ணும் கருத்துமாய் கவனிக்கவும், கொள்ளையரோ, திருடரோ, மதுக்குடியரோ, ஊதாரிகளோ கையகப்படுத்தாமல் காக்கவும் வேண்டும். குழந்தைகளே! உம்மை இவ்வாறாக நீங்கள் பயிறற்றுவித்துக் கொள்ளுங்கள்."

13. இந்த அறிவுரைகளைச் செவிமடுத்த உக்கஹாவின் புதல்வியர் மகிப்பெரும் மகிழ்ச்சியுடன் புத்தருக்கு நன்றியுடையோராயினர்.

### 3.ஜீவகரின் தானம்

1. மருத்துவர் ஜீவகர் ஒரு நாளுக்கு இருமுறை உயர்வெய்திய புத்தர் இராஜ கிரஹத்திலிருக்க நேர்ந்த போதெல்லாம் வந்து காணுவார்.

2. பேரரசர் பிம்பிசாரரால் உயர்வெய்திய புத்தருக்குத் தானமாய் அளிக்கப்பட்ட வேலு வனம் வெகுதொலைவிலிருப்பதாய்க் கண்டார் ஜீவகர்.

3. இராஜகிருஹத்தில் ஜீவகர் ஆம்பவனம் என்றழைக்கப்பட்ட தமக்குச் சொந்தமான சோலையை உடைடயவராய் இருந்தார்-அது அவருடைய இருப்பிடத்திற்கு வெகு அருகே இருந்தது.

4. அனைத்துத் தேவையான அமைப்புக்களுடன் ஒரு விஹாரினை எழுப்பி ஆம்பவனத்தையும் விஹாரையும் உயர்வெய்திய புத்தருக்குத் தானமாய் அளிக்க அவர் எண்ணினார்.

5. மனத்தில் இந்தக் கருத்துடன் அவர் உயர்வெய்திய புத்தரை அணுகித் தம்விருப்பத்தைத் தாம் நிறைவேற்றவிடும்படி வேண்டினார்.

6. உயர்வெய்திய புத்தர் தம் ஒப்புதலை மவனமாய் இருப்பதன் மூலம் வெளிப்படுத்தினார்.

4.ஆம்ப்ரபாலியின் தானம்

1. அப்போது மேன்மைதங்கிய புத்தர் நாதிகாவில் தங்கியிருந்தார். ஓர் இடமாற்றத்தை விழ்ந்த அவர் ஆனந்தரை விளித்து உரைத்தார். "வாரும் ஆனந்தரே! நாம் வேசாலிக்குச் செல்வோம்."

2. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்! மேன்மைதங்கிய புத்தரிடம் ஒப்புதலாய் உரைத்தார் ஆனந்தர்."

3. பிறகு மேன்மைதங்கிய புத்தர், பெரிய சோதரப் பரிவாரத்துடன் வேசாலிக்குச் சென்றடைந்தார். ஆங்கு வேசாலியில், மேன்மைத்தங்கிய புத்தர் ஆம்பரபாலியின் சோலையில் தங்கினார்.

4. அப்போது அரச நடனமாது ஆம்பரபாலி மேன்மைத் தங்கிய புத்தர் வேசாலிக்கு வந்துற்றதையும், தன்னுடைய மாந்தோப்பில் தங்கி இருப்பதையும் கேள்வியுற்றார். அரசத் தேர்கள் பலவற்றை ஏற்பாடு செய்ய ஆணையிட்டு, அவற்றில் ஒன்றில் அவர் அமர்ந்து தன் பரிவாரத்துடன் வேசாலியிலிருந்து தன்சோலைக்குச் சென்றடைந்தார். தேர்கள் செல்லத்தக்க பாதை வரை சென்றபின், அவர் தேரை விட்டிறங்கி, மேன்மைத் தங்கிய புத்தர் இருந்த இடம் வரை நடந்து, மிக்க மரியாதையுடன் ஓர்புறம் தன் இருக்கையில் அமர்ந்தார். அவ்வாறு அவர் அமர்ந்த பின், மேன்மைத்தங்கிய புத்தர் அவருக்கு சமயபோதனைகளைக் கற்பித்தார்.

5. அதன்பின் அவர், மேன்மைத்தங்கிய புத்தரிடம் கூறினார், "மேன்மைத்தங்கிய புத்தர் எனக்கோர் பேறு புரிய வேண்டும். அவருடைய சோதரத் துறவோரோடு என்வீட்டில நாளை தம் உணவை அவர் ஏற்க வேண்டும்."

6. மேன்த்தங்கிய புத்தர் மவுனத்தால் தன் ஒப்புதலை அளித்தார். அதன்பின் அரச நடனமாது ஆம்ப்ரபாலி மேன்மைத் தங்கிய புத்தர் ஒப்புக் கொண்டதைக் கண்டு, தன் இருக்கையிலிருந்து எழுந்து, வணங்கி, வலம் வந்து ஆங்கிருந்து அகன்றார்.

7. அப்போது வேசாலியின் லிச்சாவியர்கள் மேன்மைத்தங்கிய புத்தர் வேசாலிக்கு வந்துற்றதையும் ஆம்பரபாலியின் சோலையில் தங்கியிருப்பதையும் கேள்வியுற்றனர். அவர்களும் மேன்மைத் தங்கிய புத்தரை தம்மிடத்திற்கு உணவருந்த அழைக்க விரும்பினர். பற்பல அரசத் தேர்களை ஏற்பா செய்து, அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொன்றில் அமர்ந்து தங்கள் பரிவாரங்களுடன் வேசாலியிலிருந்து ஆங்குச் சென்றனர்.

8. அவர்களும் ஆம்ப்ரபாலியும் வழியில் சந்தித்துக் கொண்டனர்.

9. இளம் லிச்சாவியர்களை நோக்கி ஆம்ப்ரபாலி வேகவேகமாய், விடு விடுவென, விரைந்து விரைந்து வந்துற்ற காலை நாட்டிய நாயகி ஆம்பரபாலியிடம் லிச்சாவியர் வினவினர், "இததுனை விரைந்து எமைநோக்கி வருவதென்ன?"

10. "ஐயன்மீர்! நான் இப்போது தான் மேன்மைத்தங்கிய புத்தரையும், அவர்தம் சோதரத்துறவோரையும் நாளைக்கு உணவருந்த அழைத்துவிட்டு வருகிறேன்" என்றார் ஆம்பரபாலி.

11. "ஆம்பரபாலியே! இந்த நற்பேற்றினை நூறாயிரம் பொற்காசுகள் பெற்று எங்களுக்கு விட்டுக் கொடு" என்றனர் அவர்கள்.

12. "ஐயன் மீர்! நீங்கள் வேசாலி முழுவதையும் குடிபடைகளோடு வழங்க முன்வந்தாலும், நான் இந்த நற்பேற்றை விட்டுத்தர மாட்டேன்."

13. லிச்சாவியர்கள் கைகளைப் பிசைந்து கொண்டு வியந்தனர், "இந்த மாம்பழ மங்கையால் நாம் வெல்லப்பட்டுவிட்டோம். இந்த மாம்பழ மங்கையால் நாம் பின்தள்ளப்பட்டு விட்டோம்." இவ்வாறு கூறிக்கொண்டே அவர்கள் ஆம்ப்ரபாலியின் மாஞ்சோலைக்குச் சென்றனர்.

14. தாம் வெல்லப்பட்டதை அறிந்த அவர்கள், இருந்தாலும் இன்னமும், அவர் தங்கள் அழைப்பை முதலாய் ஏற்க மறுபரிசீலனைச் செய்வார் என்ற நம்பிக்கையுடன் உயர்வெய்திய புத்தரை அணுகினர். எனவேதான் அவர்கள் ஆம்ரபாலியின் மாஞ்சோலைக்குச் சென்றனர்.

15. மேன்மைத்தங்கிய புத்தர் லிச்சாவியர் வருவதை தூரத்தில் இருந்தே கண்டதும், சோதரத்துறவோரை விளித்து உரைத்தார், சோதரரே! உயர்வெய்தியோரை எப்போதும் காணாதிருக்கும் சோதரர்கள் இதோ, இந்த லிச்சாவியர் குழுவைக் காணுங்கள்-இந்த லிச்சாவியர் குழுவை மேம்பட்டோரோடு ஒப்புமை காணுங்கள்.

16. தேர் செல்லும் தூர எல்லைவரை வந்துற்றபின் லிச்சாவியர் தேர்களினின்று இறங்கி, மேன்த்தங்கிய புத்தர் இருந்த இடத்திற்கு நடந்து சென்று, மிக்க மரியாதையுடன் அவரருகே தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

17. அதன்பின், அவர்கள் மேன்மைத்தங்கிய புத்தரை விளித்து உரைத்தனர், "மேன்மைத்தங்கிய புத்தர் எங்கள் உணவை நாளை எம் இல்லத்தில் தம் சோதரர்களுடன் ஏற்கும் நற்பேற்றை எமக்கு அளிப்பீராக."

18. "லிச்சாவியர் நாளைக்கு ஆம்ப்ரபாலியுடன் உணவருந்த நான் வாக்களித்து விட்டேன்!" என்பது பதிலாயிருந்தது.

19. லிச்சாவியர் தாம் தோல்வியுற்றதை அறிந்தனர், அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தரின் வா◌ாத்தைகளை ஏற்று, நன்றி தெரிவித்த பின், அவர்கள் தம் இருக்கையை விட்டு எழுந்து மேன்மைத்தங்கிய புத்தரை வணங்கி, வலம் வந்து வெளிச்சென்றனர்.

20. இரவின் முடிவில் அரச நடனமாது ஆம்பரபாலி தன் மாளிகையில் இன்சுவை உணவுப் பண்டங்களைத தயாரித்து மேன்மைத்தங்கிய புத்தருக்கு உரிய நேரத்தை அறிவிக்கும் வகையில் கூறினார். "ஐயன்மீர்! உரிய நேரமிது, உணவு தயாராய் உள்ளது."

21. மேன்மைத்தங்கிய புத்தர் அதிகாலையிலேயே துவராடை அணிந்து, பிட்சாபாத்திரமேந்தி, மேலாடையுடுத்து, சோதரத் துறவோருட்ன ஆம்ப்ரபாலியின் மாளிகையிருந்த இடம் நோக்கிச் சென்றார். அவர் ஆங்கு வந்துற்றபின் அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தன் இருக்கையில் அமர்ந்தார். அப்போது அரச நடனமாது ஆம்பரபாலி இன்சுவை உணவுபண்டங்களை புத்தரின் தலைமையிலிரந்த சோதரத் துறவோர் முன் படைத்து, அவர்கள் போதுமென மறுக்கும் வரை உபசரித்தார்.

22. உயர்வெய்திய புத்தர் தம் உணவை முடித்துத் தம் பிட்சா பாத்திரத்தையும், சுரங்களையும் கழுவிய பின், அரச நடனமாது ஆம்ப்ரபாலி ஒரு தாழ்வான இருக்கையில் அவரருகே அமர்ந்து மேன்மைத்தங்கிய புத்தரிடம் கூறினார்.

23. "ஐயன்மீர்! என் மகிழ்வனத்தைத் தங்களுக்கும் தங்கள் சங்கத்திற்கும் தானமாக அளிக்கிறேன்." மேன்மைத்தங்கிய புத்தர் அத்தானத்தை ஏற்றுக் கொண்டார். ஒரு சமயப் பேருரை வழங்கிய பின் தன் இருக்கையிலிருந்து எழுந்து, அவரிடமிருந்து விடைபெற்றார்.

## 5. விஷாகாவின் கொடை உள்ளம்.

1. விஷாகா ஷ்ராவஸ்தியில் உள்ள ஒரு செல்வந்த மாதாவார். அவர் நிறைய புத்திரர்களையும், பேரர்களையும் உடையவராயிருந்தார்.

2. உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில் தங்கியருக்கையில் விஷாகா, உயர்வெய்திய புத்தர் இருந்த இடைத்திற்குச் சென்று தன்வீட்டில் உணவருந்துதற்கான அழைப்பை விடுத்தார். உயர்வெய்திய புத்தர் அதை ஏற்றார்.

3. இரவும் அடுத்த காலையும், நல்ல மழை பொழந்தது, அடுத்த நாள் காலை, பிக்குகள் உலர்த்திக் கொள்ள தம் ஆடையைக் களைந்து மழை தம்மேல் படுமாறிருந்தனர்.

4. அடுத்த நாள் உயர்வெய்திய புத்தர் தம் உணவை உண்டு முடித்தபின், அவரருகே தன் இருக்கையில் அமர்ந்து விஷாகா கூறினார் உயர்வெய்திய புத்தரிடம் நான் வேண்டும் பேறுகள் எட்டாகும்."

5. அதன்பின் உயர்வெய்திய புத்தர் உரைத்தார், "ஓ! விஷாகாவே! அவை யாவையென்று அறியாதவரை ததாகதர் எந்தப் பேற்றையும் அளிப்பதில்லை."

6. விஷாகா பதிலிறுத்தார். "ஐயன் மீர்! நான் வேண்டும் பேறுகள் பொருத்தமானவை-மற்றும் மறுக்கவொண்ணாதவை."

7. பேறுகளை வேண்ட அனுமதி பெற்றபின் விஷாகா கூறினார். "ஐயன் மீழ்! என் வாழ்நாள் முழுவதும், சங்கத்தோருக்கு மழைகாலத்தில் உடையளிக்கவும், பதிதாய் வருகிற பிக்குகளுக்கு உணவளிக்கவும். இங்கிருந்து வெளியேறும் பிக்குகளுக்கு உணவளிக்கவும், பிணியுற்றோருக்கு உணவளிக்க பிணியுற்றோர்க்கு மருந்தளிக்கவும், சங்கத்திற்கு நிலையாய் ாற்சோறு அளிக்கவும், பிக்குணிகளாம் சோதரிகளுக்கு நீராட ஆடையளிக்கவும் விழைகிறேன்."

8. புத்தர் உரைத்தார் "ஆயினும், விஷாகாவே! இந்த எட்டப் பேறுகளைத் ததாகதரிடம் தாங்கள் என்ன கருத்தில் வேண்டுகிறீர்கள்?"

9. விஷாகா பதிலிறுத்தார், "ஐயன் மீர்! நான் என் பணிப்பெண் சென்று, விஹாரை அடைந்தபோது, பிக்குகள் மழைபெய்கையில் ஆடைகளைக் களைந்திருப்பதைக் கண்டு எண்ணியிருக்கிறாள். 'இவர்கள் பிக்குகளன்று-தம் மீது மழைபொழிய விட்டிருக்கும் இவர்கள் நிர்வாண முனிவர்கள் போலும்' எனவே,அவள் என்னிடம் திரும்பி நடந்ததைக் கூறியபோது, நான் அவளை இரண்டாம் முறையாக அனுப்பினேன்."

10. "ஐயன்மீர்! நிர்வாணமாயிருப்பது தூய்மையுமன்று-கலகமானது. ஐயன்மீர்! இச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டே நான் என் வாழ்நாள் முழுவதும் சங்கத்தோருக்கு மழைகாலத்தில் பயன்படுத்து உரிய தனி ஆடைகளை வழங்க விரும்புகிறேன்."

11. "ஐயன்மீர்! என் இரண்டாவது விருப்பத்தைப் பொறுத்த வரை, சங்கத்திற்குள் புதிதாய்ச சேரும் பிக்கு, நேரடியான வழிகளில் செல்லவியலாமையால், தான உணவேற்கும் இடங்களை அறியாமல், தன் வழியே தானமேற்கப் போய்க் களைத்து விடுகிறார். ஐயன்மீர்! இச்சூழ்நிலையைக் கருத்தில் கொண்டே நான் வாழ்நாள் முழுவதும் புதிதாய் வந்து சேரும் பிக்குகளுக்கு உணவளிக்க விழைகிறேன்."

12. "ஐயன்மீர்! மூன்றாவதாக இவ்விடம்விட்டு வெளிச்செல்லும் பிக்கு, தான உணவைத் தேடுகையில், பிற பிக்குகளால் பின்விடப்பட்டோ, அல்லது தாமதமாகவோ, தான் செல்ல விரும்புமிடத்திற்குச் செல்வதால், சாலையில் களைத்து நிற்க நேரிடுகிறது."

13. "ஐயன்மீர்! நான்காவதாக, பிணியுற்ற ஒரு பிக்கு தன் பிணிக்காலத்தில் பொருத்தமான உணவைப் பெறவில்லையாயின், அவர்தம் பிணி அவருக்கு அதிகமாகி, அவர் இறந்துவிடக்கூடும்."

14. "ஐயன்மீர்! ஐந்தாவதாக பிணியுற்றோரைப் பேணும் பிக்கு, தமக்கான தான உணவைப் பெறச்செல்லும் வாய்ப்பை இழந்து விடுகிறார்"

15. "ஐயன்மீர்! ஆறாவதாக, பிணியுற்ற ஒரு பிக்கு தேவையான மருந்துகளைப் பெறாவிடின், அவருக்கு அவர்தம் பிணி அதிகப்பட்டு, அவர் இறந்து விடக்கூடும்."

16. "ஐயன்மீர்! ஏழாவதாக, உயர்வெய்திய புத்தர் பால்கஞ்சி உணவைப் போற்றியுரைத்ததாய் நான் கேள்வியுற்றுள்ளேன்-ஏனெனில் அது மனச் சுறுசுறுப்பளித்து, பசியையும், தாகத்தையும் தணிக்கிறது, அது ஆரோக்கியமானவர்க்கு ஒரு முழுமையான சத்துணவாகவும், பிணியுற்றோருக்கு மருந்தாகவும் உள்ளது. எனவே, நான் சங்கத்தோருக்கு என் வாழ்நாள் முழுதும் பால்கஞ்சி உணவளிக்க விரும்புகிறேன்."

17. "ஐயன்மீர் இறுதியாக, பிக்குணிகள் அசிரவதி ஆற்றில் அரச நடனமாதர் குளிக்கும் அதே இடத்தில், நிர்வாணமாய் குளிக்கும் வழக்கமுடையோராய் உள்ளனர். ஐயன்மீர்! அந்த அரச நடன மாதர்கள் பிக்குணிகளை இவ்வாறு கூறிப் பரிகசிக்கின்றனர், 'பெண்களே! உங்கள் கற்பை நீங்கள் இளமையாயிருக்கையில் பேணுவதில் என்ன நன்மை? நீங்கள் முதியோரான பின் கற்பை அப்போது பேணுங்கள். இருவித நன்மையும் அமைந்தவராவீர்.' ஐயன்மீர்! ஒரு பெண்ணுக்கு நிர்வாணம் தூய்மையுமன்று, வெறுப்பிற்குரியது, கலகமானது."

18. "ஐயன்மீர்! இந்தச் சூழ்நிலைகளையே நான் கருத்தில் கொண்டுள்ளேன்."

19. உயர்வெய்திய புத்தர் உரைத்தார். "ஆயினும், ஓ! விஷாகா! ததாகரிடம் இந்த எட்டுப் பேறுகளை நீங்கள் வேண்டுகையில் உமக்கான பலனாய் நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்?"

20. விஷாகா பதிலிறுத்தார், ஐயன்மீர்! பல்வேறிடங்களில் மழைக்காலத்தைக் கழித்த பிக்குகள், உயர்வெய்திய புத்தரைக் காண ஷராவஸ்திக்கு வருவர். அவ்வாறு வந்து உயர்வெய்தி புத்தரை அவர்கள் இவ்வாறுரைத்து வினவுவர். "குறிப்பிட்ட ஒரு பிக்கு இறந்து விட்டார். ஐயன்மீர்! இப்போது அவர் முடிவு யாது? அதன்பின் உயர்வெய்திய புத்தர், சமய மாற்றத்தின் பயனை அவர் எய்திவிட்டார் என விளக்குவீர்கள். அவர் நிர்வாணத்தில் அல்லது அறவோர் நிலையில்-உள்ள நிலைக்கேற்ப -புகுந்துவிட்டாரென விளக்குவீர்கள்"

21. "அவர்களிடம் சென்று நான் வினவுவேன். ஐயன் மீர்! அந்தச் சோதரர், ஷ்ராவஸ்தியில் முன்பிருந்தவர்களில் ஒருவரா? அதன்ன் நான் முடிவுக்கு வருவேன், 'நிச்சயமாக அந்தச் சோதரர் மழைக்காலத் துவராடைகளையோ, புதிதாய்வரும் பிக்குகளுக்கான உணவையோ, வெளிச்செல்லும் பிக்குகளுக்கான உணவையோ, அல்லது பிணியுற்றோருக்கான உணவையோ, அல்லது பிணியுற்றோருக்கான மருந்தையோ, நிலையாக ஈயப்படும் பால்கஞ்சி உணவையே ஏற்றவராய் இருப்பார்."

22. "அதன் பின் எனக்குள் மகிழ்சி ஊறும். அவ்வாறு மகிழ்வின்பம் எனக்குள் ததும்பும். அவ்வாறு மகிழ்கையில் என் உடலும் மனமும் அமைதியுற்று இறும்பூதெய்தும். இவ்வாறாக அதையுறுகையில் இன்மும், திருப்தியும் மிக்க உணர்வை நான் அனுபவிப்பேன். அந்த இன்பத்தில் என் மனம் அமைதியுறும். அது என் ஒழுக்க உணர்புகளுக்கு ஒரு பயிற்சியாய்

அமையும்-எழுவகைப் பேரறிவின் பயிற்சியாய், ஐயன்மீர்! அமையும் -எழுவகைப் பேரறிவின் பயிற்சியாய். ஐயன்மீர்! இதுவே இந்த எட்டு நற்பேறுகளை உயர்வெய்திய புத்தரிடம் நான் வேண்டுகையில் எனக்காக நான் கருத்தில் கொண்டுள்ள நற்பயன்களாகும்."

23. அதன்பின் உயர்வெய்திய புத்தர் உரைத்தார், "இது நன்று! விஷாகாவே! இது நன்று! ததாகதரிடம் இந்த எட்டு நற்பேறுகளை இந்த நற்பயன்களைக் கருத்தில் கொண்டு தாங்கள் வேண்டியதை நன்கு புரிந்தீர்கள். தக்கோருக்குப் புரியப்படும் ஈசை, நல்ல நிலத்தில் விதைக்கப்பட்ட நல்ல விதைகள் மிகப்பெரிதாய் விளைவதைப் போன்றது. ஆனால் இன்னமும் பற்றுக்களின் எதேச்சாதிகாரமான பிடியில் சிக்கிக் கொண்டுள்ளவர்களுக்கு அளிக்கப்படும் தானம் களர்நிலத்தில் வீசப்படும் விதையைப் போன்றது. தானத்தைப் பெறுவோரின் பற்றுடைமை உள்ளவாறு, நற்பேறுகளின் வளர்ச்சியைச் சிதறடித்துவிடும்."

24. "உயர்வெய்திய புத்தர் விஷாகாக்கு இவ்வார்த்தைகளில் நன்றி தெரிவித்தார். வாழ்வில் எவ்வகை ஈகையை ஒருபெண்மணி வழங்கிடினும், உயர்வெய்திய உத்தமரின் சீடர், அதை கறையொன்றில்லா மனமகிழ்ச்சியுடன் ஏற்று, அது மிக்குயர்ந் தானமெனவும், துன்பம் துடைப்பதெனவும், இன்பத்தை விளைவிப்பதென்றும் கொள்ள வேண்டும்." "அப்பெண் தவறுகள், மாசுகள் ஆகியவயற்ற பாதையில் புகுந்து அவள் வாழ்வு இன்புறுவதாக." "நல்லதை நோக்கி, அவள் இன்புறுகிறாள். தன் ஈகைச் செயல்களால் அவள் மகிழ்ச்சி மிகவுறுகிறாள்."

25. விஷாகா பூர்வ-அறம் அல்லது கிழக்குச் சோலையை சங்கத்திற்கு வழங்கி இல்லற உபாசிகச் சோதரிகளின் முதற்பாதுகாவலர் ஆனார்.

## அவருடைய எதிரிகள்

### 1. கவர்ச்சியால் சமயமாற்றம் என்று குற்றச்சாட்டு.

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் வேசாலியில் பெருவனத்தில் கூம்பிய வடிவக் கூடத்தில் தங்கியிருந்தார். அப்போது பத்தியர் என்னும் லிச்சாவியர் மேன்மைத்தங்கிய புத்தரிடம் வந்துற்றுக் கூறினார். "ஐயன்மீர்! மக்கள் கூறுகிறார்கள், 'துறவி கவுதமர் வசியக்காரர்-அவர் கவர்ச்சித் தந்திரத்தை அறிந்திருக்கிறார்-அதன்வழி அவர் பிறமதங்களைப் பின்பற்றுவோரை மாற்றுகிறார்.'

2 "இவ்வாறு கூறுவோர் மேன்த்தங்கிய புத்தரை தாம் தவறாய்ப் புனைந்துரைக்கவில்லையென்றும் கூறுகின்றனர். உண்மையில் ஐயன்மீர்! லிச்சாவியராகிய நாங்கள இக்குற்றச்சாட்டினை நம்பவில்லை. ஆனால் நாங்கள் மேன்மைத்தங்கிய புத்தர் இதற்கு என்ன கூறவிருக்கிறார் என்று அறிய விரும்புகிறோம்."

3. புத்தர் உரைத்தார், "பத்தியரே! வதந்திகளை, அல்லது பாரம்பரியக் கூற்றுக்களை, அல்லது மக்கள் கூறுவதை ஏற்காதீர்கள். அவைகள் வேத நூல்களில் உள்ளன என்னும் காரணத்தினாலோ, தோற்றத்தின் ஏற்பினாலோ உங்கள் கருத்துக்கு ஒத்துப்போவதாலோ,

அல்லது அது மிகவும் சரியாயிருக்க வேண்டுமென நீங்கள் எண்ணுவதோலோ, அல்லது மதிப்பின் விளைவாகவோ, ஒருவர் துறவியைப் போற்றவேண்டும் என்ற எண்ணத்தோடோ அவற்றை ஏற்காதீர்கள்.

4. "ஆனால், பத்தியரே, எப்போதுதேனும் உங்களுக்கு நீங்களே சோதிப்பதன் மூலம் உண்மையென அறிந்தால்-செய்யப்பட்ட செயல் தீச்செயல், தவறானது எனவும் அது அறிவுடையோரால் இகழப்படுவதெனவும் அதன் விளைவு இழப்பு அல்லது துன்பம் எனவும் அறிந்தால், பிறகு பத்தியரே அவற்றை விலக்குங்கள்."

5. "இப்போது, பத்தியரே! உங்கள் வினா பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? நான் கவர்ச்சியினால் சமயமாற்றம் புரிவதாக என்னைக் குற்றஞ்சாட்டுபவர்கள் பேராகைப்பிடித்த மனிதர்களன்றோ? ஆம்! ஐயன்மீர்! அவர்கள் அவ்வாறே" பத்தியர் பதிலிறுத்தார்.

6. "பத்தியரே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்-ஒரு பேராசைப் பிடித்த மனிதன் அப்பேராசையர்ல் வெல்லப்பட்டவனாயும், வீழத்தப்பட்ட மனமுடையவனாயும், பொய்கள் மிகப் புகல்பவனாய் அல்லது தன் பேராசையை அடையக் குற்றம்புரிபவனாய் இருப்பானல்லவா? ஆம்! ஐயன்மீர்! அப்படித்தான்" பதிலிறுத்தார் பத்தியர்.

7. "பத்தியரே! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்-தீய விருப்ப எண்ணங்களும், பழிவாங்கும் இயல்புகளும், அத்தகைய மனிதனின் மனத்தில் எழுகையில், அவன், அவனுடைய பேராசையின் பாதையில் குறுக்கே வருவோர்க்கு எதிராய்க் குற்றஞ்சாட்டப் பிறரைத் தூண்டமாட்டானா? ஆம்! ஐயன்மீர்! அப்படித்தான்" பத்தியர் கூறினார்.

8. "இப்போது, பத்தியரே! நான் என் சீடருக்கு அறிவுறுத்துவதெல்லாம் இவ்வளவே நீங்கள் வாருங்கள்! என் அன்பான மனிதரே! பேராசையினைக் (எண்ணங்களின்) கட்டுப்படுத்தி வாழுங்கள். அவ்வாறு வாழ்கையில், அவாவினால் விளைந்த செயல்களை நீங்கள் புரியமாட்டீர்கள்-உடலாலோ, செயலாலோ, எண்ணத்தாலோ, தீய விருப்பத்தையும், அறியாமையையும் தவிர்த்து வாழுங்கள்."

9. "எனவே பத்தியரே! அத்தகைய கருத்துக்களும் நோக்கமும் உடைய போதகராயிருப்பதால் என்னைத் தவறாகக் குற்றஞ்சாட்டும் முனிவர்களும், பிராமணர்களும் துறவி கவுதமர் ஒரு வசியக்காரர்-கவர்ச்சித் தந்திரமறிந்தவர் அதன் மூலம் அவர் பிறமதங்களைப் பின் பற்றுவோரைச் சமயமாற்றம் செய்கிறார். என்று கூறுகையில் தவறானவர்களளாகவும், வீண் யொய்யர்களாகவும் உள்ளனர்."

10. "ஓ! ஐயன்மீர்! உண்மையில் இது நன்மை பயப்பதேயாகும்-இந்தக் 'கவர்ச்சித் தந்திரம்' கூட நன்மைக்கேயாகும்! என் அன்புக்குரிய இரத்த-உறவுகளை இதே கவர்ச்சித் தந்திரங்கொண்டு புத்தர் கடைத்தேற்ற முடியுமே! அது அவர்களின் நற்பயனுக்கும் நல்லின்பத்திற்குமான கடைத்தேற்றமாய் அமையுமே! அனைத்து வகுப்பினர்களும்-பிராமணர், கதியர், வெஸ்ஸர், சுத்தர் ஆகிய அனைவரும் இதே கவர்ச்சித் தந்திரத்தால் புத்தரால்

கடைத்தேற்றப்படுவராயின் அது அவர்களின் நற்பயனுக்கும் இன்பத்திற்கும் நெங்காலம் உதவுவதாய் இருக்குமே."

11. ""அது அவ்வாறே! பத்தியரே! அது அவ்வாறே! பத்தியரே! இந்தக் கவர்ச்சித் தந்திரத்தால் மானுட வர்க்கத்தோரனைவரும், தீச்செயல் நிலைகளைத் தவிர்த்து விடுவராயின், என் தந்திரம், பெரும் பயனையும் இன்பத்தையும் உலகிற்கு நல்கும்.

2. ஒட்டுண்ணியாய் இருப்பதாய்க் குற்றச்சாட்டு.

1. உயர்வெய்திய புத்தர் ஒட்டுண்ணியாய் இருப்பதாய், பிறரைச் சார்ந்து வாழ்பவராய், வாழ்வுக்குகந்த வருவாய் ஈட்டாதவராய் இருப்பதாய்க் குற்றஞ்சாட்டப்பட்டார். இநதக் குற்றச்சாட்டும் உயர்வெய்திய புத்தர் அதற்களித்த பதிலும் கீழே விவரிக்கப்படுகிறது.

2. ஒரு முறை புத்தர் மகத மக்களிடையே தக்கின-கிரியில், ஏசு-நளா என்ற பிராமண கிராமத்தில் தங்கியிருந்தார். அப்போது, பிராமணர் காசி-பரத்வாஜின் ஐந்நூறு ஏர்க்கலப்கைகள் விதைப்பதற்குழுத நேரமது.

3. அதிகாலையில் உரியபடி துவராடையுடுத்து, பிட்சாபாத்திரம் கரத்திலேந்தி, புத்தர் அந்தப் பிராமணர் மிகுந்த வேலையோருந்த இடத்திற்கு. உணவுகொண்டுவரப்பட்ட நேரத்தில. சென்று ஆங்கு ஒரோரம் நின்றிருந்தார்.

4. தானத்திற்காக ஆங்கவர் நிற்பதைக் கண்ட பிராமணர் கூறினார். "நான் உண்பதற்கு முன் நான் உழுகிறேன்-விதைக்கிறேன். துறவியே! நீங்களும் கூட நீங்கள உண்பதற்கு முன் உழவேண்டும், விதைக்க வேண்டும்.

5. "பிராமணரே! நானுந்தான், உண்பதற்கு முன் உழுகிறேன்-விதைக்கிறேன்."

6. "எவ்வாறாயினும், நான் மதிப்பிற்குரிய கவுதமரின் நுகத்தடியை அல்லது ஏர்க்கலப்பையை, அல்லது ஏர்செலுத்தலை, அல்லது தாற்றுக்கோல் அல்லது காளைக் கூட்டத்தை-எதையுமே காணவில்லையே-ஆயினும் அவர் தான் உண்பதற்கு முன் உழுவதாகவும், விதைப்பதாகவும் உறுதி கூறிகிறாரே."

7. "தாங்கள் உழவரெனக் கூறிக்கொள்கிறீர்கள்-நாங்கள் உங்கள் உழுதலெதையும் காணாவிடினும். தாங்கள் எப்படி உழுகிறீர்கள் என எங்களுக்குரையுங்கள், ஏனெனில் உங்கள் உழவுபற்றி அதிகம் கேட்டறிய நாங்கள் விரும்புகிறோம்"

8. "என்னுடைய விதை நன்னம்பிக்கை, கடுந்தவம் என்னுடைய மழை, பேரறிவே என் நுகத்தடியும், ஏர்க்கலப்பையும் ஆகும். தீவினை அச்சமே என் கோல். எண்ணத்தால் நுகத்தடியை இணைப்பேன், ஏர்முனையும், தாற்றுக்கோலும் கவனமாயிருத்தலே" புத்தர் பதிலிறுத்தார்.

9. "சொற்களிலும் செயலிலும் கவனமாயிருத்தல், உணவில் மிதமாயிருத்தல், ஆகியவற்றால் என் பயிர்க்களைக் கண்காணிக்கிறேன்-முடிவான இன்பம் அறுவடையாகும் வரை நான் ஓய்வதில்லை. முயற்சியே என்வலுவான காளை-விளிம்பிடத்தில் அது புறமுதுகிட்டுத் திரும்வதில்லை, -நல்லமைதி நோக்கி அத நேராய் நடக்கிறது. வேதனை ஏதுமில்லா இலக்கினெல்லைக்கு அது செல்கிறது. நான் விளைவிற்காக மரண மற்றவற்றை உழுகிறேன். என்னைப்போலுழுவன் அனைத்துத் துன்பங்களினின்றும் விடுபடுகிறான்."

10. இதன்பின் அப்பிராமணர் புத்தருக்கு ஒரு பெரிய செம்புக் கலயத்தில் பாலுணவு படைத்தளித்துக் கூறினார். "கவுதமரே இதை உண்பீராக! உண்மையில் தாங்கள் உழவரே! இதிலும் தாங்கள் உழுது விளைவிப்பது மரணமின்மையே."

11. ஆயினும் புத்தர் உரைத்தார்: நான் போதகர் காணிக்கையாய் எவருடைய ஊதியத்தையும் ஏற்பதில்லை. உயர்பேரறிவெய்தியோர் ஊதியம் பெறுவதை ஞானிகள் ஒப்புக்கொள்வதில்லை. தம்மநெறி தழைக்குங்காலை இது பெருவழக்காய் நன்மையுற வேண்டும். புனிதப் பேரமைதியும், புலன் கட்டுப்பாடும், சலனமின்மையுமே அறுவடைக்குரியவை-அவற்றை விதைப்பீராக.

12. இச்சொற்களைக் கேட்ட பிராமணர் புத்தரிடம் சென்று, புத்தரின் பாதங்களில் தன் தலைதாழ்த்தி வணங்கி உணர்ச்சி மேலிட்டுரைத்தார், "வியப்பு! கவுதமரே! மிகப்பெரு வியப்பு! வீழ்ந்து விட்ட ஒன்றை ஒரு மனிதர் நின்று நிமிர்த்துவது போல்-வீழ்ந்த மனிதனுக்கதை உரைத்து உணர்த்தல் போல்-மறைக்கப்பட்டுவிட்டதை வெளிப்படுத்தல் போல்-இருளுக்குள் தீபம் ஏந்திச் செல்லல்லல்போல் கண்ணுளோர் தம்மைப்பற்றியனவற்றைக் காணவும்-இவ்வகையாய், பலவழிகளில், கவுதமர் தாங்கள் தங்கள் கோட்பாடகளைத் தெளிவுறுத்திவிட்டீர்!"

13. "போற்றுதலுக்குரிய கவுதமரிடமும், அவர்தம் தம்மத்திடமும் நான் வந்துற்றேன். புத்தரின் கரங்களால் புகுவிப்பும், உறுதிப்பாடும் எனதாக நான் பெற விழைகிறேன்! இவ்வாறாக பிராமணர் காசி-பரத்வஜர் தானமேற்கும் பிக்குவாய்ப் புத்தரால் அனுமதிக்கப்பட்டு இணைக்கப்பட்டார்."

3. இன்பமான இல்வாழ்வினை உடைத்தெறிவதாய்க் குற்றச்சாட்டு.

1. பல புகழ்பெற்ற இளையமகதப் பிரபுக்கள் உயர்வெய்திய புத்தரின் சீடர்களாவதைக் கண்டு, மக்களில் சிலர் வெறுப்பும் சினமும் உடையோராகிக் கூறினர். "சாமண கவுமர் பெற்றோரைப் பிளளைகளறறவராக்குகிறார், சாமண கவுதமர் மனைவிகளை கணவர்களற்றவராக்குகிறார், சாமண கவுதமர் குடும்ப அமைப்பை வேரோடு குலைத்து விடுகிறார்.

2. "ஆங்கே ஓராயிரம் ஜதிலர்களை ஆட்கொண்டுவிட்டார். இங்கே சஞ்சயரைப் பின்பற்றிக் கொண்டிருந்த இருநூற்றையும்பது முனிவர்களை ஆட்கொண்டு விட்டார். இந்த புகழ்மிகு

மகத குல இளைஞர்கள் பலரும் இப்போது சாமண கவுதமரின் கீழ்ப, புனித வாழ்வு மேற்கொண்டுள்ளனர். அடுத்து என்ன நடக்குமோ? யார் கூற முடியும் "

3. மேலும், அவர்கள் பிக்குகளைக் காணும்போது கீழக்கண்டவாறான சொற்களில் குறைகூறினர்

"உயர்வுடைய சாமணர் மகத மக்களின் கிருபஜத்திற்கு (அதாவது இராககம்) வநதுள்ளார். அவர் தம் தலைமையில் சஞ்சயரைப் பின்பற்றியிருந்தோனரயெல்லாம் அழைத்து வந்துள்ளார், இவரால் அடுத்து ஆட்கொள்ளப்படுவோராயிருக்கக் கூடியவர் யாரோ?"

4. பிக்குகள் இந்தக் குற்றச்சாட்டைக் கேள்வியுற்று இதை உயர்வெய்திய புத்தரிடம் தெரிவித்தனர்.

5. உயர்வெய்திய புத்தர் பதிலிறுத்தார், "துறவோரே! இந்தக் கூச்சல் நெடுநாட்களுக்கு நீடிக்காது. இது ஏழு நாட்களுக்கு மட்டுமே நீடிக்கும், ஏழு நாட்களுக்குப் பின் அது முடிந்துவிடு."

6 "அவர்கள் உங்களைக் குறைகூறினால், 'மாவீரர்களான ததாகதர்கள் உண்மையில் நல்ல தம்மத்தினால் வழிநடத்துகின்றனர், என நீங்கள பதிலிறுக்க வேண்டும், பேரறிவாளரிடம் யார் முனகுவார்கள்? பேரறிவாளர் மக்களை நன்னெறியில் வழி நடத்துவதை ஏன் வெறுக்க வேண்டும், தம்மத்தில் கட்டாயமேதுமில்லை. எவர் ஒருவரும் சங்கத்தை விட்டு வீட்டிற்குத் திரும்பச் சுதந்திரமுடையவரே.'

7. ஏதுவோரிடம் பிக்குகள் உயர்வெய்திய புத்தர் காட்டியபடி பதிலிறுக்கும் போது, மக்கள் புரிந்து கொள்ளலானார்கள். "சாக்கிய புத்திய சாமணர் மக்களை வழிநடத்துவது தம்மத்தினாலேயன்றி, தீயநெறியாலன்று"-இதன்பின் அவர்கள் உயர்வெய்திய புத்தரைக் குற்றஞ்சாட்டுவதில்லை.

### 4. கொலைக் குற்றம் பற்றிய ஜைனர்களின் தவறான குற்றச்சாட்டு.

1. சாமண கவுதமர் தோன்றியதிலிருந்து, மக்கள் தம்மை மதிப்பதேயில்லையெனவும், மேலும் தம் இருப்பைக் கூட மக்கள் அறிந்திருக்கவில்லையென்றும் தீர்த்திகர்கள் உணரத் தொங்கினர்.

2. எனவே, "மறைமுக ஆதரவாளர்கள் சிலரால் நாம் அவருடைய பெருமையைக் குலைக்கலாம், என்று தீர்த்திகர்கள் எண்ணினர். அநேகமாக சுந்தரியின் உதவியால் நாம் வெற்றி பெறக்கூடும்."

3. அவர்கள் சுந்தரியை அணுகி அவளிடம் கூறினர்: "சகோதிரியே, நீ எல்லையற்ற அழகும் கவர்ச்சியும் உடையவளாய் இருக்கிறாய் சாமண கவுதமர் பற்றி ஓர் ஊழலை நீ வதந்தியாய் பரப்புவாயானால் மக்கள் அதை நம்பக் கூடும்-மற்றும் அது அவருடைய செலவாக்கைக் குறைக்கும்."

4. ஒவ்வொரு மாலையிலும் சுந்தரி (மக்கள் நகருக்குத் திரும்புகிற நேரத்தில்) மலர் மாலைகளோடும், கற்பூரம் மற்றும் இனிய நறுமணத் திரவியங்களோடும், ஜெதவனத்திற்குச் செல்வாள். "சுந்திரி! நீ எங்கு செல்கிறாய்?" என்று அவள் பதிலிறுப்பான்.

5. தீர்த்திகர்களின் ஏதாவதொரு சோலையில் இரவில் தங்கியிருந்து விட்டுக் காலையில் திரும்பும் அவளை யாரேனும், இரவை அவள் எங்குக் கழித்தாள் எனக் கேட்டால், கவுதமருடன் இரவைக் கழித்ததாகக் கூறுவாள் அவள்.

6. சிலநாட்களுக்குப் பின் அந்தத் தீாத்திகர்கள் சில கொலையாட்களை பணத்திற்கு அமர்த்தி அவர்களிடம் கூறினர்: "சுந்தரியைக் கொன்று, அவளுடைய உடலை கவுதமரின் காந்த குடிலுக்கு அருகே குப்பைக் குவியலில் எறிந்து விடுங்கள்." இதை அந்தக் கொலையாட்கள் செய்துவிட்டனர்.

7. அதன்பின், அந்தத் தீர்த்திகர்கள் சுந்தரி, ஜேதவனத்திற்கு அடிக்கடி செல்வாள் என்றும் அவளைக் காணவில்லையென்றும், பாதுகாப்பு மற்றும் நீதி அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டு வந்தனர்.

8. எனவே அதிகாரிகளின் துணையோடு சுந்தரியின் உடலை அவர்கள் குப்பைக் குவியலில் கண்டெடுத்தனர்.

9. தங்கள் தலைவரின் அவமானத்தை மறைப்பதற்காகக் கவுதமரின் சீடர்கள் சுந்தரியைக் கொன்றுவிட்டார்கள் என அந்தத் தீாத்திகர்கள் அவர்களைக் குற்றஞ்சாட்டினார்கள்.

10. ஆனால் அந்தக் கொலையாட்கள், ஒரு மதுக்கடையில் சுந்தரியைக் செய்ததற்காகப் பெற்ற சன்மானத்தைப பங்கிடுதல் குறித்துத் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டார்கள்.

11. அதிகரிகள் உடனே அவர்களைக் கைது செய்தார்கள். அவர்கள் தம் குற்றத்தை ஒப்புக் கொண்டதோடு, தீர்த்திகர்களின் தூண்டுதல் பேரிலேயே அந்தக் குற்றத்தைப் புரிந்ததாகக் கூறிவிட்டார்கள்.

12. இவ்வாறாக தீர்த்திகர்கள் தமக்கென மிஞ்சியிருந்த சிறிது செல்வாக்கையும் முற்றாக இழந்தனர்.

5. தீய ஓழுக்கம் பற்றிய ஜைனர்களின் தவறானக் குற்றச்சாட்டு.

1. சூரியனின் எழுச்சியோடு மின்மினிப் பூச்சிகள் மறைந்து போவதைப் போல, தீர்த்திகர்களின் நிலை மிகவும் இடர்பாடுடையதாய் ஆயிற்று, மக்கள் அவர்களுக்கு மரியாதையையோ, தானங்களையோ அளிப்பதை நிறுத்திவிட்டனர்.

2. பொது வீதிகளில் நின்று கொண்டு அவர்கள் ஆவேசமாய்ப் பேசலாயினர்: "சாமண கவுதமர் உயர்பேரறிவெய்தினார் (புத்தரானார்) என்றால், நாங்கள் கூட அப்படித்தான். புத்தருக்குத் தானம் அளித்து நீங்கள் நற்பேறு பெறுவதாயின், எங்களுக்குத் தானங்களை அளியுங்கள்."

3. ஆனால் மக்கள் இதில் கவனம் செலுத்தவேயில்லை. எனவே, சாமண கவுதமரின் நடத்தையின் மீது ஊழல்குற்றச்சாட்டு பரப்பி, சங்கத்தை மதிப்பிழக்கச் செய்வது எப்படியென அவர்கள் திரைமறைவில் சதிசெய்யலானார்கள்.

4. அக்காலத்தில,ஷ்ராவஸ்தியில் சிஞ்சா என்ற பெயரால் அறியப்பட்ட பரிவ்ராஜக பிராமண மங்கையொருத்தி வசித்து வந்தாள். உடலமைப்பிலும், உறுப்புக் கவர்ச்சியிலும் அவள் வசீகர அழகுடையவள், தன் அங்க அசைவினால் காமவலை வீசுவதில் கைதோந்தவளாயிருந்தாள் அவள்.

5. தீாத்திகர்களில் ஒரு தந்திர திட்டக்காரன் சிஞ்சாவின் உதவியோடு கவுதமர் பற்றிய ஊழல் வதந்தியைப் பரப்புவது எளிதாயிருக்கு மென்றும், அதன் மூலம் அவரை மதிப்பிழக்கச் செய்யலாமென்றும் கூறினான். மற்ற தீர்த்திகர்கள் இதற்கு ஒப்புதல் அளித்தனர்.

6. அதன்பின், ஒருநாள் சிஞ்சா தீர்த்திகர்களின் சோலைக்கு வந்து, அவர்களை வணங்கி, அவர்களருகே அமர்ந்தாள். ஆனால் எவரும் அவளுடன் பேசவில்லை.

7. இதைக்கண்டு வியந்த அவள் கூறினாள்: "நான் உங்களுக்கென்ன குற்றம் புரிந்தேன்? மும்முறை உங்களை நான் வணங்கியும், தாங்கள் என்னிடம் ஒரு வார்த்தையும் பேசவில்லையே."

8. "சகோதிரியே! தீர்த்திகர்கள் கூறினர், சாமண கவுதமர் தன் புகழால் நமக்கு தீங்கையும், இழப்பையும் விளைவிப்பதை நீ அறியாயா?" "நான் அதை அறியேன். இந்தப் பிரச்சினையைத் தீர்க்க நான் புரிய வேண்டிய கடமை ஏதேனும் உள்ளதா?"

9. "சகோதரியே! நீ எங்களுக்கு நன்மை செய்ய விழைந்தால் பின் உன் சொந்த முயற்சியால் கவுதமர் மேல் ஊழல் குற்ற வதந்தியைப் பரப்பி, அதன் வழி அவரைப் புகழற்றவராக்கு. ஆகட்டும்! திருபதியாயிருங்கள், என்னை நம்புங்கள்." இவ்வாறு கூறிவிட்டு அவள் அவ்விடத்தை விட்டுச் சென்றாள்.

10. சிஞ்சா பெண்மையின் கசர்ச்சியைக் காட்டுவதிலும், காதல் வசியத்திலும் கைதேந்தவள். ஷ்ராவஸ்தியின் குடிமக்கள் ஜேதவனத்திலிருந்து சமய விவாதங்களை முடித்துத்

திரும்புகையில், சிஞ்சா, செவ்வாடையணிந்து, நறுமணத்திரவியங்கள் பூசி, மலர்மாலைகளைக் கையிலேந்தி ஜேதவன நோக்கிச் செல்வாள்.

11. யாரேனும் அவளை "இப்போது நீ எங்கே செல்கிறாய்? என்று கேட்டால், 'அதைப் பற்றி உமக்கென்ன? என்று அவள் பதிலிறுப்பாள். இரவு நேரத்தை ஜேதவனத்திற்கு அருகேயுள்ள ஊர் சுற்றும் முனிவரின் (தீரத்திகாராம) ஓய்விடத்தில் கழித்து விட்டு, காலையில், புத்தருக்கு மரியாதை செலுத்தக் குடிமக்கள் ஜேதவனத்திற்குச் செல்லும் நேரம் நகருக்குத் திரும்புவாள்.

12. யாரேனும் இவளை, "நீ இரவை எங்குக் கழித்தாய்? என்று கேட்டால், அதைப் பற்றி உமக்கென்ன?"நான் ஜேதவனத்தில், சாமண கவுதமருடன் அவருடைய சோலை மாளிகையில் (காந்த குடில்) இரவைக் கழித்தேன்' என்பாள். இந்தக் குறிப்பு சிலருடைய மனத்தில் சந்தேகங்களை உண்டாக்குவதாயிற்று.

13. நான்கு மாதங்களானபின் அவள் தன் அடி வயிற்றின் அளவை, அதைச் சுற்றிச் சில பழந்துணி மூட்டையை கைத்துப பெரிதாக்கிக் கொண்டு, சாமண கவுதமர் மூலம் தான் கருவுற்றதாகச் கூறலானாள். சிலர் அதை நம்பத் தொடங்கினர்.

14. ஒன்பதாம் மாதத்தில் தன் அடி வயிற்றில் ஒரு பருத்த மரப்பொருளை மறைத்து வைத்துக் கொண்டும், புத்தர், துறவோருக்கும், உபாசகருக்கும் சமயப்பேருரை வழங்கிக் கொண்டிருக்கையில், அவர் முன் தேன்றிக் கூறினாள் அவள், "மாபெரும் போதகரே! நீங்கள் மக்கள் பலருக்குச் சமய பாடங்களை வழங்குகறீர்கள், உங்கள் குரல் இனியது. உங்கள் இதழ்கள் மென்மையானவை உங்களோடு கூடியதால் நான் கருவுற்றுள்ளேன்-என் பிரசவநேரம் சமீபித்து விட்டது."

15. "என் பிரசவத்திற்கான இடம் எதையும் நீங்கள் உறுதிசெய்யவில்லை-அல்லது நெருக்கடிக்கான மருந்துகள் எதையும் நான் காணவில்லை-உங்களால் இதையெல்லாம் செய்ய முடியவில்லையென்றாலும், நீங்கள் உங்கள் சீடர்களில் ஒருவரை-கோசல மன்னரையோ, அநாதபிண்டிகரையோ அல்லது விஷாகாவையோ இப்பணிக்காக அமர்த்தலாமே."

16. "ஒரு பெண்ணைக் கற்பிழக்கச் செய்வது எப்படி என்று நீங்கள் அறிந்திருக்கிறீர்களே தவிர, அந்த மயக்கத்தின் விளைவாய்ப் பிறக்கிற குழந்தையைப் பேணுவது எப்படி என்று நீங்கள் அறியவில்லை என்றே தோன்றுகிறது. அந்த அவை அமைதியாயிருந்தது."

17. புத்தர், தன் விரிவுரையைப் பாதியில் நிறுத்தி, தேர்ந்த பெருந்தன்மையுடன் அவளுக்குப் பதிலிறுத்தார்: "சோதரியே! நீ கூறிய யாவும், உண்மையா அல்லது பொய்யா என்று நம் இருவருக்கு மட்டுமே தெரியும்."

18. "சத்தமாக இருமியபடி சிஞ்சா கூறினாள், ஆம்! ஓ! போதகரே! இது போன்றவை நமக்கு மட்டுமே தெரியும்."

19. அவளுடைய இருமலால், அவள் அடிவயிற்றைச் சுற்றிக் கட்டியிருந்த மரப்பொருளின் கட்டு தளர்ந்து, அவளுடைய தோல்வியாய், அவள் காலடியில் வீழ்ந்தது.

20. அவள் கற்களாலும் கம்புகளாலும் விரட்டியடிக்கப்பட்டாள்.

## 6.மைத்துனனும் எதிரியுமான தேவதத்தன்.

1. தேவதத்தன் புத்தரின் மைத்துனர் ஆவான். ஆனால் தொடக்கத்திலிருந்தே புத்தர்பால் அவன் பொறாமைக் கொண்டு, அவரை வெகுவாக வெறுப்பவனாயிருந்தான்.

2. புத்தர் அவர்தம் இல்லத்தைத் துறந்தபோது, தேவதத்தன் யசோதராவைக் காதலிக்க முயற்சித்தான்.

3. ஒருமுறை யசோதரா படுக்கச் செல்லும் சமயம், அவன் யாராலும் காணப்படாமல், ஒரு துறவியின் வேடத்தில் அவருடைய அந்தப் புரத்திற்குள நுழைந்தான். அவர் அவனை வினவினார். "பிக்குவே! தங்களுக்கென்ன வேண்டும்?" என கணவரிடமிருந்து, எனக்கு ஏதேனும் செய்தி கொண்டு வந்துள்ளீர்களா?

4. "உங்கள் கணவர் உங்களைச் சிறிதும் பொருட்படுத்தவேயில்லை, உங்கள் இனிய இல்வாழ்வில் அவர் கொடுமையாகவும், தீமையாகவும் உம்மைக் கைவிட்டார்." என்றான் தேவத்தன்.

5. "ஆயினும், அவர் மிகப் பலரின் நன்மைக்காகவே இதைச் செய்தார்" -என்று பதிலிறுத்தார், யசோதரா.

6. "அது எதுவாயினும், அவர் உங்களுக்கிழைத்த வெறுக்கத்தக்க கொடுமைக்கு நீங்கள் இப்போது பழிவாங்குங்கள்" -தேவதத்தன் தெரிவித்தான்.

7. "ஓ! துறவியே! இதை நிறுத்துங்கள், உங்கள் எண்ணங்களும் சொற்களும் மாசுடையவையாய் உள்ளன." மறுதலித்தார் யசோதரா.

8. ""யசோதராவே? நீ என்னை அடையாளம் காணவில்லையா? நான் உன்னைக் காதலிக்கும் தேவதத்தன்.

9. "தேவதத்தனே! நீ போலியானவன், வெட்கங்கெட்டவன் என்று நானறிவேன், நீ ஒரு தீய துறவியென நான் எண்ணினேன்-ஆனால் இவ்வளவு கீழ்த்தரமான மனமுடையவனாயிருப்பாய் என்று நான் கருதவேயில்லை."

10. "யசோதராவே! யசோதராவே! நான் உன்னைக் காதலிக்கிறேன்" வற்புறுத்தினான் தேவதத்தன். "உன் கணவன் உன்னிடம் வெறுப்பைத்தவிர வேறெதையும் காட்டவில்லை. அவன் உனக்குக் கொடுமையாய் இருந்தவன். என்னைக் காதலித்து அவன் கொடுமைக்குப் பழிவாங்குவாயாக."

11. "யசோதராவின் வெளிறிய, மெலிந்த முகம் சிவந்துகனன்றது. அவருடைய கன்னங்களில் கண்ணீர் வழிந்தது."

12. "தேவதத்தனே! என்னிடம் கொடியவனாய் இருப்பவன் நீயே! உன் காதல் உண்மையேயாயினும் கூட அது என்னை இழிவுபடுத்துவதேயாகும். நீ என்னை நேசிப்பதாய்க் கூறுகையில் பொய்யே உரைக்கிறாய்."

13. "நான் இளமையாய், அழகாயிருக்கையில் நீ என்னைக் கண்டு கொண்டதேயில்லை. இப்போது நான் வயது முதிர்ந்து, சோகத்தாலும், துயரத்தாலும் உடைந்துக் கிடக்கிறபோது, நீ நள்ளிரவில் வந்து வஞ்சகமான, குற்றமான நேசத்தை அறிவிக்கிறாய், நீ ஒரு கீழ்த்தரமானக் கோழை."

14. அவர் பெருங்குரலில் முழுங்கினார்! "தேவதத்தனே! இவ்விடத்தைவிட்டு வெளியே." - தேவதத்தன் அவ்விடத்தை விட்டு வெளியேறினான்.

15. தேவதத்தனைச் சங்கத்தின் தலைவராக்காமல், அதற்குப் பதிலாக சாரிபுத்ரரையும், மொக்கலானாவையும் சங்கத்தின் தலைவர்களாய் ஆக்கிய புத்தர் மீது தேவதத்தன் மிகுந்த சினமுற்றிருந்தான். புத்தரின் உயிரைப் பறிக்க தேவதத்தன் மூன்றுமுறை முயற்சி மேற்கொண்டான்-ஆனால் அவற்றில் ஒன்றிலும் அவன் வெற்றிபெறவில்லை.

16. ஒருமுறை, கழுகுமலைச்சிகரம் (கிர்த்ர குடா) என்றழைக்கப்பட்ட குன்றின் அடிவாரத்தில் நிழில் அங்குமிங்குமாய் உயர்வெய்திய புத்தர் நடந்து கொண்டிருந்தார்.

17. தேவதத்தன் அக்குன்றின் மீதேறி, ஒரு பெரியப்பாறையை, உயர்வெய்திய புத்தரைக் கொல்வதற்காக உருட்டிவிட்டான்-ஆனால் அது வேறொரு பாறைமீது விழுந்து நின்றுவிட்டது. ஒரு துண்டு அதனின்றும் சிதறி உயர்வெய்திய புத்தரின் காலில் பட்டு இரத்தம் சிந்தியது.

18. இரண்டாம் முறையும் அவன் புத்தரைக் கொல்ல முயற்சி மேற்கொண்டான்.

19. இம்முறை தேவதத்தன் அரசர் அஜாதசத்ருவிடம் சென்று கூறினான். "என்னுடன் சில மனிதர்களை அனுப்புங்கள்." அரசர் அஜாதசத்ரு தம் மனிதர்களுக்கு ஆணையிட்டார். "மதிப்பிற்குரிய தேவதத்தர் உங்களுக்கு உரைக்கிறபடி நீங்கள் செய்யுங்கள்."

20. அதன்பின் தேவதத்தன் ஒருவனுக்கு ஆணையிட்டான். "என் நண்பனே! சாமண கவுதமர் தங்கியிருக்குமிடத்திற்கு நீ செல். அவரைக் கொல்." அந்த மனிதன் திரும்பிவந்து அவனிடம் கூறினான். "உயர்வெய்திய புத்தரின் உயிரை நான் பறிக்கவியலாது."

21. அவன் புத்தரின் உயிரைப் பறிக்க மூன்றாம் முறையாகவும் முயற்சி மேற்கொண்டான்.

22. இம்முறை, ஆங்கு இராஜகிரஹத்தில், நளகிரி என்ற பெயருடைய நரவேட்டையாடும் கொடிய யாயொன்றிருந்தது.

23. தேவத்தன் இராஜகிஹத்திற்குச் சென்று யானைக் கொட்டடிகளை அடைந்து, யானைப்பாகர்களிடம் கூறினான். "நண்பர்களே, நான் இராஜாவின் உறவினன்-கீழான வேலையிலிருக்கும் ஒருவனின் பதவியை உயர்த்தவும் அவனுடைய உணவுப் பங்கீட்டையும் ஊதியத்தையும் உயர்த்தவும் என்னால் ஆணையிட முடியும்."

24. எனவே, நண்பர்களே, சாமண கவுதமர் தேரோடும் சாலையில் வருகையில், யானை நளகிரியை அச்சாலை வழியே ஓடவிடுங்கள்.

25. தேவதத்தன் புத்தரைக் கொல்ல வில்லாளிகளை ஏற்பாடு செய்தான், அதனோடு கூட யானை நளகிரியை அவர் பாதையில் ஏவினான்.

26. ஆனால் அவன் வெற்றிப் பெறவில்லை. அவனுடைய முயற்சிகள் அறியப்பட்ட பின், தேவதத்தன் பொது மக்களின் நன்மதிப்பை இழந்துவிட்டான். மேலும் அரசர் (அஜாதசத்ரு) அவனைச் சந்தித்துப் பேசுவதையே நிறுத்திவிட்டார்.

27. தன் உயிர் வாழ்க்கைக்காக அவன் வீட்டுக்கு வீடு பிச்சையெடுத்து உண்ணலானான். இதற்கு முன் தேவதத்தன், அஜாத சத்ருவிடம் பல உதவிகளைப் பெற்று வந்தான்-இப்போதவற்றை அவனால் நிலை நிறுத்திக் கொள்ள முடியவில்லை. நளகிரி நிகழ்ச்சிக்குப் பின் தேவதத்தன் தன் செல்வாக்கனைத்தையும் இழந்துவிட்டான்.

28. அவனுடைய செயல்களால், தேவதத்தன் மகதத்தில் மிகவும் இகழ்வுற்றவாய் ஆக்கிவிட்டதால் அதைவிட்டுச் கோசலம் சென்றான்-ஆங்கே பிரசேஞ்சிதர் மிக அன்பாய் அவனை உபசரிப்பார் என்று எண்ணினான், ஆனால் ஆங்கிருந்தும் அவன் அவமதிப்புடன் விரட்டப்பட்டான்.

## 7. பிராமணர்களும் புத்தரும்.

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் துறவோரின் பெரும் பரிவாரத்துடன் கோசல நாட்டில் பயணம் மேற்கொள்கையில், அவர் தூநா என்னும் பெயரிய பிராமண கிராமம் ஒன்றிற்குச் சென்றார்.

2. தூநாவின் இல்லறப் பிராமணர்கள் இச்செய்தியைக் கேட்டு, "நம் கிராமத்தின் வெட்டவெளிக்கு சாமண கவுதமர் வந்திருப்பதாய்க் கூறுகிறார்கள்." என்றனர்.

3. அப்போது அந்த இல்லறப் பிராமணர்கள் புத்தரிடம் நம்பிக்கையற்றவர்களாய், தவறான நோக்குடையவர்களாய், இயல்பிலயே பொறாமையுடையவர்களாய் இருந்தனர்.

4. அவர்கள் கூறினர், "சாமண கவுதமர் கிராமத்திற்குள் நுழைந்து இரண்டு மூன்று நாட்கள் தங்குவாரேயானால், அவர் இந்த மக்களையெல்லாம் சமயமாற்றம் செய்து விடுவார். பிறகு, பிராமண மதம் ஆதரவற்றதாகிடும். எனவே நாம் அவர் கிராமத்திற்குள் புகுவதைத் தடுக்க வேண்டும்."

5. அந்தக் கிராமத்தை அடைய ஒரு நதியைக் கடந்தாக வேண்டும், உயர்வெய்திய புத்தரை அக்கிராமத்திற்குள் நுழையாமல் தடுக்க, பிராமணர்கள் படகுத் துறைகளிலிருந்து அனைத்துப் படகுகளையும் அப்புறப்படுத்தி விட்டு, பாலங்களையும், நுழைவாயில்களையும் பயனற்றதாக்கி விட்டார்கள்.

6. ஒரு கிணற்றைத் தவிர மற்ற கிணறுகள் அனைத்தையும் கோரைப்புற்களால் நிறைத்துவிட்டார்கள். நீர்நிலைகள். ஓய்விடங்கள், கூடங்கள் அனைத்தையும் மறைத்துவிட்டார்கள்.

7. உயர்வெய்திய புத்தர் அவர்களின் தீச்செயல்களை அறிந்ததும், அவர்கள் மேலுள்ள கருணையால், தன் துறவோர் பரிவாரத்துடன் ஆற்றைக் கடந்து, மேலும் சென்று, கால்போக்கில் தூநா என்னும் அந்த பிராமணக் கிராமத்தை அடைந்தார்.

8. சாலையை விட்டகன்ற அவர் ஒரு மரத்தினடியில் அமர்ந்தார். அச்சமயத்தில் உயர்வெய்திய புத்தருக்கு அருகே, பல பெண்கள் நீரெடுத்துக் கொண்டு சென்ற வண்ணமிருந்தனர்.

9. அக்கிராமத்தில் ஓர் முடிவு ஏற்கப்பட்டிருந்தது. "சாமண கவுதமர் ஈண்டு வந்துற்றால், அவருக்கு வரவேற்போ, அவ்வகையான வேறெதுவோ அளிக்கப்படலாகாது. அவர் ஒரு வீட்டுக்கு வருவாரேயானால், அவருக்கோ, அவர்தம் சீடர்களுக்கோ, உணவோ அல்லது நீரோ வழங்கப்படக் கூடாது."

10. அதன்பின், ஒரு குறிப்பிட்ட பிராமணரின் அடமைப் பெண், நீர்க்குடத்துடன் செல்கையில், உயர்வெய்திய புத்தரையும், பிக்குகளையும் கண்டு, அவர்கள் களைத்தும், தாகமுற்றும் இருப்பதை உணர்ந்து, தூய உள்ளத்துடன், அவர்களுக்குத் தண்ணீரளிக்க விரும்பினார்.

11. "இந்தக் கிராமத்து மக்கள் சாமண கவுதமருக்கு எதுவும் கொடுக்கக் கூடாதென்றும், அவருக்கு மரியதை கூடக் காட்டக் கூடாதென்றும் தீர்மானித்திருந்தாலும் கூட, இந்த உயர் நற்பேறுடைய நல்லோரும், நன்மதிப்புக் கொடைகள் பெற நற்றகுதியுடையோருமான இவர்களுக்கு வெறும் நீரையளிப்பதன் மூலம் என் முக்திக்கு நான் அடித்தளமிட்டுக்

கொள்ளவில்லையாயின், நான் வேறெப்போது துன்பத்திலிருந்து விடுவிக்கப் படப் போகிறேன்?" என்று அப்பெண் தமக்குத்தாமே கூறிக்கொண்டார்.

12. "என் எஜமானர்களே! அது அப்படியே இருக்கட்டும், கிராமத்தில் வாழும் ஒவ்வொருவரும் என்னைக் கட்டு வைத்து அடித்தாலும் சரி-எப்படியாயினும் இத்தகைய நற்பேறுடைய நல்லோருக்கு இந்த நீர்க் கொடைய நான் வழங்கியே தீருவேன்."

13. இந்தத் தீர்மானத்தைச் செய்தபின் அவர், நீரெடுத்துச் செல்லும் பிறபெண்கள் தடுக்க முயற்சித்தும், தன் உயிரைப்பற்றிக் கவலைப்படாமல், நீர்க்குடத்தைத்தன் தலையிலிருந்து இறக்கி, ஓர்புறம் வைத்து, உயர்வெய்திய புத்தரை அடைந்து அவருக்கு நீரளித்தார். அவர்தம் கை கால்களைக் கழுவிய பின் நீர் அருந்தினார்.

14. அவருடைய எஜமானரான பிராமணர், அவர் உயர்வெய்திய புத்தருக்கு நீரளித்ததைக் கேள்விற்றுக் கூறினார்: "கிராமத்தின் ஆணையை அவள் மீறிவிட்டாள், நான் குற்றம் சாட்டப்படுகறேன். கோபத்தால் கொதித்து, பற்களை நற நற வெனக் கடித்தபடி அவர், அப்பெண்ணைத் தரையில் தள்ளி, கைகளாலும் கால்களாலும் உதைத்தார். இதன் காரணமாக அப்பெண் இறந்து போனார்."

1. அப்போது பிராமணர் தோனர் மேன்மைத்தங்கிய புத்தரை வந்து கண்டு அவருக்கு வந்தனம் தெரிவித்து, மரபான வந்தனைச் சொற்களைப் பறிமாறிபின் ஓர்புறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்து, மேன்மைத்தங்கிய புத்தரிடம் பிராமணர் தோனர் கூறினர்.

2. "குரு கவுதமரே! இவ்வாறு கூறப்படுவதை நான் கேள்வியுற்றேன், குரு கவுதமர் மூத்த போற்றுதற்குரிய, ஆயிரம் பிறை கண்ட, வாழ்வில் நெடிய அனுபவம் வாய்ந்த, வயது முதிர்ந்த பிராமணர்களை வணங்குவதில்லையாம்-அவர்களுக்காக எழுவதில்லையாம்-அவர்களுக்கு இருக்கையளிப்பதில்லையாம்."

3. "குரு கவுதமரே! உண்மையில் அது அப்படியே இருக்கிறது. குரு கவுதமர்...வயது முதிர்ந்த...போற்றுதலுக்குரிய பிராமணர்களுக்கு...இதில் எதையும் செய்வதில்லை குரு கவுதமரே! இது சரியில்லையே!"

4. "தோனரே! தாங்கள் ஒரு பிராமணர் என்று வெளிப்படுத்திக் கொள்கிறீர்களல்லவா?"

5. "குரு கவுதமரே! யாரைப் பற்றியேனும், சரியாகக் கூறப்படமாயின் இவ்வாறுரைக்கப்பட வேண்டும்: 'பிராமணர் இரு பிறப்பாளர், ஏறக்குறைய ஏழு தலைமுறைகளுக்குப் பரம்பரையாயத் தூயவர்-தாய் வழியாகவும், தந்தை வழியாகவும்-பிறப்பைப் பொறுத்தவரை எதிர்ப்புக்கோ, அவமதிப்பிற்கோ அப்பாற்பட்டவர்-கல்வி ஆர்வம் மிக்கவர்-மந்திரங்களை மனப்பாடமாய் அறிந்திருப்பவர் உட்பொருளையும், புறச் சடங்குகளையும் உள்ளடக்கிய மூன்று வேதங்களையும் கரை கண்டவர் - ஒலியியலையும் வட-மற்றும் வேதங்களையும்

கரைகண்டவர்-ஒலியிலையும் கூட -மற்றும் புராணங்களிலும் செய்யுட்களிலும் இலக்கணைங்களிலும் வல்லுநர்-உயர் மனிதரின் அடையாளங்களை அறிவதில் வல்லவர்-பிரபஞ்சத்தை முன்னறிபவர்-என்னைப் பற்றிச் சரியாய்க் கூறவேண்டுமானால்-குரு கவுதமரே-இப்படிக் கூறப்பட வேண்டும்-குரு கவுதமரே' நான் இவ்வாறாய்ப் பிறந்து...இவ்வாறாய்த் திறமையுற்று..."

6. "தோனரே! முற்காலத்திய பிராமண-முனிவர்கள், மந்திரங்களை உண்டாக்கியவர்கள்-மந்திரங்களை ஒப்புவிப்பவர்கள், அனைத்து கீதங்களையும், அனைத்துக் கூற்றுக்களையும், சொல்லுக்ச் சொல் அறிந்த பிராமணர்கள் சமயோதிதமாய் இவ்வாறு கூறியுள்ளனரே, அட்டகர், பாரத்வாஜர், வஸ்ஸமித்தர், யமதக்கி, அங்கீரசர், பாரத்வாஜர் ஆகியோர் அறிவித்துள்ளனரே, பிரம்மர் போல-தேவர்போல கட்டுப்பட்ட-கட்டுப்பாட்டை உடைக்கிற-ஐந்தாவதாக ஒதுக்கி வைக்கப்பட்ட பிராமணர் உள்ளனரென்று-தோனரே! இவர்களில் நீங்கள் எந்த வகையினர்?"

7. "இந்த ஐந்து வகைப் பிராமணர்களைப் பற்றி எங்களுக்குத் தெரியாது, குருகவுதமரே! இருந்தாலும் நாங்கள் பிராமணர்கள் என்று நாங்கள் அறிவோம். குருகவுதமர், எனக்கு அந்த ஐந்து, வகைப் பிராமணர்களைப் பற்றிய சாத்திரத்தைப் போதித்தால் வகைப் பிராமணர்களைப் பற்றிய சாத்திரத்தைப் போதித்தால், எனக்கு நன்மையாயிருக்கும்."

8. "அப்படியாயின், பிராமணரே! கவனியுங்கள்! நான் உரைக்கிறேன்.!"

9. "ஆம்! ஐயா!" அவர் பதிலிறுத்தார், மேன்மைத்தங்கிய புத்தர் உரைக்கலானார்.

10. "தோனரே! ஒரு பிராமணர் எப்படி பிரம்மம் போல் ஆகிறாராம் தெரியுமா?"

11. "தோனரே! இருபிறப்பாளராய் ஏழு தலைமுறைகட்கும் பரம்பரைத் தூயராய்-தாய்வழியாகவும், தந்தை வழியாகவும், உள்ள ஒரு பிராமணரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் பிறப்ப் பொறுத்தவரை ஐயத்திற்கோ, அவமதிப்பிற்கோ அப்பாற்பட்டவராயிருக்கிறார்-அவர் நாற்பத்தியெட்டு ஆண்டுகள் பிரம்மத்சரியமாம் பிரம்ம வாழ்க்கை வாழ்கிறார்-தன் குருவுக்குக் குரு காணிக்கை செலுத்தத் தன்னைச் சாத்திரமல்லா வழியிலன்றி சாத்திர வழியிலேயே தன் வாழ்முறையை அமைத்துக் கொள்கிறார்."

12. தோனரே! ஆங்குள்ள சாத்திரம் (வாழ்முறை) யாது? உழவராய் அன்று-அல்லது வணிகராய் அன்று-அல்லது கால்நடை வளர்ப்போராயன்று - அல்லது வில்லாளியாயன்று - அல்லது இராஜாங்க சேவகராய் அன்று -(தான் உயிர்வாழ வருவாய் பெற) எந்த கைத்தொழில் புரிபவனாயும் அன்று-ஆனால் வெறுமனே திருவோட்டைக் கைவிடாமல், காணிக்கைக் பெறுதால் மட்டுமே.

13. "அவர், தன் குருவுக்குக் குரு காணிக்கைக் செலுத்துகிறார். தன் தலைமுடி-தாடியை மழித்துக் கொள்கிறார்-காவியுடை அணிந்து கொண்டு இல்லறத்தினின்று துறவறம் செல்கிறார்."

14. "அவ்வாறு சென்றவர், தன் மனத்திற்குள்ளேயே நல்லெண்ணத்தோடிருந்து ஒரு கால்பகுதி உலகை, பின் இரண்டாவதை, மூன்றாவதை, நான்காவதை, அதன்பின் மேலுலகை, கீழுலகை, குறுக்கும் நெடுக்குமாய், எங்கும், எவற்றையும், முழு உலகையும், கற்பனையாலேயே நெடியதாய், விரிவாய், எல்லையற்றதாய், வெறுப்பின்றி, தீயவிரப்பின்றி ஆளுகைப் புரிகிறார்."

15."அவர் தன் மனத்திற்குள்ளேயே, இரக்கத்தோடு... அனுதாபத்தோடு.. சமநிலையோடு, ஒரு கால்பகுதி உலகை, பின் இரண்டாவதை, மூன்றாவதை, நான்காவதை, அதன்பின் மேலுலகை, கீழுலகை, குறுக்கும் நெடுக்குமாய், எங்கும், எவற்றையும், முழு உலகையும் இரக்கம், அனுதாபம், சமநிலைக் கொண்ட கற்பனையாலேயே நெடியதாய், விரிவாய், எல்லையற்றதாய், வெறுப்பின்றி, தீயவிருப்பின்றி ஆளுகைப் புரிகிறார்."

16. "இந்த பிரம்ம -ஆளுகையைப் புரிந்தபின், உடல் தளர்ந்து இறந்தபின், அவர் நன்மைமிக்க பிரம்மலோகத்தில் எழுகிறார். இவ்வாறாக தோனரே! பிராமணர் பிரம்மம் போலாகிறாராம்.

17. "தோனரே! ஒரு பிராமணர் எப்படி தேவர்-போல் ஆகிறாராம் தெரியுமா?"

18. "தோனரே! இதே போன்ற பிறப்பும் நடத்தையுமுள்ள ஒரு பிராமணரை எடுத்துக் கொள்ளுங்கள்...அவர் தன் வாழ்க்கை வருவாய் முறையை, ஏர் உழுதோ, மற்ற விதமாகவோ பெறாமல் காணிக்கையேற்றே பெறுகிறார்...அவர் குருவுக்குக் குரு காணிக்கை செலுத்திவிட்டு சாத்திரத்திற்கேற்ப சாத்திரமல்லாததற் கேற்ப அன்று-ஒரு மனைவியைத் தேடுகிறார்."

19. "பின் சாத்திரம் யாது? வாங்கப்பட்ட விற்கப்பட்ட பெண்ணோடன்று (மனைவியாக்குதல்)-ஆனால் நீரால் புனிதப்படுத்தப்பட்ட தாரைவார்க்கப்பட்ட ஒரு பிராமணியைத் தான் ஒதுக்கி வைக்கப்பட்ட ஒருவரின் மகளையோ, வேட்டுவரின், அல்லது மூங்கில் வேலை செய்வோரின், அல்லது வண்டி செய்வோரின், அல்லது நாடோடியின், மகளையோ அன்று-குழந்தையுடனுள்ள பெண்ணையன்று, பாலூட்டிக் கொண்டிருக்கும் பெண்ணையன்று, தன் பருவத்திலுள்ள பெண்ணையன்று-அவர் மணக்க வேண்டியது ஒரு பிராமணியை மட்டுமேயென்பது சாத்திரம்.

20. "தோனரே! ஒரு பிராமணர் எதன் காரணமாக குழந்தையோடுள்ள பெண்ணை மணப்பதில்லை? அப்படி மணந்தால், அந்தப் பையனோ, பெண்ணோ நிச்சயமாக வழிதவறிப் பிறந்தவராயிருப்பர்-அதனால் அவர் மணப்பதில்லை. பாலுட்டிக் கொண்டிருக்கும் பெண்ணை எதன் காரணமாக அவர் மணப்பதில்லை? அப்படி மணந்தால் அந்தப் பையனோ பெண்ணோ தூய்மையற்றவராய் இருப்பர்."

21. "எதன் காரணமாக அவர் பூப்படையா பெண்ணை மணக்கறார்? பூப்படையா பெண்ணை அவர் மணந்தால், அந்தப் பிராமணி அவர்தம் காமத் தேவையை, உல்லசத்தை சிற்றின்பத்தை அளிப்பதில்லை-அந்தப் பிராமணி அவருக்குப் பிற்காலத்தில் பிள்ளையை பெற்றுத் தருபவளாயிருப்பாள்."

22. "திருமணத்தில் அவர் (ஒரு பிள்ளை) பெற்றுக் கொண்டால் தன் தலைமுடி-தாடியை மழித்துக் கொண்டு.... அவர் சென்று விடுவார்.."

23. "அவ்வாறு சென்று, புலனுணர்ச்சித் தேவைகளிலிருந்து விலகிக் கொண்டு...அவர் கிஹஸ்த ஆசிரமத்திலிருந்து வனப்பிரஸ்த ஆசிரமத்திற்குள்,,,புகுந்து வாழ்வார்."

24. "இந்த நான்கு ஆசிரமங்களும் நிறைவுற்றபின், உடல் தளர்நது, மரணமுற்றிபின், அவர் சொர்க்க உலகில் புகுவாராம்."

25. "இவ்வாறாக தோனரே! ஒரு பிராமணர் தேவர் போல் ஆவாராம்."

26. "தோனரே! ஒரு பிராமணர் பந்தத்திற்குக் கட்டுப்பட்ட பிராமராய் எப்படி ஆவாராம்?"

27. "தோனரே! இதேபோன்ற பிறப்பும் நடத்தையுமுள்ள, இதே வகையில் திருமணம் செய்து கொண்ட ஒரு பிராமணரை எடுத்துக் கொள்ளுங்கள்...

28. "அந்தத் திருமண வாழ்வில் அவர் ஒரு பிள்ளையைப் பெற்றுவிடுகிறார்-அந்த பிள்ளைமேல் பாசம் அவரை வாட்டி வதைக்கிறது-அவர் அந்தக் குடும்ப வாழ்வில் திளைத்துவீடுகிறார்-அவர் இல்லற்திலிருந்து துறவறத்திற்குச் செல்வதில்லை."

29. "காலம் செல்லச் செல்ல அந்தப் பிராமணர் பந்த பாசங்களில் நிலைத்து விடுகிறார்-அவர் அவற்றை மீறுவதில்லை, இவ்வாறு கூறப்படுகிறது. பந்தபாசக் கட்டுகளில் நிலைத்து விடுகிறார்-மீறுவதில்லை. எனவே அந்தப் பிராமணர் பந்தமுள்ளவர் என்றழைக்கப்படுகிறார்."

30. "இவ்வாறாக, தோனரே, அந்தப் பிராமணர் பந்தப்படுகிறாராம்."

31. "மேலும் தோனரே! ஒரு பிராமணர் எவ்வாறு கட்டுக்களை உடைக்கிறவர் ஆகிறாராம்?"

32. "தோனரே! இதே போன்ற பிறப்பும், நடத்தையும் உள்ள ஒரு பிராமணரை எடுத்துக் கொள்ளுங்கள்...அவர் குரு காணிக்கை செலுத்திவிட்டு, ஒரு மனைவியைத் தேடுகிறார்-சாத்திரப்படியோ-சாத்தரமல்லதபடியோ வாங்கப்பட்ட அல்லது விற்கப்பட்ட பெண்ணையோ அல்லது புனித நீருற்றிச் சடங்கு செய்யப்பட்ட பிராமணப் பெண்ணையோ தேடுகிறாராம்."

33. "அவர் பிராமணியையோ, அல்லது ஒரு பிரபுவின் அல்லது கீழ்சாதியாரின் அல்லது அடிமையின் மகளையோ, அல்லது வண்டி செய்பவர் அல்லது ஒரு நாடோடியின் மகளையோ, அல்லது ஒரு குழந்தையுடனுள்ள பெண்ணையோ, பாலூட்டிக் கொண்டிருக்கும் பெண்ணையோ, பருவத்திலிருக்கும் பெண்ணையோ, பருவத்திலில்லாத பெண்ணையோ மணக்கிறார், அவருக்கு அந்தப் பிராமணி வெறும் காமசாதனத்திற்கு, உல்லாசத்திற்கு, சிற்றின்பத்திற்கு அல்லது பிள்ளைப் பெறுவதற்கு மட்டும் உரியவளாகிறாள்."

34. "அவர் பண்டைய பிராமணீயக் கட்டுப்பாட்டு விதிகளுக்குட்பட்டில்லாமல் அதை மீறுபவராயுள்ளார், இவ்வாறு கூறப்படும், அவர் கட்டுபபாடுகளைக் கைக்கொண்டவரன்று-மீறியவர், எனவே அவர் கட்டுக்களை உடைத்தெறிந்தவர் எனப்படுகிறார்."

35. "இவ்வாறாக தோனரே! அந்தப் பிராமணர் கட்டுப்பாடுகளை உடைத்தவராகிறாராம்."

36. "தோனரே! ஒரு பிராமணர் எப்படி ஒதுக்கப்பட்ட பிராமணர் ஆகிறாராம்?"

37. "தோனரே! இதே வகையான பிறப்பும், நடத்தையுமுள்ள பிராமணர் ஒருவரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் நாற்பத்தியெட்டு ஆண்டுகள் பிரம்மச்சரிய பிரம்ம வாழ்வினை மேற்கொண்டு, மந்திரஙகளுக்குத் தன்னை ஆட்படுத்தி, அதன் பின், தன் ஆசிரமக் கல்வியை முடத்து, குருவுக்கு குருகாணிக்கையை அளிக்க வருவாய் தேடுகிறார். (சாத்திரப்படியோ அல்லது சாத்திரமல்லாதபடியோ) உழவராகவோ, வணிகராகவோ, கால்நடை வளர்பபவராகவோ, வில்லாளியாகவோ, இராஜசேவகராகவோ அல்லது வேறெந்தக் கைத்தொழிலாலோ, அல்லது திருவோட்டை கைவிடாமல் காணிக்கைப் பெறச் சென்றோ வருவாய் தேடுகிறார்."

38. "குரு காணிக்கையைச் செலுத்தி முடித்துப்பின், சாத்திரப்படியோ அல்லது சாத்திரமல்லாத படியோ அவர் ஒரு மனைவியைத் தேடுகிறார்-வாங்கப்பட்ட அல்லது விற்கப்பட்ட பெண்ணையோ அல்லது ஒரு புனித நீருற்றிச் சடங்கு செய்யப்பட்ட பிராமணியையோ, அல்லது வேறெந்தப் பெண்ணையோ....குழந்தையுடையவளையோ, பாலூட்டுபவளையோ...இவ்வாறாக...அவருக்கு அவள் காமசாதனமாய்....அல்லது பிள்ளை பெறுபவளாய்...இருப்பாள். அவர் இவையனைத்தையும் செய்கிற வாழ்வுவாழ்கிறார்."

39. பிறகு பிராமணர்கள் அவரிடம் இவ்வாறு கூறுவார்கள்: "ஒரு மதிப்பிற்குரிய பிராமணர் எப்படி இப்படியான வாழ்வு மேற்கொள்கிறீர்கள்?"

40. "அதற்கு அப்பிராமணர் பதிலிருக்கிறார், மாசற்றவற்றையோ, மாசுடையவற்றையோ தீ மாசுறுவதில்லை. அதுபோலவே-நல்லோரே-ஒரு பிராமணர் இவற்றையெல்லாம் செய்கிற வாழ்வு மேற்கொண்டாலும் அவற்றால் அந்த பிராமணர் மாசுறுவதில்லை."

41. இவ்வாறு கூறப்படும் அவர் இவற்றையெல்லாம் செய்கிற வாழ்வு வாழ்கிறார், எனவே அவர் ஒதுக்கப்பட்ட பிராமணர் என்று அழைக்கப்படுகிறார்.

42. இவ்வாறாக, தோனரே! ஒரு பிராமணர் ஒதுக்கப்பட்ட பிராமணர் ஆகிறார்.

43. "இவ்வாறே, தோனரே! பண்டைய பிராமண முனிவர்கள், மந்திரங்களை உண்டாக்கியவர்கள், மந்திரங்களை ஒப்பிப்பவர்கள் ஆகியோர்-எவருடைய பண்டைய செய்யுள் தொகுப்புக்கள்-சொல்லுக்குள் சொல்....மற்றவையாவும்...இந்த ஐந்து வகை பிராமணர்களும் அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள், பிரம்மம் போன்றவர்கள், தேவர் போன்றவர்கள், பந்முறறவர்கள், கட்டுப்பாடுகளை உடைத்தவர்கள், ஐந்தாவதாய் ஒதுக்கப்பட்ட பிராமணர்கள்."

44. "தோனரே! இவ்வகைகளில் தாங்கள் எவ்வகை பிராமணர்?"

45. "ஈண்டு, இவ்வாறிருப்பதாயின், குரு கவுதமரே! நாங்கள் ஒதுக்கப்பட்ட பிராமண வகைக்குரியவரேயன்றோ? (வழிமுறைகளால்)"

46. "ஆயினும், குரு கவுதமரே...தாங்கள் உரைத்தவை அற்புதமானவை. குரு கவுதமர், என்னைத் தம் உபாசகச் சீடராக, இனி என் வாழ்நாள் முழுவதற்கும் தங்களிடம் சரணடைந்தவனாக ஏற்றுக் கொள்வீராக."

## புத்தரும் அவருடைய சமகாலத்தவரும்<br>அவருடைய புரவலர்கள்

### 1. பேரரசர் பிம்பிசாரரின் தானம்.

1. பேரரசர் பிம்பிசாரர் உயர்வெய்திய புத்தரை சாதாரணமாய் பின்பற்றுபவர் மட்டுமன்று, அவர் தம்மத்தின் மிகப்பெரிய பற்றாளரும் ஆதரவாளரும் ஆவார்.

2. பவுத்த உபாசகராய் ஆனபின் பிம்பிசாரர் வினவினார், "உயர்வெய்திய புத்தர் சோதரத் துறவோருடன் நாளை என்னுடன் உணவருந்தலாமல்லவா?"

3. உயர்வெய்திய புத்தர் மவுனமாய் இருந்ததன் மூலம் அவர்தம் ஒப்புதலை வெளிப்படுத்தினார்.

4. அதன் பின், பிம்பிசாரர் உயர்வெய்திய புத்தர் அவருடைய அழைப்பை ஏற்றதை உணர்ந்து, தன் இருக்கையினின்று எழுந்து, மிக்க மரியாதையுடன் உயர்வெய்திய புத்தரை வணங்கி வலப்புறமாய் வலம்வந்து சென்றார்.

5. இரவு கடந்த வேளையில், பிம்பிசாரர் அருமையான உணவுகளைத் தயாரிக்கக் கட்டளையிட்டு, உரிய நேரத்தில் உயர்வெய்திய புத்தரிடம் கீழ்க்கண்ட சொற்களில் அறிவித்தார், "ஐயன்மீர்! தக்க நேரமிது! உணவுதயாராய் உள்ளது."

6. அந்த முற்பலில் உயர்வெய்திய புத்தர் அவர்தம் துவராடையை அணிந்து, பிட்சாபாத்திரத்தை ஏந்தி, மேலாடையுடன் இராஜகிஹ நகரில் முன்னமே அனைவரும் ஜதிலராய் இருந்த துறவோரோடு புகுந்தார்.

7. மற்றும் உயர்வெய்திய புத்தர் பேரரசர் பிம்பிசாரரின் அரண்மனைக்குச் சென்றார். ஆங்கு சென்று, அவரைப்பின் தொடர்ந்த பிறதுறவோரோடு, அவர்களுக்காக இடப்பட்டிருந்த இருக்கைகளில் ஒன்றில் அர்ந்தார். பின், பேராரசர் பிம்பிசாரர் தம் கரங்களாலேயே சோதரத் துறவோருக்கும் புத்தருக்கும் உணவளித்தார். உயர்வெய்திய புத்தர் தம் உணவையுண்டு முடித்து, தம்பிட்சாபாத்திரத்தையும் கைகளையும் கழுவி முடித்த பின், அவர் அவரருகே அமர்ந்தார்.

8. அவரருகே அமாந்த பேரரசர் பிம்பிசாரர் எண்ணினார், "உயர்வெய்திய புத்தர் வசிக்க கிராமங்களுக்கு வெகு தொலைவிலும் இல்லாமல், வெகு அருகிலும் இல்லாமல், அவரை நாடும் க்கள் அடையச் சுலபமாகவும், பகலில் கூட்டமதிகமின்றியும், சந்தடி குறைந்ததாகவும், இரவில் குறைந்த ஓசையுடையதாகவும், தனித்ததாகவும், மனிதர்களிடமிருந்து சற்றே மறைவாயுள்ளதாகவும், ஓய்வான வாழ்வுக்கு உகந்ததாகவும் உள்ள ஓரிடத்தை எங்கே காண்பேன்?"

9. மேலும் பேரரசர் பிம்பிசாரர் எண்ணினார், "ஆங்கே என்னுடைய மகிழ்வனமான வேலுவனம் உள்ளது-நகரிலிருந்து அது வெகு தொலைவிலும் இல்லை-வெகு அருகிலும் இல்லை. போய்வரப் பொருத்தமானது. புத்தரைத் தலைமையாய்க் கொண்ட சோதரத் துறவோருக்கு இந்த வேலுவனத்தை நான் தானம் செய்தாலென்ன?"

10. பேரரசர் பிம்பிசாரர் நீர்நிறைந் ஒரு தங்கப் பாத்திரத்தை எடுத்து புத்தரின் கரங்களில் தாரை வார்த்தார். "நான் வேலுவனமாம் இந்த மகிழ்வனத்தைப் புத்தருக்கும் புத்தரின் தலைமையிலான சோதரத் துறவோருக்கும் அளிக்கிறேன்." உயர்வெய்திய புத்தர் அச்சோலையை ஏற்றார்.

11. அதன்பின், உயர்வெய்திய புத்தர் சமயக் கருத்துக்களை போதித்து, உணர்வூட்டி, உற்சாகமூட்டி, பேரரசரைத் திருப்தியுறச் செய்தபின், தன் இருக்கையினின்று எழுந்து வெளியேறினார்.

12. இந்நிகழ்ச்சியின் விளைவாக உயர்வெய்திய புத்தர் ஒரு சமயப்பேருரை ஆற்றியபின் "துறைவோரே! இந்த மகிழ்வனம் ஈகையை நீங்கள் பெற அனுமதி வழங்குகிறேன்,"

2. அநாதபிண்டிகரின் தானம்.

1. தன் சமயமாற்றத்திற்குப் பின் அநாத பிண்டிகர் ஒரு முறை உயர்வெய்திய புத்தரிடம் சென்றார். அவருக்கு வலபுறம் தன் இருக்கையை ஏற்று அவர் கூறினார்.

2. "நான் ஷராஸ்தியில், நல்ல விளைச்சல் தரும் நிலபுலன்களுடன், அமைதியை அனுபவித்து வாழ்வதை ஐயன்மீர் அறிவீர், ஆங்கு பசேநதி பேரரசராயுள்ளார்."

3. "இப்போது நான் ஆங்கொரு விஹாரரை நிறுவ விழைகிறேன். மேன்மைமிக்க தாங்கள் ஷ்ராவஸ்திக்கு வந்துற்று என்னிடமிருந்து அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமெனத் தங்களை வேண்டிக் கொள்கிறேன்."

4. உயர்வெய்திய புத்தர் அமைதியாயிருந்து, அதன் மூலம் அக்கொடையை ஏற்றுக் கொள்வதற்கான தன் விருப்பத்தைத் தெரிவித்தார்.

5. ஏழைகளின் தோழரும், அநாதைகளின் ஆதரவாளரும் ஆன அநாதபிண்டிகர், இல்லம் திரும்பி, ஜேதரின் மரபுரிமையான ஜேத சோலையை அதன் பசிய தோப்புகளோடும் அழகிய ஓடைகளோடும் கண்ணுற்று எண்ணினார், "உயர்வெய்திய புத்தரின் சோதரத் துறவோருக்கு விஹாராக இவ்விடம் மிகநன்கு பொருந்தும்," பின் அவர் அரசரிடம் சென்று அந்நிலைத்தைப் பெற அனுமதி கேட்கச் சென்றார்.

6. அரசர் அச்சோலையை மிக உயர்வாய் மதிப்பிட்டமையால், அதனை விற்க உட்படவில்லை. முதலில் முறுத்தாரெனினும் இறுதயில் கூறினார்,"அதன் விலையைத் தங்கத்தால் ஈடு செய்ய முடிந்தால், பின் தாங்கள் அதனைப் பெறலாம்-வேறெந்த விலைக்குமன்று."

7. அநாதபிண்டிகர் மிக மகிழ்வுற்று தன் தங்கத்தைக் குவிக்கத் தொடங்கினார், ஆனால் ஜேதர் கூறினார். "தங்களுக்குத் தொல்லை வேண்டாம். ஏனெனில் நான் விற்கப்போவதில்லை." ஆனால் அநாதபிண்டிகர் வலியுறுத்தினார். இவ்வாறாக அவர்கள் வேறுபாடுற்று வாதாடினர்-நீதிபதியை அணுகும் வரை.

8. இதற்கிடையே மக்கள் இந்த வழக்காறில்லாத முறையைப் பற்றிப் பேசத்ததொடங்கி விட்டனர். மேலும் தகவல்களைப் பற்றிக் கேள்வியுற்ற அரசர், அநாதபிண்டிகர் செலவந்தராய் இருந்தது மட்டுமன்றி, நேரியவராகவும், பொறுப்பானவராகவும் இருந்தமையை அறிந்து, அவருடைய திட்டங்களைப் பற்றி விசாரிக்கலானார். உயர்வெய்திய புத்தரின் பெயரைக் கேள்வியுற்றதும், விஹாரரை நிறுவுவதில் பங்குபெற ஆர்வமுற்று ஒரு பாதியளவு தங்கத்தை ஒப்புக்கொண்டு கூறினார். "நிலம் தங்களுடையது. ஆயினும் மரங்கள் என்னுடையயவை புத்தருக்கு அன்பளிப்பின் என் பங்காக நான் மரங்களைத் தருவேன்."

9. அடித்தளமிட்டபின், உயர்வெய்திய புத்தர் அளித்த வழிமுறைகளுக்கேற்ப உரிய முறைப்படி பரந்து விரிந்த கூடத்தை அவர்கள் அமைக்கத் தொடங்கினர். பொருத்தமான சிற்ப வேலைப்பாடுகளுடன் அக்கூடம் அழகுற அலங்கரிக்கப்பட்டது.

10. இந்த விஹாரா் ஜேதவனம் என்றாக்கப்பட்டது. அநாதைகளின் ஆதரவாளரான அநாதபிண்டிகர் புத்தரை ஷ்ராவஸ்திக்கு வந்துற்று தானத்தைப் பெற்றுக் கொள்ள அழைத்தார். அதன்படி உயர்வெய்திய புத்ர் கபிலவஸ்துவை விட்டு ஷராவஸ்திக்கு வந்துற்றார்.

11. உயர்வெய்திய புத்தர் ஜேதவனத்தினுள் புகுந்ததும், அநாதபிண்டிகர் மலர்களைத் தூவி, மணமிகு ஊதுபத்திகள் கொளுத்தி, தனாத்திற்கு அடையாளமாய் ஒரு தங்க ஜாடியினின்று நீருற்றித் தாரைவார்த்துக் கூறினார். "இந்த ஜேதவன விஹாரினை உலக முழுதுமுள்ள பவுத்த சோதரத் துறவோரின் பயன் பாட்டுக்காக நான் தானம் அளிக்கிறேன்."

12. உயர்வெய்திய புத்தர் தானத்தைப் பெற்றுக்கொண்டு பதிலிறுத்தார். "அனைத்துத் தீமையாட்படுத்தல்களும் வெல்லப்படட்டும், இந்தத் தான நன்னெறி அரசை பொதுவாய் மனித குலத்தின் நிலைபேறாகவும், குறிப்பாய் கொடுத்தவரின் நிலை பேராகவும் மேம்படச் செய்யட்டும்."

13. அநாதபிண்டிகர் உயர்பெரு தானவள்ளல்கள் எனப் பட்டயம் தாங்கிய எண்பது முதன்மையான சீடர்களில் ஒருவராயிருந்தார்.

3.ஜீவகரின் தானம்

1. மருத்துவர் ஜீவகர் ஒரு நாளுக்கு இருமுறை உயர்வெய்திய புத்தர் இராஜ கிரஹத்திலிருக்க நேர்ந்த போதெல்லாம் வந்து காணுவார்.

2. பேரரசர் பிம்பிசாரரால் உயர்வெய்திய புத்தருக்குத் தானமாய் அளிக்கப்பட்ட வேலு வனம் வெகுதொலைவிலிருப்பதாய்க் கண்டார் ஜீவகர்.

3. இராஜகிருஹத்தில் ஜீவகர் ஆம்பவனம் என்றழைக்கப்பட்ட தமக்குச் சொந்தமான சோலையை உடைடயவராய் இருந்தார்-அது அவருடைய இருப்பிடத்திற்கு வெகு அருகே இருந்தது.

4. அனைத்துத் தேவையான அமைப்புக்களுடன் ஒரு விஹாரினை எழுப்பி ஆம்பவனத்தையும் விஹாரையும் உயர்வெய்திய புத்தருக்குத் தானமாய் அளிக்க அவர் எண்ணினார்.

5. மனத்தில் இந்தக் கருத்துடன் அவர் உயர்வெய்திய புத்தரை அணுகித் தம்விருப்பத்தைத் தாம் நிறைவேற்றவிடும்படி வேண்டினார்.

6. உயர்வெய்திய புத்தர் தம் ஒப்புதலை மவனமாய் இருப்பதன் மூலம் வெளிப்படுத்தினார்.

4.ஆம்ப்ரபாலியின் தானம்

1. அப்போது மேன்மைதங்கிய புத்தர் நாதிகாவில் தங்கியிருந்தார். ஓர் இடமாற்றத்தை விழ்ந்த அவர் ஆனந்தரை விளித்து உரைத்தார். "வாரும் ஆனந்தரே! நாம் வேசாலிக்குச் செல்வோம்."

2. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்! மேன்மைதங்கிய புத்தரிடம் ஒப்புதலாய் உரைத்தார் ஆனந்தர்."

3. பிறகு மேன்மைதங்கிய புத்தர், பெரிய சோதரப் பரிவாரத்துடன் வேசாலிக்குச் சென்றடைந்தார். ஆங்கு வேசாலியில், மேன்மைத்தங்கிய புத்தர் ஆம்பரபாலியின் சோலையில் தங்கினார்.

4. அப்போது அரச நடனமாது ஆம்பரபாலி மேன்மைத் தங்கிய புத்தர் வேசாலிக்கு வந்துற்றதையும், தன்னுடைய மாந்தோப்பில் தங்கி இருப்பதையும் கேள்வியுற்றார். அரசத் தேர்கள் பலவற்றை ஏற்பாடு செய்ய ஆணையிட்டு, அவற்றில் ஒன்றில் அவர் அமர்ந்து தன் பரிவாரத்துடன் வேசாலியிலிருந்து தன்சோலைக்குச் சென்றடைந்தார். தேர்கள் செல்லத்தக்க பாதை வரை சென்றபின், அவர் தேரை விட்டிறங்கி, மேன்மைத் தங்கிய புத்தர் இருந்த இடம் வரை நடந்து, மிக்க மரியாதையுடன் ஓர்புறம் தன் இருக்கையில் அமர்ந்தார். அவ்வாறு அவர் அமர்ந்த பின், மேன்மைத்தங்கிய புத்தர் அவருக்கு சமயபோதனைகளைக் கற்பித்தார்.

5. அதன்பின் அவர், மேன்மைத்தங்கிய புத்தரிடம் கூறினார், "மேன்மைத்தங்கிய புத்தர் எனக்கோர் பேறு புரிய வேண்டும். அவருடைய சோதரத் துறவோரோடு என்வீட்டில நாளை தம் உணவை அவர் ஏற்க வேண்டும்."

6. மேன்த்தங்கிய புத்தர் மவுனத்தால் தன் ஒப்புதலை அளித்தார். அதன்பின் அரச நடனமாது ஆம்ப்ரபாலி மேன்மைத் தங்கிய புத்தர் ஒப்புக் கொண்டதைக் கண்டு, தன் இருக்கையிலிருந்து எழுந்து, வணங்கி, வலம் வந்து ஆங்கிருந்து அகன்றார்.

7. அப்போது வேசாலியின் லிச்சாவியர்கள் மேன்மைத்தங்கிய புத்தர் வேசாலிக்கு வந்துற்றதையும் ஆம்பரபாலியின் சோலையில் தங்கியிருப்பதையும் கேள்வியுற்றனர். அவர்களும் மேன்மைத் தங்கிய புத்தரை தம்மிடத்திற்கு உணவருந்த அழைக்க விரும்பினர். பற்பல அரசத் தேர்களை ஏற்பா செய்து, அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொன்றில் அமர்ந்து தங்கள் பரிவாரங்களுடன் வேசாலியிலிருந்து ஆங்குச் சென்றனர்.

8. அவர்களும் ஆம்ப்ரபாலியும் வழியில் சந்தித்துக் கொண்டனர்.

9. இளம் லிச்சாவியர்களை நோக்கி ஆம்ப்ரபாலி வேகவேகமாய், விடு விடுவென, விரைந்து விரைந்து வந்துற்ற காலை நாட்டிய நாயகி ஆம்பரபாலியிடம் லிச்சாவியர் வினவினர், "இதுதுனை விரைந்து எமைநோக்கி வருவதென்ன?"

10. "ஐயன்மீர்! நான் இப்போது தான் மேன்மைத்தங்கிய புத்தரையும், அவர்தம் சோதரத்துறவோரையும் நாளைக்கு உணவருந்த அழைத்துவிட்டு வருகிறேன்" என்றார் ஆம்பரபாலி.

11. "ஆம்பரபாலியே! இந்த நற்பேற்றினை நூறாயிரம் பொற்காசுகள் பெற்று எங்களுக்கு விட்டுக் கொடு" என்றனர் அவர்கள்.

12. "ஐயன் மீர்! நீங்கள் வேசாலி முழுவதையும் குடிபடைகளோடு வழங்க முன்வந்தாலும், நான் இந்த நற்பேற்றை விட்டுத்தர மாட்டேன்."

13. லிச்சாவியர்கள் கைகளைப் பிசைந்து கொண்டு வியந்தனர், "இந்த மாம்பழ மங்கையால் நாம் வெல்லப்பட்டுவிட்டோம். இந்த மாம்பழ மங்கையால் நாம் பின்தள்ளப்பட்டு விட்டோம்." இவ்வாறு கூறிக்கொண்டே அவர்கள் ஆம்ப்ரபாலியின் மாஞ்சோலைக்குச் சென்றனர்.

14. தாம் வெல்லப்பட்டதை அறிந்த அவர்கள், இருந்தாலும் இன்னமும், அவர் தங்கள் அழைப்பை முதலாய் ஏற்க மறுபரிசீலனைச் செய்வார் என்ற நம்பிக்கையுடன் உயர்வெய்திய புத்தரை அணுகினர். எனவேதான் அவர்கள் ஆம்ரபாலியின் மாஞ்சோலைக்குச் சென்றனர்.

15. மேன்மைத்தங்கிய புத்தர் லிச்சாவியர் வருவதை தூரத்தில் இருந்தே கண்டதும், சோதரத்துறவோரை விளித்து உரைத்தார், சோதரரே! உயர்வெய்தியோரை எப்போதும் காணாதிருக்கும் சோதரர்கள் இதோ, இந்த லிச்சாவியர் குழுவைக் காணுங்கள்-இந்த லிச்சாவியர் குழுவை மேம்பட்டோரோடு ஒப்புமை காணுங்கள்.

16. தேர் செல்லும் தூர எல்லைவரை வந்துற்றபின் லிச்சாவியர் தேர்களினின்று இறங்கி, மேன்த்தங்கிய புத்தர் இருந்த இடத்திற்கு நடந்து சென்று, மிக்க மரியாதையுடன் அவரருகே தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

17. அதன்பின், அவர்கள் மேன்மைத்தங்கிய புத்தரை விளித்து உரைத்தனர், "மேன்மைத்தங்கிய புத்தர் எங்கள் உணவை நாளை எம் இல்லத்தில் தம் சோதரர்களுடன் ஏற்கும் நற்பேற்றை எமக்கு அளிப்பீராக."

18. "லிச்சாவியர் நாளைக்கு ஆம்ப்ரபாலியுடன் உணவருந்த நான் வாக்களித்து விட்டேன்!" என்பது பதிலாயிருந்தது.

19. லிச்சாவியர் தாம் தோல்வியுற்றதை அறிந்தனர், அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தரின் வா◌ாத்தைகளை ஏற்று, நன்றி தெரிவித்த பின், அவர்கள் தம் இருக்கையை விட்டு எழுந்து மேன்மைத்தங்கிய புத்தரை வணங்கி, வலம் வந்து வெளிச்சென்றனர்.

20. இரவின் முடிவில் அரச நடனமாது ஆம்பரபாலி தன் மாளிகையில் இன்சுவை உணவுப் பண்டங்களைத தயாரித்து மேன்மைத்தங்கிய புத்தருக்கு உரிய நேரத்தை அறிவிக்கும் வகையில் கூறினார். "ஐயன்மீர்! உரிய நேரமிது, உணவு தயாராய் உள்ளது."

21. மேன்மைத்தங்கிய புத்தர் அதிகாலையிலேயே துவராடை அணிந்து, பிட்சாபாத்திரமேந்தி, மேலாடையுடுத்து, சோதரத் துறவோருட்ன ஆம்ப்ரபாலியின் மாளிகையிருந்த இடம் நோக்கிச் சென்றார். அவர் ஆங்கு வந்துற்றபின் அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தன் இருக்கையில் அமர்ந்தார். அப்போது அரச நடனமாது ஆம்பரபாலி இன்சுவை உணவுபண்டங்களை புத்தரின் தலைமையிலிரந்த சோதரத் துறவோர் முன் படைத்து, அவர்கள் போதுமென மறுக்கும் வரை உபசரித்தார்.

22. உயர்வெய்திய புத்தர் தம் உணவை முடித்துத் தம் பிட்சா பாத்திரத்தையும், சுரங்களையும் கழுவிய பின், அரச நடனமாது ஆம்ப்ரபாலி ஒரு தாழ்வான இருக்கையில் அவரருகே அமர்ந்து மேன்மைத்தங்கிய புத்தரிடம் கூறினார்.

23. "ஐயன்மீர்! என் மகிழ்வனத்தைத் தங்களுக்கும் தங்கள் சங்கத்திற்கும் தானமாக அளிக்கிறேன்." மேன்மைத்தங்கிய புத்தர் அத்தானத்தை ஏற்றுக் கொண்டார். ஒரு சமயப் பேருரை வழங்கிய பின் தன் இருக்கையிலிருந்து எழுந்து, அவரிடமிருந்து விடைபெற்றார்.

5. விஷாகாவின் கொடை உள்ளம்.

1. விஷாகா ஷ்ராவஸ்தியில் உள்ள ஒரு செல்வந்த மாதாவார். அவர் நிறைய புத்திரர்களையும், பேரர்களையும் உடையவராயிருந்தார்.

2. உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில் தங்கியருக்கையில் விஷாகா, உயர்வெய்திய புத்தர் இருந்த இடைத்திற்குச் சென்று தன்வீட்டில் உணவருந்துதற்கான அழைப்பை விடுத்தார். உயர்வெய்திய புத்தர் அதை ஏற்றார்.

3. இரவும் அடுத்த காலையும், நல்ல மழை பொழந்தது, அடுத்த நாள் காலை, பிக்குகள் உலர்த்திக் கொள்ள தம் ஆடையைக் களைந்து மழை தம்மேல் படுமாறிருந்தனர்.

4. அடுத்த நாள் உயர்வெய்திய புத்தர் தம் உணவை உண்டு முடித்தபின், அவரருகே தன் இருக்கையில் அமர்ந்து விஷாகா கூறினார் உயர்வெய்திய புத்தரிடம் நான் வேண்டும் பேறுகள் எட்டாகும்."

5. அதன்பின் உயர்வெய்திய புத்தர் உரைத்தார், "ஓ! விஷாகாவே! அவை யாவையென்று அறியாதவரை ததாகதர் எந்தப் பேற்றையும் அளிப்பதில்லை."

6. விஷாகா பதிலிறுத்தார். "ஐயன் மீர்! நான் வேண்டும் பேறுகள் பொருத்தமானவை-மற்றும் மறுக்கவொண்ணாதவை."

7. பேறுகளை வேண்ட அனுமதி பெற்றபின் விஷாகா கூறினார். "ஐயன் மீழ்! என் வாழ்நாள் முழுவதும், சங்கத்தோருக்கு மழைகாலத்தில் உடையளிக்கவும், பதிதாய் வருகிற பிக்குகளுக்கு உணவளிக்கவும். இங்கிருந்து வெளியேறும் பிக்குகளுக்கு உணவளிக்கவும், பிணியுற்றோருக்கு உணவளிக்க பிணியுற்றோர்க்கு மருந்தளிக்கவும், சங்கத்திற்கு நிலையாய் ாற்சோறு அளிக்கவும், பிக்குணிகளாம் சோதரிகளுக்கு நீராட ஆடையளிக்கவும் விழைகிறேன்."

8. புத்தர் உரைத்தார் "ஆயினும், விஷாகாவே! இந்த எட்டப் பேறுகளைத் ததாகதரிடம் தாங்கள் என்ன கருத்தில் வேண்டுகிறீர்கள்?"

9. விஷாகா பதிலிறுத்தார், "ஐயன் மீர்! நான் என் பணிப்பெண் சென்று, விஹாரை அடைந்தபோது, பிக்குகள் மழைபெய்கையில் ஆடைகளைக் களைந்திருப்பதைக் கண்டு எண்ணியிருக்கிறாள். 'இவர்கள் பிக்குகளன்று-தம் மீது மழைபொழிய விட்டிருக்கும் இவர்கள் நிர்வாண முனிவர்கள் போலும்' எனவே,அவள் என்னிடம் திரும்பி நடந்ததைக் கூறியபோது, நான் அவளை இரண்டாம் முறையாக அனுப்பினேன்."

10. "ஐயன்மீர்! நிர்வாணமாயிருப்பது தூய்மையுமன்று-கலகமானது. ஐயன்மீர்! இச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டே நான் என் வாழ்நாள் முழுவதும் சங்கத்தோருக்கு மழைகாலத்தில் பயன்படுத்து உரிய தனி ஆடைகளை வழங்க விரும்புகிறேன்."

11. "ஐயன்மீர்! என் இரண்டாவது விருப்பத்தைப் பொறுத்த வரை, சங்கத்திற்குள் புதிதாய்ச சேரும் பிக்கு, நேரடியான வழிகளில் செல்லவியலாமையால், தான உணவேற்கும் இடங்களை அறியாமல், தன் வழியே தானமேற்கப் போய்க் களைத்து விடுகிறார். ஐயன்மீர்! இச்சூழ்நிலையைக் கருத்தில் கொண்டே நான் வாழ்நாள் முழுவதும் புதிதாய் வந்து சேரும் பிக்குகளுக்கு உணவளிக்க விழைகிறேன்."

12. "ஐயன்மீர்! மூன்றாவதாக இவ்விடம்விட்டு வெளிச்செல்லும் பிக்கு, தான உணவைத் தேடுகையில், பிற பிக்குகளால் பின்விடப்பட்டோ, அல்லது தாமதமாகவோ, தான் செல்ல விரும்புமிடத்திற்குச் செல்வதால், சாலையில் களைத்து நிற்க நேரிடுகிறது."

13. "ஐயன்மீர்! நான்காவதாக, பிணியுற்ற ஒரு பிக்கு தன் பிணிக்காலத்தில் பொருத்தமான உணவைப் பெறவில்லையாயின், அவர்தம் பிணி அவருக்கு அதிகமாகி, அவர் இறந்துவிடக்கூடும்."

14. "ஐயன்மீர்! ஐந்தாவதாக பிணியுற்றோரைப் பேணும் பிக்கு, தமக்கான தான உணவைப் பெறச்செல்லும் வாய்ப்பை இழந்து விடுகிறார்"

15. "ஐயன்மீர்! ஆறாவதாக, பிணியுற்ற ஒரு பிக்கு தேவையான மருந்துகளைப் பெறாவிடின், அவருக்கு அவர்தம் பிணி அதிகப்பட்டு, அவர் இறந்து விடக்கூடும்."

16. "ஐயன்மீர்! ஏழாவதாக, உயர்வெய்திய புத்தர் பால்கஞ்சி உணவைப் போற்றியுரைத்ததாய் நான் கேள்வியுற்றுள்ளேன்-ஏனெனில் அது மனச் சுறுசுறுப்பளித்து, பசியையும், தாகத்தையும் தணிக்கிறது, அது ஆரோக்கியமானவர்க்கு ஒரு முழுமையான சத்துணவாகவும், பிணியுற்றோருக்கு மருந்தாகவும் உள்ளது. எனவே, நான் சங்கத்தோருக்கு என் வாழ்நாள் முழுதும் பால்கஞ்சி உணவளிக்க விரும்புகிறேன்."

17. "ஐயன்மீர் இறுதியாக, பிக்குணிகள் அசிரவதி ஆற்றில் அரச நடனமாதர் குளிக்கும் அதே இடத்தில், நிர்வாணமாய் குளிக்கும் வழக்கமுடையோராய் உள்ளனர். ஐயன்மீர்! அந்த அரச நடன மாதர்கள் பிக்குணிகளை இவ்வாறு கூறிப் பரிகசிக்கின்றனர், 'பெண்களே! உங்கள் கற்பை நீங்கள் இளமையாயிருக்கையில் பேணுவதில் என்ன நன்மை? நீங்கள் முதியோரான பின் கற்பை அப்போது பேணுங்கள். இருவித நன்மையும் அமைந்தவராவீர்.' ஐயன்மீர்! ஒரு பெண்ணுக்கு நிர்வாணம் தூய்மையுமன்று, வெறுப்பிற்குரியது, கலகமானது."

18. "ஐயன்மீர்! இந்தச் சூழ்நிலைகளையே நான் கருத்தில் கொண்டுள்ளேன்."

19. உயர்வெய்திய புத்தர் உரைத்தார். "ஆயினும், ஓ! விஷாகா! ததாகரிடம் இந்த எட்டுப் பேறுகளை நீங்கள் வேண்டுகையில் உமக்கான பலனாய் நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்?"

20. விஷாகா பதிலிறுத்தார், ஐயன்மீர்! பல்வேறிடங்களில் மழைக்காலத்தைக் கழித்த பிக்குகள், உயர்வெய்திய புத்தரைக் காண ஷ்ராவஸ்திக்கு வருவர். அவ்வாறு வந்து உயர்வெய்தி புத்தரை அவர்கள் இவ்வாறுரைத்து வினவுவர். "குறிப்பிட்ட ஒரு பிக்கு இறந்து விட்டார். ஐயன்மீர்! இப்போது அவர் முடிவு யாது? அதன்பின் உயர்வெய்திய புத்தர், சமய மாற்றத்தின் பயனை அவர் எய்திவிட்டார் என விளக்குவீர்கள். அவர் நிர்வாணத்தில் அல்லது அறவோர் நிலையில்-உள்ள நிலைக்கேற்ப -புகுந்துவிட்டாரென விளக்குவீர்கள்"

21. "அவர்களிடம் சென்று நான் வினவுவேன். ஐயன் மீர்! அந்தச் சோதரர், ஷ்ராவஸ்தியில் முன்பிருந்தவர்களில் ஒருவரா? அதன்ன் நான் முடிவுக்கு வருவேன், 'நிச்சயமாக அந்தச் சோதரர் மழைக்காலத் துவராடைகளையோ, புதிதாய்வரும் பிக்குகளுக்கான உணவையோ, வெளிச்செல்லும் பிக்குகளுக்கான உணவையோ, அல்லது பிணியுற்றோருக்கான உணவையோ, அல்லது பிணியுற்றோருக்கான மருந்தையோ, நிலையாக ஈயப்படும் பால்கஞ்சி உணவையே ஏற்றவராய் இருப்பார்."

22. "அதன் பின் எனக்குள் மகிழ்சி ஊறும். அவ்வாறு மகிழ்வின்பம் எனக்குள் ததும்பும். அவ்வாறு மகிழ்கையில் என் உடலும் மனமும் அமைதியுற்று இறும்பூதெய்தும். இவ்வாறாக அதையுறுகையில் இன்மும், திருப்தியும் மிக்க உணர்வை நான் அனுபவிப்பேன். அந்த இன்பத்தில் என் மனம் அமைதியுறும். அது என் ஒழுக்க உணர்புகளுக்கு ஒரு பயிற்சியாய் அமையும்-எழுவகைப் பேரறிவின் பயிற்சியாய், ஐயன்மீர்! அமையும் -எழுவகைப் பேரறிவின் பயிற்சியாய். ஐயன்மீர்! இதுவே இந்த எட்டு நற்பேறுகளை உயர்வெய்திய புத்தரிடம் நான் வேண்டுகையில் எனக்காக நான் கருத்தில் கொண்டுள்ள நற்பயன்களாகும்."

23. அதன்பின் உயர்வெய்திய புத்தர் உரைத்தார், "இது நன்று! விஷாகாவே! இது நன்று! ததாகதரிடம் இந்த எட்டு நற்பேறுகளை இந்த நற்பயன்களைக் கருத்தில் கொண்டு தாங்கள் வேண்டியதை நன்கு புரிந்தீர்கள். தக்கோருக்குப் புரியப்படும் ஈசை, நல்ல நிலத்தில் விதைக்கப்பட்ட நல்ல விதைகள் மிகப்பெரிதாய் விளைவதைப் போன்றது. ஆனால் இன்னமும் பற்றுக்களின் எதேச்சாதிகாரமான பிடியில் சிக்கிக் கொண்டுள்ளவர்களுக்கு அளிக்கப்படும் தானம் களர்நிலத்தில் வீசப்படும் விதையைப் போன்றது. தானத்தைப் பெறுவோரின் பற்றுடைமை உள்ளவாறு, நற்பேறுகளின் வளர்ச்சியைச் சிதறடித்துவிடும்."

24. "உயர்வெய்திய புத்தர் விஷாகாக்கு இவ்வார்த்தைகளில் நன்றி தெரிவித்தார். வாழ்வில் எவ்வகை ஈகையை ஒருபெண்மணி வழங்கிடினும், உயர்வெய்திய உத்தமரின் சீடர், அதை கறையொன்றில்லா மனமகிழ்ச்சியுடன் ஏற்று, அது மிக்குயர்ந் தானமெனவும், துன்பம் துடைப்பதெனவும், இன்பத்தை விளைவிப்பதென்றும் கொள்ள வேண்டும்." "அப்பெண் தவறுகள், மாசுகள் ஆகியவயற்ற பாதையில் புகுந்து அவள் வாழ்வு இன்புறுவதாக." "நல்லதை நோக்கி, அவள் இன்புறுகிறாள். தன் ஈகைச் செயல்களால் அவள் மகிழ்ச்சி மிகவுறுகிறாள்."

25. விஷாகா பூர்வ-அறம் அல்லது கிழக்குச் சோலையை சங்கத்திற்கு வழங்கி இல்லற உபாசிகச் சோதரிகளின் முதற்பாதுகாவலர் ஆனார்.

அவருடைய கொள்கைகளின் திறனாய்வாளர்கள்.

1. சங்கத்திற்குள் பொது அனுமதியை எதிர்த்தவர்கள்.

1. எந்த ஒரு உபாசக-இல்லறத்தாரையும் அவர் சாதாரண சீடராயிருந்தாலே, அவரைச் சங்கத்திற்குள் சேர்த்துக் கொள்ள வழியிருந்தது.

2. இவ்வாறு எவரொருவரையும் சேர்த்துக் கொள்ளும் பொது அமைப்பாகச் சங்கத்தை வைத்திருந்தமைக்காக புத்தரை எதிர்த்த மனிதர்கள் சிலர் இருந்தனர்.

3. இவ்வாறான திட்டத்தினால், சங்கத்தில் சேர்ந்தவர்கள். பிறகு அதைவிட்டுவிடவும்-மீண்டும் கீழ்நிலைக்குத் திரும்பி பின்னோக்கிச் சென்று, அதனால் மக்கள் "சாமண கவுதமரின் சமயம் வீணானது-எனவேதான் இவர்கள் அதைக் கைவிட்டனர்." என்று சொல்கிற நிலையேற்படுமே என்று அவர்கள் வாதித்தனர்.

4. இந்த விமர்சனம் வலுவான அடித்தளமுடையதன்று, மேலும் உயர்வெய்திய புத்தர் இத்தகைய திட்டத்தை ஏற்படுத்தியதற்கான நோக்கத்தை அறியாத வாதமுமாகும் இது.

5. உயர்வெய்திய புத்தர், தன் சமயத்தை நிறுவியதன் மூலம், தான் மிகச் சிறந்த, உய்வளிக்கக் கூடிய நீர் நிரம்பிய ஒரு குளத்தை, நீராடுவதற்காக-நன்னெறிநீராடுவதற்காக, உருவாக்கியதாய்ப் பதிலிறுத்தார்.

6. "தீயசெயலால் கறைபட்ட யாரும், அதில் நீராடுவதன் மூலம் தம் தீயசெயல்கறையைக் கழுவிக்கொள்ளலாம் என்பதே புத்தருடைய விருப்பமாயிருந்தது."

7. "அந்த நன்னெறி நீராட்டக் குளத்திற்குச் சென்ற யாரும், அதில் நீராடாமல், முன்பு போலவே அழுக்குடன் திரும்பி, பழைய கீழ்நிலைக்கே மீண்டால், அவர்தான் குற்றச்சாட்டுக்குரியவரேயன்றி, அந்தச் சமயநெறியல்லவே."

8. உயர்வெய்திய புத்தர் உரைத்தார். "இப்படியான நீராடும் குளத்தை மக்கள் தம் தீயசெயல் கறைகளைக் கழுவிக் களைவதற்காகவென்று நான் நிறுவிய பின், அவர்களிடம் இப்படி உரைக்க முடியுமா? 'கறையுடையோர் யாரும் குளத்திற்கு வராதீர்கள்! யாரடைய தூசும், அழுக்கும் கழுவிக்களையப்பட்டு விட்டதோ, யாரெல்லாம் கறையற்றத் தூய்மையானவர்களோ அவர்கள் மட்டும் குளத்திற்கு வாருங்கள் என்று.'

9. "அத்தகைய முறைகளால் என் சமயத்தால் என்ன பயன் விளையும்?."

10. மேன்மைதங்கிய புத்தர், ஒரு சிலருக்கு மட்டுமே பயன் விளைக்க முடிவெடுத்தவரன்று என்பதை விமர்சகர்கள் மறந்து விட்டனர். அவர் அதை அனைவருக்குமாய், அனைவரும் முயற்சிக்கும் வண்ணம் திறந்து வைக்கவே விழைந்தார்.

## 2. உறுதிப்பட்டு விதிகளை எதர்த்தவர்கள்.

1. ஏன் ஐந்து போதனைகள் போதுமானவையாக இல்லை? ஏன் உறுதிப்பாடுகள் அவசியமென உணரப்பட்டன? இவைகள் அடிக்கடி எழுப்பப்படுகின்ற வினாக்களாகும்.

2. நோய்கள் மருந்தில்லாமலே தணிக்கப்பட இயலுமாயின் வாந்தியெடுக்கச் செய்தல், விரைந்து கழிக்கச் செய்தல், மற்றும் இதுபோன்ற மருந்துவங்களால் உடமைலப்பலவீனப்படுத்துவதால் என்ன பயன் என்று வாதிக்கப்படுகிறது.

3. இதுபோலவே, உபாசகர்கள், இல்லத்தில் வாழ்ந்து, புலனின்பங்களை அனுபவித்தபடயே, போதனைகளை ஏற்றுக் கொள்வதன் மூலம், தமக்குள் அமைதிக்கான சூழ்நிலையையும் உன்னத நன்மையையும், நிப்பானத்தையும் தமக்குள் தாமே உணரமுடியுமாயின், பிக்கு மட்டும் தான் இந்த உறுதிப்பாடுகளை ஏற்க வேண்டிய அவசியமென்ன?

4. உயர்வெய்திய புத்தர் இந்த உறுதிப்பாடுகளை வகுத்தது ஏனெனில் நன்னெறிகள் அவர்களுக்குள் இயல்பானவை.

5. உறுதிப்பாடுகளால் கட்டுப்படுத்தப்பட்ட வாழ்க்கை நிச்சயமாக தன்னுடன் ந்ன்மையை வளர்ப்பதாய், தானே வீழ்ச்சிக் கெதிராய்ப பாதுகாப்பதாய் அமையும்.

6. உறுதிப்பாடுகளைக் ஏற்று, தற்சார்புள்ளவர்களாய் அவற்றை நிறைவேற்றுபவர்கள் உய்வுற்றவர்களாவர்.

7. உறுதிப்பாடுகளைக் காத்தல் என்பது மிகைக் காமத்தைக் கட்டுப்படுத்தல், வெறுப்பின், தற்பெருமையின், தீய சிந்தனைகளின் தளையை அறுத்தல் என்பதாகும்.

8. உறுதிப்படுகளை ஏற்று அவற்றைக் காப்பவர்கள் எவரும், உண்மையில் நன்கு தற்காக்கப்பட்டோராகவும் மனத்தாலும் செயலாலும் முழுமையாய்த் தூய்மையுற்றோராகவும், இருப்பர்.

9. வெறும் போதனைகளை ஏற்பது இவ்வாறன்று.
10. போதனைகள் விஷயத்தில் உறுதிப்பாடுகள் விஷயத்தில் உள்ளது போல் ஒழுக்க வீழ்ச்சிக்கெதிரான பாதுகாப்பில்லை.

11. உறுதிப்பாடுடைய வாழ்க்கை மிகவும் கடினமானது. போதனைகள் பெற்ற வாழ்க்கை அவ்வாறன்று உறுதிப்பாடுடைய வாழ்க்கை வாழும் சிலரையேனும் உடையதாயிருப்பது மனிதகுலத்திற்கு அவசியமாகும். எனவேதான் உயர்வெய்திய புத்தர் இவ்விரண்டையும் வகுத்தளித்தார்.

### 3. அஹிம்சைக் கோட்பாட்டை எதிர்த்தவர்கள்.

1. அஹிம்சைக் கோட்பாட்டை எதிர்க்கும் மனிதர்கள் இருந்தனர். அது தீமைக்குச் சரணடைவதையும் அதைத் தடுத்து நில்லாமையையும் உள்ளடக்கியுள்ளது என்றார்கள் அவர்கள்.

2. உயர்வெய்திய புத்தர் போதித்த அஹிம்சைக் கோட்பாடடை இது முழுமையாயத் தவறாகப் பிரதிநிதித்துவப்படுத்திய கூற்றமாகும்.

3. உயர்வெய்திய புத்தர் இது குறித்து பொருள்மாற்றமோ, தவறான புரிதலோ, ஏற்படாத வகையில், பல்வேறு சமயங்களில் தம் நிலைப்பாட்டைத் தெளிவாக்கியுள்ளார்.

4. இத்தருணத்தில் குறிப்பிட வேண்டிய அத்தகைய முதல் நிகழ்வு, சங்கத்தில் படைவீரர்கள் சேர்வது குறித்த விதியை அவர் வகுத்தாகும்.

5. ஒரு சமயம், மகத சாம்ராஜ்யத்தின் எல்லைப்புறங்களில் உள்ள பிரதேசங்கள் கிளர்ச்சி புரிந்தன, பின் மகதமன்னர் சேனிய பிம்பிசாரர் படைத்தளபதிக்கு ஆணையிட்டார். "எல்லைப் பிரதேசங்களில் குற்றமிழைப்போரைத் தேடிக் காணவும், கண்டு தண்டிக்கவும், அமைதியை மீட்கவும் தங்கள் அதிகாரிகளுக்கு உத்தரவிடுங்கள்." தளபதி இதன்படியே நடந்தார்.

6. தளபதியின் ஆணைகளைக் கேள்வியுற்ற அதிகாரிகள் தாம் குழப்பநிலையில் இருந்ததைத் கண்டனர். யார் போருக்குச் செல்கிறார்களோ, போரிடுவதில் மகிழ்ச்சியடைகிறார்களோ, அவர்கள் தீமை புரிகிறார்கள்-பிழை புரிகிறார்கள் என்று ததாகதர் போதித்திருப்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள், இதற்கு மாறாக, இங்கே குற்றமிழைப்போரைப் பிடித்து அவர்களைக் கொல்லுமாறு அரசரால் ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. ' இப்போது நாம் என்ன செய்வது' - அதிகாரிகள் தமக்குள் கேட்டுக் கொண்டனர்.

7. பிறகு அந்த அதிகாரிகள் எண்ணினர், "தாம் புத்தரின் சங்கத்திற்குள் நுழைய முடியுமாயின், நம்மால் இந்தக் குழப்பத்திலிருந்து விடுபட முடியும்."

8. இவ்வாறாக அந்த அதிகாரிகள் பிக்குகளிடம் சென்று, தம்மதச் சங்கத்தில் இணைத்துக் கொள்ள வேண்டினர். பிக்குகள் அவர்களுக்கு பப்பஜ்ஜம் மற்றும் உபசம்பதம் ஆகிய பொறுப்புக்களை வழங்கினர்-அவ்வதிகாரிகள் படையை விட்டு விலகினர்.

9. படைத் தளபதி அந்த அதிகாரிகளைக் காணாமையால் படை வீரர்களை வினவினார். "ஏன்? அதிகாரிகளை எங்கும் காண முடியவில்லையே? எப்படி?" ஐயா! அதிகாரிகள் பிக்குகளின் சமய வாழ்வைத் தழுவிக் கொண்டனர்." என்று பதிலிறுத்தார்கள் படைவீரர்கள்.

10. அதன்பின், வெறுப்புற்ற படைத்தளபதி மிகுந்த சினங்கொண்டார், 'அரச படையைச் சேர்ந்தவர்களை பிக்குகள் எப்படிச் சங்கத்தில் இணைக்க முடியும்?'

11. படைத்தளபதி நடந்தவற்றை பேரரசருக்கு அறிவித்தார். "அரச சேவையில் உள்ள ஒருவரைச் சமயத்திலிணைத்தவர் என்னவிதமான தண்டனைக்குரியவர் என்று எனக்குக் கூறுங்கள் ஐயனமீர்" என்று மாமன்னர் நீதித்துறை அதிகாரிகளை வினவினார்.

12. "மேன்மைத் தங்கிய மன்னரே! உபாக்காயரின் தலை துண்டிக்கப்பட வேண்டும், (கம்மாவாகத்ததை) ஒப்புவித்தவனின் நாக்கு அறுக்கப்பட வேண்டும், சங்கத்தின் சங்கமாய் ஆனவரின் விலா எலும்புகளில் பாதியேனும் நொறுக்கப்பட வேண்டும்."

13. பிறகு மாமன்னர் உயர்வெய்திய புத்தர் இருந்த இடத்திற்குச் சென்றார், வணங்கிய பின், அவரிடம் நடந்தவற்றை அறிவித்தார்.

14. தம்மத்திற்கு எதிரான மன்னர்கள் இருப்பதை ஐயன்மீர்! நனகறிவீர்கள், அந்தப் பகைமன்னர்கள் எப்போதும் அற்பமான காரணத்திற்கும் கூட பிக்குகளை வதைக்கத் தயாராயிருக்கிறார்கள். போர்வீரர்களை, படையை விட்ட விலகிச் சங்கத்தில் சேரும்படித் தூண்டும் பிக்குகளைக் கண்டால் அவர்கள் எந்த அளவுக்குக் கொடுமைப்படுத்துவார்கள் என்பதைக் கற்பனைச் செய்யவும் முடியாது. ஐயன்மீர்! இந்தப் பேரழிவைத் தவிர்க்க ஆவன செய்ய வேண்டுகிறேன்.

15. புத்தர் பதிலிறுத்தார், அஹிம்சையின் போர்வையிலோ, அஹிம்சையின் பேராலோ படைவீரர்கள் நாட்டக்கும், மன்னருக்குமான தமது கடமைகளை விட்டுவிடுவதை ஆனுமதிப்பது எப்போதுமே என் நோக்கமாக இருந்ததில்லை.

16. இதன்படி உயர்வெய்திய புத்தர், அரசசேவையில் உள்ளோரைச் சங்கத்தில் சேர்ப்பதற்கு எதிராய் ஒரு விதியினை வகுத்து, பிக்குகளிடம் இவ்வாறுரைத்துப் பிரகடனப்படுத்தினார், "ஓ! பிக்குகளே! அரசசேவையில் உள்ள யாரும் பப்பஜ்ஜ பொறுப்பேற்க விடாதீர்கள், அத்தகைய மனிதருக்கு பப்பஜ்ஜ பொறுப்பு வழங்குபவர் துக்கதக் குற்றத்திற்காட்பட்ட வராவார்."

17. இரண்டாம் முறை உயர்வெய்திய புத்தரிடம் 'அஹிம்சை' என்னும் விஷயம் பற்றி, மஹாவீரரைப் பின்பற்றுவராயிருந்த ஒரு படைத்தளபதி சின்ஹா என்பவர் விசாரித்தறிந்தார்.

18. சின்ஹா வினவினார். "உயர்வெய்திய புத்தரின் கோட்பாடுகளைப் பொறுத்து ஒரு ஐயம் இன்னமும் என் மனத்தில் தங்கியுள்ளது. உயர்வெய்திய புத்தரால் போதிக்கப்படும் தம்மத்தை நான் புரிந்து கொள்ளும் வகையில், உயர்வெய்திய புத்தர் என் சந்தேக மேகங்களை விலக்கித் தெளிவிக்க ஒப்புதல் அளிப்பீர்களா?"

19. ததாகதர் அவருடைய ஒப்புதலை அளித்ததும், சின்ஹா கூறினார்.."ஓ! உயர்வெய்திய புத்தரே! நான் ஒரு போர்வீரன், அரசருடைய சட்டங்களை நடைமுறைப்படுத்தவும், போர் தொடுக்கவும் அவரால் நான் நியமிக்கப்பட்டிருக்கிறேன். முடிவில்லாமல் அன்பையும், துன்புறுவோர் பால்லாம் கருணையையும் போதிக்கும் ததாகதர் குற்றவாளிகளைத் தண்டிப்பதை அனுமதிக்கிறாரா? மேலும், ததாகதர் நம்முடைய, வீட்டையும் மனைவிகளையும், குழந்தைகளையும், நம் உடைமைகளையும் பாதுகாக்கும் பொருட்டு, போருக்குச் செல்வதைத் தவறென்று அறிவிக்கிறாரா? ததாகதர் முழுமையான தன்னடக்கக் கோட்பாட்டைப் போதிக்கிறாரா?-அதாவது தீமை செய்பவன் தன் விருப்பப்படி ஏது செய்திடினும் நான் அவற்றைப் பொறுத்துக்கொண்டு, எனக்குச் சொந்தமானவற்றைத் தான் எடுத்துக் கொள்வதாய் மிரட்டுபவனுக்கு அடங்கியொடுங்கி ஆட்பட்டிருக்க வேண்டுமா? ததாகதர் நல்ல் காரணத்துக்காக நடைபெறும் போர் உட்பட பெரிய பூசல்கள் அனைத்தும் தடுக்கப்பட வேண்டுமெனக் கருதுகிறாரா?"

20. புத்தர் பதிலிறுத்தார். "ததாகதர் கூறுவது இதுவே. தண்டிக்கப்படத்தக்கவன் தண்டிக்கப்பட வேண்டும். உதவப்படத் தக்கவன் உதவப்பட வேண்டும். இருப்பினும் அதே நேரத்தில் உயிர்வாழும் எவ்வுயிருக்கும் எத்தன்பமும் இழைக்காமல் நிறைந்த அன்போடும் நேயத்தோடும் இருக்க வேண்டும் என்று அவர் போதிக்கிறார். இந்தக் கட்டளைகள் முரண்பாடானவையன்று. ஏனெனில், எவனொருவன் தான் புரிந்த குற்றங்களுக்காகத் தண்டனையனுபவிக்கிறானோ-அவன், துன்புறுவது நீதிபதியின் தீயவிருப்பத்தினாலன்று-அவனுடைய சொந்தத் தீய செயல்களாலேயே, சட்டத்தை நிறைவேற்றுபவரால் அவனுக்கு அளிக்கப்படும் தண்டனை அவனுடைய சொந்தச் செயல்கள் அவனுக்குக் கொணர்ந்த துன்பமேயாகும். ஒரு நீதிபதி தண்டிக்கும் போது, அவர் மனத்தில் வெறுப்பு இருக்கலாகாது-அதேபோல் ஒரு கொலையாளி மரணதண்டனை விதிக்கப்படுகையில் கூட அது

அவனுடைய சொந்தச் செயல்களின் விளைவே என்று கருத வேண்டும். அவன் தனக்குக்கிட்டிய தண்டனைத் தன்மனத்தைச் செம்மைப்படுத்துமெனப் புரிந்தவுடனே, அவன் அதற்காக மேலும் வருத்தமுற மாட்டான்-தன் மனத்தைச் செம்மையாக்கிக் கொள்வான்-தன் முடிவுக்காக வருந்தமாட்டான்-மாறாக மகிழ்ச்சியுறுவான்."

21. இந்த நிகழ்வுகளைச் சரியாகப் புரிந்து கொள்வது உயர்வெய்திய புத்தரால் போதிக்கப்பட்ட அஹிம்சை அடிப்படையானது என்பதைக் காட்டும். அது முற்றமுடிந்ததன்று.

22. இன்னா செய்தார்க்கும் இனியவை செய்வதால் அத்தீமை சரிசெய்யப்பட வேண்டும் எனப் போதித்தார். ஆனால் அவர் சரிசெய்யப்பட வேண்டும் எனப் போதித்தார். ஆனால் அவர் தீமை, நன்மையை விஞ்ச வேண்டும் எனப் போதிக்கவில்லை.

23. அவர் அஹிம்சைக்காக வாதாடினார். அவர் ஹிம்சையை நிராகரித்தார், ஆனால் நல்லுயிர் தீயவற்றால் அழிக்கப்படாமல் பாதுகாக்கக் கடைசி வழிமுறையாக ஹிம்சையிருக்குமாயின் அதை அவர் மறுதலிக்கவில்லை.

24. இவ்வாறாக, உயர்வெய்திய புத்தர் ஒரு ஆபத்தான கோட்பாட்டைப் போதித்தவராயில்லை. அதன் முக்கியத்துவத்தையும், இலட்சியப் பரப்பையும் புரிந்து கொள்ளத் தவறிவிட்டவர்கள் விமர்சகர்களே!

### 4. நன்னெறிகளைப் போதித்து மனவருத்தத்தை ஏற்படுத்துவதாய்க் குற்றச்சாட்டு

துக்கம் மனவருத்தத்தின் காரணமாகிறது.

1. கபிலரால் வழங்கப்பட்ட அதன் மூலப்பொருளில், துக்கமென்பதன் பொருள் அமைதியின்மை, கலக்கம் என்பதே,
2. தொடக்கத்தில் அதற்குத் தத்துவப் பொருளேயிருந்தது.
3. பின்னர் துன்புறுதல் மற்றம் துன்பம் ஆகிய பொருட்களை அது அடைந்தது.
4. இரண்டு பொருள்களும் மிக வேறுபட்டு விலகியவையன்று, இரண்டும் மிகவும் நெருக்கமானவையே.
5. அமைதியின்மை துன்பத்தையும் துயரத்தையும் கொணர்கிறது.
6. விரைவில், அது, சமூக மற்றும் பொருளாதாரக் காரணங்களால் துன்பம், துயரம் ஆகிய பொருள்களை அடைந்து விடுகிறது.
7. துன்பம், துயரம் ஆகிய சொற்களைப் புத்தர் எந்தப்பொருளில் பயன்படுத்தினார்?
8. பதிவாகியுள்ள பேருரை ஒன்றுள்ளது. அதிலிருந்து புத்தர் ஏழ்மை துன்பத்திற்க் காரணம் என்பதை உணர்ந்திருந்தார் என்பது தெளிவாகிறது.
9. அந்தப் பேருரையில் அவர் உரைக்கிறார்-"துறவோரே! உலகியலான மனிதனுக்கு ஏழ்மை துன்பமானதன்றோ?"

10. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
11. "ஒரு மனிதன் ஏழையாய், தேவைமிகுந்தவனாய், சிக்கலில் சிக்கியவனாய், கடனில் அகப்பட்டு இருப்பானாயின் அதுவும் கூட துன்பமயமானதன்றோ?"

12. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
13. "அவன் கடனில் அகப்படும்போது, அவன் மேலும் கடன் பெறுகிறான்-அதுவும் கூட துன்பமேயன்றோ?"
14. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
15. அவன் கடன்பட்டு, தரவியாமல், அவர்கள் அவனை நெக்க-அதுவும் கூட துன்பமேயன்றோ?
16. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
17. அவ்வாறு நெருக்கப்படுகையில், அவன் தராவிடில், அவர்கள் அவனைத் தாக்குவார்கள்-அதுவும் கூட துன்பமேயன்றோ?
18. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
19. தாக்கப்படுகையிலும், அவன் தருவதில்லையெனில் அவர்கள் அவனைச் சிறையிடுவர்-அதுவும் துன்பமேயன்றோ?
20. "நிச்சயமாய் அப்படியே ஐயன்மீர்!"
21. இவ்வாறாக, துறவோரே! ஏழ்மை, கடன், இரவல், நெருக்கப்படுதல், தாக்கப்படுதல், சிறைப்படுதல் யாவும் உலகியலான மனிதனுக்குத் துன்பங்களேயாகும்.
22. ஏழ்மையும், கடனும் உலகில் துன்பமயமானவையாகும்.
23. இவ்வாறாக துக்கம் பற்றிய புத்தரின் கருதுகோள் பொருளாதார அடிப்படை கொண்டுள்ளது.

## நிலையாமை மனவருத்தத்தின் காரணமாயுள்ளது

1. இந்தக் குற்றச்சாட்டிற்கான இன்னொரு அடித்தளம் கூட்டுப் பொருளாயுள்ள அனைத்தும் நிலையற்றதாய் உள்ளது என்னும் கோட்பாட்டிலிருந்து எழுகிறது.

2. இந்தக் கோட்பாட்டின் உண்மையை யாரும் மறுப்பதில்லை.

3. அனைத்துப் பொருள்களும் நிலையற்றவை என்பதை அனைவரும் ஒப்புக் கொள்கின்றனர்.

4. இக்கோட்பாடு உண்மையாயின், எந்த ஓர் உண்மையையும் போல அப்படியே கூறப்படத்தான் வேண்டும்-அது எவ்வளவு கசப்பாயிருப்பினும்.

5. ஆனால் ஏன் விரக்தியான ஒரு முடிவைப் பெறவேண்டும்.

6. உயிர் வாழ்க்கை சிலகாலமேயெனில், அது அப்படித்தான்-அதைப்பற்றி ஒருவன் வருந்த வேண்டியதில்லை.

7. அது ஓர் செய்தியின் பொருள் மட்டுமே.

8. இதற்கான பர்மீயர்களின் பொருள் விளக்கம் மிகவும் வித்தியாசமாயுள்ளது.

9. பர்மியர்கள் ஒரு குடும்பத்தில் நிகழும் மரண நிகழ்ச்சியை, ஒரு மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சியைப் போலக் கொண்டாடுகிறார்கள்.

10. மரண நாளன்று வீட்டுக்காரர் பொது விருந்து அளிக்கிறார்-மக்கள் இறந்த உடலை மயனத்திற்கு ஆடிப்பாடி எடுத்துச் செல்கிறார்கள். யாரும் மரணத்தைப் பெரிதாய்ப் பொருட்படுத்துவதுதில்லை-ஏனெனில் அது வரத்தானே போகிறது.

11. நிலையாமை விரக்தியானதெனில், அதன் காரணம், நிலைப்பு உண்மையெனக் கருதப்படுவது மட்டுமே, அது ஒரு தவறான கருத்தேயெனினும்.

12. எனவே புத்தரின் போதனை மனவருத்தத்தைப் பரப்புவதாய்க் குறைகூற முடியாது.

பவுத்தம் விரக்தி தத்துவமா?

1. புத்தரின் தம்மம் விரக்தியை உண்டாக்குவதாய்க் குறை கூறப்படுகிறது.

2. இந்தக் குற்றச்சாட்டு உலகில் துக்கம் (துன்ப, துயரம்) உள்ளது எனக் கூறும் முதல் ஆரிய உண்மையினின்றும் எழுகிறது.

3. துக்கம் பற்றிய குறிப்பு இத்தகைய ஒரு குற்றச்சாட்டிற்குக் காரணமாகிறதென்பது மகவும் ஆச்சரியமாயுள்ளது.

4. உலகில் சுரண்டல் உள்ளதென்றும், பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகவும், ஏழைகள் மிகவும் ஏழைகளாகவும் ஆக்கப்படுகின்றார்கள் என்று கார்ல்மார்க்ஸ் கூடக் கூறியுள்ளார்.

5 இருந்தும் யாரும் கார்ல் மார்க்ஸின் கொள்கை விரக்தித் தத்துவம் என்று கூறுவதில்லை.

6. பிறகு ஏன் புத்தரின் தத்துவத்திற்கு மட்டும் வேறொரு அணுகுமுறை கைக்கொள்ளப்படுறது?

7. இது ஏனெனில், புத்தர் தமது முதற்பேருரையில், பிறப்பு துன்பமானது-முதுமைத் துன்பமானது-இறப்புத் துன்பமானது-என்று உரைத்ததாக கூறப்படுவதால், அவருடைய தம்மத்திற்கு ஓர் ஆழமான விரக்தித்தத்துவச்சாயம் பூசப்படுகிறது.

8. ஆயினும் இந்த உயர்வு நவிற்சிப் பற்றியறிந்தவர்கள், இது மிகைப்படுத்தப்படும் கலையெனவும் மேலும் இது திறன்மிக்க இலக்கிய விற்பன்னர்களால் பயன் கருதி விளைவிக்கப்படுவதெனவும் அறிவார்கள்.

9. பிறப்புத் துன்பமயமானது என்பது ஒரு மிகைப்படுத்தல் என்பதை புத்தருடைய ஒரு பேருரையால் நிரூபிக்க இயலும்-மானுட உயிராய்ப் பிறப்பதென்பது மகத்துவம் மிக்க தெனப் போதித்தார் புத்தர்.

10. மேலும், புத்தர் துக்கத்தைப் பற்றி உரைத்தார் என்றால் அத்தகைய குற்றச்சாட்டு தாங்கக் கூடியதே.

11. ஆனால் புத்தரின் இரண்டாவது ஆரிய உண்மை துக்கம் நீக்கப்படவேண்டும் என வலியுறுத்துகிறது. துக்கத்தை நீக்கும் கடமையை வலியுறுத்தவதற்காகவே அவர் துக்கத்தின் இருப்பைப் பற்றியுரைத்தார்.

12. துக்கத்தை நீக்குவதற்கு புத்தர் மிகப் பெரும் முக்கியத்துவமளித்தார். அது ஏனெனில் கபிலர் துக்கம் இருக்கிறது என்று மட்டும் உரைத்தாரேயன்றி அதற்கு மேல் அதைப் பற்றி வேறொன்றும் கூறாமையால், புத்தர் அதிருப்தியுற்று ஆலாரகாலாம் முனிவரின் ஆசிரமத்தை விட்டு வெளியேறினார்.

13. இந்தத் தம்மம் எப்படி விரக்தித்தத்துவம் என் அழைக்கப்பட முடியும்?

14. நிச்சயமாக துக்கத்தை நீக்க ஆர்வம் மிக்க ஒரு போதகரை விரக்தித்தத்துவக்காரர் எனக் குற்றஞ்சாட்ட இயலாது.

## 5. ஆன்மா மற்றும் மறுபிறப்பு பற்றிய புத்தரின் கோட்பாடுகளின் விமர்சகர்கள்

உயர்வெய்திய புத்தர் ஆன்மா என்ற ஒன்று இல்லையெனப் போதித்தார். மேலும் உயர்வெய்திய புத்தர் மறுபிறப்பு உண்டெனவும் உறுதிப்படுத்தியுள்ளார்.

இத்தகைய இரு முரண்பாடான கொள்கைகளைப் போதித்தாரெனப் புத்தரை விமர்சித்த மக்களுக்குக் குறைவில்லை.

ஆன்மாவே இல்லையெனும் போது, ஆங்கே மறுபிறப்பு எப்படி இருக்க முடியும் என அவர்கள் கேட்டனர்.

ஈண்டு மாங்கனியின் மறுபிறப்பு நிகழ்கிறது.

ஆனால் இங்கு எந்த ஆன்மாவும் இல்லை.

எனவே ஈண்டு ஆன்மா இல்லாமலேயே மறுபிறப்பு இருக்கக் கூடும்

## 6. அழிவுத் தத்துவவாதியாய் இருப்பதாய்க் குற்றச்சாட்டு.

1. ஒரு முறை புத்தர் ஷ்ராவஸ்தியில் ஜேதவன சோலையில் தங்கியிருக்கையில் அரிட்டர் என்னும் பெயரிய ஒரு குறிப்பிட்ட பிக்கு, புத்தரால் போதிக்கப்பட்ட கொள்கைகள் பற்றிச் சில சொந்த முடிவுகளுக்கு-அவை புத்தரின் கருத்துக்களாய் இல்லையெனினும்-வந்தள்ளதாகப் புத்தரிடம் கூறப்பட்டது.

2. புத்தரின் கருத்துக்கு மாறாக அரிட்டரால் விளக்கப்பட்ட கோட்பாடுகளில் ஒன்று புத்தர் அழிவுத்தத்துவவாதியா என்பது பற்றியதாகும்.

3. உயர்வெய்திய புத்தர் அரிட்டருக்கு அழைப்பு விடுத்தார். அரிட்டர் வந்தார். கேள்விகேட்கப்பட்ட போது அவர் மவுனமாகவும், மனவாட்டத்தோடும் அமர்ந்திருந்தார்.

4. அதன்பின் புத்தர் அவரிடம் உரைத்தார். சில முனிவர்களும் பிராமணர்களும், தவறாகவும், பிசகாகவும், பொய்யாகவும், உண்மைக்கு மாறாக என்னை அழிவுதத்துவவாதியாகவும், ஒருமைப்பாட்டுக் குலைவையும் உயிரின அழிப்பையும் போதிப்பவனாகவும் குற்றஞ்சாட்டுகிறார்கள்.

5. நான் எதைச் செய்வதில்லையோ, எதை உறுதிப்படுத்துவதில்லையோ அதைக் கூறுவதாகும் இது.

6. நான் தொடர்ச்சியாய், கடந்தகாலத்திலும் இன்றும் போதித்து வருவதெல்லாம் துன்பம் இருக்கிறதென்பதும் அதை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். என்பதுமே.

## நண்பர்களும் போற்றபவர்களும்

### 1.தனஞ்ஜனனி என்னும் பிராமணியின் பற்று.

1. உயர்வெய்திய புத்தர் பற்பல நண்பர்களையும் போற்றுபவர்களையும் உடையவராய் இருந்தார். அவர்களில் தனஞ்ஜனனி என்பவரும் ஒருவர்.

2. அவர் ஒரு பரத்வாஜ பிராமணரின் மனைவியாவார். அவருடைய கணவர் புத்தரை வெறுத்தார். ஆனால் தனஞ்ஜனனி புத்தரிடம் பற்றுமிகக் கொண்டிருந்தார். அவருடைய பற்று குறிப்பிடத்தக்கதாகும்.

3. மேன்மைத்தங்கிய புத்தர் ஒருமுறை இராஜகிரஹத்திற்கு அருகேயிருந்து மூங்கில் தோப்பில் அணிலூட்டும் திடலென அழைக்கப்பட்ட விஹாரில் தங்கியிருந்தார்.

4. அச்சமயத்தில் பரத்வாஜ வம்சத்தைச் சேர்ந்த ஒரு குறிப்பிட்ட பிராமணரின் மனைவியான பிராமணி தனஞ்ஜனனி தன் கணவருடன் இராஜகிரஹத்தில் வசித்து வந்தார்.

5. அவருடைய கணவர் புத்தரின் பெரும் எதிர்ப்பாளராய் இருந்த போதும், தன்ஞ்ஜனனி புத்தரிடமும், தம்மத்திடமும், சங்கத்திடமும் ஆர்வம் மிக்க நம்பிக்கையுடையவராயிருந்தார்.

அவர் மூன்று இரத்தினங்களைப் போற்றும் வழக்கமுடையவராயிருந்தார். எப்போதெல்லாம் அவர் இவ்வகையில் போற்ற தொடங்கினாலும் அவருடைய கணவர் காதுகைள மூடிக்கொள்ளம் வழக்கமுடையவராயிருந்தார்.

6. தன் உடனுள்ள பிராமணர்களுக்கு ஒரு பெரும் விருந்தளிக்க அவர் முற்பட்டபோது, அவர் தன்மனைவியை, அவள் விரும்பிய எதையும் செய்யலாமென்றும்-ஆனால் புத்தரைப் போற்றியுரைத்து அவருடைய விருந்தினரைப் புண்படுத்த வேண்டாமெனவும் வேண்டிக் கொண்டார்.

7. அத்தகைய ஒப்பந்தம் எதற்கும் பிராமணி உட்படாததால், அப்பிராமணர் அவரை வாழையை வெட்டவதுபோல் கத்தியால் துண்டுதுண்டாய் வெட்டி விடுவேனென மிரட்டினார். தான் துன்புறத் தயாராயிருப்பதாய் அறிவித்தத பிராமணி அதன்படி தன் பேச்சுரிமையைத் தக்க வைத்துக் கொண்டு, அவருடைய கருத்துக்கேற்ற ஐந்நூறு தம்மச் செய்யுள்களைப் பொழிந்தார்-பிராமணர் நிபந்தனையின்றிச் சரணடைந்தார்.

8. உணவுக் கலயங்களும், தங்கக் கரண்டிகளும் எடுத்து வைக்கப்பட்டன, விருந்தினர் உணவருந்த அமர்ந்தனர். விருந்தினருக்கு உணவளிக்கும் போது நிறையுணர்வு எழுந்தது. இடையில் பிராமணி மூங்கில் தோப்புப் பக்கம் திரும்பி திரிசரணங்களைப் போற்றியுரைக்கலானார்.

9. தாக்கமுற்ற விருந்தினர் விரைந்தெழுந்து, மாறுபட்ட கருத்தின் வெளிப்பாட்டால் தீட்டற்றதாய்க்கருதி உணவைத் துப்பிவிட்டுச் சென்றனர். பிராமணியின் கணவர், தடைப்பட்ட விருந்திற்கிடையே அவரை ஏசினார்.

10. மேலும் அவர் அந்த பரத்வாஜப் பிராமணருக்கு உணவு பரிமாறுகையில், அவர் முன்வநது மீண்டும் திரிசரணங்களைப் போற்றினார்-உயர்வெய்திய புத்தர்-அறவோர்-நனி உயர் நல் புத்தர் வாழ்க! நன்னெறியிலக்காம் தம்மம் வாழ்க! சங்கம் வாழ்க! என.

11.இவ்வாறு அவர் உரைத்ததும், பரத்வாஜ பிராமணர் சினமற்றுக் கூறினார்: "நிறுத்து! தீயவளே! அந்த மொட்டைத் துறவியின் புகழை ஒல்லும் வகையெல்லாம் ஓயாது பாடுகிறாய்! தீயவளே! நான் உன் போதகருக்கு என் புத்தியில் கொஞ்சம் பகிர்ந்தளிக்கட்டுமா?"

12. "ஓ! பிராமணரே! பதிலிறுத்தார் தனஞ்ஜனனி, உலகம் யாவிலும், கடவுளெனப்படுவோரிலோ, மாறனெனப்படுவோரிலோ, அல்லது பிரம்மரெனப்படுவோரிலோ துறவியரிலோ, அல்லது பிராமணரிலோ, மனிதரிலோ, தெய்வனெப்படுவோரிலோ யாரொருவரையும் மேன்மைத் தங்கயி புத்தராம், அறவாழியாம், நனியுயர் நல்புத்தராம் உயர்வுடையார் போல் அறிவுரை புகன்றவர் ஒருவரையும் நான் கண்டதில்லை. இருப்பினும், பிராமணரே! நீங்ளே நேரில் செல்லுங்கள்! அப்போதுதான் நீங்கள் அறிவீர்கள்."

13. அதன்பின் வெறுப்பும், துன்பமும் உற்ற பரத்வாஜர், மேன்மைத்தங்கிய புத்தரைக் காணச்சென்றார். அவர் முன்னிலையில் வந்துற்று, அவருடன் நட்பும் கனிவுமுள்ள வந்தனங்களையும் வாழ்த்துக்களையும் பரிமாறிக் கொண்டபின் ஓர்புறம் அமர்ந்தார்.

14. அவ்வாறு அமர்ந்தபின் அவர் மேன்மைத்தங்கிய புத்தரிடம் கீழ்வரும் வினாக்களை வினவினார். "நாம் இன்புற்று வாழ எவற்றை யாகம் செய்ய வேண்டும்? நாம் இனியும் துன்புற்றழா திருக்க எவற்றை யாகம் செய்ய வேண்டும்? கவுதமரே! எவற்றை யாகம் (கொல்ல) செய்வதைத் தாங்கள் ஒப்புகிறீர்கள்?"

15. மேன்மைத் தங்கிய புத்தர் பின்வருமாறு பதிலிறுத்தார். "நீங்கள் இன்புற்று வாழ, நீங்கள் சினத்தைக் கொல்ல வேண்டும். இனி நீங்கள் துன்புற்றழாதிருக்க நீங்கள் சினத்தைக் கொல்ல வேண்டும். சினமென்பது, பிராமணரே அதன் விஷமூலத்துடன், உச்ச வெறியில், கொலைத்தனமான இனிமையுடையது. இதுவே அறிவார்ந்தவர்களால் புகழப்பட்ட யாகமாகும். இனி நீங்கள் துன்புற்றழாதிருக்க உண்மையில் சினத்தையே யாகம் (கொல்லுதல்) செய்ய வேண்டும்."

16. மேன்மைத்தங்கிய புத்தர் அளித்த விடையின் பெருஞ்சிறப்பை உணர்ந்த பரத்வாஜபிராமணர் அவரிடம் கூறினார். "மிகவும் அற்புதம் ஐயன்மீர்! மிகவும் அற்புதம்! வீசியெறியப் பட்டதை நின்று நிமிர்த்துகிற ஒரு மனிதன் போலவும் மறைக்கப்பட்டதை வெளிப்படுத்துவது போலவும், வழிதவறிய ஒருவனுக்குச் சரியான வழியைக் காட்டுவதைப் போலவும், இருளுக்குள் தீபம் ஏந்திச் செலவது போலவும்-கண்ணிருப்போர் யாரும் புறப்பொருளை காணும் வண்ணமும்-ஐயன்மீழ் மேன்மைத் தங்கிய புத்தரை, தம்மத்தை, சங்கத்தைச் சரடைகிறேன். நான் கவுதமரின் வழிப்படியே இவ்வுலகை நீப்பேன். நான் தங்கள் ஆணைகளை ஏற்பேன்."

17. எனவே புத்தரின் பற்றாளராய் தனஞ்ஜனனி இருந்தது மட்டுமின்று, தன் கணவரைபும் புத்தரின் பற்றாளராய் ஆக்கினார்.

## 2. விஷாகாவின் எல்லையற்ற பற்று.

1. அங்கே தேசத்தில் பதியா என்னும் நகரில் விஷாகா பிறந்தார்.

2. அவருடைய தந்தை தனஞ்ஜயர், அவருடைய தாயின் பெயர் சுமனா.

3. ஒருமுறை புத்தர், பிராமணர் சேலா அழைப்பின்படி தம் துறவோரின் பெரும் பரிவாரத்துடன் பதியாவிற்குச் சென்றார். பிராமணர் சேலாவின் பேத்தி விஷாகாவுக்கு அப்பாது ஏழுவயதாகியிருந்தது.

4. விஷாகாக்கு ஏழுவயதே ஆகியிருப்பினும் அவள் தன் பாட்டனார் மெந்தகரிடம், புத்தரைக் காண வேண்டும் என்ற தன் விருப்பத்தைக் கூறினாள், மெந்தகர் அவளை அவ்வாறே செய்ய

அனுமதித்துடன், அவள் புத்தரைக் காணத் துணையாக ஐந்நூறு பேரையும், ஐந்நூறு அடிமைகளையும், ஐந்நூறு தேர்களையும் அவளுக்கு அளித்தார்.

5. அவள் தேரைச் சற்றுத் தொலைவிலேயே நிறுத்திவிட்டு, நடந்து சென்று புத்தரை அடைந்தாள்.

6. அவர் அவளுக்குத் தம்மத்தைப் போதித்தார். அவள் அவருடைய இல்லறச் சீடர்-உபாசிகா ஆனாள்.

7. அடுத்த இருவாரங்களுக்கு மெந்தகர் புத்தரையும், அவர்தம் சீடர்களையும் நாள்தோறும் தம் இல்லத்திற்கழைத்து, ஆங்கு அவர்களுக்கு உணவளித்தார்.

8. பிறகு, பசேநதியின் வேண்டுகோளின்படி, பிம்பிசாரர் தனஞ்ஜயரை கோசலத்தில் வசிக்க அனுப்பவும், விஷாகா தம் பெற்றோருடன் சென்று சகேதாவில் வசிக்கலானாள்.

9. ஷ்ராவஸ்தியில் இருந்த மிகாரா என்னும் செல்வந்தர் தன் மகன் புன்னவதனனுக்கு மணம் செய்விக்க விரும்பினார். ஒரு பொருத்தமான மணமகளைத் தெரிவுசெய்ய அவர் சிலரை அனுப்பினார்.

10. மணமகளைத் தேடும் அக்குழு ஷ்ராவஸ்திக்கு வர நேர்ந்தது, அவர்கள், ஒரு விழா நாளில் குளிக்க ஏரிக்குச் சென்று கொண்டிருந்த விஷாகாவைக் கண்டனர்.

11. அச்சமயத்தில் ஆங்கு பெருமழை பொழிந்தது. விஷாகாவின் தோழிகள் ஒதுங்க இடம்தேடி ஓடினர். ஆனால் விஷாகா அவ்வாறு செய்யவில்லை. அவள் இயல்பான நடை நடந்து அக்குழுவினர் இருந்த இடத்தை அடைந்தாள்.

12. அவள் ஏன் ஒதுங்க இடம்தேடி ஓடித் தன் உடைகள் நனையாமல் காத்துக் கொள்ளவில்லை என்று அவர்கள் அவளை வினவினர். அவளிடம் நிறைய உடைகள் இருப்பதாகவும்- ஆனால் ஓடுவதன் மூலம் தன் உடலில் எதையும், அவள் தவறிவிழந்து உடைத்துக் கொண்டால் அதை மாற்றிக் கொள்ள முடியாதே என்றம் அவள் பதிலிறுத்தாள். அவள் கூறினாளு. "மணமாகத பெண்கள் விற்பமைக்குரிய பொருள்கள் போல-அவர்கள் அங்கநலனிழந்து-விடக்கூடாதே."

13. அவளுடைய அழகால் ஏற்கனவே அசந்துபோயிருந்த அந்தக் குழுவினர் அவளுடைய அறிவுத் திறனால் பெரிதும் ஈர்க்கப்பட்டார்கள். அக்குழுவினர் அவளக்கு ஒரு மலர்ச்செண்டைப் பரிசளித்தனர். திருமண முன்மொழிதலின் அடையாளமாக அவள் அதை ஏற்றுக் கொண்டாள்.

14. விஷாகா வீடு திரும்பிய பின், அத்திருமணக் குழுவினர் அவளைப் பின்தொடர்நது சென்று தனஞ்ஜயரிடம் புன்னவதனனின் வேண்டுதலை முன்வைத்தனர். முன்மொழிவு ஏற்றுக்கொள்ளப்பட்டு ஓலைப் பரிமாற்றத்தின் மூலம் உறுதி செய்யப்பட்டது.

15. இதைக் கேள்வியுற்ற பசேந்தி புன்னவதனனுடன் ஒரு மரியாதையின் அடையாளமாக சகேதாவிற்குச் செல்ல முன்வந்தார். தனஞ்ஜயர் அரசரையும், அவர் தம் பரிவாரத்தையும் மிகாரா, புன்னவதனன் அவர்களுடன் வந்தோர் அனைவரையும் பேரன்புடன் வரவேற்று, ஒவ்வொருவரையும் தாமே முன்னின்று மிக நன்கு உபசரித்தார்.

16. மணமகளுக்கு ஆபரணங்கள் செய்ய ஐந்நூறு பொற் கொல்லர்கள் அமர்த்தப்படட்டனர். தனஞ்ஜயர் தம் மகளுக்குச் சீதனமாக ஐந்நூறு வண்டிகள் நிறைய பணமும், ஐந்நூறு குடங்களில் பொன்னையும், கால்நடைகளையும், பிறவற்றையும் அளித்தார்.

17. விஷாகா செல்வதற்கான நேரம் வந்ததும், தனஞ்ஜயர் அவருக்குப் பத்து அறிவுரைகளை அளித்தார். அடுத்த அறையிலிருந்த மிகாரா இதைக்கேட்டார். இந்த அறிவுரைகளாவன, வீட்டிலிருந்து வெளியாருக்கு நெருப்பளிக்கலாகாது. வெளியிலிருந்து நெருப்பை வீட்டுக்குள் கொண்டுவரலாகாது. திருப்பித் தருபவர்க்கு மட்டுமே ஏதேனும் தரப்பட வேண்டும். திருப்பித் தராதவர்க்கு ஏதும் தரப்படலாகாது, தருபவர்க்கும் தராதவர்க்கும் இருக்கையும், உணவும் தரவேண்டும்-மகிழ்ச்சியாய் உண்ண வேண்டும் தீபமேற்றி இல்லத் தெய்வங்களை வழிபட வேண்டும்.

18. அடுத்தநாள் தனஞ்ஜயர் எட்டுப்பேரை அவருடைய மகளுக்கு ஆதரவாய் இருக்கவும், அவருக்கெதிராக ஏதேனும் குறை கூறப்படுமாயின் அதை விசாரித்தறியவும் நியமித்து அனுப்பினார்.

19. மிகாரா, ஷ்ராவஸ்தியில் உள்ள பொதுமக்கள் அவருடைய மருமகளைக் காண வேண்டுமென்று விரும்பினார். சாலையின் இருமருங்களிலும் மக்கள் திரண்டு காண, விஷாகா தன் தேரில் நின்றவாறு சென்றார். பொதுமக்கள் அவருக்குப் பரிசுப் பொருள்களைப் பொழிந்தனர். ஆயினும். அவர் அவற்றை மக்களிம் பகிர்ந்தளித்து விட்டார்.

20. மிகாரா நிகந்தர்களைப் (நிர்வாணத் துறவிகளை) பின் பற்றுபவராய் இருந்தார். விஷாகா அவர்தம் வீட்டிற்கு வந்ததும், அவர்களுக்கு அழைப்பு விடுத்து, அவர்களை உபசரிக்கும் படி விஷாகாவிடம் கூறினார். ஆனால் விஷாகாவோ, அவர்களின் நிர்வாணத்தைச் காணச் சியாமல், அவர்களுக்கு மரியாதை செலுத்த மறுத்துவிட்டார்.

21. நிகந்தர்கள் விஷாகாவை திருப்பி அனுப்பிவிடும்படி மிகாராவிடம் கட்டாயப்படுத்தினர். ஆனால் அவர் உரிய நேரத்திற்காகக் காத்திருந்தார்.

22. ஒரு நாள் மிகாரா உணவருந்திக் கொண்டிருந்தார். விஷாகா அருகில் நின்று அவருக்கு விசிறிக் கொண்டிருந்த போது, வீட்டுக்கு வெளியே ஒர பிக்கு நிற்பது தெரிந்தது. மிகாரா அவரைக் காணுமாறு விஷாகா விலகி நின்றார். ஆயினும் மிகாரா பிக்குவைக் கவனியாமல் உணவருந்திக் கொண்டிருந்தார்.

23. இதைக் கண்ட விஷாகா பிக்குவிடம் உரைத்தார். ஐயா! செல்லங்கள்! என் மாமனார் சுவையற்ற உணவை உண்கிறார். "சினமுற்ற மிகாரா அவரைத் திருப்பி அனுப்பி விடுவதாய் மிரட்டினார். ஆனால் விஷாகாவின் வேண்டுகோளின் படி விஷயம் அவருடன் வந்த ஆதரவாளர்களிடம் தெரிவிக்கப்பட்டது."

24. அவர் மீது கூறப்பட்ட பல குறைகளையும் விசாரித்தறிந்த அவர்கள் அவர் குற்றமற்றவர் எனத்தீர்ப்பளித்தனர்.

25. விஷாகா, அதன்பின் தன் பெற்றோரிடம் தான் திரும்புவதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி கட்டளையிட்டார். மிகாராவும், அவர்தம் மனைவியும் மன்னிக்க வேண்டினர், அவர்கள், புத்தரையும் அவர்தம் பிக்குகளையும் அவர்களின் இல்லத்திறகாக்க வேண்டுமென்ற நிபந்தனையுடன் அவாகளை மன்னித்தார் விஷாகா.

26. மிகாரா அப்படியே செய்தார், ஆனால் நிகந்தர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்ததன் காரணமாக, புத்தரையும், பிக்குகளையும் உபசரிக்க விஷாகாவை விட்டுவிட்டு, உணவு முடிந்தபின் புத்தரின் பேருரையை ஒரு திரைக்குப் பின்னிரந்து மட்டுமே கேட்க ஒப்புக் கொளடார்.

27. எப்படியோ புத்தரின் பேருரையைக் கேட்டமாத்திரத்தில, நம்பிக்கைக் கொண்டு, அவர் சமயமாற்றமேற்றார்.

28. விஷாகாவின் பால் அவர்காட்டிய நன்றிக்கு அளவேயில்லை. அப்போதிருந்து விஷாகாவை அவர் தன் தாயாகவே கருதலானார். தாய்க்குரிய மதிப்புகள் அனைத்தும் அவருக்குரியவை எனக் கருதினார். அப்போதிலிருந்து விஷாகா மிகாராமாதா என்றே அழைக்கப்படலானார்.

29. விஷாகாவின் எல்லையற்ற பற்று அத்தகையதாயிருந்தது.

### 3. மல்லிகாவின் பற்று.

1. ஒருமுறை புத்தர் ஷ்ராவஸ்தியில் உள்ள ஜேதவனத்தில் தங்கியிருக்கையில், ஒரு குறிப்பிட்ட இல்லறத்தாரின் அன்புக்குரிய மகன் இறந்து விட்டான். இந்த இழப்பு அந்தத் தந்தை தன் வணிகத்தையும் உணவையும் கைவிடச் செய்துவிட்டது.

2. அவர் எப்போதும் மயானத்திற்குச் சென்று உரத்துக் கூவிக் கதறுவார். "நீ எங்கேயிருக்கிறாய், என் மகனே, நீ எங்கேயிருக்கிறாய்?"

3. இழப்புக்காளான அத்தந்தை உயர்வெய்திய புத்தரிடம் வந்துற்று, வணங்கிய பின் ஓர்புறம் அமாந்தார்.

4. அவருடைய மனம் முழுமையாய் வெறுமையுற்றும், எதிலும் ஈடுபாடில்லாமலும், தாம் வந்த நோக்கத்தைக் கூறாமலும் அவர் இருந்த அவருடைய நிலையைக் கண்ணுற்ற உயர்வெய்திய புத்தர் உரைத்தார். "நீங்கள் நீங்களாக இல்லையே, உங்கள் மனம் முழுவதும் திரிந்துள்ளதே."

5. "ஐயன்மீர்! என் அன்புக்குரிய ஒரே மகனை நான் இழந்திருக்கும் போது எப்படி என்மனம் திரியாமல் இருக்கும்?"

6. "ஆம் இல்லறத்தாரே! நம் அன்புக்குரியோர் நமக்குத் துன்பத்தையும், வருத்தத்தையும், இடரையும், துயரத்தையும், இடுக்கணையும் நமக்குக் கொணர்கிறார்கள் அல்லவா?"

7. "ஐயன்மீர்! இதுபோன்ற கருத்தை எவரால் ஏற்க முடியும்?" சினமுற்ற அந்த இல்லறத்தார் கூறினார். "இல்லை! நம் அன்புக்குரியவர்கள் நம் மகிழ்ச்சியின் இன்பத்தின் காரணமாயிருக்கிறார்கள்."

8. இச்சொற்களோடு, புத்தரின் கூற்றை நிராகரித்த அந்த மனிதர், மனநிறைவற்று எழுந்து சென்றுவிட்டார்.

9. சற்றுத் தொலைவில் பல சூதாடிகள் ஆடுபுலியாட்டம் ஆடிக் கொண்டிருந்தனர். ஆங்கு அந்த மனிதர் தன் கதையோடு வந்தார். அவர்களிடம், அவர் தாம் தம் துயரத்தைத் துறவி கவுதமரிடம் விவிரித்தது எப்படியென்றும், அதற்கு அவருடைய வரவேற்பு எப்படியிருந்ததென்றும், தான் மனநிறைவற்று விலகி வநதுவிட்டதையும் கூறினார்.

10. நீங்கள் சொல்வது தான் சரி என்றார்கள் அந்தச சுதாடிகள்-ஏனெனில் நம் பாசத்திற்குரியவர்களே நம் மகிழ்ச்சிக்கும், இன்பத்திற்கும் காரணமாக இருக்கிறார்கள் என்றார்கள் அவர்கள் எனவே அச்சூதாடிகள் தம் பக்கமிருப்பதாய் உணர்ந்தார் அந்த மனிதர்.

11. காலப்போக்கில் இச்செய்தியனைத்தும் அரண்மனையின் அந்தப்புரம் வரை ஊடுருவிவிட்டது. அரசர் அரசி மல்லிகாவிடம், அவருடைய துறவி கவுதமர் பாசத்திற்குரியோர் துன்பத்தையும், துயரத்தையும், இடர்ப்பாட்டையும், கொணர்வதாகக் கூறியுள்ளாராமே என உரைத்தார்.

12. "ஆம் அரசே! புத்தர் அவ்வாறு உரைத்திருந்தால் அது அப்படித்தான் இருக்கும்."

13. "ஒரு மாணவன் தன் குரு அவனுக்குக் கூறும் அனைத்தையும் 'ஆம்' ஐயா! அது அப்படியே ஆகிறது! என்று ஒப்புவான்-அதே முறையில் மல்லிகாவே! நீயும் உன் துறவி கவுதமர் கூறும் யாவற்றையும் புத்தர் அவ்வாறு கூறியிருப்பின் அது அவ்வாறே ஆகும்' என்கிறாய். எபபடியாவது போ!

14. அதன்பின் அரசி, நளித்யான் என்னும் பிராமணரிடம் அவரைத்தன் சார்பில் புத்தரிடம் சென்று, அவர் பாதத்தில் தலைவணங்கி, அவர் நலத்தை விசாரித்தபின், உண்மையில்

அவரோடு தொடர்புபடுத்தி உரைக்கப்படுவதை அவர் உரைத்தாரா எனக் கேட்டு வரும்படி கூறினார்.

15. "புத்தர் கூறும் பதிலை அவர் கூறியபடியே என்னிடம் கூற வேண்டும் என்பதில கவனமாயிருங்கள்." என்று அவர் உரைத்தார்.

16. அரசியின் கட்டளைக்குக் கீழ்பபடிந்து அந்தப் பிராமணர் சென்று, முறைப்படி புத்தரிடம் அவர் அவ்வாறு உண்மையிலேயேய உரைத்தாரா என வினவினார்.

17. "ஆம், பிராமணரே! நம் பாசத்துக்குரியவர்கள் துன்பத்தையும், வருத்தத்தையும், தொல்லையையும், துயரத்தையும், இடுக்கணையும் கொணர்கிறார்கள். இதோ அதற்கான சான்று."

18. "ஒருமுறை, இங்கே ஷ்ராவஸ்தியில் ஒரு பெண்ணின் தாய் இறந்துவிட்டார். மகள் பைத்தயம் பிடித்து, தன்னிலையிழந்து தெருத்தெருவாய்ச் சென்று, குறுக்கும் நெடுக்குமாய் அலுந்து கூறினாள், "நீங்கள் என் தாயைக் கண்டீர்களா? நீங்கள் என் தாயைக் கண்டீர்களா?"

19. "ஷ்ராவஸ்தியின் இன்னொரு பெண் மற்றொரு சான்றாவாள்-அவள் தன் தந்தையை-ஒரு சோதரனை-ஒரு சோதரியை-ஒரு மகனை-ஒருமகளை-கணவனையெல்லாம் இழந்துவிட்டாள். பைத்தியமம் பிடிதது்த் தன்நிலையிழந்த அந்தப் பெண் தெருவுக்குத் தெரு-குறுக்கும் நெடுக்குமாய் அலைந்து யாரேனும் அவள் இழந்துவிட்ட அவளுடைய அன்பிற்குரியோரைக் கண்டார்களா?" என்று கூறினாள்.

20. "ஷ்ராவஸ்தியில் தன் தாயை-தந்தையை-சோதரனை-சோதரியை-மகளை-மனைவியை இழந்த ஒரு மனிதன் மற்றொரு சான்றாவான்-அவன் பைத்தியம் பிடித்துத் தன்னிலையிழந்து தெருவுக்குத் தெரு குறுக்கும் நெடுக்குமாய் அலைந்து யாரேனம் அவன் இழந்துவிட்ட அவனுடைய அன்பிற்குரியோரைக் கண்டார்களா என்று கூறினான்."

21. "ஷ்ராவஸ்தியில் இன்னொரு பெண்ணும் ஒரு சான்றாவாள், அவள் தன் தாய் வீடு சென்றாள். அவர்கள் அவளை அவருடைய கணவனிடமிருநது பிரிந்துவிடவும், அவள் விரும்பாத வேறொருவனுக்கு அவளை மணமுடிக்கவும் விரும்பினார்கள்."

22. "அவள் இதைப்பற்றித் தன் கணவனிடம் கூறினாள்-அவன் இதைக்கேட்டு அவளை இரண்டாக வெட்டியெறிந்து தன்னையும் கொன்ற கொண்டான்-இருவரும் ஒன்றாயிணைந்து இறந்து விட வேண்மென்று."

23. "பிராமணர் நளித்யான் இவையனைத்தையும் அரசிக்கு முறைப்படி தெரிவித்தார்."

24. "அதன் பின் அரசி அரசரிடம் சென்று வினவிார். அரசே! தாங்கள் தங்களின் ஒரே மகளான இளவரசி வஜிரா விடம் மிக்க அன்புடையவராய் இருக்கிறீர்கள் அல்லவா? ஆம்! நான் அப்படித்தானிருக்கிறேன்." என்று விடையிறுத்தார் அரசர்.

25. "உங்கள் வஜிராவுக்கு ஏதேனும் நேர்ந்தால் நீங்கள் மிகவும் வருந்துவீர்களா இல்லையா? அவளுக்கு ஏதேனும் நேர்ந்துவிட்டால் அது என் வாழ்க்கையைப் பெரிதும் வேறுபட்டதாய் ஆக்கிவிடும்."

26. "அரசே! நீங்கள் என்மீது மிகவும் அன்பு கொண்டுள்ளீர்கள் அல்லவா? மல்லிகா வினவினார். ஆம்! நான் அப்படித்தான் இருக்கிறேன்."

27. "எனக்கு ஏதேனும் நேர்ந்தால் நீங்கள் மிகவும் வருந்துவீர்களா இல்லையா? உனக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால் அது என் வாழ்க்கையையே மிகவும் வேறுபட்டதாய் ஆக்கிவிடுமே."

28. அரசே! நீங்கள் காசி மற்றும் கோசல மக்கள் மீது மிகவும் அன்பு கொண்டுள்ளீர்கள அல்லவா? 'ஆம்' பதிலிறுத்தார் அரசர், அவர்களுக்கு ஏதேனும் நேர்ந்தால் தாங்கள் மிகவும் வருந்துவீர்களா இல்லையா?

29. "அவர்களுக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால், அது மிகவும் வேறுபாட்டை உண்டாக்கிவிடும்-அது வேறெப்படி இருக்க முடியும்?"

30. "உயர்வெய்திய புத்தர் வேறேதேனும் உரைத்தாரா? இல்லை மல்லிகா! அரசர் கூறினார்-தன் தவற்றையுணர்ந்து."

4. ஒரு பேறுகாலத் தாயின் பேரார்வ பெரு விருப்பம்.

1. ஒரு முறை புத்தர் பக்க நாட்டில் பேஷகலத் தோப்பில் உள்ள சும்சமார-கிராவில், மான் சோலையில் தங்கியிருந்த போது அரசர் போதியின் 'தாமரை' யென அழைக்கப்பட்ட அரண்மனை கட்டி முடிக்கப்பட்டிருந்ததெனினும் துறவிகளாலோ, பிராமணர்களாலோ, வேறெவராலோ இருப்பிடமாய்க் கொள்ளப்படவில்லை.

2. சங்கிக-புத்ரர் என்னும் பெயரிய இளம் பிராமணர் ஒருவரிடம் அரசர் கூறினார்: "என் சார்பாகத் தாங்கள் புத்தரிடம் சென்று, அவர் பாதத்தில் தலைவணங்கி, அவர் நலம் விசாரித்த பின்னர் நாளை என்னோடு உணவருந்த அவருடைய பரிவாரத்துடன் அவர் வருதலென்னும் நன்மையைப் புரிய வேண்டுமென அவருக்கு அழைப்புவிடுத்து வாருங்கள்."

3. புத்தருக்குச் செய்தி தெரிவிக்கப்பட்டது-மவுன்தால் ஒப்புதலளித்தார்-இது உரிய முறையில் அரசருக்கு அறிவிக்கப்பட்டது.

4. இரவு கடந்த பின், அரசர், அற்புதமான உணவுக்கும் தாமரை அரண்மனையின் படிகள் தொங்குமிடத்தில் வெண்பட்டாடை விரிப்பினை விரிக்கவும் அரண்மனையில் ஏற்பாடு செய்ய ஆணையிட்டார்-அதன் பின் அனைத்தும் தயாராயிருப்பதாய் புத்தரிடம் அறிவிக்கும்படி இளம் பிராமணரிடம் கூறினார்.

5. இது செய்யப்பட்டது, அந்நாள் அதிகாலை புத்தர் உரியபடி துவராடையுடுத்தி, பிட்சா பாத்திரம் கையேந்தி, அரசர் நுழைவாயிலுக்கு வெளியே காத்திருக்கும் அரண்மனைக்கு வந்துற்றார்.

6. புத்தர் வருவதைக் கண்ணுற்ற அரசர் முன்நடந்து அவரை வணங்கி அவர் பரிவாரத்துடன் அரண்மனை நோக்கிச் சென்றார்.

7. படிகளின் தொடக்கத்தில் புத்தர் அசையாமல் நின்றார். அரசர் கூறினார். "விரிப்பின்மேல் புத்தர் நடக்க வேண்டுகிறேன். என்னுடைய வளத்திற்காகவும், நலத்திற்காகவும் உயர் வெய்திய புத்தர் இவ்வாறு செய்ய வேண்டுகிறேன்." ஆனால் புத்தர் மவுனமாயிருந்தார்.

8. இரண்டாம் முறையாகவும் அரசர் வேண்டினார்-அப்போதும் புத்தர் மவுனமாயிருந்தார், மூன்றாம் முறையாகவும் அவர் வேண்டினார். அப்போது புத்தர் ஆனந்தரை நோக்கினார்?.

9. ஆனந்தர் என்ன சிக்கலெனப் புரிந்து கொண்டு, 'வெண்பட்டு விரிப்பைச் சுருட்டி அப்புறப்படத்தப்பட வேண்டும்-ஏனெனில் புத்தர் அவரை இனித் தொடர்ந்து வருவோருக்கு முன்மாதிரியாய் இருக்க விரும்புவதால் அவ்வாடம்பர விரிப்பின் மீது நடக்க மாட்டார்' என்றார்.

10. எனவே அரசர் அவ்விரிப்பைச் சுருட்டி அப்புறப்படுத்த ஆணையிட்டார்-அதன் பின அரண்மனையின் மாடியில் இருக்கைகள் இடக்கட்டளையிட்டார்.

11. பின் புத்தர் அவருடைய பரிவாரத்துடன் மாடிப்படிகளில் ஏறிச் சென்று தமக்கென இடப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார்.

12. அரசர் தம் கரங்களாலேயே அருமையன உணவைக் குறையேதுமின்று புத்தருக்கும் அவர்தம் பரிவாரத்துக்கும் அளித்தார்.

13. புத்தர் உணவுண்டு முடித்தபின், அரசர் போதி, ஓர்புறம் சற்றுத் தாழ்வான இருக்கையில் அமர்ந்து புத்தரிடம் கூறினார்; "உண்மையான சுகம் இன்பமான பொருள்களிலன்றி துன்பமான பொருள்கினின்றே தேடப்பட வேண்டும் என்பது என் கருத்தாக உள்ளது ஐயன்மீர்!"

14. "கடந்து விட்ட காலங்களில் நானும் அவ்வாறான கருத்தே கொண்டிருந்தேன்-என்னுடைய உயர்பேரறிவெய்திய நாட்களில். அப்போது நான் மிகவும் இளைமாய் இருந்த காலம்-தலைவில் கருத்த முடிவளம்-இளைமையின் முழு அழகு கொழித்த நேரம் -அழுது புலம்பிய என் பெற்றோர்களின் விருப்பத்திற்கு மாறாக-நான் தலைமுடி-தாடி ஆகியவற்றை மழித்துக் கொணடேன்-துவராடை அணிந்து கொண்டேன்-இல்லறத்திலிருந்து துறவறத்திற்கு யாத்ரீகனாய் சென்றேன். அப்போது பெருநன்மையின் நாடலிலும் முழு அமைதிக்கான பாதையின் ஒப்பிலாத் தேடலிலும் ஆழ்ந்த துறவியாயிருந்தேன்."

15. "இப்போது நான் வேறுபட்ட கருத்துடையவனாய் இருக்கிறேன். ஒரு மனிதன் தம்மத்தை அறிவானாகில் அவன் அனைத்துத் துன்பமும் அழியக் காண்பான்."

16. புத்தரிடம் அரசர் கூறினார் "என்ன அரிய தத்துவம்! என்ன அரிய தம்ம வெளிப்பாடு, எத்தனை எளிதாய் புரிகிறது."

17. அவ்வமயம் இளம் பிராமணர் சங்கிக-புத்ரர் அரசருக்கு உரைத்தார்-தம்மத்தை அரசர் இவ்வாறு வியந்து போற்றிடினும், அவர் இன்னமும் புத்தரிடமும், அவர் தம் தம்மத்திடமும், அவர்தம் சங்கத்திடமும் சரணமைந்ததாய்க் கூற வேண்டியபடி கூறவில்லையே என நினைவூட்டினார்.

18. "அப்படிக் கூறாதீர்! என் நண்பரே! அப்படிக் கூறாதீர் அரசர் உரைத்தார். ஏனெனில் என் தாயின் வாய்ச் சொல்லால் நான் கேட்டுள்ளேன், ஒருமுறை கோசாம்பியில் கோசிதா சோலையில் புத்தர் தங்கியிருக்கையில் என்னைக் கருவுற்றிருந்த காலத்தில் என் தாய் புத்தரிடம் வந்து வணங்கி, ஓர்புறம் ஓரிருக்கையில் அமர்ந்து கூறினாராம், என் சுருப்பையில் நான் சும்பது பையானயினும், பெண்ணாயினும், அது புத்தரிடமும், தம்மத்திடமும் சங்கத்திடமும் சரண் நாடுகிறது. இன்று முதல் தன் வாழ்நாள் முழுதும் எல்லையின்றிச் சரண் எய்திய இக்குழந்தையை உங்கள் சீடராக ஏற்றுக் கொள்ளுங்கள்" என அவர் புத்தரை வேண்டினாராம்.

19. "மற்றொரு முறை, புத்தர் இங்கு பக்க நாட்டில் உள்ள, பேஷகலா தோப்பிலுள்ள சும்சுமாரகிராவில் மான் சோலையில் தங்கியிருக்கையில், என் செவிலித்தாய் என்னை புத்தரிடம் ஏந்தி வந்து, அவர் முன்நின்று கூறினாராம், 'இந்த போதி இளவரசர் புத்தரிடமும், தம்மத்திடமும், சங்கத்திடமும் சரண் புகுகிறார்."

20. "இப்போது, நேரிலேயே, மூன்றாம் முறையாக வாழ்நாள் முழுதும் எல்லையின்று சரணமையும் என்னைச் சீடனாக ஏற்கும்படி புத்தரிடம் நான் சரண்புகுகிறேன்."

5. கெனியாவின் வரவேற்பு.

1. ஆங்கு அபநாதில் சேலா என்னும் ஒரு பிராமணர் வாழ்ந்து வந்தார்-அவர் மூன்று வேதங்களிலும் கரைகண்டவர்-வேள்விச் சடங்குகளில் விற்பன்னர்-மந்திர ஒலியியலிலும், இலக்கிய, இலக்கணங்களிலும் ஐந்தாமிலக்கணமாம் எண்ணிலக்கத்தினிலும் வல்லுநர்-அவர் வேத விளக்கமும் அறிவார்-அவர் குதர்க்க வாதமும் கற்றிருந்தார்-உயர்மானுட அடையாளக் குறிகளை உணர்ந்திருந்தார்-வேதமந்திரங்களை அவர் முன்னூறு இளம் பிராமணர்களுக்குக் கற்பித்திருந்தார்.

2. இந்தப் பிராமணர் சேலாவின் அடியாராய் இருந்தார் தீயை வணங்கும் கெனிய, தன் முன்னூறு மாணவர்கள் புடைசூழ சேலா பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருந்த தீயை வணங்குவோரை அவர் காணச் சென்றார். கெனியா அப்போது சில இடங்களில் தனிப்பட்ட வட்ட அடையாளமிட்டவாறு இருந்தார்.

3. இதைக் கண்ணுற்ற பிராமணர் கெனியாவிடம் வினவினார். "இவையெல்லாம் யாவை? இது என்ன திருமண விருந்து ஏற்பாட? அல்லது பெரிய யாகம் ஏதேனும் நடைபெறவுள்ளதா? அல்லது மகதப் பேரரசர் சேனிய பிம்பிசாரரையும் அவர் தம் பரிவாரமனைத்தையும் நாளை விருந்துக்கழைத்து இருக்கிறீர்களா?

4. இப்போது உயர் பேரறிவின் உன்னதப் பேராளர் என்னும் வயில் கவுதமரின் புகழ் இவ்வளவு மேலோங்கியுள்ளது.

6. "அவரைத்தான் அவருடைய பரிவாரத்துடன் நாளை நான் உணவருந்த அழைத்துள்ளேன். அவருக்காகத் தான் ஈண்டு விருந்து தயாராகிறது"

7. "கெனியா! நீங்கள் உயர்பேரறிவெய்தியவர் என அவரைக் கருதுகிறீர்களா?" கேட்டார் சேலா. "ஆம்! அப்படியே" என்று பதிலிறுத்தார் கெனியா. "நீங்களா?" "நானும் தான்."

6. ததாகதரைப் போற்றிய பசேந்தி

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் ஷராவஸ்திக்கு அருகில், ஜேதவனத் தோப்பில் உள்ள அநாதபிணடிகரின் சோலையில் தங்கியிருந்தார்.

2. அப்போதுதான் கோசல அரசர் பசேந்தி ஒரு பெரும் போரிலிருந்து, வெற்றி வாகை சூடி, தம் இலட்சியத்தை நிறைவேற்றித் திரும்பிக் கொண்டிருந்தார். சோலையை அடைந்ததும் அவ்வழியே திரும்பினார். வண்டிச்சாலை முடியும் வரை தேரில் வந்த அவர், அதன் பின் இறங்கி சோலை வழியே நடந்து சென்றார்.

3. அச்சமயத்தில் எண்ணற்ற சோதரத்துறவோர் திறந்த வெளியில் உலவிக் கொண்டிருந்தனர். பின் கோசல அரசர் பசேந்தி அந்தச் சோதரர்களிடம் சென்று வினவினார். "போற்றுதலுக்குரிய ஐயன்மீர்! மேன்மைத் தங்கிய தூயர், அறவேராராம் உயர்வுற்ற புத்தர் யாண்டுத் தஙகியுளளார்? ஏனெனில் நான் அவரைக் காண விழைகிறேன்."

4. "அதோ! பேரரசே ஆங்குதான் அவரின் இருப்பிடம். கதவு மூடியுள்ளது. தாங்கள் தயக்கமின்றி அமைதியாய் சென்று, மெல்லக் கனைத்துக் கதவுச் சட்டத்தைத் தட்டி ஒலியெழுப்புங்கள். மேன்மைத் தங்கிய புத்தர் கதவைத் திறப்பார்."

5. அவ்வாறே கோசல அரசர் பசேந்தி, தமக்குக் கூறப்பட்டபடி அத்தங்குமிடம் சென்று, கனைத்துக் கதவுச் சட்டத்தைத் தட்டி ஒலியெழுப்பினார், உயர்வெய்திய புத்தர் கதவைத் திறந்தார்.

6. பிறகு பசேந்தி அவ்வறைக்குள் புகுந்து, உயர்வெய்திய புத்தரின் பாதங்களில் தலைசாய்த்து வணங்கி, அப்பாதங்களை வருடி, முத்தமிட்டு தன் பெயரை அறிவித்தபடிக் கூறினார். "ஐயன் மீர்! கோசல மன்னன் பசேந்தி வந்திருக்கிறேன்"

7. "ஆனால், பேரரசரே என்னிடம் என்ன சிறப்பைக் கண்ணுற்று இவ்வுடலுக்கு ஆழ்ந்த இத்துனை பணிவு காட்டி, பற்றுமிக்க வணக்கம் செலுத்துகறீர்கள்." என்றார் புத்தர்.

## மகான் பரிவ்ராஜகரின் இறுதிப் பயணம்

## உற்றார் உறவினரோடு சந்திப்பு

### 1. அவர் போதமைகளின் மையம்.

1. சமயப் பரப்புநர்களை நியமித்த பின், புத்தர் ஒரிடத்தில் ஓய்ந்து அமர்ந்து விட்டார் என்பதில்லை. அவரும் தம் சொந்த சமயப்பரப்புப் பணிக்காகச் சில இடங்களை முன்மையான மையங்களாகப் புத்தர் தெரிவு செய்திருந்ததாகத் தெரிகிறது.
3. அத்தகு மையங்களில், முன்மையானவை ஷராவஸ்தியும், இராஜகிரஹமும் ஆகும்.
4. ஷ்ராவஸ்தியை 75 முறையும், இராஜகிரஹத்தை 24 முறையளவிற்கும் அவர் சென்றுகண்டார்.
5. குறிப்பிட்ட மற்ற சில இடங்கள் சிறிய மையங்களாக்கப் பட்டன.
6. அவைகள், அவர் 6 முறை சென்று கண்ட கவிலவஸ்து, 6 முறை சென்று கண்ட வேசாலி, 4 முறை சென்று கண்ட சமஸ்ஸதம்ம ஆகியனவாகும்.

### 2. அவர் சென்று கண்ட இடங்கள்.

1. இந்த முதன்மையான மையங்களையும், சிறிய மையங்களையும் தவிர, தம் சமயப்பரப்புதல் பயணத்திற்கிடையே வேறுபல இடங்களையும் சென்று கண்டார் உயர்வெய்திய புத்தர்.

2. அவர் உக்கதா, நாதிகா, சால் அஸ்ஸபுரா, கோஷிதாராம், நாளந்தா, அப்பனா, ஏதுமா ஆகிய இடங்களைச் சென்று கண்டார்.

3. அவர் ஓபசாத், இச்சா-நவ்கல், சண்டாள் குப்ப, குஷினாரா ஆயியவற்றைச் சென்று கண்டார்.

4. அவர், தேவதஹ்ா, பாவா, அமப்பாஹண்டா, சேதவ்யா, அனுபியா மற்றும் உகுந்மா அகிய இடங்களுக்கும் சென்றார்.

5. அவர் சென்ற இடங்களின் பெயர்கள், அவர் சாக்கிய தேசம், குரு தேசம், அங்கதேசம் ஆகியவற்றில் முழுமையாகப் பயணம் மேற்கொண்டார் என்பதைப் புலப்படுத்துகின்றன.

6. பொதுவாகக் கூறுவதெனில் அவர் வட இந்தியா முழுவதிலும் பயணித்தார் எனலாம்.

7. இவைகள் சில இடங்களாகவே தோன்றுகின்றன. ஆனால் இவைகளின் தூரப்பரப்பு எவ்வளவு? லும்பினியிலிருந்து இராஜகிரஹம் 250 மைல்களுக்குக் குறையாத தூரமுடையது. இது தூரங்களின் அளவைக் குறிப்பாக வெளிப்படுத்துகிறது.

8. இத்தனை தூரங்களையும் கால் நடையாகவே கடந்தார் புத்தர். அவர் ஒரு மாட்டவண்டியைக் கூடப் பயன்படுத்தவில்லை.

9. அவருடைய பயணத்தில், பிற்காலத்தில் அவருடைய உபாசகச் சீடர்களால் விஹாரைகளும், தங்குமடங்களும் கட்டப்பட்டு, அவரும், அவர்தம் பிக்குகளும் பயணத்திற்கிடை தங்க ஏற்பாடாகும் வரை, அவர் தங்கக் கூட இடமேதும் இருந்ததில்லை. நிழலிலேயே தங்கினார்.

10. ஐயங்களைத் தீர்த்தபடி, அவருடைய செய்திகளை ஏற்றோரின் குழப்பங்களைத் தவிர்த்தபடி, தம் எதிரிகளின் வாதங்களைத் தவிடு பொடியாக்கியபடி, தம்மிடம் குழந்தைகள் போல் வந்து வழிகாட்டுதலை வேண்டி நின்றோர்க்குத் தம் தம்மத்தைப் போதித்தபடி இடம் விட்டு இடம், சிலசமயங்களில் ஊர் விட்டு ஊர் சென்று கொண்டேயிருந்தார் அவர்.

11. அறிவிற்சிறந்தவர் மட்டுமே தம்மிடம் அறவுரை கேட்க வரவில்லையெனவும், வந்தோரனைவருமே திறந்த, சுதந்திர மனத்தோடு வந்தவறெனவும் உயர்வெய்திய புத்தர் அறிந்து வைத்திருந்தார்.

12. அறவுரை கேட்க வருவோரில் மூவகையினர் உண்டெனக் கூடத் தம் சோதரபிக்குகளுக்கு எச்சரித்திருந்தார் அவர்.

13. வெறுமையானவர்-காண இயலா அறிவிலி-எனினும் அடிக்கடி பிக்குவை அணுகுபவர்-தொடக்கதில் இடையில், முடிவு வரை அவர்களது உரை கேட்பவர். ஆனால் எதையும் கிரகிக்காதவர்-அவருக்குரியதன்று அறிவு.

14. அவரினும் உயர்ந்தவர் உடைந்த மதியினர்-அடிக்கடி பிக்குவை அணுகிடுபவர்-தொடக்கத்தில், இடையில், முடிவு வரை அவர்களது உரை கேட்பவர்-ஆங்கு அமர்ந்திருந்து சொல்லப்பட்ட சொற்களைனைத்தையும் கிரகிப்பவர்-எனினும் எழுந்த பின் மனதில் இருத்திக் கொள்ளாதவர். அவர் மனம் வெறுமையானது.

15. அவரினும் உயர்ந்தவர்-பரந்த அறிவுபடைத்த மனிதர் அவர், அடிக்கடி பிக்குவை அணுகிடுபவர்-தொடக்கத்தில், இடையில், முடிவு வரை அவர்களது உரைகேட்பவர்-ஆங்கு அமர்ந்து சொல்லப்பட்ட சொற்களைனைத்தையும் கிரகிப்பவர்-அனைத்தையும் நெஞ்சில் நிறுத்துபவர்-உறுதியானவர்-சலனமற்றவர்-இலக்கில் திறனுடையவராய் அதனோடு பொருந்துபவர்.

16. இதையெல்லாம் மீறியும், புத்தர் இடம் விட்டு இடம் சென்று தம் தம்மத்தைப் போதிப்பதில் தளர்ச்சியே உற்றதில்லை.

17. ஒரு பிக்குவாய், புத்தர் மூன்று துவராடைகளுக்கு மேல் வைத்திருந்ததில்லை. ஒருவேளை உணவிலேயே வாழ்ந்தார்-ஒவ்வொரு காலையிலும் வீடு வீடாய்ச சென்று தானமேற்றே உண்டார்.

18. அவருடைய சமயப் பரப்புப் பணி எந்த மானுடை உயிருக்கும் கடினமான பணியேயாகும். அவர் அப்பணியை மிக்க மகிழ்வுடன் புரிந்தார்.

3. தாய்க்கும் மகனுக்கும், மற்றும் மனைவிக்கும் கணவருக்கும் இடையிலான கடைசிச் சந்திப்பு

1. மஹாபிரஜாபதியும் யசோதராவும் தாங்கள் இறப்பதற்கு முன், உயர்வெய்திய புத்தரைச் சந்தித்தனர்.

2. அதுவே அநேகமாக அவர்களுடைய இறுதிச் சந்திப்பாகும்.

3. முதலில் மஹாபிரஜாபதி சென்று அவரை வணங்கினார்.

4. நன்னெறியாம் தம்ம இன்பத்தை நமக்கு வழங்கியமைக்காக அவர் அவருக்கு நன்றிதெரிவித்தார். ஏனெனில் பேரறிவுறுதலென்னும் பிறப்பை அவர் புத்தர் மூலமே அடைந்தா ா-ஏனெனில் தம்மம் அவர் மூலமே வளர்ந்தது-ஏனெனில் மஹாபிரஜாபதி புத்தரிடமிருந்தே தம்மமாம் பால் பருகினார்-பிறவிப் பெருங்கடலை அவர் மூலமே கந்தார்-புத்தரின் தாயென அறியப்படுதலென்பது எத்தனை மகத்தானது!.

5. அதன்பின் அவர் தன் வேண்டுதலை வெளிப்படுத்தினார்:

6. உயர்வெய்திய புத்தரை விளித்த யசோதரா தான் தன்னுடைய எழுபத்தியெட்டாவது வயதிலிருப்பதாய்க் கூறினார். உயர்வெய்திய புத்தர் தான் தனது எண்பதாவது வயதில் இருப்பதாய் பதிலிறுத்தார்.

7. அன்றிரவே தான் இறந்துவிடப்போவதாக யசோதரா அவரிடம் உரைத்தார். அவருடைய குரல் மஹாபிரஜாபதியை விட மிகுந்தத் தன்னம்பிக்கையுடையதாய் இருந்தது. இறப்பதற்கு புத்தரின் அனுமதியை அவர் கோரவுமில்லை-அவருடைய அடைக்கலத்தை நாடவுமில்லை.

8. மாறாக, அவரிடம் யரோதரா கூறினார் (மே சரணம் அத்தனோ). "நானே என் சொந்த அடைக்கலமாவேன்."

9. தன் வாழ்வில் அனைத்துத் துன்பங்களையும் வென்றவராயிருந்தார் அவர்.

10. தனக்கு நல்வழியைக் காட்டியவரும் தனக்கு அச்சக்தியை வழங்கியவரும் புத்தரே என்பதனால். அவருக்கு நன்றி தெரிவிக்கவே அவர் ஆங்கு வந்துற்றார்.

4. தந்தைக்கும் மகனுக்கும் இடையிலான இறுதிச் சந்திப்பு

1. ஒரு முறை புத்தர் இராஜகிரஹத்தில் உள்ள மூங்கில் தோப்பில் தங்கியிருந்தார், இராகுலனிடம் அம்பலதிகாவில் தங்கியிருந்தார்.

2. உயர்வெய்திய புத்தர் தன் ஆழ்ந்த உணர்வுறுதலினின்றும் எழுந்து இரகாகுலனிடம் சென்றார். புத்தரைச் சற்றுத் தொலைவிலேயே கண்டுவிட்ட இராகுலன் அவருக்காக ஓர் இருக்கையையும், கால்களைக்கழுவ நீரையும் ஏற்பாடு செய்தார்.

3. தனக்காக இடப்பட்ட இருக்கையில் தான் அமர்ந்த புத்தர், தன் கால்களில் நீரூற்றிக் கொண்டார். அப்போது, இராகுலன் அவரை வணங்கியபின், ஓர்புறம் தன் இருக்கையை ஏற்றார்.

4. இராகுலனை விளித்து புத்தர் உரைக்கலானார்: "வேண்டுன்றே பொய்பேசக் கூசாதவன் எவனோ அவன் தான் செய்யமுடிந்த தீமையெதையும் செய்யாமல் விட்டவன் ஆகான் என்று நான் கூறுகிறேன். எனவே வேடிக்கைக்காகக் கூட ஒருபோதும் நீ பொய்புகலாதிருக்கப் பயின்றுகொள்ள வேண்டும்."

5. "அதேவகையில், நீ எச்செயலைச் செய்கையிலும், எச்சொல்லை உரைக்கையிலும், எச்சிந்தனையைச் எண்ணுகையிலும், அதைப் பற்றி மீண்டும், மீண்டும் கருதிப் பார்க்க வேண்டும்."

6. "எச்செயலை நீ செய்ய விரும்பினாலும், அச்செயல் உன்னுடைய அல்லது பிறருடைய துன்பத்திற்கு காரணமாயிருக்குமா என்று நீ சிந்திக்க வேண்டும்-ஏனெனில் ஒரு தவறான செயல் துன்பத்தை விளைவிப்பதாய், துன்பமாய் விளைவதாய் இருக்கும். விரும்பப்பட்ட அச்செயல் அத்தகையது என உன் சிந்தனை கூறுமாயின் நீ அச்செயலைச் செய்யலாகாது."

7. "ஆனால் ஒரு செயலால் தீமையேதுமில்லை-நன்மையேவிளையும் என உன் சிந்தனை உனக்க உறுதிப்படுத்துமாயின் அதன் பின் நீ அச்செயலைப் புரியலாம்.

8. "அன்பார்ந்த கருணையில் நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் கேடு விலகிவிடும்."

9. "கருணையில் நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் கவலை விலகிவிடும்."

10. "அடுத்தவர் ஆக்கத்தினால் மகிழ்தலில் நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் பகைமை விலகிவிடும்."

11. "சமநிலையான பொறையுடைமையில் நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் பெருவெறுப்பு விலகிவிடும்."

12. "யாக்கை நிலையாமையை ஆழ்ந்து சிந்தித்து நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் தற்பெருமை வீழ்ச்சியுறும்."

13. "பொருட்களின் அழிவுறு தன்மையை அறிந்து நீ வளர்க, ஏனெனில் நீ அவ்வாறு செய்கையில் பற்று விலகிவிடும்."

14. புத்தர் இவ்வாறுரைத்தார், இராகுலன் புத்தர் உரைத்தது கேட்டு அகம் மிகமகிழந்தார்.

5. புத்தருக்கும் சாரிபுத்ரருக்கும் இடையிலான இறுதிச் சந்திப்பு

1. உயர்வெய்திய புத்தா ஷ்ராவஸ்தியில், ஜேதவனத்தில், கவுதகுடி விஹாரில் தங்கியிருந்தார்.

2. சாரிபுத்ரர், ஐந்நூறு சோதரத் துறவோர் பரிவாரத்துடன் ஆங்கு வந்துற்றார்.

3. உயர்வெய்திய புத்தரை வணங்கியபின், சாரிபுத்ரர் அவரிடம், இப்புவியில் அவர் வாழ்வின் இறுதிநாள் வந்துற்றதாகக் கூறினார். உயர்வெய்திய புத்தர், தான் உடல்சுமையை நீக்க அனுமதித்து மகிழ்வாரா என அவர் விளவினார்.

4. சாரிபுத்ரர் அவருடைய பரிநிப்பானத்திற்கு இடம் எதையும் தேர்வு செய்திருக்கிறாரா என அவரைப் புத்தர் வினவினார்.

5. சாரிபுத்ரர் உயர்வெய்திய புத்தரிடம் உரைத்தார்,"நான் மகதத்தில நாளக என்னும் கிராமத்தில் பிறந்தேன். நான் பிறந்த வீடு இன்னும் இருக்கிறது. என்னுடைய பரிநிப்பானத்திற்கு என் வீட்டையே நான் தெரிவு செய்திருக்கிறேன்."

6. புத்தர் பதிலிறுத்தார், "அன்பார்ந்த சாரிபுத்ரரே! தாங்கள் விரும்பியபடி செய்யுங்கள்"

7. சாரிபுத்ரர் உயர்வெய்திய புத்தரின் பாதங்களில் வீழந்து உரைத்தார். "ஓராயிரம் கல்பங்களுக்கான பாரமிதாங்களைப் பயின்று பார்த்தேன் -ஒரே ஒரு விருப்புடன்-அது தங்கள் பாதங்களில் வீழந்து கிடக்கும், பெரும்பேறெனும் விருப்பே-இறுதியாய் அதை நான் எய்திவிட்டமையினால் என் இன்பத்திற்கில்லை இறுதி."

8. "நாம் மறுபிறப்பில் நம்பிக்கை கொள்வதில்லை, எனவே இதுவே நம் இறுதி சந்திப்பு, ஐயன்மீர் என் பிழைகளைப் பொறுத்து மன்னிக்க வேண்டும். என் இறுதிநாள் வந்துற்றது.

9. "சாரிபுத்ரரே! மன்னிக்க ஈண்டு ஏதுமில்லையே," புத்தர் உரைத்தார்.

10. சாரிபுத்ரர் விடைபெற எழுந்தபோது, புத்தர் மரியாதை நிமித்தம் எழுந்து சென்று கவுதகுடி விஹாரின் வெளிமுற்றத்தில் நின்றார்.

11. அதன்பின் சாரிபுத்ரர் உயர்வெய்திய புத்தரிடம் உரைத்தார். "நான் தங்களை முதலில் கண்ணுற்ற போது இன்புற்றேன். இப்போது காண்கையிலும் இன்புறுகிறேன். நான் பெறும் தங்கள் தரிசனத்தில் இதுவே இறுதியாகும். இனி நான் தங்களைத் தரிசிக்கப் போவதில்லை."

12. தன் இருகரங்களையும் இணைத்தக் கூப்பி தன் புறமுதுகை உயர்வெய்திய புத்தருக்குக் காட்டாமல் நடந்தார் சாரிபுத்ரர்.

13. பிறகு உயர்வெய்திய புத்தர் ஆங்குக் கூடியிருந்த சோதரர்களிடம் உரைத்தார். "உங்கள் மூத்த சோதரரைப் பின்பற்றுங்கள்." முதன்முறையாக சோதரர் கூட்டம் உயர்வெய்திய புத்தரை விட்டு சாரிபுத்ரரின் பின் சென்றது.

14. தன் கிராமத்தை அடைந்த சாரிபுத்ரர் அவருடைய இல்லத்தில் அவர் பிறந்த அதே அறையில் இறந்தார்.

15. அவர் உடல் எரிக்கப்பட்டு அவர்தம் அஸ்தி உயர்வெய்திய புத்தரிடம் எடுத்துச் செல்லப்பட்டது.

16. அஸ்தியைப் பெற்றுக் கொண்ட உயர்வெய்திய புத்தர் சோதரர்களிடம் உரைத்தார்-"அவர் அறவிற் சிறந்தவர்-அவரிடம் ஆக்ரமிக்கும் உணர்வு இருந்ததில்லை-அவர் ஆற்றலும் உழைப்பும் மிக்கவர்-அவர் தீச்செயல்களை வெறுத்தார்-சோதரரே! அவர்தம் அஸ்தியைக் காணுங்கள், பொறையுடைமையில் அவர் நிலத்தைப் போன்று திண்மையானவர் தன் மனத்திற்குள் சினம் புகுந்ததிட அவர் ஒருபோதும் அனுமதித்ததில்லை. அவரை விருப்பு எதுவும் கட்டுப்படுத்தியதில்லை-அவர் பற்றுக்களை வென்றவர்-இரக்கம் நிறைந்தவர்-தோழமையும் அன்பும் மிகுந்தவர்."

17. அச்சமயம் இரராஜகிரஹத்திற்கருகே ஒரு தன் விஹாரில் மஹாமொகல்லான் தங்கியிருந்தார். உயர்வெய்திய புத்தரின் எதிரிகளால் அமர்த்தப்பட்ட கொலையாளிகள் சிலரால் அவர் கொலை செய்யப்பட்டார்.

18. அவருடைய முடிவு பற்றிய துயரச் செய்தி உயர்வெய்திய புத்தருக்குத் தெரிவிக்கப்பட்டது. சாரிபுத்ரும் மஹாமொகல்லானரும் அவருடைய முதன்மையான சீடர்களாயிருந்தனர். அவர்கள் தம்ம-சேனாதிபதிகள்-தம்மத்தின் காவலர்கள் என அழைக்கப்பட்டனர். தன் கொள்கைகளை தொடர்ந்து பரப்புவதற்கு அவர்களை நம்பியிருந்தார் உயர்வெய்திய புத்தர்.

19. உயர்வெய்திய புத்தர் தம் வாழ்நாளிலேயே அவர்கள் மரணமுற்றதால் பெரிதும் பாதிக்கப்பட்டார்.

20. அவர் ஷ்ராவஸ்தியில் தங்கியிருக்க விரும்பவில்லை-தன் மனத்தை ஆற்றிக் கொள்ள அவர் வேறிடம் செல்லத் தீர்மானித்தார்.

## வைஷாலியை விட்டுச் செல்லுதல்

### 1. வேசாலிக்கு விடைதருதல்

1. தன் இறுதிப் பயணத்தை மேற்கொள்ளுமுன் உயர்வெய்திய புத்தர் இராஜகிரஹத்தில் கழுகுச்சிகரத்தின் மேல் தங்கியிருந்தார்.

2. சில காலம் ஆங்கு தங்கியிருந்தபின் அவர் உரைத்தார், "வாருங்கள் ஆனந்தரே! நாம் அம்பலதிகாவிற்குச் செல்வோம்,"

3. "அவ்வாறே ஆகட்டும் ஐயன் மீழ்!" என்று ஆனந்தர் ஒப்புதல் அளித்ததும், உயர்வெய்திய புத்தர், தம் சோதரப் பெரும் பரிவாரத்துடன் அம்பலதிகாவிற்குச் சென்றார்.

4. அம்பலதிகாவில் தங்கியிருந்த பின் அவர் நாளந்தாவிற்கு நகர்ந்தார்.

5. நாளந்தாவிலிருந்து அவர் மகதத் தலை நகரான பாடலிகாம்திற்குச் சென்றார்.

6. பாடலிகாமத்திலிருந்து அவர் கோடிகாமத்திற்கும், கோடிகாமத்திலிருந்து நாதிகாவிற்கும் சென்றார்.

7. இந்த இடங்கள் ஒவ்வொன்றிலும் அவர் சிலநாட்கள் தங்கியிருந்து சமயப்பேருரைகளைச் சோதரர்களுக்கோ, பொது மக்களுக்கோ வழங்கினார்.

8. நாதிகாவிலிருந்து வேசாலிக்குச் சென்றார்.

9. வேசாலி மஹாவீரர் பிறந்த இடமாகும், அதன் விளைவாக அவருடைய சமயம் வலுப்பெற்றிருந்த இடமாக அது திகழ்ந்தது.

10. ஆயினும் உயர்வெள்திய புத்தர் விரைவிலேயே வேசாலியின் மக்களைத் தம் சொந்த சமயத்திற்கு மாற்றுவதில் வெற்றிகண்டார்.

11. ஒரு வறட்சியின் காரணமாக, வேசாலி நகரத்தைப் பெரும்பஞ்சமொன்று அப்போது ஆட்கொண்டிருந்ததாகக் கூறப்படுகிறது. மக்கள் பெரும் எண்ணிக்கையில் மாண்டு கொண்டிருந்தனர்.

12. தங்களால் கூட்டப்பட்ட பொதுச்சபையில் வேசாலியைச் சேர்ந்த மக்கள் இதுபற்றிக் குறைபட்டுக் கொண்டனர்.

13. பெரும் விவாதத்திற்குப்பின், உயர்வெய்திய புத்தரை நகருக்கு அழைப்பதெனச் சபை தீர்மானித்தது.

14. மாமன்னர் பிம்பிசாரரின் நண்பரும் வேசாலி புரோகிதரின் மகனுமான மகாலி என்னும் பெயரிய லிச்சாவியரை அழைப்பு விடுக்க அனுப்பப்பட்டார்.

15. உயர்வெய்திய புத்தர் அழைப்பை ஏற்று, ஐந்நூறு பிக்குகளுடன் புறப்பட்டார். அவர் வஜ்ஜினர்களின் பகுதிக்குள் நுழைந்தவுடனே, ஆங்கு ஓர் இடிப்புயல் ஏற்பட்டது-பெருமழை பொலிந்தது-பஞ்சம் மறைந்தது.

16. வேசாலியின் மக்கள் உயர்வெய்திய புத்தருக்கு அளித்த வரவேற்பின் தொடக்கம் இவ்வாறாக இருந்தது.

17. அவர்களின் இதயத்தைப் புத்தர் வென்றமையால், வேசாலியின் மக்கள் அவருக்கு மிக இனிய வரவேற்பு நல்குவது இயல்பாயிருந்தது.

18. அதன்பின் வாசம் வந்தது. உயர்வெய்திய புத்தர் தம் வாசத்திற்காக பெலுனாவிற்குச் சென்றார். சோதரரை வேசாலியில் தம் வாசத்தை ஏற்குமாறு கூறினார்.

19. தம் வாசம் முடிந்தபின் உயர்வெய்திய புத்தர் வேசாலியை விட்டுச் செல்வது என்று மனநிலையுடன் வேசாலிக்கு வந்தற்றுத் தன் பயணத்தைத் தொடர எண்ணினார்.

20. எனவே, உயர்வெய்திய புத்தர் ஒரு நாள் அதிகாலையில் எழுந்து, துவராடையணிந்து, பிட்சாபாத்திரம், கையேந்தி, தானத்திற்காக வேசாலிக்குள் புகுந்தார். வேசாலியைக் கடந்து சென்று உணவுண்டு முடிந்தபின், ஒரு வேழநோக்கோடு வேசாலியைக் கண்ணுற்றார். போற்றுதலுக்குரிய ஆனந்தரை விளித்து உரைத்தார். "ஆனந்தரே! ததாகதர் வேசாலியைக் காணும் இறுதிக் காட்சியாகும் இது."

21. இவ்வாறு உரைத்தவாறே வேசாலி மக்களிடம் விடைபெற்றார் அவர்.

22. தங்கள் பண்டைய நகரத்தின் வடக்கு எல்லையில் லிச்சாவியர் தம்மிடம் விடைபெறுகையில், அவர், தனது பிட்சா பாத்திரத்தைத் தன் நினைவுப்பரிசாக அவர்களுக்கு வழங்கினார்.

23. வேசாலியை அவர் கண்ணுற்ற இறுதிப்பயணம் அதுவே. மீண்டும் ஆங்கு செல்லும்வரை அவர் உயிர்வாழவில்லை.

## 2. பாவாவில் தங்குதல்

1. வேசாலியிலிருந்து உயர்வெய்திய புத்தர் பண்டகாமத்திற்குச் சென்றார்.

2. பண்டகாமத்திலிருந்து அவர் ஹத்திகாமத்திற்கும், அங்கிருந்து போசு-நகராவிற்கும் சென்றார்.

3. போசு-நகராவிலிருந்து அவர் பாவாவிற்குச் சென்றார்.

4. பாவாவில் உயர்வெய்திய புத்தர் சுந்தா என்னும் பெயரிய கொல்லருடைய மாந்தோப்பில் தங்கினார்.

5. அப்போது உயர்வெய்திய புத்தர் பாவாவிற்கு வந்துற்றதையும், தன் மாந்தோப்பில் தங்கியிருப்பதையும் சுந்தா கேள்வியுற்றார்.

6. சுந்தா மாந்தோப்பிற்குச் சென்று, உயர்வெய்ததிய புத்தரருகே அமர்ந்தார். புத்தர் அவருக்குச் சமயப் பேருரை வழங்கினார்.

7. அதனால் மகிழ்வுற்ற சுந்தா உயர்வெய்திய புத்தரை விளித்துக் கூறினார். "தம் சோதரருடன் உயர்வெய்திய புத்தர், நாளை என் வீட்டில் உணவருந்தும் பேற்றினை எனக்கு நல்குவீரா?"

8. மவுனத்தால் இவ்வேண்டுதலை மகிமைப்படுத்திய உயர்வெய்திய புத்தர் ஒப்புதலளித்தார். உயர்வெய்திய புத்தர் ஒப்புதலளித்ததைக் கண்ட சுந்தா அப்போது விடைபெற்றுச் சென்றார்.

9. மறுநாள் தன் உறைவிடத்தில் இனிய உணவை ஏற்பாடு செய்த சுந்தா சிறிது சுகர-மதவவையும் தயார் செய்திருந்தார். உயர்வெய்திய புத்தரிடம் உண்பதற்கான நேரததை அறிவித்தபடி கூறினார். "ஐயன் மீர்! நேரம் ஆயிற்று உணவு தயாராக உள்ளது."

10. உயர்வெய்திய புத்தர் துவராடை அணிந்து, பிட்சாபத்திரம் கையேந்தி தம் சோதருடன் சுந்தாவின் உறைவிடத்திற்குச் சென்று அவரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த உணவை ஏற்றார்.

11. உணவுண்டு முடித்தபின் உயர்வெய்திய புத்தர் சுந்தாவிற்குச் சமயம் பற்றி பேருரை நல்கினார். பின் இருக்கையினின்று எழுந்து ஆங்கிருந்து புறப்பட்டார்.

12. சுந்தாவால் அளிக்கப்பட்ட உணவு உயர்வெய்திய புத்ருக்கு ஒத்துக் கொள்ளவில்லை. அவர் உடல் நலம் சீர்வெட்டது. சீதபேதியால் அவதியுற்றார். கடுமையான தாங்கொணா துன்பத்துக்காளானார்-இறக்குமளவிற்கு அவர் உடல் நலம் கேடுற்றது.

13. ஆயினும் உயர்வெய்திய புத்தர், தன்னிலையுற்றவாராய் கவனம் மக்கவராய், குறையேதும் கூறாமல் அத்துன்பத்தைத் தாங்கிக் கொண்டார்.

14. மாந்தோப்பிற்குத் திரும்பி, அருந்தியது அற்றபின், உயர்வெய்திய புத்தர் ஆனந்தரிடம் உரைத்தார். "வாருங்கள் நாம் குஷினாராவிற்குச் செல்வோம் குழு பாவாவிலிருந்து நகர்ந்தது."

3. குஷினாராவிற்கு வருகை

1. உயர்வெய்திய புத்தர் கொஞ்ச தூரத்தையே கடந்தார். விரைவிலேயே ஓய்வின் அவசியத்தை உணர்ந்தார்.

2. வழியில் உயர்வெய்திய புத்தர், பாதையை விட்டு ஓர்புறம் ஒதுங்கி ஒரு குறிப்பிட்ட மரத்தை அடைநது, ஆனந்தரிடம் உரைத்தார். "ஆனந்தரே! துவராடையை எடுங்கள் ஈண்டு உம்மை அதை எனக்காக விரிக்க வேண்டுகிறேன். நான் களைத்திருக்கிறேன. ஆனந்தரே! நான் சிறிது ஓய்வெடுக்க வேண்டும்."

3. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்!"-போற்றுதலுக்குரிய ஆனந்தர் உயர்வெய்திய புத்தரிடம் ஒப்புதலாய் உரைத்து. துவராடையை நான்காய் மடித்து இட்டார்.

4. உயர்வெய்திய புத்தர் தனக்கென அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட இருக்கையில் அமர்ந்தார்.
5. அவ்வாறு அம்ந்தபின், உயர்வெய்திய புத்தர் ஆனந்தரை விளித்து உரைத்தார். "ஆனந்தரே! எனக்குச் சிறிது நீர்கொணரும்படி உம்மை வேண்டுகிறேன். ஆனந்தரே! எனக்கு தாகமாயுள்ளது. நான் நீர்பருகவேண்டும்."

6. ஆனந்தர் பதிலிறுத்தார். "ஈண்டு சுகுத்த நதி வெகு தூரத்திலில்லை-அதன் நீர் தெளிந்தது-இனியது-குளிர்ந்தது-தெள்ளியது-இறங்க எளியது-அருமையானது. ஆங்கு உயர்வெய்திய புத்தர் நீர்பருகுவதோடு குளிரக்குளிர நீராடவும் செய்யலாம். இந்த ஒடையில் நீர் கெட்டுக் கலங்கியுள்ளது."

7. உயர்வெய்திய புத்தர் மிகவும் பலவீனமாய் இருந்தமையால் அந்த நதி வரை நடக்கவியலாதவராய் இருந்தார். அருகிலுள்ள ஓடையின் நீரை போதுமெனக் கருதினார்.

8. ஆனந்தர் நீர் கொணர்ந்தார், உயர்வெய்திய புத்தர் பருகினார்.

9. சற்று நேரம் ஒய்வெடுத்தப்பின் உயர்வெய்திய புத்தர் தம் சோதரப்பரிவாரத்துடன் சுகுந்த நதிக்குச் சென்றார். ஆங்கு வந்துற்று, நீரில் இறங்கி, நீராடி, நீர்பருகினார். வெளியே மீண்டு ஆற்றின் மறுகரைக்கு வந்து மீண்டும் மாந்தோப்பிற்குச் சென்றார்.

10. ஆங்கு வந்துற்றபோது மீண்டும் துவராடையை விரிக்கும் படி கூறினார். "நான் களைப்பாயிருக்கிறேன், சற்று படுக்க வேண்டும்." அதன்படி துவராடை பரப்பப்பட்டது. உயர்வெய்திய புத்தர் அதன்மேல் தன் உடலைக் கிடத்தினார்.

11. சற்றுநேரம் ஓய்வெடுத்தபின், உயர்வெய்திய புத்தர் எழுந்து ஆனந்தரிடம் உரைத்தார். "நாம் ஹிரண்யவதி ஆற்றின் மறுகரையில் குஷினாராவின் உபவனத்தில் உள்ள மல்லர்களின் சால்மரத்தோப்பிற்குச் செல்வோம்."

12. அவ்விடத்தை ஆனந்தரின் துணையோடு அடைந்து புத்தர் மீண்டும் துவராடையை இணையான இருசால் மரங்களுக்கிடையே விரிக்கும் படி ஆனந்தரிடம் கூறினார். "நான் களைத்திருப்பதால் இங்கு படுக்கிறேன்."

13. ஆனந்தர் துவராடையை விரித்தார். உயர்வெய்திய புத்தர் தன் உடலை ஆங்குக் கிடத்தினர்

## மகா பரிநிப்பானம்

### 1. ஒரு வாரிசின் நியமனம்.

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் வில்லாளர்கள் எனப்பெயரிய சாக்கிய குடும்பத்தினரின் மாந்தோப்பில் தங்கியிருந்தார்.

2. அச்சமயத்தில் தான் பாவாயில் நாதபுத்ரர் என்னும் நிகந்தர் மரணமடைந்தார். அவர் மரணத்தையொட்டி நிகந்தர்கள் தமக்குள் ஒற்றுமை குலைந்து, இரு குழுக்காகப் பிரிந்து, ஒருவர்க்கொருவர் கருத்து மோதல் கொண்டு, சச்சரவிட்டு, சொல்லாயுதங்களால் ஒருவரையொருவர் காயப்படுத்திக் கொண்டனர்.

3. அப்போது, பாவாவில் மழைக்காலத்தைக் கழித்துவிட்டு சிராமணர் சுந்தா ஆனந்தரைக் காணவநது உரைத்தார். "பாவாவில் இப்போதுதான் நிகந்தரான நாதபுத்ரர் மரணமுற்றார். அவர் இறந்ததும் நிகந்தர்கள் ஒற்றுமைகுலைந்து,பிரிந்து சச்சரவிட்டு ஒருவரை ஒருவர் காயப்படுத்திக கொண்டனர். இது ஏனெனில் அவர்களுக்கு ஒரு காப்பாளர் இல்லாமையால் தான்."

4. அதன்பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் உரைத்தார், "நண்பர் சுந்தாவே! மேன்மைத்தங்கிய புத்தரிடம் கொண்டு செல்லப்பட வேண்டிய முக்கிய செய்தி இது. நாம் அவரிடம் சென்று இது பற்றி அவருக்குரைப்போமாக."

5. "மிகவும் நன்று, ஐயன் மீர்!" பதிலிறுத்தார் சுந்தா.

6. எனவே போற்றுதலுக்குரிய் ஆனந்தரும் சிராமணர் சுந்தவும் மேன்மை தங்கிய புத்தரை அடைந்து, அவரை வணங்கி, நிகந்தர்களைப பற்றி அவரிடம் கூறி, ஒரு வாரிசை நியமிக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினர்.

7. உயர்வெய்திய புத்தர் சுந்தா கூறியதைக் கேட்டுப் பதிலிறுத்தார். ஆனால், சுந்தாவே, எண்ணிப் பாருங்கள். உலகில் ஒரு போதகர் தோன்றி, அரஹத்தாய் உயர்ந்து, உயர்பேரறிவுற்று, ஒரு கோட்பாட்டை நன்கமைத்து, நன்கு வெளிப்படுத்தி, வழி நடத்தத் தக்கதாய், அமைதிக்கு உரியதாய் அதைப் போதித்திடினும், அவருடைய சீடர்கள் நல்ல இலக்கில் நற்பயிற்சியுறாதவராயட, தம்மைப் பாதுகாக்கும் தன்மையதாய் அதை ஏற்காவராய் இருப்பின் அந்தப் போதகர் மறைவுற்றதும் மக்களிடை இப்படித்தான் நடக்கும்.

8 "அப்போது அத்தகைய போதகர் மறைவுறுகையில் சுந்தாவே, இந்நிலை அவர் தம் சீடருக்குப் பெருந்துன்பமாயும், அவர்தம் தத்துவத்திற்குப் பேரிடராகவும் தான் முடியும்."

9. "ஆனால், சுந்தாவே-இதையும் எண்ணிப் பாருங்கள், ஒரு போதகர் உலகில் தோன்றி-அவர் உயர்பேரறிவுற்றவராய் விளங்கி, இலக்கை நன்கு அமைத்து, நன்கு வெளிப்படுத்தி, வழிகாட்டுதலுக்கேற்ற வகையிலதையமைத்து, அமைதிக்குரியதாய் ஆக்கி, சீடர்கள் அந் நல்லிலக்கில் தேர்ந்து, உயர்வாழ்வுக்குரிய முழு வாய்ப்புமுற்று தம் வாழ்வே அதன் வெளிப்பாடாயக்கியிருக்கையில் போதகர் மறைந்துவிடுவதாய் வைத்துக் கொள்வோம்."

10. "அத்தகைய ஒரு போதகரின் மரணம் அவர்தம் சீடருக்குத் துன்பமாக இருக்காதே. பின் ஏன் ஒரு வாரிசை நியமிக்க வேண்டும்?"

11. ஆனந்தர் வேறொரு சமயத்தில் இதே வினாவை எழுப்பிய போது, உயர்வெய்திய புத்தர் உரைத்தார், "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ஆனந்தரே? தானமேற்கும் பிக்குகளில் எந்த இருவரேனும் நான் போதித்தனவற்றில் வெவ்வேறு பொருள் கொள்வோராய் உள்ளனரா?"

12. "இல்லை ஆயினும் ஐயன்மீரைப் பின்பற்றுகிற பிக்குகள் அவர் மறைந்தபின், சங்கத்தின் விதிகள் அல்லது கோட்பாடுகளை மதிக்குமுகத்தான் சச்சரவிட்டுக் கொள்வார்களேயாயின் அது பொதுவாக வருத்தத்திற்கு வழிவகுக்கும்."

13. "ஆனந்தரே! கோட்பாடுகள், விதிமுறைகள் பற்றிய சர்ச்சையைச் சிறிதும் பெருட்படுத்த வேண்டியதில்லை. சங்கத்திற்குள் நடை முறையைப்பற்றி எழக்கூடிய சச்சரவுபற்றியே நாம் பொருட்படுத்தவேண்டும்." என்று உரைத்தார் உயர்வெய்திய புத்தர்.

14."இந்த நடைமுறைகளைப் பற்றிய சர்ச்சையை ஒரு சர்வாதிகாரி மட்டுமே முடிவுகட்டமுடியும். ஒரு சர்வாதிகாரியாய் இயங்காதவரை ஒரு வாரிசு வேறென்ன செய்ய இயலும்."

15. ஆனால் நடைமுறைப்பாதை பற்றிய முரண்பாடுகளை சர்வாதிகாரி தீர்க்கவியலாது.

16. "முரண்பாடுகள் பற்றிய முடிவான தீர்மானம் சங்கத்தோரால் அடையப்படவேண்டும். சங்கத்தின் அனைத்து உறுப்பினர்களும் கூடி, அவ்விஷயத்தை விவாதிக்க வேண்டும்-ஒரு பொதுவான ஒப்புதலுக்கு வரும்வரை. இவ்வாறாக சங்கம் முரண்பாட்டை ஒப்புதலால் முடிவுக்குக் கொணரவேண்டும்."

17. "பெரும்பான்மையோரின் ஒப்புதலே கருத்துமோதலைத் தீர்க்கும் வழியாகும்-வாரிசு நியமனமன்று."

2. இறுதியாய்ச் சமயமாற்றமுற்றவர்.

1. அச்சமயத்தில் சுபத்தர் என்னும் முனிவர் குஷினாராவில் தங்கியிருந்தார், முனிவர் சுபந்தர் ஒரு வதந்தியைக் கேள்வியுற்றார். "இன்றைக்கே, இரவின் கடைச் சாமத்தில் துறவி கவுதமர் இயற்கை எய்துவார் எனக் கூறப்படுகிறது." பின் முனிவர் சுபத்தருக்கு இந்த எண்ணம் வந்தது.

2. "இவ்வாறாக நான், மற்ற முனிவர்களாம் மூத்த முதியோர்-போதகராயும் சீடராயும் உள்ளேன் கூறக்கேட்டபடி, 'அரிதிலும் அரிதாகவே ததாகதர்கள் உலகில் எழுகிறார்கள்-அரஹத்களாய்-முற்றமுழுக்க உயர்பேரறிவெய்தியவர்களாய. ஈண்டு இன்றிரவு, கடைச் சாமத்தில், துறவி கவுதமர் இயற்கை எய்துவார்' இப்போது என் மனத்தில் ஒர் ஐயம் எழுந்துள்ளது. துறவி கவுதமர் பற்றி உறதியாய் நானறிவேன். துறவிகவுதமர் எனக்கோர் போதனை அளிக்கவியலும்-என்னுடைய ஐயநிலையை நான் அகற்றும் வண்ணம்.

3. அதன்பின் முனிவர் சுபத்தர் மல்லர்களின் சாலமரத் தோப்பிற்குச் செல்லும் துணைவழியே சென்றார். ஆங்கு ஆனந்தர் இருந்தார். ஆங்கு வந்துற்ற சுபத்தர் போற்றுதலுக்குரிய ஆனந்தரிடம் தான் எண்ணியவற்றைக் கூறி அவரை வேண்டினார்,"ஓ, குரு ஆனந்தரே! துறவி கவுதமரை நான் ஒரு முறை கண்டுவிட்டால் போதும்!"

4. இச்சொற்களைக் கேட்ட போற்றுதலுக்குரிய ஆனந்தர் முனிவர் சுபத்தரிடம் உரைத்தார், "போதும் நண்பர் சுபத்தரே! போதகரைத் தொந்தரவு செய்யாதீர்! மேன்மைத்தங்கிய புத்தர் மிகவும் களைத்திருக்கிறார்."

5. பின் இரண்டாம் முறையாகவும், மூன்றாம் முறையாகவும் முனிவர் சுபத்தர் அதே வேண்டுகோளை முன்வைத்து அதே பதிலைப் பெற்றார்.

6. அப்போது மேன்மைத்தங்கிய புத்தர் போற்றுதலுக்குரிய ஆனந்தருக்கும் சுபத்தருக்கும் இடையே நடைபெற்ற உரையாடலைச் செவிமடுத்துவிட்டார். பின் அவர் போற்றுதலுக்குரிய ஆனந்தரை அழைத்து உரைத்தார். "போதும்! ஆனந்தரே! சுபத்தரைத் தடுக்காதீர்! ததாகதரைக் காணச் சுபத்தர் அனுமதிக்கப்படுவாராக! சுபத்தர் என்னை யாது வினவினும், அறியும் ஆர்வத்தோடன்றி, என்னைத தொந்தரவு செய்யும் விருப்பில் ஆர்வத்தோடன்றி, என்னைத் தொந்தரவு செய்யும் விருப்பில் வினவமாட்டார், மேலும் நான் விடையாக உரைபது யாதாயினும் விரைவாக அதனைப் புரிந்து கொள்வார்."

7. எனவே அதன்பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் முனிவர் சுபத்தரிடம் உரைத்தர், "நண்பர் சுபத்தரே! மேன்மைத் தங்கிய புத்தர் உம்மை அழைக்கிறார்."

8. எனவே முனிவர் சுபத்தர் மேன்மைத்தங்கிய புத்தரிடம் சென்று, அவரை அணுகி மகிழ்வுடன் வந்தனம் கூறி, தோழமையான விசாரிப்புகளைப் பரிமாறிக் கொண்டபின் ஓர்புறம் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்த முனிவர் சுபத்தர் மேன்மைத் தங்கயி புத்தரிடம் இவ்வாறு வினவினார்.

9. "குரு கவுதமரே! தொண்டர் குழுக்களும், கேட்கும் கூட்டமும் மிகவாய்பபெற்றுள்ள அனைத்துத் துறவிகளும், பிராமணரும், பெரும் போதகர்களாயும், நன்கறியப்பட்டவர்களாகவும் உள்ளனர். அவர்கள் பல மதப் பிரிவுகளின் நிறுவனர்களாகவும் புனிதம்மிக்கவர்களாகவும் எண்ணற்ற மக்களால் ஏற்றிப்போற்றப்படுகின்றனர்-புராண காஸ்ஸப்பர், கோவரிவம்ச மக்காளி, உரோம ஆடையரான அஜிதர், பகுத மரத்தினரான கச்சாயனர், பெலத்தியின் மகனான சஞ்சயர், நாத வம்சத்தினரான நிகந்தர்ஷஇவர்களனைவரும் இவர்கள் கூறுவது போல் தங்கள் சொந்த அறிவாற்றலால் மெய்பபொருளுண்மையை உணர்ந்தவர்கள் தானா? அல்லது அவர்கள் அனைவருமே அதனை உணராதவர்களா? அல்லது சிலர் மட்டும் தம் அறிவாற்றலால் உணர்ந்தனர் பிறர் உணரவில்லை என்பதா?"

10. "அது எப்படியேனுமிருக்கட்டும் சுபத்தரே! இதுபோன்ற விஷயங்களால் உங்களைத் தொந்தரவு படுத்திக் கொள்ள வேண்டாம்-எல்லோரும் மெய் பொருளை உணர்ந்தவர்களா? இல்லையா என்று சுபததரே! நான் உமக்குச் சரியான இலக்கைக் காட்டுகிறேன். கவனமாய் கேளுங்கள். நெஞ்சில் நிறுத்துங்கள், நான் உரைக்கிறேன்."

11. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்!" முனிவர் சுபத்தர் இவ்வாறுரைத்து மேன்மைதங்கிய புத்தரின் உரையைக் கவனிக்கலானார். பின் மேன்மைத்தங்கிய புத்தர் இவ்வாறுரைத்தார்.

12. "சுபத்தரே! இலக்கின்-ஒழுகலாறு எவ்வெவற்றில் அரிய எண்வகை மார்க்கம் காணப்படவில்லையோ, ஆங்கு பிக்குவும் காணக்கிடையார். சுபத்தரே! இலக்கின் ஒழுகலாறு எவ்வெவற்றில் அரிய எண்வகை மார்க்கம் காணக்கிடக்கிறதோ, ஆங்கெல்லாம் பிக்குவும் காணக்கிடைப்பார்."

13. இப்போது சுபத்தரே! என்னுடைய இலக்கு - ஒழுகலாற்றுல் எண்வகை மார்க்கம் காணக்கிடைக்கிறது. ஈண்டு நான்கு நிலையிலான பிக்குகள் உள்ளனர். சச்சரவிடும் மதத்தோரில் இந்நான்கு வகையினர்கள் இல்லை, ஆனால் சுபத்தரே! இச்சமயத்தில் சோதரர் வாழ்வாங்கு நிறைவாழ்வு வாழ்வரெனின் உலகில் அரஹத்களுக்குக் குறைவிராது.

14. "நான் நன்மையை நாடித் துறவு மேற்கொள்கையில் எனக்கு வயது இருபத்தொன்பது."

15. "இப்போது ஐம்பதாண்டுகளோ அதற்கு மேலோ ஆகிவிட்டது-நான் நன்னெறி இலக்கை வகைப்படுத்த உலகைத்துறந்து."

16. அவர் இவ்வாறாக உரைத்து முடித்ததும் முனிவர் சுபத்தர் மேன்மைத்தங்கிய புத்தரிடம் கூறினார். "தங்கள் வாய்ச் சொற்கள் அரியவை-அருமை மிக்கவை.

17. "வீசரியெறியப்பட்ட ஒன்றை நின்று நிமிர்த்தும் ஒருவர் போலவும், அல்லது மறைக்கப்பட்ட ஒன்றை வெளிப்படுத்துதல் போலவும் அல்லது வழிதவறியவனுக்குச்

சரியான பாதையைக் காட்டுவது போலவும், அல்லது இருளுக்குள் ஒளிவிளக்கை ஏந்திச் செல்லல் போலவும், அதாவது கண்ணுள்ளோர் காணமுடியும்."

18 "இதைப்போலவே மேன்மைத்தங்கிய புத்தரால் உண்மை எனக்கு அறிய செய்யப்பட்டது, எனவே நான் மேன்மைத்தங்கிய புத்தரிடமும், தம்மத்திடமும், சங்கத்திடமும் சரண்புகுகிறேன்."

19. "வேறொரு கொள்கையைப் பின்பற்றுபவராய் இருந்த எவரும் சுபத்தரே! சங்கத்தில் புக விரும்புவாராயின் அவர் நான்கு மாத காத்திற்குப் பயிலுநராய் இருக்க வேண்டும்."

20. "விதி அதுவாயின் நானும் அவ்வாறே பயிலுநராய் இருக்கிறேன்."

21. ஆனால் மேன்மைத் தங்கிய புத்தர் உரைத்தார். "மனிதர்களுக்குள் உள்ள வேறுபட்ட சிறப்புகளை ஆற்றல் வேற்றுமையை நான் அங்கீகரிக்கிறேன்." இவ்வாறு கூறிய புத்தர் போற்றுதலுக்குரிய ஆனந்தரை விளித்து உரைத்தார், "உள்ளது உள்ளபடி ஆனந்தரே! சுபத்தரைச் சங்கததிற்குள் ஏற்றுக்கொள்க."

22. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்! என்று ஒப்புதலுடன் மேன்மைத்தங்கிய புத்தரிடம் உரைத்தார்." போற்றுதலுக்குரிய ஆனந்தர்.

23. முனிவர் சுபத்தர் போற்றுதலுக்குரிய ஆனந்தரிடம் கூறினார், "நண்பர் ஆனந்தரே! தாங்கள் யாவரும் சோதரநிலையெனும் சங்க பிக்குவாகும் நிலையை குருவிடமே நேரடியாய்ப் பெறும் பாக்கியம் பெற்றீர்கள்."

24. "சுபத்தரே! உங்களுக்கும் இந்நிலையே உண்மை" பதிலிறுதுதார் ஆனந்தர்.

25. இவ்வாறாக, முனிவர் சுபத்தர் மேன்மைத்தங்கிய புத்தரின் உத்தரவுப்படி சங்கத்தில் ஏற்கப்பட்டார். மேன்மைதங்கிய புத்தா தாமே முன்னின்று சமயமற்றத்திற்குட்படுத்திய கடைசிச் சீடர் சுபத்தரே ஆவார்.

## 3. இறுதி வார்த்தைகள்.

1. அதன் பின் மேன்மைத்தங்கிய புத்தர் போற்றுதலுக்குரிய ஆனந்தரிடம் கூறினார்.

2. "ஆனந்தரே! நீங்கள் இவ்வாறு கூறக்கூடும்: குருவின் வார்த்தைகள் கடந்தவையாயின. இப்போது நமக்கென குரு எவரும் இல்லையே! ஆயினும் ஆனந்தரே! அதை நீங்கள் பொருட்படுத்தக் கூடாது. ஏனெனில் என்னால் போதிக்கப்பட்டதும் நடைமுறைப்படுத்தப் பட்டதுமான இலக்கும் ஒழுகலாறும் நான் மறைந்தபின் தங்கள் குருக்களாய் இருக்கத்தக்கன.

3. "இப்போது, ஆனந்தரே! சோதரத்துறவோராம் பிக்குகள் ஒருவரை ஒருவர் 'நண்பரே' என அழைக்கும் வழக்கமுடையோராயிருப்பினும் -நான் மறைந்தபின் இவ்வழக்கம் பின்பற்றப்படலாகாது. ஆனந்தரே! ஒரு மூத்த பிக்குவால் பயிற்சிப்பிப்கு சோதரரை அவர் பெயராலோ, குடும்பப் பெயராலோ, நண்பரே என்ற சொல்லாலோ விளிக்கப்படலாம்-ஆனால் ஆனந்தரே, ஒரு பயிற்சிப் பிக்குவால் மூத்த பிக்கு 'ஐயன்மீர்' எனறோ அல்லது போற்றுதலுக்குரிய தங்கள் என்றோதான் விளிக்கப்பட வேண்டும்.

4. "மேலும், ஆனந்தரே, சங்கம் விழையுமாயின், நான் மறைந்தபின் சாதாரண, குறைந்த குற்றச்சாட்டு விதிகளை நீக்கிவிடலாம்.

5. "ஆனந்தரே! சோதரர் சன்னாவை நீங்கள் அறிவீர்கள் எவ்வளவு அடம்பிடிப்பவராய், தீயமதியாளராய் ஓழுக்க உணாவற்றவராய் அவர் உள்ளார்."

6. "நான் மறைந்தபின் ஆனந்தரே! அவருக்கு அதிகபட்ச தண்டனை வழங்கப்படட்டும்."

7. "ஐயன்மீர், அதிகபட்ச தண்டனை என்று தாங்கள் எதைக் குறிக்கிறீர்கள்?"

8. "ஆனந்தரே! சோதரர் சன்னா யாது கூறிவிடினும், அவரிடம் யாரும் உரையாடலாகாது, அவருக்கறிவுரை கூறலாகாது, பிறசோதரபிக்குகளால் அவர் போதிக்கப்படலாகாது. அவர் தனித்து விடப்படவேண்டும். அது அவரை முன்னேற்றக் கூடும்."

9. அதன்பின் உயர்வெய்திய புத்தர் சோதர பிக்குகளை விளித்து உரைத்தார்.

10 "சோதரரே! எவரேனும் ஒரு சோதர பிக்குவின் மனத்தில், புத்தரைப் பற்றியோ அல்லது தம்மத்தைப் பற்றியோ அல்லது சங்கத்தைப் பற்றியோ, அல்லது நெறியைப்பற்றியோ அல்லது நெறிக்கான முறையைப்பற்றியோ ஏதேனும் ஓர் ஐயமோ அல்லது குழப்பமோ இருக்கலாம். அது அவ்வாறாயின் சோதரரே! இப்போதே என்னை வினவுங்கள். நம் கண் முன் நம போதகர் இருந்தார்-இருந்தும் அவர் முன்னிலையிலேயே நாம் இருந்தும் மேன்மைத்தங்கிய புத்தரிடம் வினவ நமக்கு மனமில்லாமல் போயிற்றே எனப் பின்னர் இதுபற்றி வருந்த வேண்டாம்."

11. இச்சொற்களுக்குச் சோதரபிக்குகள் மவுனமாகவே இருந்தனர்.

12. பின்னர் இரண்டாம் முறையாகவும் மேலும் மூன்றாம் முறையாகவும் சோதரரை விளித்து இதே சொற்களை மேன்மைத்தங்கிய புத்தர் உரைத்தார். மூன்று முறையும் சோதர பிக்குகள் மவுனமாகவேயிருந்தனர்.

13. அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தர் உரைத்தார். "சோதரரே! போதகர்பால் தாங்கள் கொண்ட மரியாதையின் நிமித்தம் நீங்கள் ஏதும் வினவாமல் இருக்கலாம். சோதரரே! என்னிடம் ஒரு தோழனிடம் மற்றொரு தோழன் பேசுவது போல் பேசுங்கள்."

14. இதற்கும் அந்தச் சோதரர்கள மவுனமாய் இருந்தனர்.

15. அதன்பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் மேன்மைதங்கிய புத்தரிடம் உரைத்தார். "ஐயன்மீர்! புதுமை இது! பேரற்புதம் இது! ஐயன்மீர்! நான் இவ்வாறாக உறுதிகொள்கிறேன். ஐயன்மீர்! ஈண்டுள சோதர பிக்கு ஒருவருக்கும் புத்தர் பற்றியோ, அல்லது தம்மம் பற்றியோ அல்லது சங்கம் பற்றியோ அல்லது நெறியைப்பற்றியோ, அல்லது நெறிக்கான முறைய்பற்றியோ ஐயமோ, குழப்பமே ஏதுமேயில்லை."

16. "ஆனந்தரே! தாங்கள் உறுதிப்பாட்டை உரைக்கிறீர்கள். ஆனால் ததாகதர் உண்மை நிலையை அறிந்திருக்கிறார். சோதர பிக்கு ஒருவருக்குக் கூட இதுபற்றி ஐயமோ, குழப்பமோ இல்லவே இல்லை. என்னுடைய இந்த ஐந்நூறு சோதரர்களிலும், ஆனந்தரே, மிகப்பின்தங்கிய ஒருவர் கூட வெற்றி வீரரே-வீழ்ச்சியின்று பாதுகாப்பு உறுதிபெற்றவரே உயர் பேறிவெய்த உறுதி பெற்றவரே."

17. அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தர் சோதரர்களிடம் உரைத்தார்.

18. சோதரர்களே! வாருங்கள்! நான் உங்களுக்கு நிவூட்டுகிறேன், 'கூட்டுப் பொருள்கள் அனைத்தும் அழிவுக்குரியவையே' எல்லையற்ற கவனமுடையோராய் இருங்கள் நீங்கள்.

19. இவைகளே மேன்மைத்தங்கிய புத்தரின் இறுதிச் சொற்களாய் இருந்தன.

## 4. வருத்தத்தின் பிடியில் ஆனந்தர்.

1. வயது ஆக, ஆக உயர்வெய்திய புத்தருக்கு, அவரைக் கவனித்துக் கொள்ளத் தனித்துணை தேவையாயிற்று.

2. முதலில் அவர் நந்தரைத் தெரிவு செய்தார். நந்தருக்குப்பின் ஆனந்தரைத் தெரிவு செய்தார்.- அவர் புத்தருடைய மறைவுவரை அவருடைய தனித்துணைவராய்த் தொண்ாற்றினார்.

3. ஆனந்தர் வெறும் துணையாளாய் மட்டுமில்லாமற் எப்போது உடனிருக்கும் உவப்பிற்குரிய துணைவராகவும் இருந்தார்.

4. உயர்வெய்திய புத்தர் குஷனாராவிற்கு வந்துற்று சால்மரங்களுக்கிடையே ஓய்வெடுத்தபோது, அவருடைய இறுதிக்காலம் நெருங்கிவிட்டதை அறிந்து, ஆனந்தரைத் தனியே அழைத்துப்பேச உற்றநேரம் அதுவென உணர்ந்தார்.

5. எனவே அவர் ஆனந்தரை அழைத்து உரைத்தார். "ஆனந்தரே! இன்றிரவு மூன்றாம் சாமத்தில், குஷினாராவின் உபவனத்தில், இணையான இரு சால்மரங்களுக்கிடையே தாகதரின் மறைவு நேரவுள்ளது."

6. அவர் இவ்வாறுரைத்தபின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் உயர்வெய்திய புத்தரிடம் உரைத்தார். "ஐயன்மீர்! கல்பமுழுதும் உயிருடனிருக்கத் தயை கூருங்கள். ஓ! உயர்வெய்திய புததரே!-எண்ணற்ற மக்கள்தம் நன்மைக்காகவும், இன்பத்திற்காகவும்,இவ்வுலகின்பால் கொண்ட இருக்கத்தாலும், உய்வுற்ற, உய்வுறாத மானுடர்தம் நன்மைக்காகவும், நலத்திற்காகவும்."

7. மும்முறை ஆனந்தர் இவ்வாறு வற்புறுத்தினார். "போதும் ஆனந்தரே! ததாகதரை கெஞ்சாதீர்கள்?" என்பதே பதிலாயிருந்தது. "இத்தகைய வேண்டுகோளை விடத்தக்க காலம் கடந்து விட்டது."

8. "ஆனந்தரே! இப்போது நான் முதுமையடைந்து விட்டேன்-ஆண்டுகள் நிறைந்தன. என் பயணம் இறுதியை நெருங்கிவிட்டது. என் வாழ்நாட்கள் முழுமையையும் நான் அடைந்து விட்டேன். இப்போது எனக்கு எண்பது வயதாகிறது, பழுதடைந்த வண்டி ஒதுங்கியே ஆகவேண்டும். ததாகதரின் உடலுக்கும் அதுவே நேரவேண்டுமென நான் எண்ணுகிறேன்."இதைக் கேட்ட ஆனந்தர் வெளிப்பட்டார்.

9. ஆனந்தரைக் காணாமையால், உயர்வெய்திய புத்தர் சோதரரை விளித்து உரைத்தர். "ஆனந்தர் எங்குற்றார்?" போற்றுதலுக்குரிய ஆனந்தர் அழுது கொண்டே சென்றுவிட்டார். என்றனர் சோதரர்கள்.

10. உயர்வெய்திய புத்தர் ஒரு குறிப்பிட்ட சோதரை அழைத்து உரைத்தா்ர. "சோதரரே! இப்போது சென்று என் பெயரால் ஆனந்தரை அழைத்துக் கூறுங்கள், 'சோதரர் ஆனந்தரே! போதகர் தங்களை அழைக்கிறார்.'

11. "அப்படியே ஆகட்டும் ஐயன் மீர்!" என்றார் அந்தச் சோதரர்.

12. ஆனந்தர் திரும்பி வந்ததும், உயர்வெய்திய புத்தருக்கருகே தன் இருக்கையில் அமர்ந்தார்.

13. அதன்பின் உயர்வெய்திய புத்தர் ஆனந்தரிடம் உரைத்தார், "போதும் ஆனந்தரே! அழாதீர்கள்! முன்னரே சில சமயங்களில், நமக்கு நெருக்கமும் விருப்பும் மிக்கவர் தம்மிடையே, தமக்குள் பிரிதலென்பதும், விட்டு நீங்குதல் என்பதும், நீத்தலென்பதும் மிகவும் இயல்பானதென நான் ஏற்கனவே உமக்கு உரைத்துள்ளேனன்றோ?"

14. "வெகுகாலமாய், ஆனந்தரே, தாங்கள் தங்கள் அளவற்ற அன்பின் செயல்களால், இரக்கத்தால், நன்னெறியால் எனக்கு மிகவும் நெருக்கமாயிருந்தீர்கள்."

15. "ஆனந்தரே! நீங்கள் நன்கு புரிந்தீர்கள் முயற்சியில் முனைப்புள நீங்களும் சில தீமைகளிலிருந்து விடுபட்டாக வேண்டும்-உணர்ச்சிவயப்படல், தன்னிலையுறல், துயருறல், அறியாமை ஆகியவற்றினின்று."

16. அதன்பின் உயர்வெய்திய புத்தர் ஆனந்தரைப் பற்றிச் சோதரர்களிடம் உரைத்தார்: "ஆனந்தர் பேரறிவாளர்-சோதரரே!"

17. "ததாகததரைச் சந்திக்கத் தக்க சமயம் எதுவென அவர் நன்கறிவார்-சங்கத்தின் சோதரர்க்கும், சோதரிகட்கும், உண்மையான அன்புடன் வருவோரான, ஆடவர்க்கும் பெண்டிர்க்கும், அரசர்க்கும், அல்லது அரசர்தம் அமைச்சர்க்கும், போதகர்க்கும் சீடர்க்கும் ததாகததரைச் சந்திக்க தக்க சமயம் எதுவென அவர் நன்கறிவாார்."

18. "சோதரரே! ஆனந்திரிடம் நான்கு தனிச்சிறப்புகள் உள்ளன."

19. "ஆனந்தரைச் சந்திக்கும் எவரும் இன்புறுவர், அவரைக் காண்பதால் மகிழ்ச்சியில் திளைப்பர். அவருரை கேட்க இன்புறுவர். ஆனந்தர் மவுனமாயிருக்கையில் அவர்கள் மனவுலைவுறுவர்."

20. இதன்பின் ஆனந்தர் மீண்டும் ததாகதர் இறப்பது குறித்த விஷயத்திற்குத் திரும்பினார். உயர்வெய்திய புத்தரை நோக்கி அவர் உரைத்தார்."உயர்வெய்திய புத்தர் ஈண்டு மரங்களடர்ந்த மாசுற்ற காட்டு நகரத்தில் இயற்கைய்த வேண்டாம் ஐயன்மீருக்காக சம்பா, இராஜகிரஹம், சாவதி, சாகேதம், கோசாம்பீ, மற்றும் பெனரஸ் போன்ற பெருநகரங்கள் உள்ளன. அவற்றிலொன்றில் உயர்வெய்திய புத்தர் பரிநிப்பானம் எய்தலாமே."

21. "ஆனந்தரே! அவ்வாறு கூறாதீர்கள்! ஆனந்தரே! அவ்வாறு கூறரீர்கள். ஆனந்தரே! இந்தக் குஷினாரா மஹா சுதச்சனா என்னும் மாமன்னரின் தலைநகரமாயிருந்த பொருமையுடையது-கேஷவதி என்னும் பெயரில்."

22. அதன்பின் உயர்வெய்திய புத்தர் ஆனந்தருக்கு இரு கட்டளைகள் இட்டார்.

23. உயர்வெய்திய புத்தர் அவருக்குச் சுந்தா அளித்த உணவின் விளைவாகத்தான் இறந்தார் என்னும் நம்பிக்கை பரவாமல் பார்த்துக் கொள்ளுமாறு ஆனந்தருக்கு அவர் உரைத்தார். இதனால் சுந்தா பாதிக்கப்படுவார் என அவர் அஞ்சினார். இந்த விஷயத்தில் மக்களின் மனத்தைத் தெளிவிக்கும் படி ஆனந்தருக்கு உரைத்தார் அவர்.

24. உயர்வெய்திய புத்தர் ஆங்கு வந்தற்றிருப்பதையும், அன்றிரவு கடைச்சாமத்தில் அவர் பரிநிப்பானம் அடையவிருப்பதையும் மல்லர்களுக்கு அறிவிக்கும் படி, இரண்டாவது கட்டளையாக ஆனந்தருக்கு உரைத்தார் அவர்.

25. "தாங்கள் பழிச் சொல்லுக்கு இடம் தராதீர்கள். மல்லர்கள் சொல்லக்கூடும்: எங்கள் சொந்தக் கிராமத்தில் ததாகதர் இயற்கை எய்தியிருந்தும், நாங்கள் அறியவில்லையே-இறுதி நேரத்தில் அவரைக் காணும் வாய்ப்பு எமக்கு இல்லாமல் போயிற்றே."

26. அதன் பின் போற்றுதலுக்குரிய அனுருத்தாவும், போற்றுதலுக்குரிய ஆனந்தரும் அவ்விரவின் மிகுதியை சமயப் பேருரைகளில் கழித்தான்.

27. இரவின் மூன்றாம் சாமத்தில், முன்னமே அறிவித்திருந்த படி உயர்வெய்திய புத்தர் பரிநிப்பானமடைந்தார்.

28. உயர்வெய்திய புத்தர் இறந்ததும், சோதரரும், ஆனந்தரும் தம் கரங்களை உயர்த்திக் கதறினர்-சிலர் நெடுஞசாண் கிடையாய் நிலத்தில் வீழ்ந்து மிகுந்தவேதனையில் ஆங்குமிங்கும் புரண்டு அழுதபடி கூறினர். "உயர்வெய்திய புத்தர் இரப்பினின்றும் மிக விரைவில் மறைந்து விட்டாரே! உலகினை விட்டு ஒளிமிக விரைந்து மறைந்து விட்டதே!"

29. வைஷாக பவுர்ணமி நள்ளிரவு நேரத்தில் உயர்வெய்திய புத்தர் மகா பரிநிப்பானம் எய்தினார். அவர் மறைவுற்ற ஆண்டு கி.மு.483 ஆகும்.

30. உண்மையில் பாலிநூல் உரைக்கின்றவாறு:

திவா தபதி ஆதிச்சோ
ரதின் ஆபாதி சந்திமா
சன்னத்தோ கதியோ தபதி
ஜாயீ தபதி பிராமணோ
அத சப்பயின் அஹாராத்தின்
புத்தோ தபதி தேஜஸா

31. ஞாயிரோ பகலில் மட்டுமே ஒளிரும்
நிலவோ இரவில் மட்டுமே ஒளிரும்
வீரனோ கவசம் தன்னிலே ஒளிர்வான்
தவசிகள் ஒளிர்வது தியானத்தில் மட்டுமே
ஆயினும் புத்தரோ,
பகலிலும் ஒளிர்வார் இரவிலும் ஒளிர்வார்
புகழெனும் தம்முடைப் போரொளி யாலே!

32. ஐயமின்று அவரே உலகின் ஒளியாவார்.

## 5. மல்லர்களின் புலம்பலும் ஒரு பிக்குவின் மகிழ்ச்சியும்

1. உயர்வெய்திய புத்தரின் விருப்பத்திற்கேற்ப, ஆனந்தர் சென்று நிகழ்ந்தவை பற்றி மல்லர்களுக்கு அறிவித்தார்.

2. இதைக் கேள்வியுற்றதும் மல்லர்களும், அவர்தம் மனைவியரும், இளைஞரும், யுவதிகளும் துன்புற்று வருந்தி மனவேதனையுற்றனர்.

3. அவர்களில் சிலர் தலைவிரி கோலமாய் - கைகளை உயர்த்தி-நிலத்தில் நெடுக வீழ்ந்து அழுது புலம்பினர்.

4. அதன்பின் மல்லர்கள், தம் இளைஞரோடும், பெண்களோடும், மனைவியரோடும் உபவனத்தில் சாலமரத் தோப்பிற்குச் சென்றனர்-உயர்வெய்திய புத்தரைக் கடைசியாய்க் காண.

5. அதன் பின் போற்றுதலுக்குரிய ஆனந்தர் எண்ணினார், "குஷினாராவின் மல்லர்களை ஒவ்வொருவராக அனுமதிப் போமாயின், அவர்கள் உயர்வெய்திய புத்தரின் உடலுக்கு அஞ்சலி செலுத்த மிக அதிகநேரமாகும்."

6. எனவே அவர் அவர்களை குழுக்களாக, குடும்பம் குடும்பமாய் சென்று காணும் வண்ணம் ஏற்பாடு செய்யத் தீர்மானித்தார். அதன்படி ஒவ்வொரு குடும்பத்தினரும் உயர்வெய்திய புத்தரின் பாதங்களில் பணிந்து கடந்தனர்.

7. அச்சமயத்தில் போற்றுதலுக்குரிய மஹா காஸ்ஸப்ப பாவாவிலிருந்து, குஷினாரா செல்லும் நெடுஞ்சாலையில் பெர்ும் சோதரப் பரிவாரத்துடன் பயணித்துக் கொண்டிருந்தார்.

8. அச்சமயத்தில் ஒரு குறிப்பிட்ட நிர்வாணத்துறவி பாவாவை நோக்கிவரும் நெடுஞ்சாலையில் வந்து கொண்டிருந்தார்.

9. அப்போது போற்றுதலுக்குரிய மஹாகாஸ்ஸப்பர் அந்த நிர்வாணத் துறவியை தூரத்திலேயே கண்டார். அவரைக் கண்டதும் அவர் அந்த நிர்வாணத்துறவியிடம் கூறினார். "ஓ! நண்பரே! நிச்சயமாக நீங்கள் எங்கள் குருவை அறிவீர்கள் அல்லவா?"

10. "ஆம் நண்பரே! நான் அவரை அறிவேன்." இன்று சாமண கவுதமர் இறந்து ஒரு வாரமாகிறது."

11. "இதைக் கேள்வியுற்ற உடனே சோதரர்கள் துயர் மேலிட்டு அழத் தொடங்கினர்."

12. அப்போது, அச்சமயத்தில, தம் முதுமையில் சங்கத்திற்குள் ஏற்றுக் கொள்ளப்பட்ட சுபத்தர் என்னும் பெயரிய ஒரு சோதரர், அவர்களின் கூட்டடத்தில் அமர்ந்திருந்தார்.

13. சுபந்தர் சோதரர்களை விளித்து உரைத்தார். "போதும் சோதரரே! அழாதீர்! வருந்தாதீர்! மாபெரும் சாமணிரிடமிருந்து நாம் நன்கு விடுவிக்கப்பட்டு விட்டோம். 'இது உமக்குத் தக்கது-இது உமக்குத் தகாதது என உரைக்கப்படும் தொந்தரவு நமக்கிருந்தது. ஆனால் இப்போது நாம் விரும்புவனவற்றை நாம் செய்ய இயலும். விரும்பாதனவற்றைச் செய்யாமலிருக்கலாம்! அவர் மறைந்தது நன்மையேயன்றோ? ஏன் அழவேண்டும்? ஏன் புலம்பவேண்டும்? இது மகிழ்ச்சிக்குரிய செய்தியே.

14. "உயர்வெய்திய புத்தர் அவ்வளவு பெரிய கடினமான ஒழுக்கவாதியாயிருந்தார்."

6. இறுதி மரியாதை

1. பின் குஷினாராவின் மல்லர்கள் போற்றுதலுக்குரிய ஆனந்தரிடம் கூறினார். "ததாகதரின் எச்சத்தைக் கொண்டு நாம் என்ன செய்ய வேண்டும்?"

2. "அரசருக்கரசரின் எச்சங்களைக் கொண்டு மக்கள் செயவது போலவே, தாங்களும் ததாகதரின் எச்சத்தையும் கொண்டு செய்யுங்கள்" என்று பதிலிறுத்தார் ஆனந்தர்.

3. "அரசருக்கரசரின் இறந்த உடலைக் கொண்டு அவர்கள் என்ன செய்வார்கள்?"

4. ஆனந்தர் அவர்களுக்குரைத்தார், "அவர்கள் அரசருக்கரசரின் உடலை புது ஆடையால் மூடுவர். இது முடிந்ததும் பஞ்சுப்பொதியால் அவர்கள் மூடுவர். இது முடிந்ததும் புதிய துணியால் மூடுவர், இப்படியே ஐந்நூறு படிகள் இருவகையாலும் ஆகும்வரை மூடுவர். அதன்பின் உடலை இருப்பாலான எண்ணெயக் கொப்பரையில் இட்டு, மற்றொரு எண்ணைய்க கொப்பரையால் மூடுவர். அதன்பின் அனைத்து வகையான எரிசூளை அமைப்பர். அரசருக்கரசரின் எச்சங்களை இவ்வாறே செய்வர்."

5. "அவ்வாறே ஆகட்டும்." என்றனர் மல்லர்கள்.

6. அதன்பின் குஷினாராவின் மல்லர்கள் கூறினர், "உயர்வெய்திய புத்தரின் உடலுக்கு எரியூட்ட இன்று அதிக தாமதமாகிவிட்டது. நாம் எரியூட்டலை நாளை செய்யலாம்."

7. பின் குஷினாராவின் மல்லர்கள் தம் ஆட்களுக்கு உத்தரவிட்டுரைத்தனர், "ததாகதரின் இறுதிநிகழ்விற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். நறுமணத்திரவியங்களையும் மலர் மாலைகளையும் சேகரியுங்கள். குஷினாராவிலிருந்து இசைவாணர்களை அழைத்து வாருங்கள்."

8. ஆயினும், ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும், இசையோடும், மலர்மாலைகளோடும், நறுமணத்திரவியங்களோடும்-தங்கள் ஆடைகளால் விதானம் அமைத்தும், மலர்வளையங்கள் அளிக்க அலங்கரிப்பதும் ததாகதரின் உடலுக்கு மரியாதை செலுத்துவதிலும் போற்றுவதிலும் அஞ்சலி செலுத்துவதிலும் இரண்டாம் நாளையும், மூன்றாம் நாளையும், நான்காம் நாளையும், ஐந்தாம் நாளையும், ஆறாம் நாளையும் கூடக் கடத்திவிட்டனர் அவர்கள்.

9. அதன்பின் ஏழாம் நாளில் குஷினாராவின் மல்லர்கள் எண்ணினர், "உயர்வெய்திய புத்தரின் உடலைக் கொண்டு சென்று எரியூட்டும் செய்கை புரியலாம்."

10. அதன்படி மல்லர்களிடையில் எட்டுத்தலைவர்கள் உயர்வெய்திய புத்தரின் உடலைச் சுமக்கும் பல்லக்கைத் தூக்குபாவர்களாய்ப பணியாற்றும் நோக்குடன் தலைமுழுகிப் புத்தாடை அணிந்தனர்.

11. அவர்கள் புத்தரின் உடலை மல்லர்களின மகுட-பந்தனம் என்றழைக்கப்பட்ட சைத்யபூமிக்கு எடுத்துச் சென்றனர்; நகரின் கிழக்கே, ஆங்கு உயர்வெய்திய புத்தரின் உடலைக் கிடத்தி எரியூட்டினர்.

12. சிறிது நேரம் கழித்து உயர்வெய்திய புத்தரின் உடல் அமைதியாய் ஆனது.

7. அஸ்திக்கான சச்சரவு

1. உயர்வெய்திய புத்தரின் உடல் தீயால் சுவீகரிப்பட்டபின், குஷினாராவின் மல்லர்கள் எஞ்சிய அஸ்தியையும், எழும்புகளையும் அவர்களுடைய சபைக்கூடத்தில் ஈட்டிகளைச் சட்டமிட்டும் வில்களால் அரணிட்டும் இருத்திவைத்து அவற்றையோ, அவற்றின் எந்தப் பகுதியையுமோ யாரும் களவாடிவிடாமல் காத்தனர்.

2. மல்லர்கள் ஏழு நாட்களுக்குப் போற்றுதலோடும் மரியாதையோடும், ஆடிப்பாடி, இசையோடும், மலர்மாலைகளோடும், நறுமணத்திரவியங்களோடும் அதற்கு அஞ்சலி செலுத்தினர்.

3. அவ்வமயம், மகத மாமன்னமா அஜாதசத்ரு குஷினாராவில் உயர்வெய்திய புத்தர் இயற்கையெய்திய செய்தியைக் கேள்வியுற்றார்.

4. எனவே அவர், உயர்வெய்திய புத்தரின் அஸ்தியில் ஒரு பகுதியை வேண்டி, மல்லர்களுக்குத் தூதனுப்பினார்.

5. அதேபோல, வைஷாலியின் லிச்சாவியரிடமிருந்தும், கபிலவஸ்துவின் சாக்கியர்களிடமிருந்தும், அத்தகப்பவின் பூலியர்களிடமிருந்தும், இராமகாமவின் கோலியர்களிடமிருந்தும், பாவாவின் மல்லர்களிடமிருந்தும் தூதர்கள் வந்தனர்.

6. அஸ்திக்கான உரிமை கொண்டாடியவர்களில் ஆங்கு வேத தீப என்னும் பிராமணர் கூட இருந்தார்.

7. இந்த உரிமைக்கோரல்களைக் கேள்வியுற்ற குஷினாராவின் மல்லர்கள் கூறினர். "உயர்வெய்திய புத்தர் எங்கள் கிராமத்தில் இறந்தார். உயர்வெய்திய புத்தரின் எச்சத்தின் பகுதி எதையும் நாங்கள் தரமாட்டோம். அவைகள் எமக்கு உரித்தானவை."

8. நிலைமை கடுமையாவதைக் கண்ட த்ரோணா என்னும் பெயரிய பிராமணர் குறுக்கிட்டுக் கூறினார், மேமைத்தங்கிய ஐயன்மீர்! என்னிடமிருந்து ஒரு சொல் கேளுங்கள்."

9. த்ரோணா கூறினார்."நம் புத்தர் போதித்தது பொறையுடைமையை, மானுடரில் மிகச்சிறந்தவரான அவருடைய அஸ்தியைப் பகிர்ந்து கொள்வதற்காக, பேதங்கள் எழுந்து காயங்களும், சண்டையும் நிகழ்வது பொருத்தமாய்த் தோன்றவில்லை."

10. "நாமனைவரும் தோழமையான ஒற்றமையோடு ஒரே நோக்கோடிணைந்து எட்டுப்பகுதிகளாய் அஸ்தியைப் பிரிப்போம். உயர்பேரறிவெய்திய புத்தரை அனைத்துப் பகுதி மக்களும் போற்றும் வண்ணம் அனைத்து நிலப்பகுதிகளிலும் பரந்த ஸ்தூபங்களை எழுப்புவோம்."

11. குஷினாராவின் மல்லர்கள் ஒப்புக் கொண்டு உரைத்தனர், "ஓ! பிராமணரே! தாங்களே எஞ்சியுள்ள அஸ்தியை, நல்லவிதமாய் எட்டுப்பகுதிகளாகப் பகிார்ந்திடுங்கள்."

12. "அவ்வாறே ஆகட்டும் ஐயன்மீர்" ஒப்புதலாக உரைத்தார் துரோணா.

13. அதன்பின் எட்டுப்பகுதியாய சமமாய் அஸ்தியைப் பகிர்ந்தார்.

14. பகிர்ந்த பின் துரோணா அவர்களிடம் கூறினார். "எனக்கு இந்தக் கலயத்தைத் தாருங்கள் ஐயன்மீர்! அதன்மீது நான் ஒரு ஸ்தூபத்தை எழுப்புவேன்."

15. அவர்கள் அவரிடம் ஒரு கலயத்தை அளிக்க ஒப்பினர்.

16. இவ்வாறாக உயர்வெய்திய புத்தரின் அஸ்தி பகிர்வு செய்யப்பட்டு, சச்சரவு அமைதியாகவும் நியாயமாகவும் தீர்க்கப்பட்டது.

8. புத்தரின் பால் பேரன்பு

1. இந்த (நிகழ்வுகளின்) தளம் ஷ்ராவஸதியாய் இருந்தது....

2. அச்சமயத்தில் ஏதோ ஓர் காரியமாகவோ, வேறெதற்காகவோ இசிதத்த, புராண ஆகிய இரு பிரபுக்கள் சாதுகாவில் தங்கியிருந்தனர். அப்போது அவர்கள் செய்தியைக் கேள்வியுற்றனர். "எண்ணற்ற பிக்குகள் மேன்மைத்தங்கிய புத்தருக்காக ஒரு துவராடையை உருவாக்குவதில் ஈடுபட்டுள்ளனர்-இக்கருத்தோடு, இந்தத் துவராடை தயாரானதும், மூன்று மாத காலத்தில் மேன்மைத்தங்கிய புத்தர் தம் பயணத்தை மேற்கொள்வார்."

4. எனவே பிரபுக்களான இசிதத்தவும், புராணவும் நெடுஞ்சாலையில் ஒருவரை நிறுத்திவைத்தனர். (இவ்வாறு கூறி) "இப்போது நல்லோரே, அரஹத்தாம் மேன்மைத்தங்கிய புத்தராம், நிறைவெய்திய உயர்பேரறிவெய்தியவர் வருகையில், எங்களுக்கு வந்து அறியுங்கள்."

5. எனவே ஆங்கு இரண்டு மூன்று நாட்கள் நின்றிருந்த அம்மனிதர், மேன்மைத்தங்கிய புத்தர் வருவதைக் கண்டு சற்று தூரத்திலிருக்கும் போதே பிரபுக்கள் இசிதத்த, புராண ஆகியோரிடம் சென்று கூறினாா. "இதோ என் புத்தர்-அரஹத்-நிறைவான பேரறிவெய்தியவர் வருகைப் புரிகிறார்! நிறைவான பேரறிவெய்தியவர் வருகைப் புரிகிறார்!"நீங்கள் சென்று தாங்கள் விரும்பியவற்றை செய்யலாம்."

6. எனவே பிரபுக்களான இசித்தவும், புராணவும் மேன்மைத்தங்கிய புத்தரை நோக்கிச் சென்று, அவரிடம் வந்துற்றதும், மேன்மைத்தங்கிய புத்தரை வணங்கி, மேன்மைத் தங்கிய புத்தரை அடிமேல் அடிவைத்துப் பின்தொடர்ந்தனர்.

7. அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தர் நெடுஞ்சாலையிலிருந்து ஒருபுறம் திரும்பி ஒரு குறிப்பிட்ட மரத்தின் அடிக்குச் சென்று ஆங்கு அவருக்கென இடப்பட்ட ஆசனத்தில் அமாந்தார். இசிதத்த புராண ஆகிய பிரபுக்கள் மேன்மைத்தங்கிய புத்தரை வணங்கி, ஓர்புறம் அவர்களும் அமர்ந்தனர். அவர்கள் அமர்ந்த பின் மேன்மைத்தங்கிய புத்தரிடம் இவற்றைக் கூறினர்.

8. "ஐயன்மீர்! மேன்மைத்தங்கிய புத்தர் கோசலர்கள் இடையே பயணிக்கப் போவதாய்க் கேள்வியுற்ற சமயத்தில் நாங்கள் ஏமாற்றமுற்று, மேன்மைத்தங்கிய புத்தர் எங்களை விட்டு வெகு தெலைவிலிருப்பாரே' என்று எண்ணிச் சோர்ந்தோம்.

9. ஐயன்மீர்! மேன்மைத்தங்கிய புத்தர், கோசலர்களிடை பயணிப்பதற்காக ஸ்ஷராவஸ்தியை விட்டுப் புறப்பட்டதாக அறிந்த போது மீண்டும் நாங்கள், 'மேன்மைத் தங்கிய புத்தர் எங்களை விட்டு வெகு தொலைவிலிருப்பாரே' என எண்ணி ஏமாற்றமடைந்து சோர்வுற்றோம்.

10. "மேலும், ஐயன்மீர்! மேன்மைத்தங்கிய புத்தர் கோசலர்களை விட்டு மல்லர்கள் இடையே பயணிக்கச் செல்வார் என நாங்கள் அறிந்தபோதும்...உண்மையில் அவர் அவ்வாறே செய்த போதும்..நாங்கள் ஏமாற்றமடைந்து சோர்வுற்றோம்."

11. "மேன்மைத்தங்கிய புத்தர் மல்லர்களை விட்டு வஜ்ஜினர்களிடைப் பயணிப்பாரென்று... உண்மையில் அவர் அப்படித் தான் செய்தார்...அவர் வஜ்ஜியை விட்டு காசிக்குச் சென்ற போதும்...உண்மையில் அப்படித்தான் செய்தார்...மீண்டும் நாங்கள் ஏமாற்றமுற்றுச் சோர்வடைந்தோம்."

12. "ஆயினும், ஐயன்மீர்! மேன்மைத்தங்கிய புத்தர் மகதர்களை விட்டுக் காசிக்குச் செல்வதாக நாங்கள் கேள்வியுற்றதும், அவர் அப்படிச் செய்தபோதும், நாங்கள் மகிழ்வுற்றுப் பெருமை கொண்டோம், மேன்மைத்தங்கிய புத்தர் நமக்கு மிகவும் அருகில் இருப்பார் என்று எண்ணி."

13. உண்மையில் அவர் காசியில், மகதரிடையே பயணிக்கிறார் என நாங்கள் கேள்வியுற்றதும், அதேபோல் நாங்கள் மகிழ்ச்சியுற்றுப் பெருமை கொண்டோம்.

14. (இதே போன்ற சொற்களால் அவர்கள் போதகரின் காசி முதல் வஜ்ஜி வரை ...வஜ்ஜி முதல் மல்லர் வரை...மல்லர் முதல் கோசலர் வரையான பயணத்தை அடியொற்றித் தொடர்ந்து விவரிக்கலாயினர்).

15. "ஆயினும், ஐயன்மீர் மேன்மைத்தங்கிய புத்தர், கோசலர்களிடமிருந்து ஷ்ராவஸ்திக்குப் பயணித்து வருவதைக் கேள்வியுற்று நாங்கள் மகிழ்ச்சியுற்றுப் பெருமை கொண்டோம், 'இப்போது மேன்மைத்தங்கிய புத்தர் எமக்கு மிக அருகில் இருப்பார்!' என்று எண்ணி.

16. "அதன்பின், நாங்கள் மேன்மைத் தங்கிய புத்தர் ஷ்ராவஸ்தியில், ஜேதவனத்தில் அநாதபிண்டிகரின் சோலையில் தங்கியிருப்பதாகக் கேள்வியுற்ற போது, ஐயன்மீர்! எங்கள் மகிழ்ச்சிக்கு அளவில்லை-எங்கள் பெருமைக்கு எல்லையில்லை-'மேன்மைத்தங்கிய புத்ர் எம்மருகில் உள்ளார்.' என்ற எண்ணத்தில்.

## சித்தார்த்த கவுதமர் என்ற மாமனிதர்

### அவருடைய ஆளுமை

#### 1. அவருடைய தனிப் பெருந்தோற்ச் சிறப்பு

1. கிடைத்த தகவல்கள் அனைத்தின் படியும் உயர்வெய்திய புத்தர் அழகு மிக வாய்ந்தவர்.

2. பொன்மலைச் சிகரம் போன்றதவர் வடிவும், அவர் உயரமாய், வலுமிக்கவராய் இருந்தார், மகிழ்ச்சித் ததும்பும் தோற்றத்தோடே

3. அவர்தம் நெடிய தோள்களும், சிங்க நடையும், வேழ நோக்ககும் அவர்தம் அழகும், பொன்னென ஒளிரும் பரந்தநல்மார்பும், எவரையும் அவர்பால் கவர்வதாய் இருந்தன.

4. அவர் புருவத்தை, நெற்றியை, வாயிதழ்களை, உடலை, கரங்களை, கால்களை, நடையை-எவ்வெவற்றை எவர் நோக்கினும் அவ்வவற்றில் நிலைக்கும் கண்டார்தம் கண்களின் பார்வை.

5. அவரைக் காண்பவர் எவராயினும் அவர், புத்தருடைய, மற்றெவரையும், விஞ்சுவதான கம்பீரத்தாலும், அவர்தம் ஆற்றலாலும், மிகச்சிறந்த அழகாலும் தாக்குறாமலிருக்க வியலாது.

6. எங்கோ சென்று கொண்டிருப்பவர் அவரைக் கண்டதும் நிற்பர்-நின்ற கொண்டிருப்பவர் அவரைத் தொடர்வர். மெதுவாய், ஆர அமர நடப்பவர் விரைந்தோடி வருவர்-அமர்ந்து கொண்டிருப்பவர் உடனே துள்ளி எழுவர்.

7. அவரைக் கண்டவர்களில் சிலர் கைகூப்பி வணங்குவர், பிறர் வணக்கத்தால் தலைதாழ்த்திடுவர், சிலர் பாசம்மிக்க சொற்களால் அவரை விளிப்பர்-எவரொருவரும் அவருக்கு வந்தனம் செலுத்தாமல் செலவதில்லை.

8. அவர் அனைவராலும் நேசிக்கவும், மதிக்கவும்பட்டார்.

9. ஆண்களும், அவ்வண்ணமே பெண்களும் எப்போதும் அவர் உரைகேட்கத் தயாராய்க் காத்திருந்தனர்.

10. அவர் குரல் தனிச்சிறப்பான இனிமையுடையதாய், பேரிகையின் நாதமென ஈர்த்ததாய், வசீகரம் மிக்கதாய், துள்ளலும், தொய்வின்மையும் உடையதாய் விளங்கியது. இக்குரல் அவர் உரைகளை உன்னதப் பேரிசையாய் ஆக்கியது.

11. அவர் குரலினிமையே கேட்போரைப் பிணித்தது, அவர் தம் பார்வையே வியந்துபணியத் தூண்டியது.

12. அவர் தோற்றம் மட்டுமே கூட, அவரைத் தலைவராய் மட்டுமன்றி, பின்பற்றுவோரின் இதயத்திற்கிசைந்த ஏந்தலாயும் ஆக்கிடப் போதுமானதாயிருந்தது.

13. அவர் பேசுகையில் கேட்போரைத் திரட்டினார்.

14. அவர் யாது கூறுகிறார் என்பது கூட அத்துணை முக்கியமானதாயில்லை. அவருரை கேட்டோர் எவரையும், தன் விருப்பிற்கீர்த்து உணர்வினை உந்துபவராயிருந்தார் அவர்.

15. தன்னுரை கேட்டோரின் உள்ளத்தில், அவர் போதித்த வைகள் சரியானவை என்று மட்டுமின்றி, தம் தீர்வுக்கானவை என்றம் அவர்களை உணரச்செய்ய அவரால் முடிந்தது.

16. அடிமைகளை, விடுதலைபெற்ற மனிதர்களாய் ஆக்கும் உண்மையின் வலிவினை, அவர்தம் உரைகளைக் கேட்டோர். அவற்றில் கண்டுணர்ந்தனர்.

17. அவர் ஆண்களோடும், பெண்களோடும் உரையாடுகையில், அவர்தம் தூய பார்வை, அவர்களுக்குள் வியந்து பணிதலையும், பெருமதிப்பையும் உருவாக்கியது-அவர்தம் இன்குரல் அவர்களை பேரானந்தப் பெருமகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

18. கொள்ளையன் அங்குலிமாலாவையம், மனிதனையே கொன்று தின்னுபவனாயிருந்த ஆலவியையும் யாரால் தான் சமயமாற்றமுறச் செய்ய இயலும்? ஒரே சொல்லினால் அரசர் பசேஞ்சித்தையும் அரசி மல்லிகாவையும் உடன் பாடுறச் செய்ய எவரால் இயலும்? அவருடைய ஆளுகையின் கீழ் ஒரு முறை வந்தவர் எப்போதும் அவ்வாறே இருந்திடநேரும். அத்துனை வசீகரமானதாயிருந்தது அவர்தம் ஆளுமை.

2. கண்கண்ட சாட்சிகளின் சான்றுகள்

1. பாரம்பரியமாய்க் கூறப்படும் கருத்துக்கள், அவர் வாழுங்காலத்து அவரை நேரில் கண்டுணர்ந்த கண்கண்ட சாட்சிகளின் சான்றுகளால் வலுப்பெறுகின்றன.

2. அத்தகைய ஒரு கண்கண்ட சாட்சியாய் விளங்கியவர் சாலே என்னும் பெயரிய பிராமணர் ஒருவராவார். நேருக்கு நேர் புத்தரைக் கண்ணுற்ற காலை அவர் கீழ்வரும் சொற்களால் நம் உணர்வுகளை வெளிப்படுத்தினார்.

3. புத்தரின் நேரெதிர் வந்துற்று, அப்பிராமணர் அமர்ந்து, வந்தனத்திற்குப் பின், உயர்வுறு மாமனிதர்க்குரிய முப்பத்தியிரண்டு கண்ணுற்ற காலை அவர் கீழ்வரும் சொற்களால் தம் உணர்வுகளை வெளிப்படுத்தினார்.

4. அந்த முப்பத்தியிரண்டு அங்க அடையாளங்களும் புத்தருக்கிருப்பதை உறுதிப்படுத்திக் கொண்ட பிராமணர் சாலே, புத்தர் உயர்பேரறிவெய்தி விட்டாரா இல்லையா என்பதை இன்னும் அறியாமலிருந்தார். ஆனால் மூத்த முதிய பிராமணர்களும், குருக்களின் குருக்களும், அரஹத்களானோரும், உயர் பேரறிவெய்திய அனைவரும் தம்மைத்தாமே போற்றிப்புகழ்ந்து பாடி தம்மை வெளிப்படுத்துவர் என்று தான் கேள்வியுற்றதை நினைவுக்குக் கொண்டுவந்து அதன்மூலம் உயர்வெய்தயவர் என உணர்ந்து, கீழக்கண்ட புகழ்மொழிகளால் புத்தரை நேருக்கு நேர் மெச்சிப்புகலானார்.
5. ஐயன்மீர்! உம்முடல் அழகுற அமைநது வளர்ந்துள்ளது-மிகப்பொருத்தமுற, வெண்கலக் குரலும்,பளபளக்கும் வெண்முத்துப் பற்களும், முழுநிறைவுற உடலழகும் ஒவ்வொரு அங்க அடையாளமும் உம்மை உன்னத மாமனிதரெனவே வெளிப்படுத்துகின்றது.

6. "தெள்ளிய கண்களும், தெளிவுறு அழகும், பொருந்திய உயரமும், நேர் கொண்ட பார்வையும், சோதரர் இடையொரு சூரியப்பேரொளியாய், மிகுந்த மரியாதைக்குரியவராய், மிக்கினிய குரல்வளம் உடையவராய்-உள்ள நீவிர் ஏன் வீட்டைத் துறக்கும் நிலையேற்று, அழகின் அரும்புப் பருவத்தை வீணாக்கினீர்கள்.

7. "உலகப் பேரரசாய் நாட்டில் உலாவர வேண்டியவர் நீங்கள், ஒருகரையினின்று மறுகரைவரை கடல்லாம் உமது ஆளுகைக்குட்பட்டிருக்க வேண்டும். தங்கள் அரசாட்சியின் கீழுள்ள குறுமன்னரெல்லாம் பெருமிதம் கொள்ளவேண்டும். மானுடத்தைஇ அரசருக்கரசராய் நீவிர் ஆளவேண்டும்."

8. ஆனந்தர், புத்தரின் மேனிநிறத்தை மிகமிகத் தூயதும், மிக மிக ஒளிமயமானதும் ஆகும் என்றும், ஒரு ஜோடி பொன்னுடைகள் உயர்வெய்திய புத்தரால் அணியப்பட்டால், அவை தம் அழகினை இழக்குமெனத் தோன்றுவதாகவும் வர்ணிக்கிறார்.

9. அவர், அவருடைய எதிரிகளால் கவர்ச்சியான வசியக்காரர் எனக் கூறப்பட்டதில் வியப்பு ஏதுமில்லை.

3. அவர்தம் தலைமைதாங்கும் ஆற்றல்

1. சங்கம் அதிகாரபூர்வத் தலைமை ஏதும் உடையதாய் இல்லதிருந்தது. உயர்வெய்திய புத்தர் சங்கத்தின்மேல் அதிகார ஆதிக்கம் உடையவராய் இல்லை. சங்கம் தன்னைத்தானே ஆண்டுகொள்ளும் அமைப்பாயிருந்தது.

2. எவ்வாறாயினும், உயர்வெய்திய புத்தருக்குச் சங்கத்தின் பாலும், அதன் உறுப்பினர்கள் பாலும் இருந்த நிலையாது?

3. இதில் நாம் சகுல்தை, உதய் ஆகிய உயர்வெய்திய புத்தரின் சமகாலத்தவர்களின் சான்றுகளைப் பெற்றுள்ளோம்.

4. ஒருமுறை புத்தர் இராஜகிரஹத்தில் மூங்கில் தோப்பில் தங்கியிருந்தார்.

5. ஒரு காலைப்போதில் புத்தர் தானத்திற்காக இராஜகிஹத்திற்குச் சென்றார்-நேரம் மிகவும் அதிகாலையாய் இருந்ததை உணர்ந்து துறவோரின் மகிழ் சோலையில் தங்கியுள்ள சகுலதையைச் சந்திக்கச் செல்ல எண்ணினார், அதன்படி திரும்பினார்.

6. அச்சமயத்தில் உள்ளது-அல்லாதது பற்றிய விவாதத்தில் பேரோசை எழுப்பிக் கொண்டிருந்த துறவோரின் பெருங் கூட்டத்திடையே அமர்ந்திருந்தார். சகுல்தை.

7. தூரத்திலிருந்தபோதே, புத்தர் வருவதை, சகுல்தை கண்டு தம் கூட்டத்தை அமைதிப்படத்தியவாறு உரைத்தார். ஐயன்மீர்! அமைதியாயிருங்கள், துறவி கவுதமர் இங்கு வருகை புரிவதால் ஓசையேதும் எழுப்பாதீர். அவர் அமைதியை அவாவுறுகின்றவர்."

8. எனவே அவர்கள் அமைதியுற்றனர். புத்தர் வந்துற்றார். சகுல்தை கூறினார். "ஐயன்மீர் எங்களுடன் இணைக் கோருகிறோம், மெய்யான வரவேற்பை நல்குகிறோம் இவ்விடம் ஐயன்மீர் வந்துற்று, நெடுங்காலமாகிறது. ஐயன்மீர்! அமரவேண்டுகிறோம். புத்தரே! இருக்கை இதோ ஈங்குள்ளது."

9. புத்தர் அதன்படி அமர்ந்தவாறு, அவர் வருகையால் தடைப்பட்ட அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்த விஷயம் யாதென சகுல்தையிடம் வினவினார்.

10. "சற்று நேரம் அது ஓய்ந்திருக்கட்டும். சகுல்தை பதிலிறுத்தார். அவற்றைப் பின்னர் சுலபமாக நீவிர் அறிந்திடக் கூடும்."

11. சிறிதுநேரம் ஆன பின்னர், ஆங்கு மற்ற மதங்களைச் சார்ந்த முனிவர்களும் ரிஷிகளும் விவாத அரங்கத்தில் ஒன்றாய்க் கூடியபோது, இந்தத் தலைப்பு விவாதத்திற்கு வந்தது. மதப் பிரிவுகளின், அவற்றைப் பின்பற்றுவோரின தலைவர்கள், நன்கறியப்பட்ட புகழ் பெற்ற போதகர்கள், காவலனாய்க் கருத்தபடும் மதங்களின் நிறுவனர்கள், வெகு மக்களால் உயர்புகழுக்குரியோராய்க் கருதப்படும் முனிவர்கள், பிராமணர்கள்- அனைவரும் மழைக்காலத்தை இராஜகிரஹத்தில் கழிப்பதற்காக வந்திருக்கும் மழைக்காலத்தை

இராஜகிரஹத்தில் கழிப்பதற்காக வந்திருக்கும் அங்கதேச மகத மக்களுக்கு, எது எத்துனை நன்மையானது? எது எத்துனை மிகமிக நன்மையானது?

12. ஆங்கு புராண காஸ்ஸப்பர், மக்கலி கோசலர், அஜித் கேசகம்பளர், பகுதகச்சாயனர், சஞ்சய பெலய்புத்ரர், மற்றும் நிகந்தரான நாதபுத்தரர், எல்லோரும் பெருமைமிக்கவர்கள்-எல்லோரும் ஆங்கு மழைக்காக வந்துற்றவர்கள்-அவர்களிடையே ஆங்கு நன்கறியப்பட்டட புகழ்மிகு போதகர்-காக்கும் அரணாம் சமய நிறுவனர்-வெகுமக்களால் பெரிதும் போற்றப்பட்டவர். துறவி, கவுதமரும் அவர்தம் பரிவாரத்தின் தலைவராகவும், பின்பற்றுவோரோடும் இருந்தார்.

13. அப்போது, இவ்வகை முனிவர், துறவோர், பிராமணர் ஆகிய மிக்குயர் சிறப்புறு போதகர்களில் எவரெவர் தத்தம் சீடர்களால் வந்தனைக்குரியாராய் போற்றப்பட்டனர்? எவ்விதய மதிப்பும் மரியாதையும் உரியோராய் அவர்கள், அத்தகையோரோடு உடனுரைந்தனர்?

14. சிலர் கூறினர். "புராண காஸ்ஸப்பர் தம் சீடர்களிடமிருந்து எவ்வித மதிப்பையும் மரியாதையையும் பெற்றவரன்று.. அவருடன் மதிப்போ மரியாதையோ கொள்வதில் உடன் பாடற்றவராகவே உள்ளனர் அவர்கள்."

15. தம்மைப் பின்பற்றுவோரான சில நூறு பேர்களுக்குத் தம் கோட்பாடுகளை அவர் போதித்துக் கொண்டிரந்த வேளையில், ஒரு சீடர் புயலென உட்புகுந்து உரைக்கலானார். "புராண காஸ்ஸப்பரை ஒன்றும் கேட்காதீர்கள்-அவர் அவற்றைப் பற்றி ஒன்றும் அறியாதவராய் உள்ளார்-அனைத்தும் அறிந்துள்ள என்னைக் கேளுங்கள். மேன்மைத்தங்கிய உம் அனைவருக்கும் அவற்றை நன்கு நான் விளக்குவேன்.

16. விரிந்த கரங்களுடன், கண்ணீர் மல்கியபடி புராண காஸ்ஸப்பர் மீண்டம் உரக்க உரைக்காலானார். "பெரியீர்! அமைதியாயிருங்கள்-சத்தமிடாதீர்!"

அவர் தம் மனிதாபிமானம்

1. ஒருமுறை உயர்வெய்திய புத்தர் ஷ்ராவஸ்தியில் தங்கியிரந்த போது, தானமேற்கும் பிக்குகள் ஆங்கு வந்துற்று, தாம் தியானத்திலிருக்கையில் தம்மைத் தொந்தரவு செய்யும் தேவ என்பவரால் தாம் தொடர்ந்து துன்புறுத்தப்படுவதாக அவரிடம் தெரிவித்தனர்.

2. அவர்களின் துன்புறு படலத்தைக் கேடடறிந்த பின் உயர்வெய்திய புத்தர் அவர்களுக்குக் கீழக்கண்ட வழிமுறைகளை அளித்தர்.

3. எவரொருவர் தம் உயர்நிலைப் பயிற்சியில் திறன் மிக்கவரோ, எவர் அமைதி நிலையெய்த அவாவுகிறாரோ அவர் இவ்வாறு செயற்படவேண்டும். அவர் நல்லுரை, நன்னயம், நற்பணிவு ஆகியவற்றில் நிறைவுறு தேர்ச்சியுடையவராய், நிறைவு நிலைக்கருகுற்றவராய் இருத்தல் வேண்டும்.

4. திருப்பதியுற்றவராய், எளிதில் ஆதரிக்கத் தக்கவராய், பணிகள் சிலவே உடையவராய், எளிய வாழ்வினவராய், புலனடக்கம் உடையவராய், விழிப்புற்றவராய், ஆணவற்றவராய், பேராசையால் குடும்பத்தோடு பிணைக்கப்படாதவராய் இருத்தல் வேண்டும்.

5. மற்ற அறிவோர்கள் கண்டிக்கத்தக்க அளவில் முக்கியமற்றவற்றில் முனைப்புடையவராய் அவர் இருக்கலாது. வேண்டும்-அவற்றின் மனங்கள் நிறைவுறவேண்டும், என அவர் விழைதல் வேண்டும்.

6. உயர்வாழ்வன் ஏதாயினும்-மெலிந்தன, வலிந்தன, உயரமாயின, உரமாயின, இடைப்பட்டன, சிறியன, சிறுத்தன அல்லது பெருத்தன-எவ்வேறுபாட்டு விலக்கேயின்றி.

7. "கண்ணுக்குத் தெரிவன, தெரியாதன, தொலைவில் வசிப்பன அல்லது அருகில் வசிப்பன, பிறப்புற்றன, அல்லது இனிபிறக்கவிருப்பனஷ-எவ்வுயிரும் இன்புற்று வாழ்தல் வேண்டும்."

8. "எவரொருவரும் பிறரை வஞ்சிக்கலாகாது, யாதொரு மனிதரையும் எங்கும் வெறுத்திகழலாகாது, அவர் பிறருக்குத் தீங்கொன்றும் இழைக்க எண்ணலாகாது-சினத்தினாலோ, தீய பிருப்பத்தினாலோ."

9. "ஒரு தாய் எங்ஙனம் தன் சொந்த உயிரை ஈந்தும், தன் ஒரே சேயின் உயிரைக் காப்பாளோ, அங்ஙனமே அவர் அனைத்துயிர்களுக்குமாய்த் தன் இதயத்தை எல்லையற்ற விரிவுடையதாய் ஆக்கிக்கொள்ள வேண்டும்."

10. "அவர்தம் அளிவிலா அன்புபற்றிய எண்ணங்கள் உலகெங்கனும் பரவட்டும்-மேலும், கீழுமாய், தடையின்றி யாங்கனும். பகைமையேயின்றி."

11. "அவர் நிற்பினும் நடக்கினும், அமரினும், கிடக்கிலும் அவர் விழித்துள வரையிலும், அவர் கவனமாயிருத்தலை வளர்த்தெடுக்க வேண்டும்-இதையே அவர்கள் ஈண்டு உயர் நிலை வாழ்வென்பர்."

12. "தவற்றினுக்காட்படாமல் (தன் மயக்கம் கொள்ளாமல்) நற்குறிக்கோளுடையவராய், நற்காட்சி உற்றவராய், புலனின்பங்களில் பற்றினை விட்டவராய் இருப்பவர், பிறவித்துன்பத்திற காட்படுவதில்லை."

13. அவர்களுக்கு சுருக்கமாய் அவர் கூறியதிதுவே "பகைவரையும் நேசியுங்கள்."

2. தாக்குற்றோருக்கு ஆறுதலளித்தால் துக்கத்தை நிறைவுற நீக்குபவர்.

1. விஷாகா ஒரு உபாசிகா ஆவார். பிக்குகளுக்குக் தானமளிப்பது அவருடைய அன்றாட வழக்கமாயிருந்தது.

2. ஒருநாள் சுத்ததா என்னும் அவருடைய பேத்தி, அவளுடன் வாழ்ந்து வந்தவள், நோய்வாய்ப்பட்டு இறந்து போனாள்.

3. விஷாகா இத்துன்பத்தைத் தாங்கிக் கொள்ள இயலவில்லை.

4. எரியூட்டுதல் முடிந்த பின் அவர் புத்தரிடம் சென்று ஓர் புறம் சோகமாய் கண்ணீர் ததும்ப அமர்ந்தார்.

5. "ஓ விஷகாகா! ஆங்கு ஷ்ராவஸ்தியில் இளம் பெண்கள் எவ்வளவு பேர் வசிக்கின்றனர்?"

6. "ஐயன்மீர்! பலகோடி இருப்பதாக மக்கள் கூறுவர்.

9. அவர்கள் அனைவரும் தங்கள் பேத்தியைப் போலிருப்பின் தாங்கள் அவர்களை நேசிக்கமாட்டீர்களா?"

10. "அப்படியே ஐயன்மீர்" பதிலிறுத்தார் விஷாகா.

11. ஷ்ராவஸ்தியில் அன்றாடம் எத்தனைபேர் மரிக்கிறார்கள்?

12. அநேகர் ஐயன்மீர்!

13. அப்படியாயின் தாங்கள் எவருக்காகவேனும் துயருறாக்கணம் என்றொன்று எப்போதும் இருப்பதில்லையல்லவா?

14. உண்மையே ஐயன்மீர்

15. அவ்வாறாயின் தங்கள் வாழ்நாள் முழுவதையும் இரவும் பகலுமாய்த் தாங்கள் அழுதே கழிக்கப்போகிறீர்களா?

16. ஐயன்மீர்! நான் புரிந்து கொண்டேன். இது நன்கு கூறப்பட்டது.

17. இனி ஒருபோதும் துயருறாதீர்கள்.

சிசா கோதமிக்கு ஆறுதலளித்தல்

1. கிசா கோதமி ஷ்ராவஸ்தியின் வணிகர் ஒருவரின் மகனுக்கு மணமுடிக்கப்பட்டாள்.

2. திருமணத்திற்குப்பின் அவளுக்கு ஓர் மகன் பிறந்தான்.

3. எதிர்பாராதவிதமாக அவளுடைய குழந்தை நடைபழகு முன்னரே பாம்புக்கடியினால் இறந்துபட்டது.

4. அவள் அதற்குமுன் மரணக்காட்சியைக் காணவில்லையாதலால், அவளுடைய குழந்தை உண்மையில் இறந்தவிட்டது என அவளால் நம்ப முடியவில்லை.

5. பாம்புக் கடிவாயில் இருந்த சிறிய சிவப்பத்தழும்பு இக்குழந்தையின் மரணத்திற்குக் காரணமாகியிருக்கும் எனத் தோன்றவில்லை.

6. எனவே, அவள் அவளுடைய இறந்த குழந்தையை எடுத்தக் கொண்டு வீடுவீடாக அலைந்தாள்-அவள் சித்தம் கலங்கிப் போனளென மக்கள் நம்புகிற வகையிலான கடுமையாய்த் திரிந்த மனநிலையுடன்.

7. இறுதியில் ஒரு முதியவர் அவளை அச்சமயத்தில் ஷ்ராவஸ்தியில் இருக்க நேர்ந்த கவுதமரை நாடிச் செல்லம்படி கூறினார்.

8. எனவே அவள் உயர்வெய்திய புத்தரிடம வந்து அவளுடைய இறந்த குழந்தைக்கு ஏதேனும் மருந்து தரும்படி கேட்டாள்.

9. உயர்வெய்திய புத்தர் அவளுடைய கதையையும் புலம்பலையும் கவனித்தார்.

10. அதன் பின் உயர்வெய்திய புத்தர் அவளிடம் உரைத்தார். "நீ சென்று நகருக்குள் நுழைந்து, என்த ஒரு வீட்டிலேனும் இதுவரை இறப்புநிகழ்ந்ததில்லையெனில், அந்த வீட்டிலிருந்து சிறிதளவு, கடுகு பெற்று வருவையாயின், அதைக் கொண்டு நான் உன் குழந்தையை மீட்பேன்."

11. அவள் இது மிகச் சுலபமென எண்ணி இறந்த குழந்தையின் உடலுடன் நகருக்குள் நுழைந்தாள்.

12. ஆனால் அவள் அதில் தோற்றுப் போனைதை விரைவிலேயே கண்டாள்-அவள் சென்றடைந்த ஒவ்வொரு வீட்டிலும் யாரோ சிலரின் இறப்பும் இழப்பும் நிகழ்ந்தேயுள்ளதால்.

13. ஒரு இல்லறத்தார் அவளிடம் கூறியவாறு, "வாழுவோர் சிலரே! இறந்தவர் பலரே!"

14. எனவே, அவள் ஏமாற்றத்துடன் வெறுங்கையளாய் உயர்வெய்திய புத்தரிடம் திரும்பினாள்.

15. உயர்வெய்திய புத்தர் அதன் பின் அவளிடம், அவள் இப்போது மரணமென்பது மிக்ப்பொதுவானதென்று உணரவில்லையா என்றும் அதற்காக அவள் அது அவளுக்கு மட்டும் நேர்ந்த தனியிழப்பென்று எண்ணி வருந்த வேண்டுமா என்றும் வினவினார்.

16. அதன்பின் அவள் குழந்தையைக் கொண்டு போய் எரியூட்டி விட்டுக் கூறினாள், "அனைத்தும் அநித்தியம், இதுவே நியதி."

3. பிணியுற்றோர் பால் அவர்தம் பரிவு.

1. அப்போது ஒரு முறை ஒரு குறிப்பிட்ட சோதரர் சீதபேதியால் அவதியுற்றத் தன் கழிவின் மீதே கவிழ்ந்து கிடந்தார்.

2. துறவோரின் தங்குமிடங்களை, போற்றுதலுக்குரிய ஆனந்தருடன் சுற்றிவந்த மேன்மைத்தங்கிய புத்தர் அந்த குறிப்பிட்ட சோதரின் தங்குமிடத்திற்கு வந்துற்றார்.

3. அப்போது மேன்மைத்தங்கிய புத்தர், அச்சோதர் தன் கழிவின் மீது கவிழ்ந்து கிடந்திருப்பதைக் கண்டு, அவரை நோக்கிச் சென்று வினவினார், "சோதரரே! தங்களுக்கென்ன ஆயிற்று?"

4. "ஐயன்மீர்! நான் சீதபேதியால் அவதியுறுகிறேன்."

5. "ஆயின், சோதரரே! தங்களைக் கவனித்துக் கொள்பவர் ஒருவருமில்லையா?

6. "இல்லை, ஐயன்மீர்"

7. "ஏன், அப்படி சோதரரே! சோதரத்துறவிகள் உம்மை ஏன் கவனித்துக் கொள்ளவில்லை?" 8. "சோதரர்களுக்கு என்னால் எந்தப் பயனும் இல்லை ஐயன்மீர், எனவே சோதரர்கள் என்னைக் கவனித்துக் கொள்வதில்லை."

9. அதன்பின் மேன்மைத்தங்கிய புத்தர் போற்றுதலுக்குரியஆனந்தரிடம் புகன்றார், "ஆனந்தரே! நீவிர் சென்று நீர் கொண்டு வாருங்கள். நான் இச்சோதரரைத் தூய்மைப்படுதுவேன்."

10. "அவ்வாறே ஐயன்மீர்." போற்றுதலுக்குரிய ஆனந்தர் மேன்மைதங்கிய புத்தாருக்குப் பதிலிறுத்தார். அவர் நீர் கொணர்ந்ததும், மேன்மைத்தங்கிய புத்தர் ஊற்ற, போற்றுதலுக்குரிய ஆனந்தர் அச்சோதரரின் உடல் முழுவதையும் தூய்மையுறச் செய்தார். அதன்பின் மேன்மை தங்கிய புத்தர்,அவருடைய தலையைப் பறியவாறும், போற்றுதலுக்குரிய ஆனந்தர் அவருடைய கால்களைப் பறிறியவாறும், இருவருமாய் அவரை எடுத்துப் படுக்கையில் இருத்தினர்.

11. அதன்பின், அச்சமயம், அது தொடர்பாக, மேன்மைத்தங்கிய புத்தர் சங்கத்துறவோரைக் கூட்டி, சோதரர்களை வினவியவாறு உரைத்தார்.

12. "சோதரர்களே, இன்ன குறிப்பிட்ட தங்குமிடத்தில் இன்ன குறிப்பிட்ட சோதரர் பிணியுற்றுள்ளாரா?"

13. ஆம் ஐயன்மீர்

14. "அவருக்கு என்ன பிணி?"

15. "ஐயன்மீர் அச்சோதரர் சீதபேதியால் அவதியுறுகிறார்."

16. "ஆயின், சோதரரே, அவரை யாரேனும் கவனித்துக் கொள்ளவில்லை?"

17. இல்லை ஐயன்மீர்

18. "ஏன் இல்லை? அவரைச் சோதரர்கள் ஏன் கவனித்துக்கொள்ளவில்லை?"

19. "அந்தச் சோதரரால் பிற சோதரர்களுக்குப் பயனேதும் இல்லை, ஐயன்மீர், அதனால்தான் சோதரர்கள் யாரும் அவரைக் கவனித்துக் கொள்ளவில்லை?"

20. "சோதரர்களே, தங்களுக்குத் தாயில்லை-தந்தையில்லை-கவனித்துக் கொள்ள, தாங்கள் ஒருவரை ஒருவர் கவனித்துக் கொள்ளாவிடில், வேறெவர் அவ்வாளு செய்வரென நான் கேட்கிறேன். சோதரரே, பிணியுற்றோருக்குப் பணிவிடை செய்பவர் எவரும், எனக்கே சேவை செய்பவர் ஆவர்."

21. "அவருக்குப் போதகர் இருப்பின், அப்போதகர் பிணியாளர் உயிர் வாழும் வரை அவரது நலங்காப்பாராக, அவருக்கு ஆசானோ, விடுதியாளரோ, சீடரோ, உடனுறைபவரோ, உடனுள சோதரரோ இருப்பின், அவரைக் கவனித்து நலம்பெறச் செய்வாராக. அவரை யாரும் கவனித்துக் கொள்வில்லையாயின் அது குற்றமாகக் கருதப்பட வேண்டும்."

1. ஒருமுறை மேன்மைத் தங்கிய புத்தர் இராஜகிஹத்திற்கருகே, அணிலூட்டும் திடலில், ஒரு பெருஞ்சோலையில் தங்கியிருந்தார்.

2. அச்சமயம் போற்றுதலுக்குரிய வக்கலி என்பார் உடல் நலமற்று, கடுமையான பிணியால் பீடிக்கப்பட்டவராய் பானைவனைவோர் கூடத்தில் தங்கியிருந்தார்.

3. அப்பாது வக்கலி, தம்முடனிருந்தோரை விளித்துக் கூறினார், "நண்பர்களே! ஈண்டு வாருங்கள்! மேன்மைத் தங்கிய புத்தரிடம் தாங்கள் சென்று என்பெயரால் வணங்கி இவ்வாறு கூறுங்கள; 'ஐயன்மீர் சோதர் வக்கலி உடல் நலமற்று இருக்கிறார்-கடும் பிணியால் பீடிக்கப்பட்டிருக்கிறார். அவர் மேன்மை தங்கிய புத்தராகிய தாயங்கள் சோதரர் வக்கலியை, அவர்பால் கருணைக் கொண்டு காணவருவீராயின் நலமாயிருக்கும்."

4. மேன்மைத் தங்கிய புத்தர் மவுனமாய்ச் சம்மதித்தார், அதன்படி மேன்மைத்தங்கிய புத்தர் துவராடையணிந்து மேலாடையும் பிட்சாபாத்திரமும் ஏந்தி போற்றுதலுக்குரிய வக்கலியைக் காணச் சென்றார்.

5. அப்போது போற்றுதலுக்குரிய வக்கலி, மேன்மைத் தங்கிய புத்தர் தூரத்தில் வந்த போதே, அவரைக் கண்ணுற்று, படுக்கையிலிருந்து எழுமுயன்றார்.

6. அப்போது, மேன்மைத்தங்கிய புத்தர், போற்றுதலுக்குரிய வக்கலியிடம் உரைத்தார். "போதும், வக்கலி, படுக்கையைவிட்டு எழாதீர். ஈண்டு இருக்கைகள் தயாராயுள்ளன. நான் இங்கு அமர்ந்து கொள்கிறேன்." ஆங்கு தயாராயிருந்து ஓர் இருக்கையில் அவர் அமர்ந்தார். அவ்வாறு அமர்ந்த மேன்மைத் தங்கிய புத்தர் போற்றுதலுக்குரிய வக்கலியிடம் உரைத்தார்.

7. "நன்று வக்கலியே, தாங்கள் பிணியைத் தாங்கிக் கொள்கிறீர்கள் என நம்புகிறேன். தாங்கள் பொறுத்துக் கொள்கிறீர்கள் என நம்புகிறேன், தங்கள் நோய் அதிகரிக்காமல் தணிகறதன்றோ?" அவை அதிகரிக்காமல் தணிவதன் அடையாளங்கள் இருக்கின்றனவா?

8. "இல்லை ஐயன்மீர்! என்னை நானே இகழ்ந்து கொள்ளும் வண்ணம், ஒழுக்கங்களைப் பொறுத்துவரை இழுக்கு ஏதுமில்லை."

9. "வக்கலி அவர்களே! தங்களுக்கு ஏதேனும் ஐயமுள்ளதா? மனவருத்தமேதும் இல்லை."

10. "ஐயன்மீர்! உண்மையில் எனக்கு ஐயமேதுமில்லை. மனவருத்தமேதும் இல்லை."

11. "வக்கலி அவர்களே! ஒழுக்கங்களைப் பொறுத்தவரை தங்களைத் தாங்களே இகழந்துகொள்ளும் வண்ணம் இழுக்கு ஏதேனுமுள்ளதா?"

12. "இல்லை ஐயன்மீர்! என்னை நானே இகழந்து கொள்ளம் வண்ணம் ஒழுக்கங்களைப் பொறுத்தவரை இழுக்கு ஏதுமில்லை."

13. "பின் இது, அவ்வாறாயின் வக்கலி, தங்களுக்கேதேனும் கவலை இருக்க வேண்டுமே! தாங்கள் வருந்தத்தக்கதாய் ஏதேனும் இருக்க வேண்டுமே!"

14. "நெடுங்காலமாய், ஐயன்மீர்! நான் மேன்மைத்தங்கிய புத்தரைக கண்ணாறக் காணவேணடுமெனும், விழைவு கொண்டிருந்தேன். எனினும் இவ்வுடலில் போதிய வலுவற்றவனாயிருபதால் மேன்மைத்தங்கிய புத்தரை வந்து காண இயலவில்லை."

15. "உஷ்! வக்கலி! என்னுடைய வெற்றுடலைக் காண்பதில் என்ன இருக்கிறது? எவரொருவர் தம்மத்தைக் காண்கிறாரோ, அவர் என்னைக் காண்கிறார். எவரொருவர் என்னைக்

காண்கிறாரோ, அவர் தம்மைத்தை காண்கிறார். வக்கலி! தம்மத்தைக் காண்கிற ஒருவர் என்னைக் காண்கிறார். என்னைக் காண்கிற ஒருவர் தம்மத்தைக் காண்கிறார்."

1. இவ்வாறு நான் கேள்வியுற்றுள்ளேன், மேன்மைத் தங்கிய புத்தர் ஒருமுறை, முதலை நடமாட்டமுள்ள பேஷ்கலா சோலையில் மான் தோப்பில் பக்கிகளிடையே தங்கியிருந்தார். அப்போது வீட்டுத் தலைவர் நகுலபிதா மேன்மைத்தங்கிய புத்தரிடம் வந்துற்று, வணங்கி ஓர்புறம் அமர்ந்தார்.

2. அவர் அவ்வாறமர்ந்ததும், அந்த வீட்டுத் தலைவார் நகுலபிதா மேன்மைத் தங்கிய புத்தரை விளித்துக் கூறினார், "ஆசானே! நான் ஒரு உடைந்த வீழ்ந்த முதியவாய் ஆண்டுபல் கடந்த தள்ளாதவளாய் இருக்கிறேன், வாழ்வின் எல்லையைத் தொட்டுள்ள நான் பிணியுற்றவனாய், எப்போதும் நலமற்றவனாய் இருக்கிறேன். மேலும், ஆசானே! மேன்மைத்தங்கிய புத்தரையும் வணக்கத்திற்குரிய சோதரர்களையும் கண்ணுறுதல் அரிதானவனாய் நான் இருக்கிறேன். மேலும் ஆசானே! மேன்மைத்தங்கிய புத்தர் எனக்கு ஆறுதலிளித்து மகிழ்விப்பீராக-எனக்குப் பயன்மிகும்படியும், நான் நெடுங்காலத்திற்கு நன்மையுறும்படியும்."

3. "வீட்டுத் தலைவரே! தங்கள் உடல் மிகவும் பலவீனமாகவும் தொந்தரவுற்றதாகவும் இருப்பது உண்மையே! அது உண்மையே! இல்லத்தலைவரே! இந்த உடலைச் சுமந்து திரிந்து கொண்டு இனியும் உடல்நலத்திற்கு அவாவுவது அறியாமையே. எனவே இல்லத் தலைவரே! நீங்கள் இவ்வாறு பயிற்றுவித்துக் கொள்ளவேண்டும். "என் உடல் பிணியுற்றிருப்பினும், என் மனம் பிணியுறலாகாது." இவ்வாறு, வீட்டுத்தலைவரே! தாங்கள் தங்களைப் பயிற்றுவித்துக் கொள்ளவேண்டும்.

4. அதன்பின் நகுலபிதா என்னும் அந்த வீட்டுத் தலைவர் மேன்மைத்தங்கிய புத்தரின் நல்லுரைகளை மகிழ்வுடன் கேட்டு, ஏற்று, தன் இருக்கையினின்றும் எழுந்து மேன்மைத்தங்கிய புத்தரை வலமாய் வணங்கி விடைபெற்றார்.

1. ஒரு முறை மேன்மைத்தங்கிய புத்தர் கபிலவஸ்துவில் அத்மரச் சோலையில் சாக்கியர்களிடையே தங்கியிருந்தார்.

2. அப்போது, ஆங்கு பற்பல சோதரர்கள் மேன்மைத்தங்கிய புத்தருக்காகத் துவராடை தயாரிப்பதில் முனைப்பாய் ஈடுபட்டிருந்தார்கள், அவர்கள் கூறினார்கள். "இன்னும் மூன்று மாதங்கள் ஆன உடனே, மேன்மைத்தங்கிய புத்தர், தம் துவராடைகள் தயாராகி முடிந்ததும், தம் பயணம் மேற்கொள்வார்."

3. அப்போது மஹாநாமா என்னும் சாக்கியர் இவ்வாறு கூறப்பட்டதைக் கேட்டார், "பற்பல சோதாரர்கள் துவராடை தயாரிப்பதில் முனைப்பாய் ஈடுபட்டுள்ளார்கள்..என்பதும் பிறவும்..." அவர் மேன்த் தங்கிய புத்தரிடம் சென்று, வணங்கி, ஓர்புறம் அமர்ந்தார். அமர்ந்தவரரான சாக்கியர் மஹா நாமா கூறலானார்.

4. "ஐயன் மீர்! நான் கேள்விப்பட்டேன். துவராடைககள் தயாராகி முடிந்ததும், மூன்றாம் மாத இறுதியில் மேன்த்தங்கிய புத்தர் தம் பயணத்தை மேற்கொள்வார், என்பதால் பற்பல சோதரர்கள் மேன்மைத்தங்கிய புத்தருக்கான துவராடைகள் தயாரிப்பதில் முனைப்பாக ஈடுபட்டுள்ளனர்" என்று இப்போது, ஐயன்மீர், மேன்மைத்தங்கிய புத்தரின் வாயுரையாக, ஒரு விழிப்புள்ள உபாசகர் பிணயுற்று, துயருற்று, கடுமையாய்ப பாதிக்கப்படுங்காலை, மற்றொரு விழிப்புள்ள உபாசகாரால் எவ்வாறு தேற்றப்பட வேண்டுமென நாங்கள் எப்போதும் கேட்டறியவில்லையே.

5. "மஹாநாமரே, இவ்வாறாக ஒரு விழிப்புற்ற, பிணியுற்றுள்ள, உபாசகர் மற்றொரு உபாசகரால் நான்கு ஆறுதலளிக்கும் உறுதிப்பாடுகளோடு தேற்றப்பட்ட பின், அந்த மற்றவரின் சாற்கள் இவையாக இருக்க வேண்டும்."

6. "அதன்பின் மஹாநாமரே, இவ்வாறாக ஒரு விழிப்புற்ற, பிணியுற்றுள்ள, உபாசகர் மற்றொரு உபாசகரால் நான்கு ஆறுதலளிக்கும் உறுதிப்பாடுகளோடு தேற்றப்பட்ட பின், அந்த மற்றவரின் சொற்கள் இவையாக இருக்க வேண்டும்."

7. "ஒருவேளை, பிணியுற்றவர் தம் பெற்றோருக்காக அவாவுபவராயிருக்கலாம், அப்போது அவர் இவ்வாறு கூறுவார், நான் என் பெற்றோர்க்காக அவாவுகிறேன். மற்றவர் பதிலிறுக்க வேண்டும். என் அன்புக்குரிய நல்லோரே, நீங்கள் இறப்புக்கு ஆட்பட்டுள்ளீர்கள். நீங்கள் உங்கள் பெற்றோருக்காக அவாவினாலும், இல்லையென்றால் நீங்கள் இறப்பீர்கள். இவ்வகையில் உங்கள் பெற்றோர்க்கான அவாவுதலை நீங்கள் கைவிடுவதே நன்மையாகும்."

8. "ஒருவேளை அந்த பிணியுற்றவர் கூறலாம், என் பெற்றோருக்கான அவாவுதலை நான் கைவிட்டுவிட்டேன். அதன் பின் மற்றவர் கூற வேண்டும், இருப்பினும், என்அன்பிற்குரிய நல்லோரே! நீங்கள் இன்னமும் உங்கள் குழந்தைகளுக்காக அவாவுகின்றீர்கள். எப்படியாயினும். நீங்கள் இறப்பப் போவதால், உங்கள் குழந்தைகளுக்கான அவாவினையும் நீங்கள் கைவிடுவதே நன்மையாகும்."

9. "அவர் ஐந்து புலனின்பங்களைப் பற்றியும் இவ்வையாகவே கூற வேண்டும். ஒருவேளை அப்பியாளர் கூறலாம் 'நான் ஐந்து புலனின்பங்களில் அவாவுடையவனாய் இருக்கிறேன்.' மற்றவர் கூறவேண்டும், என் நண்பரே! உயர்வாழ்வு நெறிகள் ஐம்புலனின்பங்களைக் காட்டிலும் உன்னதமானவை. மிகவும் பரந்தவை. உங்கள் மனத்தைப் புலனின்பங்களினின்று மீட்டு உயர்வெய்திய நல்லோரின் பாதையில் பதிப்பதே உமக்கு நன்மையாகும்."

10. மீண்டும், அப்பிணியாளர் கூறலாம், 'அவ்வாறே என் மனம் பதிந்துள்ளது.' மற்றவர் கூறட்டும், உங்கள் மனத்தை உய்வுற்றோர் உலகில் பதிப்பது நன்று. அதன்பின் பிணயாளரின் மனம் அவ்வாறு பதிவுற்றபின் அடுத்தவர் கூறட்டும்.

11. "என் நல்லோரே! உய்வுற்றோர் உலகும் நிலையற்றதேயாகும்-தற்சார்புடைமையால், எனவே அன்புக்குரியவரே, உங்கள் மனத்தை உய்வுற்றோர் உலகினின்றும் மேலெழுப்பி தற்பற்றறுத்தலில் ஆழ்ந்த கவனம் செலுத்துவீராயின் அது மிக நன்று."

12. "அந்தப் பணியுற்றவர் இவ்வாறு செய்து விட்டதாய்க் கூறினால், மஹாநாமரே! நான் அறிவிக்கிறேன்-அவ்வாறு தளை நீக்கப் கூடிய உபாசகச்சோதரர்க்கும், அசவங்களிலிருந்து விடுபட்ட சீடருக்கும் எந்த வேறுபாடும் இல்லை-அதாவது உய்வுறுதலைப் பொறுத்தவரை."

5. அவர்தம் சமத்துவ உணர்வும் சமஉரிமைச் செயற்பாடும்

1. உயர்வெய்திய புத்தர், தாம் சங்க உறுப்பினர்களுக்காக வகுத்தளித்த செயற்றபாட்டு விதிகள் அனைத்தும் தம்மையும் கூடக் கட்டுப்படுத்துவதாகுமெனத் தாமே முன்வந்து விருப்புடன் ஒப்பினார்.

2. தாம் சோதரர் கூட்டத்தின் அங்கீகரிக்கப்பட்ட தலைவர் என்ற அடிப்படையில், எந்த விதிவிலக்கையோ, அல்லது சிறப்புக் கவனிப்பையோய, சோதரர் கூட்டத்தினரால் எல்லையில்லா அன்பாலும், மரியாதையைலும் மிகமிக மனமுவந்து அளிக்கப்பட்ட தனிச்சலுகையெதையுமே அவர் ஒருபோதும் கோரியதில்லை.

3. சங்க உறுப்பினர்கள் ஒரு நாளைக்கு ஒருவேளை உணவே ஏற்க வேண்டுமென்னும் விதி மற்ற பிக்குளைப் போலவே உயர்வெய்திய புத்தராலும் கடைபிடிக்கப்பட்டது.

4. சங்க உறுப்பினர்கள் தமக்கென தனியுடைமை எதையும் கொண்டிருக்கலாகாது என்னும் விதி மற்ற பிக்குகளைப் போலவே உயர்வெய்திய புத்தராலும் ஏற்கப்பட்டு, கடைபிடிக்கப்பட்டது.

5. சங்க உறுப்பினர் எவரும் ஒரு சமயத்தில் மூன்று துவராடைகளுக்கு மேல் வைத்திருக்கக் கூடாது என்னும் விதி மற்ற பிக்குகளைப் போலவே உயர்வெய்திய புத்தராலும் ஏற்கப்பட்டு, கடைப்பிடிக்கப்பட்டது.

6. ஒரு முறை, புத்தர் சாக்கிய நாட்டில், கபிலவஸ்துவில், ஆலமரத் தோப்பில் தங்கியிருந்தபோது, உயர்வெய்திய புத்தரின் தாயனா மஹா-பிராஜாபதிகவுதமி தம்மிடமிருந்து ஏற்றுத் தம்மை மகிழ்விக்க வேண்டுமென்றும், அவைகள் அவருக்காகவே, தம்மால் தம் கைபடத் தறியில் நெய்யப்பட்டவை என்றும் உரைத்தார்.

7. அவருக்குப் புத்தர் பதிலிறுத்தார், "அவற்றைச் சோதரக் கூட்டத்திற்குக் கொடுத்துவிடுங்கள்."

8. இரண்டாம் முறையும், மூன்றாம் முறையும், கவுதமி தம் வேண்டுகோளை திரும்பத் திரும்பத் தெரிவித்தும், அதே பதிலையே பெற்றார்.

9. அதன்பின் ஆனந்தர் குறுக்கிட்டுக் கூறினார், "ஐயன்மீர்! தயவுசெய்து, கவுதமியால் அன்பளிப்பாய் அளிக்கப்படும் ஆடைகளை ஏற்றுக்கொள்வீராக. அவர் ஐயன்மீருக்கு அவர்தம் தாய் இறந்தபோது தாதியாகவும், தன் தமக்கையின் புத்திரருக்கு செவிலித்தாயாகவும் இருந்து பெருஞ் சேவை புரிந்திருக்கிறார். ஆனால் உயர்வெய்திய புத்தர் அவ்வாடைகள் சோதரக் கூட்டத்தாருக்கே வழங்கப்பட வேண்டுமென வலியுறுத்தலானார்."

10. தெடக்கத்தில் சங்க உறுப்பினர்களின் துவராடை சாணக்குவியல் இடப்பட்ட இடத்திலிருந்து எடுக்கப்பட்ட கந்தைகளால் செய்யப்பட்டதாயிருந்க வேண்டுமென்து சங்க விதியாயிருந்தது. செல்வந்த வகுப்பினர் சங்கத்தில் சேர்வதைத் தடுக்கவே இவ்விதி வகுக்கப்பட்டிருந்தது.

11. ஒருமுறை ஜீவிகா, புதிய ஆடையால் தயாரிக்கப்பட்ட துவராடையை உயர்வெய்திய புத்தர் ஏற்கும்படி செய்வதில் வெற்றிகண்டார். புத்தர் அதை ஏற்றதும், அதே நேரத்தில் தொடக்ககால கந்தையணிதல் என்னும் விதியைத் தளர்த்தி பிக்குகளும் அதே சலுகையை அடையச் செய்தார்.

## அவருடைய வேண்டுதலும் வேண்டாமையும்

### 1. ஏழ்மையை அவர் விரும்பாத்தன்மை

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் ஷ்ராவஸ்திக்கு அருகே, அநாதபிண்டிகரின் சோலையில், ஜேத வனத்தில் தங்கியிருந்தார். ஆங்கு இல்லறத்தாரான அநாதபிண்டிகர் வந்துற்று அவரைக் கண்டு வணங்கியபின், ஓர்புறம் அமர்ந்தார். அவ்வாறமர்ந்து, ஒருவர் ஏன் செல்வத்தை அடைய வேண்டும் என விளக்குமாறு மேன்மைதங்கிய புத்தரிடம் வினவினார்.

2. "தாங்கள் வினவுவதா, நான் விளக்குகிறேன்."

3. "ஓர் தூய சீடரின் செயல்பாட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் உழைப்பாலும், ஊக்கத்தாலும் பெறப்பட்ட செல்வத்தை உடையவராயிருக்கிறார்-தோள்வலியால், நெற்றிவியர்வை சிந்திப் பெறப்பட்ட செல்வம் அது. நேரிய வழியில் சட்டப்படி அடையப்பட்ட அச்செல்வத்தினால் அவர் இன்புற்று, மகிழச்சியுற்று, பெருமகிழ்வுடையவராகிறார். அவர் தம் பெற்றோரை இன்பமும், மகிழ்ச்சியும் உடையோராக்கி அவ்வாறே அவர்தம் மனைவியை, மக்களை, பணியாளரை, பிறரை வைத்திருக்கிறார். இதுவே செல்வம் பெற வேண்டியமையின் முதற்காரணம்."

4. "அவ்வாறு செல்வம் அடையப்பட்டதும் அவர்தம் நண்பர்களை, துணைவர்களை இன்புற, மகிழ்ச்சியுறச் செய்து அவ்வாறே அவர்களை வைத்திருக்கிறார். இது இரண்டாவது காரணம்."

5. "மேலும், அவ்வாறு அடையப்பட்ட செல்வத்தை அழிக்கத் தக்க வெந்தணலினின்றும், வெள்ளத்தினின்றும், அரசரிடமிருந்தும், கொள்ளையரிடமிருந்தும், பகைவரிடமிருந்தும், தம் வாரிசுகளிடமிருந்தும் விலக்கி வைத்து, தம் உடைமைகளைப் பாதுகாத்து வைக்கிறார். இது மூன்றாவது காரணம்."

6. "அதன்பின், அவ்வாறு செல்வம் அடையப்பட்டதும், ஐவகையில் உற்றார், உறவோ ாக்கும், விருந்தினர்க்கும், பெற்றோ ாக்கும் அரசர்க்கும், அறவோர்க்கும் உவந்தளிக்கிறார், இது நான்காவது காரணம்."

7. "மேலும், அவ்வாறு செல்வம் அடையப்பட்டதும், இல்லறத்தார் தானங்களை, நல்நோக்கங்களை, இன்பத்திற்கான இன்கி விளைவை, உயர்வுறும் வழியை, தற்பெருமை, சோர்வு ஆகியவற்றினின்று தவிர்ந்த துறவோர்க்கும், தூயோர் அனைவர்க்கும், பொறையுடைமையும, பணிவும் கொண்டு அனைத்தையும் தாங்குவோர்க்கும், தன்னைத் தான் வெல்லும் தகையைர்க்கும், தன்னை அடக்குவோர்க்கும், தன்னை நெறிப்படுத்திக் கொள்வோர்க்கும் பயன்படும் வகையில் நிறுவுவார்-இது செல்வம் அடைவதற்கான ஐந்தாவது காரணம்."

8. உயர்வெய்திய புத்தர் வறுமையைப் போற்றி வறியோர்க்கு ஆறுதலளிப்பவராயில்லையென்றம் மனிதர்கள் இன்புற்று வாழும் வழியாக உள்ளதெனக் கூறி வறுமையைப் போற்றுபவராயில்லையென்றம் அநாதபிண்டிகர் நன்கு புரிந்து கொண்டார்.

## 2. அடையத்தூண்டும் அவாவின் மீது அவர்தம் வெறுப்பு

1. மேன்மைத்தங்கிய புத்தர் ஒருமுறை குரு நாட்டின்கண் உள்ள கம்மசதம்மா என்னும் நகரில் தங்கியிருந்தார்.

2. மேன்மைத்தங்கிய புத்தர் இருந்த இடத்திற்கு போற்றுதலுக்குரிய ஆனந்தர் வந்துற்று, அவர் முன் பணிந்து வணங்கி, ஓர்புறம் இருக்கையை ஏற்றார்.

3. அவ்வாறு அமர்ந்து உரைத்தார், "உயர்வெய்திய புத்தரால் போதிக்கப்பட்ட காரண-காரிய விதி அற்புதமானது. மிக்க ஆழமானது. எத்துனை தெளிவாயிருக்க வேண்டுமோ அத்துனை தெளிவாய் எனக்கது தோன்றுகிறது."

4. "அவ்வாறு கூறாதீர் ஆனந்தரே, அவ்வாறு கூறாதீர்! காரணங்களினின்று வியும் காரியங்கள பற்றிய இவ்விதி ஆழமானது. இந்தக் கோட்பாட்டைப் புரிந்து

கொள்ளாமையாலும், ஊடுருவாமையாலும் தான் இத்தலைமுறைக் கலைந்த வலையைப் போலவும், சிக்கிப்போன நூலுருண்டைப் போலவும் குழம்பு, துயரப்பாதையைத் தவிர்த்து வெல்ல இயலாமல் உள்ளது.

5. "பொருளைக் கவறலுக்கு ஆசையே காரணமாயுள்ளதென நான் கூறியுள்ளேன். எங்கு எவ்வகையான அவாவும் எவரிடத்திலும், எதன்பாலும் இல்லையோ, ஆங்கு பொருள் கவறல் விளையுமா?"

6. "அவ்வாறு விளையாது, ஐயன்மீர்."

7. "அவாவே இலாபத்தேடலை விளைவிக்கிறது."

8. "இலாபத்தேடல் ஆசையையும், பற்றையும் விளைவிக்கிறது."

9. "ஆசையும் பற்றும் ஒன்றிவிடுதலை விளைவிக்கிறது."

10. "ஒன்றிவிடுதல் உடைமையுறுதலை விளைவிக்கிறது."

11. "உடைமையுறுதல் பேராசையையும் மேலும் மேலும் உடைமையுறுதலையும் விளைவிக்கிறது.

12. சொத்து உடைமை, அச்சொத்துடைமையின் மேல் கண்ணும் கருத்துமாய் இருத்தலை விளைவிக்கிறது."

13. "சொத்து உடைமையின் மேல் கண்ணும் கருத்துமாய் இருந்தலென்பது பல தீய, வஞ்சகமான நிலைகளை-அடிதடி, காயம், சண்டை, சச்சரவு, இழுக்கு, பொய்மை ஆகியவற்றையெல்லாம் விளைவிக்கிறது."

14. "ஆனந்தரே! இதுவே காரண-காரியத் தொடர்சங்கிலி. ஆசை இல்லையாயின், ஆங்கு இலாபத்தேடல் விளையுமா? இலாபத்தேடல் இல்லையாயின், ஆங்கு பற்று விளையுமா? பற்று இல்லையாயின், ஆங்கு ஒன்றிவிடுதல் விளையுமா? ஒன்றிவிடுதல் இல்லையாயின் ஆங்கு ஒன்றிவிடுதல் விளையுமா? ஒன்றிவிடுதல் இல்லையாயின் ஆங்கு ஒன்றிவிடுதல் விளையுமா? ஒன்றிவிடுதல் இல்லையாயின் ஆங்கு தனிச்சொத்துடைமை மேல் ஆர்வம் விளையுமா? சொத்துடைமை இல்லையாயனி ஆங்கு மேலும் மேலும் உடைமை மேல் பேராசை விளையுமா?"

15. "ஆங்கு விளையாது ஐயன்மீர்."

16. "தனிச்சொத்துடைமைமேல் பாசம் இல்லையாயின் ஆங்கு அமைதி நிலவுமன்றோ?"

17. "ஆம் அவ்வாறேயிருக்கும் ஐயன்மீர்."

18. "நான் புவியைப் புவியாய் அங்கீகரிக்கிறேன், ஆனால் எனக்குப் புவிமேல் அவா இல்லை" என்றார் புத்தர்.

19. "என்வே, நான் கூறுகிறேன்-அனைத்து அவாவினையும் களைவதன் மூலம், அவைகளின் பின் அலையாதிருப்பதன் மூலம், அவையனைத்தையும் அழித்து, கைவிட்டுத் துறப்பதன் மூலம் நான் உயர்பெரறிவெய்தினேன்."

20. "சோதரரே, உலகப் பொருள்களிலல்லாமல் என் தம்மத்தில் பங்காளிகளாயிருக்க நாடுங்கள். ஏனெனில் அவா பற்றடைமையைக் கொணர்கிறது-பற்றுடைமை மனத்தை அடிமைப்படுத்துகிறது."

21. இச்சொற்களில் உயர்வெய்திய புத்தர் ஆனந்தருக்கும் பிறசோதரராக்கும் பொருளை அடையதூண்டும் அவாவுணர்ச்சியின் தீமைகளை விளக்கினார்.

### 3. அவர் கண்டின்புறும் அழகின் தன்மை

1. அழகினை நேசிப்பாவர் என்னும் பொருளடைய புத்தர் என்னும் பெயரைத் தாங்குவது பொருத்தமே எனும்படி, புத்தர் அழகின்பால் ஆர்வம் மிகக் கொண்டவராயிருந்தார்.

2. தம்மைப் பின்பற்றுவோருக்கவர் இவ்வாறு போதித்தார், "நல்லோர் கூட்டத்திடை இருங்கள்."

3. பிக்குகளை விளித்து அவர் உரைத்தார்.

4. "துறவோரே! இன்னம் தோன்றா நன்னிலை விளையுவும், தோன்றிவிட்டுளள தீநிலை ஒழியவும் காரணமாகும் ஆற்றலுடைதாய், நல்லோரோடு கொள்ளும் நட்புபோல் வேறொரு தனிப் பொருளினை அறின் நானே."

5. "நல்லவற்றோடு நட்புடையவனாய் ஒருவன் திகழ்ந்தால், இதுவரை தோன்றா நன்னிலை தோன்றும்-தோன்றிவிட்டுள்ள தீநிலை ஒழியும். தீய நிலைகளும், தீய நிலைகளின் பாலுள பற்றம் ஒழியும், நன்னிலையின்பால் பற்றிலாமை நீங்கும். நன்னிலைகளும், அவற்றின்பால பற்றும் விளையும் தீய நிலைகளின் பாலுள பற்றின்மை மிகும்."

6. "துறவோரே! முறையற்ற கவனத்தை நடைமுறைப்படுத்திறவனிடம், உயர் பேரறிவன் பகுதிகள் இன்னமும் தோன்றாதிருப்பின் இனியும் தோன்றாமலும், முன்னமே தோன்றியிருபின், அவை பண்படுத்தப்பட்டாலும் நிறுவுறாமல் போகும்.

8. "துறவோரே! உறவினர் போனறோரை இழப்பது, சாதாரண இழப்பாகும். இழப்புக்களிலே உயர்பேரறிவின் இழப்பே கொடுந்துன்பமானதாகும்."

9. "உறவினர் மிகுவது சாதாரண வரவாகும். துறவோரே, உயர்பேரறிவு மிகுவது உன்னதமான வரவாகும்."

10. "எனவே, துறவோரே, நீங்கள் உமமை இவ்வாறாகப் பயயிற்றுவித்துக் கொள்ளவேண்டுமென நான் உரைக்கிறேன். நாங்கள் உயர்பேரறிவை மிகுவித்துக் கொள்வோம். இந்த இலக்கை வென்றடை உங்களை நீங்கள் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும்."

11. "செல்வத்தினைப் போன்றவற்றின் மிகுவிப்பு சாதாரண வரவாகும். உயர்பேரறிவின் மிகுவிப்பே உன்னதமான வரவாகும். எனவே, துறவோரே, நீங்கள் இவ்வாறாக உங்களைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டுமென நான் உரைக்கிறேன். 'தாங்கள் உயர்பேரறிவை மிகுவித்துக் கொள்வோம்.' இந்த இலக்க வென்றடைய உங்களை நீங்கள் பயிற்றுவித்துக் கொள்ளவேண்டும்."

12. "துறவோரே! பெயர், புகழ் போன்றவற்றின் இழப்பு சாதாரண இழப்பாகும், உயர்பேரறிவின் இழப்பு கொடுந் துன்பமானதாகும்."

4. நல்லனவற்றின்பால் அவரது நேயம்.

1. ஒருமுறை மேன்மைத்தங்கிய புத்தர் சக்கரா என்னும் சாக்கிய நகரில் சாக்கியர்களிடையே தங்கியிருந்தார்.

2. அப்போது போற்றுதலுக்குரிய ஆனந்தர், மேன்மைத்தங்கிய புத்தரிடம் வந்துற்று, அவரை வணங்கி ஓர்புறம் அமர்ந்தார். அவ்வாறமர்ந்த போற்றுதலுக்குரிய ஆனந்தர் இவ்வாறுரைத்தார்.

3. ஐயன்மீர்! துறவு வாழ்வின் ஒரு பாதி நனிநல்லவை எவையோ அவற்றோடு நேயம் கொள்வதாகவும், நனி நல்லவை எவையோ அவற்றோடு நெருக்கம் கொள்வதாகவும் நனி நல்லவை எவையோ அவற்றோடு ஐக்கிய முறுவதாகவுமே உள்ளது!

4. "அவ்வாறுரைக்காதீர், ஆனந்தரே! அவ்வாறுரைக்காதீர் ஆனந்தரே! அது பாதியன்று-துறவு வாழ்வு முழுவதுமே அதுதான்-தின நல்லவை எவையோ அவற்றோடு நேயம் கொள்வது, தனி நல்லவை எவையோ அவற்றோடு நெருக்கம் கொள்வது, நனி நல்லவை எவையோ அவற்றோடு ஐக்கியமுறுவது."

5. "எவையெவை நனிநல்லவையோ அவற்றோடு நேயம் கொண்ட, நெருக்கம் கொண்ட, ஐக்கியமுற்ற ஒரு பிக்குவிடம் நாம் இவற்றை எதிர்பா ாக்கலாம்,-அவர் தூய எண்மார்க்க நெறியை வளர்ப்பார்-அவர் தூய எண்மார்க்க நெறியின் பெருமளவை உருவாக்குவார்."

6. "ஆனந்தரே! ஒரு பிக்கு எவ்வாறு தூய எண்மார்க்க நெறியை வளர்ப்பார்? அதன் பெருமளவை உருவாக்குவார்?"

7. "ஈண்டு, ஆனந்தரே, அவர் சார்பின்மையினை, பற்றின்மையினை, விலக்கிடுந்தன்மையை-தன்னை அர்ப்பணித்தலில் முடிபவற்றை அடிப்படையாகக் கொண்ட நற்காட்சியினைப் பக்குவப்படுத்திக் கொள்கிறார். அவ்வாறன அடிப்படையும், கவனமுமுடைய நல்நோக்கத்தை அவர் பக்குவப்படுத்திக் கொள்கிறார், அதேவகையில், நல்லுரை, நற்செயல், நல்வாழ்முறை, நன்முயற்சி, நற்கவனம், நற்சிந்தனை ஆகிய - தன்னை அர்பணித்தலில் முடிவனவற்றைப் பக்குவப்படுத்திக் கொள்கிறார்."

8. "ஆனந்தரே! நனிநல்லவை எவையோ அவற்றின் பால் நேயமும், நெருக்கமும், ஐக்கியமுறுதலும், உடைய துறவி இவ்வாறாகவே எண்மார்க்க நெறியை வளர்க்கவும், அதன் பெருமளவை உருவாக்கவும் செய்கிறார்."

9. "ஆனந்தரே! இந்தத் துறவு வாழ்வு முழுமையுமே நனிநல்லவை எவையோ அவற்றின் பால் நேயமும், நெருக்கமும், ஐக்கியமுறுதலும் உடையராதலை உள்ளடக்கியுள்ளது என்பதைத் தாங்கள் புரிந்து கொள்ள வேண்டிய முறை இதுவேயாகும்."

10. "உண்மையில் ஆனந்தரே! மரணத்திற்காட்பட்ட, துன்பத்திற்காட்பட்ட, துயரத்திற்கு, புலம்பலுக்கு, நம்பிக்கையினமைக்காட்பட்ட மக்கள் அவற்றிலுருந்து நனிநல்லவை எவையோ அவற்றோடு தாம் கொள்ளும் நேயத்தின் காரணமாக விடுதலையுறுவர்."

11. "ஆனந்தரே! இந்தத் துறவு வாழ்வு முழுமையுமே நனி நல்லவை எவையோ அவற்றில் பால் நேயமும், நெருக்கமும், ஐக்கியமுறுதலும் உடையராதலை உள்ளடக்கியுள்ளது என்பதைத் தாங்கள் புரிந்து கொள்ள வேண்டிய முறை இதுவேயாகும்."

## முடிவுரை
## (நீத்தார் பெருமை)

### 1. புத்தரின் பேருயர்வுக்கு அளிக்கப் பெற்ற போற்றுதல்கள்.

1. புத்தர் 2500 ஆண்டுகளுக்கு முன் தோன்றினார்.

2. அவரைப்பற்றியும், அவர்தம் தம்மம் பற்றியும் நவீன சிந்தனையாளர்களும், அறிவியலாளரும் கூறுவனயாவை? இப்பொருள் பற்றிய அவர்களின் சிந்தனைகளின் தொகுப்பு பயனுள்ளதாகும்.

3. பேராசிரியர் எஸ்.எஸ் இராகவாச்சார் கூறுகிறார்.

4. "புத்தர் வாழ்க்கைக்கு உடன் முந்திய காலம் இந்திய வரலாற்றின் மிக இருண்ட காலமாக இருந்தது."

5. "அது அறிவாற்றலில் பிற்பட்டிருந்த காலம், அக்காலச் சிந்தனை வேதங்களின் ஆதிக்கத்தை மறுப்பின்றிப் போற்றும் தன்மையுற்றிருந்தது."

6. "ஒழுக்கவியலாக அது ஒரு இருண்ட காலமாக இருந்தது."

7. "நம்பிக்கையுள்ள இந்துக்களுக்கு சடங்கு சம்பிரதாயங்களை புனித நூல்களில் விதித்துள்ளபடி நடததுவதொன்றே ஒழுக்கமாயிருந்தது."

8. "தன்னைத் தியாகம் செய்வது அல்லது விருப்பத்தில் தூய்மையாயிருப்பது, ஆகிய உண்மையான அறவியல் கருத்துக்கள் அக்கால ஒழுக்க உணர்வில் உரிய இடம் பெற்றிருக்கவில்லை."

9. திரு. ஆர்.ஜே. ஜேக்சன் கூறுகிறார்.

10. புத்தரின் போதனைகளில் ஒப்பிலாத் தனிச்சிறப்புத் தன்மை இந்திய சமயச் சிந்தனைகளின் ஆய்வில் காணப்படுகிறது.

11. "ரிக்வேத ஸ்லோகங்களில், நாம் மனிதனின் சிந்தனை, அவனிலிருந்து புறவயப்பட்டு, கடவுள்களின் உலகை நோக்கித் திருப்பப்படுவதைக் காண்கிறோம்."

12. "பவுத்தம் மனிதனின் தேடலை உள்நோக்கி வழிநடத்தி அவனுக்குள் பொதிந்துள்ள ஆற்றலை அடைவித்தது."

13. "வேதங்களில் நாம் பிரார்த்தனைகளையும் போற்றுதலையும் வழிபாட்டையும் காண்கிறோம்.

14. "பவுத்தத்தில் முதன்முறையாக நாம் மனத்தை நன்னெறியில் நடக்க அதற்கு பயிற்சியளிப்பதைக் காண்கிறோம்."

15. வின்வுட் ரீட் கூறுகிறார்.

16. "இயற்கை நூலை நாம் திறக்கையில், அப்போதுதான் நாம் பலகோடி ஆண்டகளுக்கூடாகப் பரிணாமக் கதையை, செந்நீராலும் கண்ணீராலும் எழுதப்பட்டிருப்பதை, வளர்ச்சியின் உற்பத்தி விதிகளை படித்தறியும் போதுதான், கடவுள் அன்பானவர் என்னும் கோட்பாடு எவ்வளவு போலியானது என்பதை வெளிப்படையாக அறிகிறோம்."

17. "ஓவ்வொன்றிலும் தீயவஞ்சகமும், விடுபட்டு வீணாணவுயம் உள்ளன. பிறந்த விலங்குள் அனைத்திலும் ஒரு சிறு விழுக்காடு மட்டுமே உயிர்வாழ்கின்றன."

18. "கடலிலும், காற்றிலும், வனத்திலும் கொன்றுதின் அல்லது கொன்றுதின்னப்படு என்பதே விதியாயுள்ளது. கொலையே வளர்ச்சியின் விதியாயுள்ளது."

19. "மார்டெர்டெம் ஆப் மேன்" என்ற தன்நூலில் ரீட் கூறுவது இதுவே. புத்தரின் தம்மம் எத்துனை வேறுபட்ட தாயுள்ளது.

20. டாக்டர் ரஞசன் ராய் கூறுவது இது.

21. "பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதி முழுவதும் உயிர்வாழ்வுப் பாதுகாப்பின் மூன்று விதிகளே வலுவுற்றிருந்தன. யாரும் இவற்றை எதி◌ாக்கவேயில்லை."

22. அவகைள் சடப்பொருள், பொருண்மை, ஆற்றல் பற்றிய விதிகளாகும்.

23. "அவைகள் அழிக்கலாகாதவை என்னும் கருத்துடையோரான கருத்து முதல்வாதிகளின் துருப்புச் சீட்டுகளாய் அவை இருந்தன.

24. "படைப்பின் கூறுகளை ஆளுமை புரிவனவாய் அவற்றை பத்தொன்பதாம் நூற்றாண்டின் அறிவியலாளர் உறுதிப்படுத்தினர்."

25. "பிரபஞசத்தின் அடிப்படை இயற்கை அமைப்பென அவற்றைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அறிவியலாளர் உறுதிப்படுத்தினர்."

26. "இந்தப் பிரபஞ்சம் உடைக்கவொண்ணா அணுக்களால் நிரப்பப் பட்டுள்ளதாய் அவர்கள் நினைத்தனர்."

27. "பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதியை எய்துகையில், சர்.ஜே,ஜே. தாம்சனும், அவரைப் பின்பற்றியவர்களும் அணுவை உடைக்கத் தொடங்கிவிட்டனர்.

28. "வியப்பிற்குரிய விதமாய், அணுக்கள் துகள்துகளாய்ச் சிதறலாயின."

29. "இத்துகள்கள், எலெக்ட்ரான்ஸ் என வழங்கப்படலாயின அனைத்தும் ஒரே விதமானதாய், எதிர்மறை மின்னோட்டம் பெற்றதாய் விளங்கினவெனக் கருதப்பட்டன.

30. "பிரபஞ்சம் அல்லது உள்பொருளின் அழிவிலா அடித்தளம் அணுக்களே என மேக்ஸ்வெல் அறுதியிட்டுரைத்தார்."

31. "அவைகள் சிறுசிறு துகள்களாய்ச் சிதறின-புரோட்டான்களாய், எலெக்ட்ரான்களாய் முறையே உடன்பாட்டு, எதிர்மறை மின்னோட்டம் பெற்றனவாய் இருப்பது அறியப்பட்டது."

32. "நிலைப்பட்ட, மாறாத நித்தியத்துவக் கோட்பாடு அறிவியலில் நிராகரிக்கப்பட்டது நன்மையாயிற்று. இந்த நூற்றாண்டில் கணந்தோறும் பொருள் அழிந்து மாற்ற முறுகிறதென்பதே பிரபஞ்சத்தின் நம்பிக்கைக்குரிய கோட்பாடாகியது."

33. புத்தரின் அநிச்சாகோட்பாடு (அனைத்தும் மாறுதலுக்குாயிதென்பது) உறுதிப்படுத்தப்பட்டுவிட்டது.

34. "பிரபஞ்ச இயக்கம் தொகுப்பாவதும், பகுப்பாவதும், மீண்டும் தொகுப்பாவதும் என்னும் முறைமையதென்பதை அறிவியல் நிரூபித்துவிட்டது."

35. நவீன விஞ்ஞானத்தின் போக்கு,உள்பொருளின் உள்ளதம், 'தான்' என்பதன் ஒற்றுமைவேற்றுமைப் போக்கேயாகும்.

36. "நவீன விஞ்ஞானம் புத்தரின் மாறுபாட்டுக் கோட்பாடு (அனிச்சா) ஆன்மா இல்லை எனும் கோட்பாடு (அநத்தா) ஆகியவற்றையே எதிரொலிக்கிறது."

37. திரு. ஈ.ஜி. டெய்லர் தம் "புத்திஸம் அன்ட மாடர்ன் தாட்" என்னும் நூலில் கூறுகிறார்:

38. நெடுங்காலமாய் மனிதன் புற ஆதிக்கத்தின் அதிகாரத்திற்காட்பட்டு ஆளப்பட்டு வந்துள்ளான். அவன் உண்மையில் நாகரிகமுற வேண்டுமாயின், அவன்தன் சொந்தக் போட்பாட்டால் ஆளப்படக் கற்க வேண்டும், மனிதன் தன்னைத்தானே ஆண்டு கொள்ள அறைகூவல் விடுத்த முதல் அறவியல் முறை பவுத்தமே யாகும்.

39. எனவே முற்போக்கான உலகுக்கு இந்த உயர் பாடத்தைப் போதிக்கும் பவுத்தம் அத்தியாவசியமானதாயுள்ளது.

40. ஒருமைக்கோட்பாட்டுக் கிறித்துப் போதகர் பெருந்தகை லெஸ்லிபோல்டன் கூறுகிறார்.

41. பவுத்தத்தின் ஆன்மீக உளவியலில், அதன் ஆற்றல் மிக்கப் பங்களிப்பை நான் காண்கிறேன்.

42. பவுத்தர்களைப் போலவே ஒருமைக் கோட்பாட்டுக் கிறித்தவர்களும் தேவலாய நூற்கோவைகளின், சமயப்பிரிவுகளின் புற ஆதிக்கத்தை நிராகரித்து, மனிதனுக்குள்ளேயே இருக்கும் வழிகாட்டும் ஒளிவிளக்கைக் காண்கிறார்கள்.

43. ஒருமைக்கோட்பாட்டுக் கிறித்துவர்கள் ஏசுவுக்குள்ளும், கவுதமருக்குள்ளும் வாழ்க்கை நெறியை வெளிப்படுத்திய உன்னதமான மனிதர்ககளைக் கண்டறிகிறார்கள்.

44. பேராசிரியர் டிவைட் காட்டர்ட் கூறுகிறார்.

45. உலகச் சமயப் போதகர்களில், புத்தர் மட்டுமே, தன் விடுதலையை, புற உதவியேதுமின்றித் தானே அடைந்து கொள்வதற்கான அளப்பரிய ஆற்றலைச் சரியாக மதிப்பிட்ட மாமேதையாய்த் திகழ்கிறார்.

46. ஒரு உண்மையான மாமனிதரின் மேன்மை, மனிதகுல முழுமையும் அவர் முன்னேற்றுவதைப் பொறுத்து அமையுமாயின், உண்மையில் அவர் உயர்வெய்திய புத்தரினும் மேலானவர் என்று கருதப்படலாம்.

47. அவருக்கு மேலாய் மற்றொருவரை வைத்து அவரைக் குறைத்து மதிப்பிடுவதற்கு மாறாய், அவரை உயர்பேரறிவின், உன்னத அன்பின் உருவகமாய்க் கருதுவோமாக.

48. புத்திஸம் என்னும் நூலின் ஆசரியர் திரு.ஈ.ஜே.மில்ஸ் கூறுகிறார்.

49. அறிவின் பெருமையும், அறியாமையின் சிறுமையும் பவுத்தத்தில் வலியுறுத்தப்படுவதுபோல் வேறெந்த மதத்திலும் வலியுறுத்தப்படுவதில்லை.

50. ஒருவன் தன் கண்களை அகலவிரித்து எப்போதும் விழிப்பாயிருந்தாக வேண்டுமென்பதற்கு வேறெந்த மதமும் இவ்வளவு முக்கியத்துவம் அளிப்பதில்லை.

51. மனத்தைப் பண்படுத்த இத்துனை ஆழமா◌ான திட்டங்களை வேறெந்த மதமும் வகுத்தளித்ததில்லை.

52. பேராசிரியர் டபில்யூ.டி.ஸ்டேஸ் தம் 'புத்திஸ்ட் எதிக்ஸ்' என்ற நூலில் கூறுகிறார்.

53. பவுத்த அறவியல் இலக்கான, அறவோராதல் என்பது ஒழுக்க்த்திலும், அறிவாற்றலிலும் ஆக இரண்டிலும் உன்னத நிலை எய்துவதாகும்.

54. அவர் ஓழுக்கமுடைய மனிதராய் இருப்பதைப் போலவே தத்துவவித்தகராகவும் இருந்தாக வேண்டும்.

55. விடுதலைக்கு அவசியமானதாய் அறிவு எப்போதும் பவுத்தத்தால் வலியுறுத்தப்படுகிறது, அதை எய்தும் தடைகள் இரண்டிலொன்றாய் அறியாமை விளக்கப்படுகிறது. (மற்றொரு தடை அவா அல்லது பற்று.)

56. இதற்கு மாறாக கிறத்துவ இலட்சிய மனிதனின் கூறாக அறிவு எப்போதுமே இருந்ததில்லை.

57. நிறுவனரின் தத்துவ மெய்மைக் குணமின்மை காரணமாக, கிறித்துவ கோட்பாட்டு நெறியில் மனிதனின் ஒழுக்கப் பகுதி அறிவுப பகுதியினின்று அப்புறப்படுத்தப்பட்டுவிட்டது.

58. உலகின் துன்பங்களனைத்தின் ஊற்றுக் கண்ணும் அயோக்கியத்தனம் என்பததைக் காட்டிலும் குருட்டு விசுவாசமென்னும் முட்டாள்தனமாகவே உள்ளது.

59. புத்தர் இதை அனுமதிக்கவேயில்லை.

60. புத்தரும் அவர் தம்மமும் எத்துனை உயர்ந்தவை, முழுமையானவை என்பதை உணர்த்த இதுவரை கூறியது போதுமானதே.

61. எம் தலைவர் அவரே எனக் கூறாதார் யாரோ?

2. அவரது தம்மத்தைப் பரப்ப ஓர் உறுதி.

1. அளவிலா உயர்கள் உண்ட இப்புவியில்
இவைகள் அனைத்தினுக்கும்
இதனை உணர்த்தவே
ஏற்போம் உறுதி.

2. எண்ணிலாத் தீயவை உண்டு நம்மிடையே
இவைகள் அனைத்தையும்
அழித்தொழித்திடவே
ஏற்போம் உறுதி

3. முடிவிலா மெய்மைகள் உண்டு யாங்கனும்
இவைகள் அனைத்தையும்
அழித்தொழித்திடவே
ஏற்போம் உறுதி.

4. புத்தரின் இணையிலாப் பாதையுடன் டிங்கு
இதனை முழுமையாய்
ஏற்றொழுகிடவே
ஏற்போம் உறுதி.

3. அவர் சொந்த நாட்டிற்கு
அவர் தம்மம் திரும்பிட ஓர் விழைவு

1. உயர்வுறு புத்தரே! உமக்கெனை முழுநிறை
உளத்துடன் அர்ப்பணித் திடுகிறேன் இன்றே.
அயர்வறு குறையறு ஒளியினால் புவியினில்

உளபத்துத் திக்கிலும் பரவிய ததாகத!

மயர்வறு உன்பிறப் புற்றநின் தேசத்தில்
மீள்பிறப் புற்றிட மிகமிக விழைகிறேன்.

2. துயர்வெல்லும் புத்தமும் தம்மமும் சங்கமும்
திகழ்ந்திடும் மும்மணி நாட்டை நான் நினைக்கிறேன்.

3. விரிவுறு வானென விரிந்து பரந்தது
வேலிகள் அற்றது அனைத்தையும் தழுவிடும்

4. அரியநல் ஒழுக்கத்திற் குரியநின் நேயமும்
ஈடிலாக் கருணையும் உலகியல் நலனினும்
பெரியது உயர்ந்தது பெருமைகள் மிகுந்தது.
பேறுகள் யாவினும் சிறந்தநற் பேறது.

5. விரிந்த நின் ஒளியது யாங்கனும் நிறைந்தன
ஒளிரும் ஞாயிறாய் மிளிரும் திங்களாய்.

6. நின்னுடைத் தேசத்தில் தோன்றிய யாவரும்
நின்னைப்போல் புத்தராய் நிகழ்த்துக வாய்மையை!

7. என்னுடை இக்கவி கருத்துரை யாவுமே
உம்மைதே ருக்குநேர் அறியும் விருப்பமே.

8. நன்னெறி மிக்கஉம் தோற்றம் நிகழ்ந்ததால்
நலம்திகழ் தேசமாம் உமது தேசத்தில்
இன்னொரு பிறப்பினை யானும் என் உடனுளோர்
யாவரும் எய்துதல் ஒன்றேயென் விருப்பமே!